# டில்லி சுல்தானியத்தின் வரலாறு

**(கி. பி. 1206 முதல் 1320 வரை)**

**முதல் பாகம்**

**(மேற்பட்டப் படிப்பிற்குரியது)**

**டி. ஆர். இராமச்சந்திரன்**






தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க. வெ.) வரிசை எண்—762

# டில்லி சுல்தானியத்தின் வரலாறு

## (கி. பி. 1206 முதல் 1320 வரை)

## முதல் பாகம்

(மேற்பட்டப் படிப்பிற்குரியது)

ஆசிரியர்

**டி. ஆர். இராமச்சந்திரன்,** எம்.ஏ., எம்.லிட்.,
பேராசிரியர், வரலாற்றுத் துறைத் தலைவர்,
பச்சையப்பன் கல்லூரி,
சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition — September, 1977
Number of Copies — 1,000

T.N.T.B.S. (C.P.) No. 762



**HISTORY OF THE DELHI SULTANATE - I**

**(From 1206 to 1320 A.D.)**

T. R. RAMACHANDRAN

**Price Rs. 13-80**

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

This book has been printed on concessional paper made available by the Government of India.

*Printed by*
BHAGAT PRINTERS
55, Railway Station Road,
Alandur, Madras-600 016.

# பதிப்புரை

டில்லி சுல்தானியத்தின் வரலாறு —கி. பி. 1206 முதல் 1320 வரை (முதல் பாகம்) என்ற இந் நூல், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 762ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 797 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு, கல்வி, சமூக நல அமைச்சகத்தின் 'மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்'தின்கீழ் வெளியிடப்படுகிறது.

மேலாண்மை இயக்குநர்

தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

# பொருளடக்கம்

# தோற்றுவாய்

## இஸ்லாம் மதம்—தோற்றமும் வளர்ச்சியும்

டில்லி சுல்தான்களுடைய ஆட்சியைப்பற்றி அறிவதற்கு முன்பு இஸ்லாம் மதம் தோன்றிய விதத்தையும் அதனைப் பரப்புவதற்கு மேற்கொள்ளப்பட்ட முயற்சியைப் பற்றியும் அறிந்து கொள்வது அவசியமாகும். இஸ்லாம் அரேபியாவில் தோன்றியது. அது தோன்றுவதற்கு முன்னர், காபா (Ka'ba) என்பதே அரேபியர்களின் புண்ணியத்தலமாக விளங்கியிருந்தது. அது தோன்றுவதற்குமுன் ஏறக்குறைய 12 தலைமுறைகளாக பிர் அல்லது குறைஷ் என்பவர் காபாவைப் பாதுகாக்கும் பொறுப்பைப் பெற்றிருந்தார். அவருடைய வழித் தோன்றல்கள் அதைச் சுற்றிலும் ஒரு நகரத்தைப் படைத்தனர். அதுவே மெக்கா எனப்பட்டது. காபாவில் ஏறத்தாழ 300 தெய்வ உருவங்கள் அல்லது படங்கள் வைக்கப்பட்டிருந்தன. அவற்றுள் உபல் என்பது மட்டுமே சிலையாக வடிக்கப்பட்டிருந்தது. முகமது நபி தோன்றுவதற்கு முன்பே அரேபியர்கள் அல்லாவைப்பற்றி அறிந்திருந்தனர். அல்லாவை அனைத்திற்கும் மேலாகக் கருதிய போதிலும், அவரை வழிபாட்டுக்குரியவராக அவர்கள் கருதவில்லை.

இஸ்லாம் மதம் தோன்றுவதற்குக் காரணமாக விருந்த முகமது கி. பி. 570ஆம் ஆண்டில் குறைஷ் இனக்குழுவைச் சார்ந்த அப்துல்லாவிற்கு மகனுகப் பிறந்தார்.

அவர் பிறப்பதற்கு முன்பே அவர் தம் தந்தையரை இழந்துவிட்டமையால் தம்முடைய பெரிய தந்தை அபுதாலிப்பிடம் வளர்ந்துவந்தார். அபுதாலிப் பணவசதி பெற்றிருக்கவில்லை. ஆகவே, சிறுவயதில் முகமது ஆடுகளை மேய்த்து வந்தார். வாலிபப் பருவத்தை அடைந்தபோது அவர் வணிகர் கூட்டங்களுக்கு அதிகாரியாகப் பணியாற்றிவந்தார். உண்மையாகப் பணியாற்றும் பண்பைப் பெற்றிருந்த அவர் தம் பணியில் நல்ல முன்னேற்றத்தைக் கண்டதில் வியப்பேதுமில்லை. தமது இருபத்தைந்தாவது வயதில் அவர் நாற்பது வயது நிரம்பிய கதீஜா என்ற பணக்கார விதவையை மணந்துகொண்டார். அவரது வாழ்க்

கையின் தொடக்கத்திலேயே அவர் மனம் சமயம்பற்றிய செய்தி களை நாடிச்செல்லத் தொடங்கியது. வாணிபம் பொருட்டு மெக்காவைவிட்டுச் சென்றபோது அவர் வேறு மதத்தவர்களையும் இனத்தவர்களையும் சந்திக்க நேர்ந்தது. அதன் பயனாக யூதர்கள், கிறிஸ்தவர்கள், கிரேக்கர்கள் ஆகியோருடைய சமயக்கருத்துகளை அவர் அறியலானார். அவர் அடிக்கடி மெக்காவிற்கு அருகே யிருந்த ஹீராமலைக்குச் சென்று அங்குப் பல இரவுகளைச் சிந்தனை யில் கழித்துவந்தார். நாளடைவில் அவர் அல்லாவின் மீது கொண்டிருந்த பற்று அதிகமாயிற்று. அவர்தான் உண்மைக் கடவுளாவார் என்று எண்ணத் தொடங்கினார். தம்மை அவரது தீர்க்கதரிசி என்று கருதலானார். இந்த எண்ணம், அவர் அடைந்த ஒரு வியப்புக்குரிய அனுபவத்தின் பிறகு உறுதியாயிற்று.

உண்மையான கடவுள் யார் என்பதை மெக்கா மக்கள் உணர்வதற்குக் கடவுள் நியமித்த தீர்க்கதரிசி தாமே என்று அவர் கூறினார். அண்டசராசரங்களின் தலைவர் அல்லாவே என்றும், அவரை நேரடியாக வழிபடவேண்டும் என்றும், அவரை வழிபடுபவர்கள் அனைவரும் சமமானவர்கள் என்றும், அவர் கூறினார். அவரது கொள்கைகளை அரேபியர் பலர் ஏற்க மறுத் தனர். அதன் விளைவாக அவருக்கு மெக்காவில் எதிர்ப்பு ஏற் பட்டது. நல்லவேளையாக மதினாமக்கள் அவரைத் தங்களுடைய நகரத்திற்கு வரும்படி வேண்டுகோள் விடுத்தனர். கி. பி. 622-ல் அவர் அவ்வேண்டுகோளை ஏற்று மதினாவிற்குச் சென்றார். இதனை ஹிஜிரா என்று அழைக்கிறோம். ஹிஜிரா என்பதற்கு ஒருவர் தம் நாட்டைவிட்டுப் புறப்பட்டுச் செல்லுதல் என்று பொருள். இந்த நிகழ்ச்சி நடைபெற்ற நாளும் ஹிஜிரா சகாப்தத்தின் தொடக்க நாளும் ஒன்றல்ல என்பதை நாம் கவனத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். இந்தச் சகாப்தத்தைத் தொடங்கி யவர் கலீஃபாஉமர் என்பவராவார். இது முகமது இறந்த ஏழாண்டுகளுக்குப் பின்னரே ஏற்படுத்தப்பட்டது. அப்போது முகமது மெக்காவைவிட்டு மதினாவிற்குப் புறப்பட்ட நாளையோ அவர் மதினாவை அடைந்த நாளையோ தொடக்கமாகக் கொண்டு கணக்கிடுவதற்குப் பதிலாக அவர் புறப்பட்டுச்சென்ற ஆண்டின் முதல்நாளை தொடக்கநாளாகக் கொண்டு கணக்கிட்டனர். அதாவது, அந் நிகழ்ச்சி நடைபெற்றதற்கு இரண்டு மாதங்களுக்கு முன்னரே இச் சகாப்தம் தொடங்கப்பட்டுள்ளது. ஹிஜிரா சகாப்தம் கி. பி. 622ஆம் ஆண்டு ஜூலை மாதம் 16ஆம் நாள் முதற்கொண்டு கணக்கிடப்பட்டுவருகிறது.[1]

[1] Ishwari Prasad, Mediaeval India, p. xiii.

முகமதுநபி தம்மைப்பின்பற்றி வந்தவர்களைக் காப்பாற்று வதற்காகவும் தமது போதனைகளைப் பரப்புவதற்கும் போர் செய்ய வேண்டிய நிலை விரைவில் ஏற்பட்டது. கி. பி. 630-ல் அவர் மெக்காவைக் கைப்பற்றினார். கி. பி. 632-ல் அவர் இப் பூவுலகைவிட்டு மறைந்தார். நபிகள் நாயகம் மதத்தலைவராக மட்டுமன்றி இஸ்லாமியர்களின் அரசியல் தலைவராகவும் விளங்கி யிருந்தார். அவரது மறைவிற்குப் பின்னர் அவருடைய பொறுப்பு களை ஏற்றுக்கொண்டவர்களை கலீஃபாக்கள் என்று நாம் அழைக்கிறோம். நபிகள் நாயகம் விட்டுச்சென்ற பணியினை அவர் கள் தொடர்ந்து மேற்கொண்டு இஸ்லாமிய மதத்தைப் பல இடங்களிலும் பரவச் செய்தனர். அதன்விளைவாகக் கலீஃபாக்க ளின் ஆதிக்கம் பெருகியது. கலீஃபாக்களின் தலைமையிடம் மதினா விலிருந்து டமாஸ்கஸுக்கு மாற்றப்பட்டது. கி. பி. 750ஆம் ஆண்டில் ஏற்பட்ட புரட்சியின் விளைவாக அதுகாறும் ஆட்சி செலுத்திவந்த உமயத்துகள் பதவியிலிருந்து அகற்றப்பட்டு அப்பாஸிடுகள் ஆட்சி தொடங்கியது. கி. பி. 762-ல் அப்பாஸிடு கள் தங்கள் தலைநகரைப் பாக்தாத்திற்கு மாற்றினார்கள்.

### அரேபியர்கள் சிந்துநாட்டின்மீது படையெடுத்தல்

இஸ்லாமிய மதத்தைப் பரவச்செய்யும் முயற்சியில் ஈடுபட்டி ருந்த அரோபியர்களின் கவனம் இந்தியாவின் பக்கம் திரும்பியதில் வியப்பேதும் இல்லை. கி. பி. 636-37ஆம் ஆண்டில் கலீஃபா உமர் பம்பாய்க்கு அருகேயுள்ள தானாவைக் கைப்பற்றுவதற்கான முயற்சியை மேற்கொண்டு அதில் தோல்வி கண்டார். கி. பி. 644-ல் கலீஃபா உஸ்மான் மேற்குச் சிந்துவைக் கைப்பற்ற முயற் சித்தார். அம் முயற்சியில் அவர் வெற்றியடைந்த போதிலும், அதனை அவர் தம் ஆளுகைக்கு உட்படுத்த விரும்பவில்லை. அதற்குப் பின்னர் நடத்தப்பட்ட போர் ஏற்பாடுகளின் விளைவாக அரேபியர்கள் மெக்ரான் (Mekran) என வழங்கப்பட்ட பலுசிஸ் தானை வென்றனர். அதையொட்டியிருந்த சிந்துமாகாணத்தை அவர்கள் வெல்லும் முயற்சியை எட்டாவது நூற்றாண்டின் தொடக்கத்தில் மேற்கொண்டனர். இப் படையெடுப்பிற்கு முக்கியக்காரணம் சிந்துமாகாணத்தின் கரையோரப் பகுதியில் மையம் கொண்டிருந்த கடற்கொள்ளைக்காரர்களின் அட்டகாசச் செயல்களேயாகும். இவற்றைப்பற்றி வரலாற்றாசிரியர்கள் பல வாறாகக் கூறியுள்ளனர். கலீஃபாவின் கிழக்கு மாநில ஆளுநரான ஹஜ்ஜாஜ் (Hajjaj) என்பவரிடம் இலங்கை மன்னர் தம்முடைய நாட்டில் இறந்துபோன முஸ்லீம் வணிகர்களின் பெண்களை அனுப்பிவைத்தார் என்றும் அவர்களைக் கொண்டுசென்ற கப்பல் களை அக் கொள்ளைக்காரர்கள் வழிமறித்துக் கொள்ளையிட்டனர்

என்றும் சிலர் கூறுகின்றனர்.[1] இஸ்லாமிய மதத்தைத் தழுவிக் கொண்ட இலங்கைமன்னர் கலீஃபாவிற்கு அனுப்பிவைத்த பரிசுப் பொருள்களை அவர்கள் கொள்ளையிட்டனர் என்று வேறுசிலர் கூறுகின்றனர். அப்துல்மலிக் என்ற கலீஃபா இந்தியாவில் பெண் அடிமைகளையும் ஏனையபொருள்களையும் வாங்கி வரும்படி ஆள்களை அனுப்பினர் என்றும், அவர்கள் சிந்துமாநிலத்தில் இருந்த தேபல் என்னும் துறைமுகப் பட்டினத்தை அடைந்தபோது கொள்ளைக் காரர்களுடைய தாக்குதலுக்கு இலக்காயினர் என்றும் மற்றும் சிலர் கூறுகின்றனர்.[2] அப்போது மெக்ரானின் ஆளுநராகப் பணியாற்றிவந்த முகமதுபின் ஹாரூன் என்பவரின் வாயிலாக ஹஜ்ஜாஜ் ஒரு செய்தியைத் தாஹிருக்கு அனுப்பிவைத்தார். கொள்ளைக்காரர்கள் கலீஃபாவிற்கு ஏற்படுத்திய இழப்பை ஈடு கட்டித்தரும்படி அதில் குறிப்பிடப்பட்டிருந்தது. கொள்ளைக் காரர்கள் தமது ஆட்சிக்குட்பட்டிருந்த குடிமக்கள் அல்லர் என்றும் அவர்களை அடக்கும் வலிமை தமக்கில்லை என்றும் தாஹிர் பதில் அளித்தார். கலீஃபாவின் அனுமதி பெற்று ஹஜ்ஜாஜ் தேபலுக்கு உபையதுல்லாவை அனுப்பி வைத்தார். அவரைக் கொலைசெய்துவிட்டனர் என்ற செய்தியை அறிந்ததும் ஹஜ்ஜாஜ் புதாயீல் (Budail) என்பவரை அனுப்பிவைத்தார். அவரும் போரில் மாண்டார் என்று அறிந்தபோது ஹஜ்ஜாஜ் தம்முடைய மருமகனை இமாத் உத்தீன் முகமது பின் காசிம் என்பவரை அனுப்பிவைத்தார். அவருக்கு அப்போது வயது பதினேழு.

மேற்கூறியவற்றிலிருந்து கொள்ளைக்காரர்கள் அரேபியர் களுக்கு இழைத்த இழப்பை ஈடுசெய்யத் தாஹிர் தவறிவிட்ட மையே அரேபியர்கள் சிந்துநாட்டின் மீது படையெடுக்கக் காரண மாக அமைந்தது என்ற கருத்து தெளிவாகும். இக் கருத்தை A. L. ஸ்ரீவஸ்தவா போன்ற ஆசிரியர்கள் ஏற்க மறுக்கின்றனர். இஸ்லாம் மதத்தைப் பரப்பவேண்டும், புதிதாக நாடுகளை வெல்ல வேண்டும், கைப்பற்றப்பட்ட நாடுகளைக் கொள்ளை அடித்து எளிதாகப் பணத்தைத் திரட்டவேண்டும் என்பன போன்ற எண்ணங்களே படையெடுப்பிற்கு முக்கியக் காரணங்களாகும் என்றும், தேபலுக்கு அருகே நடைபெற்ற கொள்ளைகள் படை யெடுப்பிற்கு உடனடியான காரணமாக இருந்ததேயொழிய அடிப்படையான காரணமாக அமையவில்லை என்றும் அவர்கள் கூறுகின்றனர்.[3]

[1] W. Haiz, The Cambridge History of India, Vol. III, p. 1.

[2] *Ibid*, p. 2.

[3] A. L. Srivastava, The Sultanate of Delhi, pp. 12-13.

கி. பி. எட்டாம் நூற்றுண்டில் சிந்து நாடு வடக்கே காஷ்மீர் முதல் தெற்கே இந்துமாக் கடல் வரையிலும் மேற்கே பலுசிஸ் தானம் முதல் கிழக்கே கன்னேசி வரையிலும் பரவியிருந்தது. அதனுடைய தலைநகர்: அலோர் (Alor) என்பதாகும். அது நான்கு மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவை ஒவ்வொன் றும் ஓர் ஆளுநரின் ஆளுகைக்கு உட்படுத்தப் பெற்றிருந்தது. அதனைத் தாஹிர் என்பவர் அப்போது ஆண்டு வந்தார். உள் நாட்டுக் குழப்பம் காரணமாகச் சிந்து நாடு மிகவும் பலம் குன்றி யிருந்தது. தாஹிருடைய தந்தையார் வன்முறையைப் பயன் படுத்தி அரசுரிமையைப் பெற்ற காரணத்தால் தாஹிர் மக்க ளிடையே செல்வாக்குப் பெற இயலாது போயிற்று. மேலும் சிந்து நாடு செழிப்பான பகுதியன்று. எனவே, முஸ்லிம்களை எதிர்த்துப் போராடுவதற்கான பொருள் வளத்தை அது முழுமையாகப் பெற்றிருக்கவில்லை. கலீஃபாவின் சிறந்த படைகள் என்று கருதப் பட்ட 6000 சிரியாக் குதிரைகள், 6000 போர் ஒட்டகங்கள், 3000 பொதிசுமக்கும் ஒட்டகங்கள் ஆகியவற்றுடன் முகமதுபின்காசிம் சிந்துவை நோக்கி ஷீராஸ், மெக்ரான் ஆகியவற்றின் வழியாகப் புறப்பட்டார். மெக்ரான் வழியாகச் சென்றபோது மேலும் சில படைகள் அவருடன் சேர்ந்து கொண்டன. அர்மாயீல் (Armail) என்னுமிடத்தில் சிந்துவின் எல்லையைக் கடந்து இறுதியில் தேபலை அடைந்தார். அங்குக் கடல்வழியாக அனுப்பப்பட்ட 2,500 பேர் கொண்ட பீரங்கிப்படை அவருடன் சேர்ந்து கொண்டது. அப்போது 4,000 போர் வீரர்களே தேபலைப் பாதுகாத்து நின்றனர். தாஹிர் போதிய படைகளைத் தேபலுக்கு அனுப்பி வைக்கத் தவறிவிட்டார். அன்னியரை விரட்டியடிக்கத் தாமும் தேபலை நோக்கிப் புறப்படவில்லை. அதன் விளைவாகத் தேபல் காசிமினுடைய பிடியில் சிக்கியது. இஸ்லாமிய மதத்தைத் தழுவிக்கொண்டு உயிர்வாழ்வதைவிட உயிரை இழப்பதே மேல் என்று அவர்கள் கருதினர்கள். மூன்று நாள்களில் 17 வயதுக்கு மேற்பட்ட ஆண்களை அரேபியர்கள் கொன்றனர். பெண்களும் குழந்தைகளும் அடிமைகளாக்கப்பட்டனர். கோயில்கள் இடிக்கப் பட்டன. அவ்விடங்களில் மசூதிகள் எழுப்பப்பட்டன. அந் நகரத்தை 4,000 வீரர்கள் பாதுகாத்து வரும்படி ஏற்பாடு செய்து விட்டுக் காசிம் நிருன் (Nirun) நகரை நோக்கிப் படை நடத்திச் சென்றார். கி. பி. 712-ல் நிருன் கைப்பற்றப்பட்டது. அங்கு ஒரு முஸ்லிமை ஆளுநராக நியமித்துவிட்டு காசிம் ஷேவான் (Sehwan) என்னுமிடத்திற்குப் படை நடத்திச் சென்றார். ஒரு வாரகால முற்றுகைக்குப் பின்னர் ஷேவான் பிடிபட்டது. தலை வரியை அங்கிருந்த முஸ்லிம் அல்லாதாரின் மீது சுமத்துவதுடன் காசிம் மன நிறைவு கொண்டார். ஷேவானிலிருந்து அவர் சீசம்

சென்றார். இரண்டே நாள்களில் அது பிடிபட்டது. அதன் பிறகு அவர் மீண்டும் நிருனுக்குச் சென்று அங்கிருந்து பாமனுபாத் நோக்கிப் படை நடத்திச் சென்றார். அதையறிந்ததும் தாஹிர் 50,000 குதிரை வீரர்களுடன் பாமனுபாத்திலிருந்து புறப்பட்டு ராவர் (Rawar) நோக்கிச் சென்றார். ராவரில் இரு படைகளும் மோதின. துரதிருஷ்டவசமாக, கடும் போர் நடந்து கொண்டிருந்த வேளையில் தாஹிர் அம்பொன்றினால் தாக்கப்படவே, அவர் தாம் அமர்ந்திருந்த யானைமீதிருந்து விழலானார். ஆயினும் அவர் ஒரு குதிரை மீது ஏறிக்கொண்டு போர் புரிய முற்பட்டார். ஆனால், அவரைச் சூழ்ந்து கொண்ட அரேபியர்கள் அவரை வெட்டி வீழ்த்தினார்கள். இந் நிகழ்ச்சி தாஹிருடைய படை வீரர்களை உலுக்கி விட்டது. பலர் தங்கள் தலைநகரை நோக்கி ஓட்டம்பிடித்தனர். வேறு சிலர் பாமனுபாத்திற்கு ஓடினார்கள். காசிம் ராவர் கோட்டையை முற்றுகையிடும்படி தம் வீரர்களுக்குக் கட்டளையிட்டார். அப்போது தாஹிருடைய மனைவியருள் ஒருவரான இராணிபாய் தீமூட்டி ஏனைய பெண்களுடன் அதில் குதித்து உயிரிழந்தார்.

அடுத்தபடியாகக் காசிம் பாமனுபாத்தைத் தாக்கினார். தாஹிரின் மகன் ஜெயசிங் வீராவேசத்துடன் போர் புரிந்தார். ஆயினும், அதனைக்காக்க இயலாது என்பதை அறிந்தபோது அவர் சித்ரூர் என்னுமிடத்திற்கு ஓடிவிட்டார். பாமனுபாத் காசிம் கைகளில் சிக்கியது. தாஹிரின் மற்றொரு மனைவியான இராணி லாதியும் (Rani Ladi), சூரியாதேவி, பரிமள தேவி என்ற பெயர்களுடைய தாஹிரின் இரு மணமாகாத புதல்வியரும் காசிம் கைகளில் சிக்குண்டனர். அவர்கள் கலீஃபாவிடம் அனுப்பி வைக்கப்பட்டனர்.

அதையடுத்துக் காசிம், அலோர்க் நோக்கிச் சென்றார். அப்போது அதனைத் தாஹிருடைய மற்றொரு மகன் பாதுகாத்து வந்திருந்தார்.[1] அலோர்க் கோட்டையை இனிக் காப்பாற்ற முடியாது என்ற எண்ணம் தாஹிருடைய மகனுக்கு ஏற்பட்ட போது அவர் அங்கிருந்து ஓடிவிட்டார். தலைவரில்லாத படைகளும் நகர மக்களும் காசிமிடம் சரணடைந்தனர். இவ்வாறாகக் காசிம் சிந்துவைத் தம் ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டு வந்தார்.

கி. பி. 713 ஆம் ஆண்டில் காசிம் மூல்தானை நோக்கிப் படையெடுத்தார். போகும் வழியில் அவர் பல கோட்டைகளை

[1] முஸ்லிம் வரலாற்றாசிரியர்கள் அவரை ஃபூபி (Fufi) என்று குறிப்பிட்டுள்ளனர்.

வென்ருர். அவற்றுள் ஒன்று சிக்கா என்பதாகும். 17 நாள் முற்றுகைக்குப் பிறகு அது பிடிபட்டது. அதன் பிறகு அவர் மூல்தான் சென்ருர். ஏழு நாள்களாகக் காசிமிற்கும் மூல்தான் மக்களுக்கும் இடையே பெரும் போர் நடைபெற்றது. இறுதியில் மூல்தான் பகைவர் வசம் சிக்கியது. ஏறக்குறைய ஆருயிரம் பேர்கள் அடிமைகளாக்கப்பட்டனர். அமீர்தாவூத் நாசர் மூல்தானின் ஆளுநராக நியமிக்கப்பட்டார். இந்துக்கள் தலைவரி கொடுத்துவிட்டுத் தங்களுடைய மதத்தைக் காத்துக்கொண்டனர். கோயில்களை அழிக்கக்கூடாது என்று காசிம் உத்தரவிட்டிருந்த போதிலும் அவற்றின் சொத்துகளை முஸ்லிம் அதிகாரிகள் கைப்பற்றுவதில் மிகுந்த ஆர்வத்தைக் காட்டிவந்தனர். ஒரு கோயிலிலிருந்து ஏறக்குறைய 230 மணங்குப் பொன்னையும் 40 ஜாடிகள் நிறையப் பொன் தூளையும் அரேபியர்கள் கைப்பற்றியதாகக் கூறப்படுகிறது.[1]

மூல்தானைக் கைப்பற்றிய பிறகு அபுஹசீம் என்பவரின் தலைமையின்கீழ்ப் படையொன்றைக் கன்னோசி நோக்கி அனுப்பி வைத்தார். மற்ருெரு போர் நடவடிக்கையை அவர் மேற்கொள்ளுவதற்கு முன்னர் அவர் கலீஃபாவின் கட்டளைப்படி ஓர் எருதின் பதப்படுத்தப்பெருத தோலின் உள்ளே வைத்துத் தைக்கப்பட்டார். மூன்று நாட்களுக்குப் பிறகு அவரது ஆவி அவர் உடலைவிட்டுப் பிரிந்தது. முகமது காசிமினுடைய மறைவிற்குச் சில காரணங்கள் கூறப்படுகின்றன. கலீஃபாவிடம் அனுப்பப்பட்ட தாஹிருடைய இரு பெண்களும் தங்களுடைய தந்தையின் மரணத்திற்குக் காரணமாக இருந்த காசிமைப் பழிவாங்க வேண்டும் என்ற எண்ணத்திஞல் தங்களைக் காசிம் ஏற்கெனவே தீண்டிவிட்டதாகக் கூறிஞர்கள். அதஞல் கோபமுற்ற கலீஃபா மேற்கண்ட கட்டளையைப் பிறப்பித்தார். அதைக் கேட்டதும் காசிம் தாமாகவே எருதின் தோலுக்குள் உட்கார்ந்து கொண்டு அதனைத் தைத்துவிடுமாறு உத்தரவிட்டார். மூன்ரும் நாள் அவர் உயிரிழந்தார். அவரது சவத்தைப் பெட்டியில் வைத்து கலீஃபாவிற்கு அவர்கள் அனுப்பிவைத்தனர். அப்பெட்டியைக் கலீஃபாவின் முன்னிலையில் திறந்துபோது அவருடன் இருந்த தாஹிரின் பெண்கள் தாங்கள் காசிமின்மீது சாட்டிய குற்றம் பொய்யானது என்று அறிவித்தனர். தங்கள் தந்தையைக் கொன்றவரின்மீது பழி வாங்கவே அத்தகைய பொய்க் குற்றத்தை அவர்மீது சாட்டியதாகக் கூறிஞர்கள். அதையறிந்த கலீஃபா அவர்களை மிகக் கடுமையாகத் தண்டித்தார். முகமது காசிமினுடைய வீழ்ச்சிக்கு

[1] Chachnama, Elliot I, p. 206.

வேறுவிதமான காரணத்தைச் சிலர் கூறுகின்றனர். கி. பி. 714-ல் கலீஃபாவாலித் இறந்த பிறகு சுலைமான் கலீஃபாவாக நியமனம் பெற்றார். சுலைமான் ஹஜ்ஜாஜினுடைய பரம எதிரியாவார். எனவே, ஹஜ்ஜாஜினுடைய மருமகன் என்ற காரணத்தால் முகமதுபின் காசிம் சிந்து நாட்டிலிருந்து அப்புறப்படுத்தப் பட்டார் என்றும், பின்னர் அவர் சித்திரவதைக்குட்படுத்தப் பெற்றுக் கொலையுண்டார் என்றும் கூறப்படுகிறது.

சிந்து நாட்டை வென்றபிறகு அதனைப் பல இக்தாக்கள் (Iqtas) அல்லது மாவட்டங்களாக முகமது பிரித்தார். அரேபிய இராணுவ அதிகாரி ஒருவர் இக்தாவின் தலைவராக அமர்த்தப் பட்டார். தக்க நேரத்தில் இராணுவத்தை அனுப்பி மைய அரசுக்கு உதவி செய்வதே அவரது தலையாய கடமையாகும். உள்நாட்டு விவகாரங்களில் அவருக்குப் பெருத்த அதிகாரங்கள் வழங்கப்பட்டன. இராணுவ வீரர்களுக்கு ஜாகீர்கள் அளிக்கப் பட்டன. அதன் விளைவாக அரேபியர்களின் குடியேற்றங்கள் சிந்து நாட்டின் பல பாகங்களில் தோன்றின. உள்ளாட்சி இந்துக் களின் கைகளிலேயே இருந்துவந்தது என்று நாம் கூறலாம். நிலவரியோடு இந்துக்கள் ஜிஸியா வரி கட்ட வேண்டிய நிலை ஏற் பட்டது. இதைத்தவிர வரி வசூல் முறையில் பெருத்த மாற்றம் ஏதும் ஏற்பட்டதாக நமக்குத் தெரியவில்லை. முஸ்லிம்களின் ஆதிக்கம் ஏற்படுத்தப்பட்டதன் விளைவாக சிந்து நாட்டிலிருந்த முக்கிய நகரங்களில் காஜிக்கள் நியமிக்கப்பட்டனர். அவர்கள் முஸ்லிம்கள் சம்பந்தப்பட்ட வழக்குகளையும், முஸ்லிம்கள், இந்துக் கள் ஆகியோரிடையே ஏற்பட்ட வழக்குகளையும் இஸ்லாமியச் சட்டத்தின்படி விசாரித்துத் தீர்ப்பு வழங்கினார்கள். இந்துக் களுக்கு அவர்கள் கடுமையான தண்டனையைக் கொடுத்தார்கள். இந்துக்கள் மட்டுமே சம்பந்தப்பட்ட வழக்குகளில் அரசு தலையிட வில்லை. உள்ளூர்ப் பஞ்சாயத்துகள் அவற்றை முடிவு செய்தன. மதவிவகாரங்களில் அரேபிய ஆளுநர்கள் சிறிது சகிப்புத் தன்மையைக் காட்டி வந்தனர் என்றுதான் நாம் கூற வேண்டும். இந்துக்கள் தாங்கள் விரும்பிய கடவுளர்களை வணங்க அனுமதிக் கப்பட்டனர். அதற்காக அவர்கள் ஜிஸியா வரியைக் கட்ட வேண்டியதாக இருந்தது. இந்துக்கள் நல்ல ஆடைகளை அணி யவோ குதிரைமீது செல்லவோ அனுமதிக்கப்படவில்லை. முஸ்லிம் வழிப்போக்கர்களை மூன்று நாள் தங்கள் வீட்டில் வைத்து உப சரிக்க வேண்டிய நிலை இந்துக்களுக்கு ஏற்பட்டது. இன்னல்கள் பலவற்றினுக்கு இந்துக்கள் உட்படுத்தப் பெற்றிருந்தபோதும் அரேபியர்களுடைய ஆட்சி பிற்காலத்தில் ஏற்படுத்தப்பட்ட

துருக்கிய ஆட்சியைவிட மேலானதாக இருந்தது என்று கூறப் படுகிறது.[1]

அரேபியர்களுடைய ஆட்சி இந்தியாவில் வெகு நாள் நிலைத் திருக்கவில்லை. கி. பி. 750-ல் டமாஸ்கஸில் ஏற்பட்ட புரட்சியின் காரணமாகப் பாக்தாத்தில் அப்பாசிடுகள் ஆட்சி தொடங்கப் பட்டது. அப்பாஸிடுகள் சிந்துவில் இருந்த முந்திய கலீஃபாக் களின் ஆளுநர்களை அங்கிருந்து அகற்ற முற்பட்டனர். அதனால் சிந்துவில் பூசல் ஏற்பட்டது. அங்கிருந்த தலைவர்களும் ஆளுநர் களும் சுதந்திரமாக இயங்கத் தலைப்பட்டனர். மூல்தானிலும் மன்சூராவிலும் இரு தனிப்பட்ட அரபு அரசுகள் தோன்றின. சிந்துவில் கலீஃபாவினுடைய ஆதிக்கம் சிறிது சிறிதாகக் குறைய லாயிற்று. சிந்துவில் இஸ்லாமின் பிற்கால வரலாறு பற்றிய விவரங்கள் நமக்குக் கிடைக்கவில்லை. அரேபியர்களுடைய ஆட்சி யைத் துருக்கியர்கள் இறுதியாக ஒழித்தனர்.

அரேபியர்களுடைய ஆட்சி இந்தியாவில் பெருத்த விளைவுகளை ஏற்படுத்திவிட்டது என்று நாம் கூற இயலாது. அரசியல் துறையில் சிந்துவில் அரேபியர்களின் ஆட்சி குறிப்பிடத்தக்க விளைவுகளை உண்டுபண்ணவில்லை. மொழி, கலை, சமுதாயம் ஆகியதுறைகளிலும் முக்கியமான மாறுதல்களை அது ஏற்படுத்த வில்லை. அவர்களுடைய ஆட்சியை நினைவுபடுத்தவல்ல நினைவுச் சின்னங்கள் ஏதும் இல்லையென்றே கூறலாம். ஆயினும், அதனால் ஒரு விளைவும் ஏற்படவில்லை என்றும் நாம் கூறுவதற்கில்லை. அவர் களுடைய படையெடுப்பின் விளைவாகத்தான் இஸ்லாமிய மதம் முதன்முதலில் இந்தியாவில் வேரூன்றத் தொடங்கியது. அரேபிய வீரர்கள் பலர் சிந்து நாட்டில் தங்க வேண்டிய நிலை ஏற்பட்ட போது அவர்கள் இந்தியப் பெண்களை மணம் புரிந்து கொண்டனர். அதனால், பல இராணுவக் குடியேற்றங்கள் தோன்றின. இக் குடி யேற்றங்களுள் சில நகரங்களாக மாறின. அந் நகரங்கள் கலா சாரத்தின் உறைவிடங்களாகத் திகழலாயின. அவற்றுள் மன்சூ ராவும் மூல்தானும் முக்கியமானவையாகும். சிந்து நாட்டிற்கும் ஏனைய இஸ்லாமிய நாடுகளுக்கும் இடையே நெருக்கமான தொடர்பு ஏற்பட்டது. அதன் பயனாக வியாபாரம் பெருகியது. அரேபியாவிலிருந்து கொண்டுவந்த குதிரைகள் சிந்து நாட்டில் விற்பனை செய்யப்பட்டன. இஸ்லாமியக் கலாசாரம் இப் படை யெடுப்பினால் வெகுவாக பாதிக்கப்பட்டது. இந்தியாவில் தங்க ளுடைய நாகரிகத்தைவிட மேலானதொரு நாகரிகம் நிலவி வரு வதை அவர்கள் கண்டனர். இந்து மதத்தை அவர்கள் வெறுத்த

[1] A, L. Srivastava, The Sultanate of Delhi, p. 23

போதிலும் இந்துக்களுடைய நாகரிகத்தின் போற்றுதற்குரிய அம்சங்களைத் தங்களுடைய கலாசாரத்தில் சேர்த்துக் கொள்வதில் அவர்கள் தயக்கம் காட்டவில்லை. நிர்வாகம் பற்றிய நுணுக்கங்கள் பலவற்றை அவர்கள் இந்துக்களிடமிருந்து கற்றுக் கொண்டனர். பிராமணர்கள் பலரை அவர்களுடைய நிருவாகத்தில் ஈடுபடுத்தினார்கள். இந்தியத் தத்துவ முறைகளில் அவர்கள் மிகுந்த ஆர்வத்தைக் காட்டினார்கள். அவர்களுள் பலர் பிராமண, புத்தத் தத்துவ ஞானிகளின் காலடியில் அமர்ந்து தத்துவம் பற்றிய உண்மைகளை அறிந்து கொண்டனர். பிரம்மசித்தாந்தா, கண்ட கடயகா (Khanda-khadayaka) போன்ற நூல்கள் அரபு மொழியில் மொழி பெயர்க்கப்பட்டன. அதன் விளைவாகக் கணிதம், வான இயல் ஆகிய துறைகளில் இந்தியர் கண்டறிந்த உண்மைகளை அவர்களும் அரிய வாய்ப்பு ஏற்பட்டது. அரேபிய எண்ணல் முறையும் அவர்கள் இந்தியரிடமிருந்து கற்றுக் கொண்டதேயாகும். இந்திய மருத்துவக் கலையும் இஸ்லாமிய நாடுகளில் பரவத் தொடங்கியது. இந்திய மருத்துவர்கள் பாக்தாத் மருத்துவமனைகளில் பணியாற்றினர். சமஸ்கிருத மொழியில் எழுதப்பட்டிருந்த மருத்துவ நூல்கள் அரபு மொழியில் மொழி பெயர்க்கப்பட்டன. இந்திய இசை வல்லுநர்களும், ஓவியர்களும், கட்டடக் கலைஞர்களும் அரேபியர்களின் கவனத்தை வெகுவாக ஈர்த்துவிட்டனர். இந்து ஜோதிடக்கலையும் அரேபியரின் மனதைக் கவர்ந்துவிட்டது. இந்தியக் கலைஞர்களும் அறிஞர்களும் பாக்தாத் நகருக்கு வரவழைக்கப்பட்டனர். அதன் விளைவாக அரபு நாகரிகம் மேலும் உன்னதநிலை அடையலாயிற்று.

சென்றவிடங்களிலெல்லாம் பெரும் வெற்றிகண்டு அதன் வாயிலாகப் பேரரசு ஒன்றை அமைத்த அரேபியர்கள் இந்தியாவில் இஸ்லாமியப் பேரரசை நிரந்தரமாக ஏற்படுத்தவில்லை என்பதை நாம் இங்குக் குறிப்பிடுதல் அவசியமாகும். சிந்து, மூல்தான் ஆகியவற்றைக் கடந்து சென்று தங்களுடைய பேரரசை மேலும் விரிவாக்க இயலாமைக்கு ஒருசில காரணங்கள் கூறப்படுகின்றன. அவற்றுள் ஒன்று கலீஃபாவின் பலமின்மையாகும். கி.பி. 750ஆம் ஆண்டு ஏற்பட்ட புரட்சியின் விளைவாகப் பாக்தாத்தில் உமையத்துகளுக்கும் அப்பாஸிடுகளுக்கும் இடையே ஏற்பட்ட பூசல் சிந்து நாட்டிலும் பரவியது. அதன் விளைவாக அரேபிய ஆட்சியாளர்களின் செல்வாக்கு சிந்துவில் குறைந்துவிட்டது. இரண்டாவதாக, அரேபியர்கள் சிந்துவில் அடைந்த வெற்றிக்கு முக்கிய காரணமாக இருந்தது அவர்களுடைய மதப்பற்றேயாகும். தங்களுடைய சமயத்தைப் பரப்புவதற்காக அவர்கள் உயிரையும் இழக்கத் தயாராக இருந்தனர். எனவே, அவர்கள் வீராவேசத்துடன் போர் புரிந்தனர். நாளடைவில் இந்தச் சமயப்பற்றுக் குறைந்து

விட்டது. இந்தியப் பெண்களை மணம் புரிந்துகொண்டு அவர்கள் உல்லாச வாழ்க்கையை மேற்கொள்ளலானுர்கள். மேலும், பல வகைப்பட்ட அரபுக் குழுக்களை ஒன்ருக இணைத்து வந்த சமய பந்தம் அறுபடவே அவர்களிடையே இருந்த ஒற்றுமை குலைந்து விட்டது. மூன்ருவதாக, சிந்துவிலிருந்த அரபு அரசுக்குத் தாயகத்திலிருந்து போதிய உதவி கிட்டவில்லை. நான்காவதாக, சிந்து நாட்டை ஒட்டியிருந்த இராஜபுத்திர அரசுகளை அடக்குவதென்பது அவர்களுடைய சக்திக்கு மீறிய செயலாக இருந்தது. ஐந்தாவ்தாக, சிந்து நாடு அப்போது ஒரு வறண்ட பகுதியாக இருந்தது. அத்தகையதொரு இடத்தினைத் தலைமையிடமாகக் கொண்டு மேலும் பல நாடுகளை இந்தியாவில் வெல்வதென்பது மிகக் கடினமான செயலாகும். அலெக்சாந்தர், நெப்போலியன் போன்ற மாவீரர்கள்கூட அக் காரியத்தினைச் சாதித்திருக்க முடியாது என்று கூறுவது மிகையாகாது.

### இந்தியாவின் மீது துருக்கியர் படையெடுத்தல்

அரேபியர் தொடக்கி வைத்த பணியினை முடித்து வைத்த பெருமை துருக்கியர்களையேச் சாரும். இந்தியாவுடன் முதன் முதலில் தொடர்புகொண்ட துருக்கியர்கள் கஜினியை ஆண்டுவந்த துருக்கிய அரச குலத்தவரேயாவார். இக் குலத்தைத் தோற்றுவித்தவர் அலப்டிஜின் (Alaptigini) என்பவராவார். சாமானித் (Samanid) பேரரசைச் சார்ந்த துருக்கிய அடிமை அதிகாரிகளுள் அவர் ஒருவர். அப் பேரரசுப் பகுதிகளில் ஒன்ருன ஆப்கானிஸ்தானத்தை ஆளும் பொறுப்பு அவருக்களிக்கப்பட்டிருந்தது. நாளடைவில் கஜினியைத் தலைநகரமாகக் கொண்ட சுதந்திர அரசு ஒன்றை அவர் அங்கு ஏற்படுத்திஞர். கி.பி. 963-ல் அவரது மகன் இஸ் ஹாக் (Is-haq) அலப்டிஜினுக்குப் பிறகு பட்டமேறிஞர். அதன் பிறகு பல்க்டிஜின் ஆப்கானிஸ்தான் அரசுக்குத் தலைமை வகித்தார். இவர் அலப்டிஜினுடைய அடிமைகளுள் ஒருவர். கி.பி. 972-ல் பீராயி (Pirai) அரசராஞர். அவர் காலத்தில் இந்துக்கள் கஜினி அரசைத் தாக்கித் தோல்வியுற்றனர். கி.பி. 977ஆம் ஆண்டில் அலப்டிஜினுடைய அடிமைகளுள் ஒருவரான சபக்டிஜின் அரசராகப் பொறுப்பேற்ருர். கஜினி அரசை விரிவு படுத்தும் முயற்சியில் அவர் மிகத் தீவிரமாக ஈடுபட்டிருந்தார். அதன் விளைவாக வடக்கே ஆக்ஸஸ் நதி வரையிலும் மேற்கே பாரசீகம் வரையிலும் அவரது நாட்டின் எல்லை விரிவாக்கப்பட்டது. அவர் காலத்தில் பஞ்சாபை ஆண்டுவந்த ஜெயபால் ஆப்கானிஸ்தானத்தைத் தாக்கிஞர். அதையடுத்து சபக்டிஜின் கி.பி. 986-ல் பஞ்சாப் நாட்டின்மீது படையெடுத்துச் சென்று பலரைச் சிறைப் படுத்திஞர். ஏராளமான செல்வத்தையும் அவர் கொண்டு

சென்றார். கி.பி. 988-ல் அவர் மீண்டும் பஞ்சாபின்மீது படையெடுத்துச் சென்றார். அதன் விளைவாக ஜெயபால் காபூலை இழக்க நேர்ந்தது. இவ்விரு இந்தியப் படையெடுப்புகள் கஜினியின் எல்லையை விரிவாக்குவதற்கும், ஜெயபால் மீது பழிவாங்குவதற்கும் மேற்கொள்ளப்பட்டனவேயன்றி சமயத்தைப் பரப்புவதற்காக அல்ல.[1] கி.பி. 994-ல் தமது மேலாளரான இரண்டாவது நூ (Nuh) என்பவருக்கு உதவி செய்து அதற்குக் கைம்மாருகக் கோராஸானைப் (Khurasan) பெற்றார். அதற்குத் தம் மகனை மாமூத்தை ஆளுநராக நியமித்தார்.

சபக்டிஜின் கி.பி. 997-ல் காலமானார். அவருடைய விருப்பத்திற்கிணங்க அவரது இளைய மகனை இஸ்மாயில் என்பவரைப் பிரபுக்கள் பலர் சேர்ந்து அரசராகத் தேர்ந்தெடுத்தனர். சிலர் மாமூத்தை ஆதரித்தனர். இரு சகோதரர்களும் வாரிசுரிமைப் போர் ஒன்றில் ஈடுபட்டனர். முடிவில் மாமூத் வெற்றி பெற்றார். அவர் பட்டமேறியபோது அவருக்கு வயது 27. அப்போது அவரது பேரரசு ஆப்கானிஸ்தானம், கோராஸான் ஆகியவற்றை மட்டுமே உட்கொண்டிருந்தது. கி.பி. 999-ல் அவர் சீஸ்தானத்தை வென்று அதனைத் தம் அரசோடு இணைத்துக்கொண்டார். அதையடுத்து அவர் தம்மை முழுச் சுதந்திரம் பெற்ற அரசராக ஏற்றுக் கொள்ளும்படி கலீஃபாவை வேண்டினார். கலீஃபா அவரது வேண்டுக்கோளுக்கிணங்கி அவருக்கு ஒரு சிறப்பு ஆடையையும் யமீன் உத்தௌலா, அமீன் உல் மில்லா என்ற பட்டங்களையும் வழங்கினார். அதன் விளைவாக அவரது வழித்தோன்றல்கள் யமீனி அரச குலத்தவர்கள் என்று அழைக்கப்பட்டனர். அப்போது தான் அவர் ஒவ்வோர் ஆண்டும் சிலை வழிபாட்டில் ஈடுபட்டிருந்த இந்தியர்களைத் தாக்குவதாகச் சூளுரை கூறினார்.[2]

அதற்கேற்ப அவர் இந்தியாவின்மீது பலமுறை படையெடுத்துச் சென்றார். அவற்றுள் முதலாவது கி.பி. 999 அல்லது 1000ஆம் ஆண்டில் நடத்தப்பட்டது. சில நகரங்களை அவர் கொள்ளையடித்துப் பின்னர் அவற்றைத் தம் நாட்டுடன் இணைத்துக் கொண்டார் என்று கூறப்படுகிறது. இதைப்பற்றி நமக்குத் தெளிவான சான்றுகள் கிடைத்தில.

கி.பி. 1001ஆம் ஆண்டில் மாமூத் 15,000 குதிரைகளுடன் பெஷாவரை நோக்கிப் புறப்பட்டார். அச் செய்தியை அறிந்ததும் ஜெயபாலர் 12,000 குதிரை வீரர்கள், 30,000 காலாட்படை

[1] Cambridge Modern History, Vol. III, p. 12.

[2] *Ibid*, p. 13,

யினர், 300 யானைகள் தம்மைப் பின்தொடர்ந்து வர பகைவருடைய பாசறையை நோக்கிச் சென்றூர். போர் தொடங்கிய சில மணி நேரத்துக்குள்ளாகவே அவரது படைகள் தோல்வியுற்றன ; 5000 இந்து வீரர்கள் மாண்டனர்; ஜெயபாலர் சிறைபட்டார் ; பெஷாவரைச் சுற்றியிருந்த பகுதிகள் கஜினிப் பேரரசுடன் இணைக்கப்பட்டன. அதையடுத்து வையிந்து (Waihind)[1] என்ற இடத்தைத் தாக்கினூர். அங்கிருந்த இந்துக்கள் அந்நகரைவிட்டு ஓடினூர்கள். அவர்களைத் துரத்திச் சென்று பல உயிர்களைக் குடித்தார். பின்னர் ஜெயபாலர் விடுவிக்கப்பட்டார். 250,000 தினூர்களையும், 25 யானைகளையும் மாமூத்திற்கு அளிக்க ஒப்புக் கொண்டார். மும்முறை முஸ்லிம்களிடம் தோல்வியுற்றமையால் ஏற்பட்ட அவமானத்தைப் பொறுக்க இயலாது ஜெயபாலர் தீமூட்டி அதில் குதித்து உயிரிழந்தார்.

கி. பி. 1004ஆம் ஆண்டில் மாமூத் மீண்டும் இந்தியாவின் மீது படையெடுத்தார். வலிஸ்தான் வழியாகச் சென்று அவர் மூல்தானுக்கு அருகே சிந்துவைக் கடந்து பாதியாவை[2] (Bhatia) அடைந்தார். பஜீராய் என்பவர் அதனை அப்போது ஆண்டுவந்தார். பஜீராய் சிறந்த வீரர். ஒரு சமயம் அவரது வெற்றி உறுதி என்ற நிலை ஏற்பட்டது. ஆயினும் முடிவில் அவர் தோல்வியுற்றூர். பகைவரிடம் சிக்கி அவமானத்திற்குள்ளாவதைவிட உயிரிழப்பது மேல் என்று கருதி தற்கொலை செய்துகொண்டார். பாதியா கொள்ளையிடப்பட்டது. அங்குச் சில காலம் தங்கியிருந்து அதனைத் தமது அரசுடன் நிரந்தரமாக இணைப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துவிட்டு 1005-ல் கஜினிக்குப் புறப்பட்டார். மழை காரணமாக அவர் கடந்து செல்ல வேண்டிய ஆறுகளில் எல்லாம் வெள்ளப் பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருந்தது. அதன் விளைவாக அவர் கொள்ளையிட்டுத் தம்முடன் கொண்டு சென்ற பொருள்களைப் பெருமளவில் இழக்க நேர்ந்தது.

கி.பி. 1005–06ஆம் ஆண்டில் மாமூத் மீண்டும் இந்தியாவின் மீது படையெடுத்து வந்தார். அது, மூல்தானை ஆண்டு வந்த அபுல் பத்தாவூத் என்பவரின் சமயவிரோதச் செயல்களைத் தண்டிப்பதற்காக மேற்கொள்ளப்பட்ட படையெடுப்பாகும். தாவூத் இஸ்மாயீலி மதப்பிரிவைச் சார்ந்தவர். மாமூத் அம் மதப்பிரிவின் பரம எதிரியாவார். அப் படையெடுப்பின்போது ஆனந்த

[1] ஷாயி அரசர்களின் தலைநகரான உதபந்தாதான் (Udabhanda) வையிந்து என்று கூறப்படுகிறது.

[2] இது பேரா நகரம் என்று சிலர் கூறுகின்றனர். வேறு சிலர் இது உச், பாதிந்தா ஆகிய நகரங்களைக் குறிப்பதாகக் கூறுகின்றனர்.

பாலரது நாட்டின் வழியாகச் செல்ல அனுமதி வழங்கும்படி மாமூத் ஆனந்தபாலரைக் கேட்டுக்கொண்டார். தாவூத் ஆனந்த பாலரின் நண்பர். எனவே, அவர் மாமூத்தின் கோரிக்கையை நிராகரித்தார். அதன் விளைவாக ஏற்பட்ட போரில் ஆனந்த பாலர் தோல்வியுற்றுப் பாதுகாப்பை நாடி மலைப் பகுதிக்கு ஓடி விட்டார். அவரது தோல்வி தாவூத்தினுடைய தைரியத்தைக் குலைத்துவிட்டது. எனவே, அவர் கோட்டைக்குள் புகுந்து கொண்டு யாதொரு தடங்கலுமின்றி மாமூத் மூல்தானை எளிதில் அடைய வழி செய்துவிட்டார். ஏழு நாள்களாக நடைபெற்ற முற்றுகையை அடுத்து தாவூத் சரணடைந்தார். மூல்தானியர் 20,000,000 திர்ஹாம்களை வழங்க இசைந்தனர்.[1] தாவூத், மூல்தானை ஆளும் உரிமையைப் பெற்றார். அதற்காக ஆண்டு தோறும் 20,000 பொன் திர்ஹாம்களை அளிக்கவும், இஸ்லாமிய மதக்கோட்பாடுகளைச் சிறிதும் வழுவாமல் கடைப்பிடித்து வரவும் இசைவளித்தார். அந்த நேரத்தில் இலாக்கான் தலைமையின்கீழ் துருக்கியப் படையொன்று மாமூத்தினுடைய பேரரசின் வட பகுதியைத் தாக்குகின்றனர் என்ற செய்தி அவருடைய காதுக் கெட்டியது. எனவே, இந்துஸ்தானத்தில் தாம் வென்ற பகுதி களைச் சுகபாலரிடம் ஒப்படைத்துவிட்டு அவர் கஜினி திரும்பினார். சுகபாலர் என்பவர் ஜெயபாலருடைய பேரனுவார். அவர் இஸ்லாம் மதத்தை ஏற்றுக்கொண்டு நவாஸா ஷா என்ற பெயரைச் சூட்டிக்கொண்டார். மாமூத் இந்தியாவைவிட்டுச் சென்ற உடனேயே நவாஸாஷா இஸ்லாம் மதத்தைவிட்டுவிட்டு மீண்டும் இந்துவானார். முஸ்லிம் அதிகாரிகளைப் பதவியிலிருந்து விலக்கினார். இந்தியத் தலைவர்களுடன் அவர் ஒப்பந்தம் செய்து கொண்டு சுதந்திர அரசை ஏற்படுத்தினார். எனவே, மாமூத் இலாக்கானுடன் செய்துவந்த போரை முடித்துக் கொண்டு கி. பி. 1007-ல் மீண்டும் இந்தியாவின் மீது படையெடுத்து வந்தார். சுகபாலர் அவருடன் போர் செய்ய இயலாது மலைப் பகுதிக்கு ஓடிவிட்டார். அவரைப் பின்தொடர்ந்து சென்று மாமூத் அவரைச் சிறைபிடித்தார். 400,000 திர்ஹாம்கள் மதிப்புள்ள சொத்துகளைக் கைப்பற்றிக்கொண்டு, அவர் கஜினி திரும்பினார்.

கி. பி. 1008ஆம் ஆண்டில் ஆனந்தபாலருக்கு எதிராக மாமூத் ஒரு படையை நடத்திச் சென்றார். மூல்தான் படையெடுப்பின் போது ஆனந்தபாலர் நடந்துகொண்ட விதமே அப் படையெடுப் பிற்கு முக்கியக் காரணமாகும். மாமூத்தின் படையெடுப்பை

[1] ஈஸ்வரி பிரசாத் 20 ஆயிரம் திர்ஹாம்கள் கொடுத்தனர் என்று கூறுகிறார். Mediaeval India, p. 81.

முறியடிக்க ஆனந்தபாலர் தம்முடைய மகனுன பிரம்மபாலரை அனுப்பிவைத்தார். ஆனந்தபாலருக்கு உதவியாகப் பல இந்திய அரசர்கள் படைகளை அனுப்பிவைத்தனர். பஞ்சாபைச் சார்ந்த கோக்கர்கள் தங்களுடைய படை முழுவதையும் அவருக்குக் கொடுத்துதவினுர்கள். உஜ்ஜெயினி, குவாலியர், கலிஞ்சர், கன்னேசி, டில்லி, ஆஜ்மீர் ஆகியவற்றின் அரசர்களும் அவருக்கு உதவியளித்தனர் என்று ஃபெரிஷ்டா கூறுகின்முர். இந்திய அரசர்களுடைய உதவியை ஆனந்தபாலர் நாடினுர் என்பதைச் சாசனங்கள் வாயிலாகவும் நாம் அறிகிரேம். ஆனுல், எல்லா அரசர்களும் அவருக்கு உதவி செய்தார்களா என்பதை நாம் திண்ணமாகக் கூற இயலாது. எனினும், ஆனந்தபாலர் ஒரு பெரும் படையைத் திரட்டிக் கொண்டு மாமூத்தை எதிர்த்தார் என்பதில் ஐயமில்லை. முதலில் முஸ்லிம்கள் இந்துக்களின் தாக்குதலை எதிர்கொள்ள இயலாமல் அவர்களுடைய ஆயுதங்களுக்கு இரையாயினர். அந்தச் சமயத்தில் ஆனந்தபாலர் ஏறிவந்த யானை அம்புகளின் தாக்குதலைச் சமாளிக்கவொட்டாமல் கட்டுக்கடங்காமல் போய்விட்டது. போர்க்களத்திலிருந்து அது ஓடத் தொடங்கியபோது போர் வீரர்கள் அந் நிகழ்ச்சியைத் தவருகப் புரிந்து கொண்டனர். எனவே, அவர்களும் போர்க்களத்திலிருந்து ஓடத் தொடங்கினுர்கள். அவர்களைப் பின்தொடர்ந்து சென்று மாமூத்தின் படைகள் ஏறக்குறைய 20,000 இந்தியர்களைக் கொன்றுகுவித்தனர். பின்னர் மாமூத் தற்காலத்தில் கோட் காங்ரா எனப்படும் நாகர் கோட் கோட்டையை முற்றுகையிட்டார். மூன்று நாள் முற்றுகைக்குப் பிறகு அக் கோட்டை மாமூத்தின் கைவசமாயிற்று. விலை மதிக்க முடியாத பெருஞ்செல்வம் அவர் கையில் சிக்கியது. நம்பிக்கைக்குரிய அதிகாரி ஒருவரிடம் அக் கோட்டையை ஒப்படைத்துவிட்டு அவர் கஜினி திரும்பினுர். அக் கோட்டையை வெகு நாள் அவர் தம்முடைய ஆதிக்கத்தின் கீழ் வைத்திருக்க இயலவில்லையென்றுலும் உதபந்தா உட்படச் சிந்து நதிக்கு மேற்கேயுள்ள பகுதிகளைத் தம் பேரரசுடன் அவர் இணைத்துக் கொண்டார். நாகர்கோட் படையெடுப்பின் விளைவாக 70,000,000 திர்ஹாம்கள், பொன், வெள்ளிக் கட்டிகள், 7,00,400 மணங்கு அணிகலன்கள், விலையுயர்ந்த ஆடைகள், இரண்டு தங்கக் கம்புகள், இரண்டு வெள்ளிக் கம்புகள் கொண்ட விதானம், விலையுயர்ந்த சிம்மாசனம் ஆகியவற்றை அவர் தம்முடன் கஜினிக்கு எடுத்துச் சென்முர்.[1]

[1] History and Culture of the Indian People, Vol. 5., p. 9.

கி. பி. 1009-ல் அவர் நாராயண் என்னுமிடத்தை நோக்கிப் படை நடத்திச் சென்றார்.[1] அதனுடைய அரசர் வீரத்துடன் போரிட்ட போதிலும் இறுதியில் தோல்வியுற்றார். அங்கிருந்த சிலைகளை உடைத்துவிட்டுப் பெருஞ் செல்வத்துடன் மாமூத் கஜினிக்குத் திரும்பினார்.

கி. பி. 1010-ல் மாமூத் இரண்டாவது முறையாக மூல்தானைத் தாக்கினார். இம் முறை தாவூத் சிறைபடுத்தப்பட்டார். மாமூத்தின் ஆதிக்கம் மூல்தானில் மீண்டும் ஏற்படுத்தப்பட்டது.

கி. பி. 1011-ல் மாமூத் தானேச்சுவரத்தின்மீது படையெடுத்தார். உயர்ந்த ரக யானைகள் தானேச்சுவரத்தில் இருப்பதாக அவர் கேள்வியுற்றார். அவற்றைக் கைப்பற்றிக்கொண்டு தமது படைப்பலத்தைப் பெருக்கிக்கொள்ள அவர் விழைந்தார். மேலும், இந்துக்களின் மதிப்பைப் பெற்றிருந்த தானேச்சுவரர் கோயிலை இடித்துத் தள்ளவேண்டும் என்ற எண்ணமும் அவருக்கு ஏற்பட்டது. செல்வச் சிறப்புடன் விளங்கிய நகரைக் கொள்ளைஅடித்துப் பொருள் திரட்ட அவர் எண்ணினார். போகும் வழியிலிருந்த ஷாயி அரசின் அதிபதியான ஆனந்தபாலர் மாமூத்திற்கு எல்லா வசதிகளையும் செய்து கொடுத்தார். இப் படையெடுப்பை நடத்துவதற்கு முன்னரே மாமூத்தும் ஆனந்தபாலரும் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டனர். அதன் விளைவாக இவ்விரு அரசுகளுக்கும் இடையே நட்புறவு நிலவத் தொடங்கியது என்பதை ஈண்டுக் குறிப்பிடுவது அவசியமாகும். வழியில் மாமூத் ராம என்ற அரசருடன் போர்செய்து அவரை வென்றார். பின்னர், தானேச்சுவரத்தைக் கைப்பற்றினார். பல சிலைகளை உடைத்துத் தமது சமயவெறியை வெளிப்படுத்தினார். உடைபட்ட சிலைகள் கஜினிக்குக் கொண்டு செல்லப்பட்டன. அங்கு மக்கள் அவற்றின்மீது மிதித்துச் செல்வதற்காகப் பொது இடங்களில் அவை கிடத்தப்பட்டன.

கி. பி. 1013ஆம் ஆண்டில் மாமூத் மீண்டும் ஷாயி அரசுடன் போர் தொடுத்தார். அப்போது திரிலோசனபாலர் அதனை ஆண்டுவந்தார். ஷாயி படைகளுக்குத் திரிலோசனபாலரின் மகனை பீமபாலர் தலைமை வகித்தார். போரில் பீமபாலர் தோல்வியடைந்தார். அவரும் திரிலோசனபாலரும் காஷ்மீர் பள்ளத்தாக்கிற்கு ஓடிவிட்டனர். மாமூத் ஷாயி அரசினுடைய தலைநகரமாகிய நந்தனவை (Nandanah) முற்றுகையிட்டு அதனைக்

[1] இராஜபுதனத்திலுள்ள நாராயண்பூர் என்பதே அக் காலத்தில் நாராயண் என்று அழைக்கப்பட்டது. (History and Culture of the Indian People, Vol. 5., p. 10.)

கைப்பற்றினர். ஷாயி அரசின் மேற்கு, மத்தியப் பகுதிகளைத் தமது அரசுடன் இணைத்துக் கொண்டார். அதன் பின்னர் அவர் காஷ்மீரத்திற்குப் படை நடத்திச் சென்றார். திரிலோசன பாலரைத் தோற்கடித்துக் காஷ்மீரத்தைக் கொள்ளையிட்டார். அங்கிருந்த மக்கள் பலரைப் பலவந்தமாக இஸ்லாமிய மதத்தில் சேர்த்தார். பல இந்தியர்கள் கைது செய்யப்பட்டுக் கஜினிக்குக் கொண்டு செல்லப்பட்டனர்.

கி. பி. 1015ஆம் ஆண்டில் அவர் மீண்டும் காஷ்மீர் மீது படையெடுத்துச் சென்று அங்கு ஏற்பட்டிருந்த கலகத்தை அடக்கினர். ஆயினும், அங்குக் குறிப்பிடத்தக்க வெற்றிகளை அவரால் அடைய இயலவில்லை. மாமூத்தின் அடுத்த இந்தியப் படையெடுப்பு கி. பி. 1018-ல் நடத்தப்பட்டது. திரிலோசனபாலர் அவருடன் போர் செய்ய இயலாது மாளவத்திற்கு ஓடிவிட்டார். பஞ்சாபைக் கடந்து மாமூத் யமுனையை அடைந்தார். பரனை ஆண்டு வந்த ஹர்தத் அவருக்கு அடிபணிந்தார். இஸ்லாமிய மதத்தினைத் தழுவிக் கொள்ளவும் அவர் இசைந்தார் எனக் கூறப் படுகிறது.[1] அதன் பிறகு மஹாபன் (Mahaban) என்ற கோட்டையைக் கைப்பற்றினர். அதனுடைய அரசர் குலசந்த் என்பவர் தமது மனைவியைக் கொன்றுவிட்டுத் தாமும் தற்கொலை செய்து கொண்டார். ஏறக்குறைய 5,000 இந்துக்கள் கொல்லப்பட்டதாகக் கூறப்படுகிறது. அதையடுத்து மாமூத் மதுராவைத் தாக்கினர். மதுரா எளிதாக அவர் கைவசமாயிற்று. பொன்னாலும், வெள்ளியாலும் செய்யப்பட்ட உருவச்சிலைகளைக் கைப்பற்றிக் கொண்டு அங்கிருந்த கோயில்களைத் தீக்கிரையாக்கினர். அந்நகரை அமைக்க 200 ஆண்டுகள் பிடித்திருக்க வேண்டும் என்று மாமூத் குறிப்பிட்டுள்ளார். அத்தகையதொரு நகரை 20 நாள்களாகச் சூறையாடி அங்கிருந்த வீடுகளைச் சாம்பலாக்கி விட்டார். அதன் பிறகு அவர் கன்னோசிக்குச் சென்றார். அதனை அப்போது இராஜ்யபாலர், என்பவர் ஆண்டு வந்தார். மாமூத்தின் படைகளைக் கண்டதும் அவர் கங்கையைக் கடந்து அக்கரையிலிருந்த பரி (Bari) என்னுமிடத்தில் ஒளிந்து கொண்டார். கன்னோசி எளிதாக மாமூத் வசமாயிற்று. சிலைகள் உடைக்கப்பட்டன. நகர மக்கள் பலர் மாமூத் படையினரின் கத்திகளுக்கு இரையாயினர். கன்னோசியை வென்ற பிறகு மாமூத் முன்ஜ் (Munj) என்னுமிடத்திற்குச் சென்றார்.[2] 25 நாள்களாக இக்கோட்டையின்

[1] நைஜாமுத்தீன் அகமது போன்றார் ஹர்தத் போர் புரியாது ஓடிவிட்டார் என்று கூறுகின்றனர்.

[2] இது தற்கால ஷஹாரன்பூருக்கு அருகிலுள்ள சிர்ஸவா ஆகும்.

முற்றுகை நடைபெற்றது. இறுதியில் அதில் வாழ்ந்திருந்த பெண் களையும் குழந்தைகளையும் தீயிலிட்டு விட்டுக் கோட்டை வீரர்கள் வீராவேசத்துடன் போர் புரிந்து உயிரிழந்தனர். அதன் பின்னர் ஆசிக் கோட்டையை மாமூத் தாக்கினர்.[1] அதனை அப்போது சந்திரபால் பூர் என்பவர் ஆண்டு வந்தார். மாமூத்தின் வருகையை அறிந்ததும் அவர் கோட்டையை விட்டு ஓடிவிட்டார். அதற்குப் பிறகு அவர் ஷர்வாவிற்குச் சென்றார்.[2] அதனை ஆண்டு வந்த காந்த்ராய் அருகிலிருந்த காட்டுப் பகுதிக்குச் சென்று விட்டார். கோட்டைக்குள் புகுந்து அங்கிருந்த விலை உயர்ந்த பொருள்களைக் கைப்பற்றிக் கொண்டு மாமூத் கஜினிக்குத் திரும்பினர். கன்னேசிப் படையெடுப்பின் விளைவாக மாமூத்திற்கு 20,000,000 திர்ஹாம்களும், 53,000 கைதிகளும், 350 யானைகளும் கிடைத்தன.[3]

கி. பி. 1020-21-ல் கண்டேல அரச குலத்தைச் சார்ந்த வித்யாதரரைத் தண்டிக்கும் பொருட்டு மாமூத் மீண்டும் இந்தியாவின்மீது படையெடுத்து வந்தார். திரிலோசனபாலர் வித்யாதரருடன் நட்புறவு கொண்டார். எனவே, முதலில் திரிலோசனபாலருடன் மாமூத் போர்புரிய வேண்டியதாயிற்று. போரில் திரிலோசனபாலர் தோல்வியுற்றார். ஷாயி அரசு முழுவதும் மாமூத்தின் ஆதிக்கத்திற்கு உட்பட்டது. அதை யடுத்து அவர் பிரதி ஹாரர்களின் தலைநகரமான பரி (Bari)யைத் தாக்கினர்கள். அதனுடைய அரசர் திரிலோசனபாலர் அங்கிருந்து ஓட்டம் பிடித்தார். மாமூத்தின் கட்டளையின் பேரில் பரி தரை மட்டமாக்கப்பட்டது. அதன் பிறகு அவர் வித்யாதரர் மீது போர்தொடுத்தார். வித்யாதரரின் பெரும் படையைக் கண்டதும் மாமூத் கலங்கி விட்டார். ஆயினும் அவரது படைத் தலைவர் ஒருவருக்கும், வித்யாதரரின் படைப் பிரிவுகளுள் ஒன்றனுக்கும் இடையே ஏற்பட்ட சிறு மோதலில் இந்துப் படை முறியடிக்கப் பட்டது. அதையறிந்ததும் வித்யாதரர் போர்க் களத்திலிருந்து ஓடிவிட்டார். கி. பி. 1021-22ஆம் ஆண்டில் மாமூத் மீண்டும் வித்யாதரரின் மீது படையெடுத்து வந்தார். போகும்வழியில் அவர் குவாலியர்க் கோட்டையைத் தாக்கி அதனுடைய தலைவரிடமிருந்து பல பரிசுப் பொருள்களைப் பெற்றுக் கொண்டார். பின்னர் கலிஞ்சரை முற்றுகையிட்டார். இறுதியில் வித்யாதரர் மாமூத்துடன் உடன்பாடு ஒன்றை ஏற்படுத்திக் கொண்டார்.

[1] இது கான்பூருக்கு அருகேயுள்ள மன்ஞ்ஹவன் ஆகும் என்பர்.

[2] இது பதேபூருக்கு அருகேயுள்ள அஸ்னி என்பதாகும்.

[3] History and culture of the People of India, Vol V, p. 15.

கி. பி. 1024ஆம் ஆண்டில் மாமூத் மீண்டும் இந்தியாவின் மீது படையெடுத்து வந்தார். அப்போது கத்தியவாரின் கடற் கரையில் அமைக்கப்பட்டிருந்த சோமநாத் அவருடைய முக்கியக் குறியாக இருந்தது. கஜினியிலிருந்து 30,000 குதிரை வீரர்களுடன் புறப்பட்ட மாமூத் மூல்தான், லோதோர்வா, நஹர்வாலா தேவால்வாரா ஆகியவற்றின் வழியாகச் சென்று சோமநாத்தை அடைந்தார். சோமநாதக் கடவுளின் பெருமையை அழிப்பதே அவருடைய முக்கிய நோக்கமாக இருந்தது. அவருடைய தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் சோமநாத் கோட்டை கஜினியின் கையில் வீழ்ந்தது. சோமநாத் கோயில் தரை மட்டமாக்கப்பட்டது. அங்கிருந்த இலிங்கத்தை அவர் உடைத்து, உடைபட்ட துண்டுகளைக் கஜினிக்குக் கொண்டு சென்றார். கஜினியில் அவர் அமைத்த ஜும்மா மசூதியின் வாயிற்படியில் அவற்றைக் கிடத்தினர் என்று கூறப்படுகிறது. இச்செய்தி இந்துஸ்தானத்தின் அரசர்கள் பலரை மாமூத்திற்கு எதிராகப் போர்க்கோலம் பூணும்படிச் செய்தது. ஆகவே கட்ச், சிந்து ஆகியவற்றின் வழியாக நாடு திரும்ப அவர் திட்டமிட்டார். பல இன்னல்களுக்கு உட்படுத்தப்பட்ட அவரது படை இறுதியில் மன்சூராவை அடைந்தது. அங்கிருந்து அவர் மூல்தான் செல்லும் போது ஜாட் வகுப்பினர் அவருக்குத் தீங்கு விளைவித்தனர். கி. பி. 1026ஆம் ஆண்டில் அவர் கஜினி திரும்பினர். அப்படையெடுப்பைப் பாராட்டி கலீபா அவருக்குப் பல பட்டங்களை வழங்கினர். கி. பி. 1027ஆம் ஆண்டில் ஜாட்டுகளைத் தண்டிப்பதற்காக அவர் மீண்டும் படையெடுத்து வந்தார். மாமூத்தும் ஜாட்டுகளும் படகுகளில் ஏறிக் கொண்டு கடுமையாகப் போரிட்டனர். இறுதியில் ஜாட்டுகள் முழுமை யாகத் தோற்கடிக்கப்பட்டனர். இதுவே மாமூத்தின் கடைசி இந்தியப் படையெடுப்பாகும்.

மாமூத் கஜினி ஒரு சிறந்த படைத்தலைவர் என்பதை அவரது இந்தியப் படையெடுப்புகள் உறுதி கூறுகின்றன. கலைக்கும் இலக்கியத்திற்கும் அவர் அருந்தொண்டு ஆற்றியுள்ளார். கஜினியில் ஜும்மா மசூதியொன்றைக் கட்டினர். அதன் பக்கத்தில் பல்கலைக் கழகமொன்றை நிறுவினர். அதில் பல மொழிப் புத்தகங்களைச் சேகரித்து வைத்தார். ஒரு பொருட் காட்சி சாலையையும் தோற்றுவித்தார். பிர்தூசி போன்ற கவிஞர்களை ஆதரித்தார். அவரிடம் காணப்பட்ட சில குறைகளுள் முக்கியமானவை பேராசையும் மதவெறியும் ஆகும். இந்திய வரலாற்றில் அவருடைய படையெடுப்புக்கள் முக்கிய இடம் வகிக்கின்றன. அடிக்கடி அவர் படையெடுத்து வந்து இந்தியாவின்

செல்வத்தைக் கொள்ளையடித்துச் சென்றமையால் இந்தியாவின் பொருள்வளம் குறைந்துவிட்டது. ஆள் பலமும் குறைந்தது. பிற்காலத்தில் அன்னியர்கள் எளிதாக வெற்றிவாகை சூடுவதற்கு இவை காரணமாகும். இதுவரை இந்தியாவை அன்னியப் படையெடுப்பிலிருந்து காத்து வந்த ஷாயி அரசை மாமூத் அழித்து அதன் வாயிலாகப் பிற்காலத்தில் அன்னியப் படையெடுப்புகள் எளிதாக மேற்கொள்ள அவர் வழி வகை செய்தார். மேலும், பஞ்சாபில் முஸ்லிம்களின் ஆதிக்கத்தை நிலைநாட்டி அதன் வாயிலாக இந்தியாவில் நிரந்தரமாக இஸ்லாமிய அரசு ஒன்றை ஏற்படுத்த இயலும் என்பதை உறுதியாக்கினார்.

மாமூத் இறக்கும் போது தமது அரசை முகமது, மசூத் என்ற தம் இரு பிள்ளைகளுக்குப் பகிர்ந்தளித்தார். ஆனால், மசூத் விரைவில் முகமதுவைத் தோற்கடித்து விட்டுப் பேரரசு முழுவதற்கும் தாமே அரசரானார். பேரரசை நிருவகிக்கும் பொறுப்பை அவர் குவாஜா அகமதுவிற்கு அளித்தார். இந்திய விவகாரங்களை முதலில் அரியாரக் (Ariyarak) என்பவர் கவனித்து வந்தார். அவர் தம் விருப்பப்படி ஆட்சி செய்து வந்தமையால் அவரை அகற்றி விட்டு நியால்டிஜின் அகமது என்பவரை அப்பதவியில் அமர்த்தினார். நியால்டிஜின் இந்தியாவை அடைந்த பின்னர் பனாரஸ் படையெடுப்பை மேற்கொண்டார். இப்படையெடுப்பு வெற்றிகரமாக முடிவுற்றது. நியால்டிஜின் பெரும் செல்வத்தைக் கொள்ளையடித்துக் கொண்டு பஞ்சாப் திரும்பினார். நியால்டிஜினுடைய வளர்ச்சியை விரும்பாத சிலர் மசூத்திடம் அவரைப் பற்றிப் பொய்த் தகவல்களைக் கூறினார்கள். அதற்கேற்றாற்போல் அவர் கொள்ளையடித்து வந்த பொருளைத் தாமே வைத்துக் கொண்டார். எனவே, அவருக்கு எதிராகத் திலக் என்ற இந்துவை அனுப்பி வைத்தார். அவரைக் கண்டதும் நியால்டிஜின் ஆள்கள் ஒருவர் பின் ஒருவராக நியால்டிஜினிடமிருந்து பிரிந்து விட்டனர். போரில் தோற்று ஓடிய நியால்டிஜின் ஜாட் வகுப்பினரிடம் சிக்கி உயிரிழந்தார். இந்த வெற்றி மசூத்திற்குப் போதையை உண்டாக்கி விட்டது. ஹான்சி கோட்டையை வெல்ல மசூத் முடிவுசெய்தார். 1037ஆம் ஆண்டில் மசூத், படையுடன் கஜினியை விட்டுப் புறப்பட்டுச் சென்றார். ஹான்சி கோட்டை மசூத்தின் கைவசம் சிக்கியது. அங்கிருந்த பிராமணர்கள் கொலையுண்டனர். பெண்களும் குழந்தைகளும் அடிமைகளாக்கப் பட்டனர். அவர் கஜினியில் இல்லாத நேரம் பார்த்துச் செல்ஜூக்குகள் (Seljuks) கஜினி அரசைத் தாக்க முற்பட்டனர். அதனால் மசூத் தம் நாடுதிரும்பி செல்ஜூக்குகளுடன் போரிட்டார். மொவ் என்னுமிடத்தில் நடந்த போரில்

அவர் தோல்வியடைந்தார். அதையடுத்து அவர் இந்தியாவிற்கு ஓடினார். வழியில் அவரது படைகள் கலகம் செய்து அவரை அரச பதவியிலிருந்து நீக்கிவிட்டு, முகமதுவைச் சுல்தானாக நியமித்தனர். ஆனால், மசூத்தின் மகனான மவூதூத் (Maudud) முகமதுவைப் பதவியிலிருந்து அகற்றிவிட்டுத் தாமே சுல்தானாக முடிசூட்டிக் கொண்டார். அவருக்குப் பின் வந்தவர்கள் திறமை யற்றவர்களாக இருந்தனர். அந்நிலையைப் பயன்படுத்திக் கொண்டு செல்ஜூக்குகள் மேலும் முன்னேறினார்கள். கஜினியில் நடைபெற்றுவந்த வாரிசுப் போட்டியில் அவர்கள் கலந்து கொண்டு அர்சலன் என்பவரை அவர்கள் தோற்கடித்து, பஹ்ராமை அரசராக்கினார்கள். அதன் விளைவாகக் கஜினியில் அவர்களுடைய ஆதிக்கம் ஏற்படுத்தப்பட்டது. கஜினியின் அரசரான பஹ்ராம் அவர்களுடைய கட்டுக்குள் இயங்கி வர லானார். நாளடைவில் பஹ்ராமுக்கும், கோரை ஆண்டுவந்த மலிக்குகளுக்கும் இடையே பூசல்கள் ஏற்பட்டன. அதன் விளை வாக கி.பி. 1155-ல் கோர் தலைவரான அலாவுத்தீன் உசேன் கஜினியைத்தாக்கிப் பஹ்ராமைக் கஜினியிலிருந்து துரத்தி யடித்தார். சிலகாலம் கழித்துப் பஹ்ராம் மீண்டும் கஜினி அரசரானார். ஆயினும் அவர் காலத்திலும், அவரைப் பின் தொடர்ந்த குஸ்ருஷா காலத்திலும் கஜினி அரசரின் செல்வாக்கு மேலும் குறைந்து விட்டது. கோர் தலைவராகப் பொறுப்பேற்ற கியாஸ்உத்தீன் கஜினியைத் தம் ஆதிக்கத்திற்கு உட்படுத்தி, அதனை ஆளும் பொறுப்பைத் தமது சகோதரனான முகமது கோரிக்கு வழங்கினார். குஸ்ருஷா லாகூரில் தொடர்ந்து அரசு செலுத்தி வந்தார். அவருக்குப்பின் மலிக் குஸ்ரூ லாகூரை ஆண்டுவந்தார். கி. பி, 1181-ல் முகமது லாகூருக்குச் சென்று குஸ்ரூ உடன்பாடு ஒன்றைத் தம்முடன் செய்து கொள்ளும்படி வற்புறுத்தினார். கி.பி. 1186-ல் அவர் லாகூரைக் கைப்பற்றினார். குஸ்ரூ சிறைப்படுத்தப்பட்டார். அத்துடன் மாமூத்தின் குலத் தைச் சார்ந்தவர்களின் ஆட்சி முடிவுற்றது.

### முகமது கோரியின் படையெடுப்பு

இந்தியாவில் நிலையாக முஸ்லிம் பேரரசை நிறுவுவதற்கான முயற்சியை மேற்கொண்டு அதில் பெரும்வெற்றி கண்டவர் முகமது கோரி ஆவார். அவரை முயீஸ்உத்தீன் முகமதுபின் சாம் என்றும் ஷிஹாப் உத்தின் முகமது என்றும் அழைக்கிறார்கள். அவர் கோர் என்ற மலைப்பகுதியினை ஆண்டுவந்தமையால் அவரை முகமதுகோரி என்கிறோம். கஜினிக்கும் ஹீரத்திற்கும் இடையே கோர் அமைந்துள்ளது. கி. பி. 1009-ல் மாமூத் கஜினி அதனைவென்று தம் நாட்டுடன் இணைத்துக்கொண்டார்.

ஆயினும் அதனுடைய அரசர்கள் அதனைத் தொடர்ந்து கஜினி அரசர்களுக்குட்பட்டு ஆட்சி செய்துவர அனுமதிக்கப்பட்டனர். மாமூத் இறந்த பிறகு கஜினியில் ஏற்பட்ட குழப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு அவர்கள் தங்களுடைய அதிகாரத்தைப் பெருக்கிக் கொண்டனர். அவர்களுக்கும் கஜினி அரசர்களுக்கும் இடையே ஏற்பட்ட பகைமையைப்பற்றியும் அதனல் ஏற்பட்ட விளைவுகளைப் பற்றியும் முன்னரே அறிந்து கொண்டிருக்கிறோம்.

முகமதுகோரி இந்தியாவின் மீது படையெடுத்து வந்தபோது இந்தியாவின் நிலையைப்பற்றி அறிந்து கொள்வது அவசியமாகும். பஞ்சாப் கஜினி அரசர்களின் ஆதிக்கத்தின் கீழ் இருந்தது. அதில் சில பகுதிகளைச் சௌஹான் அரசர்கள் வென்று விட்டனர். மூல்தான், காராமிதா முஸ்லிம்களின் ஆட்சியின் கீழ் இருந்தது. மூல்தானுக்கு தெற்கேயிருந்த சிந்துநாட்டினைச் சும்ராக்கள் ஆண்டுவந்தனர். இவர்கள் இஸ்லாம் மதத்தைப் பின்பற்றி வந்தனர். இந்துஸ்தானத்தின் பெரும் பகுதி இராஜபுத்திரர் களின் ஆட்சியின் கீழ் இருந்தது. அன்ஹில்வாராவில் சாளுக்கியர் களும், ஆஜ்மீர் டில்லி ஆகிய இடங்களில் சௌஹான்களும், கன்னேசியில் காஹதவாலாக்களும், பண்டேல்கண்டில் சாண் டேலர்களும், திரிபுரியில் காலசூரிகளும், மாளவத்தில் பரமாரார் களும், வங்காளத்தில் பாலர்களும் சேனர்களும் ஆட்சி செய்து வந்தனர். தக்காணத்தில் யாதவர்கள், காகத்தியர்கள், ஹோய் சலர்கள், பாண்டியர்கள் செல்வாக்குப் பெற்றிருந்தனர்.

மாமூத் கஜினியைப் போலவே முகமதுகோரி பலமுறை இந்தியாவின் மீது படையெடுத்துவந்தார். இந்தியாவில் நிரந்தர மாக முஸ்லிம் ஆட்சியை அமைக்க வேண்டும் என்பது அவரது பேரவா ஆகும். முதலில் அவர் கோமல் கணவாய்வழியாகப் படையெடுத்துவந்தார். எனவே மூல்தானும், ஊச்சும் அவரது தாக்குதலுக்கு முதலில் இரையாயின. பின்னர், சிந்துநாட்டை ஆண்டுவந்த சும்ராக்கள் அவருடைய மேலாதிக்கத்தை ஏற்றுக் கொண்டனர். அவர் பாலைவனத்தைக் கடந்து குஜராத்தைத் தாக்க முற்பட்டபோது அந்நாட்டை ஆண்டுவந்த மூலராஜா என்பவரிடம் பெருந்தோல்வியை அடைந்தார். பஞ்சாப்வழி யாகச்சென்று இந்தியாவை அடைவதே சாலச்சிறந்ததென்பதை அத்தோல்வி அவருக்குப் புலப்படுத்தியது. பஞ்சாப் அப்போது மாமூத் கஜினியின் வழித்தோன்றல்களிடமிருந்தது. 1178ஆம் ஆண்டில் அவர் பெஷாவரைக் கைப்பற்றினர். கி.பி. 1186-ல் சியால்கோட் அவர்பிடியில் சிக்கியது. 1187-ல் லாகூரைக் கைப்பற்றினர். பஞ்சாபில் கஜினி அரசர்களின் ஆட்சி அழிந்தது.

முகமது கோரியின் ஆதிக்கம் அங்கு ஏற்படுத்தப்பட்டது. அதன் விளைவாகக் கோரி அரசினுடைய எல்லை சௌஹான் அரசினுடைய எல்லையைத் தொட்டுவிட்டது. அதனால் கோரி அரசருக்கும் சௌஹான் அரசரான மூன்றாவது பிருத்விராஜருக்கும் இடையே போர் ஏற்பட்டது. கி. பி. 1190-91ல் தரெயின் என்னுமிடத்தில் முகமது தோல்வியுற்றார். ஹம் மீரா மகா காவியத்தில் முகமது கைது செய்யபட்டதாகவும் பின்னர் விடுவிக்கப்பட்டார் என்றும் கூறப்படுகிறது. தரெயின் வெற்றிக்குப்பின் பிருத்விராஜர் தாபாரிந்தாக் கோட்டையை முஸ்லிம் பிடியிலிருந்து மீட்டார். தோல்வியினால் ஏற்பட்ட அவமானத்தை ஈடு செய்வதற்காக முகமது மீண்டும் ஒரு பெரும் படையைத் திரட்டிக் கொண்டு இந்தியாவிற்கு வந்தார். தாபாரிந்தாவைக் கைப்பற்றிக் கொண்டு தரெமிக் என்னுமிடத்திற்கு மீண்டும் வந்தார். இம்முறை பிருத்வி ராஜர் தோல்வியுற்றார். பிருத்வி ராஜர் சிறைபட்டார். சௌஹான்களின் ஆதிக்கம் அழிவுற்றது. இந்துஸ்தானத்தில் முஸ்லிம்களின் ஆட்சி நிலையாக ஏற்படுத்துவதற்கு இது வழி வகை செய்தது. இந்திய மக்களிடம் பெரும் பீதியை ஏற்படுத்தி விட்டது. அநேக மக்கள் தங்கள் சொந்த நாட்டைவிட்டு ஓடத் தொடங்கினார்கள். அதன்வாயிலாக அவர்கள் முகமதுவினுடைய பணியினை எளிதில் முடிக்க வாய்ப்பளித்தனர். அதன்பிறகு ஹான்சி, சுர்சுதி, குஹ்ராம், சாமானா ஆகிய இடங்களைக் கைப்பற்றிக் கொண்டார். பின்னர் ஆஜ்மீரை வென்றார். அங்கிருந்த கோயில்களை அழித்துவிட்டு மசூதிகளைகளையும் கல்லூரிகளையும் அங்குக் கட்டுவித்தார். பிருத்விராஜருடைய மகனொருவனை ஆஜ்மீரின் அரசராக நியமித்துவிட்டு முகமது டில்லியை முற்றுகையிட்டார். டில்லி அவரிடம் சரணடைந்தது. அங்குத் தமது படையின் ஒரு பகுதியை நிறுத்திவிட்டுக் கஜினி திரும்பினார். திரும்பிச்செல்வதற்கு முன்பு குத்புத்தீன் அய்பெக் என்பவரைக் குஹ்ராம், சாமானா ஆகியவற்றின் ஆளுநராக அமர்த்தினார். டில்லி சுல்தானியத்தைத் தொடக்கியவர் குத்புத்தீன் அய்பெக் ஆவார்! இனி அய்பெக் டில்லி சுல்தானியத்தை எவ்வாறு தோற்றுவித்தார் என்பதைக் கவனிப்போம்.

# 1. மூல ஆதாரங்கள்

## I. ஆதார நூல்கள்

டில்லி சுல்தான்களுடைய ஆட்சிக் காலத்தில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளை நாம் அறிந்து கொள்ள மிகவும் உதவியாக அமைந்திருக்கும் ஆதாரங்களுள் துருக்கிய முஸ்லிம்கள் விட்டுச் சென்றிருக்கும் நிகழ்ச்சிக் குறிப்பேடுகள் முதலிடம் பெறுகின்றன. இந்தியாவைக் கைப்பிடித்தாளும் நோக்கத்துடன் படையெடுத்து வந்து துருக்கிய முஸ்லிம்கள் தங்களுடன் கூடவே வரலாற்றினை எழுதும் கலையினையும் கொண்டு வந்தனர் என்று கூறின் அது மிகையாகாது. முஸ்லிம்கள் போர்த்திறன் மட்டுமின்றி வரலாற்று எழுத்தாண்மை கொண்டவர்களாகவும் விளங்கினர். அவர்கள் விட்டுச் சென்றிருக்கும் வரலாற்று நூல்கள் அவற்றின் ஆசிரியர்கள் நேரில் பிறர் வாயிலாகக் கேட்டறிந்த நிகழ்ச்சிகளை மட்டுமன்றி நேரில் கண்ட நிகழ்ச்சிகளையும் உட்கொண்டிருப்பதால் அவை தரத்தில் சிறந்து விளங்குகின்றன. ஆயினும் அவற்றில் காணப்பெறும் குறைபாடுகளை நாம் முற்றிலும் ஒதுக்கிவிட இயலாது.

அக்கால வரலாற்றுசிரியர்களுள் சிலர் நுண்ணறிவுத்திறன் பெற்றிருந்தபோதிலும் தற்கால வரலாற்றுசிரியர்களுக்குரிய சிறப்புத்தன்மைகளைப் பெற்றிருக்கவில்லை. வரலாற்று நிகழ்ச்சிகளைச் சரியான முறையில் தொகுத்து அளிக்க அவர்கள் தவறிவிட்டனர். வரலாற்று உண்மைகளை ஆராய்ந்து அறிய அவர்கள் முற்படவில்லை. தங்கள் காதுக்கெட்டிய செய்திகள் உண்மையானவையா அல்லது பொய்யானவையா என்று அறிந்து கொள்ளாமலேயே அவற்றை அப்படியே கையாண்டனர். தங்களுடைய கவனத்திற்கு வந்த செய்திகளுள் எவை முக்கியமானவை, எவை முக்கியத்துவம் அற்றவை, எவை தேவையானவை எவை தேவையற்றவை என்பதைப்பற்றி அவர்கள் சிந்தித்ததாகத் தெரியவில்லை. நிகழ்ச்சிகளைக் காரணக் கூறுகள் விளைவுகள் என்றவாறு பாகுபடுத்தி அவற்றினை வரிசைப்படுத்திக் கூறுவது வரலாற்றுசிரியர்களின் முக்கியமான பணியாகும். அத்தகையப் பணியினை அவர்கள் நிறைவேற்றினார்களா என்பது ஐயத்திற்கிடமான ஒரு பொருளாகும். இத்துணை குறைபாடுகளைக் கொண்டுள்ள போதிலும் அந்நூல்களை நாம் ஒதுக்கித்தள்ளிவிட முடியாது. ஏனெனில்

அக்காலத்தில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளை அறிவதற்கு அவை இன்றி யமையாத ஆதாரங்களாக அமைந்துள்ளன. தற்கால வரலாற்று ஆசிரியர்களும் மாணவர்களும் மிக்க விழிப்புடன் அந்நூல்களைப் படித்து அவற்றுள் தேவையானவற்றை எடுத்துக் கொண்டு ஏனைய வற்றை நீக்கிவிடுவார்களேயானால் அக்கால ஆசிரியர்கள் செய்யத் தவறியப் பணியினைச் செய்தவர்களாக விளங்கக்கூடும். அதன் விளைவாக அக்கால வரலாற்றினைச் செம்மையான முறையில் அமைத்துவிட முடியும்.

அக்கால வரலாற்று நூல்கள் பெரும்பாலும் பாரசீக மொழி யில் எழுதப்பட்டுள்ளன. சில நூல்கள் அராபிய மொழியில் எழுதப் பட்டுள்ளன. அவற்றுள் பெரும்பகுதி ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

வரலாற்று நூல்கள் சிலவற்றைப் பற்றி இப்பொழுது கவனிப் போம். 1. தாரிக் இ பக்ருத்தீன் முபாரக் ஷாயி : இந்நூலின் ஆசிரியர் பக்ருத்தீன் முபாரக் மெர்வருதி ஆவார். இந்நூல் 1206ஆம் ஆண்டில் எழுதி முடிக்கப்பட்டது. இதனை எழுத 13 ஆண்டுகள் பிடித்தன. இதன் ஆசிரியர் குத்புத்தீன் பட்டமேற்பு விழாவினை நேரடியாகக் கண்டுள்ளார். குத்புத்தீன் ஓர் அடிமை என்பதையும் அவர் அரசராகப் பொறுப்பேற்றார் என்பதையும் விலை கொடுத்து வாங்கப் பெற்ற ஓர் அடிமை துருக்கிய இனத்த வர்களிடையில் மட்டுமே அரசராக முடியுமேயொழிய வேறு இனத்தவர்களிடையே அத்தகைய நிகழ்ச்சியைக் காண இயலாது என்பதையும் அவ்வாசிரியர் குறிப்பிட்டுள்ளார். ஓர் அரிய கையெழுத்துப் படியினைத் தொகுத்து மேற்கண்ட தலைப்பில் வெளியிட்ட பெருமை சர். E. டெனிஸன் ரோஸ் என்பவரைச் சாரும்.

2. தாஜ். உல். மாஆசிர் : இதனுடைய ஆசிரியர் சத்ருத் தீன் முகம்மது பின் ஹசன் நிஜாமி ஆவார். அவர் நிஷாப் பூரில் பிறந்தார். அங்கு ஏற்பட்ட அரசியல் நெருக்கடிகள் அவர் தமது பிறந்த ஊரைவிட்டு டில்லி செல்லுதற்குக் காரண மாக அமைந்தன. டில்லியில் அவர் பல அறிஞர்களுடன் பழகும் வாய்ப்பு ஏற்பட்டது. அவரது நண்பர்களுடைய வேண்டுதலின் பொருட்டு அவர் இவ்வரலாற்று நூலைப் படைத்தார். வட இந்தி யாவை முஸ்லிம்கள் தங்களுடைய ஆதிக்கத்தின் கீழ் கொண்டு வந்த விதத்தினை விளக்குகின்ற தொன்மையான நூல்களுள் இது ஒன்றாகும். 1191ஆம் ஆண்டில் முகம்மது கோரி நடத்திய படை யெடுப்பினைப் பற்றிய குறிப்புடன் ஆசிரியர் தமது வரலாற்று

நூலினைத் தொடங்கியுள்ளார். கோரியின் படையெடுப்புகள் மிகச் சுருக்கமாக விவரிக்கப்பட்டுள்ளன. மேலும் அவற்றைப் படிக்கும்போது வரலாறு பற்றிய விவரங்களுக்கு அவர் அதிகமான முக்கியத்துவத்தைக் கொடுக்கவில்லை என்ற எண்ணம் நமக்கு ஏற்படுகிறது. அர்த்தமற்ற வகையில் அவர் நிகழ்ச்சிகளை மிகை படுத்திக் கூறியுள்ளார். ஒரு சாதாரண நிகழ்ச்சியினைத் தெளிவாக எடுத்து இயம்புவதற்குப் பதிலாக ஆசிரியர் பல தேவையற்ற சொற்களைப் பயன்படுத்திப் படிப்போரைத் திணற அடித்துள்ளார். எடுத்துக்காட்டாக, முகமது கோரியின் மரணத்தைப் பற்றி பின் வருமாறு அவர் கூறியுள்ளார்.[1] 'மூன்று அல்லது நான்கு சதி காரர்களுள் ஒன்று அல்லது இரண்டு பேர் ஏழு நாடுகளுக்குத் தலைவனான முகம்மதுவினைத் தாக்கி அவரது உடலில் ஐந்து அல்லது ஆறு காயங்களை ஏற்படுத்தினர். அவரது ஆவி எட்டு சொர்க்கங் களையும் ஒன்பது தேவலோகங்களையும் கடந்து சென்று பத்து சமயப்பணி செய்யும் பொதுநிலை மக்களுடைய ஆவிகளுடன் கலந்துவிட்டது.' 1217ஆம் ஆண்டு வரை ஏற்பட்ட நிகழ்ச்சிகள் இந்நூலில் குறிப்பிடப்பெற்றுள்ளன.

3. தபகாத் இ. நாசிரி. இந்தியாவை ஆண்ட முதல் முஸ்லிம் அரசர்களுடைய வரலாற்றைப் பற்றிய நூல்களுள் முக்கிய மானவை எனக் கருதப்படுபவனவற்றுள் இது ஒன்றாகும். இதன் ஆசிரியர் அபு உமர் மின்ஜஹாஜ் உத்தீன் உஸ்மான் பின் சிராஜ் உத்தீன் ஜுர்ஜானி ஆவார். இவர் ஹிஜிரா ஆண்டு 589-ல் (கி.பி. 1192) பிறந்தார். தக்க வயதை அடைந்தவுடன் அவர் கோரி அரசர்களுக்குப் படைச் சேவை புரியத் தொடங்கினர். முகலாயர்கள் கோரியையும், கோராசானையும் தாக்க முற்பட்ட போது அவர்களுடையத் தாக்குதலை முறியடிக்கும் பணியில் அவர் பெரும் பங்கு கொண்டார். 1226ஆம் ஆண்டு சிந்து மாகாணத் திலுள்ள ஊச் என்னும் பகுதியைச் சென்றடைந்தார். அம்மாகா ணத்தை இல்டுட்மிஷ் தாக்க முனைந்தபோது மின்ஹாஜ் அவர் பக்கம் சேர்ந்து கொண்டு டில்லி சென்றார். விரைவில் பால் பனுடைய அன்பைச் சம்பாதித்துக் கொண்டார். பால்பன் அமீர் ஹாஜீப் பொறுப்பினை ஏற்றிருந்தபோது, அவருடைய உதவியைப் பெற்று நசீரியாக் கல்லூரியின் தலைமைப் பொறுப்பினை ஏற்றுக்கொண்டார். அத்துடன் அக்கல்லூரியின் நிதி நிருவா கத்தையும் மேற்கொண்டார். அவரது வரலாறு இந்துஸ் தானத்தை ஆண்ட முஸ்லிம் மன்னர்களுடைய வரலாற்றுடன் வேறுபல முஸ்லிம் அரச பரம்பரையினருடைய வரலாற்றினையும்

[1] Quoted by Ishwari Prasad Medieval India pxxxvi (1972)

உட்கொண்டுள்ளது என்பதை நாம் அறிவது அவசியமாகும். இந்நூல் சுல்தான் நாசிருத்தீனுக்கு அர்ப்பணிக்கப்பட்டுள்ளது. இது ஹிஜிரா ஆண்டு 658-ல் எழுதி முடிக்கப்பட்டது. இதில் காணப் பெறும் நிகழ்ச்சிகள் பலவற்றை ஆசிரியரே நேரில் கண்டுள்ளார். மேலும் அவற்றை எழுத்து வடிவில் அவர் அமைக்க முற்பட்டபோது பெரும்பாலும் பாரபட்சமின்றி நடந்து கொண்டார். இதுவே இந்நூலின் சிறப்புக்குக் காரணமாகும். எலியட் அவர்கள் இந்நூலின் பெரும்பகுதியை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து தமது வரலாற்று நூலில் இடம் பெறச் செய்துள்ளார். மேஜர் ராவெர்டி அவர்கள் இதனை முழுமையாக ஆங்கிலத்தில் நமக்கு மொழி பெயர்த்துத் தந்துள்ளார்.

**4. தாரீக் இ அலாயி அல்லது கஜாயன் உல் ஃபுதூ:** தலைசிறந்து விளங்குகின்ற இந்தியக் கவிஞர்களுள் ஒருவரான அமீர் குஸ்ரு இதனுடைய ஆசிரியராவர். இவரது முழுப்பெயர் அபுல் ஹசன் யமீன் உத்தீன் குஸ்ரூ என்பதாகும். இவர் கி. பி. 1253-ல் உத்தரப் பிரதேசத்தில் இடா மாவட்டத்திலுள்ள பாடியாலி என்ற ஊரில் பிறந்தார். அவர் ஏழு வயதினராக இருந்தபோது தமது தந்தையை இழந்தார். பண வசதி மிகுந்த குடும்பத்தைச் சார்ந்தவராக இருந்தமையால் அவரது தந்தையின் மறைவு அவரை வெகுவாகப் பாதிக்கவில்லை. அவரது அன்னையார் அவரை டில்லிக்கு அழைத்துச் சென்று அங்கு நல்ல முறையில் அவருக்குக் கல்வி கற்பித்தார். இளவயதிலேயே அவர் கவிதை எழுதத் தொடங்கினார். அத்துடன் அவர் போர்க் கலை, நிருவாகக் கலை ஆகியவற்றிலும் சிறந்து விளங்கினார். தம்முடைய திறமையின் காரணமாகவே அவர் படிப்படியாக உயர்ந்து அரசவையில் மேலான இடத்தைப் பெற்றார். பல சுல்தான்களுடைய அரசவையில் வீற்றிருக்கும் வாய்ப்பு அவருக்கு ஏற்பட்டதில் வியப்பு ஏதுமில்லை. அவர் மதப்பற்று மிக்கவர். அக்கால தெய்வத்தினுடைய சிறந்த ஞானிகளுள் ஒருவரான ஷெயிக் நிஜாமுத்தீன் அவுலியாவினுடைய சீடரானார். ஏறத்தாழ 500,000 கவிதைகளை அவர் இயற்றியுள்ளார். இளம் வயதிலே அவர் தொடங்கிய இலக்கியப் பணியினை அவர் இறக்கும் வரை சலிக்காது நிறைவேற்றி வந்தார். வரலாற்று ஆசிரியர் என்பதைவிட ஒரு சிறந்த கவிஞர் என்பது உண்மையேயென்றாலும் சில நேரங்களில் வரலாற்று நிகழ்ச்சிகளைத் தம்முடைய கவிதை, உரைநடை நூல்கள் ஆகியவற்றினுக்கு அடித்தளமாக அமைத்துள்ளார். அவ்வாறு அவர் கவிதைகளையும் உரை நடை நூல்களையும் எழுதும் போது ஒரு இலக்கிய மேதையைப் போல் நடந்தாரேயன்றி ஒரு வரலாற்று ஆசிரியருக்குரிய முறையில் செயல்படவில்லை. ஆயினும் ஒருவர்

பின் ஒருவராக அரியணையில் அமர்ந்த ஆறு டில்லி சுல்தான்கள் அக்காலத்தில் வாழ்ந்து வந்த பிரபுக்கள், படைத் தலைவர்கள், நிஜாமுதீன் அவுலியா ஆகியோருடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பினைப் பெற்றிருந்த அவர் அக்கால வரலாற்று நிகழ்ச்சிகள், சமுதாய நிலை, போன்றவற்றின் உண்மை நிலையினை அறிந்து கொள்ளும் வாய்ப்பு அவருக்குக் கிட்டியிருந்தது. மேலும், நிகழ்ச்சிகளை அவர் நேரடியாகக் காணும் வாய்ப்பினையும் அவர் பெற்றிருந்தார். ஆகவே அக்கால நிலையினை உள்ளபடியே அறிந்துகொள்ளும் வகையில் அவர் நமக்குப் பெரிதும் உதவியுள்ளார் என்பதில் ஐயமில்லை.

இனி அவர் இயற்றிய நூல்களைப் பற்றிக் கவனிப்போம். வரலாற்றுக் கோணத்தில் பார்க்குமிடத்து அவர் இயற்றிய **கஜாயின்-உல்ஃபுதூ** முதலிடம் பெறுகிறது. அது உரை நடையில் எழுதப்பட்டுள்ளது. அலாவுத்தீனுடைய ஆட்சியின் முதல் பதினாறு ஆண்டுகளில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் இதில் இடம் பெற்றுள்ளன. அது ஆறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது: 1. முன்னுரை 2. நிருவாகம் பற்றிய சீர்திருத்தங்களும் பொதுப் பணிகளும், 3. மங்கோலியருக்கு எதிராக மேற்கொள்ளப்பட்ட போர் நடவடிக்கைகள், 4. இந்துஸ்தானத்தில் அவர் கண்ட வெற்றிகள், 5. வாரங்கல் படையெடுப்பு, 6. மாபார் படையெடுப்பு. அலாவுத்தீனுடைய படையெடுப்புகள் பற்றிய குறிப்புகளே அதில் அதிகமாகக் காணப்படுகின்றன என்பது தெளிவாகும். அதிலும் தக்காணப் படையெடுப்புகளுக்குத்தான் அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது என்பதும் புலனாகும். தேதிகளும் விவரங்களும் சரியான முறையில் குறிப்பிடப்பட்டுள்ளன. அவற்றைக் கொண்டு அலாவுத்தீன் ஆட்சி நிகழ்ச்சிகளைத் தேதி வாரியாக அமைக்க இயலும். இதுவே இந்நூலின் சிறப்பாகும். இதில் ஒரே ஒரு குறையுண்டு. அமீர் குஸ்ரூ மரபு வழுவாத முஸ்லீம் என்பதால் ஆங்காங்கே தமது மதவெறியினை வெளிப்படுத்தும் வகையில் நிகழ்ச்சிகளைக் குறிப்பிட்டுள்ளார்.

### குஸ்ரூவின் கவிதைகள்

குஸ்ரூவினுடைய கவிதைகள் சிலவற்றிலிருந்தும் வரலாற்று உண்மைகளை நாம் அறிகிறோம். துஃபாத் உஸ்சிகார் என்ற கவிதையில் பால்பனைப் பற்றிய புகழுரைகளைக் காண்கிறோம். கி. பி. 1289ஆம் ஆண்டில் புனைந்த கிரான் உஸ் சாதாயின் என்ற கவிதை வங்காள கவர்னரான புக்ராகான் அவரது மகனும் டில்லி அரசருமான மூயிஸ் உத்தீன் கைகுபாத்து ஆகியோருக்கிடையே ஏற்பட்ட சந்திப்பை விளக்குகிறது. அத்துடன் இந்தியாவைப்பற்றிய விவரங்களும் அதில் காணக்கிடக்கின்றன.

கி. பி. 1291ஆம் ஆண்டில் புனையப் பெற்ற மிஃப்தா உல்ஃப்தூ ஜலாலுத்தீன் கில்ஜியினுடைய படையெடுப்புகளை விவரிக்கிறது.

கி. பி. 1316ஆம் ஆண்டில் எழுதி முடிக்கப்பெற்ற ஆஷீகா பல நிகழ்ச்சிகளை எடுத்துக் கூறுகிறது. அவற்றுள் ஒன்று குஜராத் மன்னரான கரண் என்பவருடைய மகள் தேவால் ராணி அல்லது தேவலா தேவி என்பவருக்கும் அலாவுத்தீனுடைய மகன் கிஸர்கான் என்பவருக்கும் இடையே ஏற்பட்ட காதல் பற்றியதாகும். அதே நூலில் கவிஞர் மங்கோலியர் வசம் சிக்கிக் கொண்டது, அவர்கள் பிடியிலிருந்து தப்பிச் சென்றது போன்ற நிகழ்ச்சிகளும் காணப்படுகின்றன. இந்தியப் பெண்களைப் பற்றியும், இந்துஸ்தானத்தின் வனப்புப் பற்றியும் அதில் குறிப்பிட்டுள்ளனர்.

நூசிஃபிர் என்ற கவிதை 1318ஆம் ஆண்டு எழுதப்பட்டது. முபாரக்ஷா காலத்தில் மேற்கொள்ளப்பட்ட படையெடுப்புகள் அதில் குறிப்பிடப்பட்டுள்ளன.

அமீர் குஸ்ரூவின் கடைசி இலக்கியப் படைப்பு துக்ளக் நாமாவாகும். இது டில்லி அரசர் துக்ளக் ஷாவின் கட்டளையின்படி எழுதப்பெற்றதாகும். குத்புதீன் முபாரக் ஷா கொலையுண்ட நிகழ்ச்சி தொடங்கி கியாஸ் உத்தீன் துக்ளக் அரசுரிமை பெற்ற நிகழ்ச்சி வரை டில்லியில் நடைபெற்ற சம்பவங்கள் இதில் விளக்கப்பட்டுள்ளன. குஸ்ருகான், துக்ளக்ஷா ஆகியோரிடையே ஏற்பட்ட வாக்குவாதங்களை மிக அழகாக இதில் சித்தரித்துள்ளார்.

தாரிக்-இ-பிருஸ் ஷாயி : இதனுடைய ஆசிரியர் ஜியா உத்தீன் பரணி ஆவார். இவர் உத்தரப் பிரதேசத்தில் உள்ள பரன் என்னுமிடத்தில் பிறந்தார். அவர் பிறந்த தேதியை நாம் உறுதியாகக் கூற இயலாது. ஆனால் ஹிஜிரா ஆண்டு 758-ல் (கி.பி. 1356—57) இந்நூலை எழுதி முடித்த போது அவருக்கு வயது 74 என்று கூறப்படுகின்றது. இதைக் கொண்டு அவரது பிறந்த நாள் கணக்கிடப்படுகிறது. இவரது தந்தையார் வருவாய்த் துறையில் பணியாற்றி வந்தார். உயர் அரசாங்க அதிகாரிகளுடன் அவர் பழகுவதற்கு இது உதவியாக இருந்தது. மேலும் இவர் அக்காலத்திய அறிவுக் களஞ்சியமாக விளங்கி டில்லி மாநகரில் கல்வி கற்கும் வாய்ப்பைப் பெற்றார். அதனால் அறிஞர்கள், நிருவாகிகள், சமயத் தலைவர்கள், ஞானிகள் ஆகியோருடன் நெருங்கிப் பழகக் கூடிய வாய்ப்பு அவருக்குக் கிட்டியது. அவர் பழகிய பெருமக்க

ளுள் ஒருவர் நைஜாமுத்தீன் அவுலியா. நைஜாமுத்தீனுடைய கருத்துக்கள் அவரை வெகுவாகக் கவர்ந்தன. மதத்தில் அசையா நம்பிக்கை கொண்டிருந்தார். முகமது பின் துக்ளக்கின் அரசவையில் 17 ஆண்டுகள் கழித்தார். அதுபோது அவர் அரசருடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார். தமது நூலினை இவர் ஃபிரூஸ்ஷாவிற்கு அர்ப்பணம் செய்தார். இறுதிக் காலத்தை மன நிறைவுடன் கழிக்க இயலவில்லை. வறுமை அவரை வாட்டியது. சுல்தான் பிரூஸ் தக்க முறையில் அவருக்குப் பரிசளிக்கவில்லை என்பது ஒரு காரணமாகும். வறுமையின் காரணமாக அவர் வேதனைப்பட்டார். தம்மை நாடி வந்த பிச்சைக்காரர்கள் வெறுங் கையுடன் திரும்பிச் செல்வதைக் கண்டு மனம் வெதும்பினார். மரணப் படுக்கையில் கிடக்கும்போது தமது உடலை மூடி மறைப்பதற்கு ஒரு துணியுமின்றி கஷ்டப்பட்டார்.

வரலாறு பரணிக்கு மிகவும் பிடித்தமானதொன்றாகும். அதனுடைய பயனைப் பற்றி அவர் அடிக்கடி எடுத்தியம்பி உள்ளார். மதிநுட்பம் வாய்ந்தவர்களே வரலாறு படிக்கும் தகுதியினைப் பெற்றவர்களாவர் என்பது அவர் கருத்து. குறுகிய மனப்பான்மையுடையோர்களும், அற்பர்களும், வீணர்களும், கயவர்களும், வரலாறு படிப்பதனால் ஏற்படும் பயனை அடைய முடியாது என்று அவர் எண்ணினார். வரலாற்று ஆசிரியருக்கு இருக்க வேண்டிய குணங்களைப் பற்றியும் அவர் விளக்கியுள்ளார். வரலாற்றாசிரியருடைய குறிக்கோள் உண்மையைத் தவிர வேறொன்றும் இருக்கக் கூடாது என்று அவர் ஆணித்தரமாகக் குறிப்பிட்டுள்ளார். நிகழ்ச்சிகளையும் செய்திகளையும் தவறான வகையில் படம் பிடித்துக் காட்டலாகாது என்று வலியுறுத்தியுள்ளார். முகஸ்துதியையும், பொய்யையும் அறவே வெறுத்தார். வரலாற்று ஆசிரியர்கள் பாரபட்சமின்றி நடத்தல் வேண்டும் என்று கூறினார். ஆனால் தமது வரலாற்று நூலை எழுத முற்பட்ட போது எந்த அளவு தாம் கூறியபடி நடந்துகொண்டார் என்பது விவாதத்திற்குரிய ஒரு பொருளாக இருந்து வருகிறது. தமது புரவலனான சுல்தானுடைய கோபத்திற்கு இலக்காகக் கூடாது என்பதற்காக அவர் தமது நூலில் குறிப்பிடப்படவேண்டிய நிகழ்ச்சிகளைச் சிற்சமயங்களில் குறிப்பிடத் தவறிவிட்டார் என்பதையும் சில முக்கியமான நிகழ்ச்சிகளைச் சரிவர எடுத்து இயம்பத் தவறிவிட்டார் என்பதையும் எலியட் சுட்டிக்காட்டியுள்ளார். அது மட்டுமன்றி அதன் பொருட்டு அவரை நேர்மையற்ற வரலாற்று ஆசிரியர் என்று கூறுகிறார்[1]. மற்றொரு முஸ்லிம் வரலாற்று

[1] Elliot, Vol III, Page 96.

ஆசிரியரான ஃபிரிஷ்டா என்பவரும் பரணி சில நேரத்தில் உண்மையைந் தைரியமாக எடுத்துக் கூறவில்லை என்பதற்காக அவரைக் கண்டித்துள்ளார். அதே நேரத்தில் பரணி சில இடங்களில் சுல்தானுடைய நடவடிக்கைகளைக் கண்டித்து எழுதி உள்ளார் என்பதையும் நாம் மறக்க இயலாது. இதனைக் கண்ணுறும்போது அவர் தாம் வகுத்த நெறியில் நின்று அதனை ஆக்கியுள்ளார் என்று நாம் கருதக் கூடும்.

பால்பன் முதல் முகமதுபின் துக்ளக் வரையிலுள்ள டில்லி சுல்தான்களைப் பற்றிய விவரங்கள் இந்நூலில் காணப்படுகின்றன. அலாவுத்தீன், கியாஸ் உத்தீன் துக்ளக், முகமதுபின் துக்ளக் ஆகியோரைப் பற்றிய விவரங்கள் அதிகமாகக் காணப்படுகின்றன. இவையனைத்தும் அவர் நேரடியாகக் கண்டறிந்த நிகழ்ச்சிகளை வைத்து எழுதப் பெற்றுள்ளன. எப்பொருளையும் கூர்ந்து கவனித்தல், வரலாற்று உண்மைகளைப் பகுத்தறிதல், அவற்றைச் சுட்டி உணர்த்துதல் போன்ற நற்பண்புகளைப் பெற்றிருந்தார் என்பதை நாம் உணரும் போது அவர் அளிக்கின்ற வரலாறு எந்த அளவிற்குப் பயன்படும் வகையில் அமைந்துள்ளது என்பது தெளிவாகும். வருவாய்த் துறை அதிகாரி ஒருவருடைய மகன் என்பதால் வருவாய் பற்றிய செய்திகளை நன்கு அறிந்து கொள்ள அவருக்கு வாய்ப்பு ஏற்பட்டிருந்தது. அதுவே நிலம், வரிகள், பஞ்சம், விவசாயம், ஆகியவற்றைப் பற்றிய பிரச்சனைகளைப்பற்றி அவர் அதிகமாக எழுதுவதற்கு ஒரு காரணமாகும். மேலும் பொருளாதாரம் பற்றிய செய்திகளைப் பகுத்தாராயும் திறன் அவர் பெற்றிருந்தார். அதன் காராணமாகத்தான் அவர் அலாவுத்தீனுடைய பொருளாதார நடவடிக்கைகளை யாவரும் வியக்கும் வண்ணம் நமக்கு எடுத்து இயம்பி உள்ளார்.

அதே நேரத்தில் இதில் காணப்பெறும் குறைகளை நாம் எடுத்துரைக்காமல் இருக்க வியலாது. தேதிகள் குறிப்பிடுவதில் அவர் மிகுந்த கவனத்தைச் செலுத்தவில்லை. பல நிகழ்ச்சிகள் எப்போது ஏற்பட்டன என்பதை அவர் எடுத்துரைக்கவில்லை. சில தேதிகள் தவறாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. நிகழ்ச்சிகள் தேதி வாரியாக ஒன்றன் பின் ஒன்றாகக் கூறப்படவில்லை, அவற்றை ஒழுங்காகவும் அமைக்கவில்லை. சில இடங்களில் அவரது சொந்த விருப்பு வெறுப்புகளுக்கேற்ப நிகழ்ச்சிகள் கூறப்பட்டுள்ளன. ஆயினும் இடைக்கால இந்தியாவின் மிகச்சிறந்த வரலாற்று மூல ஆதார நூல்களுள் ஒன்றாக இது தொடர்ந்து இருந்து வருகிறது என்பதை எவரும் மறுக்க இயலாது.

ஃபுதூ உஸ் சலாதீன் : இது ஒரு பெருங்காப்பிய வடிவில் அமைந்துள்ளது. கி.பி. 1350 ஆம் ஆண்டில் எழுதப்பட்டது. இதனுடைய ஆசிரியரின் புனைப்பெயர் இசாமி என்பதாகும், குவாஜா அப்துல் மலிக் இசாமி என்பது இவரது முழுப்பெயராக இருத்தல் வேண்டும் என்று தற்கால ஆசிரியர் ஒருவர் கூறுகிறார். இசாமி கவித்திறன் படைத்தவர், அதே நேரத்தில் வரலாற்று நிகழ்ச்சிகளைக் குற்றம் குறையின்றித் தேதிவாரியாக விவரிக்கும் ஆற்றலையும் அவர் பெற்றிருந்தார் இவரது முன்னோர்கள் பாக்தாத் நகரத்திலிருந்து டில்லி சென்று குடியேறி அங்கு சுல்தான் கீழ் சேவை மேற்கொண்டனர். முகமது துக்ளக் ஆட்சிக்காலத்தில் இசாமி பெருந்துன்பத்திற்கு உள்ளானார். முகமது அவரை தௌலதாபாத்திற்குச் செல்லுமாறு கட்டளையிட்டார். வெகு தூரத்திலிருந்த தௌலதாபாத்திற்குச் செல்லும் வழியில் அவர் பல இன்னல்களுக்கு உட்பட நேர்ந்தது. வழியில் தொண்ணூறு வயது நிரம்பிய இசாமியினுடைய பாட்டனார் காலமானார். மக்களுடைய நல்வாழ்வினைப்பற்றி அக்கறை கொள்ளாத ஒரு கொடுங்கோலர் என்று முகம்மதுவை இசாமி விவரிப்பதில் வியப்பேதும் இல்லை அல்லவா? அதன் பிறகு அவர் மீண்டும் டில்லி செல்லவில்லை. தௌலதாபாத்திலேயே தமது வாழ்நாளைக் கழிக்க முற்பட்டார். தௌலதாபாத்தில் பாமினி அரசு நிறுவப்பெற்றபோது அவர் சுல்தான் அலாவுதீன் ஹசன் பாமன்ஷாவின் காஜி பஹா உத்தீன் என்பவருக்கு உறுதுணையாக இருந்தார். அவருடைய அன்பையும் ஆதரவையும் பெற்றார். பாமினி சுல்தானுடைய ஆதரவின் கீழ் 1349ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 10ஆம் நாள் தொடங்கப்பெற்ற இக்காப்பியம் 1350ஆம் ஆண்டு மே மாதம் 14ஆம் நாள் எழுதி முடிக்கப்பட்டது.

ஃபுதூ உஸ் சலாதீன் வாயிலாக கஜினியில் யாமீனி அரசர்கள் தோற்றத்தை அடுத்து தொடங்கிய வரலாற்றினை அறிகிறோம். இவ்வரலாறு முகமது பின் துக்ளக் ஆட்சிக் காலத்துடன் முடிவுறுகிறது. இசாமி தாம் நேரில் கண்டவற்றை இதில் குறிப்பிட்டுள்ளார். இவர் தமது நூலை பாமினி அரசருடைய ஆதரவின் கீழ் எழுதினார் என்று குறிப்பிட்டுள்ளோம். ஆகவே ஏனைய துக்ளக் கால வரலாற்று ஆசிரியர்களைப் போல இவர் துக்ளக் அரசர்களுக்கு அஞ்சி நடக்க வேண்டிய நிலையோ அல்லது அவர்களுடைய நன்மதிப்பைப் பெற்று முன்னுக்கு வரவேண்டும் என்ற எண்ணமோ இவருக்கு ஏற்படவில்லை. அதன் விளைவாக நிகழ்ச்சிகளை நிகழ்ந்தவாறே கூறுவதற்குரிய வாய்ப்பு அவருக்குக் கிட்டியது. இதுவே இந்நூலின் சிறப்புக்குக் காரணமாகும். அதே நேரத்தில் முகம்மதுவின் நடவடிக்கைகள் சில அவரை

நேரடியாக பாதித்தன. ஆகவே அவரைக் கண்டித்து எழுதும் போது ஓரளவு கடுமையாக நடந்து கொண்டிருக்கிறார் என்று கூறின் அது மிகையாகாது.

தாரிக். இ. பிரூஸ் ஹாயி : சுல்தான் பிரூஸ் துக்ளக்கினுடைய அரசவை வரலாற்றாசிரியரான ஷம்ஸ்-இ-சிராஜ் அஃபீப் இந்நூலை ஆக்கியுள்ளார். இவர் கி.பி. 1342-ல் பிறந்தார். இவருடைய தந்தையார் ஒரு ஜாகீர்தார். சுல்தான் பிரூஸ் ஷாவிடம் அவர் வேலை பார்த்து வந்தார். ஒரு சமயம் அவர் கால்வாய் மேற் பார்வையாளராகப் பணியாற்றினார். பிரூஸ்ஷா சுற்றுப்பயணம் மேற்கொண்டபோது அவருடன் கூடச் செல்லும் வாய்ப்பு அவருக்கு ஏற்பட்டது. அஃபீப்பும் அவருடன் கூடச்செல்வதுண்டு. பிரூஸ் வேட்டைக்குச் சென்ற போதும் கூட அவர் சுல்தானுடன் செல்வார். தமது வரலாற்றுக்குத் தேவையான செய்திகளை அஃபீப் தமது தந்தையாரிடமிருந்தும், வேறு பல உயர்மட்ட அதிகாரி களிடமிருந்தும் சேகரித்துக் கொண்டார். பதினைந்தாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் இந்நூல் எழுதி முடிக்கப்பட்டது.

ஏறத்தாழ 37 ஆண்டுகள் நடைபெற்று வந்த பிரூஸ்ஷா வினுடைய ஆட்சியைப் பற்றியும், அக்காலத்தில் ஏற்பட்ட கலை வளர்ச்சியைப் பற்றியும் அறிதற்கு இந்நூல் மிகவும் உதவியாக இருக்கிறது, பிரூஸ் காலத்தில் நடைபெற்ற அரசியல் நிகழ்ச்சி கள், நிருவாகம் பற்றிய சீர்திருத்தங்கள், மக்களுக்குப் பயனளிக்கும் வகையில் அவர் மேற்கொண்ட நடவடிக்கைகள் அதில் இடம் பெற்றுள்ளன. இதில் 90 அத்தியாயங்கள் உள்ளன, இது பாரசீக மொழியில் எழுதப்பட்டது. இந்நூலின் பெரும்பகுதி ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது, இதன் ஆங்கில வாசகத்தை எலியட் இயற்றிய வரலாற்று நூலில் காணலாம்.[1] அஃபீப் பரணியைப் போன்ற ஒரு சிறந்த வரலாற்று ஆசிரியர் அன்று. பரணியிடம் காணப்படுகின்ற திறமையும், கூர்ந்து கவனிக்கும் திறனும் இவரிடம் கிடையாது. பிரூஸ்ஷாவை இவர் தேவைக்கு மேலாக புகழ்ந்துள்ளார்.

புதூஹாத். இ. பிரூஸ்ஷாயி : பிரூஸ்ஷா இதனுடைய ஆசிரியராவார். இது ஒரு சிறிய நூலாகும். இதில் மொத்தம் 37 பக்கங்களேயுள்ளன. மூர்த்தி சிறிதென்றாலும் கீர்த்தி பெரியது என்பது பெரியோர் வாக்கு. வடிவத்தில் சிறிதாயினும் இது முக்கியத்துவத்தில் குறைந்ததன்று. மதவெறி கொண்ட

[1] Elliot, History, Vol III

பிரூஸ் ஷாவின் சமயக் கொள்கையினை இது தெளிவாகப் புலப்படுத்துகிறது. பிரூஸ் போன்ற மத வெறி கொண்ட ஏனைய முஸ்லிம் சுல்தான்களுடைய நடவடிக்கைகளையும் சரியான முறையில் நமக்கு இது சுட்டிக் காட்டுகிறது.

**சிராத். இ. பிரூஸ்ஷாயி :** இந் நூல் கி.பி. 1370 ஆம் ஆண்டில் எழுதப் பெற்றது. பிரூஸ் கட்டளையின்படி அவரது ஆதரவுடன் எழுதப் பெற்ற நூல்களுள் இது ஒன்ருகும். இதனுடைய ஆசிரியர் பெயர் நமக்குத் தெரியாது. பிரூஸினுடைய செய்கைகள்யாவற்றையும் புகழ்ந்து எழுதி யுள்ளார். பிரூஸ் சில வழிபாட்டினை ஒழிக்க மேற்கொண்ட நடவடிக்கைகளை ஆசிரியர் போற்றிப் புகழ்ந்துள்ளார்.

**இன்ஷா-இ-மாஹ்ரு (Insha-i-Makru)** பிரூஸ் காலத்தில் வாழ்ந்து வந்த பிரபுக்களில் ஒருவரான அயின்-உல்-முல்க் என்பவர் எழுதிய கடிதங்கள் அடங்கிய நூலே இன்ஷா-இ-மாஹ்ரு ஆகும். இதனை முன்ஷாத்-இ-மஹ்ரு என்றும் அழைப்பர். இதனுடைய உதவியைக் கொண்டு டில்லி அரசரின் நிருவாகத்தைப் பற்றி நன்கு அறிந்து கொள்ள இயலும்.

**மல்பூஸாத்-இ-தைமூரீ (Malfuzat-i-Timuri)** இது தைமூர் எழுதிய சுயசரிதையாகும் என்பர் சிலர். தைமூரே இதனை எழுதினர் என்பதற்கு நேரடியான ஆதாரம் ஏதுமில்லை. அவருடைய கட்டளையின் பேரிலோ அல்லது அவரது மேற் பார்வையின் கீழோ அது எழுதப் பட்டிருக்கக் கூடும் என்பார் சிலர். தைமூர் வழிவந்த பாபர், ஜஹாங்கீர் போன்ற பேரரசர்கள் தங்களுடைய சுய சரிதையை எழுதி வைத்துள்ளனர் என்பதை அறியும்போது தைமூரும் ஏன் எழுதியிருக்கக்கூடாது என்ற கேள்வி நம்மிடையே எழக்கூடும். இதனைக் கருத்தில் கொண்டு பார்க்குமிடத்து தைமூர் இதனை எழுதியிருக்கக் கூடுமென்று நாம் கருத இடமுண்டு. இது துருக்கிய மொழியில் எழுதப்பட்டுள்ளது. இதனை அபூதாளிப் ஹுசெயின் என்பவர் பாரசீக மொழியில் மொழி பெயர்த்து பேரரசர் ஷாஜஹானுக்கு அர்ப்பணித்தார். இந்நூல் தைமூரின் படையெடுப்பைப் பற்றியறிய உதவுகிறது.

**ஜஃபர் நாமா : (Zafar-namah)** இந் நூலும் தைமூர் படையெடுப்பினை விளக்குகிறது. இது மேலே குறிப்பிட்ட சுயசரிதையை முழுமையாகத் தழுவி எழுதப்பட்டுள்ளது. இதில் மல்பூஸாத் இ-தைமூரியில் காணப் பெறுகின்ற செய்திகளைத் தவிர வேறு செய்திகளைக் காணவியலாது. ஷர்ப்புத்தீன் என்பவர் இதனை நமக்குத் தொகுத்தளித்துள்ளார்.

தாரீக்-இ-பிரூஸ் ஷாயி : (Tarikh-i-Firuz Shahi) இதனுடைய ஆசிரியர் யஹியா அகமது ஆவார். இரண்டாவது சையத்து அரசரான முபாரக் ஷாவின் மறைவிற்குப் பிறகு எழுதப்பட்ட இந் நூல் முபாரக் ஷாவிற்கு அர்ப்பணிக்கப் பட்டது. டில்லி சுல்தானிய வரலாற்று ஆசிரியர்கள் பொதுவாக சுன்னி பிரிவைச் சார்ந்தவர்களாவார்கள். ஆனால் யஹியா ஷியாக் கொள் கையினைப் பின்பற்றி வந்தார். அவர் அரசருடைய அன்பை வெகுவாகப் பெற்றிருந்தார். ஆகவே அவரது ஆட்சிக் காலத்தில் நிகழ்வுற்ற சம்பவங்களைப் பற்றி நன்கு அறிந்து கொள்ள அவருக்கு வாய்ப்பு ஏற்பட்டது. மிக்க கவனமாகவும், நேர்மையாகவும் எழுதவல்ல ஒரு வரலாற்று நிகழ்ச்சிப் பதிவாளர் என்று டாஸன் அவரைப் பற்றி எழுதியுள்ளார். சொல்ல வேண்டியவற்றை யஹியா தெளிவாகக் கூறியுள்ளார். அவரது நூலில் பகட்டு வார்த்தைகளுக்கு இடமில்லை. அவரது வரலாறு முயீஸ் உத்தீன் முகமது கோரியின் ஆட்சிக் காலத்திலிருந்து தொடங்கப்பட்டு சையத்து அரசர் சுல்தான் முகம்மதுவின் பட்டமேற்பு நிகழ்ச்சி யுடன் முடிக்கப்பட்டுள்ளது. இவ்வரலாற்றின் ஒரு பகுதி, அதாவது பிரூஸ்ஷா முடிசூட்டு விழாவரை, இவருக்கு முன்னர் எழுதப்பட்டிருந்த வரலாறுகளை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டிருக்கிறது. இதை யஹியாவே நமக்கு அறிவித்துள் ளார். இந் நூலின் பிற்பகுதியில் ஆசிரியர் தாம் நேரடியாகக் கண்டவற்றையும், அறிந்தவற்றையும் குறிப்பிட்டுள்ளார். இந் நூலின் சிறப்புக்குப் பல காரணங்களுண்டு. முதலாவதாக பரணி தமது வரலாற்றுக் குறிப்பினை நிறுத்தியிடத்திலிருந்து டில்லி சுல்தானிய வரலாற்றினை அறிவதற்குதவுகின்ற முக்கியமான நூல்களுள் இது ஒன்றாகும். இரண்டாவதாக அஃபீப் நமக்களித் திருக்கும் சுருக்கமான விளக்கங்களைப் பற்றி அதிகமாக அறிவதற்கு இந் நூலே நமக்குப் பேருதவியாக உள்ளது. மூன்றாவதாக சையத்து காலவரலாற்றினை, குறிப்பாக கி. பி. 1400 முதல் 1434 வரையிலான வரலாற்றினை, அறிவதற்கான அதிகாரப் பூர்வமான வரலாறு இது ஒன்றேயாகும். நான்காவதாக பிற்கால வரலாற்று ஆசிரியர்கள் சிலர் இவரது நூலினை அடிப்படையாகக் கொண்டு தான் தங்களது வரலாற்று நூல்களை ஆக்கியுள்ளார்கள்.[1] ஐந்தாவதாக வேறெதிலும் காணவியலாத குறிப்புகள் இதனில் காண்கிறோம். முகமது துக்ளக்கினுடைய ஆட்சியின் காலத் தேதியினை இவர் ஒருவர் தான் திட்டவட்டமாகக் குறிப்பிட்டுள்ளார். இதிலிருந்து பரணியின் தாரீக் இ பிரூஸ் ஷாயினை மட்டுமன்றி வேறு நூல்களையும் இவர் பார்த்து எழுதி

[1] HCIP. Delhi Sultanate Vol 5 p. 5.

யிருக்கவேண்டும் என்பது தெளிவாகும்.[1] இறுதியாக பிரூஸ் ஷாவின் மறைவிற்குப் பிறகு வட இந்தியாவில் தோன்றிய குழப்பங்களைப் பற்றி அறிவதற்கு இந் நூலே தலை சிறந்த ஆதாரமாக விளங்குகிறது.[2]

தாரீக். இ. தாவூதீ: இந் நூலை ஆக்கியவர் அப்துல்லா. இவர் ஜஹாங்கீர் காலத்தில் இதனைப் படைத்தார். தாவூத்ஷா இறக்கும் வரையிலான நிகழ்ச்சிகள் இதில் குறிப்பிடப் பட்டுள்ளன.

தாரீக். இ. முஷ்டாகீ, வாகியாத். இ. முஷ்டாகீ: இவ்விரு தலைப்புகளைக் கொண்ட இருகையெழுத்துப் படிகள் பிரிட்டிஷ் மியூசியத்தில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. இவையிரண்டும் சேர்ந்த ஒரு வரலாறு சார்ந்த நூலை ஆக்கியவர் ஷெய்க்ரிஸ்குல்லா என்று கூறப்படுகிறது. முஷ்டாகீ என்பது பாரசீக மொழியில் கவிதைகளை எழுதியபோது சூட்டிக் கொண்ட பெயராகும். அதே போன்று அவர் ஹிந்தியில் எழுதும் போது தம்மை இராஜன் என்று அழைத்துக் கொண்டார். அவர் ஹிஜிரா ஆண்டு 897-ல் (கி. பி. 1491-92-ல்) பிறந்தார். ஹிஜிரா ஆண்டு 989-ல் (கி. பி. 1581-82-ல்) மறைந்தார். பஹ்லூல் லோடியுடன் தொடங்கப் பெற்ற இந் நூல் அக்பர் காலம் வரையிலான வரலாற்று நிகழ்ச்சிகளை நமக்குச் சித்தரிந்துக் காட்டுகின்றது. தாம் நேரில் கண்டவற்றை இதில் குறிப்பிட்டிருப்பதாக அவரே கூறுகின்றார். இதுவே இந்நூலின் சிறப்பாகும். ஆப்கானிய அரசர்களின் ஆட்சியை அறிய உதவுகின்ற நூல்களுள் இதுவே முக்கியமானதாகும். மேலும் பல அதிகாரப் பூர்வமான விவரங்கள் இதில் அடங்கியுள்ளன.[3] மேலும் சூர் குலத்தினர்களைப் பற்றிய விவரங்களை அறிய காலத்தினால் முற்பட்ட முதல் நூல் இதுவே யாகும். சிக்கந்தர்லோடி, ஷெர்ஷா, இஸ்லாம்ஷா ஆகியோரின் ஆட்சிகளைப்பற்றி விவரிக்கும்போது அவர்களுடைய நிருவாக முறை, பொதுப்பணிகள், விவசாய வளர்ச்சிக்காக மேற்கொள்ளப் பட்ட நடவடிக்கைகள் போன்றவற்றை நமக்கு அளித்துள்ளார். மேலும் அவ்வரசர்களின் தனிப்பட்ட வாழ்க்கை, பண்புகள் ஆகிய வற்றையும் அவர்கள் கால அரசவையைப் பற்றியும் ஒளிவு மறைவு இன்றிக் குறிப்பிட்டிருக்கிறார். குறிப்பாக சமுதாயம், மதம் ஆகிய வற்றைப் பற்றிய விவரங்கள் இதில் உள்ளன. ஆனால் இதில் சில

1 Ishwari Prasad, History of Mediaeval India Page XlIV

2 Ibid

3 HCIP Vol V p. 5

குறைகள் உள்ளன. இதில் எல்லாவிதமான நம்பத்தகாத கதைகள் காணப்படுகின்றன.[1] ஆசிரியர் ஒழுங்கு முறையான திட்டத்தைக் கையாண்டு இதனை எழுதியதாக நமக்குத் தெரியவில்லை,[2] நிகழ்ச்சிகள் கட்டுக் கதைகளுடன் இணைக்கப்பட்டு துண்டு துண்டாகக் கூறப்பட்டுள்ளன.

**தாரீக். இ. ஷாயி அல்லது தாரீக். இ. சுல்தான். இ. ஆப்கானு:** இதன் ஆசிரியர் அஹமத் யாத்கார். இது கி. பி. 1609-ல் இயற்றப்பட்டது. ஹீமுவின் மறைவுடன் இந்நூல் முற்றுப் பெறுகிறது. இந்நூல் வங்காளத்தை ஆண்டு வந்த தாவூத் ஷாவின் கட்டளையின் படி எழுதப்பட்டதாகும்.

**மகஸான்-இ-ஆப்கானு:** இதனை ஆக்கியவர் நியமதுல்லா ஆவார். இது 1612ல் எழுதி முடிக்கப்பட்டது. இப்ராஹீம் லோடியின் ஆட்சியுடன் இந்நூல் முற்றுப் பெறுகிறது. இதனை எழுதுவதற்குக் காரணமாக இருந்தவர் கானி ஜஹான் லோடி யாவர். இதனுடைய ஆசிரியர் பிரிஷ்டாவின் சமகாலத்தவர் என்று கூறப்படுகிறது. ஆனல் அவரைப்பற்றிய குறிப்பேதும் இதில் காணவில்லை என்பது அறியற்பாலது.

இவையன்றி இக்கால வரலாற்றினைப் பிற்கால வரலாற்று நூல்களின் வாயிலாகவும் நாம் அறிந்து கொள்கிறோம். அவற்றுள் குறிப்பிடப் படவேண்டியவை மூன்றாகும். அவைபின்வருமாறு: 1. பிரிஷ்டாவின் குல்ஷான். இ. இப்ராஹீம் அல்லது தாரீக். இ. பிரிஷ்டா. 2. நிஜா முத்தீன் அஹமதுவினுடைய தபகாத். இ. அக்பாரீ 3. பதோனீயினுடைய முந்தகாப்-உத்-தவாரீக்.

இந்திய நாட்டவர்களன்றி அந்நியர் சிலரும் இக்கால வரலாற்றினைக் குறிக்கும் பாடல்களையும், நூல்களையும் விட்டுச் சென்றுள்ளனர். தாஷ்கண்டுவைச் சார்ந்த பத்ருத்தீன் என்பவர் பாரசீக மொழியில் எழுதிய சில கவிதைகள் இந்தியாவில் நடைபெற்ற நிகழ்ச்சிகளின் தேதிகளை வரையறுக்கப் பயன்படுகின்றன. இவர் இந்தியாவிற்கு வந்து சிலகாலம் முகமதுபின் துக்ளக்கின் அரசவையில் இடம் பெற்றிருந்தவர். டமாஸ்கஸ் நகரத்தைச் சார்ந்த ஷிஹாப் உத்தீன் அல் உமரீ என்பவர் எழுதியுள்ள மசாலிக் உல் அப்ஸர் என்ற நூலும் நமக்குக் கிடைத்துள்ளது. பதினான்காம் நூற்றாண்டில் இந்தியாவில் தோன்றியிருந்த முஸ்லிம் நாகரீகத்தைப்பற்றி அறிய இது மிகவும் உதவியாக இருக்கிறது. இவர் இந்தியாவிற்கு வந்து தங்கியிருக்கவில்லை என்றாலும்,

[1] MIIP p. xliv

[2] HCIP. Vol v p,5

இவர் தமக்குத் தேவையான கருத்துக்களை இந்தியாவிற்குச் சென்று மீண்டும் திரும்பி வந்தவர்களின் வாயிலாகப் பெற்றுக் கொண்டார்.

இனி மாகாண வரலாறுகளை அறிய உதவும் நூல்களைப்பற்றிக் கவனிப்போம். 1. சாச் நாமா : இது அராபியர் சிந்துவை வென்ற வரலாற்றைக் கூறுகிறது. இது முதலில் அராபிய மொழி யில் இயற்றப்பட்டது. 2. தாரீக்.இ.மஹதூர் ஷாயி: இந் நூலினை அடிப்படையாகக் கொண்டுதான் நிஜாமுத்தீன் சிந்துவின் வரலாற்றைப் பற்றி எழுதியுள்ளார். இந்நூல் தற்போது நமக்குக் கிடைக்க வில்லை. 3. தாரீக். இ. சிந்து அல்லது தாரீக். இ. மாசூமீ: இதனுடைய ஆசிரியர் பெயர் மீர் முகமது மாசூம். இது 1600-ல் எழுதப்பட்டது. அராபியர் சிந்துவைக் கைப்பற்றியது முதல் அக்பர் காலம் வரை அங்கு நடை பெற்ற நிகழ்ச்சிகளை அறிய இது உதவுகிறது. இது நான்கு அத்தியாயங்களாகப் பிரிக்கப் பட்டுள்ளது. அராபிய படையெடுப்பிற்குக் காரணமாக அமைந்திருந்த சூழ்நிலைகள், அவர்களது வெற்றிக்குக் காரணங் கள் ஆகியவற்றை இதன் வாயிலாக நாம் அறிந்துகொள்கிறோம். 4. தாரீக். இ. தாஹிரீ: இது கி.பி. 1654-55-ல் எழுதப்பட்டது. இதனுடைய ஆசிரியர் மீர்தாஹிர் முகமது நிஸ்யானீ ஆவார். சிந்துவை ஆண்ட அர்கூன்களைப்பற்றிய விவரங்கள் இதில் அடங்கியுள்ளன. 5. துஃபத் உல் கிராம்: இது பதினெட்டாம் நூற்றாண்டில் எழுதப்பட்ட நூலாகும். இதன் ஆசிரியர் அலிஷெர் கானி என்பவராவார். சிந்து பகுதியைப் பற்றிய விரிவான, உண்மையான வரலாறுகளுள் இது முதலிடம் பெறுகிறது.

முஸ்லிம்கள் எழுதிய காஷ்மீர் வரலாறுகள் பல நமக்குக் கிடைத்துள்ளன. அவற்றுள் தலை சிறந்தது மீர்ஜா ஹைதர் துக்லாத் எழுதிய தாரீக். இ. ரஷீதீ ஆகும். காஷ்மீரம், மீர்ஜா வினுடைய ஆதிக்கத்திற்குட்படுத்தப்பட்ட வரலாற்றினை அதில் காண்கிறோம். யூசுப் ஷாவினிடம் பணிபுரிந்து வந்த காஷ்மீர பிரபுக்களில் ஒருவரான ஹைதர் மலிக் எழுதிய தாரீக்.இ.காஷ்மீரி என்ற நூலின் வாயிலாகவும் காஷ்மீரத்தின் வரலாற்றினை அறிகிறோம். இந்நூலில் காஷ்மீரத்தின் பண்டைய வரலாற்றினைக் காண்கிறோம். இது 17ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட நூலாகும். இது இராஜதரங்கினியைப் பின்பற்றி எழுதப்பட்டதாகும்.

வங்காள வரலாற்றினை அறிவிக்கும் நூல்களுள் குறிப்பிடத் தக்கது ரியாஸ் உஸ் சலாதீன் என்பதாகும். இதன் ஆசிரியர் குலாம் ஹூசெய்ன் சலீம் என்பராவார். இது கி. பி.1788ஆம்

ஆண்டில் எழுதி முடிக்கப்பட்டது. பக்தியார் கில்ஜியினுடைய வங்காளப் படையெடுப்பு முதற்கொண்டு கி. பி. 1788 ஆம் ஆண்டு வரையிலான வரலாற்று நிகழ்ச்சிகளை இந்நூல் நமக்கு எடுத்துரைக்கின்றது. இந்நூலில் காணப்பெறும் குறைகளை J. N. சர்க்கார் தமது வங்கம் பற்றிய வரலாற்று நூலில் எடுத்துக் காட்டியுள்ளார். இந்நூலில் காணப்பெறும் செய்திகள் போது மான அளவிற்கு இல்லை. தவறான வகையில் சிலசெய்திகள் கூறப் பட்டுள்ளன. தேதிகளும் தவறாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. இவற்றினுக்கெல்லாம் முக்கிய காரணமாக விளங்குவது அக்காலத் தில் தோன்றியிருந்த பாரசீக மொழியில் எழுதப்பட்ட அதிகாரப் பூர்வமான நூல்களை அதன் ஆசிரியர் அறிந்திராமையே யாகும் என்று சர்க்கார் குறிப்பிட்டுள்ளார்.[1]

குஜராத்தின் வரலாறு அடங்கிய நூல்கள் பல நமக்குக் கிடைத்துள்ளன. அவற்றுள் ஒன்று சிக்கந்தர்பின் முகமது எழுதிய மிராத். இ. சிக்கந்தரீ ஆகும். குஜராத்தின் மீது முஸ்லிம்கள் நடத்திய படையெடுப்பினைத் தொடக்கமாகக் கொண்டு எழுதப் பட்ட இந்நூல் கி.பி 1611ஆம் ஆண்டுவரையிலான வரலாற்று நிகழ்ச்சிகளை நாம் அறிய உதவுகிறது. இது பாரசீக மொழியில் எழுதப்பட்டுள்ளது.

அதேமொழியில் அலி முகமதுகான் எழுதிய மிராத். இ. அஹமதீ, மீர் அபூ துராப் வலி எழுதிய தாரீக்-இ-குஜராத் ஆகிய இரு வரலாறுகளும் நமக்குப் பயனளிக்கும் வகையில் அமைந் துள்ளன. அராபியமொழியில் ஆக்கப்பட்டுள்ள ஜபர் உல் வாலீ பி முஸாபர் வ அலி என்ற வரலாறும் குஜராத்தின் வரலாற்றினை அறிவதற்கு மிகவும் பயன்படுகிறது. இதனுடைய ஆசிரியர் அப்துல்லா முகமதுபின் உமர் அல் மக்கீ.

குல் பர்க்காவையும் பீடாரையும் தலைநகராகக் கொண்டு ஆண்டுவந்த பாமினி சுல்தான்களுடைய வரலாற்றினை அறிதற்கு உதவியாக இருப்பது புர்ஹான். இ. மா ஆசிர் ஆகும். அதனுடைய ஆசிரியரின் பெயர் சையத் அலீ தபாதபா என்பதாகும். அவர் பதினாறும் நூற்றாண்டின் பிற்பகுதியில் இந்தியாவிற்கு வந்தார். முதலில் சுல்தான் கோல் கொண்டாவினிடமும் பின்னர் இரண் டாவது புர் ஹான் நிஜாம்ஷாவிடமும் அவர் வேலைக்கு அமர்ந் தார். 1000 ஆம். ஹிஜிரா ஆண்டில் (கி.பி. 1591—1592) இதனை எழுதத் தொடங்கினார். பீஜப்பூரை ஆண்டு வந்த ஆதில் ஷாயிக்களின் வரலாற்றினை ரபி உத்தீன் எழுதிய தஸ்கிராத்

[1] H. B. S. p. 501

உல் முலூக் நமக்கு எடுத்தியம்புகிறது. இதனுடைய ஆசிரியர் இரண்டாம் அலி ஆதில் ஷா (1557-1579) வின் கீழ் பீஜப்பூர் ஆளுநராகப் பணியாற்றி வந்தார். அக்காலத்தில் இந்தியா விலும், பாரசீகத்திலும் ஆட்சி செலுத்தி வந்த அரச மரபுகளின் வரலாற்றையும் அது கூறுகிறது. மேலும் பாமினி அரசர்களைப் பற்றியும் அதனுடைய தொடக்க அத்தியாயத்தில் கூறப் பட்டுள்ளது. பாமினி அரசர்களைப்பற்றிய குறிப்புகள் மிகக் குறைந்தளவில் இருப்பினுப் புர்ஹான் இமா ஆசீர் அளித்துள்ள நிகழ்ச்சிகளை உறுதிப்படுத்தும் வகையில் அவை கூறப் பட்டிருக் கின்றன. ஆகவே வரலாற்று மாணவர்களுக்கு இது மிக்க பயனளிப்பதாக அமைந்துள்ளது.

மேலே கூறப்பட்டுள்ள நூல்கள் அனைத்தினையும் முஸ்லிம்கள் எழுதியுள்ளனர். அவர்கள் பாரசீகமொழியினைப் பெருவாரியாகப் பயன்படுத்தி யுள்ளனர். சிலர் தமது நூல்களை அராபியமொழி யில் எழுதியுள்ளனர். இவையன்றி இந்திய மொழிகளில் எழுதப் பட்டிருக்கும் சில நூல்களும் வரலாற்றுச் சிறப்புடையனவாகக் காணப்படுகின்றன. அவற்றுள் சிலவற்றைப் பற்றி இங்குக் கவனிப்போம். காஷ்மீர் வரலாற்றைப் பொருத்தளவில் நமக்கு மூன்று சமஸ்கிருத நூல்கள் கிடைத்துள்ளன. இவையாவும் கவிதைவடிவில் எழுதப்பட்டிருக்கின்றன, பன்னிரண்டாம் ஆண்டின் இடையில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளைத் தொடக்கமாகக் கொண்டிருக்கும் இந்நூல்கள் தமது வரலாற்றினை அக்பர்காலம் வரை எடுத்துக் கூறுகின்றன. இவற்றுள் ஒன்றான ஜோனராஜா எழுதிய நூல் நமக்கு மிகுந்த பயனை அளிக்கும்வகையில் அமைந் திருக்கிறது. முஸ்லிம் வரலாற்று ஆசிரியர்கள் கூறத்தவறி விட்ட நிகழ்ச்சிகளை இம்மூன்றுநூல்களும் எடுத்துரைக்கின்றன. ஆகவேதான் நாம் காஷ்மீர வரலாற்றை முழுமையாக அறிய இயலுகிறது. இவற்றின் சிறப்புக்குப் பிறிதொரு காரணமும் உண்டு. அதாவது இவற்றை அடிப்படையாகக் கொண்டுதான் முஸ்லிம் வரலாற்று ஆசிரியர்கள் தமது நூல்களை எழுதியுள்ளனர்.[1]

இராஜஸ்தான் வரலாற்றினை அறிய பல நாட்டுப்பாடல்கள் நமக்கு உதவியாக உள்ளன. நிகழ்ச்சிகள் மிகைப்படுத்தி இப் பாடல்களில் கூறப்பட்டிருப்பினும் அவை மிக்க பயனுள்ளனவாய் அமைந்திருக்கின்றன என்பதை மறுக்க இயலாது.

விஜய நகர வரலாற்றைப் பொருத்தளவில் வரலாற்று நிகழ்ச்சிகளை எடுத்துத் தருகின்ற இலக்கியப் படைப்புகளுக்குப்

1. HCIP Vol. 5. p. 8.

பஞ்சம் இல்லை என்றுதான் கூறவேண்டும். அவற்றுள் ஒன்று மதுரா விஜயமாகும். சமஸ்கிருத மொழியில் இயற்றப் பட்டுள்ள இக் கவிதை, விஜய நகர அரசர் முதலாவது புக்கரின் மகன் குமார கம்பண மதுரை சுல்தான்களுக்கு எதிராக நடத்திய போர் நடவடிக்கைகளை இது நமக்கு அறிவிக்கின்றன. இதனுடைய ஆசிரியை கங்காதேவி. இவர் கம்பணவின் மனைவியாவார். காவிய வடிவத்தில் வடிக்கப் பெற்றுள்ள இது வரலாற்று நிகழ்ச்சிகள் பலவற்றைத் தன்னகத்தே கொண்டுள்ளது. இங்கு குறிப்பிடத்தக்க மற்றொரு வரலாறு பற்றிய நூல் அச்சுதராய புதயா என்பதாகும். இதன் ஆசிரியர் இராஜநாதா ஆவார். கிருஷ்ணதேவராயருக்குப் பிறகு விஜய நகர அரியணையில் அமர்ந்த அச்சுதராயரின் ஆட்சியைப் பற்றிய விளக்கங்கள் இதில் காணக் கிடக்கின்றன.

இனி அயல் நாட்டு சுற்றுப் பயணிகள் விட்டுச் சென்றிருக்கும் குறிப்புகளைப் பற்றிக் கவனிப்போம். டில்லி சுல்தான்கள் ஆட்சி நடத்தி வந்த போது வெளி நாட்டவர் பலர் சுற்றுப் பயணம் மேற் கொண்டனர். அவர்கள் தாங்கள் கண்டவற்றையும் கேட்ட வற்றையும் குறித்து வைத்துள்ளனர். அவற்றுள் பல அக்கால வரலாற்றை அறிய நமக்கு உதவி புரிகின்றன. அவற்றுள் ஒன்று இபின் பாதுதா விட்டுச் சென்றிருக்கும் குறிப்பாகும். இதனை கிதாப்-உர்-ரெஹ்லா என்கிறோம். இதன் பொருள் பயணங்கள் பற்றிய நூல் என்பதாகும். அபு அப்துல்லா முகமது என்பது அவரது உண்மையான பெயராகும். பாதுதா என்பது அவரது குடும்பப் பெயராகும். அவர் கி.பி. 1304ஆம் ஆண்டு பிப்ரவரி 24 ஆம் நாள் வட ஆப்பிரிக்காவில் மொராக்கோவிலுள்ள டாங்கியர் என்ற நகரில் அப்துல்லா என்பவருக்கு மகனாகப் பிறந்தார். கி.பி. 1378ஆம் ஆண்டில் தமது 74ஆம் வயதில் பெஸ் என்னுமிடத்தில் இயற்கை எய்தினார்.[1] கி.பி. 1325ஆம் ஆண்டு அவர் தமது சுற்றுப் பயணத்தைத் துவக்கினார். ஆப்ரிக்கா, மேற்கு ஆசிய நாடுகள் பலவற்றில் தம் சுற்றுப்பயணத்தை முடித்துக் கொண்டு கி.பி. 1333–ல் சிந்து நதியைக் கடந்து இந்தியாவிற்குள் நுழைந்தார். பின்னர் இந்தோனீஷியா. சீனா ஆகிய நாடுகளிலும் பயணம் செய்தார். ஏறத்தாழ 77,000 மைல் பயணம் செய் திருந்தார். இந்தியா, மாலத் தீவுகள், இலங்கை ஆகிய இடங் களில் மட்டும் 14,000 மைல் தூரம் பயணம் செய்துள்ளார். இந்தியாவில் 14 ஆண்டுகள் (கி.பி. 1333–47) கழித்துள்ளார். அவற்றுள் எட்டு ஆண்டுகள் (கி.பி. 1334-42) டில்லியில்

[1] அவர் 1368-69-ல் இறந்தார் என்று ஈஸ்வரி பிரசாத் குறிப்பிடுகின்றார். MIIP p xii

செலவழிக்கப்பட்டன. அக்காலத்தில் டில்லியை ஆண்டு வந்த முகமதுபின் துக்ளக் அவருக்குக் காஜி பதவியினை அளித்தார். பின்னர் சமய நிறுவனங்கள் நடத்தி வந்த இல்லங்களை நிரு வகிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். முதலில் பேரரச ருடைய அன்பைப் பெற்றிருந்த அவர் பின்னர் அதனை இழந்து விட்டார். சிலகாலம் அவருடைய நடவடிக்கைகள் கண்காணிக்கப் பட்டு வந்தன. அவர் சிறையில் அடைக்கப்பட்டார் என்ற கருத்தும் வரலாற்று ஆசிரியர்களிடையே நிலவி வருகிறது.[1] இதற்குப் போதிய ஆதாரங்கள் நமக்குக் கிடைக்கவில்லை.[2] பின்னர் அவர் பேரரசின் நன்மதிப்பை மீண்டும் பெற்றார். அதன் விளை வாக சீனாவிற்கு அனுப்பப்பட்ட தூதுக் குழுவினை நடத்திச் செல்லும் வாய்ப்பைப் பெற்றார். கி.பி. 1341ஆம் ஆண்டில் இந்த பொறுப்பு அவருக்கு அளிக்கப்பட்ட போதிலும் கி.பி. 1346-ல் தான் அவர் இந்தியாவினை விட்டு கடல் வழியாக சீனா நோக்கிச் சென்றார். அப்போது அவர் தம்முடன் விலையுயர்ந்த பரிசுப் பொருள்களை எடுத்துச் சென்றார். அவற்றைப் பற்றிய விவரங்களை அவரது குறிப்புகளில் காணலாம். தமது தாயகம் திரும்பிய பிறகு தாம் பிற நாடுகளில் கண்டவற்றைத் தாம் சொல்ல இபின் ஜூஜ்ஜி என்பவரை எழுதச் சொன்னார். தமது பயணங்களின் போது தாம் எழுதி வைத்த குறிப்புகள் காணாமல் போய்விட்டமை யால் அவர் இந்த முறையைக் கையாள வேண்டியதாயிற்று. அது உண்மை எனில் நாம் இப்போது கவனித்துக் கொண்டு வரும்படி யான நூல் அவரது வியக்கத்தக்க நினைவாற்றலுக்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டாக விளங்குகிறது என்று அழுத்தம் திருத்தமாகக் கூறலாம்.[3]

இபின் பாதூதாவின் ரெஹ்லா ஒரு சிறந்த வரலாற்று நூலாகும். முகமது பின் துக்ளக் ஆட்சிக் காலத்தை யொட்டிய செய்திகளை அறிய உதவுகின்ற ஆதார நூல்களுள் ரெஹ்லா ஒரு சிறப்பான இடத்தைப் பெற்றிருக்கிறது என்பதில் ஐயமேதும் இல்லை. அதற்குப் பல காரணங்கள் உண்டு. இபின் பதூதா சுல்தானுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்புகள் பல பெற்றிருந்தார். ஆகவே சுல்தானுடைய குணநலன்களையும், அவரது சாதனைகளை யும் தக்க முறையில் அளவிட அவரது குறிப்புகள் பயனுள்ளனவாய் இருக்கின்றன. ஏனெனில் அவர் ஒரு அந்நியர்; அரசவை வரலாற்றுப் பதிவாளருக்கு ஏற்படக்கூடிய இன்னல்களுக்கு அவர் இலக்காகவில்லை. மேலும் அவர் தமது தாயகம் திரும்பியபிறகு

[1] Dr. M. Husain M.T.M.H. p. 250

[2] HCIP vol. 5, p. 8

[3] IPM I p. xii

தான் இந்நூலை எழுதும் முயற்சியில் ஈடுபட்டார். அதுமட்டுமன்றி அவர் பல நாடுகளைச் சுற்றிப் பார்த்திருந்தமையால் இந்தியத் துணைக் கண்டத்தில் ஏற்பட்டிருந்தச் சூழ்நிலைகளை வேற்று நாட்டு சூழ் நிலைகளுடன் ஒப்பிட்டு உண்மை அறியக் கூடிய வாய்ப்பினை இந்நூல் நமக்கு ஏற்படுத்தித் தந்துள்ளது. இறுதியாக இதனுடைய ஆசிரியர் பல நாடுகளைச் சுற்றிப் பார்த்த அனுபவத்தையும், அதனால் பெற்ற அறிவையும் பயன்படுத்தி இந்நூலை ஆக்கியுள்ளார் என்பதை நம் நினைவில் வைத்துப் பார்க்குமிடத்து இந்நூல் எத்துணையளவு சிறப்புப் பெற்றிருக்கிறது என்பது வெள்ளிடை மலைபோல் விளங்கும்.

இபின் பாதூதாவினுடைய ரெஹ்லா அக்காலத்தில் தோன்றியிருந்த நிதி, அரசியல், இராணுவம் ஆகியவற்றைப் பற்றிய நிறுவனங்கள், சமுதாய, பொருளாதார நிலைகள், சாலைகள், போக்குவரத்து, அஞ்சல் முறை, விவசாயம், வியாபாரம், கப்பல் போக்குவரத்து, இசை, அரசவையில் கையாளப்பெற்ற சடங்குகள், அக்காலத்தில் வாழ்ந்த மக்களுடையக் கருத்துக்கள் திருவிழாக்கள், சுல்தானுடைய குணநலன்கள், கலகங்கள், பஞ்சங்கள் போன்ற பல துறைகளைப் பற்றிய குறிப்புக்களை இதில் காண்கிறோம். பரணி, இசாமி போன்ற வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிட்டிருக்கும் நிகழ்ச்சிகளை இவரது நூல் உறுதிப் படுத்தும் வகையில் பல குறிப்புக்களைக் கொண்டுள்ளது.

இந்தியாவிற்கு விஜயம் செய்த மற்றொரு முஸ்லிம் பயணி அப்துர் ரசாக் ஆவார். இவர் கள்ளிக்கோட்டை ஜமோரின் அரசவையில் பாரசீக நாட்டுத் தூதுவராகப் பணியாற்றி வந்தார். இவரது காலம் பதினைந்தாம் நூற்றாண்டாகும். இவர் விஜய நகரத்தைப் பற்றி ஒரு சிறந்த குறிப்பை விட்டுச் சென்றுள்ளார். அதைக் கொண்டு அதனுடைய நிருவாக முறையையும், சமுதாய நிலையைப் பற்றியும் அறியலாம்.

இந்தியாவிற்கு வராமலேயே இந்தியாவில் பயணம் செய்துவிட்டு வந்த பல்வேறு பயணிகளின் குறிப்புகளைக்கொண்டு அல் கல் கஷந்தீ என்பவர் சுப் உல் அஷா என்ற நூலை எழுதியுள்ளார்.

இந்தியாவிற்கு வந்த ஐரோப்பிய பயணிகளின் குறிப்புகளும் இக்கால வரலாற்றை அறிய உதவுகிறது. பதிமூன்றாம் நூற்றாண்டில் வந்த ஐரோப்பிய பயணி மார்க்கபோலோ அவர்களுள் ஒருவராவார். பதினான்காம் நூற்றாண்டில் ஒடோரிக், ஜார்டானஸ் போன்றோர் இந்தியாவில் பயணம் மேற்கொண்டனர். விஜயநகரத்தைச் சுற்றிப் பார்த்த நிகோலோ கான்டி பதினைந்தாம் நூற்றாண்டில் இந்தியா வந்தார். அவர் விட்டுச் சென்றிருக்கும் குறிப்புகள்

வரலாற்றுச் சிறப்பு மிக்கவையாகும். அதே நூற்ருண்டில் ரஷ்யா நாட்டிலிருந்து வந்த நிகிடின் என்ற வணிகர் பாமினி அரசைப் பற்றி எழுதியுள்ளார். பதினைரும் நூற்ருண்டில் வந்த அயல் நாட்டுப் பயணிகளுள் குறிப்பிடத் தக்கவர்கள் இத்தாலி நாட்டு வர்த்திமா, போச்சுகல் நாட்டு பார்போஸா, பேயஸ் ஆகியோர் குறிப்பிடுதற்குரியவராவர்.

இனி இக்கால வரலாற்றை அறிவதற்குதவும் பழங்காலச் சின்னங்கள், கட்டிடங்கள், நாணயங்கள், கல்வெட்டுகள் முதலிய வற்றைப் பற்றி கவனிப்போம். டில்லி சுல்தான்கள் விட்டுச் சென்றிருக்கும் கட்டிடங்கள், பாழடைந்து போன கோட்டைகள் முதலானவை அதிர்ஷ்டவசமாக நன்கு பராமரிக்கப்பட்டும், பாது காக்கப்பட்டும் வருகின்றன. டில்லிக்கருகேயுள்ள குதுப்மினர், அலாயி தர்வாஸா, துக்ளகாபாத் ஹம்பியில் காணப்பெறும் அழிவுச் சின்னங்கள் போன்றவை இங்கு குறிப்பிடத் தகுந்தன வாகும். இவற்றைப் பற்றி பின்னர் விரிவாகக் காணலாம்.

டில்லி சுல்தான்கள் காலத்திய நாணயங்கள் பல நமக்குக் கிடைத்துள்ளன. எட்வர்டு தாமஸ் எழுதியுள்ள "The Chronicles of the Pathan Kings of Delhi" அக்காலத்திய நாணயங் களைப்பற்றிய முழு விவரங்களை நமக்களிக்கிறது. டில்லி சுல்தான்கள், ஏனைய அரசர்கள் பட்டமேறிய ஆண்டுகள், அவர் களுடைய ஆதிக்கத்திற்குட்பட்டிருந்த நிலப்பகுதியின் எல்லைகள், அவர்களுடைய சமயக்கொள்கை போன்றவற்றை அவற்றின் உதவியைக் கொண்டு அறிய இயலும். கல்வெட்டுகளும் நமக்குக் கிடைத்துள்ளன. நிகழ்ச்சிகளின் காலத்தை வரையறுத்து அவற்றைத் தேதிவாரியாக எழுதவும், அவர்களது ஆட்சிப் பகுதி களின் எல்லைகளை அறிவதற்கும் இவை பயன்படுகின்றன. இந்து அரசர்களுடைய கல்வெட்டுகள் பிறிதொரு வகையிலும் உதவி புரிகின்றன. முஸ்லிம் வரலாற்று ஆசிரியர்கள் இந்துக்களுடைய அரசியல் நடவடிக்கைகளைப் பற்றி சரியான முறையில் போதுமான அளவில் எழுதவில்லை. அந்த ஒரு குறையை நீக்க இந்து அரசர் களின் கல்வெட்டுகள் பயன்படுகின்றன. எடுத்துக் காட்டாக முஸ்லிம்களுக்கு எதிராக தென்னிந்தியாவில் மேற்கொள்ளப்பட்ட எதிர்ப்பு இயக்கத்திற்கு முஸ்லிம் ஆசிரியர்கள் முக்கியத்துவம் அளிக்கவில்லை. அதைப்பற்றியத் தகவல்களையும் சரியானபடி அளிக்கவில்லை. அத்தகைய குறையைக் கல்வெட்டுகளே போக்கி யுள்ளன. இக்காலக் கல்வெட்டுகள் Epigraphia Indo Moslemica, Epigraphia Carnatica, Epigraphia India ஆகியவற்றில் வெளியிடப்பட்டுள்ளன.

# 2. குத்புதீன் அய்பெக்கும் ஆராம் ஷாவும்

## (கி. பி. 1206–1290)

**முன்னுரை**

டில்லி சுல்தான்களின் ஆட்சி கி.பி. 1206ஆம் ஆண்டில் நிறுவப் பட்டதென்று வரலாற்றுசிரியர்கள் பொதுவாகக் கூறுகின்றனர். அவ்வாண்டில் தொடங்கப்பட்ட டில்லி சுல்தான்களது ஆட்சி 1526ஆம் ஆண்டுவரை நீடித்திருந்தது. ஏறக்குறைய 320 ஆண்டுகள் ஆட்சிச் செலுத்திவந்த டில்லி சுல்தான்களை ஐந்து பிரிவுகளாகப் பிரித்துள்ளனர்—முந்திய துருக்கிய அரசர்கள், கில்ஜி அரசர்கள், துக்ளக் அரசர்கள், சையத்து அரசர்கள், லோடி அரசர்கள். முந்திய துருக்கிய அரசர்களுடைய ஆட்சி 1290ஆம் ஆண்டில் முடிவுற்றது.

முந்திய துருக்கிய சுல்தான்கள் பலவாறாக அழைக்கப் பட்டுள்ளனர். முகமது கோரியின் அடிமைகளுள் ஒருவரான குத்புத்தீன் அய்பெக் டில்லி சுல்தான்களுடைய ஆட்சிக்கு அடி கோலியவர் என்பதாலும், அவருக்குப் பின் ஆண்ட இல்டூட்மிஷ், பால்பன் ஆகியோரும் ஒரு காலத்தில் அடிமைகளாக இருந்தமை யாலும் அவர்களை அடிமை அரசகுலத்தவர் என்று கூறுகின்றனர். கி.பி. 1206 முதல் 1290 வரை ஆண்ட அரசர்கள் யாவரும் ஒருகுலத்தைச் சார்ந்தவர்கள் அன்று. அவர்கள் மூன்று வெவ் வேறு குலத்தைச் சார்ந்தவர்களாகயிருந்தனர். அவர்களை குத்பீ, ஷம்ஸி, பால்பானி என்று மூவகையாகப் பிரிக்கலாம். குத்புத்தீன் அய்பெக், இல்டூட்மிஷ், பால்பன் ஆகியோர் இந்த மூன்று அரசகுலங்களையும் முறையே ஏற்படுத்தினார்கள். அடிமை வமிசம் என்று அவர்கள் யாவரையும் ஒன்று சேர்த்து கூறும் போது அவர்கள் அனைவரும் ஒரே குலத்தைச் சார்ந்தவர்கள் என்ற தவறானக் கருத்து ஏற்படுகிறது. உண்மையில் மூன்று அரச குலங்கள் அக்காலத்தில் ஆண்டுவந்தனவேயன்றி ஓர் அரச குலத்தைச் சார்ந்தவர்கள் ஆண்டுவரவில்லை. மேலும் குத்புத்தீன் எப்போது சுதந்திரமடைந்தார் என்பதில் கருத்து வேறுபாடு

உண்டு. ஆனால் இல்டுட்மிஷைப் பொருத்தளவில் அவர் அரசராவதற்கு முன்பே சுதந்திரம் பெற்றுவிட்டார். பால்பன் சுதந்திரத்தைப் பெற்றுவிட்டாரா இல்லையா என்பதிலும் கருத்து வேறுபாடு தோன்றியுள்ளது. ஏனைய ஆறு அரசர்கள் அடிமைகளாக இருந்ததில்லை. அவ்வாறிருக்க அவர்களை அடிமை அரசர்கள் என்று கூறுவது பொருத்தமாகாதென்பது விளங்குகிறதல்லவா? அவர்களை மாமிலூக்குகள் என்று சிலர் அழைக்கின்றனர். மாமிலூக் எனவே சுதந்திரமான பெற்றோர்களுக்குப் பிறந்த அடிமை என்று பொருள். இதுவும் பொருத்தமானதாகத் தெரியவில்லை. ஏனெனில் அவர்களுள் பெரும்பாலோர் அடிமைகள் அல்லர். அவர்களைச் சிலர் இல்பாரிகள் என்று கூறுகின்றனர். இல்டுட்மிஷும் அவருடைய வழித்தோன்றல்களும் இல்பாரிகள் என்பதில் ஐயமில்லை. அய்பெக் இல்பாரி இனத்தைச் சார்ந்தவரல்லர். அவர் அய்பெக் இனத்தைச் சார்ந்தவர்.[1] பால்பன் தம்மை இல்பாரி என்று கூறிக்கொண்டார். ஆனால் அவரது வரலாற்றாசிரியரான மின்ஹாஜ் அதைப்பற்றி எழுதும்போது ஐயத்திற்கிடமற்ற வகையில் அவர் இல்பாரி இனத்தைச் சார்ந்தவர் என்று கூறவில்லை. பால்பன் தம்மைப் புராணகால அப்ரேசியாப்பினுடைய வழித்தோன்றல் என்று கூறிக்கொள்வதுண்டு. அதை நாம் எப்படி முற்றிலும் உண்மையென ஏற்றுக்கொள்வதில்லையோ அதே போன்று இதனையும் நாம் அப்படியே ஏற்றுக்கொள்ள இயலாது. ஆகவே இல்பாரிகள் என்று கூறும்போது அய்பெக்கையும், பால்பனையும், அவர்களுடைய சந்ததியார்களையும் இந்தத் தலைப்பின்கீழ் கொண்டுவர முடியாது. சிலர் அவர்களை பதானியர்கள் என்று குறிப்பிட்டுள்ளார்கள். குத்புத்தீன் அய்பெக் துருக்கிஸ்தானத்தில் துருக்கிய பெற்றோர்களுக்குப் பிறந்தார். இல்டுட்மிஷ் துருக்கிஸ்தானத்திலுள்ள இல்பாரி துருக்கிய இனத்தைச் சார்ந்தவர். பால்பனையும் சிலர் இல்பாரி துருக்கிய குடும்பத்தில் பிறந்ததாகக் கூறுகின்றனர். எனவே அவர்களைப் பதானியர்கள் என்று கூறுவது சரியாகாது. துருக்கியர்கள் என்று கூறுவதே மிகப் பொருத்தமாகும். கில்ஜிக்களும் துக்ளக்குகளும் துருக்கியர்களாகவே யிருந்தமையாலும் அவர்களுக்கும் அடிமை அரசர்களுக்கும் வேறுபாடுகள் இருந்தமையாலும் அவர்களை இவ்விரு சாராரிடமிருந்து பிரித்துக்கூறுவது அவசியமாகிறது. அடிமை அரசர்கள் முன்னாள் அடிமைகளின் துணையைக் கொண்டு ஆட்சி செய்ய முற்பட்டனர் என்பதை இங்கு அறிதல் அவசியமாகும். ஆகவே அவர்களை முந்திய

[1] ACHI P 204

துருக்கிய சுல்தான்கள் என்று கூறுகின்றனர். இதுவே மிகப் பொருத்தமாகத் தெரிகிறது.

**குத்புத்தீன் அய்பெக் : (கி.பி. 1206 – 10)**

டில்லி சுல்தானியத்தை நிறுவியவர் யார் என்ற கேள்விக்கு இருவிதமான விடைகளை வரலாற்றாசிரியர்கள் நமக்குத் தந்துள்ளனர். குத்புத்தீன் அய்பெக்தான் அதை நிறுவினார் என்று சிலர் கூறுகின்றனர். வேறுசிலர் அதனை நிறுவியது இல்டூட்மிஷ் என்கின்றனர். டில்லி சுல்தானியத்திற்கு அடிகோலியவர் குத்புத்தீன் என்ற கருத்தில் அடங்கியிருக்கும் உண்மையை அறிய வேண்டுமெனில் அவருடைய சாதனைகளைப்பற்றி முதலில் அறிந்து கொள்ளவேண்டும்.

**முந்தியவாழ்க்கை:** குத்புத்தீன், அய்பெக் என்ற துருக்கிய இனத்தைச் சார்ந்தவரென்றும், துருக்கிஸ்தானத்தில் பிறந்தவரென்றும் முன்பு கண்டோம். துருக்கிய மொழியில் 'அய்' என்பதற்கு 'சந்திரன்' என்றும், 'பெக்' என்பதற்கு 'அதிபதி' அல்லது தலைவர் என்றும் பொருள். குத்புத்தீன் அழகான தோற்றத்தைப் பெற்றிருக்கவில்லை என்றாலும் இந்த இனத்தைச் சார்ந்தவர்கள் அழகு மிக்கவர்களாக இருந்தமையால் அவர்கள் அய்பெக் என்று அழைக்கப்பட்டனர் என்பர் சிலர்.[1] அய்பெக் என்பது இனத்தைக் குறிக்கும் சொல் அல்ல என்றும் அது சாட்டுப் பெயர் என்றும் சிலர் கூறுகின்றனர். அய்பெக் என்பதற்கு 'பலமற்ற விரல்' என்று பொருள் என மேஜர் ராவெர்டி கூறுகிறார். குத்புத்தீனுடைய சுண்டுவிரல் உடைபட்டிருந்தமையால் அவருக்கு அய்பெக் அல்லது உடைந்த சுண்டு விரலையுடையவர் என்ற சாட்டுப் பெயர் அளிக்கப்பட்டது என்று பிரிஷ்டா கூறுகிறார். துருக்கிய மொழியில் அய்பெக் என்ற சொல்லுக்கும் விரலுக்கும் தொடர்பு இல்லை. எனவே அய்பெக் என்பது சாட்டுப் பெயரல்ல என்பது விளங்கும். அய்பெக் என்ற சொல் இனத்தைக் குறிக்கவில்லை; அது சாட்டுப் பெயரும் அன்று; அது ஒரு தனிமனிதரின் பெயர் என்று வேறு சிலர் கருதுகின்றனர்.[2] அய்பெக் என்ற பெயர் கொண்ட அடிமைகள் பலர் அக்காலத்தில் இருந்தனர்.[3] மற்றும் சிலர் அய்பெக் என்ற சொல் தனிச்சிறப்பான பண்பைக் குறிப்பதாகக் கருதுகின்றனர். அய்பெக் என்றால் நேசிக்கப்படுபவர்

[1] Minhaj, 137, ACH.I, 204

[2] Iswari Prasad, M.I., FN p. 147

[3] Ibid.

அல்லது வழிபாட்டுக்குரியவர் என்று பொருள் என்று ஹபீபி கூறுகின்ருர்.[1]

குழந்தைப் பருவத்திலேயே பிறந்த மண்ணிலிருந்து அவர் அப்புறப்படுத்தப் பட்டார். நைஷாபூரில் அவர் அடிமையாக விற்கப்பட்டார். இமாம் அபு ஹனிபாவின் வழித்தோன்றலான காஜி பக்ருத்தீன் அப்துல் அசீஸ் கூபி என்பவர் அவரை விலை கொடுத்து வாங்கினர், குத்புத்தீனுடைய முதல் ஆண்டையார் சமய நூல்களை நன்ருகக் கற்றிருந்தார். மேலும் கடவுள் பக்தி நிறைந்தவராகவும் இருந்தார். அவர் குத்புத்தீனை அன்பாக நடத்தினர், தம்முடைய சொந்த பிள்ளைகளுள் ஒருவராக அவரைக் கருதினர். வில்வித்தை, குதிரைசவாரி ஆகியவற்றை அவருக்குக் கற்றுக் கொடுக்க அவர் ஏற்பாடு செய்தார். அவர் கல்வியறிவு பெறுவதற்கான வாய்ப்புகளை ஏற்படுத்தித் தந்தார். விரைவில் குத்புத்தீன் எல்லாக் கலைகளிலும் தேர்ச்சி பெற்ருர். உரத்த குரலில் குரானை வாசிப்பதில் மிகச் சிறந்து விளங்கியமையால் 'குரான் குவான்,[2] (Quran Khuvan) என்ற சிறப்புப் பெயர் அவருக்களிக்கப்பட்டது. சில காலத்திற்குப் பிறகு காஜி அப்துல் அசீஸ் கூபியோ அல்லது அவரது பிள்ளைகளோ அவரை ஒரு அடிமை வியாபாரியிடம் விற்று விட்டனர். அவ்வியாபாரி அவரை கஜினிக்கு அழைத்து வந்து முயீஸ் உத்தீனுக்கு விற்று விட்டார். அவரது அறிவுக் கூர்மையும், தாராள மனப்பான்மையும் முயீஸ் உத்தீனை கவர்ந்துவிட்டன. ஒரு நாள் இரவு முயீஸ் உத்தீன் ஒரு விருந்திற்கு ஏற்பாடு செய்தார். அப்போது தமது அடிமைகளுக்குப் பல பரிசுகளை வழங்கினர். அய்பெக் தாம் பெற்ற பரிசுகள் அனைத்தையும் அரசவை ஊழியர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்து விட்டார். அதைக் கேள்வியுற்ற முயீஸ் உத்தீன் அய்பெக்கின் செய்கையைப் பாராட்டினர், அது முதல் அவரிடம் ஒரு தனிப்பட்ட அன்பைக் காட்டி வந்தார். தம்முடைய படையின் ஒரு பகுதிக்கு அவரைத் தலைவராக நியமித்தார். பின்னர் அவரை அக்காலத்தில் உயர்ந்த பதவிகளுள் ஒன்ருகக் கருதப் பட்ட அமீர். இ. அகூர் பதவியில் அமர்த்தினர். கோர், பாமியன், கஜினி ஆகியவற்றின் சுல்தான்களுக்கும் சுல்தான்ஷாவிற்கும் இடையே ஏற்பட்ட போரில் குதிரைகளை வைத்துப் பராமரிக்கும் பணி அய்பெக்கிற்கு அளிக்கப்பட்டது. ஒரு நாள் குதிரைகளுக்குத் தீனி தேடும் முயற்சியில் அவர் ஈடுபட்டிருந்த போது சுல்தான்ஷாவினுடைய படை வீரர்கள் அவரை

[1] Ibid vol. II, 428429.

[2] குரான் குவான் என்ருல் குரானை ஒப்புவிப்பவர் என்று பொருள்.

கைப்பற்றிக் கொண்டு சுல்தான்ஷாவின் முன்னிலையில் நிறுத்தினார்கள். சுல்தான்ஷா அவரை இரும்புக் கூண்டில் அடைத்துத் துன்புறுத்தினர். சுல்தான்ஷா இறுதியில் தோல்வியுற்றபோது அய்பெக் இரும்புக் கூண்டோடு முயீஸ் உத்தீனிடம் அழைத்துச் செல்லப்பட்டார். அய்பெக்கின் பரிதாப நிலையைக் கண்டு சுல்தான் வேதனைப் பட்டார். அவரைக் கூண்டிலிருந்து விடுவித்து அவருக்குப் பலவிதமான பரிசுகளை வழங்கினர். அதன் பிறகு அவர் வகித்து வந்த பொறுப்புகளைப் பற்றிய முழுவிவரங்கள் நமக்குக் கிடைக்கவில்லை. 1192ஆம் ஆண்டில் நடைபெற்ற தரெயின் போரில் அவர் முக்கியமான பங்கைப் பெற்றிருந்தார் என்பதை மட்டுமே நாம் அறிகிறோம். அது முதற்கொண்டு அவர் 1210ஆம் ஆண்டில் இறக்கும்வரை அவர் வாழ்நாளை பெரும்பாலும் இந்தியாவிலேயே செலவிட்டிருந்தார்.

இந்தியாவில் அய்பெக்:

அவர் இந்தியாவில் வாழ்ந்த நாள்களை மூன்று முக்கிய கட்டங்களாகப் பிரிக்கலாம். முதல் கட்டத்திலேயே (1192-1206) அவரது அரசியல் வாழ்க்கை தொடங்கிவிட்டது. முயீஸ் உத்தீனுடைய சார்பில் வட இந்தியாவின் சில பகுதிகளை ஆண்டு வரும் வாய்ப்பை இக்காலத்தில்தான் அவர் பெற்றார். அப்போது தம் நேரத்தைப் போர் புரிவதிலேயே அதிகமாக அவர் செலவழித்தார். அவரது வாழ்க்கையின் இரண்டாவது கட்டம் 1206-ல் தொடங்கி 1208-ல் முடிவுறுகிறது. அப்போது அவர் மலிக்கு, சிபா சாலார் என்ற பட்டங்களுடன் டில்லி, லாகூர் ஆகியவற்றின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்த முயீஸ் உத்தீன் இந்தியாவில் வென்ற நிலப்பகுதிகளை ஆட்சி செய்யும் பொறுப்பு அவருக்கிருந்தது. அப்போது முழு அதிகாரம் பெற்ற அரசராக அவர் மதிக்கப் படவில்லை என்பது உண்மையே. ஆயினும் நடைமுறையில் அவர் முழு அதிகாரத்தையும் செலுத்தி வந்தார் என்று கூறுவது தவறாகாது. இக்காலப் பகுதியில் அரசியல் தந்திரங்களைக் கையாளுவதில் தம் முழு திறத்தை அவர் காட்டி வந்தார். மூன்றாவது கட்டம் 1208ஆம் ஆண்டில் தொடங்கி 1210ஆம் ஆண்டில் முடிவுறுகிறது. அப்போது முழுச்சுதந்திரம் பெற்ற இந்திய அரசு ஒன்றிற்கு முழு அதிகாரம் பெற்ற அரசராக அவர் இயங்கி வந்தார். டில்லி சுல்தானியத்தினுடைய ஆதிக்க எல்லையை வரையறுப்பதில் அவர் கவனத்தைச் செலுத்தி வந்தார். இனி இம்மூன்று கட்டங்களிலும் அவர் அடைந்த வெற்றிகளின் அருமை பெருமைகளைப் பற்றி ஆராய்வோம்.

**முதற்கட்டம் (1192-1206)**

முயீஸ் உத்தீனுடைய முதல் இந்தியப் படையெடுப்பு 1175ஆம் ஆண்டில் தொடங்கியது என்றும் அது முதற்கொண்டு அவ்வப்போது இந்தியப் படையெடுப்பை மேற்கொண்டு வந்தார் என்றும் கி. பி. 1192ஆம் ஆண்டில் மாபெரும் படையெடுப்பு ஒன்றினுக்கு அவர் ஏற்பாடு செய்திருந்தார் என்றும் கவனித்தோம். அதுவரை நடந்த படையெடுப்புகளில் குத்புத்தீன் எந்தெந்த வகையில் முயீஸ் உத்தீனுக்கு உதவி புரிந்தார் என்பதை நாம் அறிவதற்கில்லை; கி.பி. 1192ஆம் ஆண்டில் இரண்டாவது தரெயின் போரில் குத்புத்தீன் ஒரு முக்கிய பங்கை வகித்திருந்தார். முயீஸ் உத்தீனுக்கு அருகில் இருந்து கொண்டு படைகளை வகுத்து அமைக்கும் பணியினை மேற்கொண்டிருந்தார். போர் முடிந்த பிறகு ஹான்சி, சர்சுதி உட்பட கிவாலிக் பகுதி முழுவதையும் முயீஸ் உத்தீன் தம் நாட்டோடு சேர்த்துக் கொண்டார். முயீஸ் உத்தீன் தம் தலைநகர் திரும்புவதற்கு முன்பு குத்புத்தீனை கூரம் (Khuram) பகுதிக்கு அதிபராக நியமித்தார்.

கூரம் பகுதியின் ஆட்சிப் பொறுப்பாளர் என்ற முறையில் அவர் பல போர் நடவடிக்கைகளை முயீஸ் உத்தீனுடைய சார்பில் மேற்கொள்ள வேண்டியதாக இருந்தது. அவற்றுள் முக்கியமானது ஆஜ்மீர் படையெடுப்பாகும். இரண்டாவது தரெயின் போர் முடிவுற்ற உடனேயே பிருத்வி ராஜா கொல்லப்படவில்லை என்றும், அவரை மீண்டும் ஆஜ்மீருக்கு அரசராக முயீஸ் உத்தீன் நியமித்தார் என்றும் முன்னர் கண்டோம். முயீஸ் உத்தீனுக்கு துரோகம் நினைத்தமையால் குத்புத்தீன் அய்பெக் அவரைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டு பிறகு கொன்றுவிட்டார். ஆஜ்மீரை முயீஸ் உத்தீனுடைய அரசோடு மீண்டும் இணைக்க ஒரு சந்தர்ப்பம் ஏற்பட்டபோதிலும் குத்புத்தீன் அவ்வாறு செய்ய முற்படவில்லை. பிருத்வி ராஜாவினுடைய மகனை ஆஜ்மீருக்கு அரசராக்கினார். அதற்குப் பதிலாக ஆஜ்மீர் அரசர் முயீஸ் உத்தீனுக்குக் கீழ்ப்படிந்து நடக்கவும் கப்பம் செலுத்தவும் ஒப்புக் கொண்டார்[1]. இதைச் சௌஹான்கள் விரும்பவில்லை. எனவே ஆஜ்மீர் அரசருக்கு எதிராக கிளர்ச்சி செய்து அவரைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டார்கள். இந்தக் கிளர்ச்சிக்கு தலைமை தாங்கியவர் பிருத்வி ராஜாவினுடைய சகோதரன் ஹரி ராஜா என்பவ

[1] அவர் பெயர் கோலா (Gola or Kola) என்றும் அவர் பிருத்வி ராஜாவினுடைய சட்டப்படியல்லாத மகன் என்றும் பிரிஷ்டா கூறியுள்ளார் (Briggs, I, p. 178). பிருத்வி ராஜாவிற்கு கோலா என்ற சட்டப்படியல்லாது மகன் ஒருவர் இருந்ததாக தாஜ் உல் மாசீர் கூறுகிறது (Elliot, II, p. 214)

ராவர்.[1] ஆஜ்மீரைக் கைப்பற்றிய பிறகு அவர் இரண்தம்பார் கோட்டையை முற்றுகையிட்டார்.[2] அப்போது அக்கோட்டை கவாமுல் முல்க்கின் பொறுப்பில் விடப்பட்டு இருந்தது. செய்தியை அறிந்ததும் குத்புத்தீன் கோட்டையைக் காப்பாற்ற இரண்தம்பாருக்கு விரைந்தார். குத்புத்தீனுடன் போரிட்டு வெற்றி கொள்வது இயலாது என்றறிந்த ஹரி ராஜா இரண்தம் பாரிலிருந்து திரும்பிவிட்டார். அதுமட்டுமன்றி ஆஜ்மீரையும் கைவிட்டார். ஆகவே பிருத்வி ராஜாவின் மகனை மீண்டும் ஆஜ்மீர் அரசராக்குவது குத்புத்தீனுக்கு எளிதாகிவிட்டது.

ஆயினும் ஹரி ராஜா முற்றிலும் ஒடுக்கப்படவில்லை. அதற்குள்ளாக குத்புத்தீன் உடனடியாகப் புறப்பட்டு கஜினியை வந்தடைய வேண்டும் என்று ஒரு கட்டளை முயீஸ் உத்தீனிடமிருந்து வந்தது. இதற்குக் காரணம் யாதென்பதை மின்ஹாஜ் நமக்குக் கூறவில்லை யெனினும் இசாமி அதைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளார். குத்புத்தீனுடைய எதிரிகள் முயீஸ் உத்தீனிடம் அவரைப் பற்றி இல்லாததும் பொல்லாததும் கூறி சுல்தானுடைய மனத்தை மாற்றிவிட்டனர். குத்புத்தீனுடைய அரசப்பற்றில் சுல்தான் சந்தேகம் கொள்ளும்படி அவருக்குத் தூபம் போட்டார்கள். அவர்களுடைய ஐயத்தைப் போக்குவதற்காக குத்புத்தீனை கஜினிக்கு வரவழைத்தார் என்று இசாமி கூறியுள்ளார். உண்மையான காரணம் அதுவல்ல. இந்தியாவில் முயீஸ் உத்தீனுடைய ஆட்சியை விரிவு படுத்துவதற்கான திட்டங்களைப் பற்றிக் கலந்து ஆலோசிக்கவே அவர் கஜினி வருமாறு கட்டளையிட்டார். கஜினி ஆறு மாதங்கள் தங்கியபின் குத்புத்தீன் மீண்டும் இந்தியாவில் வந்தார்.[3]

குத்புத்தீன் இந்தியாவில் இல்லாதபோது ஹரி ராஜா துருக்கியர்களுடன் போரிடுவதற்கான ஏற்பாடுகளை மீண்டும் செய்யத் தொடங்கினார். பிருத்வி ராஜாவினுடைய மகனை மீண்டும் ஆஜ்மீர் அரியணையில் இருந்து நீக்கிவிட்டு தாமே அரசரானார். அதையடுத்து டில்லியைக் கைப்பற்றுவதற்காகப் படை திரட்டினார். டில்லியைத் தாக்கும் பணியினை ஜத்ராய் (Jhat Rai) என்பவரிடத்தில் அவர் ஒப்படைத்தார். செய்தியைக் கேள்வியுற்றதும் காலதாமதம் செய்யாமல் குத்புத்தீன் பகைவரை டில்லிக்கு வராமல் தடுத்து நிறுத்துவதற்காக படையுடன் புறப்பட்டார். இந்தமாதிரியான உடனடியான நடவடிக்கைகளை குத்புத்தீன்

[1] Taj-ul Ma'asier, (Elliot II, p. 219.)

[2] *Ibid*.

[3] ACHI, Vol. V, p 168.

மேற்கொள்ளுவார் என்று ஹரி ராஜா எண்ணவில்லை. எனவே குத்புத்தீனுடைய போர் ஏற்பாடுகள் ஹரி ராஜாவையும், ஜத் ராயையும் கதிகலங்கச் செய்தன. ஹரி ராஜா தீ மூட்டி அதில் குதித்து உயிரிழந்தார். ஜத் ராய் ஆஜ்மீரில் புகலிடம் தேடினார். குத்புத்தீன் ஆஜ்மீருக்குச் சென்று அதனை முஸ்லிம் களின் ஆட்சியின் கீழ் கொண்டு வருதற்கான ஏற்பாடுகளைச் செய் தார். பிருத்வி ராஜாவினுடைய மகனை இரண்தம்பாருக்கு அனுப்பி அக்கோட்டையை நிருவகித்து வரும் பணியினை அவருக் களித்தார். ஆஜ்மீரில் முஸ்லிம் அதிகாரி ஒருவரை நியமித்து அதனுடைய நிருவாகப் பொறுப்பை அவரிடம் ஒப்படைத்தார்.

சில மாதங்களுக்குப் பிறகு ஆஜ்மீரில் ஏற்படுத்தப்பட்ட துருக்கிய ஆட்சியை ஒழிக்க மற்றொரு முயற்சியை இராஜ புத்திரர்கள் மேற்கொண்டனர். ஆஜ்மீருக்கு அருகே வாழ்ந்து வந்த 'மேர்கள்' (Mhers) அந்த முயற்சியில் பெரும் பங்கு வகித்திருந்தார்கள். அவர்கள் கலகம் செய்து ஆஜ்மீரை முற்றுகையிட்டார்கள். மேர்கள் சாளுக்கியருடன் நட்புறவு கொண்டு அவர்களுடைய ஆதரவைப் பெற்று விட்டமையால் ஆஜ்மீரில் இருந்த துருக்கியர்கள் மிகவும் சிரமப்பட்டனர். அதையறிந்ததும் குத்புத்தீன் மீண்டும் ஆஜ்மீருக்குப் படையுடன் புறப்பட்டுச் சென்றார். நிலைமை மிகவும் மோசமாகி விட்டமையால் அவர் டில்லிக்கு மீளவேண்டியதாயிற்று. இந்தச் செய்தியை அறிந்ததும் இராஜபுத்திரர்கள் முன்புவிட அதிகமான உற்சாகத்துடன் போரிடலானார்கள். தம்மைச் சூழ்ந்திருந்த பேராபத்திலிருந்து தப்பிக்க இயலாது தவித்துக் கொண்டிருந்த நேரத்தில் கஜினியிலிருந்து உதவிப் படைகள் வந்து சேர்ந்தன. அவற்றின் துணை கொண்டு குத்புத்தீன் இராஜபுத்திரர்களை பின்னடையச் செய்தார். அதன் பிறகு ஆஜ்மீரில் அமைக்கப்பட்ட முஸ்லிம் ஆட்சிக்கு ஆபத்து ஏதும் ஏற்படவில்லை. ஆஜ்மீரை நிரந்தரமாக முஸ்லிம்களுடைய ஆதிக்கத்திற்குட்படுத்தியது அவரது சாதனைகளுள் ஒன்றாகும்.

### (ii) ஹான்சியில் முஸ்லிம் ஆட்சியை மீண்டும் நிலைநிறுத்தல் (1192)

இரண்டாவது தரெயின் சண்டைக்குப் பிறகு ஜத்வான் ஹான்சியை முற்றுகையிட்டு அதனை முஸ்லிம்களின் பிடியிலிருந்து விடுவிக்க முயற்சித்தார். குத்புத்தீன் உடனே ஹான்சிக்குப் புறப்பட்டுச் சென்று ஜத்வானைப் பின்வாங்கும்படிச் செய்தார். அவரை மேற்கு இராஜபுதனத்திலுள்ள பாகர் (Bagar) வரை துரத்திச் சென்று அங்கு அவரைத் தம்முடன் போர் செய்யுமாறு

வற்புறுத்தினர். அப்போரில் ஜத்வான் வீரமரண மடைந்தார். ஹான்சி மீண்டும் துருக்கியப் படைகளின் வசமாயிற்று.

(iii) மேற்கு தோவாப் பகுதியில் முஸ்லிம்களின் படை நிலைகள் அமைத்தல் (1192).

மேற்கு தோவாப்பில் தோர் (Dor) இராஜபுத்திரர்கள் செல்வாக்குப் பெற்றிருந்தனர். அதை யொழித்து அங்கு முஸ்லிம் படை நிலைகளை அமைக்க முயற்சி மேற்கொண்டார். முதலில் அவர் மீரத்தைக் கைப்பற்றினர். அடுத்தபடியாக பரன் என்னுமிடத்தைத் தாக்கி அதைத் தம் வயப்படுத்தினர். மீரத்தும் பரனும் போர்த்திற நடவடிக்கைகளுக்கு மிகவும் பயன்படுத்தத்தக்கனவாக அமைந்திருந்தன. அவ்விரு நகரங்களில் இருந்து கொண்டு காஹதவாலா அரசைத் தாக்குவது எளிதாகி விட்டது. அதன் பின்னர் டில்லியைக் கைப்பற்றினர். டில்லி நகரமும் போர்த்திற நடவடிக்கைகளை வெற்றிகரமாக மேற்கொள்ளுவதற்கு வேண்டிய வகையில் அமைந்திருப்பதை குத்புத்தீன் உணர்ந்தார். அதாவது தம் படைகளைப் பகைவரிடமிருந்து காப்பாற்றுவதற்கும், பிறநாடுகளைத் தாக்குவதற்கும் டில்லி நகரத்தின் அமைப்பு மிகவும் உதவியாக இருக்கும் என்பதை அவர் அறிந்தார். சமயம் நேரும் போது பஞ்சாபில் கோரியின் படைகள் நிறுத்தப்பட்டிருந்த கோட்டைகளுடன் தொடர்பு கொள்வதற்கும், இராஜபுத்திர அரசுகளுடன் வெற்றிகரமான படையெடுப்புகளை மேற்கொள்ளுவதற்கும் டில்லியே சிறந்த இடமாக அவருக்குத் தோன்றியது. டில்லியை ஆண்டு வந்த தோமாரா அரசர் முயீஸ் உத்தீனுக்கு துரோகம் இழைக்கும் வகையில் நடந்து கொண்டார் என்ற காரணங்காட்டி அவரை அரசபதவியிலிருந்து நீக்கி விட்டு டில்லியைக் கைப்பற்றிக் கொண்டார்.[1] 1193ஆம் ஆண்டில் டில்லியை அவர் வென்றிருக்க வேண்டும்.[2] 1194 ஆம் ஆண்டில் குத்புத்தீன் அய்பெக் கோல் (Kol) என்னுமிடத்தையும் வென்றார்.[3]

[1] ACHI, P, 167-68

[2] இபின்பாதுதா 1188-ல் டில்லி கைப்பற்றப்பட்டதாக கூறியுள்ளார் (Parrised, II P. 161). அய்பெக் டில்லியைக் கைப்பற்றிய 20 ஆண்டுகளுக்குப் பிறகு இறந்தார் என்று மின்ஹாஜ் கூறுகிறார். அவர் 607 A. H.-ல் இருந்ததாகக் கூறியுள்ளார். அவ்வாறெனின் 587 A. H.-ல் (1191-92) டில்லியைக் கைப்பற்றியிருத்தல் வேண்டும். (Major Raverty, Taleaqat i Masiri i pp 469, 528) தரையின் போருக்குப் பின்னரே டில்லி கைப்பற்றப்பட்டது என்று தபகாத் இ. நாசிரி கூறுகிறது. தரெயின் போர் 588 A. H.-ல் நடந்தது. (1192-93) அதே ஆண்டில் கோரி முகமது அய்பெக்கை இந்துஸ்தானத்தில் தமது முக்கிய படைத் தலைவராக நியமித்தார். அதன் பிறகு அவர் டில்லியைக் கைப்பற்றினர். ஆகவே பிரிஷ்டா 589 A.H,-ல் கைப்பற்றப்பட்டதாகக் கூறியுள்ளார். (1193). எனவே 1193 என்பது தான் சரியான தேதியாகும். (ACHI. p. 168,)

[3] தற்போது இது அலிகார் என்று அழைக்கப்படுகிறது.

(iv) **கன்னோசி படையெடுப்பு** : டில்லியும், ஆஜ்மீரும் முஸ்லிம்களின் ஆதிக்கத்தின் கீழ்கொண்டு வரப்பட்டது. சௌஹான்களின் ஆட்சி அழிக்கப்பட்டது. ஆயினும் முஸ்லிம்கள் இந்துஸ்தானத்தின் அதிபர்களாக இன்னும் விளங்கவில்லை. தோவாவின் நடுப்பாகத்தில் காஹதவாலாக்கள் வலிமைமிக்கு விளங்கியிருந்தனர். அவர்களுடைய அரசர் ஜெயசந்திரா அக்காலத்தில் மிகப்பலம் பொருந்திய அரசராகக் கருதப்பட்டார். அவருடைய அரசு கிழக்கே காசிவரை பரவியிருந்தது. முஸ்லிம்களுடைய ஆதிக்கம் இந்துஸ்தானத்தில் ஏற்படுத்த வேண்டுமெனில் காஹதவாலாக்களை அழிக்க வேண்டுவது அவசியமென முயீஸ் உத்தீன் கருதினார். காஹதவாலாக்கள் பலம் பொருந்தியவர்களாக இருந்தமையாலும் அவர்களுடைய தலைநகரம் போர்த்திற நடவடிக்கைகளுக்கு உகந்த முறையில் இருந்தமையாலும் முன்னேற்பாடுகள் அதிகளவில் மேற்கொள்ள வேண்டியதாக இருந்தது. முயீஸ் உத்தீன் டில்லியை அடைந்த பிறகும்கூட படைக்கு ஆள் திரட்டும் பணியினை நிறுத்தவில்லை. 50,000 குதிரை வீரர்களைக் கொண்ட படையுடன் முயீஸ் உத்தீன் கன்னோசியை நோக்கிப் புறப்பட்டார். குத்புத்தீன் அய்பெக்கும், இஸ்உத்தீன் ஹுசெயினும் முன்னணிப் படைத் தலைவர்களாக நியமிக்கப் பட்டனர். செய்தியை அறிந்த ஜெயச்சந்திரா 300 யானைகளுடன் கூடிய ஒரு பெரும்படையுடன் பகைவரைப் போர்க்களத்தில் எதிர் கொள்ளப் புறப்பட்டார். சநதாவர் என்னுமிடத்தில் போர் நடந்தது.[1] போரில் ஜெயச்சந்திரா தோல்வியுற்றார். குத்புத்தீனும், இஸ்உத்தீனும் நடத்தி வந்த முன்னணிப் படைகளே முஸ்லிம்களுக்கு வெற்றியைத் தேடித்தர போதுமானதாக இருந்தன. ஜெயச்சந்திரா போரில் கொல்லப் பட்டார். அதன் பிறகு முயீஸ் உத்தீனுடைய படைகள் அஸ்னி (Asni) கோட்டையைத் தாக்கி அங்கு காஹதவாலா அரசர் சேமித்து வைத்தச் செல்வத்தைக் கைப்பற்றினர். அதன் பிறகு காசியைத் தாக்கினார்கள். காசியில் ஏறக்குறைய 1,000 கோயில்களை அழித்து அங்கு மசூதிகளைக் கட்டுவித்தார்கள். பல இந்து அரசர்கள் முயீஸ் உத்தீனுக்குப் பயந்து கப்பம் செலுத்திவர ஒப்புக் கொண்டனர். சுல்தானுடைய பெயரில் நாணயங்கள் வெளியிடப்பட்டன. காஹதவாலாக்கள் பலர் தோவாப் பகுதியை விட்டு இராஜபுதனத்திற்குச் சென்று அங்குள்ள ஜோதிபுரியில் ராதோர்கள் ஆட்சியை நிறுவினார்கள். முயீஸ் உத்தீன் பனாரஸிலும் அஸ்னியிலும் தம்படைகளை நிறுத்தினார். கன்னோசி தொடர்ந்து

1 சந்தாவர் கிராமம் ஆக்ரா மாவட்டத்திலுள்ள பிரூஸா பாத் என்னுமிடத்திற் கருகேயுள்ளது. Iwari Prasad, Medieaval India, FN. P. 138 பிரூஸாபாத்தும் சந்தாவரும் ஒன்றே என்று கேம்பிரிட்ஜ் இந்தியவரலாறு கூறுகிறது. (III. p. 43).

காஹுதவாலாக்களின் ஆதிக்கத்தின் கீழ் இருந்து வந்தது. 1198-99ஆம் ஆண்டில்தான் அது முஸ்லிம் அரசுடன் இணைக்கப் பட்டது. சிறிது காலத்திற்குப் பிறகு அது சுதந்திரம் அடைந்து விட்டது.

**அன்ஹில் வாரா படையெடுப்பு :** ஆஜ்மீரில் மேர்களுடைய கலகத்தைப் பற்றியும் அதைக் குத்புத்தீன் எவ்வாறு அடக்கினார் என்பதைப் பற்றியும் முன்பு கண்டோம். ஆஜ்மீரில் மீண்டும் தம் ஆதிக்கத்தை ஏற்படுத்தி விட்டபிறகு, அங்கிருந்து அன்ஹில் வாராவை நோக்கிப் புறப்பட்டார். சாளுக்கியப் படைகளை நெஹர்வாலா என்னுமிடத்தில் தோற்கடித்தார். சாளுக்கிய அரசர் இரண்டாவது பீமா அன்ஹில்வாராவை விட்டு ஓடினார். பல தலைவர்கள் கைது செய்யப் பட்டனர். ஏறக்குறைய 50,000 இந்துக்கள் கொல்லப்பட்டனர். அன்ஹில் வாராவைக் கொள்ளை யிட்டு 20,000 அடிமைகளையும், 20 யானைகளையும், கணக்கிட முடியாத கால்நடைகளையும், போர்க்கருவிகளையும் கைப்பற்றிக் கொண்டு டில்லி திரும்பினார். அன்ஹில் வாராவில் துருக்கிய ஆட்சியை நிலைநிறுத்துவதற்காக ஒரு முஸ்லிம் அதிகாரியை அங்கு நியமித்தார் என்று பிரிஷ்டா கூறுகிறார். ஆனால் விரைவில் அன்ஹில் வாராவில் குத்புத்தீன் விட்டுச் சென்ற துருக்கியர்கள் விரட்டப்பட்டனர் என்று சாளுக்கிய கல்வெட்டுகள் கூறுகின்றன. 1197-98-ல் குத்புத்தீன் அய்பெக் பதோனைக் கைப்பற்றினார். அதன் பின்னர் தம் கவனத்தை இராஜபுதனத்திற்குத் திருப்பினார். அங்குள்ள சிரோ (Siroh) என்னுமிடத்தைக் கைப்பற்றினார். 1199-1200-ல் மாளவத்தை வென்றதாக பக்கர்-இ-முதாபீர் கூறியுள்ளார். மாளவப் படையெடுப்பைப் பற்றி வேறு வரலாற்றாசிரியர்கள் எவரும் குறிப்பிடவில்லை. எனவே அப் படையெடுப்பு நிரந்தரமான விளைவுகளை உண்டாக்கவில்லை என்பது விளங்கும்.

கி. பி. 1202ஆம் ஆண்டில் காலஞ்சார் மீது அய்பெக் போர் தொடுத்தார். காலஞ்சார் அப்போது சந்தேலர்கள் கைவச மிருந்தது. அப்போது பரமர்திதேவா என்பவர் அதனை ஆண்டுவந்தார். காலஞ்சார் முற்றுகை சிலகாலம் நீடித்து வந்தது. முற்றுகையினால் ஏற்பட்ட தீங்குகளைச் சமாளிக்க இயலாமல் பரமர்திதேவா அய்பெக்குவிடம் தூது அனுப்பி சமாதானப் பேச்சுகளைத் தொடங்கினார். அவ்விரு சாராரும் உடன்பாடு செய்து கொள்வதற்கு முன் பரமர்திதேவா இறந்து விட்டார். அவரது பிரதான மந்திரியான அஜயதேவா சமாதானப் பேச்சை நிறுத்திவிட்டு மீண்டும் போர்க் கொடியை உயர்த்தினார். கோட்டைக்குள் இருப்பவர்களுக்கு குடிநீர்

போகாவண்ணம் தடைசெய்து அஜயதேவாவைப் பணிய வைத்தார். காலஞ்சார் கோட்டையை குத்புத்தீனிடம் ஒப்படைத்து விட்டு சந்தேலர்கள் அஜாய்கர் கோட்டைக்குச் சென்றுவிட்டனர். காலஞ்சாரிலிருந்த கோயில்கள் அழிக்கப் பட்டன. 50,000 பேர்கள் அடிமைகளாக்கப் பட்டனர் அதன் பிறகு அய்பெக் மஹோபா சென்று அதனையும் எளிதில் வென்றார். அதையடுத்து கஜுரா ஹோவைக் கைப்பற்றினார்.

குவாலியரும் குத்புத்தீனிடம் சரண் புகுந்தது. குவாலியரை குத்புத்தீன் எதிர்பாராத விதமாகப் பெற்றார். அதைப் பற்றிச் சிறிது கவனிப்பது அவசியமாகும். 1195-96ஆம் ஆண்டில் முயீஸ் உத்தீன் மீண்டும் இந்தியா வந்தார். அப்போது அவர் பயானாவைத் தாக்கினார். பயானாவை ஆண்டு வந்த குமாரபாலா என்ற இராஜபுத்திரர் தலைநகரைவிட்டு நீங்கி தங்கர் (Thankar) என்ற இடத்திற்குச் சென்று அங்கு அகழ்களைத் தோண்டி அவற்றில் இருந்து கொண்டு போர் புரிய முற்பட்டார். இறுதியில் அவர் சரணடைய வேண்டியதாயிற்று. தங்கரும் விஜய மந்திர்காரும் முஸ்லிம்களின் ஆதிக்கத்திற்குட்படுத்தப்பட்டன. அவற்றைப் யஹாஉத்தீன் துக்ரீல் என்பவரிடம் ஒப்படைத்து விட்டு முயீஸ் உத்தீன் குவாலியர் மீது போர் தொடுத்தார். அப்போது பரிஹார அரசகுலத்தைச் சார்ந்த சல்லகான பாலா என்பவர் குவாலியரை ஆண்டு வந்தார். குவாலியர் அரசர், முயீஸ் உத்தீனுடைய மேலாதிக்கத்தை ஏற்றுக் கொண்டார். ஆகவே, அதனை வென்று தம்முடைய ஆட்சிப் பகுதிகளுடன் இணைக்காமல் முயீஸ் உத்தீன் தம் தலை நகருக்குத் திரும்பிவிட்டார். அவர் முடிக்காது விட்டுச்சென்ற பணியினைத் தாம் முடித்துவிட துக்ரீல் எண்ணினார். சுல்தான் முயீஸ் உத்தீனுடைய மிகச் சிறந்த அடிமைகளுள் துக்ரீல் ஒருவராவார். தம்முடைய திறமையின் துணைகொண்டு படிப்படியாக உயர்ந்து சுல்தானுடைய மதிப்பைப் பெற்றுவிட்டவர்களுள் அவரும் ஒருவர். தங்கரை ஆளும் பொறுப்பு அவருக்களிக்கப்பட்டபோது அதனை எல்லா வகையிலும் முன்னேற்றம் அடையச் செய்வதற்காக பெரும் முயற்சி எடுத்துக்கொண்டார், முஸ்லிம்கள் பலர் அங்கு வந்து குடியேறுவதற்காக அவர்களுக்குப் பல சலுகைகளைக் காட்டினார். அவர்களுக்கு வீடுகள் அமைத்துக் கொடுத்தார். கோராசானிலிருந்தும் இந்துஸ்தானத்திலிருந்தும் வியாபாரிகள் அங்கு தங்குவதற்காக வீடுகளுடன் பொருள்களையும் கொடுத்தார். புதிதாக வந்து குடியேறிய முஸ்லீம்களுக்கு அந்த இடம் சௌகரியமாகத் தோன்றவில்லை. ஆகவே சுல்தான்கோட் என்ற புதிய பயானாவில் அமைத்து, அதனைத் தமது தலைமையிடமாக்கினார்.

அங்கிருந்துகொண்டு குவாலியரைத் தாக்கிக் கைப்பற்றுவது எளிதான செயலாகக் காணப்பட்டமையால் குவாலியர்மீது போர் தொடுக்க முற்பட்டார். அதற்காக பலத்த முன்னேற்பாடு களைச் செய்தார். குவாலியர் கோட்டைக்கு முன் புதியதொரு கோட்டையைத் துக்ரீல் கட்டினார். குவாலியர் கோட்டையைத் தாக்க முற்படும்போது இரவு வேளைகளில் தம்முடைய படை களுக்குத் தக்க பாதுகாப்பளிக்க வேண்டும் என்பதற்காக இக் கோட்டை கட்டப்பட்டது. எல்லாவித ஏற்பாடுகளையும் செய்து முடித்தபின்னர் துக்ரீல் குவாலியரை முற்றுகையிட்டார். கோட்டைக்குள் இருந்தவர்கள் முற்றுகையின் காரணமாக இன்னல்கள் பல அனுபவித்தனர். மேலும் முற்றுகையைப் பொறுக்க இயலாது என்ற நிலை ஏற்பட்டபோது அவர்கள் துக்ரீலிடம் சரண் புகுவதற்குப் பதிலாக தூதுவர்களைக் குத்புத்தீன் அய்பெக்கிடம் அனுப்பி கோட்டையை அவரிடம் கி.பி. 1200-ல் ஒப்படைத்துவிட்டனர்.[1] அதன் விளைவாக துக்ரீலுக்கும், குத்புத்தீனுக்கும் இடையே ஏற்கனவே ஏற்பட்டிருந்த பகைமை மேலும் வளரலாயிற்று. இருவரும் போருக்கு ஆயத்தமானார்கள் என்று பிரிஷ்டா கூறுகின்றார்.[2] துக்ரீலின் திடீர் மரணம் குத்புத்தீனுக்கு ஏற்படவிருந்த ஆபத்தை நீக்கிவிட்டது. குவாலியர் குத்புத்தீனுடைய அதிகாரத்திற்குட்பட்டது.

குத்புத்தீன் டில்லியில் ஆதிக்கம் செலுத்திவந்தபோது முயீஸ் உத்தீனுடைய மற்றொரு படைத் தலைவர், முகமது பக்தியார் கல்ஜி, இந்தியாவின் கிழக்குப் பகுதியை வெல்லும் முயற்சியில் ஈடுபட்டிருந்தார். மலிக் இஸ்உத்தீன் பக்தியார் கல்ஜி கர்ம்சீரைச் (Garmsir) சார்ந்தவர். வேலை தேடி கஜினி வந்தார். மிகவும் அடக்கமான தோற்றத்தைக் கண்ட படை அமைச்சரவைத் தலைவர் குறைந்த சம்பளத்தில் அவரை வேலைக்கு அமர்த்திக் கொள்ள விருப்பம் தெரிவித்தார். குறைவான சம்பளத்திற்கு வேலை செய்ய விரும்பாமல் அவர் இந்துஸ்தானம் வந்தார். டில்லியிலும் அவருக்கு வேலை கிடைக்கவில்லை. அவரது அழகற்ற தோற்றமே அதற்கு முக்கிய காரணமாக இருந்தது. டில்லியிலிருந்து புறப்பட்டு அவர் பதோனை அடைந்தார். பதோனின் முக்தாவாக பணிபுரிந்து வந்த ஹிசாப்ருத்தீன் ஹசன் அதீப் அவரை வேலைக்கமர்த்திக் கொண்டார்.[3] பக்தியார் கல்ஜி

[1] Tarikh-i-Fakruddin Mubarak Shai, 24. இந்நிகழ்ச்சிக்கு முயீஸ் உத்தீன் இறப்பதற்குச் சற்று முன்போ அல்லது பின்போ ஏற்பட்டிருக்க வேண்டும் என்று ராவெர்டி கருதுகிறார்.

[2] I, 64

[3] Talaqat-i-Masiri, 145

ஜிதூரைச் (Jitur) சார்ந்த ஜெய்சிங்காவிடம்தான் முதல்முதலில் வேலைக்கமர்ந்தார் என்று இசாமி கூறுகிறார்.[1] இராஜபுத்திரப் படைகளில் ஆப்கானியர்கள் பலர் சேர்ந்து போரிட்டனர் என்பதற்குச் சான்றுகள் நமக்குக் கிடைத்திருப்பினும் இசாமியின் கருத்தினை நாம் ஏற்கும் அளவிற்குச் சான்றுகள் நமக்குக் கிடைக்க வில்லை. பக்தியார் கல்ஜி போர்த்திறமையில் புகழ்பெற்ற குடும் பத்திலே பிறந்தார். அவருடைய தந்தையின் உடன் பிறந்தவ ரான முகமது பின் மாமூத் இரண்டாவது தரெயின் போரில் வீரத்துடன் போரிட்டு அலீநாகோரின் கவனத்தை ஈர்த்து விட்டார். நாகோர், இக்தா அலி நாகோரிக்கு அளிக்கப்பட்ட போது அவர் முகமது பின் மாமூத்தை கூடவே அழைத்துச் சென்று அவருக்கு கஷ்மண்டி இக்தாவை அளித்தார். அவர் இறந்த பிறகு அதனை பக்தியார் கல்ஜிக்கு வழங்கினார். அங்கு பக்தியார் கல்ஜி வெகுநாள் தங்கியிருக்கவில்லை. அதன் பின்னர் அவுத்திற்குச் சென்று அங்கு மலிக் ஹுசாமுத்தீன் அகுல் பெக்கைச் (Husamuddin Aghul Beg) சந்தித்தார். பக்தியார் கல்ஜின் வீரத்தை உணர்ந்து அவருக்கு பக்வத், பியூலி (Bhiuli) ஆகிய இக்தாக்களைக் கொடுத்தார். அங்கிருந்துகொண்டு அவர் பக்கத்திலிருந்த நாடுகளைத் தாக்கி வந்தார். அங்கிருந்த காஹதவால தலைவர்களை அடக்கினார். மானர், பீகார் ஆகிய பகுதிகளில் படை நடத்திச் சென்று ஏராளமான பொருள்களைக் கொள்ளையடித்து வந்தார். அப்பொருள்களைப் பயன்படுத்தி மேலும் பல போர் நடவடிக்கைகளை மேற்கொண்டு வந்தார். அவரது தீரச் செயல்களைக் கேள்வியுற்ற கல்ஜிக்கள் பலர் அவரிடம் சென்று வேலைக்கமரத் தலைப்பட்டனர். அவருடைய அருமை பெருமைகளைக் கேள்வியுற்ற குத்புத்தீன் அவரைத் தக்க முறையில் பெருமைப் படுத்தினார். அதனால் அவர் மேலும் பல இடங்களை வெல்ல முற்பட்டார். பீகாருக்குள் படை நடத்திச் சென்று அதனைச் சீரழித்தார். ஒரு முறை அவர் உத்தண்டபூர் விஹாரா வரை படை எடுத்துச் சென்று அதனைக் கொள்ளை அடித்து அழித்துவிட்டார். அங்கு ஒரு பல்கலைக் கழகம் நிறுவப்பட் டிருந்தது. அப்பட்டணத்திலிருந்தவர்கள் பெரும்பாலும் பிராமணர்கள் என்றும், அவர்கள் அனைவரும் மொட்டை அடித்துக் கொண்டிருந்தனர் என்றும். அவர்கள் எல்லோரையும் அவர் கொன்று விட்டார் என்றும், அந் நகரில் பல புத்தகங்கள் இருந்தனவாகவும், அவற்றில் எழுதப்பட்டிருந்த செய்திகளை இந்துக்கள் துணைகொண்டு வாசித்தறிந்தார் என்றும் மின்ஹாஜ் கூறியுள்ளார்.[2] அங்கிருந்தவர்கள் புத்தமதத்தைச் சார்ந்தவர்கள்.

[1] ACHI, p. 171
[2] 148

ஆனால் மின்ஹாஜ் அவர்களைப் பிராமணர்கள் என்று தவறுதலாகக் கூறியுள்ளார். அங்கிருந்த நூல்நிலையத்தின் கதி என்னவென்பதில் வரலாற்றாசிரியர்களிடையே கருத்து வேறுபாடு தோன்றியுள்ளது. சிலர் அதனைத் தீக்கிரையாக்கினார் என்று கூறுகின்றனர். அதையடுத்து அவர் விக்ரமசீல, நாலந்தா ஆகியவற்றையும் கைப்பற்றினார். உத்தண்டபூரில் ஒரு கோட்டையைக் கட்டுவித்ததாக தாரநாத் கூறியுள்ளார்.[1] காஷ்மிரைச் சார்ந்த சாக்கிய ஸ்ரீபத்ரா 1200ஆம் ஆண்டில் உத்தண்டபூர், விக்கிரமசீல ஆகிய மடங்களுக்குச் சென்றபோது அவையாவும் அழிந்து கிடந்ததாக புத்தகர்ண பரம்பரைக் கதை கூறுகிறது.

இந்தப் பெரும் வெற்றிக்குப் பிறகு பக்தியார் குத்புத்தீன் அய்பெக்கைச் சந்தித்தார். அப்போது பல பரிசுகளையும்,[2] போரில் கொள்ளையிட்டப் பொருளையும் அவரிடம் கொடுத்ததாகக் கூறப்படுகிறது. இந்த சந்திப்பு 1203ஆம் ஆண்டில் பதோனில் நடைபெற்றது. பக்தியார் கல்ஜி அய்பெக்கின் வருகைக்காக காத்திருந்தார் என்றும் கூறப்படுகிறது. பக்தியார் கல்ஜியின் வெற்றிகளைப் பாராட்டி அய்பெக் அவருக்குத் தக்க பரிசுகளை வழங்கினார். இது ஏனைய துருக்கிய இராணுவ அதிகாரிகளின் பொறாமையைக் கிளறி விட்டது. ஒரு சமயம் பக்தியார் கல்ஜியை ஒரு யானையுடன் போரிடும்படிச் செய்தார். அப்போரில் யானையின் துதிக்கையை ஒரே வெட்டில் வீழ்த்தி அய்பெக்கினுடைய அன்பையும் பாராட்டையும் பெற்றார். தம்முடைய அமீர்களை அழைத்து பக்தியார் கல்ஜிக்குத் தக்க பரிசுகளை அளிக்குமாறு அவர்களையும் பணித்தார்.

பீகாரை வென்ற பிறகு வங்காளத்தின் மீது படையெடுத்துச் சென்றார். அப்போது வங்கத்தை சேன அரசகுலத்தைச் சார்ந்த லக்ஷ்மண சேன அரசாண்டு வந்தார். அவர் எண்பது ஆண்டுகளாக நீதி வழுவாமல் ஆட்சி செய்து வந்தார். அவர் தாராள மனப்பாங்குடையவர். எனவே மக்களிடம் அவருக்கு மிக்க செல்வாக்கு இருந்தது. துருக்கியரிடமிருந்து அவருக்கு வரவிருந்த ஆபத்தை முன்கூட்டியே ஜோதிடர் மூலமாக அவர் அறிந்திருந்தார். தம்மைத் தாக்க வரப்போகின்ற துருக்கியருடைய அங்க அடையாளங்களைப் பற்றி அரசர் கேட்டபோது, ஜோதிடர்கள் அந்த துருக்கியர் நேராக நிமிர்ந்து நின்று கைகளை நேராகத் தொங்க விட்டால் முழங்காலுக்குக் கீழாக அவர் கைகள் தொங்கும் என்றும் அடையாளம் கூறினார்களாம். அதையறிந்ததும் நம்பிக்

[1] Ind. Antiquary, IV, 366-67.

[2] 28 யானைகளையும், பலவிதமான அணிகலன்களையும், நிறைய பணத்தையும் பரிசாக வழங்கினார்.

கைக்குரிய சிலரை அனுப்பி அந்த வகையான அங்க அடையாளங் களைக் கொண்டவர்களைப் பார்த்து வரும்படி லக்ஷ்மண சேனு அனுப்பி வைத்தார். பக்தியார் கல்ஜியிடம் அந்த அடையாளம் இருப்பதைக் கண்டு அரசரிடம் வந்து செய்தியை அறிவித்தார்கள். அதை அறிந்து மக்கள் பலர் தலைநகரை விட்டுச் செல்லலானுர்கள். ஆனுல் லக்ஷ்மண சேனு தலைநகரிலேயே தங்கியிருப்பதென முடிவு செய்தார். 1203-ல் பெரியதொரு யாகம் ஒன்றைச் செய்து படையெடுப்பைத் தடுத்து நிறுத்த முற்பட்டார். அது பயனற்றுப் போயிற்று. அடுத்த ஆண்டில் பக்தியார் கல்ஜி பீகாரிலிருந்து புறப்பட்டு நடியாவை வந்து சேர்ந்தார். 18 குதிரை வீரர்கள் மட்டுமே அவருக்கு இணையாக சவாரி செய்து அவருடன் கூடவே வந்தனர். பக்தியாருடைய படை நிதானமாக வந்து கொண் டிருந்தது. நடியாவின் வாயிலை அடைந்ததும், பக்தியார் கல்ஜி அங்குள்ளவர்களைத் தாக்கி துன்புறுத்தாமல் நகருக்குள் புகுந்தார். ஆரவாரமேதுமின்றி அவர்கள் சென்றமையால் யாரோ வியாபாரிகள் தங்களுடைய குதிரைகளை விற்பதற்காக நகருக்குள் போய்க் கொண்டிருக்கின்றனர் என்று மக்கள் எண்ணினுர்கள். அரண்மனை வாயிலை அடைந்தபோதுதான் அவர் தம் வாளை உருவிக் கொண்டு அருகிலிருந்தவர்களைத் தாக்கத் தொடங்கினுர். அச் சமயத்தில் லக்ஷ்மண சேனு உணவருந்திக் கொண்டிருந்தார். பக்தியார் கல்ஜி அரண்மனை வாயிலுக்கு வந்து விட்டார் என்ற செய்தி அவருக்கு எட்டுவதற்குள் பக்தியார் அரண்மனை வாயிலைக் கடந்து விட்டார். பின்புற வழியின் வாயிலாக லக்ஷ்மண சேனு காலில் செருப்புகூட போட இயலாமல் தப்பித்துக் கொண்டு ஓடி விட்டார். அவருடைய மனைவி மக்கள், பணியாட்கள், செல்வம் யாவும் பக்தியார் கல்ஜியின் கைவசமாயின. அதில் ஒரு பகுதியைக் குத்புத்தீனுக்கு அனுப்பி வைத்தார். சிறிது நேரத்திற்குள் பக்தி யாரின் படை நகரை வந்தடைந்தது. தலைநகரை முஸ்லிம்கள் ஆக்கிரமித்துக் கொண்டனர். போர்த்திற சூழ்ச்சியின் உதவியால் அரண்மனை முஸ்லிம்கள் கைகளில் சிக்கியது; தலை நகரம் படையி னுடைய வலிமையைக் காட்டி கைப்பற்றப்பட்டது. அச்சத்தால் பீடிக்கப்பட்டிருந்த மக்கள் பதிலேதும்பேசாது அன்னியருக்கு அடி பணிந்தனர். தம் அரசின் தலைமையிடத்தை நடியாவில் அமைக்க பக்தியார் விரும்பவில்லை. அங்கிருந்து கொண்டு திறம்பட நிருவாகத்தை நடத்த இயலாது என்பதை அவர் உணர்ந்தார். ஆகவே, லக்னோதியைத் தலைநகராக்கினுர். பீகாரில் தாம் அமைத்திருந்த படைத்தளத்திற்கு அது அருகாமையில் இருந்த தால் அதுவே தலைநகராக இருக்க தகுதி பெற்றுள்ளதாக அவர் எண்ணினுர் மேலும் தெற்கு வங்கத்திலுள்ள நடியாவை நிரந்தர மாக தம்மிடம் வைத்திருப்பதற்குத் தேவையான இராணுவ

வாய்ப்பு வளங்களை அவர் பெற்றிருக்கவில்லை என்பதையும் அவர் கண்டுணர்ந்தார். ஆகவே நடியா தொடர்ந்து பல ஆண்டுகள் இந்துக்களின் ஆட்சியின் கீழ் இருந்து வந்தது. வடக்கு வங்கத்தில் முஸ்லிம்கள் ஆட்சி நிலைத்திருக்க இராணுவ நடவடிக்கைகள் மேற் கொள்ளுவதுடன் மனநிறைவு பெறாது அவர் கலாச்சாரம் சார்ந்த நடவடிக்கைகளையும் மேற் கொண்டார். மசூதிகள், கலாசாலைகள், கன்காக்கள் ஆகியவற்றை அவர் அங்கு கட்டுவித்து இஸ்லாமிய கலாச்சாரத்தைப் பரப்பினார். லக்னோர், தேவகோட் ஆகிய இடங்களில் இராணுவத்தளங்களை அமைத்தார். முயீஸ் உத்தீன் பெயரால் குத்பா வாசிக்க ஏற்பாடு செய்தார்.

நடியாவை விட்டு ஓடிய லக்ஷ்மண சேனா சோனார் கோயானில் இருந்து கொண்டு முஸ்லிம்களின் ஆளுகைக்குட்படாத தமது அரசின் எஞ்சியிருந்த பகுதிகளை ஆண்டு வந்தார். லக்ஷ்மண சேனா முஸ்லிம்களை எதிர்த்துப் போராடுவதற்குப் பதிலாக ஒரு கோழையைப் போல் பின்புற வாயிலின் வழியாக ஓடிவிட்டார் என்று கூறுவது சரியல்ல. நகரமக்கள் பலர் நகரை விட்டு நீங்கிய பிறகும் தலை நகரை விட்டு இறுதிவரை நீங்காது இருந்த அவரைக் கோழை என்று கூறுவது பொருத்தமாகாது. தம்மால் காப்பாற்ற முடியாது என்ற நிலை ஏற்பட்ட போதுதான் அவர் தலை நகரை விட்டு ஓடினார் என்பதை அறியும் போது அவரது நெஞ்சுரம் நன்கு புலப்படும்.[1]

வங்காளப் படையெடுப்பிற்குப் பிறகு பக்தியார் கல்ஜி தம் நேரத்தையும், கவனத்தையும் லக்னோதிக்குக் கிழக்கேயிருந்த மலைப் பகுதிகளில் வாழ்ந்து வந்த மக்களின் வாழ்க்கையைப் பற்றியும் அங்கு ஏற்பட்டிருந்த நிலைமைகளைப் பற்றியும் அறிந்து கொள்வதில் செலவழித்து வந்தார். அதன் பின்னர் திபெத்தை நோக்கிப் படைநடத்திச் சென்றார். திபெத் படையெடுப்பிற்குக் காரணம் என்ன என்பதை நாம் திட்டவட்டமாகக் கூற இயலாது. துருக்கிஸ்தானம் செல்ல குறுக்குவழியொன்றை அவர் கண்டு பிடிப்பதற்காக இப் படையெடுப்பை நடத்தினார் என்று சிலர் கூறுகின்றனர்.[2] அந்த வழியாக துருக்கியர் வாழும் பகுதிகளி

[1] பீகார் வங்காளம் ஆகிய இடங்களில் பக்தியார் கல்ஜி நடத்திய படையெடுப்புகளின் விவரங்களை நாம் தபகாத். இ. நாசிரீயிலிருந்து பெறுகிறோம். இவ் வரலாற்று நூலின் ஆசிரியரான மின்ஹாஜ் மேலே கூறப்பட்ட விவரங்களை பக்தியார் கல்ஜியினுடைய படையில் பணியாற்றி வந்த ஷம்ஸுத்தீனை என்பவரிடமிருந்து பெற்றார். ஷம்ஸுத்தீன் மின்ஹாஜ் லக்னோதியில் சந்தித்தார், பக்தியார் கல்ஜியின் மறைவைப்பற்றிய விவரங்களையும் நம் வரலாற்றாசிரியர் அவர் வாயிலாகத்தான் பெற்றுள்ளார்.

[2] ACHI, p 175

லிருந்து தடங்கலின்றி ஆட்களையும், போருக்கு வேண்டிய பொருள் களையும் எளிதாக பெற முடியும் என்று அவர் கருதியிருக்கக் கூடும் அவ்வாறு போதுமான துருக்கியப் படை வீரர்களையும், பொருள் களையும் பெற்றாலன்றி வங்கம் முழுவதையும் வெல்ல முடியாது என அவர் எண்ணியிருக்கக் கூடும். அவற்றைக் கொண்டு வங்கத்தில் தனியரசை ஏற்படுத்த அவர் விருப்பங் கொண்டிருக்கக் கூடும். ஆகவே அவர் அக்கம் பக்கத்திலிருந்த நாடுகளை வெல்லுவதற்கு முயற்சி மேற்கொள்ளாமல் திபெத்தை வெல்ல முற்பட்டார் என்று கூறப்படுகிறது.[1] திபெத்திற்குப் படை நடத்திச் செல்வதற்கு முன் அவர் போதுமான ஏற்பாடுகளைச் செய் திருந்தார். லக்னோதிக்கும் திபெத்துக்கும் இடையே வாழ்ந்திருந்த மலைச் சாதிகளுடன் அவர் தொடர்பு வைத்துக் கொண்டார். அவற்றுள் மெஜ் (Mej), குன்ச் (Kunch) என்ற இரு சாதியினர்களின் தலைவரான அலீபக்தியார் கல்ஜியின் முயற்சியால் இஸ்லாமிய மதத்தைத் தழுவினர். பக்தியார் கல்ஜிக்கு வழிகாட்டியாக இருந்து அவருக்குப் போதிய உதவியை அளிக்க அலீ ஒப்புக் கொண்டார்.

திபெத் நோக்கிப் புறப்பட்ட பக்தியார் கல்ஜீ முதலில் பெக்மதி ஆற்றங்கரையிலிருந்த பர்தான் என்னுமிடத்தை அடைந்தார். இந்துக்கள் தங்கள் மொழியில் பெக்மதியை சமுத்ரா என்று அழைத்து வந்தார்கள். சமுத்ரா என்றால் கடல் என்று பொருள். ஆகவே அந்த ஆறு மிகப் பெரியதாக இருக்க வேண்டும் என்று நாம் அறிகிறோம். கடற்கரையோரமாக பத்து நாட்கள் பயணம் செய்த பின்னர் பக்தியார் கல்ஜி இருபது வளைவுகளைக் (arches) கொண்ட கல்லாலான ஒரு பெரிய பாலத்தை வந்தடைந்தார். தான் திரும்பி வரும்வரை அப் பாலத்தைக் காத்து வருவதற்காக இரண்டு அமீர்களையும் சில படைவீரர்களையும் பாலத்தின் முகப்பில் நிறுத்தி வைத்துவிட்டு பாலத்தின் வழியாக அக்கரை சேர்ந்தார். காமரூபாவின் அரசர் இப்படையெடுப்பைப் பற்றிக் கேள்வியுற்றதும் பக்தியார் கல்ஜிக்கு ஒரு தூதுவரை அனுப்பி அவரது படையெடுப்பை ஓராண்டு தள்ளிப் போடும்படி கேட்டுக் கொண்டார். அப்போது அவருக்குப் போதிய உதவியைத் தாம் அளிப்பதாகச் சொல்லி அனுப்பினர். அந்த யோசனையை பக்தியார் கல்ஜி ஏற்கவில்லை. பக்தியாருடைய படைகள் திபெத்தை நோக்கிப் போய்க் கொண்டிருந்தன. இமய மலையிலுள்ள கணவாய்கள், குறுகிய பாதைகள் ஆகியவற்றின் வழியாக மிகக் கஷ்டப்பட்டு படைகள் 15 நாட்கள் பயணம் செய்து இறுதியில் திபெத்தின் சமவெளிப் பகுதியை அடைந்தன. விளை

[1] *Ibid.*

நிலங்கள் வழியாக பயணத்தை மேலும் தொடர்ந்து இறுதியாக அங்கிருந்த ஒரு கோட்டையை அடைந்தன. தங்களுடைய பயிர் நிலங்களை அன்னியப் படைகள் வீணாக்குவதைக் காணப் பொறுக்காமல் அங்கிருந்த மக்களும் படைவீரர்களுடன் சேர்ந்து பக்தியார் கல்ஜியை எதிர்க்கத் தலைப்பட்டனர். ஒரு நாள் முழுவதும் நடைபெற்ற போரில் பல முஸ்லிம்கள் உயிரிழந்தனர். அன்றிரவு பக்தியாருடைய படைவீரர்கள் தங்களிடம் சிக்கிய திபெத்து வீரர்களை விசாரித்தபோது அங்கிருந்து சிறிது தூரத்தில் கர்பட்டன் (Karbattan) என்ற நகரம் இருப்பதாகவும், அங்கு 50,000 துருக்கிய குதிரைப் படை வீரர்கள் இருப்பதாகவும் அவ் வீரர்கள் எதற்கும் அஞ்சாதவர்கள் என்றும், அவர்கள் வில் வித்தையில் சிறந்து விளங்குபவர்கள் என்றும், அவர்கள் மறுநாள் காலை வரவிருக்கிறார்கள் என்றும் கூறினார்கள். இத்தகவல்கள் கல்ஜி படையினரின் நம்பிக்கைக் கோட்டையைத் தகர்த்து விட்டது. மலைப்பகுதிகளில் போரிடுவது மிகக்கடினமாக இருந்தமையாலும், படைவீரர்கள் களைத்துப் போய் விட்டமை யாலும், லக்னோதி திரும்பி விடுவது மேலென பக்தியார் கல்ஜி எண்ணினார். உடனே தமது அமீர்களை அழைத்து ஆலோசனை நடத்தினார். அவர்கள் யாவரும் திரும்பி விடுவது உசிதமாகும் எனக் கூறவே பக்தியார் கல்ஜி படையைத் திருப்பி நடத்திக் கொண்டு வரலானார். திரும்பி வரும் வழியில் வாழ்ந்திருந்த மக்கள் அங்கிருந்த உணவுப் பொருள்கள் யாவற்றையும் அழித்து விட்டு வேறு இடத்துக்குச் சென்றுவிட்டனர். ஆகவே அடுத்த 15 நாட்கள் படைவீரர்களும், குதிரைகளும் உணவின்றி பயணம் செய்ய வேண்டியதாக இருந்தது. காமரூபம் வரும் வரை படை வீரர்கள் தங்களுடைய குதிரைகளைக் கொன்று அவற்றின் இறைச்சியை அருந்தி உயிர் வாழ்ந்தனர். பெக்மதி ஆற்றின் குறுக்கே கட்டப்பட்டிருந்த பாலத்தை அவர்கள் அடைந்தபோது பாலத்தின் இரு வளைவுகள் அழிக்கப்பட்டிருப்பதைக் கண்டார்கள். பாலத்தைப் பாதுகாத்து வரும்படி பக்தியார் கல்ஜி விட்டுச்சென்ற இரு அமீர்களுள் ஒருவர் துருக்கியர், மற்றவர் கல்ஜி இனத்தவர். விரைவில் அவ்விருவருக்கும் இடையே சண்டை மூண்டது. ஆகவே பாலத்தைப் பாதுகாக்கும் பணியினை விட்டொழித்தார்கள், காமரூப நாட்டு மக்கள் அதையறிந்து பாலத்தை உடைத்து விட்டார்கள். ஆற்றின் மறுகரையை படகுகளின் உதவி கொண்டு கடக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டது. படகுகள் கட்டப்படும் வரை படகில் ஓரிடத்திலே தங்க வேண்டியது அவசியமாயிற்று. அருகிலிருந்த ஓர் இந்து கோயிலில் படைகள் தங்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்துவிட்டு படகுகள் கட்டும் பணியில் பக்தியார் கல்ஜி மும்முரமாக ஈடுபட்டார். காமரூப அரசர் இதனையறிந்ததும்

தம் மக்களை அழைத்து பக்தியார் கல்ஜிக்குத் தொல்லை கொடுக்குமாறு கட்டளையிட்டார். அக்கட்டளைக்கிணங்க இந்துக்கள் கூட்டங் கூட்டமாக வந்து படைகள் தங்கியிருந்த கோயிலைச் சூழ்ந்து கொண்டனர். கோயிலைச் சுற்றிலும் மூங்கில்களைக் கொண்டு சுவர்களை எழுப்பி அவர்களைச் சுற்றி வளைத்துக் கொள்ள முயற்சித்தார்கள். நிலைமையை ஒருவாறு புரிந்து கொண்ட பக்தியார் கல்ஜி வேலியை உடைத்துக் கொண்டு வெளியே தம்படைகளுடன் கரையை நோக்கி ஓடினார். அப்போது சில வீரர்கள் தங்களுடைய குதிரைகளுடன் நீரில் இறங்கி விட்டார்கள். அவர்கள் சிறிது தூரம் நீரில் மூழ்காது போய்க் கொண்டிருந்ததைக் கண்ட ஏனைய வீரர்கள் அந்த இடத்தில் ஆற்றை எளிதில் கடந்து விடலாம் என்று எண்ணி நீரில் இறங்கினார்கள், சிறிது தூரத்திற்குப் பிறகு ஆழம் அதிகமாகிவிடவே அதில் மூழ்கி பலர் இறந்தனர். இதற்கிடையில் இந்துக்கள் ஆற்றங்கரைக்கு வந்து கல்ஜி படையினர் வந்த வழியே திரும்பி விடாதவாறு தடுத்தனர். இவ்வாறாக பக்தியார் கல்ஜியின் படை ஆற்று நீரில் சிக்குண்டு அழிவுற்றது. பக்தியார் கல்ஜியும் ஒரு நூறு வீரர்கள் மட்டுமே ஆற்றின் மறுகரையை அடைந்தனர். மேஜி, குன்ச் சாதியினர்கள் பக்தியார் கல்ஜிக்கு ஏற்பட்ட கதியை அறிந்து பரிதாபமுற்று அவருக்கு உதவி செய்ய முன் வந்தார்கள். பக்தியார் கல்ஜி தேவகோட் சென்று அடைவதற்கு வேண்டிய வசதிகளை அவர்கள் அமைத்துத் தந்தார்கள். ஆயினும் இந்தப் படையெடுப்பு பக்தியார் பல்ஜியின் வாழ்வை நாசமாக்கி விட்டது. அவருடைய புகழையும் மங்கச் செய்து விட்டது. வழி நெடுக கூடியிருந்த மக்கள் அவர் மீது வசைமாரி பொழிந்தார்கள். அதனால் மன முடைந்து போன பக்தியார் கல்ஜி குதிரைமீது சவாரி செய்யாமல் நடந்து போகத் தலைப்பட்டார். அந்த நேரத்தில் அவரது எண்ணம் முயீஸ் உத்தீனை நாடியது. முயீஸ் உத்தீனுக்கு ஏதேனும் பெருங்கேடு ஏற்பட்டிருக்க வேண்டும் என்றும் அதனால் தான் தமது படையெடுப்பு தோல்வியில் முடிந்திருக்க வேண்டும் என்றும் பக்தியார் கல்ஜி எண்ணமிடலானார். அது முற்றிலும் உண்மையேயாகும். ஏனெனில், அந்த நேரத்தில்தான் முயீஸ் உத்தீன் கொலை செய்யப் பட்டார். திபெத் படையெடுப்பு பக்தியார் கல்ஜியின் உடல் நிலையைப் பெரிதளவில் பாதித்து விட்டது. அது முதற்கொண்டே அவர் படுத்த படுக்கையை விட்டு எழுந்திருக்கவேயில்லை. ஒரு நாள் அவரது அமீர்களுள் ஒருவரான அலீமர்தன் தேவகோட் வந்து பக்தியார் கல்ஜியைப் பார்த்தார். பக்தியார் கல்ஜியைக் கடந்த மூன்று நாட்களாக எவரும் பார்க்கவில்லை. திக்கற்ற நிலையில் கிடந்த பக்தியார் கல்ஜியை அலிமர்தன் தம் உடைவாளைக் கொண்டு கொன்று விட்டார். இந்தியாவின்

கிழக்குப் பகுதிகளில் முஸ்லிம்களின் ஆதிக்கத்தை முதல் முதலில் ஏற்படுத்திய மாபெரும் வீரரின் வாழ்க்கை இவ்வாருக முடிவடைந்தது.

மேற்கூறியவற்றிலிருந்து 1192ஆம் ஆண்டு முதற்கொண்டு 1206ஆம் ஆண்டு வரை இந்தியாவில் முஸ்லிம்களின் ஆதிக்கத்தை ஏற்படுத்துவதற்கு குத்புத்தீன் எந்த அளவு உதவி செய்தார் என்பதை நாம் உணரமுடியும். குத்புத்தீன் தம் போர்த்திறமை யால் ஹான்சி, ஆஜ்மீர், இரண்தம்பார், மீரத், பரன், டில்லி, அன்ஹில் வாரா, காலஞ்சார், மஹோபா, கஜுராஹோ, பதோன் ஆகிய இடங்களைத் தம் ஆதிக்கத்தின் கீழ்க்கொண்டு வந்தார். மாளவத்தின்மீது வெற்றிகரமாக படையெடுத்துச் சென்ருர். குவாலியர் அவரது ஆதிக்கத்தின்கீழ் அவர் எதிர் பாராத வகையில் வந்தது. முயீஸ் உத்தீனுக்கு உதவியாக இருந்த காஹதவாலாக்களின் ஆளுகைக்குட்பட்டிருந்த பகுதிகள் பலவற்றை முஸ்லிம்களின் ஆளுகையின்கீழ் கொண்டுவந்தார். சிறிது காலத்திற்குப் பிறகு கஸ்னேசி சுதந்திரமடைந்தபோது மீண்டும் கஸ்னேசியைக் கைப்பற்றும் முயற்சியை குத்புத்தீனே மேற்கொண்டார். அக்காலத்தில்தான் முகமது பின் பக்தியார் கல்ஜி முஸ்லிம்கள் ஆட்சியை வங்காளம் வரை பரவச்செய்தார். அந்த வகையில் குத்புத்தீன் நேரடியாக ஈடுபட்டிருக்கவில்லை என்பது உண்மையே. ஆயினும் பக்தியார் கல்ஜி அவருக்காக காத்திருந்து சந்தித்தது, அவரிடமிருந்து கௌரவ ஆடையைப் பெற்றது, அவருக்குக் கொள்ளைப் பொருளில் ஒரு பங்கைக் கொடுத்தது போன்ற நிகழ்ச்சிகள் குத்புத்தீனுடைய மேலாதிக் கத்தை ஓரளவு எடுத்துக்காட்டுகின்றன.

### இரண்டாவது கட்டம் (1206-1208)

1206ஆம் ஆண்டில் முயீஸ் உத்தீன் கொலையுண்டார் என்று முன்னர் கண்டோம். அவருக்குப் பிள்ளைகள் ஒருவரும் இல்லை. அதைப்பற்றி ஒருமுறை அவரைக் கேட்டபோது "ஏனைய அரசர்கள் ஒன்று அல்லது இரண்டு பிள்ளைகளைப் பெற்றிருக்கக் கூடும். எனக்கு ஆயிரக்கணக்கான பிள்ளைகள் இருக்கின்றனர், என்னுடைய துருக்கிய அடிமைகள் யாவரும் என் பிள்ளைகளே ஆவார்கள். அவர்களே என்னுடைய அரசுக்கு வாரிசுகளாக இருப்பார்கள். நான் இறந்த பிறகு அவர்கள் என்னுடைய அதிகாரத்திற் குட்பட்டுள்ள பகுதிகள் அனைத்திலும் என்னுடைய பெயரைக் குத்பாவில் அழியாமல் பாதுகாத்து வருவார்கள்" என்று பதிலளித்தார். அதற்கேற்ப அவர் இறந்தவுடன் குத்புத்தீன் அய்பெக் டில்லி, லாகூர் ஆகியவற்றினுடைய அதிகாரத்திற்குட்

டிருந்த முயீஸ் உத்தீனுடைய ஆட்சிப் பகுதிகளுக்குத் தலைவராகப் பொறுப்பேற்றார். யால்டூஸ் என்ற மற்றொரு அடிமை அதிகாரி கிர்மானிக் ஆதிக்கம் செலுத்திவந்தார். குபாச்சா என்ற மற்றொரு அடிமை அதிகாரி மூல்தானையும் ஊச்சையும் ஆளத் தொடங்கினார். வங்காளத்தில் அலிமர்தன் என்பவர் தனியரசை ஏற்படுத்தினார்.

1206ஆம் ஆண்டில் முயீஸ் உத்தீன் இறந்தபோது குத்புத்தீனுடைய நிலைமை யாதாக இருந்தது என்பதில் கருத்து வேற்றுமை ஏற்பட்டுள்ளது. அப்போது குத்புத்தீன் முயீஸ் உத்தீனுடைய அரசப் பிரதிநிதியாக இருந்து அவருடைய இந்தியப் பேரரசை ஆண்டு வந்தார் என்று ஒரு சிலர் கூறுகின்றனர். அவர் எப்போது அரசப் பிரதிநிதியாக நியமிக்கப்பட்டார் என்பதிலும் கருத்து வேறுபாடு தோன்றியுள்ளது. டில்லிக்கருகேயுள்ள இந்தர்பத்தில் ஒரு படையை நிறுத்திவிட்டு, அதற்குக் குத்புத்தீனைத் தலைவராக நியமித்துவிட்டு, தமக்குப் பதிலாக இந்திய விவகாரங்களைக் கவனித்து வரும்படி கூறிவிட்டு முயீஸ் உத்தீன் கஜினி திரும்பினார் என்று தாஜ்உல் மாசிரில் கூறப்பட்டிருப்பதையொட்டி சிலர் தரெயின் போர் முடிவுற்ற உடனேயே அவர் அரசப் பிரதிநிதியாக நியமிக்கப்பட்டார் என்று கூறுகின்றனர்.[1] கோக்கர்களுடைய கலகத்தை அடக்கிவிட்டு முயீஸ் உத்தீன் தம் தலைநகருக்குத் திரும்பும்போது முயீஸ் உத்தீன், குத்புத்தீன் அய்பெக்குவிற்கு அரசப் பிரதிநிதிக்குரிய அதிகாரங்களை வழங்கினார் என்றும், அப்போது அவரை மலிக்காக உயர்த்திவிட்டார் என்றும், அத்துடன் அவருக்கு வாலி அஹத் என்ற பட்டத்தைக் கொடுத்தார் என்றும் தாரீக் - இ - பக்ருத்தீன் முபாரக் ஷாயி கூறுகிறது.[2] இவ்விரு கருத்துக்களும் உண்மைக்குப் புறம்பானவை என வேறு சிலர் கூறுகின்றனர். அய்பெக்கை அரசப் பிரதிநிதியாகவோ, அல்லது வாலி அஹத்தாகவோ முயீஸ் உத்தீன் நியமிக்கவேயில்லை என்றும், முயீஸ் உத்தீனுடைய மறைவிற்குப் பிறகே அந்தப் பதவியை அய்பெக் தம் விடா முயற்சியினால் பெற்றார் என்றும் அவர்கள் கூறுகின்றனர்.[3] முயீஸ் உத்தீன் காலத்தில் அவரது இந்தியப் பேரரசு மூல்தான், ஊச், நஹர்வாலா, சியால்கோட், லாகூர், தபாரிந்தா தரெயின், ஆஜ்மீர், ஹான்சி சர்சுதி, கூரம், மீரத், கோல், டில்லி, தங்கர், பதோன், குவாலியர், வாரணசி, கன்னோசி, காலஞ்சார், அவுத், மாளவம், பீகார், லக்னோதி ஆகியவற்றை உட்கொண்டிருந்தது. அவை யாவற்றை

[1] Dr, Habibullah, The Foundation of Muslim Rule in India, p. 59.

[2] p. 28.

[3] A.C.H.I. p. 198.

யும் ஒரு அதிகாரியின் பொறுப்பில் விட்டுவைப்பதற்குப் பதிலாக அவற்றை மூன்று பிரிவுகளாக்கி ஒவ்வொன்றையும் ஒரு அதிகாரியிடம் ஒப்படைத்துவிட்டு அம்மூன்று அதிகாரிகளையும் தம்முடைய நேரடி கட்டுப்பாட்டின்கீழ் வைத்திருப்பதென முயீஸ் உத்தீன் திட்டமிட்டிருந்தார். ஆனால் அதனைச் செயல்படுத்துவதற்கு முன்பே அவர் இறந்துவிட்டமையால் அத்திட்டம் நிறைவேறவில்லை. எனவே அவர் திடீரென இறந்தபோது அவருடைய மூன்று முக்கியமான அடிமை அதிகாரிகள்—யால்டூஸ், குபாச்சா, குத்புத்தீன்—ஒருவருக்கொருவர் மேலானவர்கள் என்று கூறிக் கொள்ள இயலாது, சம அந்தஸ்து பெற்றவர்களாக இருக்கக் கண்டனர். அலிநாகோரி, முகமது பின் பக்தியார் கல்ஜி ஆகியோருடைய நிலையும் அதே போன்று இருந்தது. அவர்களுடைய ஆண்டையார் முயீஸ் உத்தீனே அன்றி வேறெவரும் இலர். பக்தியார் கல்ஜி குத்புத்தீனுடைய மேலாதிக்கத்தை ஏற்றுக் கொண்டார் என்று சிலர் கூறுகின்றனர். 1203ஆம் ஆண்டில் பதோனில் குத்புத்தீன் வருகைக்காகக் காத்திருந்து பக்தியார் கல்ஜி அவரைச் சந்தித்தார். 28 யானைகள் உட்பட பல பரிசுகளையும் அவருக்குக் கொடுத்தார். இந்த நிகழ்ச்சி பக்தியார் கல்ஜியின் மீது குத்புத்தீன் அய்பெக் கொண்டிருந்த மேலாதிக்கத்தை மெய்ப்பித்துக் காட்டுகிறது என்று கூறுகின்றனர். அந்த சந்திப்பு சம அந்தஸ்துடைய இரு அதிகாரிகளுக்கிடையே ஏற்பட்ட ஒன்றாகும் என்று சிலர் கூறுகின்றனர். ஏனெனில் அய்பெக்கும் பக்தியார் கல்ஜிக்குப் பல பரிசுகளை அப்போது வழங்கினார். மேலும் முயீஸ் உத்தீனுக்கு ஏதேனும் ஒரு பெருங்கேடு ஏற்பட்ட காரணத்தால்தான் தமக்குத் திபெத்தில் வெற்றி கிடைக்கவில்லை என்று பக்தியார் கல்ஜி கருதினார். அதிலிருந்து முயீஸ் உத்தீனை அவர் தம்முடைய தலைவராகக் கருதினாரேயன்றி குத்புத்தீனை அல்ல என்பது விளங்கும். கிழக்குப் பகுதிகளில் அவர் மேற்கொண்ட போர் நடவடிக்கைகள் முயீஸ் உத்தீனுடைய சார்பில் மேற்கொள்ளப்பட்டன. அவற்றை மேற்கொள்ள அவர் குத்புத்தீனுடைய அனுமதியைக் கோரிப் பெற்றதாக நமக்குச் சான்றுகள் கிடைக்கவில்லை. மேற்கூறியவற்றில் இருந்து அவர் குத்புத்தீனுக்கு அடங்கிய ஒரு அதிகாரியாக செயற்படவில்லை என்பது புலனாகும்.

முயீஸ் உத்தீனுக்கு ஆண்பிள்ளை பிறந்திருந்தால் அவரை இந்த அடிமை அதிகாரிகள் தலைவராக ஏற்றுக் கொண்டு முன் போல் தங்களுக்கு ஒதுக்கப்பட்டிருந்த ஆட்சிப் பகுதிகளில் தங்கள் விருப்பம் போல் ஆட்சி செலுத்தி வந்திருக்கக்கூடும். ஆண்பிள்ளை பிறக்காத காரணத்தால் தமக்குப் பின்னர் ஆட்சிப் பொறுப்பை

ஏற்க வேண்டியவர் யாரென முடிவு செய்திருப்பினும் அதே நிலைமை ஏற்பட வழியிருக்கும். ஆனால் அவரது சகோதரன் மகன் மாமூத்திடம் அவருக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. கோரித் தலைவர்களிடமும் அவருக்கு நம்பிக்கை பிறக்கவில்லை. எனவே அவருக்குப் பின் பட்டம் பெறுவது யார் என்ற பிரச்சினைகளுக்கு முடிவு கூறாமலேயே அவர் திடீரென இறந்துவிட்டமையால் தனித் தனியாக இயங்கி வந்த மூன்று அடிமை அதிகாரிகளுக்கிடையே மேலாதிக்கம் பற்றிய போராட்டம் தொடங்கியது.[1] அப் போராட்டத்தில் தங்களுடைய கரங்களை வலுப்படுத்துவதற்காக ஒவ்வொருவரும் தம்மையே வாரிசாக முயீஸ் உத்தீன் நியமித்த தாகக் கூறினார்கள். யால்டூஸ் தம்மை கஜினிக்குத் தலைவராக நியமித்தார், என்றும் அய்பெக் தம்மை இந்தியப் பகுதிகளுக்குத் தலைவராக நியமித்தார் என்றும் கூறிக் கொண்டார்கள். தம்முடைய பதவியைக் காப்பாற்றிக் கொள்ளுவதற்கு அய்பெக் தம் போர்த்திறம், அரசியல் சூழ்ச்சித் திறம் ஆகியவற்றை முழுமை யாக பயன்படுத்த வேண்டியதாக இருந்தது. மூன்று அடிமை அதிகாரிகளுள் குத்புத்தீனே மிகவும் திறமை வாய்ந்தவர் என்பதில் ஐயமில்லை. ஆனால் யால்டூஸ் அனைவரிலும் மூத்தவர். எனவே முயீஸ் உத்தீன் இறந்தவுடனேயே லாகூர் மக்கள் அய்பெக்கை டில்லியிலிருந்து வரவழைத்து மேலாதிக்கப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொண்ட போதிலும், 1208ஆம் ஆண்டில் தான் அவர் சுதந்திரமான அரசராகக் கருதப்பட்டார். அது வரை அவர் தம்மை மலிக்கு, சிபா சாலார் என்று கூறிக்கொண் டாரேயன்றி சுல்தான் என்ற பட்டத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. அதனால்தான் அவர் தம் பெயரில் நாணயங்களையும் வெளியிட வில்லை. அவர் முழு ஆட்சி அதிகாரத்தைச் சட்ட முறைப்படி ஏற்றுக் கொள்வதில் ஏற்பட்ட கால தாமதத்திற்கான காரணங்களை நாம் இப்போது ஆராய்வோம்.

கி.பி. 1206ஆம் ஆண்டில் தம்யக் (Damyak) என்னுமிடத்தில் முயீஸ் உத்தீன் கொல்லப்பட்டார் என்று முன்பு பார்த்தோம், முயீஸ் உத்தீனுடைய சடலத்தைக் கஜினிக்குக் கொண்டு செல்லு வதென முடிவு செய்தார்கள். போகும் வழியில் முயீஸி அடிமைகள் (Muizzi Slaves) பாடையையும், சுல்தானுடைய செல்வத்தை யும் கைப்பற்றிக் கொண்டு கோரி அமீர்களை அருகில் வராமல் தடுத்து வந்தார்கள். பிரேத ஊர்வலம் கிர்மானை நெருங்கிய போது முயீஸி அடிமைகளின் கைகள் மேலும் வலுவடைந்தன. யால்டூஸ் அவர்களுக்குப் பாதுகாப்பளிக்க தமது படைத்தலைவரை

[1] பக்தியார கல்ஜி அதற்குள்ளாக கொலை செய்யப்பட்டார் என்பதை அறிதல் வேண்டும்.

சடலத்துடன் அனுப்பி வைத்தார். கஜினியை அடைந்ததும் முயீஸி அடிமைகளும், கோரி அமீர்களும் ஒருவரோடு ஒருவர் மோதிக் கொண்டனர். கோரி அமீர்கள் கஜினியை ஆளும் பொறுப்பு சுல்தான் பஹா உத்தீன் சாமீனுடைய பிள்ளைகளுக்கே அளிக்க வேண்டும் என்று கூறினார்கள். பஹா உத்தீன் சாமிற்கு இரண்டு பிள்ளைகள் இருந்தனர். ஒருவரின் பெயர் ஜலாலுத்தீன் அலி. மற்றொருவரின் பெயர் அலாவுத்தீன் முகமது என்பதாகும். முயீஸி அடிமைகள் முயீஸ் உத்தீனுடைய சகோதரன் மகனை மாமூத் என்பவரே அரசாள வேண்டும் என்று கூறினார்கள். முயீஸி அடிமைகள் மாமூத்தை ஆதரித்ததற்கு ஒரு காரணம் இருந்தது. காலஞ்சென்ற சுல்தானுடைய சட்ட முறையான வாரிசு மாமூத்தே ஆவார். ஆகவே சுல்தானுடைய சொத்துக்கள் யாவும் அவரையேச் சேரும். அடிமைகள் அக்காலத்தில் சொத்துக்களுள் ஒன்றாகக் கருதப்பட்டனர். ஆகவே அவர்கள் யாவரும் மாமூத்திற்கேச் சொந்தமாவார்கள். அவர்களை விடுதலை செய்யும் அதிகாரமும் அவருக்கே சேரும். எனவே மாமூத்தை ஆதரித்தால் தங்களுக்கு விடுதலை கிடைக்கும் என்று எண்ணி அவர்கள் மாமூத்தை ஆதரித்தனர். இதற்கிடையில் கோரி அமீர்கள் ஜலாலுத்தீன் அலியையும், அலாவுத்தீன் முகமதுவையும் பாமியனில் இருந்து வரவழைத்து கஜினியின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினார்கள். அவ்வழைப்பை ஏற்று இருவரும் கஜினிக்கு விரைந்து வந்தனர். பாமியனிலேயே இருக்க ஜலாலுத்தீன் அலி விரும்பியதால் அலாவுத்தீன் முகமதுவை அரச பீடத்தில் அமர்த்தி விட்டு ஜலாலுத்தீன் அலி நாடு திரும்பினார். முயீஸ் உத்தீன் தம் கருவூலத்தில் சேர்த்து வைத்திருந்த பொருளை அவ்விருவரும் பங்கிட்டுக் கொண்டனர். ஒவ்வொருவரும் 230 ஒட்டகங்கள் மீது ஏற்றும் அளவிற்குத் தங்கத்தையும், அணிகலன்களையும், ஏனைய பொருள்களையுப் பெற்றதாகக் கூறப்படுகிறது.

முயீஸி அடிமைகள் மேற்கண்ட ஏற்பாட்டினை விரும்பவில்லை. முயீஸ் உத்தீனுடைய சடலத்துடன் வந்த யால்டூஸின் படைத் தலைவர் நிலைமையை மிகவும் கவனமாக ஆராய்ந்தறிந்து கொண்டு யால்டூஸை உடனே கஜினிக்குப் புறப்பட்டு வருமாறு செய்தி அனுப்பினார். அலாவுத்தீன் தோற்கடிக்கப்பட்டார். கோரி அமீர்கள் சிறையிலிடப்பட்டனர். பின்னர் அலாவுத்தீனுடைய வேண்டுகோளுக்கிணங்கி அவரை பாமியனுக்கு அனுப்பி வைத்தனர். ஆனால் அவரது சகோதரன் அவரை மீண்டும்

[1] CPIH Vol, 5 P. 31.

கஜினிக்கு அழைத்து வந்து அரியணையில் அமர்த்தினர். ஆகவே யால்டூஸ் மீண்டும் கஜினி வரவேண்டியதாயிற்று. நான்கு மாத முற்றுகைக்கு பிறகு அவர் கஜினியைக் கைப்பற்றினர். பாமியன் சகோதரர்கள் கைது செய்யப்பட்டனர். பின்னர் யால்டூஸுக்கும் பாமியன் சகோதரர்களுக்கும் இடையே ஒப்பந்தம் ஏற்பட்டது. பாமியன் சகோதரர்கள் இருவரும் தங்கள் நாடு திரும்ப ஒத்துக் கொண்டனர். பின்னர் இரு சகோதரர்களும் சண்டையிட்டுக் கொண்டனர். அலாவுத்தீன் முகமது கோரா சாமினுடைய உதவியை நாடினர். அதைப் பயன்படுத்திக் கொண்டு கோராசம் ஷா பாமியனைக் கைப்பற்றிக் கொண்டார். மாமூத் கஜினியை ஆள்வதைவிட பிரூஸ் கோ (Firuz koh) வை ஆளுவதே மேலெனக் கருதியமையால் கஜினியை யால்டூஸுக்கு அளித்தார். யால்டூஸ் விடுதலைப் பத்திரத்தையும் அவரிடமிருந்து கோரிப் பெற்றார்.

கஜினியைப் பெற்ற பிறகு யால்டூஸினுடைய கை ஓங்கியது. முயீஸ் உத்தீன் காலத்தில் இந்துஸ்தானம் கஜினிப் பேரரசின் ஒரு பகுதியாக இருந்தது. ஆகவே கஜினியைப் பெற்ற யால்டூஸ் இந்துஸ்தானத்தின் மீது மேலாதிக்க உரிமையைக் கொண்டாடினர். அந்த உரிமையை நிலை நாட்டுவதற்காக அவர் பஞ்சாபை நோக்கி படை நடத்திச் சென்றார். முகமது கோராசாம் ஷா பாமியனைக் கைப்பற்றிக் கொண்டார் என்று முன்னர் பார்த்தோம். அதன் பிறகு கஜினியைக் கைப்பற்றும் முயற்சியை மேற்கொண்டார். அவரது தொல்லையைப் பொறுக்க முடியாமல் யால்டூஸ் புகலிடம் தேடி இந்தியாவிற்கு வந்தார். மேற்கண்ட நிகழ்ச்சிகள் யாவற்றையும் குத்புத்தீன் அய்பெக் கூர்ந்து கவனித்து வந்தமையால் அவருக்கு யால்டூஸ் கோராசம்ஷா ஆகியோரால் தமக்கு ஏற்படவிருந்த ஆபத்து மிகத் தெளிவாகப் புலப்பட்டது, இந்த ஆபத்துகளை எதிர் கொள்ளுவதற்காக குத்புத்தீன் டில்லியிலிருந்து லாகூருக்குச் சென்று அங்குத் தமது தலைமையிடத்தை அமைத்துக் கொண்டார். அதன் பிறகு ஏற்பட்ட போரில் யால்டூஸ் தோல்வியுற்றமையால் அவர் குஹிஸ்தான் நோக்கி ஓடிவிட்டார். முகமது கோராசாம்ஷா கஜினியைக் கைப்பற்றிக் கொள்ளக் கூடாது என்பதற்காக அய்பெக் கஜினிக்குச் சென்று அதனைக் கைப்பற்றிக் கொண்டார். நிஜாமுத்தீன் முகமது என்பவரை பிரூஸ்கோவிற்குச் சென்று தமக்கு விடுதலைப் பத்திரத்தை கியாஸ் உத்தீன் மாமூத்திடமிருந்து பெற்று வரும்படி அனுப்பி வைத்தார். கியாஸ் உத்தீன் மாமூத் அய்பெக்குவிற்கு சிகப்பு நிற குடையையும், விடுதலைப் பத்திரத்தையும் அனுப்பி வைத்தார். இந்துஸ்தானத்தை ஆளும் உரிமையை அய்பெக்குவிற்கு அளித்தார். இவ்வாறாக முயீஸ் உத்தீனுடைய சட்டமுறையான வாரிசுதாரரிடமிருந்து அய்பெக்

சுதந்திரத்தையும், இந்துஸ்தான் ஆளும் உரிமையையும் 1208-ல் பெற்றார்.

கஜினியைக் கைப்பற்றிய பிறகு அய்பெக் களியாட்டங்களில் தம் நேரத்தை வீணாக்கினார். ஆகவே கஜினி மக்கள் அவர் மீது வெறுப்புக் கொண்டார்கள். எனவே அவர்கள் யால்டூஸை கஜினிக்கு வரும்படி அழைப்பு அனுப்பினார்கள். இந்தச் சம்பவங்கள் அய்பெக்கை அச்சுறுத்தின. வெகு சாமர்த்தியமாக கஜினியிலிருந்து தப்பித்துக் கொண்டு லாகூர் வந்தடைந்தார். ஆயினும் கோராசம் ஷா கஜினியைக் கைப்பற்றாதவாறு தடுத்து அதன் வாயிலாக இந்தியாவுக்கு கோராசம் ஷாவினால் ஏற்படவிருந்த ஆபத்தையும் தவிர்த்துவிட்டார். அதன் பிறகு யால்டூஸினாலும் இந்தியாவிற்கு ஆபத்து ஏதும் ஏற்படவில்லை. இதற்கு முக்கிய காரணம் அய்பெக்கு யால்டூஸுடன் ஏற்படுத்திக் கொண்ட திருமண உறவேயாகும். யால்டூஸின் மகளை அய்பெக் மணந்து கொண்டார். அது மட்டுமின்றி தம் சகோதரியை குபாச்சாவிற்கு மணமுடித்து வைத்தார். தம் மகளை இல்டூட்மிஷிற்கு திருமணம் செய்து கொடுத்தார் இம்மூன்று திருமணங்களும் அரசியல் முக்கியத்துவம் பெற்றனவாகும். இல்டூட்மிஷ் ஒரு சிறந்த போர் வீரர்; நம்பிக்கைக்குரிய படைத்தலைவர். குபாச்சா மூல்தான், ஊச் ஆகிய இடங்களை ஆளும் உரிமையைக் கொண்டாடி வந்தார். டில்லி, லாகூர் ஆகியவற்றின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்த முயீஸ் உத்தீனுடைய இந்திய அரசு தமக்கே உரியது என்று உரிமை கொண்டாடியவர்களுள் அவரும் ஒருவராவார். கஜினியை ஆண்டு வந்த காரணத்தால் முயீஸ் உத்தீனுடைய இந்திய அரசின் மீது தமக்கு மேலாதிக்க உரிமை உண்டு என்று யால்டூஸ் கூறி வந்ததுடன் நிற்காமல் அதனை நிலை நாட்டவும் படையெடுத்து வந்தார் என்று முன்பு கண்டோம். இத்தகைய ஆபத்துகளி லிருந்து குத்புத்தீனைக் காப்பாற்றியதில் திருமண உறவுகளும் பங்கு கொண்டிருந்தன என்பதை மறுக்க இயலாது.

மூன்றாவது கட்டம் (1208-1210)

முயீஸ் உத்தீன் இறந்து விட்ட செய்தி எட்டியதும் சில இராஜ புத்திர அரசுகள் முஸ்லிம் ஆதிக்கத்திலிருந்து தங்களை விடுவித்து கொண்டன. 1206-ல் காலஞ்சார் சுதந்திரமடைந்தது. காஹதவாலா அரசகுலத்தைச் சார்ந்த ஹரிச்சந்திரா ஃபரூக்கா பாத், பதோன் ஆகிய இடங்களில் தம்முடைய ஆட்சியை ஏற்படுத் தினார். பிரதிஹாரா அரச குலத்தவர்கள் குவாலியரைத் தம் வசமாக்கிக் கொண்டனர். திபெத் படையெடுப்பின் தோல்வி லக்னோதியில் அமைக்கப் பட்டிருந்த முஸ்லிம் அரசினை நிலைகுலையச்

செய்து விட்டது. பக்தியார் கல்ஜியின் மறைவிற்குப் பின்னர் அங்கு அரசியல் குழப்பமொன்று ஏற்பட்டது. முயீஸ் உத்தீன் காலத்தில் வட இந்தியா முழுவதையும் துருக்கியர்கள் படையெடுத்து அழித்து தமது ஆதிக்கத்தின் கீழ் கொண்டு வந்திருந்தனர். ஆனால் அவர் இறந்த உடனே அவர்களுடைய ஆதிக்கம் பல இடங்களிலிருந்து அகற்றப்பட்டு விட்டது. சிந்து, பஞ்சாபின் சில பகுதிகள், கங்கைச் சமவெளியின் சில பகுதிகள் ஆகியவை மட்டுமே அவர்களுடைய ஆதிக்கத்தின் கீழ் இருந்தன. அது மட்டுமன்றி முயீஸ் உத்தீன் காலத்தில் ஒடுக்கப்பட்ட இராஜ புத்திர அரசுகள் இப்போது துருக்கியர்களை எதிர்க்க முற்பட்டு விட்டன.[1] இந்த பிரச்சனைகளுக்குத் தீர்வு காணுவதற்கு அய்பெக் தம்மாலான முயற்சியை மேற்கொண்டார். முதலில் தம் கவனத்தை வங்காளத்தின் பக்கம் செலுத்தினார். பக்தியார் கல்ஜி மரணப் படுக்கையில் கிடந்தபோது அலிமர்தன் அவரைக் கொன்றார் என்று முன்பு கவனித்தோம். பக்தியார் கல்ஜியிடம் மிகுந்த பற்றுக் கோண்டிருந்த சில கல்ஜிகளுக்கு இச்செய்தி பேரதிர்ச்சியைத் தந்தது. அவர்களுள் ஒருவரான முகமத்ஷிரான் நாரன்கூயிற்குச் சென்று அலிமர்தனைக் கைது செய்து நாரன் கூயின் கொத்வாலிடம் அவரை ஒப்படைத்து விட்டு தேவகோட் திரும்பினார். அவர் தேவகோட் திரும்பிய போது அங்கிருந்த கல்ஜிக்கள் அவரே தங்களுக்குத் தலைவராக இருக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள். இதற்குள்ளாக அலிமர்தன் தம்மைக் காவலில் வைத்து காத்துவந்த கொத்வாலை சரி செய்து கொண்டு அவர் உதவியால் டில்லிக்குத் தப்பிச் சென்றார். டில்லியில் அய்பெக்கைச் சந்தித்து கிழக்கு விவகாரங்களில் தலை யிட்டு அங்கிருந்த இத்தாக்களை கல்ஜி அமீர்களிடையே பகிர்ந்தளிக்குமாறு கேட்டுக் கொண்டார். கல்ஜிக்கள் முயீஸ் உத்தீனுடைய அடிமைகள் அல்லர். ஆகவே அவர்கள் மீது முயீஸ் உத்தீனுடைய வாரிசு என்ற முறையில் குத்புத்தீனுக்கு யாதொரு உரிமையும் இல்லை. ஆகவே குத்புத்தீன் சிறிது தயக்கம் கொண்டார். இறுதியில் டில்லியின் பாதுகாப்பிற்கு வடமேற்கு மாநிலங்கள் எந்த அளவு முக்கியத்துவம் பெற்றிருந்தனவோ அந்த அளவிற்கு கிழக்கு மாநிலங்களும் முக்கியத்துவம் பெற்றுள்ளன என்பதை அய்பெக் உணர்ந்தார். ஆகவே அவுத்தின் ஆளுநரான கைமாஸ் பூமி (Qaimaz Bumi) என்பவரை லக்னோதிக்குச் சென்று அங்கிருந்த கல்ஜி அமீர்களுக்கு இக்தாக்களை முறைப்படியாக பங்கிட்டு அளித்து வரும்படி கட்டளையிட்டார். அப்போது தேவகோட் இக்தாவை ஹசாமுத்தீன் இவாஸ்

[1] The Habibullah, Loc. cit. p 87-88

கல்ஜிக்குக் கொடுத்தார். கல்ஜி அமீர்கள் ஏற்கனவே தேவகோட் இக்தாவை முகமது ஷிரானுக்கு அளித்திருந்தமையால் அவர்கள் கோபடைந்தார்கள். முகமது ஷிரானும் வேறு சில கல்ஜி அமீர்களும் சேர்ந்து தேவகோட் மீது படையெடுத்துச் சென்றனர். கைமாஸ் அவர்களைத் தோற்கடித்து அய்பெக்கின் மேலாதிக்கத்தை அவர்கள் ஏற்றுக்கொள்ளும்படிச் செய்தார். சிறிது காலத்திற்குப் பிறகு முகமது ஷிரான் உட்பகை சார்ந்த போர் ஒன்றில் உயிரிழந்தார்.[1] அதற்கிடையில் டில்லி சென்ற அலிமர்தன், அய்பெக்கினுடைய படையில் சேர்ந்து கஜினிக்குச் சென்றார். அங்கு அவர் யால்டூஸின் கைகளில் சிக்குண்டு சிறைபட்டார். பிறகு யால்டூஸ் அவரை விடுவித்தார். டில்லி திரும்பிய அலிமர்தனைக் கண்டு அய்பெக் மகிழ்ச்சி யடைந்தார். அதன் விளைவாக அவர் லக்னோதியின் ஆளுநர் பதவியைப் பெற்றார். ஆண்டுதோறும் அவர் கப்பம் செலுத்திவர ஒப்புக்கொண்டார். மலிக் ஹுசாமுத்தீன் அவருக்குக் கீழ்ப்படிந்து நடந்து வரலானார். இவ்வாறாக வங்கத்தில் அய்பெக்கினுடைய மேலாதிக்கம் நிலை நாட்டப் பட்டது. எஞ்சியிருந்தது இராஜபுத்திர பிரச்சினையே யாகும். முஸ்லிம் ஆதிக்கத்தை எதிர்க்கத் தலைப்பட்ட இராஜ புத்திரர்களை அடக்குவமற்கான ஏற்பாடுகளை அவர் மேற் கொள்ளுவதற்கு முன்பு 1210ஆம் ஆண்டு நவம்பர் மாதம் சோஹான் விளையாட்டில் அவர் ஈடுபட்டிருந்த போது குதிரையி லிருந்து தற்செயலாக விழுந்து உயிர்துறந்தார்.

**மதிப்பீடு:** இந்தியாவில் துருக்கிய அரசை ஏற்படுத்திய பெருமை குத்புத்தீனையே சாரும் என்று சில வரலாற்றாசிரியர்கள் கூறுகின்றனர்.[2] டில்லியில் முஸ்லிம் அரசை அமைப்பதற்கான திட்டங்களை வகுத்தவரும், அதனைத் தோற்றுவித்தவரும் குத்புத்தீனே யாவார் என்று ஹபீபுல்லா கூறியுள்ளார். முயீஸ் உத்தீன் இந்தியாவை வெல்லுவதற்கான திட்டத்தை வகுத்தா ரென்றும் ஆனால் அதனை நடைமுறைப்படுத்தியது குத்புத்தீன் அய்பெக் என்றும் சிலர் கூறுகின்றனர்.[3] முயீஸ் உத்தீனுடைய கவனம் அடிக்கடி மத்திய ஆசியாவின்மீதே செலுத்தப் பட வேண்டியதாக இருந்தது. எனவே அவர் தமது நேரத்தையும், பலத்தையும் இந்தியாவை வெல்லுவதிலேயே செலவழிக்க இயலாது போயிற்று. அந்த நேரத்தில் இந்தியாவில் இருந்து கொண்டு முயீஸ் உத்தீனுடைய நாடு சேர்க்கும் கொள்கையை வெற்றிகரமாகக் கடைப்பிடித்து வந்தவர்களுள் தலைசிறந்தவர் குத்புத்தீனேயாவார். அதுமட்டுமன்றி முயீஸ் உத்தீன் உயிருடன்

[1] ACHI, p. 203

[2] A. L. Srivastava, The Sultanate of Delhi, p 88.

[3] ACHI, p 205

இருக்கும் வரை நெருக்கடி காலத்தில் அவருடைய உதவியைக் கோரிப் பெறுவதற்கு அய்பெக்கு பிறகு வாய்ப்பு ஏற்பட்டிருந்தது. ஆனால் அவர் இறந்த பிறகு தம்முடைய சொந்த முயற்சி வாய்ப்பு வளங்கள் ஆகியவற்றின் துணைகொண்டு முயீஸ் உத்தீன் தொடங்கி வைத்த திட்டத்தை நிறைவேற்ற வேண்டிய சூழ்நிலை உண்டா யிற்று. மேலும் முயீஸ் உத்தீன் இறந்த பிறகு அவருடைய அடிமை அதிகாரிகளுக்கிடையே மேலாதிக்கம் பற்றி எழுந்த போராட்டம் முயீஸ் உத்தீன் தொடங்கி வைத்த இந்திய முஸ்லிம் அரசை அழித்து விடும் அளவிற்குத் தீவிரமடைந்தது. அந்த நேரத்தில் மிகச் சாதுரியமாகவும், தைரியமாகவும் நடந்து கொண்டு டில்லி அரசுக்கு ஏற்பட்டிருந்த ஆபத்துகளை சமாளித்தார். அந்த கோணத்தின் பார்க்கும்போது அவரே டில்லி சுல்தானியத்தின் உண்மையான ஸ்தாபகராகத் தோன்றுகின்றார். டில்லியைத் தனியரசாக ஏற்றுக் கொள்ளும்படி மாமூத்தை வற்புறுத்தினார். டில்லியின்மீது மேலாதிக்க உரிமையைக் கொண்டாடிய யால்டூஸைத் தோற்கடித்து அவருடன் மண உறவை ஏற்படுத்தி அவரால் டில்லிக்கு ஏற்படவிருந்த ஆபத்தைத் தடுத்தார். பாமியானைக் கைப்பற்றிய பிறகு கஜினி மீது தம் பார்வையைத் திருப்பி விட்ட கோராசம் ஷா கஜினியைக் கைப் பற்றக் கூடாது என்பதற்காக தாமே கஜினி சென்று காலியாகக் கிடந்த கஜினி அரியணையில் அமர்ந்து விட்டார். கஜினி ஒருக்கால் கோராசம் ஷாவிடம் சிக்கியிருந்ததால், கோராசம் ஷாவினுடைய அடுத்த இலக்கு இந்தியாவாக இருக்கும் என்பதில் ஐயமில்லை. முயீஸ் உத்தீனுடைய இந்தியப் பேரரசைக் கோராசம் ஷாவிட மிருந்து காப்பாற்றிய பெருமை குத்புத்தீனையேச் சாரும். இதிலிருந்து டில்லி சுல்தானியத்தை நிறுவியவர் குத்புத்தீனே என்பது விளங்குகிறது. மேலும் பீகார், வங்காளம் ஆகிய இடங்களில் எற்பட்டிருந்த அரசியல் குழப்பத்தை ஒழித்து அங்கு டில்லி அரசரின் மேலாதிக்கத்தை ஏற்படுத்தினார். அந்த கோணத்தில் பார்க்கும்போதும் அவரையே உண்மை ஸ்தாபகராக நாம் கருதவேண்டியதாக இருக்கிறது.

சில வரலாற்றாசிரியர்கள் குத்புத்தீனை டில்லி சுல்தானியத்தின் அடிகோலியவராகக் கருத மறுக்கின்றனர். அவர்கள் சில கார ணங்களைக் கூறுகின்றனர். முதலாவதாக அவர் ஒருங்கிணைக்கப் பட்ட ஆதிக்கத்தை ஏற்படுத்தவில்லை. முயீஸ் உத்தீன் காலத்தி லேயே அவர் தனித்தனியாக இயங்கிவந்த அடிமை அதிகாரிகளுள் ஒருவராக இருந்தார். அவர் இறந்த பிறகு மூல்தானில் குபாச்சா தனிமுறையாகச் செயற்பட்டு வந்தார். யால்டூஸ் டில்லியின்மீது மேலாதிக்க உரிமையைக் கொண்டாடினார். 1208ஆம் ஆண்டில் தான் டில்லியை ஆளும் உரிமையை கியாஸ் உத்தீன் மாமூத்

குத்புத்தீனுக்கு வழங்கினர். அவ்வாறிருந்தும் அவர் தம்மை சுல்தான் என்று கூறிக்கொள்ள வில்லை. அவரது செதுக்குப் பொறிப்புகள் யாவும் அவரை மலிக், சிபா சாலார் என்றவாறு குறிப்பிடுகின்றனவேயன்றி சுல்தான் என்று குறிப்பிடவில்லை. அவர் பெயரில் நாணயங்கள் வெளியிடப்படவில்லை. நாணயங்களை வெளியிடுவது அக்காலத்தில் மேலாதிக்கத்தைக் குறிக்கும் செயல்களுள் மிக முக்கியமானதாகக் கருதப்பட்டது. பிற் காலத்தில் டில்லியை ஆண்ட சுல்தான்கள் அவரை சுல்தானுக மதிக்கவில்லை. பிரூஸ்ஷா காலத்தில் டில்லி சுல்தான்களின் பெயர்கள் அடங்கிய பட்டியல் ஒன்றைத் தயாரித்தபோது அப் பட்டியலில் அய்பெக்கினுடைய பெயர் சேர்க்கப்படவில்லை. மேலும் முயீஸ் உத்தீன் ஆட்சிக் காலத்தில் முஸ்லீம்களின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்த இராஜபுத்திர அரசர்கள் டில்லியின் மேலாதிக்கத்திலிருந்து தம்மை விடுவித்துக் கொண்டு தனித் தியங்கத் தலைப்பட்டனர். அதிலிருந்து டில்லி மேலாதிக்கம் இராஜபுதனத்தில் நிலையாக ஏற்படுத்தப் பெறவில்லை என்று விளங்கும்.

இரண்டாவதாக டில்லிக்கும், கஜினிக்கும் இடையே ஏற்பட் டிருந்த தொடர்பு அவர் காலத்தில் அறுக்கப்படவில்லை. டில்லியின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்த முயீஸ் உத்தீனுடைய இந்திய அரசு இன்னும் கஜினியின் மேலாதிக்கத்தின் கீழ் செயல் பட்டு வந்தது என்று சிலர் கூறுகின்றனர். ஆகவேதான் இல்டுட்மிஷ் அரியணை ஏறியபோது யால்டூஸ் அவரை டில்லி அரசராகத் தாம் ஏற்றுக்கொண்டதை அறிவிக்கும் வகையில், குடையையும், தண்டத்தையும் அனுப்பி வைத்தார். முழுச் சுதந்திரம் பெற்ற அரசர்கள் மேற்கண்ட அரசச் சின்னங்களை கலீபாவிடமிருந்து நேரடியாகப் பெற்று வந்தனர். மற்றவர் களுக்கு அடிபணிந்து ஆட்சி செலுத்திவந்தவர்கள் அந்தச் சின்னங்களை தம்முடைய மேலாதிக்க உரிமையாளர்களிடமிருந்து பெறுவது வழக்கம். இதிலிருந்து குத்புத்தீன் காலத்தில் டில்லி முழுச் சுதந்திரமடையவில்லை என்பது விளங்கும்.

மூன்றாவதாக குத்புத்தீன் நிலையான அரசியல் சார்ந்த எல்லையை டில்லி அரசுக்கு ஏற்படுத்திக் கொடுக்கவில்லை. அரசியல் எல்லைக்கோடு விரிந்தும் சுருங்கியும் வந்தது. அவ்வெல்லைக் கோட்டிற்குள் இருந்துவந்த அரசுகள் நிலையாக அடிப்படுத்தப் பெறவில்லை. அவர் முயீஸ் உத்தீனுடைய படைத் தலைவராக இருந்தபோது டில்லிக்கு அடங்கியிருந்த நாடுகள் சில அவர் அரசராக இருந்தபோது சுதந்திரமடைந்துவிட்டன. அவர் இறந்த பிறகு வங்காளத்தில் மீண்டும் குழப்பநிலை உருவாகியது.

நான்காவதாக அவர் செயற்றிறம் மிகுந்த நிருவாக அமைப்பு ஒன்றை உருவாக்கவில்லை. சிவில் நிருவாக அமைப்பு ஒன்றை உருவாக்கவில்லை. சிவில் நிருவாகம் சார்ந்த புதிய நிறுவனங்களை அவர் ஏற்படுத்தவில்லை. ஏற்கனவே செயற்பட்டு வந்த நிருவாக முறையை சீர்திருத்தி அமைக்கவில்லை. தமது அரசுக்குத் தலைநகர் ஒன்றையும் அவர் ஏற்படுத்தவில்லை. ஒருங்கிணைக்கப்பட்ட அரசுக்கு ஒரு தலைநகர் இன்றியமையாததொன்றாகும். லாகூர், டில்லி ஆகிய இரண்டும் அவரது இராணுவத் தலைமையிடங்களாக இருந்தனவேயன்றி தலைநகராக விளங்கவில்லை.

மேற்கூறியவற்றிலிருந்து டில்லி சுல்தானியத்தினை உண்மையான நிறுவியவராக அவரைக் கருத இயலாது என்பது விளங்கும். ஆயினும் இந்தியாவில் முஸ்லீம் அரசைத் தோற்றுவிப்பதில் பெரியதொரு பங்கு அவர் பெற்றிருந்தார் என்பதையும், அதனைத் தோற்றுவித்த பிறகு அதற்கென்று ஒரு வெளிநாட்டுக் கொள்கையை வகுத்தார் என்பதையும் மறுக்க இயலாது. சிந்து நதிக்கு அப்பால் ஏற்பட்டுவரும் அரசியல் சூதாட்டத்தில் டில்லி சுல்தானியம் சிக்கி அழியாது பாதுகாப்பதே இந்திய முஸ்லிம் அரசர்களின் முக்கிய கொள்கையாக இருக்கவேண்டும் என்பதை உணர்ந்து அதனை முதல் முதலில் நடைமுறைப்படுத்தி அதன் வாயிலாக டில்லி சுல்தானியத்தைத் தனிப் பெரும் பேரரசாக மாற்றுவதற்கு பாடுபட்டவர்களுள் அவரே முதலாவதாவார் என்பதையும் நாம் மறுக்க இயலாது. அந்த வகையில் அவர் செயலாற்றும்போது தமது போர்த் திறத்தை மட்டுமே பயன்படுத்தாது தமது சாதுரியத்தையும், அரசியல் சூழ்ச்சித் திறனையும் பயன்படுத்தித் தமக்குப் பெருமையைத் தேடிக் கொண்டார்.

குத்புத்தீன் ஒரு சிறந்த படைத் தலைவர் என்பதில் கருத்து வேற்றுமை ஏற்பட வழியில்லை. அவரது இந்திய வெற்றிகள் அதற்கு சிறந்த எடுத்துக்காட்டுகளாக விளங்குகின்றன. எல்லா மத்திய ஆசிய போர் வீரர்களைப்போல் அவரும் இரக்கமற்றவராகவும், வெறி பிடித்தவராகவும் காட்சியளித்தார். இலட்ச இலட்சமாக வாரிக் கொடுத்த குத்புத்தீன் இலட்ச இலட்சமாகக் கொன்றும் வந்தார் என்று கூறப்படுகிறது.

அரசியல் சூழ்ச்சித்திறம் படைத்தவராகவும் அவர் விளங்கினார். அவர் ஏற்படுத்திக் கொண்ட திருமண உறவுகள் அவரது அரசியல் திறத்தை வெளிப்படுத்துகின்றன. காலத்திற்கும் ஆட்களுக்கும் தகுந்தாற்போல் அவர் நடந்துகொண்டு தாம் நினைத்த காரியத்தைச் சாதிக்கும் வல்லமை படைத்தவர்.

அவரிடம் பல நற்பண்புகள் குடிகொண்டிருந்தன. அக்கால வரலாற்றாசிரியர்கள் அனைவரும் அவரிடம் காணப்பட்ட பற்றுறுதி, தாராள மனப்பான்மை, நீதி வழுவாமை. போன்ற குணங்களை வானளாவப் புகழ்ந்துள்ளார்கள். அவர் இலட்ச இலட்சமாகக் கொடுப்பவர் என்பதைக் குறித்துக்காட்ட ''லாக் பக்ஷ்'' (Lakh Baksh) என்ற பட்டம் அவருக்களிக்கப்பட்டது. அவருடைய கொடைத்தன்மையைப் பற்றிய கதைகள் 17ஆம் நூற்றாண்டிலும் புழக்கத்தில் இருந்தன. யாரேனும் ஒருவர் வாரி வாரி வழங்கி வரத் தொடங்கிவிட்டால் அவரை அக்காலத்திய அய்பெக் என்று மக்கள் கூறும் அளவிற்கு அய்பெக் தாராளமாக பணத்தைக் கொடுத்து வந்தார்.[1] பாரபட்சமற்ற நியாயத்தை அவர் வழங்கினார். அவர் காலத்தில் ஓநாயும் ஆடும் ஒரே குளததில் நீர் அருந்தின என்று ஹசன் நிஜாமி கூறுகிறார். சாலைகளில் திருடர் பயம் ஏதும் இல்லை. இஸ்லாமிய மதத்தில் அவருக்கு மிகுந்த பற்று உண்டு. இஸ்லாமியக் கொள்கைகளைப் பரப்புவதில் அவர் மிக்க ஆர்வம் கொண்டிருந்தார். இந்துக்களை அவர் கருணையுடன் நடத்தினர் என்றாலும் ஆயிரக்கணக்கான இந்துக்களை அவர் அடிமைப் படுத்தினர். பல கோயில்களை இடித்து அதன் வாயிலாகப் பெற்ற கட்டிடப் பொருள்களைக் கொண்டு மசூதிகளைக் கட்டினார். டில்லியிலும், ஆஜ்மீரிலும் அவர் கட்டிய மசூதிகள் இன்றும் அவருடைய மதப்பற்றை எடுத்துக் காட்டி வருகின்றன.

கலை வளர்ச்சிக்கும் அவர் அருந்தொண்டு ஆற்றியுள்ளார். ஹசன் நைஜாமி, பக்கர்-இ-முதாபீர் ஆகிய வரலாற்று மேதைகளை அவர் ஆதரித்தார். கட்டிடக் கலையிலும், அவருக்கு ஆர்வம் இருந்தது. குதுப்மினார் என்ற புகழ்மிக்க கட்டிடத்தைத் தொடங்கியவர் அவரே என வரலாற்றாசிரியர்கள் பலர் கூறுகின்றனர்.

இத்துணை சிறப்பு வாய்ந்த அரசரைப் பற்றிய வரலாற்றை அபுல்பஸல் அயின்-இ-அக்பாரியில் அவரைப் பற்றிக் கூறியிருக்கும் வாசகத்துடன் முடிப்பதே சாலச் சிறந்தது என்று கருதுகிறோம். ''பெருமைக்குரியதும், நல்லதுமான பல காரியங்களை அவர் சாதித்தார்.''[2]

**ஆராம் ஷா (நவம்பர் 1210 முதல் ஜூன் 1211):** முயீஸ் உத்தீனைப் போலவே குத்புத்தீனும் எதிர்பாராதவிதமாக மரணமடைந்தார். ஆகவே அவருக்குப்பின் அரசெய்த வேண்டியவர் யார் என்பதை குத்பத்தீன் முன் கூட்டியே அறிவிக்க இயலாது போயிற்று. எனவே குத்புத்தீனுக்குப்பின் பட்டத்துக்குரியவரைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பை துருக்கிய மலிக்குகளும்,

[1] Ferishta, vol. I, p. 63

[2] Ed. Sir Syed, II, p. 198.

அமீர்களும் ஏற்றுக் கொள்ள வேண்டியதாயிற்று. இப்பொறுப்பை உடனடியாக நிறைவேற்ற வேண்டியதாகவும் இருந்தது. துருக்கிய அரசு இந்தியாவில் இன்னும் நிலையாக ஏற்படுத்தப் படவில்லை. அதனுடைய எதிரிகள் இன்னும் முழுமையாக அடக்கப்படவில்லை. அதனை நிலையாக நிறுத்துவதற்குத்தேவையான அரசியல் நிறுவனங்கள் இன்னும் தோற்றுவிக்கப்படவில்லை. இந்தச் சூழ்நிலையில் வாரிசுப்பிரச்சினைக்கு உடனடியாகத் தீர்வு காணவில்லையென்றால், நாட்டில் வாரிசுரிமைப்போர் ஏற்பட்டு குழந்தைப் பருவத்திலிருந்த டில்லி அரசை அழித்துவிடும் என்று லாகூரில் இருந்த மலிக்குகளும் அமீர்களும் கருதினார்கள். எனவே அவர்கள் ஒன்று கூடி ஆராம்ஷாவை அரசராக்கினார்கள். அவர் அரசராவதற்கு முன்பு அவரைப்பற்றி எவருமே அறிந்திருக்கவில்லை என்று கூறுவது தவறாகாது. கடந்த இருபதாண்டுகளாக, துருக்கியர்கள் இந்தியாவில் நடத்திய போராட்டங்களுள் அவர் கலந்து கொண்டதாக நமக்கு ஒரு சான்று கூட கிடைக்கவில்லை. போர்க்களத்தில் புகழ்நிலை எய்தாத ஒருவரை பலம் பொருந்தியவனுக்கே பதவி என்ற சூழ்நிலை ஏற்பட்டிருந்த காலத்தில் அரசராக நியமிப்பதென்பது விந்தையாகக் காணப்படும். அரியணையை வெகுகாலம் காலியாக வைத்திருப்பதால் ஏற்படும் ஆபத்துகளை உணர்ந்த மலிக்குகள் தகுதியைப்பற்றி சிந்திக்காமல் ஆராம் ஷாவை அரசராக்கி விட்டனர்.

ஆராம்ஷா யார் என்பதில் வரலாற்றாசிரியர்களிடையே கருத்து வேற்றுமை ஏற்பட்டுள்ளது. தபகாத். இ. நாசிரியின் கையெழுத்துப் படிகள் சிலவற்றில் ஆராம்ஷா பின் அய்பெக் என்ற தலைப்பை நாம் காண்கிறோம். அய்பெக்கின் மகன் ஆராம் ஷா என்று அதற்குப் பொருள். எனவே சில ஆசிரியர்கள் இவரை அய்பெக்கின் மகனாகக் கருதுகின்றனர். இந்த மாதிரியான தலைப்பை கையெழுத்துப் படிகளை எழுதுபவர்கள் கவனக் குறைவால் தங்களையும் அறியாது எழுதி விட்டனர் என்று வேறு சிலர் சமாதானம் கூறுகின்றனர். தபகாத். இ. நாசிரியின் ஆசிரியரான மின்ஹாஜ் அய்பெக்குவினுடைய மூன்று பெண்களைப்பற்றி கூறியிருக்கிறாரேயன்றி அவரது பிள்ளையைப் பற்றி ஓரிடத்திலாவது கூறியிருக்கவில்லை. அவர்களுள் இருவர் குபாச்சாவை மணந்து கொண்டனர். மூன்றாமவர் இல்டுட்மிஷை மணந்தார்![1] அய்பெக்குவிற்கு ஆண்குழந்தையேயில்லை என்று ஜுவெயினி ஐயத்திற்கிடமற்ற வகையில் கூறியுள்ளார்.[2] அவர்

[1] B 141

[2] Terrikhi Jahan gusha, Tehran Edn G. H 1351 Vol II, 38

குத்புத்தீனுடைய சகோதரன் என்று அபுல் பஸல் கூறியுள்ளார். தற்கால வரலாற்ருசிரியர் ஒருவர் அவர் குத்புத்தீனுடைய உற வினரே அல்லர் என்று கூறியுள்ளார்[1].

திறமைமிக்க பல துருக்கிய மலிக்குகள் இருக்க புகழ் எய்தாத ஒருவரை அரசராகத்தேர்ந்தெடுத்தது பலருக்குப் பிடிக்கவில்லை. மேலும் நாட்டின் பல்வேறு பகுதிகளில் இருந்த துருக்கிய அமீர் களைக் கலந்து கொள்ளாமல் லாகூர் மலிக்குகள் மட்டும் அரசரைத் தேர்ந்தெடுத்ததும் பலருக்குப் பிடிக்கவில்லை. எனவே ஏனைய துருக்கிய அமீர்கள் தங்களுக்குப் பிடித்தமானவர்களை அரசராகத் தேர்ந்தெடுக்க உரிமை கோரினுர்கள். அவ்வுரிமை அவர்களுக்கு அளிக்கப்படவில்லையென்ருல் அவர்கள் தனித்தியங்கப்போவ தாகக் கூறினுர்கள். வங்கத்தில் கல்ஜி மலிக்குகள் கலகம் செய்தனர். குபாச்சா பக்கர், சேவ்ரான் ஆகிய பகுதிகளைக் கைப் பற்றிக் கொண்டார். சில இந்து அரசர்கள் துருக்கிய ஆதிக்கத் தினின்றும் விடுபட்டனர். நிலைமை சீரழிந்து வருவதை அறிந்த சிபாகசாலர் அமீர் அலி இஸ்மாயிலும் வேறு சில முக்கிய மலிக்கு களும், அப்போது பதோனின் ஆளுநராகப் பணியாற்றிவந்த இல்டூட்மிஷை டில்லிக்கு வந்து அரசுப்பொறுப்பை ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டினுர். அவர்கள் இல்டூட்மிஷை அரசராகத் தேர்ந்தெடுத்தற்கு சில காரணங்கள் உண்டு. இந்தியாவில் அமைக்கப் பட்டிருந்த துருக்கிய அரசுக்கு அவர் சிறந்தமுறையில் தொண்டாற்றியிருந்தார். அவர் குத்புத்தீனுடைய மகளை மணம் செய்து கொண்டிருந்தார். அய்பெக் அவரை மகனே என்று அழைப்பது வழக்கம். இக்தாக்களுள் மிகச்சிறந்த இக்தா வாகக் கருதப்பட்ட பதோனை அய்பெக் இல்டூட்மிஷிற்கு அளித் திருந்தார். அதிலிருந்து குத்புத்தீன் தமக்குப் பின் இல்டூட்மிஷ் அரசாள வேண்டும் என்று எண்ணியிருக்கக் கூடும். இல்டூட் மிஷிற்கு அழைப்பு கிடைத்ததும் உடனே அவர் டில்லிக்குப் புறப் பட்டுச் சென்ருர். அங்கு யாதொரு கஷ்டமின்றி அரியணையில் அமர்ந்து கொண்டார்.

அதையறிந்த ஆராம்ஷா ஒரு பெரிய படையைத் திரட்டிக் கொண்டு டில்லி நோக்கி வந்தார். அப்போது நடைபெற்ற போரில் ஆராம்ஷா படுதோல்வியடைந்தார். அவருக்கு உதவி யாக இருந்த இரு பெரும் துருக்கிய அதிகாரிகள்—அக்ஸன்கர், ஃபருக்ஷா—போரில் கொல்லப்பட்டனர். ஆராம் ஷாவும் கைப்பற்றப்பட்டு கொலை செய்யப்பட்டார். அவரது ஆட்சி ஏறக்குறைய 8 மாதங்கள் நடைபெற்று வந்தது.

[1] Indian Historical Quarterly, March, 1937. p. 120

# 3. இல்தூத்மிஷ்
## (1210 - 1236)

இல்தூத்மிஷின் பெயரை வரலாற்ருசிரியர்கள் பலவிதமாக உச்சரிக்கின்றனர்; பலவிதமாக எழுதுகின்றனர். எல்பின்ஸ்டன் அவருடைய பெயரை அல்டாமிஷ் என்றும், ரேவெர்டி இயால்டி மிஷ் என்று எழுதியுள்ளனர். பர்த்தோல்டு இல்டுமிஷ் என்று எழுதியிருக்கிருர். கடந்த 50 ஆண்டுகளாக அவரது பெயரை இல்தூத்மிஷ் என்றே எழுதப்பட்டு வருகிறது. செயின்ட் பீடர்ஸ்பர்க்கிலுள்ள பல்கலேக்கழக நூல்நிலேயத்தில் பாதுகாக்கப் பட்டு வருகின்ற தாஜ் உல் மா ஆசீரின் கையெழுத்துப் படியில் ''உ'' உச்சரிப்புக்குறி காட்டப்பட்டிருக்கிறது. அதுமட்டுமன்றி இல்தூத் மிஷின் பெயர் பல பாரசீகப் பாடல்களில் வருகிறது. அங்கு இல்தூத்மிஷ் என்றவாறு உச்சரித்தால்தான் எதுகை சரியாக அமைகிறது எனத் தெரிகிறது. சமீப காலத்தில் ஹிகமெத் பாயூர் என்ற துருக்கிய எழுத்தாளர் அவரது பெயரை இல்தெத் மிஷ் என்று எழுதவேண்டும் என்று கூறுகிருர். ஆயினும் இல்துத் மிஷ் என்று எழுதுவதும் உச்சரிப்பதும் சரியானதென தற்கால வரலாற்ருசிரியர்கள் கருதுகின்றனர்.

முந்திய வாழ்க்கை: இல்துத் மிஷ் துருக்கிய இனங்களுள் ஒன்ருன இல்பாரி வகையைச் சார்ந்தவர். அந்த இனத்திற்குத் தலேவராக இருந்த இலம்கான் (Ilam Khan) என்பவருக்கு அவர் மகனுகப் பிறந்தார். அழகான தோற்றத்தையும், கூரிய அறிவையும் அவர் பெற்றிருந்தார். அவையே அவருக்குப் பகையாயின. அவரது சகோதரர்களும் ஏனேய உறவினர்களும் அவர்மீது பொருமை கொண்டார். ஒரு நாள் அவருடைய சகோதரர்கள் அவரை குதிரை கண்காட்சி ஒன்றினுக்கு அவரை அழைத்துச் செல்ல அவர்களுடைய தந்தையின் அனுமதி கோரினுர்கள். இல்துத் மிஷை விட்டு எப்போதும் அவர் தந்தை பிரிந்திருப்ப தில்லே. அன்று ஏனே அவர் சம்மதம் கொடுத்துவிட்டார். வெளியே அழைத்துச் சென்ற இல்துத் மிஷின் சகோதரர்கள் அவரை அடிமை அங்காடியில் விற்றுவிட்டார்கள். பல ஆண்டுகள்

[1] ACHI, p. 210.

இல்தூத்மிஷ் தம் வாழ்நாளை அடிமை வியாபாரிகளிடம் செல வழித்து வந்தார். முதலில் அவர் புக்காராவிற்கு கொண்டு செல்லப்பட்டார். அந் நகரின் சதர் இ ஜஹானுடைய உறவினர் ஒருவருக்கு அவர் விற்கப்பட்டார். அக் குடும்பத்தினர் யாவரும் மிகவும் நல்லவர்கள்; மரியாதைமிக்கவர்கள். எனவே இல்தூத் மிஷை அவர்கள் அன்புடன் கவனித்து வந்தார்கள். சில காலத் திற்குப் பிறகு புகாரா ஹாஜி என்ற பெயருடைத்த ஓர் அடிமை வியாபாரி அவரை விலைகொடுத்து வாங்கினுர். அதன் பிறகு ஜமாலுத்தீன் முகமது குஸ்த் காபா என்ற வியாபாரி அவரை வாங்கினுர். பாக்தாத்தில் சிறிது காலம் இல்தூத் மிஷ் தங்கி யிருந்ததாக இசாமி கூறுகிறுர். அக்காலத்தில் சிறந்து விளங்கிய ஷெயிக் ஷிஹாப்புத்தீன் சுரவர்த்தி போன்ற ஞானிகளுடன் அவருக்கு தொடர்பு ஏற்பட்டது. அதன் பின்னர் அவர் கஜினிக்குக் கொண்டு செல்லப் பட்டார், அவருடைய அழகையும், அறிவு ஒளிவீசும் முகத்தையும் கண்டபலர் அவரை வாங்குவதற்குப் போட்டியிட்டனர். அதைக் கேள்வியுற்ற முயீஸ் உத்தீன் 1,000 பொற்காசுகள் கொடுத்து அவரையும் அவருடன் கூட மற்ெருரு வரையும் வாங்க விருப்பம் தெரிவித்தார். ஜமாலுத்தீன் அந்த விலைக்கு அவரை விற்க சம்மதிக்கவில்லை. அதனுல் கோபமடைந்த சுல்தான் கஜினியில் அவரை விற்கக் கூடாது என தடை உத்தரவு ஒன்றைப் பிறப்பித்தார். எனவே ஜமாலுத்தீன் புகாரா திரும்ப வேண்டியதாயிற்று. மூன்று ஆண்டுகள் கழித்து ஜமாலுத்தீன் இல்தூத் மிஷை அழைத்துக் கொண்டு மீண்டும் வந்தார். அங்கு ஓராண்டுக் காலமாக அவரை விற்க முயற்சி செய்து வந்தார். அந்த நேரத்தில் குத்புத்தீன் அய்பெக் அவரைக்காண நேர்ந்தது. குஜராத் படையெடுப்பை முடித்துக்கொண்டு குத்புத்தீன் அய்பெக் முயீஸ் உத்தீனுடைய கட்டளைக்கிணங்கி கஜினி சென்ருர் என்பதை ஈண்டு நினைவு கூர்தல் அவசியமாகும். இல்தூத்மிஷின் தோற்றம் குத்புத்தீனை வெகுவாகக் கவர்ந்து விட்டது. ஆகவே அவரை வாங்குவதற்கு முயீஸ் உத்தீனுடைய அனுமதியைக் கோரினுர். கஜினியில் இல்தூத்மிஷை விற்கக் கூடாது என்று தடை யுத்தரவு அவர் பிறப்பித்திருந்தமையால் அவரை டில்லிக்கு கொண்டுபோய் அங்கு வாங்கிக்கொள்ளும்படி யோசனை கூறினுர். எனவே இல்தூத்மிஷ் டில்லிக்குக் கொண்டு செல்லப்பட்டார். அவருடன் தம்காஜ் (Tamghaj) என்ற அடிமையையும் சேர்த்து நூருயிரம் ஜடால்களுக்கு வாங்கிக் கொண்டார். தம்காஜ் படிப் படிப்படியாக உயர்ந்து உயர்ந்து இறுதியில் தபாரிஸ்தாவின் முக்தாவானுர். குத்புத்தீனுக்கும் யால்டூஸுக்கும் இடையே நடைபெற்ற போரில் அவர் உயிரிழந்தார்.[1]

[1] ACHI, p. 212.

இல்தூத்மிஷை விலைக்கு வாங்கியவுடனேயே அவரை சர்ஜன்தார் அல்லது தலைமை மெய்க்காவலர் பதவியில் குத்புத்தீன் நியமித்தார். எடுத்த எடுப்பிலேயே அத்தகைய உயர் பதவியை ஓர் அடிமைக்கு அளிப்பதென்பது ஓர் அரிய நிகழ்ச்சியாகும். பிறகு அவர் படிப்படியாக உயர்ந்து அமூர் இ ஆகூர் பதவியைப் பெற்றார். குவாலியர் முஸ்லீம்களின் கைவசம் வந்தபோது அவர் அதற்கு அமீராக நியமிக்கப்பட்டார். அதன் பின்னர் அவர் பரனுக்கு இக்தாதாரராக நியமனம் பெற்றார். அப்போது அவர் காட்டிய நிருவாகத் திறமையைப் பாராட்டி குத்புத்தீன் அவரை பதோனுக்கு மாற்றினார். அக்காலத்தில் டில்லி அரசில் பதோன் இக்தாவே மிகப் பெரியதாகக் கருதப்பட்டது. மேற்கண்ட நியமனங்கள் ஒரு பெரிய உண்மையை விளக்குகின்றன. அதாவது அக்காலத்தில் முயீஸ் உத்தீன் மட்டுமல்லாமல் அவரது அடிமைகளும் உயர் அதிகாரிகளை நியமிக்கும் உரிமை பெற்றிருந்தார்கள் என்பதாகும். 1205-06ஆம் ஆண்டில் முயீஸ் உத்தீன் கோக்கர்களைத் தண்டிப்பதற்காகத் இந்தியாவிற்கு படை நடத்திச் சென்றபோது குத்புத்தீனைத் தமக்கு உதவியாக வரும்படி கட்டளையிட்டார். அப்போது குத்புத்தீன் தம்முடன் இல்தூத்மிஷையும் அழைத்துச் சென்றார். அப்போது நடைபெற்ற சண்டையில் இல்தூத்மிஷ் வீராவேசத்துடன் போர் செய்தார். கோக்கர்களை ஜீலம் நதிவரை துரத்திச் சென்று பல கோக்கர்களைக் கொன்றார். அவை யாவற்றையும் கண்டு வந்த முயீஸ் உத்தீன் இல்தூத்மிஷிற்கு சிறப்பு ஆடை அணிவித்து அவருக்கு மரியாதை செலுத்தினார். அவருக்குச் சுதந்திரத்தையும் அளிக்கும்படி செய்தார். அதுமட்டுமின்றி அவர் பேரும் புகழும் அடைவதற்குரியப் பண்புகளைப் பெற்றுள்ளார் என்றும், ஆகவே, அவரை நல்லபடியாக நடத்தி வரவேண்டும் என்றும் குத்புத்தீனுக்கு சுல்தான் அறிவுரை கூறினார்.[1] முயீஸ் உத்தீனுடைய வயதிலும், அனுபவத்திலும் மூத்த அடிமை அதிகாரிகள் பலர் இருக்க அவர்கள் எல்லோரையும் விட்டுவிட்டு தம் அடிமையின் அடிமையை விடுவித்து அவருக்கு கௌரவ ஆடையை அணிவித்தது இல்தூத்மிஷின் வாழ்நாளில் மறக்கமுடியாத ஒரு அரிய நிகழ்ச்சியாகும்.

### சுல்தானாகப் பதவியேற்றபோது இல்தூத்மிஷை எதிர் நோக்கியிருந்த பிரச்சினைகள் :

இல்தூத்மிஷ் அரியணை ஏறுவதை சில முயீஸி அமீர்களும், துருக்கிய அமீர்களும் விரும்பவில்லை. அவர்கள் டில்லிக்கு வெளியே சென்று கலகம் செய்ய திட்டமிட்டு வந்தார்கள். யால்டூஸ் மீண்டும் டில்லி அரசின்மீது மேலாதிக்க உரிமையைக் கொண்டாடி

[1] Minhaj, p. 170.

ஒரு குடையையும், ஒரு குறுந்தடியையும் அனுப்பி வைத்தார். குபாச்சா மூல்தானில் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தார். அவர் தம் ஆதிக்கத்தைப் பரப்ப முயற்சித்து வரலானுர். அதன் விளைவாக லாகூர், பாதிந்தா, சர்சுதி ஆகியவை அவரது ஆதிக் கத்தின் கீழ் கொண்டுவரப்பட்டன. அலிமர்தன் வங்காளத்தில் சுய ஆட்சியை ஏற்படுத்த முனைந்தார். இந்த மூன்று முக்கிய அதிகாரிகளுக்கும் இல்துத்மிஷிற்கும் இடையே எத்தகைய உறவு முறை அமையவேண்டும் என்ற பிரச்சினைக்கு உடனடியாக முடிவு காண வேண்டியதாக இருந்தது. அவர்கள் மூவரையும் ஆங்காங்கே செல்வாக்குடன் விளங்க அனுமதித்துவிட்டால் டில்லி சுல்தானியம் நிலைபெறுவதற்கில்லை என்பது அனைவரும் அறிந்ததே. அவர்களை ஒழித்துக்கட்டுவதென்பது உடனடியாக மேற் கொள்ளத்தக்க காரியமாகத் தெரியவில்லை. அவர்கள் யாவரும் பலம் பொருந்தியவர்களாக இருந்தமையால் அவர்களைத் திட்ட மிட்டுத்தான் அழிக்க இயலும் என்பதை இல்துத்மிஷ் உணர்ந்தார். மேலும் அவருடைய பலம் முழுவதையும் ஒன்று திரட்டினுல் அன்றி அக்காரியத்தை நிறைவேற்ற இயலாதென்றும் அவர் அறிந்தார். ஆகவே அவர்களைப் பொறுத்தளவில் இல்துத்மிஷ் மிகக் கவனமாக நடக்க வேண்டியதாக இருந்தது. முஸ்லிம் ஆதிக்கத்திலிருந்து பல இந்து அரசுகள் தம்மை விடுவித்துக் கொண்டுவிட்டன. அவற்றுள் ஜலோர், இரண்தம்பார் குறிப் பிடத்தக்கனவாகும். அதுமட்டுமன்றி ஏனைய பகுதிகளிலும் டில்லி அரசின் ஆதிக்கக் கட்டு தளர்ந்துவிட்டது. அவற்றை மீண்டும் டில்லியுடன் இறுகப் பிணைத்தாலன்றி டில்லி சுல்தானியம் நிலையாக இருக்கமுடியாது என்ற சூழ்நிலை உருவாகியிருந்தது. மத்திய ஆசியாவில் ஏற்பட்டு வந்த அரசியல் மாற்றங்களும் டில்லிக்கு ஆபத்து விளைவிப்பனவாக இருந்தன. கோராசம் ஷா தம் ஆதிக்கத்தை கஜினியில் ஏற்படுத்திவிட்டதால், டில்லி அரசின் மீது உரிமை கொண்டாடி இந்தியாவின்மீது படையெடுத்து அவர் வரக்கூடும் என்ற அச்சமும் ஏற்பட்டது. கோராசம் ஷா யால்டூஸை விட அதிகமான பலத்தைப் பெற்றிருந்தமையால் அவரால் இந்தியாவிற்கு ஏற்படவிருந்த ஆபத்தும் அதிகமாகத் தோன்றியது.

இப்பிரச்சினைகளை இல்துத்மிஷ் எவ்வாறு சமாளித்தார் என் பதை கவனிப்போம். இல்துத்மிஷ் தீர்வுகாண முயன்ற முதல் பிரச்சினை கலகத்தில் ஈடுபட்ட அமீர்களைப் பற்றியதாகும். இல்துத்மிஷ் படையுடன் புறப்பட்டு டில்லிக்கு வெளியேசென்று அங்கு கூடியிருந்த முயீஸி, துருக்கிய அமீர்களை ஜுத் (Jud)

[1] ACHI, p. 213.

சமவெளியில் சந்தித்து தோற்கடித்தார். அவர்களுள் பலர் கொல்லப்பட்டனர். அதற்குப் பின்னரும் அவர்களுடன் அவர் போராட வேண்டியதாக இருந்தது. இறைவன் அருளால் அவ்ரை எதிர்த்த எல்லா அமீர்களையும் அவர் அடக்கி விட்டார்.[1]

அதனை அடுத்து யால்டூஸ் எழுப்பிய பிரச்சினைக்குத் தீர்வு காண முயன்றார். முயீஸ் உத்தீனுடைய மூத்த அதிகாரிகளுள் யால்டூஸ் முக்கியமானவராக இருந்தார். மேலும் அவர் இல்தூத்மிஷின் மாமனாருடைய மாமனார். அது மட்டுமின்றி அவர் கஜினியினை ஆளும் பாக்கியத்தைப் பெற்றிருந்தார். ஆகவே அவர் டில்லியரசு தமக்கு அடங்கியிருக்க வேண்டுமென்று எண்ணினார். ஆகவேதான் அரசு சின்னங்களான குடையையும் குறுந் தடியையும் இல்தூத்மிஷிற்கு அனுப்பி வைத்தார். அந்த நேரத்தில் ஏற்பட்டிருந்த சூழ்நிலையில் அவற்றை ஏற்க மறுத்து அதனால் யால்டூஸினுடைய பகைமையைச் சம்பாதித்துக் கொள்ள விரும்பவில்லை. யால்டூஸிடமிருந்து தம்மை விடுவித்துக் கொள்ளு வதற்குரிய காலம் வரும்வரை காத்திருப்பதே மேலெனக் கருதி அவற்றை ஏற்றுக் கொண்டார். அக்காலமும் விரைவிலேயே வந்துவிட்டது. கோராசம் ஷாவினுடைய தாக்குதலை எதிர் கொள்ள இயலாது யால்டூஸ் கஜினியிலிருந்து பஞ்சாபை நோக்கி ஓடி வந்தார். லாகூரை அப்போது ஆண்டு வந்த குபாச்சா அவரை எதிர்க்க இயலாது லாகூரை விட்டொழித்தார். அதன் பிறகு யால்டூஸ் தம் அதிகாரத்தை மேலும் பரப்ப முயற்சி மேற் கொண்டார். தானேஸ்வரம்வரை அவரது ஆதிக்கம் பரவியது. யால்டூஸை இனி எதிர்க்காது விட்டால் அவர் டில்லி யைக் கைப்பற்ற முயற்சிப்பார் என்று அதுவரை வாளாயிருந்த இல்தூத்மிஷ் உணர்ந்தார். அதற்கேற்றாற்போல் யால்டூஸ் ஒரு தூதுவரை இல்தூத்மிஷிடம் அனுப்பி தாமே முயீஸ் உத்தீனுடைய உண்மையான வாரிசுதாரர் என்றும், ஆகவே இந்துஸ்தானத்தை ஆளும் உரிமை தமக்கே உரியது என்றும் கூறும்படிச் செய்தார். 'காலம் மாறி விட்டது. புதியதொரு அமைப்பு தற்போது நடை முறையில் இருக்கிறது. கஜினி கோரி அரசர்களுக்கு என்ன கதி ஏற்பட்டது என்பதை சிந்தித்துப் பார். மரபு வழியாக அரசுரிமையைப் பெறுகின்ற நாட்கள் மறைந்து விட்டன' என்று இல்தூத்மிஷ் யால்டூஸுக்கு செய்தியை அனுப்பினார்.[2] இந்த வகையான பதில் யால்டூஸுக்கு எரிச்சலை மூட்டியது. ஆகவே இல்தூத்மிஷ் அவருடன் கலந்து பேசி ஒரு முடிவுக்கு வரத்தயாராக இருப்பதாக செய்தியை அனுப்பிய போதிலும், யால்டூஸ் போரிடு

[1] Minhaj, 170-71
[2] Futuh us Salatin, Madras ed., 110-111.

வதற்கு ஆயத்தமானுர். தரெயின் என்னுமிடத்தில் நடைபெற்ற போரில் யால்டூஸ் தோல்வியடைந்தார்.[1] முவாயித் உல் முல்க் முகமது ஜுனெய்தி எய்த அம்பு ஒன்றினுல் காயமுற்ற யால்டூஸ் போர்க்களத்தில் சிறைபிடிக்கப் பட்டார்.[2] அதன் பின்னர் அவர் பதோனுக்குக் கொண்டு செல்லப்பட்டார். பதோனில் அவர் கொலையுண்டார். டில்லி அரசைக் கைப்பற்ற முனைந்த ஒரு பலம் பொருந்திய பகைவரை இல்தூத்மிஷ் அழித்து விட்டார். கஜினிக்கும், டில்லிக்கும் இடையே ஏற்பட்டிருந்தத் தொடர்பு ஒழிக்கப்பட்டது. அதன் விளைவாக டில்லி அரசு சட்ட முறையாகத் தனித்தியங்க வழி ஏற்பட்டது. இவ்வாருக ஒரே கல்லில் இரண்டு மாங்காய்களை வீழ்த்தி இல்தூத்மிஷ் தம்முடைய பெருமையை உயர்த்தி விட்டார்.

யால்டூஸைத் தோற்கடித்த உடனே அவர் லாகூரைக் கைப்பற்றியிருக்கக்கூடும். அந்த வகையான நடவடிக்கை குபாச்சாவின் எதிர்ப்பைத் தூண்டிவிடக்கூடும் என்று இல்தூத்மிஷ் அறிந்தார். அந்த நேரத்தில் குபாச்சாவின் பகைமையைத் தேடிக் கொள்ள இல்தூத்மிஷ் விரும்பவில்லை. எனவே குபாச்சாவுடன் ஓர் உடன்பாடு செய்து கொண்டார். அதன்படி லாகூரை ஆண்டு வரும் பொறுப்பு குபாச்சாவிற்கு அளிக்கப்பட்டது. இந்த அரசியல் சார்ந்த வெற்றி குபாச்சாவை தலைகால் புரியாமல் ஆடச் செய்து விட்டது. சிர்ஹிந்த்வரை தமது ஆதிக்கத்தைப் பரப்பு வதற்கான முயற்சியில் அவர் ஈடுபடலானுர். பஞ்சாப் முழுவதை யும் குபாச்சாவிற்கு விட்டுக்கொடுக்க இல்தூத்மிஷ் விரும்பவில்லை. ஆகவே குபாச்சாவின்மீது போர் 1217-ல் தொடுத்தார். இல்தூத்மிஷை எதிர்க்க இயலாது குபாச்சா ஓடினுர். ஆயினும் இல்தூத்மிஷ் அவரைப் பின் தொடர்ந்து சென்று மன் சூராவிற்கருகே போரிடும்படி வற்புறுத்தினுர், போரில் குபாச்சா படுதோல்வியுற்ருர், லாகூர் இல்தூத்மிஷ் கைவசமாயிற்று. தம்முடைய மகனுன நாசீர் உத்தீன் மாமூதிடம் லாகூரை ஒப்படைத்துவிட்டு இல்தூத்மிஷ் டில்லி திரும்பினுர். இவ்வாருக சிந்துநதிப் பள்ளத்தாக்கு நோக்கி இல்தூத்மிஷ் தமது ஆட்சி எல்லையினைப் படிப்படியாக பரப்பி வந்தார். அந்த நேரத்தில் அவருக்கு மற்ருெரு பெரும் சோதனையும் ஏற்பட்டது. அச்சோதனை யைப் பற்றி சிறிது கவனிப்போமாக.

[1] Minhaj 135; சாமானுவில் இப்போர் நடைபெற்றதாக ஹசன் நைஜாமி கூறியுள்ளார்.

[2] போர்க்களத்திலிருந்து ஹான்சிக்கு ஓடியதாகவும், அங்கு அவர் சிறை பிடிக்கப் பட்டார் என்றும் இசாமி கூறுகிருர். (Futuh us Salatin 112).

1203ஆம் ஆண்டில் தெமுசின் என்பவரை மங்கோலியர்கள் தங்களுடைய கான் (Khan) ஆகத் தேர்ந்தெடுத்து அவருக்கு செங்கிஸ்கான் என்ற பட்டத்தை அளித்தார்கள். செங்கிஸ்கான் என்பதற்கு மிகப் பலம் பொருந்திய அரசர் என்று பொருள். அவரது தலைமையின் கீழ் மங்கோலியர்கள் தங்களுடைய பிறப்பிடத்தை விட்டு பனி மலை புரண்டு வருவது போன்று புறப்பட்டு மத்திய ஆசியாவிற்கு வந்தார்கள். அங்கு அமைக்கப் பட்டிருந்த கோராசம் பேரரசு அவர்களை எதிர்க்க இயலாது அழிவுற்றது. கோராசம் ஷாவினுடைய மூத்த மகனான ஜலாலுத் தீன் மன்க்பர்னி செங்கிஸ்கானுடைய பிடியிலிருந்து தப்பித்துக் கொண்டு ஆப்கானிஸ்தானம் நோக்கி ஓட்டம் பிடித்தார். செங்கிஸ்கான் அவரை விடாது தொடர்ந்து வந்தார். இறுதியில் ஜலாலுத்தீன் சிந்து நதிக் கரையை அடைந்தார். தம்முடன் இருந்த 700 வீரர்களுடன் பின் தொடர்ந்து வந்த செங்கிஸ்கானை அவர் எதிர்த்து போராடுவதைவிட வேறு வழி அவருக்குப் புலப் படவில்லை. எண்ணிக்கையில் உயர்ந்திருந்த செங்கிஸ்கானுடைய படைகளின் கைகள் படிப்படியாக ஓங்கின. எனவே மன்க்பர்னி ஆற்றை நோக்கி மெதுவாக பின்னடைய நேரிட்டது. ஒருபுறம் செங்கிஸ்கானுடைய படைகள் நெருங்கி வர மறுபுறம் சிந்துநதி மன்க்பர்னியுடைய படைகள் மேலும் பின்னடையவொட்டாது தடுக்க, மன்க்பர்னிக்கும் செங்கிஸ்கானுக்கும் இடையே ஏற்பட் டிருந்த இடைவெளி குறுகலாயிற்று. படையை அணிவகுத்துப் போர் செய்வதற்குப் போதுமான இடைவெளி இப்போது இல்லாது போயிற்று. அந்த இக்கட்டான நிலையைப் புரிந்து கொண்ட மன்க்பர்னியினுடைய நெருங்கிய உறவினர் ஒருவர் மன்க்பர்னியினுடைய குதிரையின் கடிவாளத்தைப் பற்றிக் கொண்டு போர்க்களத்திலிருந்து அவரைப் பின்னுக்கு அழைத்துச் சென்றார். மனைவியையும் மக்களையும் விட்டு விட்டு தாம் தப்பி யோடுவதைத்தவிர வேறு வழி அவருக்குத் தெரியவில்லை. எனவே கண்களில் நீர் மல்க தம் குடும்பத்தாரிடம் இறுதி விடை பெற்றுக் கொண்டு குதிரை மீது ஏறிக் கொண்டு சிந்து நதியில் ஏறக்குறைய 38 ஆழதூரம் குதித்து ஆற்றில் நீந்திக் கொண்டு மறுகரையை அடைந்தார்.[1] சிந்து நதிக்கரை வரை அவரைப் பின் தொடர்ந்து வந்த செங்கிஸ்கானும், மங்கோலியர்களும் அந்தக் காட்சியைக் கண்டு, அவர்கள் ஆச்சரியத்தினால் வாயைப் பொத்திக் கொண்டு ஒரு கணம் அப்படியே நின்றுவிட்டனர் என்று கூறப்படுகிறது. ஒரு தகப்பனுக்கு இந்த மாதிரியான பிள்ளை அல்லவா இருக்க

[1] 10 எல்கள் ஒரே தாவில் தாண்டினார் என்று கூறப்படுகிறது 1 எல் 45 அங்குலங்களுக்குச் சமம்,

வேண்டும் என்று செங்கிஸ்கான் அப்போது கூறியதாக நாம் அறிகிறோம்.[1]

செங்கிஸ்கானுடைய படையெடுப்பு இந்திய அரசியலில் ஒரு கொந்தளிப்பை ஏற்படுத்திவிட்டது. பஞ்சாபும், சிந்துசாகர் தோவாப்பின் வடபகுதியும் போர் அரங்கமாக மாற்றப்பட்டு விட்டன. பஞ்சாப் பகுதியில் தமது ஆதிக்கத்தினுக்குப் பங்கம் விளையுமோ என்ற அச்சம் குபாச்சாவிற்கு ஏற்பட்டது. செங்கிஸ் கானால் விரட்டியடிக்கப்பட்ட ஜலாலுத்தீன் மன்க்பர்னி பஞ்சாபில் தமது ஆட்சியை ஏற்படுத்த விரும்பினார், சிந்து நதியை அடைந்ததும் செங்கிஸ்கான் தாம் மேற்கொண்டு செய்ய வேண்டுவதைப்பற்றி அறிய ஆட்டின் தோள்களைத் தீயில் காட்டினார். ஒரு குறிப்பிட்ட குறியை சுடப்பட்டு வருகின்ற ஆட்டின் தோள்களில் காண நேர்ந்தால் கடவுள் அவர் செய்ய நினைத்திருந்ததற்கு ஒப்புதல் அளித்து விட்டார் என்று பொருள். செங்கிஸ்கான் வட இந்தியாவிற்குள் நுழைந்து அங்கிருந்து இமய மலையைக் கடந்து மங்கோலியாவிற்கும் அங்கிருந்து சீனாவிற்கும் செல்ல அவர் உத்தேசித்திருந்தார். பல முறை ஆட்டின் தோள்களைத் தீயில் காட்டிவந்த போதிலும் எதிர்பார்த்திருந்த குறியை அவற்றில் காண முடியாததால், அத்திட்டத்தைக் கைவிட்டார் என்று கூறப்படுகிறது. வடஇந்தியாவின் வழியாக இமாலய மலையைக் கடந்து சீனாவிற்குச் செல்லும் போது ஏற்பட விருந்த கஷ்ட நஷ்டங்களை முன்கூட்டியே அவர் அறிந்து கொண்டதால் அந்த முயற்சியைக் கைவிட்டார் என்று கூறுவாரும் உளர். வடஇந்தியாவிற்குள் படை நடத்திச் செல்லும் எண்ணத்தை அவர் கைவிட்டார் என்றாலும் தம்முடைய அதி காரிகள் சிந்து நதியைக் கடந்து செல்லுவதைத் தடைசெய்ய வில்லை. எனவே பல மங்கோலியத் தலைவர்கள் சிந்துவைக் கடந்து சிந்துசாகர் தோவாபின் வடபகுதிக்கு வந்தனர். அங்கு ஏற்பட்ட அரசியல் குழப்ப நிலையைப் பயன் படுத்திக் கொண்டு கோக்கர்கள் தங்களுடைய செல்வாக்கைப் பெருக்க முற்பட்டனர். ஜலா லுத்தீன் மன்க்பர்னி இதையறிந்து அவர்களுடன் திருமணவுறவை ஏற்படுத்திக் கொண்டார். சன்ஸர் என்ற கோக்கர் தலைவருடைய மகளை அவர் மணம் புரிந்து கொண்டார். இவ்வாறாக இந்த நான்கு பேர்களும் சேர்த்து பஞ்சாபையும் சிந்து சாகர் தோவாபையும் போர் அரங்கமாக மாற்றிவிட்டனர். இல்தூத்மிஷ் அந்நால்வரும் ஈடுபட்டிருந்த போராட்டத்தில் கலந்து கொள் ளாமல் தூர இருந்து கொண்டு அதனுடையப் போக்கை கவனித்து

[1] Tarikhi Jahan Gusha English Translation Boyli, II 409-411

வருவதென முடிவு செய்தார். அப்போரில் ஈடுபட்டிருந்தவர்களுள் யார் அழிந்தாலும் தமக்கு நன்மை ஏற்படுமேயொழிய தீங்கு நேராது என்று இல்தூத்மிஷ் திடமாக நம்பியிருந்தார். அந்த நேரத்தில் செங்கிஸ்கானிடமிருந்து வந்த தூதுவர் ஒருவர் இல்தூத்மிஷைச் சந்தித்தார் அத்தூதுவர் கொண்டுவந்த செய்தியைப் பற்றியோ அவரை எவ்வாறு இல்தூத்மிஷ் நடத்தினர் என்பது பற்றியோ நாம் ஒன்றும் அறிவதற்கில்லை. மன்க்பர்னிக்கு இல்தூத்மிஷ் உதவி செய்வதைத்தடுத்து நிறுத்துவதற்காக இத் தூதுவர் அனுப்பப்பட்டிருக்கக் கூடும். செங்கிஸ்கானையும் அவருடைய மங்கோலியத் தலைவர்களையும் புண்படுத்தாதவாறு இல்தூத்மிஷ் நடந்து கொண்டிருப்பார் என்பதை மட்டும் நாம் உறுதியாகக் கூற இயலும்.

அதையடுத்து ஜலாலுத்தீன் மன்க்பர்னியும் இல்தூத்மிஷிடம் அயின் உல்முல்க் என்ற தூதுவரை அனுப்பி வைத்தார். ஆப்கானிஸ்தானத்திலிருந்து ஓடிவந்த ஜலாலுத்தீன் தமது ஆட்சியை முதலில் சிந்துசாகர் தோவாப்பில் ஏற்படுத்தினர். பிறகு சியால் கோட் மாவட்டத்திலுள்ள பஸ்ரோர் (Basraur) என்னும் கோட்டையைக் கைப்பற்றி டில்லிக்கு வெகு அருகாமையில் அவர் வந்து விட்டார். அங்கிருந்து 2 அல்லது 3 நாள் பிரயாணம் செய்தால் அவர் டில்லியை அடைந்து விடக்கூடும். டில்லிக்கருகே வந்து விட்டோமே என்ற இறுமாப்பில் அவர் இல்தூத்மிஷிடம் தூது அனுப்பி வைத்தார். அவரும் இல்தூத்மிஷும் ஒருவருக்கொருவர் துணையாக இருந்து சுகதுக்கங்களைச் சமமாகப் பங்கிட்டுக் கொண்டால் அவர்கள் இருவருடைய நோக்கங்களும் நிறைவேறி விடும் என்றும், அவர்கள் இருவரும் ஒன்றுபட்டார்கள் என்பதைப் பகைவர்கள் கேள்விப்பட்ட மாத்திரத்திலேயே அவர்கள் வலிமையை இழந்து விடுவார்கள் என்றும் அவர் சொல்லி அனுப்பினர். இல்தூத்மிஷினுடைய நாட்டிலே சில நாட்கள் தங்க அவர் அனுமதிகோரினர். அவையாவற்றையும் கேட்ட பிறகு இல்தூத்மிஷிற்கு என்ன செய்வதென்பதே புரியவில்லை. ஓர் அரசர் தங்கி வசிப்பதற்கு உகந்த ஓர் இடம் தம் நாட்டில் இல்லாமையால் ஜலாலுத்தீனுடைய வேண்டுகோளை நிறைவேற்ற முடியவில்லை என்று சில நாட்கள் கழிந்த பிறகு தகவல் சொல்லி அனுப்பினர். அது மட்டுமன்றி அயின் உல்முல்க்கை தாக்கி அவரைக் கொன்று விட்டார். இறுதியில் ஜலாலுத்தீனுடன் போர் செய்ய டில்லியிலிருந்து புறப்பட்டார். ஜலாலுத்தீன் அவருடன் போர் செய்ய விரும்பாமல் பலாலா-நிகலா பகுதிக்குச் சென்று விட்டார். அங்கு 10,000 பேர்கள் கொண்ட படையொன்றைத் திரட்டிக் கொண்டு குபாச்சாவின் மீது போர் தொடுத்தார். அப்போது கோக்கர்கள்

அவருக்குப் பேருதவி செய்தனர். ஊச்சுக்கருகே நடைபெற்ற போரில் குபாச்சாவின் படை சிதறடிக்கப்பட்டது. தோல்வியடைந்த குபாச்சா பக்கர் வழியாகச் சென்று மூல்தானை அடைந்தார். ஜலாலுத்தீனுடன் சமாதானம் செய்து கொள்வதே மேல் என்று கருதிய குபாச்சா உடனே அவருடன் சமாதானப் பேச்சுகளை நடத்தினார். தாம் இதுகாறும் கைப்பற்றிய வீரர்களைத் திருப்பி அனுப்பவும், ஒரு பெரிய தொகையை ஜலாலுத்தீனுக்குக் கொடுக்கவும் குபாச்சா ஒப்புக்கொண்டார். குபாச்சாவின் ஆட்சிப் பகுதிகளைத் தாக்குவதில்லை என்று ஜலாலுத்தீன் வாக்களித்தார். அதன் பிறகு ஜுத்மலைப் பகுதிக்குச் சென்று அங்கு கோடைகாலத்தை கழிக்கத் தொடங்கினார். ஆனால் அங்கு அவர் அதிக நாள் நிம்மதியுடன் வாழ மங்கோலியர்கள் விடவில்லை. எனவே அங்கிருந்து அவர் மங்கோலியர்களை எதிர்கொள்ளப் புறப்பட்டார். போகும் வழியில் மூல்தானில் குபாச்சாவைச் சந்தித்து தமக்கு செருப்புக்காசு (shoe money) கொடுக்கும்படிக் கேட்டார். அது குபாச்சாவின் கோபத்தைக் கிளறிவிட்டது. மூல்தானில் அதிக நேரம் தங்க இயலாமையால் ஜலாலுத்தீன் அங்கிருந்து ஊச்சுக்குப் புறப்பட்டார். குபாச்சா அவரைப்பின் தொடராது மூல்தானிலேயே நிலையாக நின்று விட்டார். 1224ஆம் ஆண்டில் ஜலாலுத்தீன் இந்தியாவை விட்டு நீங்கினார். அவர் இந்தியாவை விட்டு போவதற்கு முன் ஊச்சை தீக்கிரையாக்கினார். சேவானைக் கைப்பற்றினார். தோபால் அரசரை அவரது நாட்டினின்றும் துரத்தி விட்டார். தாம் கைப்பற்றிய இடங்களை ஹசன் கார்லீ, உஸ்பெக்பாய் ஆகியோரிடம் ஒப்படைத்து விட்டார். இவ்விரு அதிகாரிகளும் மங்கோலியர்களுடைய தாக்குதலை எதிர்கொள்ள இயலாமல் அடிக்கடி குபாச்சாவின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்த சிந்து சமவெளியைத் தாக்கினார்கள். அதன் விளைவாக குபாச்சாவின் கஷ்டங்கள் மேலும் பெருகின. இந்த மாதிரியான நிலை இல்தூத்மிஷிற்கு சாதகமாக அமைந்து விட்டது.

1228ஆம் ஆண்டில் இல்தூத்மிஷ் குபாச்சாவை இறுதியாக ஒழித்துக் கட்டுவதென முடிவு செய்தார். லாகூரின் ஆளுநரான நாசீர் உத்தீன் இத்மாரை மூல்தானைத்தாக்கும்படி கட்டளையிட்டு விட்டு, ஊச்சை நோக்கித் தாமே மற்றொரு படையை நடத்திச் சென்றார். இந்த இருமுனைத் தாக்குதலை எதிர்கொள்ளுவதற்காக குபாச்சா தமது பாசறையை அஹ்ராவத் என்னுமிடத்திற்கருகில் ஏற்படுத்தினார். பாசறைக்கு எதிரில் ஆற்றங் கரையில் தம்முடைய படையினர்களின் சாமான்கள் யாவற்றையும் படகுகளில் ஏற்றி வைத்திருந்தார். மூன்றுமாத முற்றுகைக்குப் பிறகு ஊச் கைப்பற்றப்பட்டது. குபாச்சா பக்கர் நோக்கி ஓடினார்.

இல்தூத்மிஷ் அவரைப் பின்தொடர்ந்தார். பக்கரிலும் தம்மை நிம்மதியாக வாழ விடமாட்டார்கள் என்பதை குபாச்சா அறிந்து கொண்டார். ஆகவே அவர் தம் மகனை இல்தூத்மிஷிடம் அனுப்பி சமாதானம் வேண்டினார். நிபந்தனையின்றி தம்மிடம் சரணடைய வேண்டும் என்று இல்தூத்மிஷ் செய்தி அனுப்பினார். அதற்கு குபாச்சா ஒத்துக்கொள்ளவில்லை. எனவே சிந்து ஆற்றில் குதித்து உயிரை மாய்த்துக்கொண்டார். குபாச்சாவின் மறைவிற்குப் பிறகு மூல்தானிலும், ஊச்சிலும் இல்தூத்மிஷ் தமது ஆளுநர்களை அமர்த்தி அவற்றை ஆண்டுவரச் செய்தார். அதன் பிறகு 12 முக்கியமான கோட்டைகளைக் கைப்பற்றி இல்தூத்மிஷ் தமது ஆதிக்கத்தை மெக்ரன் வரை பரப்பினார். தேபால், சிந்து ஆகியவற்றின் வாலி (wali) யான மலிக் ஷம்ஸுத்தீன் ஹபஷ் இல்தூத்மிஷின் மேலாதிக்கத்தை ஏற்றுக்கொண்டார். இவ்வாறாக பஞ்சாபும் சிந்தும் இல்தூத்மிஷின் ஆதிக்கத்திற்குட்படுத்தப் பட்டது.

சிந்து சமவெளியின் வடக்குப் பாகத்தில் இக்கட்டான நிலை தொடர்ந்து இருந்து வந்தது. மங்கோலியர்களுடைய தாக்குதல் ஓயவில்லை. ஹசன் கார்லியும், உஸ்பெக் பாயும் அத்தாக்குதலை சமாளிக்க இயலாது தங்களுடைய ஆட்சிப் பகுதிகளைச் சிறிது சிறிதாக இழந்து வந்தனர். அவர்களுக்கு உதவி செய்து மங்கோலியர்களைத் துரத்துவதா அல்லது அவர்களை மங்கோலியர்கள் தாக்கி அழித்து வருவதைக் கண்டு வாளாயிருப்பதா என்ற பிரச்சினை இல்தூத்மிஷை அலைக்கழித்து வந்தது. அவர்களுக்கு உதவி செய்ய முற்பட்டால் மங்கோலியர்கள் அவர்களை விட்டு இல்தூத்மிஷைத் தாக்க முற்படக் கூடும். அவர்களை அழிந்து போகும்படி விட்டு விட்டால் அவர்களைவிட பலம் பொருந்திய மங்கோலியர்கள் டில்லி அரசின் எல்லையைத் தொட்டுவிடுவார்கள். அதனால் டில்லி அரசுக்கு அடிக்கடி மங்கோலியர்களால் தொல்லைகள் உண்டாகும். எனவே சிந்து சமவெளியின் வடபகுதியில் நடைபெற்றுவந்த போராட்டத்தைக் கூர்ந்து கவனித்து வருவதுடன் மன நிறைவு கொண்டார். அதே நேரத்தில் எல்லையிலிருந்த அதிகாரிகளை மங்கோலியருக்குக் கோபம் ஏற்படாத வகையில் சீனுப், ஜீலம் பள்ளத்தாக்குகளைத் தம் ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவருவதற்கான முயற்சிகளை மேற்கொள்ளுமாறு கட்டளையிட்டிருந்தார். அவர் இறப்பதற்கு முன் சியால்கோட், ஹஜ்னேர் வரை டில்லி அரசினுடைய ஆதிக்கம் பரவியது.

இனி வங்காளம், பீகார் ஆகியவற்றை இல்தூத்மிஷ் தன் ஆதிக்கத்தின் கீழ் எங்ஙனம் கொண்டுவந்தார் என்பதை சற்று

கவனிப்போம். குத்புத்தீன் இறந்த செய்தியை அறிந்ததும் அலிமர்தன் லக்னௌதியில் தனியரசை ஏற்படுத்தினர் என்பதை முன்னர் கண்டோம். இல்தூத்மிஷின் கவனம் யாவும் வடமேற்குப் பிரச்சினைக்குத் தீர்வு காணுவதில் செலவிடப்பட்டு வந்தமையால் அலிமர்தன் தம் விருப்பம்போல் ஆட்சி செலுத்திவர இயன்றது. அவரது கொடுங் கோலாட்சியை சகிக்கவொண்ணாது அவரது அதிகாரிகள் அவரைக் கொன்று விட்டனர். அதையடுத்து ஹசாமுத்தீன் இவாஜ் கல்ஜி என்பவரைத் தங்கள் தலைவராக அவர்கள் ஏற்றுக்கொண்டனர். இவாஸ் கல்ஜியும் தம்மை முழு சுதந்திரமுள்ள அரசராக அறிவித்துக் கொள்ளும் வகையில் சுல்தான் கியாஸ் உத்தீன் என்ற பட்டத்தைச் சூட்டிக்கொண்டார். மேலும் இல்தூத்மிஷின் கவனம் சிந்து சமவெளிப்பற்றிய விவகாரங்களில் செலுத்தப்பட்டிருப்பதை அறிந்து தம்முடைய அதிகாரத்தை பீஹார்வரை பரப்பும் முயற்சியை மேற்கொண்டார். ஜாஜ்நகர், திர்ஹீத், பங்க் ஆகிய நாடுகளை அவருக்குக் கப்பம் செலுத்தி வரும்படி வற்புறுத்தினர். வடமேற்கு எல்லைப் பிரச்சினைகளை ஒருவாறு சமாளித்துவிட்ட பின்பு இல்தூத்மிஷ் கிழக்குப்பகுதி நோக்கித் தம் பார்வையைத் திருப்பினர். கங்கை யாற்றுக்குத் தெற்கேயிருந்த பீஹார் மாநிலங்களை வென்று அவற்றை ஆள மலிக்ஜானி என்பவரை ஆளுநராக நியமித்தார். அதன் பின்னர் கங்கையாற்றங்கரையோரமாக வங்காளம் நோக்கிப் புறப்பட்டார். இவாஸ் கல்ஜி முதலில் அவரை எதிர்த்துப் போராடுவதென முடிவுசெய்தார். அம்முயற்சி வெற்றி பெருது என அறிந்தவுடன் அவர் இல்தூத்மிஷிற்கு அடி பணிவதென தீர்மானித்தார். டில்லியினுடைய மேலாதிக்கத்தை இவாஸ் கல்ஜி ஏற்றுக் கொண்டார். ஒரு பெரிய தொகையை நஷ்ட ஈடாக வழங்கவும் ஒப்புக்கொண்டார்[1]. ஆகவே இல்தூத்மிஷ் இவாஸ் கல்ஜியைத் தொடர்ந்து வங்கத்தில் ஆட்சி செலுத்திவர அனுமதி வழங்கிவிட்டு டில்லி திரும்பினர். அவர் டில்லி சென்றுவிட்டதை அறிந்த இவாஸ் கல்ஜி தம் தலைநகரி லிருந்து புறப்பட்டுச் சென்று மலிக் ஜானியை பீகாரிலிருந்து துரத் தினர். இவாஸ் கல்ஜி மீண்டும் முழுச்சுதந்திரம் பெற்ற அரசராக நடந்து கொண்டார். செய்தியை அறிந்த இல்தூத்மிஷ் உடனடி யாக போர் நடவடிக்கைகளை மேற்கொள்ளுவதற்குப் பதிலாக மிக எச்சரிக்கையுடன் நடக்கலானர். அப்போது அவுத்தின் ஆளுநராகப் பணியாற்றிவந்த தம் மகன் நாசிர் உத்தீனை இவாஸ் கல்ஜியின் நடமாட்டங்களை மிகக் கவனமாக கண்காணித்து வரும் படியும், உரிய சந்தர்ப்பம் ஏற்படும்போது அவரைத் தாக்கும்

[1] Minhaj, 163, 171

படியும் கட்டளையிட்டார். இல்தூத்மிஷின் நடவடிக்கைகளை இவாஸ் கல்ஜி தவருகப் புரிந்து கொண்டார். தம்மைப் போர்க் களத்தில் சந்திக்க இல்தூத்மிஷ் பயப்படுகிருர் என்று இவாஸ் எண்ணினர். எனவே அவர் வங்காளத்திற்குக் கிழக்கேயுள்ள நாடுகளில் போர் நடத்தச்சென்று விட்டார். அதையறிந்ததும் நாசீர்உத்தீன் மாமூத் உடனே படைதிரட்டிக் கொண்டு லக்னோ தியை முற்றுகையிட்டார். தலைநகரைக் காக்க திரும்பி ஓடிவந்த இவாஸ் போரிட்டு உயிர் துறந்தார். லக்னோதி இல்தூத்மிஷின் கைவசமாயிற்று. நாசீர் உத்தீன் மாமுத் அதனை ஆளும் பொறுப் பைப்பெற்ருர். 1229-ல் நாசீர்உத்தீன் மாமுத் இறந்தார். அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு வங்காளத்தில் மலிக் இக்தியாருத்தீன் பல்கா கலகம் செய்தார்.[1] அதை அடக்க இல்தூத்மிஷ் மீண்டும் வங்கம் சென்ருர். கலகத்தை அடக்கிய பிறகு மலிக் அலாவுத்தீன் ஜானியை வங்கத்தின் ஆட்சியாளராக நியமித்தார். வங்கத்தை டில்லியின் ஆதிக்கத்தின் கீழ்க்கொண்டு வந்தது இல்தூத்மிஷின் மற்ருெரு அரியசாதனை யாகும்.

இராஜபுத்திரர்களை மீண்டும் டில்லி அரசின் ஆதிக்கத்திற்குட் படுத்தும் முயற்சியிலும் இல்தூத்மிஷ் பெருமளவு வெற்றியைக் கண்டார் என்றுதான் கூறவேண்டும். 1226ஆம் ஆண்டில் இரண்தம்பார் மீது படையெடுத்துச் சென்ருர். இரண்தம்பாரைக் கைப்பற்றும் முயற்சியில் அதுவரை 70 அரசர்கள் தோல்வியடைந் ததாகக் கூறப்படுகிறது. இல்தூத்மிஷ் அதனை எளிதில் வென்ருர். அதன் விளைவாக இராஜபுதனத்தில் இல்தூத்மிஷுக்கு ஒரு முக்கிய மான கோட்டை கிடைத்து விட்டது. கி. பி. 1227-ல் பரமாரர் களுடைய தலை நகரான மான்டோரை வென்ருர். இவ்விரு இடங்களிலும் துருக்கியப் படைகள் நிறுத்தப்பட்டன. 1228-ல் ஜாலோரை முற்றுகையிட்டார். அதனை ஆண்டுவந்த உதயசிங் என்ற சௌஹான் அரசர் மிகக்கடுமையாக எதிர்த்துப் போரா டினர். ஆயினும் இறுதியில் இல்தூத்மிஷே வெற்றி பெற்ருர். ஜாலோரை டில்லி அரசுடன் இணைப்பதற்குப் பதிலாக அதனை உதயசிங்குக்கே திருப்பி அளித்து விட்டார். அதற்குப் பதிலாக உதயசிங் கப்பம் செலுத்திவர ஒப்புக் கொண்டார். பயானவை யும் தங்கீரையும் மீண்டும் கைப்பற்றினர். அடுத்து ஆஜ்மீர், சாம்பர், நாகோர் ஆகிய இடங்களை, மீண்டும் டில்லியின் ஆதிக் கத்திற்குட்படுத்தினர். 1231-ல் குவாலியரை முற்றுகையிட் டார். மங்கல்தேவா என்ற பரிஹார அரசர் அப்போது அதனை ஆண்டுவந்தார். பதினேரு மாதங்கள் முற்றுகைக்குப்பிறகு இல்தூத்மிஷ் அதனைப் பெற்ருர். அதனுடைய நிருவாகத்தைக்

[1] இவர் இவாஸ் கல்ஜியின் மகன் என்று ராவெர்டி கூறுகிருர்

கவனிக்க மஜ்துல் முல்க்ஜியா உத்தீன் முகமது ஜுனெய்தியை அமீர்-இ. தாத் ஆகவும் சிபா சாலார் ரஷீத்உத்தீன் என்பவரை கொத்தவாலாகவும் நியமித்தார். இரண்டாண்டுகளுக்குப் பின்னர் சுல்தான்கோட், பயானு ஆகிய இக்தாக்களையும் குவாலியர் கோட்டையையும் மலிக்நஸ்ரத் உத்தீன் தாயிசி என்ற முயீஸ் உத்தீனுடைய துருக்கிய அடிமை அதிகாரியிடம் ஒப்படைத்தார். தாயிசி தம் திறமையினால் படிப்படியாக உயர்ந்து மிக உன்னத நிலையை அடைந்தவர். கம்பீரமானத் தோற்றத்தைப் பெற்றிருக்கவில்லை என்றாலும் அவர் தைரிய மிக்கவராகவும் கூரிய அறிவுடையவராகவும் விளங்கினார். அவர் குவாலியரில் வசித்து வரவேண்டும் என்று ஏற்பாடு செய்யப்பட்ட போதிலும், கன்னோசி, மேஹர், (Mehr) மஹாபன் ஆகிய இடங்களில் நிறுத்தப்பட்டிருந்த படைகளுக்கு அவரே தலைவராக நியமிக்கப்பட்டார். அதுமட்டுமன்றி அப்படைகளின் துணை கொண்டு காலஞ்சார், சந்தேரி ஆகிய இடங்களைக் கொள்ளையிட்டு வரும்படியாக அவருக்கு ஆணையிடப்பட்டது. எனவே 1233-34-ல் தாயிசி காலஞ்சாரைத் தாக்கினார். கோட்டையின் பாதுகாப்பைத் தம்முடைய அதிகாரிகளிடம் ஒப்படைத்துவிட்டு அதனுடைய அரசர் ஓட்டம் பிடித்தார். கோட்டையை முற்றுகையிட்டு தம்முடைய நேரத்தை வீணடிக்க விரும்பாமல் தாயிசி பகை அரசரைப் பின் தொடர்ந்தார். அவருக்கு வழி காட்டிச் செல்ல ஒரு வழிகாட்டியின் உதவியை நாடினார். ஆனால் அவ்வழிகாட்டி தாம் வழி தவறி விட்டதாக தாயிசியிடம் கூறியபோது அவரைக் கொன்றுவிட தாயிசி உத்தரவிட்டார். வழிகாட்டிச் செல்ல ஒருவரும் இல்லை என்பதற்காக காலஞ்சார் அரசரைப் பின் தொடர்ந்து செல்வதை நிறுத்தவில்லை. ஆனால் அவரது படை வீரர்களிடம் பகைவர்களின் மத்தியில் சிக்கிவிடுவோமோ என்ற அச்சம் மேலிட்டது. ஆயினும், இரவு பகல் என்று பாராமல் தாயிசி பகைவரைப் பின் தொடர்ந்து அவரைக் கண்டுபிடித்து தோற்கடித்தார். அதனையடுத்து ஐம்பது நாட்கள் அந்தப் பகுதியில் கொள்ளையடித்து வந்தார். கொள்ளைப் பொருளில் ஐந்தில் ஒரு பாகத்தை சுல்தானுக்கு ஒதுக்கி வைத்தார். சுல்தானுடைய பங்கு 25 லட்சம் ஜிதால்கள் என்றால் அவர் கொள்ளையடித்தப் பொருளின் மதிப்பு எவ்வளவாக இருக்கும் என்பதை நாமே கணக்கிட்டுக் கொள்ளலாம். கொள்ளைப் பொருள் யாவற்றையும் எடுத்துக் தாயிசி தம் இருப்பிடத்திற்குத் திரும்பினார். திரும்பும் வழியில் ஜாஹர் என்ற பெயர் படைத்த இஜார் என்னுமிடத்தின் ராணா அவரை இடை மறித்து நின்று அவர் கொண்டு செல்லும் பொருளைக் கொள்ளையிடத் திட்டமிட்டார். அதையறிந்த தாயிசி தமது படைகளை மூன்று பிரிவுகளாகப் பிரித்தார். அவர்

கொள்ளையடித்த பொருளைக் காத்து அதனைப் பத்திரமாக குவாலியருக்குக் கொண்டு செல்லும் பொறுப்பை ஒரு படைப் பிரிவுக்குத் தந்தார். ஜாஹர் அப்படையினைத் தாக்க முற்பட்டால் ஏனைய படைகள் இரண்டும் அவரைப் பின்னிருந்து தாக்கவேண்டும் என்றும், ஜாஹர் அதனை விடுத்துத் தம்மைத் தாக்க முற்பட்டால், தாம் போர் செய்து கொண்டிருக்கும்போது கொள்ளைப் பொருளைக் காக்கும் பொறுப்பைப் பெற்ற படை அதனைப் பத்திர மாக குவாலியருக்கு எடுத்துச் சென்றுவிட வேண்டும் என்றும் தாயிசி திட்டம் வகுத்தார். ஜாஹர் இந்த ஏற்பாடுகளைப் பற்றி ஒன்றும் அறியவில்லை. எனவே அவர் கொள்ளைப் பொருளைக் கொண்டு சென்ற படையைவிட்டு தாயிசியின் தலைமையின் கீழான படையைத் தாக்கினார். முடிவில் அவர் தோல்வியுற்றார். கொள்ளைப் பொருளும் பத்திரமாக குவாலியர் போய் சேர்ந்து விட்டது.

இல்துத்மிஷ் நாகதாவையும் தாக்கினார். நாகிதா குஹிலாட்டு களின் தலைநகரமாகும். அதனை க்ஷேத்ரசிங் என்பவர் அப்போது ஆண்டு வந்தார். இப் படையெடுப்பு தோல்வியில் முடிவுற்றது. அத்தோல்வியைப் பழி தீர்த்துக்கொள்ள மீண்டும் படையெடுத்துச் சென்றார். இரண்டாவது முறையும் அவர் தோல்வியே கண்டார்.

1234-35-ல் இல்துத்மிஷ் மாளவத்தின் மீது படையெடுத்துச் சென்றார். பில்சா நகரைக் கைப்பற்றி அங்கிருந்த கோயிலைத் தரைமட்டமாக்கினார். அக்கோயிலைக் கட்ட 300 ஆண்டுகள் பிடித்தன என்று கூறப்படுகிறது. அதையடுத்து உஜ்ஜயினியைத் தாக்கினார். மஹாகான தேவாவினுடைய கோயிலை அழித்தார். அங்கிருந்த புகழ் மிக்க லிங்கத்தையும், விக்கிரமாதித்திய உருவச் சிலையையும், ஏனைய வழிபாட்டுச் சிலைகளையும் டில்லிக்குக் கொண்டு வந்தார், பழைய டில்லியிலிருந்த மசூதியின் படியின் கீழ் அவர் கொண்டு வந்த லிங்கம் புதைக்கப்பட்டது. மாளவத்தைத் தம் அரசுடன் சேர்த்துக் கொண்டார் என்று சில வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர்.[1] மாளவத்தைத் தம் நேராட்சியின் கீழ் இல்துத்மிஷ் கொண்டு வர யாதொரு முயற்சியையும் மேற் கொள்ள்வில்லை என்பர் வேறு சிலர்.[2]

மேற் கூறிய போர் நடவடிக்கைகளின் வாயிலாக இராஜ புதனத்தில் மீண்டும் முஸ்லிம் ஆதிக்கத்தை நிலைநாட்டினார்,

[1] Camb History of India P 56
[2] A. L. Srivastava, loe. edt, P 100

கங்கை, யமுனை ஆகிய ஆறுகளுக்கிடைப்பட்ட பகுதியிலும் இல்தூத்மிஷிற்குத் தொல்லைகள் ஏற்பட்டிருந்தன. பதோன், கன்னோசி, வாரணசி ஆகிய மாவட்டங்கள் டில்லியின் ஆதிக்கத்தி லிருந்து தங்களை விடுவித்துக் கொண்டன. டில்லி அரசுடன் தான் கொண்டிருந்த தொடர்பை கதேஹார் அறுத்தெறிந்து விட்டது. அங்கிருந்த துருக்கிய படை வீரர்கள் துரத்தப்பட்டு விட்டனர். ஒன்றன் பின் ஒன்றாக இப்பகுதிகள் அனைத்தும் மீண்டும் டில்லியின் ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவரப்பட்டன. அதன் பின்னர் டில்லிப் படைகள் பாரெய்க்கிற்கு அனுப்பி வைக்கப்பட்டது. அவுத்தும் டில்லியினுடைய ஆட்சியின் கீழ் கொண்டுவரப்பட்டது. தம்முடைய மூத்த மகனான நாசீர் உத்தீன் மாமூத்தை அவுத்தின் ஆளுநராக சுல்தான் நியமித்தார். அங்கிருந்த மக்கள் அவரை நிம்மதியுடன் ஆட்சி செலுத்திவர அனுமதிக்கவில்லை. பார்த்து (Bartu) என்பவரின் தலைமையின் கீழ் அவர்கள் துருக்கியர்களுடன் அடிக்கடி போர் செய்து வந்தனர். ஏறக்குறைய 120,000 பேர்களை அவர்கள் கொன்று விட்டதாகக் கூறப்படுகிறது. அரசியல் சுதந்திரத்திற்காகவும், மத சுதந்திரத்திற்காகவும் போராடிக் கொண்டிருந்த அவுத் மக்களை பார்த்து இறந்த பின்னரே முழுமையாக அடக்க முடிந்தது. சந்தாவர், திர்ஹூத் ஆகியவற்றின் மீதும் இல்தூத்மிஷ் படையெடுத்துச் சென்றார். அவற்றை தம் நாட்டுடன் சேர்த்துக் கொண்டாரா என்பதை நாம் உறுதியாகக் கூற இயலாது.

1236ஆம் ஆண்டில் இல்தூத்மிஷ் பாமியனை நோக்கி படை நடத்திச் சென்றார். பாமியன் அப்போது ஹசன் கார்லீயின் கைவசம் இருந்தது. அந்தப் படையெடுப்பின்போது அவர் நோய்வாய்ப்படவே, அவர் உடனே தலைநகரம் திரும்ப வேண்டியதாயிற்று. 1236ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 30ஆம் தேதி அவர் உயிர் துறந்தார்.

### கலீபாவிடமிருந்து பதவிச் சின்னம் பெறுதல்

கி. பி. 1229ஆம் ஆண்டில் இல்தூத்மிஷின் அரசியல் வாழ்க்கையில் ஒரு முக்கியமான சம்பவம் நடந்தேறியது. அவ் வாண்டில் கலீபாவின் தூதுவர்கள் பாக்தாத்திலிருந்து டில்லிக்கு வந்து இல்தூத்மிஷிடம் பணி அமர்த்தீட்டுப் பத்திரத்தைக் கொடுத்தார்கள். 1229ஆம் ஆண்டிற்குள் இல்தூத்மிஷ் தம் எதிரிகளுள் பெரும்பாலோரை ஒழித்துக் கட்டிவிட்டார். மூயிஸ் உத்தீன் இந்தியாவில் கைப்பற்றிய பகுதிகளின் பெரும்பாலானவை மீண்டும் முஸ்லிம்களின் ஆதிக்கத்திற்குட்படுத்தப்பட்டு விட்டன. அங்கும் இங்குமாக ஒரு சில பகுதிகள் அவருக்குத் தொடர்ந்து

தொல்லைகள் கொடுத்து வந்தன என்றாலும் அவருடைய ஆட்சி அசைக்க முடியாத அளவிற்கு நிலைநாட்டப்பட்டு விட்டது என்று நாம் பொதுவாகக் கூற இயலும். அது மட்டுமின்றி கஜினிக்கும் டில்லிக்கும் இடையே ஏற்பட்டிருந்த உறவு முறை இப்போது அறுத்தெறியப்பட்டு விட்டது. டில்லி அரசு இனி கஜினிப் பேரரசின் ஒரு பகுதியாகக் கருதப்படாதவாறு அதனுடைய சுதந்திரம் நிலைநாட்டப்பட்டுவிட்டது, ஆயினும் இல்தூத்மிஷிற்கு ஒரு மனக்குறையிருந்தது. அவருடைய சுதந்திரமும், ஆதிக்கமும் சட்ட முறையாக ஏற்றுக்கொள்ளப்படவில்லையே என்பது அவருடைய குறையாகும். அந்தக் குறையும் 1229-ல் தீர்க்கப் பட்டு விட்டது, அக்காலத்தில் கலீபாவை இஸ்லாமிய உலகத் திற்குத் தலைவராகக் கொண்டாடி வந்தனர். அவரது அங்கீகாரம் பெற்றவர்களே சட்ட முறையான அரசர்களாகக் கருதப்பட்டனர். அந்த அங்கீகாரத்தை அவர் எல்லோருக்கும் கொடுப்பதில்லை. முழுச் சுதந்திரத்துடன் ஆட்சி செய்து வந்தவர்களுக்கே அவர் தம் அங்கீகாரத்தை அளித்தார். அவ்வகையான அங்கீகாரம் பதவி அமர்த்தீட்டுப் பத்திரத்தின் வாயிலாக அவர் அளிப்பது வழக்கம். ஏறக்குறைய இருபது ஆண்டுகளாக அரும்பாடுபட்டு தாம் அமைத்த டில்லி அரசுக்குக் கலீபாவின் ஒப்புதல் கிடைத்தமைக்கு இல்துத்மிஷ் மிக்க மகிழ்ச்சியடைந்தார். பலநாள் ஆசை அப்போதுதான் நிறைவேறியதாக அவர் உணர்ந்தார். எனவே நிகழ்ச்சியை குதூகலத்துடன் கொண்டாடியதில் வியப்பென்ன இருக்கிறது? நகரம் முழுவதும் தோரணங்களைக் கொண்டு அலங்கரிக்கச் செய்தார். அந்த சமயத்தில் தம் மகிழ்ச்சியைத் தெரிவிப்பதற்காக மலிக்குகளுக்கும், பிரபுக்களுக்கும், அடிமை களுக்கும், அதிகாரிகளுக்கும் பலவகையான விருதுகளை வழங்கினர். கலீபாவினுடைய ஒப்புதல் ஒரு சம்பிரதாயமாக இருந்த போதிலும், அந்த ஒப்புதல் அவருடைய மேன்மையை உயர்த்தியது என்பதில் ஐயமில்லை.

ஆட்சி முறை: டில்லி சுல்தானியத்தின் ஆட்சி முறை பற்றிய நிறுவனங்களின் வளர்ச்சிக்கும் இல்தூத்மிஷ் அரும்பெரும் தொண் டாற்றியுள்ளார். முயீஸ் உத்தீன் இந்தியாவில் பல பகுதிகளை வென்றார். ஆனல் அவற்றை நிரந்தரமாக முஸ்லீம் ஆதிக்கத்தின் கீழ் வைத்திருப்பதற்குத் தேவையான ஆட்சி முறையை ஏற்படுத்து வதற்கு அவருக்கு நேரமில்லை. அவருடைய கவனமும், நேரமும் மத்திய ஆசிய அரசியல் விவகாரங்களிலேயே அதிகமாகச் செல விடப்பட்டிருந்தன. முயீஸ் உத்தீனுடைய திடீர் மரணம் அவர் இந்தியாவில் ஏற்படுத்தியிருந்த அரசினுடைய அடித்தளத்தைப் பலமாக ஆட்டி விட்டது. அந்த அதிர்ச்சியிலிருந்து அதனை மீட்ப

தற்கு குத்புத்தீன் அரும்பாடுபட வேண்டியதாயிற்று. முயீஸ் உத்தீனுடைய இந்திய அரசினை மீண்டும் உயிர்த்தெழச் செய் வதற்கும் அவர் இறப்பதற்கும் சரியாகப் போய் விட்டது, ஆட்சி முறையொன்றை ஏற்படுத்த அவருக்கு நேரமில்லாது போயிற்று. டில்லி சுல்தானியத்தின் நிருவாக முறையினுக்கு உருவம் அமைத்துக் கொடுத்தவர் இல்தூத்மிஷேயாவார். அதுவே அவரது சாதனைகளுள் மிகச் சிறந்ததாகக் கருதப் படுகிறது.

இல்தூத்மிஷ் பட்டமெய்தியபோது அரசியலில் பெருங் குழப்பம் ஏற்பட்டிருந்தது. பேரரசின் எல்லைகள் நன்கு வரையறுக் கப்பட்டிருக்கவில்லை. முஸ்லீம் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்த பல பகுதிகள் அக்குழப்ப நிலையைப் பயன்படுத்திக்கொண்டு சுதந்திர மடைந்து விட்டன. எஞ்சியிருந்த பகுதிகள் ஒன்றோடொன்று நெருக்கமாகப் பிணைக்கப் படாமல் இருந்தன. அந்த குழப்ப நிலை ஒழிந்து சுதந்திரமடைந்த நாடுகளை மீண்டும் டில்லியின் ஆதிக்கத் தின்கீழ்க் கொண்டு வந்து, டில்லியின் ஆட்சிக்குட்பட்டிருந்த பகுதிகள் அனைத்தையும் ஒன்றோடொன்று நெருக்கமாகப் பின்னி வைத்து அரசியல் ஒருமைப்பாட்டை வளர்த்து விட்டார்.

முயீஸ் உத்தீன் இந்தியாவில் ஏற்படுத்திய முஸ்லீம் அரசுக்கு ஒரு தலை நகரை அமைத்துக் கொடுத்தவர் இல்தூத்மிஷேயாவார். முயீஸ் உத்தீன் காலத்தில் கஜினி தலைநகரமாக விளங்கியது. குத் புத்தீன் காலத்தில் லாகூர், டில்லி ஆகிய இடங்கள் இராணுவத் தலைமை யிடங்களாகக் கருதப்பட்டனவேயன்றி தலைநகரங்களாகக் கருதப்படவில்லை. இல்தூத்மிஷ் காலத்தில்தான் டில்லி தலைநகர மாயிற்று. டில்லி அரசியல் தலைநகராக மட்டுமில்லாமல் கலைத் துறையிலும் தலைமையிடத்தைப் பெற இல்தூத்மிஷ் பல வகையில் உதவியுள்ளார். அன்னிய நாடுகளிலிருந்து பல அறிஞர்களையும், கலைஞர்களையும் வரவழைத்து அவர்களுக்குப் பல வசதிகளை ஏற் படுத்திக் கொடுத்தார். மங்கோலியர்களுடைய அட்டகாசச் செயல்களைத் தாங்கவொண்ணது பலர் மத்திய ஆசியாவிலிருந்து ஓடத் தொடங்கினர்கள். இல்தூத்மிஷினுடைய தாராள மனப் பான்மையைப் பற்றி அவர்கள் அறிந்து கொண்டிருந்தமையால் அவர்கள் இந்தியாவிற்கு ஓடி வந்தனர். அக்கால இலக்கியங்களில் டில்லியை ஹஸ்ரத். இ. டில்லி அல்லது பெருமைக்குரிய டில்லி என்று குறிப்பிடப்பட்டுள்ளனர். அதிலிருந்து டில்லி எய்திய பெரு மையை நாம் நன்கு உணர முடியும்.

முஸ்லீம் அரசப் பரம்பரையை முதன் முதலில் தோற்றுவித் தவர் இல்தூத்மிஷேயாவார். முயீஸ் உத்தீனுக்கு ஆண் பிள்ளைகள் இல்லை. குத்புத்தீனுக்கு ஆராம்ஷா என்ற பிள்ளையிருந்ததாக சிலர் கூறுகின்றனர். ஆனல் அவருக்கு ஆண் குழந்தை பிறக்க

வில்லை என்பதே பெரும்பாலோருடைய கருத்தாகும். ஆராம்ஷா குத்புத்தீனுடைய மகன் என்று கொண்டாலும் கூட குத்புத்தீனை அரச பரம்பரை ஒன்றே உருவாக்கினுர் என்று கூற இயலாது. ஆராம்ஷாவை லாகூர் மலிக்குகளும் அமீர்களும் சுல்தானுக ஏற்றுக் கொண்டனரேயன்றி ஏனையோர் ஏற்றுக் கொள்ளவில்லை. அதன் விளைவாக அவரது ஆட்சி எட்டு மாதங்களுக்கு மேல் நீடிக்காது போயிற்று. இல்தூத்மிஷின் பதவியேற்பு பலமுள்ளவனுக்கே அரசுரிமை என்ற கொள்கையினை வலியுறுத்துவதாக அமைந்து இருந்தது. ஆனுல் இல்தூத்மிஷின் மறைவிற்குப் பிறகு அவரது பிள்ளைகளே பட்டத்துக்குரியவர்கள் என்பதை ஏற்றுக் கொண் டனர். மரபு வழி அரசுரிமைக் கொள்கையினை அனைவரும் ஏற்றுக் கொண்டனர். அவருடைய சந்ததியார்கள் 30 ஆண்டுகளாகத் தொடர்ந்து ஆட்சி செலுத்தி வந்தனர். அதற்குப் பிறகும்கூட அவருடைய வழித் தோன்றல்களே அரசுரிமை பெறத் தக்கவர்கள் என்ற எண்ணம் ஏற்பட்டிருந்தது. ஜலாலுத்தீன் பிரூஸ் கல்ஜி யின் ஆட்சிக் காலத்தில் அவரை வீழ்த்துவதற்கான சதித் திட்டம் வகுக்கப் பட்டபோது, நாசீர் உத்தீன் மாமூத்தின் மகளை சித்தி மௌலா மணம் புரிந்து கொள்ள வேண்டும் என்று சதிகாரர்கள் விரும்பினுர்கள். அத்தகைய திருமணம் சதிகாரர்களுக்கு பொது மக்களுடைய ஆதரவைப் பெற துணை செய்யும் என்று எண்ணினுர்கள். மக்களுடைய இதயங்களில் இல்தூத்மிஷின் குடும்பத்தினர் அழியா இடம் பெற்றுவிட்டனர்; அவர்களிடத்தில் மக்கள் பெருமதிப்பைக் கொண்டு இருந்தார்கள் என்பதை அது எடுத்துக்காட்டுகிறது. இந்த மாதிரியான ஓர் உணர்ச்சி ஏற்பட் டாலன்றி ஓர் அரச குலம் நிலையாக இருக்கமுடியாது. அவ்வப் போது ஏற்பட்டுவந்த அரசுரிமைப் போராட்டங்களைத் தடுத்து அரசியலில் அமைதியைக் காண மரபுவழி முடியாட்சி மிகவும் உதவியாக இருந்தது.

இல்தூத்மிஷ் தாம் ஏற்படுத்திய மரபுவழி முடியாட்சிக்கு உறு துணையாக இருக்க அனைத்து இந்திய இராணுவத்தோடு இணைந்த சிவில் நிருவாக செர்விசு (All India Military cum Civil Administrative Service) ஒரு பணித்துறையை அமைத்தார். இந்த பணித் துறையில் அன்னிய நாட்டவர்களே இடம் பெற்றிருந்தனர். அவர்கள் இருவகையாகப் பிரிந்திருந்தனர். துருக்கிய அடிமை அதிகாரிகள், தாஜிக்குகள்.

முயீஸ் உத்தீன் பல அடிமைகளை உயர்பதவிகளில் அமர்த்தி யிருந்தார். அவருக்குப்பின் அந்த அடிமைகள் யாவரும் கியாஸ் உத்தீன் மாமூத்தின் உடைமைகளானுர்கள். கோராசம்ஷா, மங்கோலியர்கள் ஆகியோர் கோரி அரச குலத்தை முற்றிலும்

அழித்து விட்டமையால் அந்த அடிமை அதிகாரிகள் அனைவரும் சுதந்திரம் பெற்று விட்டனர். குத்புத்தீன் அய்பெக்கும் இல்தூத்மிஷும் எல்லாக் கலைகளிலும் தேர்ச்சி பெற்ற அடிமைகளை விலை கொடுத்து வாங்கி வந்தனர். இந்த அடிமைகள் யாவரும் ஆஜாமிலிருந்து கொண்டு வரப்பட்டனர். அவர்கள் அனைவரும் துருக்கியர்கள் என்று பொதுவாகக் கருதப்பட்டனர். அந்த அடிமைகள் ஒருவரையொருவர் சகோதரராக எண்ணி வந்தார்கள். ஏனெனில் அவர்கள் யாவரும் ஓர் ஆண்டையாரின் அடிமைகள்; அனைவரும் சமநிலையில் இருப்பதாகவும் அவர்கள் எண்ணினார்கள். இல்தூத்மிஷ் உயிருடன் இருந்தவரை அவர்கள் தங்களை இல்தூத்மிஷின் அடிமைகளாகக் கருதி வந்தனர்,

துருக்கிய இனத்தைச் சாராத அன்னிய நாட்டவர்களைத் தாஜிக்குகள் என்று அழைத்தனர், 1218ஆம் ஆண்டு வரை அன்னிய நாட்டு முஸ்லிம்கள் துருக்கியர்களைத் தவிர இந்தியாவிற்கு வருவதென்பது அரிதாகயிருந்தது, வியாபாரிகள் அரசாங்கத்தில் வேலை பார்ப்பவர்கள், அரசாங்கத்தில் வேலை நாடியவர்கள் ஆகியோரைத் தவிர ஏனையோர் ரவி ஆற்றைக் கடந்து வர முற்படவில்லை. அவ்வாறு வந்தவர்களும் இரண்டே இனத்தைச் சார்ந்தவர்களாக இருந்தனர். கல்ஜிக்கள், ஆப்கானியர்கள். ஆனால் செங்கிஸ்கான் மத்திய ஆசியாவைத் தாக்க முற்பட்டபொழுது அநேக முஸ்லிம்கள் தங்கள் இருப்பிடத்தை விட்டு ஓடத் தொடங்கினார்கள். அவர்களுள் சிலர் இந்தியாவிற்கு வந்தனர். அவ்வாறு வந்தவர்களுள் இளவரசர்களும், பிரபுக்களும், அமைச்சர்களும், அறிஞர்களும், கலைஞர்களும் இல்தூத்மிஷ் அவர்களுடைய திறமையை அறிந்து அவர்களை அன்போடு வரவழைத்துத் தம் நாட்டில் தங்க ஏற்பாடு செய்தார். அவர்களுடைய வருகையால் இல்தூத்மிஷினுடைய அவை சிறப்புப் பெற்று விட்டது. அவ்வாறு இந்தியா வந்து இல்தூத்மிஷினுடைய அன்பைப் பெற்ற அடிமைகளல்லாத தாஜிக்குகளுள் குறிக்பிடத்தக்கவர்கள் பல ஆண்டுகளாக இல்தூத்மிஷின் பிரதம மந்திரியாகப் பணியாற்றி வந்த நிஜாம் உல்முல்க் முகமது ஜுனெய்தி, மலிக் குத்புத்தீன் ஹசன் கோரி, ஃபுதூஉஸ் சாலாதீனுடைய ஆசிரியரான இசாமியின் முன்னோரான பக்கர் உல்முல்க் இசாமி ஆவார்கள். துருக்கிய அடிமை அதிகாரிகளும், துருக்கியரல்லாத அடிமைகளல்லாத அன்னிய முஸ்லிம் அதிகாரிகளும் இல்தூத்மிஷினுடைய ஆட்சியின் இருதூண்களாக இருந்தனர்.

உள்ளாட்சியைக் கவனிக்க உள்ளூர் சார்ந்த இந்துத்தலைவர்களைப் பயன்டுத்தினார். இந்துத்தலைவர்கள் ஒழுங்காகக் கப்பம்

[1] அனடோலியா முதற்கொண்டு துருக்கிஸ்தானம் வரையிலுள்ள நிலப் பகுதியை ஆஜாம் என்று அக்காலத்தில் அழைத்து வந்தனர்.

கட்டி வரும்வரையிலும், தங்களாட்சிப் பகுதிகளில் சட்டம், ஒழுங்கு ஆகியவற்றைக் காத்துவரும் வரையிலும் அவர்களை இல்தூத்மிஷ் ஒன்றும் செய்யாதுவிட்டார். அவர்கள் தங்களுடைய பதவிகளை மரபுரிமையாகப் பெறவும் அவர் அனுமதித்தார். அவர்கள் கலகத்தில் ஈடுபட்டபோது அல்லது கப்பப்பணத்தை ஒழுங்காகக் கட்டத்தவறியபோது சுல்தான் அவர்கள் விவகாரத்தில் தலையிட்டு அவர்களைப் பதவியிலிருந்து விலக்கினார்.

மேற்கூறியவற்றிலிருந்து இல்தூத்மிஷ் தமது நிருவாகப் பணியில் இரண்டு வெவ்வேறான ஆக்கக் கூறுகளை ஈடுபடுத்தியிருந்தார் என்பது புலனாகும். அவற்றுள் ஒன்று உள்ளூர் இந்துத் தலைவர்கள்; மற்றொன்று அன்னிய முஸ்லிம் அதிகாரிகள். அவற்றுள் முதலாவதாகக் கூறப்பட்டவர்கள் தங்கள் பதவிகளை மரபுரிமையாகப் பெற்று வந்தனர். மற்றவர் அரசரால் நியமிக்கப்பட்ட அதிகாரவர்க்கத்தினர். அரசருடைய நன்மதிப்பை அவர்கள் பெற்றிருந்தவரையில் அவர்கள் பதவியில் இருந்து வந்தார்கள். இந்த இரண்டு மாறுபட்ட ஆக்கக்கூறுகளை ஒருங்கிணைத்து ஒரு தனி முறையான நிருவாக அமைப்பு முறையை இல்தூத்மிஷ் தோற்றுவித்து தமது நிருவாகத் திறமையை முழுமையாக வெளிப்படுத்தி விட்டார்.[1]

அதுமட்டுமின்றி டில்லி சுல்தானியத்தின் நிருவாக அமைப்பின் புற உருவத்தை மட்டுமல்லாமல் அது கொண்டிருக்க வேண்டிய உட்பொருள்களையும் அவரே ஏற்படுத்திக் கொடுத்தார். அவ்வுட் பொருள்களுள் மூன்றினைப்பற்றி இங்குக் குறிப்பிடுதல் அவசியமாகிறது. அவற்றுள் முதலாவது இக்தா முறையாகும். இல்தூத்மிஷ் வரையறுத்திருந்த நிருவாக அமைப்பு முறையில் அது மிக முக்கியமான இடத்தை வகித்திருந்தது. இக்தா என்பதற்கு ஒரு பகுதி என்று பொருள். இடைக்காலத்தில் ஒரு தனிப்பட்ட மனிதருக்கு அரசர் கொடுத்த நிலத்தை அல்லது நிலத்திலிருந்து கிடைக்கும் வருவாயைக் குறிக்க அச்சொல் பயன் படுத்தப் பட்டது. இக்தாக்களை இருவகையாகப் பிரிக்கலாம் இக்தா. இ. தம்லிக், இக்தா. இ. இஸ்திக்லால். அவற்றுள் முதலாவது நிலத்தையும், இரண்டாவது உதவிச் சம்பளத்தையும் குறிக்கப் பயன் படுத்தப்பட்டன. அவற்றுள் முதலாவது வகையே நிருவாக அமைப்பு முறையில் இடம் பெற்றிருந்தது. இக்தா முறை இஸ்லாமிய உலகத்தில் வெகுநாளாக நடைமுறையில் இருந்து வந்தது. பல்வேறு காலத்தில் அதனைப் பல்வேறு விதமாகப் பயன் படுத்தி வந்தனர். இந்தியாவில் தோன்றியிருந்த படைமானியம்

சார்ந்த சமுதாயத்தை ஒழிக்க இல்தூத்மிஷ் அதனை இந்தியாவில் புகுத்தினார். பரந்துகிடந்த பேரரசின் பகுதிகளை மைய அரசுடன் இணைப்பதற்கும் அது பயன்பட்டது. புதிதாக வென்று தம் அரசோடு இணைத்துக் கொண்ட பகுதிகளிலிருந்து வரிவசூல் செய்யவும் அமைதியை நிலைநாட்டவும் இம்முறை மிகவும் உதவி யாக இருக்கும் என்று இல்தூத்மிஷ் கருதினார். மேலும் இதுவரை இந்தியாவில் படைமானியப் பிரபுக்களே ஆட்சி செய்து வந்தனர். ஆகவே பிரச்சினைகளுள் பெரும்பாலானவை உள்ளூர் சார்ந்த தாகவேயிருந்தன. அத்தகைய பிரச்சினைகளை உள்ளூரிலுள்ள தலைவர்களைக் கொண்டு தீர்வு காணுவது எளிதாக இருக்கும் என்று இல்தூத்மிஷ் கருதினார். இக்தா முறை அத்தகையதொரு வாய்ப் பினை அளிப்பதாக இருந்தமையால் அதனை இந்தியாவில் நடை முறைப் படுத்தினார்.[1]

இல்தூத்மிஷ் அளித்துவந்த இக்தாக்கள் இருவகையாக இருந்தன. சிறிய இக்தாக்கள், பெரிய இக்தாக்கள். சிறிய இக்தாக்களைப் பெற்றவர்களுக்கு நிருவாகம் பற்றிய பொறுப்புகள் அளிக்கப்படவில்லை. தாங்கள் சுல்தானுக்கு இராணுவ சேவை செய்வதற்காக நிலத்தின் ஒரு பகுதியிலிருந்து கிடைத்துவந்த வருமானத்தைத் தமக்கென வைத்துக் கொண்டார்கள். பெரிய இக்தாதாரர்களுக்குப் பலவிதமான பொறுப்புகள் வழங்கப்பட் டிருந்தன. இக்தாக்களில் ஒழுங்கு, சட்டம் ஆகியவற்றைக் காப்பது, நெருக்கடி காலத்தில் மைய அரசுக்குப் படையுதவி செய்வது ஆகியவை அவர்களுக்களிக்கப் பட்டிருந்த பொறுப்பு களில் முக்கியமானவையாகும்.[2] இந்த வகையான இக்தாக்கள் துருக்கியர்களுக்கே அதிகமான அளவில் வழங்கப்பட்டன. தோவாப் பகுதியில் மட்டும் 2,000 துருக்கிய வீரர்களுக்கு இக்தாக்களை வழங்கினார். இக்தாதாரர்கள் சுல்தானுடைய அதிகாரிகளேயன்றி படைமானியப் பிரபுக்கள் அல்லர் என்பதை வலியுறுத்துவதற்காக அவர்களை ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு மாற்றி வந்தார்.

இராணுவம் இரண்டாவது உட்பொருளாகும். இராணுவ அமைப்பு முறையில் அவர் ஏற்படுத்திய மாறுதல்களைப் பற்றி நாம் அதிகமாக அறிவதற்கில்லை. அரசருடைய படை என்று சொல்லக் கூடிய படையொன்றை அவர் அமைக்க முற்பட்டிருக்கக் கூடும். அப்படைக்கு ஆள்சேர்த்தல், அதனை நிருவகித்தல், அப்படை யினருக்குச் சம்பளம் கொடுத்தல் போன்ற பொறுப்புக்களை மைய அரசே மேற்கொள்ள வேண்டும் என்று இல்தூத்மிஷ் விரும்பி யிருக்கக் கூடும்.

[1] *ibid*, p. 227.
[2] *ibid*

இல்தூத்மிஷ் வெள்ளி, செப்பு நாணயங்களை அச்சிட்டு அவற்றைத் தமது நிருவாக முறையின் மூன்றுவது உட்பொருளாக அமைத்தார், நாணயங்களை அச்சிட்டு வெளியிடுவதென்பது அக் காலத்தில் மேலாதிக்க உரிமையினை வெளிப்படுத்தும் செயலாகக் கருதப்பட்டது. டில்லி சுல்தான்கள் ஆட்சிக் காலத்தில் வெளி யிடப்பட்ட நாணயங்களுள் அடிப்படையான நாணயங்கள் எனக் கருதப்பட்ட வெள்ளி டங்கா, செப்பு ஜிடால் ஆகியவற்றை முதன் முதலாக வெளியிட்டவர் இல்தூத்மிஷ் ஆவார். அவருடைய டங்காவை முன்மாதிரியாகக் கொண்டுதான் அவருக்குப்பின் வந்த அரசர்கள் தங்களுடைய டங்கா நாணயங்களை வெளியிட்டனர். ஆகவே இந்திய நாணய வரலாற்றிலே அவரது ஆட்சி ஒரு சிறப்புக் கட்டமாக அமைந்துள்ளது.

நாட்டு நிருவாகத்தை தம்முடைய நேர் மேற்பார்வையிலும், நேரடிக் கட்டுபாட்டுக்குள்ளும் வைத்திருக்க சில விதிமுறைகளையும் அவர் ஏற்படுத்தினர், அரசசபையில் அதிகாரிகள், அறிஞர்கள், ஞானிகள் ஆகியோருக்குத் தக்கபடி ஆசனங்கள் உயரமாகவும். தாழ்வாகவும் போடப்பட்டிருந்தன. எந்தெந்தப் பிரச்சினைகள் தமக்கு நேரடியாக சமர்ப்பிக்க வேண்டும் என்பதையும் அவர் வரையறுத்து இருக்க வேண்டும். ஒரு முறை சில உலாமாக்கள் அவரிடம் தூது வந்தனர். உடனே அவர் தம் வசீரை அழைத்து அப் பிரச்சினையைக் கவனிக்குமாறு கூறினர். சரிவர நிருவாகம் நடத்த இயலாதவர்களை முக்கியமான பொறுப்புகளை வகிக்க அவர்அனுமதிக்கவில்லை. கபீர்கான் அயாஸ் என்பவர் மூல்தானை ஒழுங்காக ஆளவில்லை என்பதற்காக அவரைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டார். ஆயினும் அவர் வறுமையால் வாடக்கூடாது என்பதற்காக அவருக்கு ஒரு கிராமத்தைக் கொடுத்தார்.

**மதிப்பீடு :** இடைக்கால இந்தியாவை ஆண்டு வந்த மிகச் சிறந்த அரசர்களுள் இல்தூத்மிஷ் ஒருவராவர். இந்திய வரலாற் றிலே அவர் அழியாத இடத்தைப் பெற்றுள்ளார். அவரது பெருமைக்குப் பல காரணங்கள் உண்டு. அவர் ஒரு சிறந்த போர் வீரர். அவர் அடைந்த வெற்றிகளைப் பற்றி நாம் முன்னரே கண்டறிந்துள்ளோம், வருங்கால கூர்நோக்குடைய அரசியல் மேதையாகவும் அவர் விளங்கினர். 1192ஆம் ஆண்டில் அய்பெக் கினுடைய அடிமையாக அவர் தமது அரசியல் இராணுவ வாழ்க்கையினைத் தொடங்கி இருபது ஆண்டுகளுக்குள்ளாகவே ஆட்சி பீடத்தில் அமர்ந்து விட்டார். இந்த உன்னத நிலையை அடைய அவர் பல இன்னல்களைச் சமாளிக்க வேண்டியதாக இருந்தது. அவரைப் போன்ற திறமை வாய்ந்த பல முயீசி மலிக்கு களும், குத்பி மலிக்குகளும் இருந்த போதிலும் அவர்களையெல்லாம்

ஒதுக்கித் தள்ளிவிட்டு அரச பீடத்தில் அமருவதென்பது ஒரு சாதாரண செயலாகாது. அது மட்டுமன்றி அந்த உயரிய இடத்தை மரபுரிமையாகப் பெறவில்லை. அதனைத் தம் சொந்த முயற்சியினாலும், திறமையினாலும் அடைந்தார் என்பதை நாம் அறிதல் வேண்டும். குத்புத்தீனும் இவரைப் போன்ற சிறந்த படைத் தலைவர் என்பதை மறுக்க இயலாது, அவரும் பல வெற்றிகளை அடைந்தார். முயீஸ் உத்தீன் உயிருடன் இருந்தவரை குத்புத் தீனுக்கு ஆலோசனை கூற ஓர் அரும்பெரும் தலைவர் இருந்தார். ஆனால் இல்தூத்மிஷிற்கு அத்தகைய தலைவர் ஏற்பட்டிருக்கவில்லை. அவர் பட்டமெய்தியபோது அரசியலில் பெருங்குழப்பம் ஏற்பட்டிருந்தது. எந்த விதமான உதவியுமின்றி தாமாகவே விழிப்புடன் செயலாற்றி தமக்கு ஏற்பட்டிருந்த இன்னல்களை எல்லாம் வெற்றியுடன் எதிர் கொண்டார். அதுவே அவரது பெருமைக்கு முக்கிய காரணமாகவும் அவருடைய இடைவிடா முயற்சியின் காரணமாகவும் சிதறுண்டு கிடந்த முயீஸ் உத்தீனுடைய இந்திய அரசு புத்துயிர் பெற்றது. அதனுடைய எல்லைகள் திட்டவட்டமாக வரையறுக்கப்பட்டன. மரபுரிமை முடியாட்சி ஏற்படுத்தப்பட்டது. ஒரு பேரரசுக்கு ஓர் அரச குலம், ஒரு தலைநகரம் என்ற அடிப்படையில் நிருவாகம் நடைபெற்று வந்தது. கஜினியின் மேலாதிக்கத்திலிந்து டில்லியரசு நிரந்தரமாக விடுதலை பெற்றது. நிருவாகம் திறம்பட நடைபெற ஓர் ஆளும் வகுப்பு அவர் காலத்தில் தோன்றியது. இந்த முஸ்லிம் ஆட்சி முறைக்கு உருவத்தையும், உட்பொருள்களையும் ஏற்படுத்திக் கொடுத்தவர் இல்தூத்மிஷ் தான் என்பதில் மாறுபட்ட கருத்துத் தோன்றுவதற்கில்லை. இந்துஸ்தானத்தின் பல பகுதிகளை முயீஸ் உத்தீன் வென்றிருந்த போதிலும் அவையனைத்தையும் ஒன்று சேர்த்து ஒரு நன்கு பிணைக்கப்பட்ட அரசாக மாற்றி அமைத்தவர் இல்தூத்மிஷே ஆவார். எனவே இந்தியாவில் முஸ்லிம் இறைமையைத் தொடங்கியவர் இல்தூத்மிஷ் என்று கூறப்படுகிறது.[1]

இல்தூத்மிஷ் கலைவளர்ச்சிக்கு அருந்தொண்டாற்றியுள்ளார். அன்னிய நாட்டிலிருந்து வந்த கலைஞர்களுக்கும், அறிஞர்களுக்கும் அவர் வாரி வழங்கினார். அவர்களைத் தம் அவையில் வைத்து போற்றி வந்தார். டில்லி நகரை கலையுலகின் மையமாக்கி விட்ட பெருமை அவரையேச் சாரும். குதுப்மினார் கட்டிடத்தைக் கட்டி முடித்த பெருமையும் அவருக்கேயுரியதாகும்.

[1] Dr. R. P. Tripathi, Some Aspects of Muslim Administration in India, 4.

இல்தூத்மிஷ் சமயப்பற்று மிக்கவர். இரவு நேரத்தில் அவர் தொழுகையிலும், தியானத்திலும் ஈடுபட்டுருந்தார். சூபி ஞானி களிடத்தில் அவர் அளவு கடந்த மரியாதையை வைத்திருந்தார். அடிக்கடி அவர் உலா மாக்களுடன் சமயம் பற்றிய விஷயங் களை விவாதித்து வந்தார். சமய சொற்பொழிவாளர்களின் சமயச் சொற்பொழிவுகளை மிகக் கவனமாகக் கேட்பது வழக்கம். ஆயினும் அரசியல் செய்திகளில் அவர்களைத் தலையிட அவர் அனு மதிக்கவில்லை.

டில்லி சுல்தானியத்தை நிறுவியவர் யார் என்பதைப் பற்றி வரலாற்றாசிரியர்களிடையே கருத்து வேற்றுமை ஏற்பட்டுள்ளது. குத்புத்தீன் அய்பெக்கே உண்மை ஸ்தாபகர் என்பார் சிலர். அதைப் பற்றி முன்னரே விளக்கியிருக்கிறோம். இல்தூத் மிஷ்தான் அதனை உண்மையில் நிறுவியவர் என்று கருதுவதற்கான காரணங் களை ஈண்டு கவனிப்போம். முயீஸ் உத்தீன் இந்தியாவின் பல பகுதிகளை வென்றார். குத்புத்தீனும் வேறு சில படைத் தலைவர் களும் மேலும் சில பகுதிகளை வென்றார்கள். குத்புத்தீன் அரசுரிமை பெற்ற பிறகு அப்பகுதிகளை ஒன்றாக இணைத்து அதற்கு ஓர் உருவம் கொடுக்க முயற்சித்தார். அம்முயற்சி வெற்றியடை வதற்கு முன் அவர் இறந்து விட்டார். இல்தூத்மிஷ் பட்டமெய் திய போது முஸ்லீம் ஆதிக்கத்திற்குட்படுத்தப்பட்ட பகுதிகள் பல அதனின்றும் விடுவித்துக் கொண்டு சுதந்திர நாடுகளாகச் செயற் பட்டு வந்தன. அவற்றை மீண்டும் டில்லியின் ஆதிக்கத்திற்குட் படுத்தியதோடு நிற்காமல் அவையனைத்தையும் மைய அரசுடன் நெருக்கமாகப் பிணைத்து ஒரு கட்டுத் திட்டமான அரசை உருவாக் கினார். டில்லி சுல்தானியத்திற்கு புற உருவம் கொடுத்தவர் அவரேயாவார். அதனை கஜினியின் மேலாதிக்கத்திலிருந்து விடு வித்துவிட்டு கலீபாவினிடமிருந்து நேரடியாக பதவி அமர்த்தீட்டுப் பத்திரத்தைப் பெற்றார். இவ்வாறாக டில்லி சுல்தானியத்திற்கு தனித் தன்மையை வழங்கி அதனுடைய பெருமையை உயர்த்தி னார். புதிதாக ஏற்படுத்திய அரசுக்குத் தலைநகரம் ஒன்றை அமைத்துக் கொடுத்தார். மரபுரிமை முடியாட்சியை ஏற்படுத்தி னார். ஆளும் வகுப்பைத் தோற்றுவித்தார். நிருவாகம் சார்ந்த நிறுவனங்களை அமைத்துக் கொடுத்தார். எல்லாவற்றிற்கும் மேலாக செங்கிஸ்கான் படையெடுப்பால் இந்தியாவிற்கு நேர விருந்த ஆபத்தை தமது அரசியல் சூழ்த்திறமையின் வாயிலாக வெற்றிகரமாக எதிர்கொண்டு டில்லி சுல்தானியத்தைக் காப்பாற் றியவரும் அவரேயாவார்.

# 4. இல்தூத்மிஷ்க்குப் பின் வந்தவர்கள்

## ருக்னுத்தீன் பிரூஸ் ஷா (கி.பி. 1236)

இல்தூத்மிஷ் மக்கட் செல்வத்தை வேண்டிய அளவு பெற்றிருந்தார். அவருடைய மூத்த மகன், மலிக் உஸ் கையத் நாசீர் உத்தீன் மாமூத், பல்கலைகளிலும் தேர்ச்சி பெற்றிருந்தார். அரசாளுதற்குரிய நற்பண்புகளையும் கொண்டிருந்தார். தந்தையும் அவர் மீது அளவுகடந்த நம்பிக்கையை வைத்திருந்தார். துரதிருஷ்ட வசமாக இல்தூத்மிஷ் இறப்பதற்கு முன்பே அவர் இறந்து விட்டார். எனவே இல்தூத்மிஷ் தமக்குப் பின் பட்டமெய்த வேண்டியவர் யாராக இருத்தல் வேண்டும் என்ற பிரச்சினைக்குத் தீர்வு காணுவதில் தம் சிந்தை முழுவதையும் செலவழித்திருந்தார். தம் பிள்ளைகள் ஒவ்வொருவருடைய திறமையைப் பற்றியும் அவரிடம் குடிகொண்டிருந்த தீய பண்புகளையும் ஆராய்ந்த பின்னர் தமது மகள் ரஸியாவே எல்லா விதத்திலும் அரசுரிமைப் பெறத் தகுந்தவர் என்ற முடிவுக்கு வந்தார். எனவே இல்தூத்மிஷ் குவாலியர் மீது படையெடுத்துச் சென்றபோது தாம் டில்லியில் இல்லாத போது நிருவாகத்தைக் கவனிக்கும் பொறுப்பை அவரிடம் ஒப்படைத்தார்.[1] அப்பொறுப்பைத் திறம்பட செயலாற்றி இல்தூத்மிஷின் பாராட்டுதலை ரஸியா பெற்றார். ஆகவே இல்தூத்மிஷ் தமது முஷ்ரிப்-இ-மம்லாகத்தை அழைத்து ரஸியாவை தமது பின்னுரிமையாளராகத் (heir apparent) தாம் நியமனம் செய்ததாக ஒரு பத்திரத்தை எழுதும்படி கட்டளையிட்டார். அந்த வகையான பத்திரத்தை அவர் எழுத முற்பட்டபோது சில மலிக்குகள் சுல்தானை அணுகி வயது வந்த பிள்ளைகள் பலர் இருக்க ஒரு பெண் பிள்ளையை அவரது பின்னுரிமையாளராக நியமிப்பதால் என்ன பயன் உண்டாகும் என்று கேட்டார்கள், அதைக் கேட்ட இல்தூத்மிஷ் தம்முடைய பிள்ளைகள் களியாட்டங்களில் மூழ்கிக் கிடக்கின்றனர் என்றும், நாட்டு விவகாரங்களை கவனிப்பதற்குரிய திறமை அவர்களிடமில்லை என்றும், தாம் இறந்த பிறகுதான் தம்முடைய பிள்ளைகள் எவரும் அரசுரிமையைப் பெற தகுதியற்றவர்கள்

[1] Ferishta, I, 68

என்பது அவர்களுக்குப் புலப்படும் என்றும், தம்முடைய மகள் ஒருவர்தான் அரசுரிமையைப் பெறத் தகுதியுடையவர் என்றும் கூறினார்.[1] அவருடைய பதில் மலிக்குகளின் வாயை அடைத்து விட்டது. இந்த ஏற்பாட்டினை உறுதி படுத்தும் வகையில் இல்தூத்மிஷின் பெயருடன் ரஸியாவின் பெயரையும் கொண்ட நாணயங்கள் அச்சிடப்பட்டன.

ஆனால் இல்தூத்மிஷ் இறந்த பிறகு மாநில அதிகாரிகள் ருக்னுத்தீன் பிரூஸ் என்பவரை சுல்தானாகத் தேர்ந்தெடுத்தார்கள். காலஞ் சென்ற மன்னரின் வேண்டுகோளுக்கெதிராக ருக்னுத்தீன் சுல்தானாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார் என்பது ஒரு கருத்து. இல்தூத்மிஷ் தமது வாழ்நாளின் இறுதியில் அரசுரிமையைப்பற்றித் தாம் முன்பு செய்திருந்த முடிவை மாற்றி விட்டார் என்பது மற்றொரு கருத்து. இரண்டாவது கருத்துக்கு ஆதாரமாக சில நிகழ்ச்சிகள் எடுத்துக் கூறப்படுகின்றன. 1236-ல் இல்தூத்மிஷ் பாமியன் நோக்கிப் படையெடுத்துச் சென்றார் என்றும் அப்போது அவர் நோய்வாய்ப்பட்டார் என்றும் முன்பு கண்டறிந்தோம். எனவே அவர் உடனே டில்லி திரும்பலானார். அப்போது லாகூரில் ஆளுநராக இருந்த ருக்னுத்தீன் பிரூஸை கூடவே அழைத்து வந்தார்.[2] இரண்டாவதாக நாசீர் உத்தீன் மாமூத் இறந்த பின்னர் அவரே உயிருடனிருந்தவர்களுள் மூத்தவராக இருந்தார். மூன்றாவதாக இல்தூத்மிஷின் பெயருடன் பிரூஸின் பெயரும் பொறிக்கப்பட்ட வெள்ளி நாணயம் நமக்குக் கிடைத்துள்ளது. நான்காவதாக பிரூஸ் பட்டமெய்தியபோது அவருக்கு எந்தவிதமான எதிர்ப்பும் ஏற்படவில்லை. அவருடைய உரிமையை ரஸியா கூட எதிர்க்கவில்லை. இறந்து போன சுல்தானுடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்ய ஒரு மலிக்குக்கூட முன் வராதது ஆச்சரியமாக இருக்கிறது. பிரூஸை ஒருவர்கூட எதிர்க்கவில்லை என்பதற்கு ஒரே ஒரு விளக்கத்தை மட்டுமே நாம் தர இயலும். அதாவது சுல்தான் தமது இறுதிக் காலத்தில் தம்முடைய முடிவை மாற்றி விட்டார் என்பதாகும்.[3]

இல்தூத்மிஷினுடைய மறைவிற்குப்பின் அவருடைய துருக்கிய அடிமைகள் அரசியலில் மிகுந்த செல்வாக்குடன் விளங்கினார்கள். முயீஸ் உத்தீனைப் போலவே இல்தூத்மிஷும் பல அடிமைகளை அதிகமான விலை கொடுத்து வாங்கி வந்தார் என்று முன்னர்

1 Minhaj, 185, 186

2 Minhaj, 182

3 ACHI P. 231

கண்டோம்.[1] அவர்களுள் பிற்காலத்தில் சுல்தானுகப் பதவியேற்ற பால்பனும் ஒருவராவார். அந்த அடிமைகளை ''நாற்பது துருக்கி அடிமைகள்'' என்று குறிப்பிட்டு வருகின்றனர். மின்ஹாஜ் தம் வரலாற்று நூலில் 40-க்கு மேற்பட்ட துருக்கிய அடிமை அதிகாரிகளைப் பற்றி குறிப்பிட்டுள்ளார். ஆயினும் அவர் 25 மலிக்குகளின் வாழ்க்கை வரலாற்றினை மட்டுமே விவரித்துள்ளார். இந்நூலில் பஹா உத்தீன் பால்பனுடைய வாழ்க்கை வரலாற்றைத் தான் மிகவும் விரிவாக எழுதியுள்ளார். இந்த நூல் 1260ஆம் ஆண்டில் எழுதி முடிக்கப்பட்டது. அப்போது பால்பன் உன்னத நிலையை அடைந்திருந்தார். ஆகவே அவரைப் பற்றி அதிகமாக எழுதியுள்ளார். அவரை எதிர்த்த அடிமை அதிகாரிகள் சிறப்பு மிக்கவர்களாக இருப்பினும் அவர்களது வாழ்க்கை வரலாற்றை எழுதவில்லை. அவர்களுடைய பெயர்களை அங்கும் இங்குமாகக் குறிப்பிடுவதுடன் மின்ஹாஜ் திருப்தியடைந்து விட்டார். இல்தூத்மிஷ் வாங்கிய அடிமைகள் மட்டுமின்றி ஒரு சில முயீசி அடிமைகள் பற்றியும் மின்ஹாஜ் எழுதியுள்ளார். ஆகவே இந்நூலில் காணப்பெறும் துருக்கிய அடிமை அதிகாரிகள் அனைவரையும் இல்தூத்மிஷ் விலை கொடுத்து வாங்கப்பட்ட அடிமைகள் என்று கூற இயலாது. ஒரு சிலரை அவர் மரபுரிமையாகப் பெற்றிருக்கக்கூடும். கி.பி. 1260-ல் மிக உயர்ந்த பதவியில் இருந்த துருக்கிய அடிமை அதிகாரிகளுள் பெரும்பாலோர் இல்தூத்மிஷ் விலை கொடுத்து வாங்கிய அடிமைகள் என்பதில் ஐயமில்லை.[2] இல்தூத்மிஷின் அடிமைகள் யாவரும் வீரத்திலும், அரசியல் திறத்திலும் சிறந்து விளங்கினுர்கள். அவர்கள் யாவரும் ஒரு எஜமானனுக்குச் சொந்தமானவர்கள் என்பதால் அவர்கள் தங்களை ஒரு தனித் தொகுதியாகக் கருதி வந்தனர். அவர்களுக்குள் ஏற்றத் தாழ்வு ஏற்பட அவர்கள் அனுமதிப்பதில்லை. ஒருவர் மற்றொருவருக்கு அடங்கி நடக்க விரும்பவில்லை. எனவே எல்லா விஷயங்களிலும் அவர்கள் சமமாக நடத்தப்பட வேண்டும் என்று விரும்பினுர்கள். இல்தூத்மிஷ் திறமை மிக்கவராக இருந்தமையால் அவர்களைக் கட்டுப்படுத்தி வர இயன்றது. அவருக்குப்பின் அரசெய்தியவர்களுள் பெரும்பாலோர் உலகத்தைப் பற்றியும் அதனுடைய அரசாங்கத்தைப் பற்றியும் நன்கு அறியாதவர்கள். எனவே அவர்களால் நாற்பது துருக்கிய அடிமைகளைக் கட்டுப் படுத்தி வர இயலவில்லை. மேலும் இல்தூத்மிஷ் துருக்கிய அடிமை களின் துணையை மட்டும் கொண்டு ஆட்சி நடத்தவில்லை. மங்கோலியருக்குப் பயந்து வெளி நாடுகளிலிருந்து ஓடி வந்த

[1] ஒரு அடிமையின் சராசரி விலை 50,000 ஜிதால்கள்

[2] ACHI, p. 234

முஸ்லிம்களின் துணையையும் அவர் நாடியிருந்தார். அவர்கள் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கினார்கள். அவர்கள் திறமை யானவர்களாகவும் இருந்தனர். உயர் குடியில் பிறந்தமையால் அவர்களிடம் உயரிய பண்புகளும் குடிகொண்டிருந்தன. இல்தூத்மிஷின் நிருவாக அமைப்பு இந்த இருவகை அதிகாரிகளின் துணை கொண்டு செயற்பட்டு வந்தது. இல்தூத்மிஷ் உயிருடன் இருந்தவரை அவர்களிடையே எவ்வித பூசலும் ஏற்பட அவர் இடங்கொடுக்கவில்லை. ஆகவே ஆட்சி சிறப்பாக நடைபெற்று வந்தது. அவருக்குப்பின் வந்தவர்கள் திறமையற்று இருந்தமை யால் அவர்களிடையே போட்டியும் பூசலும் ஏற்பட்டன. தாஜிக்கு களைப் பதவியிலிருந்து அகற்றிவிட்டாலொழிய துருக்கிய அடிமை அதிகாரிகள் நிம்மதியுடன் வாழவும் உயரிய பதவிகளை அடைய வும், தலைவர்களாகவும் இயலாது என்ற எண்ணம் அடிமை அதிகாரிகளிடம் வளரலாயிற்று. அப்போது ஏற்பட்ட அதிகாரப் போட்டியில் தாஜிக்குகள் தோல்வியுற்று அழிந்தனர். துருக்கி அடிமைகளின் கை ஓங்கியது. நாற்பது துருக்கிய அடிமைகள் இப்போது கான்களாகி விட்டனர்.

தமக்குப் போட்டியாக விளங்கிய தாஜிக்குகளை அழித்த பின்னர் நாற்பது துருக்கிய அடிமைகள் சுல்தானுடைய அதிகா ரத்தை அழிக்க முற்பட்டனர். சுல்தானைத் தங்கள் கைப்பொம்மை யாக்கிவிட்டு ஆட்சி அதிகாரங்கள் அனைத்தையும் தங்கள் கைகளிலே வைத்திருக்க முடிவு செய்தனர். தாஜிக்குகளின் அழிவு, சுல்தான்களின் திறமையின்மை ஆகியவை அவர்களுக்குப் போதிய அளவு உதவி செய்தன. அடுத்த முப்பது ஆண்டுகளில் இல்தூத்மிஷின் வழித்தோன்றல்களுள் நான்கு பேரை அரியணையில் அவர்கள் அமர்த்திவிட்டு பின்னர் அவர்களைக் கொன்றுவிடும் அளவிற்கு அவர்கள் செல்வாக்குப் பெற்றுவிட்டனர். அதுமட்டு மன்றி அவர்களுள் ஒருவரான பால்பன் அரச பதவியை இல்தூத்மிஷின் குடும்பத்தினரிடமிருந்து அபகரித்துவிட்டு அக் குடும்பத்தைச் சார்ந்த ஆண் பிள்ளைகள் அனைவரையும் கொன்று விட்டார்.

டில்லி சுல்தானியத்தின் அடுத்த முப்பது ஆண்டுகளின் வரலாறு இந்நிகழ்ச்சிகளை மையமாகச் கொண்டுள்ளது என்று கூறின் அது மிகையாகாது.

ருக்னுத்தீன் அழகான தோற்றத்தைப் பெற்றிருந்தார், மென்மையான உள்ளம் கொண்டிருந்தார். தாராளமாகச் செல வழிப்பதில் அவருக்கு நிகர் அவரேயாவார். யானைமீது அமர்ந்து கொண்டு டில்லி தெருக்களில் மக்கள் மத்தியில் பொற்காசுகளை

அவர் வீசி எறிவதை வழக்கமாகக் கொண்டிருந்தார் என்று நாம் அறிகிறோம். நிருவாகத் திறமை அவரிடம் அறவே இல்லையென்று நாம் கூற இயலாது. பதோன், லாகூர் இக்தாக்களை நிருவகிக்கும் பொறுப்பை அவர் ஒரு காலத்தில் ஏற்றிருந்தார். அவ்விரு இக்தாக்களை நிருவகிப்பதென்பது சாதாரண காரியமன்று. ஆயினும் சுல்தானாக பதவியேற்ற பிறகு அவர் ஆட்சி முறையில் கவனம் செலுத்துவதற்குப் பதிலாகக் களியாட்டங்களில் காலத்தைக் கழித்து வந்தார். எப்போதும் மதுமயக்கத்தில் இருந்தார். சிற்றின்பத்தில் மூழ்கிக் கிடந்தார். பாடகர்கள், ஆட்டக்காரர்கள், விகடர்கள் ஆகியோருடன் அவர் நேரத்தை வீணாக்கி வந்தார்.

இந்தச் சூழ்நிலை ருக்னுத்தீன் பிரூஸ்ஷாவினுடைய அன்னையார், ஷாதுர்கானுக்கு (Shah Turkhan) மிகவும் சாதகமாக அமைந்துவிட்டது. ஷாதுர்கான் துருக்கிய இனத்தைச் சார்ந்தவர். வேலைக்காரியாக வாழ்க்கையைத் துவக்கி அந்தப்புர நிருவாகத்தின் தலைமைப் பொறுப்பை ஏற்றிருந்தார். அறச் செயல்களுக்கு அவர் பெயர்போனவர். உலாமாக்களும், சையத்துகளும் அவரிடம் பரிசுகள் பெற்று வந்தனர். தம்மகன் நாட்டு நிருவாகத்தில் கவனம் செலுத்தவில்லை என்று அறிந்ததும் ஆட்சிப் பொறுப்பைத் தாமே ஏற்க முற்பட்டார். ஆட்சி அதிகாரம் அவரது கைக்கு வந்த பின்னர் அவரிடமிருந்த நற்பண்புகள் மறைந்தன. பல நாட்கள் அடக்கி வைக்கப்பட்டிருந்த உணர்ச்சிகள் திடீரென வெளிப்படத் தொடங்கின. நாட்டில் பயங்கர ஆட்சி தொடங்கி விட்டது. இல்தூத்மிஷினுடைய மனைவிகளையும் அவர் துன்புறுத்தினார். பலரைக் கொன்றுவிட்டார். இல்தூத்மிஷினுடைய பிள்ளைகளுள் ஒருவரான குத்புத்தீனுடைய கண்களைப் பறித்து விட்டு அவரைச் கொன்றுவிடுமாறு கட்டளையிட்டார். அந்த வகையான கொடுமைகளைக் கண்டு வாளாயிருக்க மலிக்குகள் இசையவில்லை. நாட்டில் கலகங்கள் தோன்றின. இல்தூத்மிஷின் மற்றொரு பிள்ளையான கியாஸ் உத்தீன் முகமது ஷா அவுத்தில் புரட்சிக் கொடியை உயர்த்தினார். பல நகரங்களை அவர் அழித்து அங்கு ஏற்பட்டிருந்த அமைதியைக் குலைத்தார். பதோனில் மலிக் இஸ் உத்தீன் சாலாரி கலகம் செய்தார். மேற்பகுதியில் மூல்தானின் ஆளுநரான கபீர்கான் அயாஸ், ஹான்சியின் இக்தாதாரரான மலிக் சைபுத்தீன் கூச்சி, லாகூரின் இக்தாதாரரான மலிக் அலாவுத்தீன் ஜானி ஆகிய மூவரும் ஒன்று சேர்ந்து சுல்தானை எதிர்த்தார்கள். அவர்களை அடக்க பிரூஸ்ஷா டில்லியிருந்து புறப்பட்டுச் சென்றார். கைலூகாரியை அடைந்தபோது, அப்போது வசீராகப் பணியாற்றிவந்த நிஜாம் உல் முல்க் ஜூனெய்தி சுல்தானுக்கு உதவி செய்வதற்குப் பதிலாகத் தம் படையுடன்

கோலு(Kol)க்கு ஓடிவிட்டார். பிறகு அவர் கலகக்காரர்களுடன் சேர்ந்து கொண்டு சுல்தானை எதிர்க்க ஆரம்பித்தார்.

அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு தாஜிக்குகளை அழிக்கும் முயற்சியில் துருக்கிய அமீர்களும் அடிமைகளும் மும்முரமாக ஈடுபட்டனர். அதன்விளைவாக நாட்டில் குழப்பநிலை ஏற்பட்டது.

ருக்னுத்தீன் பிரூஸ்ஷாவிற்கு எதிராகத் தொடங்கப்பட்ட கலகங்கள் நாடு முழுவதும் காட்டுத் தீயைப்போல் பரவத் தொடங்கின. அந்த வாய்ப்பினைத் தமக்குச் சாதகமாகப் பயன் படுத்திக் கொள்வதென ரஸியாவும் முடிவு செய்தார். ஷாதுர்கான் அந்தப்புர மங்கைகள் பலரைத் துன்புறுத்தி வந்தார் என்று முன்னர் கண்டோம். அவர்களுள் ரஸியாவும் ஒருவர். ஒரு சமயம் அவரைக் கொன்று விடுவதற்கான திட்டத்தை ஷாதுர்கான் தீட்டியிருந்தார். தக்க நேரத்தில் அச்சதித் திட்டம் அம்பலப் படுத்தப்பட்டது. எனவே ரஸியா ஷாதுர்கானுடைய கொடுஞ் செயலுக்கு இரையாகாது தப்பித்துக் கொண்டார். தம் உயிருக்கு நேரவிருந்த ஆபத்தை முழுமையாகத் தடுப்பதற்கு ரஸியாவிற்கு ஒரே வழிதான் புலப்பட்டது. அதாவது அரசுரிமையைத் தாமே கைப்பற்றிக் கொள்வதென்பதாகும். ருக்னுத்தீன் பிரூஸ் ஷா கலகக்காரர்களை அடக்க டில்லியை விட்டுச் சென்றதை அறிந்ததும் ரஸியா செந்நிற உடைகளை அணிந்துகொண்டு தொழுகைக்காக மசூதியில் மக்கள் கூடியிருந்தபோது அவர்கள் முன்னிலையில் அவர் தோன்றி தம்முடைய குறைகளை எடுத்துக் கூறினார். மக்களிடம் நியாயம் கோரிப் பெற விரும்பியவர்கள் செந்நிற ஆடை அணிந்து அவர்கள் முன்னிலையில் நிற்பது அக்கால வழக்கமாகும். ஷாதுர்கான் ரஸியாவிற்கு இழைத்து வந்த கொடுமைகளை மக்கள் அறிந்ததும், அவர்கள் கொதித்தெழுந்து அரண்மனையைத் தாக்கினார்கள். ஷாதுர்கான் சிறை பிடிக்கப்பட்டார். அச் செய்தியை அறிந்ததும் ருக்னுத்தீன் பிரூஸ் ஷா டில்லிக்குத் திரும்பினார். டில்லிக்குத் திரும்பிய அமீர்களும், அவர்களுடைய படையினரும் ரஸியாவின் பக்கம் சேர்ந்துகொண்டு அவரை அரியணையில் அமர்த்தினார்கள். ருக்னுத்தீன் பிரூஸ்ஷா சிறையிலடைக்கப்பட்டார். பிறகு அவர் கொல்லப்பட்டார்.

ருக்னுத்தீன் பிரூஸ்ஷா காலத்தில் குறிப்பிடத் தக்கதொரு நிகழ்ச்சி ஏற்பட்டது. இல்தூத்மிஷ் இறந்த செய்தியைக் கேட்டு சைப்புத்தீன் ஹசன் கார்லி டில்லி அரசின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்த ஊச் என்னுமிடத்தைத் தாக்கினார். அப்போது அதனுடைய இக்தாதாரராகப் பணியாற்றி வந்த சைப்புத்தீன் அய்பெக் திறமையாகப் போராடி ஹசன் கார்லியை

தோற்கடித்து டில்லி அரசினுடைய பெருமையை நிலைநாட்டினார். சைப்புத்தீன் அய்பெக் இல்தூத்மிஷின் துருக்கிய அடிமை அதிகாரிகளுள் ஒருவராவார். இதைத் தவிர பெருமைபடத்தக்க நிகழ்ச்சியேதும் ருக்னுத்தீனுடைய ஆட்சிக் காலத்தில் நடைபெறவில்லை. ருக்னுத்தீனுடைய ஆட்சி 6 மாதங்கள் 28 நாட்கள் நடைபெற்றது.

## ரஸியா (1236-1240)[1]

ஓர் அரசருக்கு இருக்க வேண்டிய எல்லா பண்புகளையும் தகுதிகளையும் ரஸியா பெற்றிருந்தார்.[2] அவருடைய திறமையில் அவருக்கு அதிக நம்பிக்கை யிருந்தது. ஆகவே, அவர் செந்நிற ஆடை அணிந்து மக்கள் முன்னிலையில் நின்று தம் குறைகளைக் கொட்டித் தீர்த்த போது தமக்கு அரசாள ஒரு வாய்ப்பைக் கொடுத்தால் ஓர் ஆண்பிள்ளையை விடத் திறமையாகத் தம்மால் ஆட்சி செய்ய இயலும் என்பதை மெய்ப்பித்துக் காட்டுவார் என்றும், அவர் திறமையாக ஆட்சி செய்யவில்லை என்று மக்கள் உணருவாரேயானால் அவரைப் பதவியிலிருந்து நீக்கிவிடலாம் என்றும் கூறினார். ஆனால் அவருடைய பெண்மை அவருடைய ஆற்றலை முழுமையாக வெளிப்படுத்த இயலாதவாறு செய்துவிட்டது. அதைப் பற்றி பின்னர் கவனிப்போம்.

ரஸியா அரியணை ஏறுவதற்கு உறுதுணையாக இருந்தவர்கள் டில்லி மக்களும் டில்லிப் படையினரும், டில்லி அமீர்களும் ஆவார்கள். மாநில ஆளுநர்களைக் கலந்து ஆலோசிக்காமல் அவர்கள் ரஸியாவை அரசியாக அறிவித்தனர். மாநில ஆளுநர்கள் துருக்கிய வர்க்கத்தில் முக்கியமான பங்கை பெற்றிருந்தார்கள். எனவே டில்லி மக்கள் அவர்களைப் புறக்கணித்துவிட்டு ரஸியாவை அரசியாக அமர்த்தியபோது அவமானத்தால் குன்றிப் போனார்கள். தங்களுடைய ஒப்புதலின்றி அரசியாக பதவியேற்ற ரஸியாவை அப்பதவியிலிருந்து அகற்றுவதற்குத் தக்கதருணத்தை எதிர் பார்த்திருந்தனர். அவர்களுள் முக்கியமானவர் மலிக் அலாவுத்தீன் ஜானி, மலிக் சைப்புத்தீன் கூச்சி, மலிக் இஸ் உத்தீன் கபீர்கான் அயாஸ், மலிக் இஸ் உத்தீன் முகமது சாலாரி ஆவார்கள். அவர்களுடன் நிஜாமுல் முல்க் ஜுனெய்தியும் சேர்த்துகொண்டு ரஸியாவிற்கு முதல் தொல்லையை உண்

1 சிலர் ரஸியாவை சுல்தானா என்று குறிப்பிடுகின்றனர். சுல்தானா என்பதற்கு சுல்தானுடைய மனைவி என்று பொருள். ரஸியா சுல்தானாகச் செயலாற்றினார் என்பதை அறிதல் வேண்டும். மின்ஹாஜ் அவரை சுல்தான் என்று குறிப்பிட்டுள்ளார். நாணயங்களிலும் சுல்தான் என்றுதான் பொறிக்கப்பட்டுள்ளது. (ACHI, F.N. p. 227)

2 Minhaj, 185.

டாக்கினர். அவர் இல்தூத்மிஷின் புகழ்மிக்க வசீர் என்பதால் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தார். மேற்கூறிய ஐவரும் ஒன்று சேர்த்து ரஸியாவை அரசியாக ஏற்க மறுத்தார். அதையடுத்து அவர்கள் டில்லியை நோக்கிப் படை நடத்திச் சென்றூர்கள். டில்லிக்கருகே அவர்கள் வந்துவிட்டபோதிலும் டில்லியைத் தாக்க அவர்களுக்குத் தைரியமில்லை. டில்லியை மக்கள் தங்களுடைய முழு ஆதரவை ரஸியாவிற்கு அளித்திருந்தமையே அதற்குக் காரணமாகும். அதே நேரத்தில் கலகக்காரர்களை பல நாட்கள் டில்லிக்கருகே விட்டுவைப்பதும் விவேகமான செயலாக ரஸியா விற்குத் தோன்றவில்லை. ஆகவே அவுத்தின் ஆளுநராகப் பணி யாற்றி வந்த மலீக் நஸ்ரத் உத்தீன் தாயிசியை தம் உதவிக்கு வரும்படி ரஸியா அழைப்பு விடுத்தார். அவரும் அக் கட்டளையை ஏற்று டில்லி நோக்கி படையுடன் விரைந்தார். டில்லியை அவர் அடைவதற்கு முன் சைப்புதீன் கூச்சி அவரை எதிர்பாராத விதமாகத் தாக்கி அவரைக் கைப்பற்றினர். சிறையில் நோய் காரணமாக தாயிசி இறந்தார்.

நிலைமை கட்டுமீறி போவதற்குள் பகைவரைத் தோற்கடிக்க ரஸியா முடிவு செய்து படையுடன் டில்லியை விட்டு வெளியே வந்தார். சிறுசிறு சண்டைகள் நடைபெற்றன என்ருலும் முழுவெற்றி எவருக்கும் கிடைக்கவில்லை. போரிட்டு பகைவரை வெல்ல இயலாது என்றநிலை ஏற்பட்டபோது ரஸியா வேறு முறைகளைக் கையாண்டு பகைவர்களை அழிக்க முற்பட்டார். இஸ் உத்தீன் முகமது சாலாரியும், இஸ் உத்தீன் கபீர்கான் அயாஸும் ரஸியாவின் பக்கம் இரகசியமாகச் சேர்ந்து கொண் டனர். அவர்களுடைய உதவியால் நிஜாம் உல் முல்க் உட்பட ஏனைய மலிக்குகளை சிறை பிடிக்க திட்டம் வகுக்கப்பட்டது. அதை அறிந்த ஏனைய மலிக்குகள் ஓட்டம் பிடித்தனர். சைப்புத்தீன் கூச்சியும் வேறுசிலரும் அவர்களைத் துரத்தி வந்த டில்லிப் படை களிடம் சிக்கி உயிரிழந்தனர். நிஜாம் உல் முல்க் சிர்மூர் மலைப் பகுதிகளுக்கு ஓடினர். அங்கேயே அவர் இறந்தார் என்று நாம் அறிகிருேம். அலாவுத்தீன் ஜானியும் கொலையுண்டார். இவ் வாருகத் தம்மை முதன் முதலில் எதிர்த்த ஒரு கூட்டணியை ரஸியா ஒழித்துக் கட்டினர். அவரது வெற்றி டில்லி சுல்தானிய அர சியலமைப்பு வரலாற்றிலே சிறப்பான இடத்தைப்பெற்றுள்ளது. டில்லி சுல்தானைத் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் மாநில ஆளுநர் களுடைய விருப்பத்திற்கு உயர்ந்த இடம் கொடுக்க வேண்டு வதில்லை என்பதை இவ்வெற்றி முழுமையாக உணர்த்தி விட்டது.[1]

[1] IHQ, Vol XVI, p. 760.

இவ்வெற்றியை அடுத்து ரஸியா நிருவாகம் பற்றிய நடவடிக்கைகள் சிலவற்றை மேற்கொண்டார். குவாஜா முஹாஸாபுத்தீனை வசீராக நியமித்து அவருக்கு நிஜாம் உல்முல்க் பட்டத்தையும் அளித்தார். மலிக் சைப்புத்தீன் அய்பெக் பாஹ்தூ என்பவரை போர் அமைச்சராக நியமித்து அவருக்கு குத்லூக்கான் என்ற பட்டத்தை வழங்கினார். அவர் இறந்த பின்னர் மலிக் குத்புத்தீன் ஹசன் கோரியை படைபற்றிய விவகாரங்களில் அரசருடைய உதவியாளராக நியமித்தார் (naib-i-lashkar). இஸ் உத்தீன் கபீர்கான் அயாஸ் லாகூர் இக்தாவைப் பெற்றார். அதன் பின்னர் அவர் அரண்மனை அதிகாரிகளை நியமனம் செய்தார். மலிக். இ. கபீர் இக்தியாருத்தீன் அயிடிஜின் என்பவரை அமீர். இ. ஹஜீப் பாகவும் மலிக் ஜமாலுத்தீன் யாகூத் என்பவரை அமீர். இ. ஆகூராகவும் நியமித்தார். யாகூத் துருக்கியரன்று; அவர் அபீசீனியாவைச் சேர்ந்தவர். இல்தூத்மிஷின் மறைவிற்குப் பின்னர் டில்லி சுல்தானியத்தின் முக்கிய பொறுப்புகளை துருக்கியர்களே பெற்றிருக்க வேண்டும் என்ற எண்ணம் வேரூன்றி வளரலாயிற்று. மேலும் அமீர். இ. ஆகூர் பதவியை இதுவரை துருக்கியர்களே வகித்து வந்தனர்.[1] எனவே ரஸியா யாகூத்தை அப்பதவியில் அமர்த்திய போது துருக்கிய அமீர்கள் கோபமடைந்தனர். ரஸியா நிருவாகத்தைத் தம்முடைய நேர் மேற்பார்வையின் கீழ் நடத்த வேண்டும் என்று விரும்பினார். இல்தூத்மிஷ் போல அவரும் துருக்கியர், துருக்கியரல்லாத அன்னிய முஸ்லிம்கள் ஆகியோருடைய துணையுடன் ஆட்சியை நடத்த விரும்பினார்.

இதனால் ஏற்பட்ட கருத்து வேற்றுமை ரஸியாவை வீழ்த்துவதற்கான சதித்திட்டம் உருவாவதற்கு முக்கிய காரணமாக அமைந்து விட்டது. இச்சதித்திட்டத்தைப் பற்றிய முழுவிவரங்கள் நமக்குக் கிடைக்கவில்லை. ஆயினும் அத்திட்டத்தை சதிகாரர்கள் செயற்படுத்துவதற்கு முன்பே கபீர்கான் அயாஸ் ரஸியாவிற்கு எதிராகக் கலகம் செய்தார். கபீர்கான் அயாஸ் இல்தூத்மிஷினுடைய அடிமைகளுள் ஒருவர். மூல்தானின் ஆளுநராக இல்தூத்மிஷ் அவரை நியமித்தார். சரியானபடி நிருவாகம் செய்யவில்லை என்ற காரணத்திற்காக அவர் அப்பதவியை இழந்தார். அதன் பின்னர் ருக்னுத்தீன் பிரூஸ் காலத்தில் அவர் சுனும் இக்தாவைப் பெற்றார். ரஸியாவிற்கு அவர் உதவி செய்தமையால் அவர் லாகூர் இக்தாவைப் பெற்றார். ரஸியாவிற்கு எதிராக சதி நடந்து வருவதை அறிந்து அவரை எதிர்ப்பதில் தாம் முந்திக் கொள்ள வேண்டும் என்று எண்ணியதால் அவர் கலகம் செய்தார்.

[1] இப பதவியை யாகூத் இல்தூத்மிஷ் காலத்திலேயே பெற்றார் என்பது ஒரு கருத்து (Isami loe cit, 128).

அதையறிந்ததும் ரஸியா படையுடன் லாகூர் நோக்கி விரைந்தார். ரஸியாவை எதிர்க்க தைரியமின்றி கபீர்கான் சோத்ராவிற்கு ஓடினார். ரஸியா அவரை விடாது பின்தொடர்ந்து அவரை அடி பணிய வைத்தார். அவரை மன்னித்து மூல்தான் இக்தாவை மட்டும் நிருவகித்து வரும்படி விட்டுவிட்டார்.

இதற்கிடையில் அவரை வீழ்த்துவதற்கான சதித்திட்டம் தீட்டப்பட்டுவிட்டது. அத்திட்டத்தில் அயிட்டிஜின், அல்தூனியா ஆகியோர் கலந்து கொண்டிருந்தனர். இவ்விருவரும் ரஸியாவின் கருணையால் உயர்பதவியைப் பெற்றிருந்தனர், அயிட்டிஜின் அமீர்-இ-ஹஜீப் பதவியை வகித்திருந்தார். அல்தூனியா தாபாரிந்தாவின் ஆளுநராகப் பணியாற்றி வந்தார்கள். ரஸியா தான் அவர்களுக்கு அப்பதவிகளை அளித்திருந்தார். ரஸியா டில்லியில் இருக்கும்வரை அவரை ஒன்றும் செய்ய இயலாது என்பதையும், மாநில ஆளுநர்கள் தனித்தனியாக கலகம் செய்வதால் ஒன்றையும் சாதிக்க இயலாது என்பதும், ரஸியாவால் நியமிக்கப்பட்ட அதிகாரிகளின் துணையின்றி அவரை வீழ்த்த இயலாது என்றும் சதிகாரர்கள் நன்றாக புரிந்து கொண்டிருந்தனர். எனவே அவர்கள் தீட்டிய திட்டத்தின்படி அல்தூனியா தாபாரிந்தாவில் கலகம் செய்ய வேண்டும். அதை ஒடுக்க ரஸியா டில்லியை விட்டுச் செல்லுவார். போகும் வழியில் ரஸியாவினுடைய அமீர்கள் அவருக்கு எதிராகக் கலகம் செய்து அவரைப் பதவியிலிருந்து அகற்ற வேண்டும். அத்திட்டத்தின்படி அல்தூனியா 1240-ல் கலகம் செய்தார். அச்செய்தியை அறிந்ததும் ரஸியா தாபாரிந்தா நோக்கிப் புறப்பட்டார். தாபாரிந்தாவை நெருங்கியதும் ரஸியாவுடன் வந்த துருக்கிய அமீர்கள் யாகூத்தை முதலில் கொன்றுவிட்டு பின்னர் ரஸியாவை சிறை பிடித்தார்கள். சிறைபிடிக்கப்பட்ட ரஸியா தாபரிந்தாவிற்கு அனுப்பி வைக்கப் பட்டார்.

ரஸியாவை வீழ்த்திய பிறகு துருக்கிய அமீர்களுள் ஒருவரும் அரச பீடத்தில் அமர விரும்பவில்லை. அரச பதவி ஷம்ஸி குடும்பத்தினருகே உரியது என்பதில் அவர்களுக்குள் கருத்து வேறுபாடு இல்லை. அவர்களுக்கு வேண்டியதெல்லாம் அரச அதிகாரங்களேயன்றி அரச பதவியல்ல. எனவே அரச பதவியில் இல்தூத்மிஷின் பிள்ளைகளுள் ஒருவரை அமர்த்திவிட்டு அரச அதிகாரங்கள் அனைத்தையும் துருக்கிய அமீர் ஒருவரிடம் ஒப்படைத்து அவரை ஏனைய துருக்கிய அமீர்கள் சார்பில் அவற்றைச் செலுத்தி வரும்படிச் செய்ய வேண்டும் என்பதே கலகக்காரர்களின் முக்கிய நோக்கமாகும். ஆகவே ரஸியா கைதுசெய்யப்பட்ட செய்தி

டில்லியிலிருந்த அமீர்களுடைய காதுகளுக்கெட்டியதும் அவர்கள் பராம்ஷாவை (Muizuddin Bahram Shah) சுல்தானாகத் தேர்ந் தெடுத்தார்கள் நாயப்-இ-மம்லாகத் அல்லது உதவி சுல்தான் என்ற பதவியைப் புதிதாக உண்டாக்கி அதனை அயிடிஜினுக்குக் கொடுத்தார்கள். அல்துானியாவிற்கு தகுந்த வெகுமதி உடனடி யாக அளிக்கப்படவில்லை. ஏதாவதொரு பரிசை அயிடிஜின் நிச்சயமாகத் தமக்களிப்பார் என்று அல்துானியா எதிர்பார்த்திருந் தார். புதிய சுல்தான் அயிடிஜினைக் கொன்று விட்டமையால் அல்துானியா மிக்க ஏமாற்றத்தை அடைந்தார். இந்த சூழ் நிலையைத் தமக்குச் சாதகமாக்கிக் கொள்ள ரஸியா முடிவு செய்தார். ரஸியாவிற்கும் அல்துானியாவிற்கும் இடையே ஏற்பட்டிருந்த நட்பிற்கு புத்துயிர் அளிக்கப்பட்டது. இருவரும் திருமணம் செய்து கொண்டனர். ரஸியாவிற்கு உதவி செய்து அவரை மீண்டும் சுல்தானாக அமர்த்த அல்துானியா ஒப்புக் கொண்டார். அல்துானியாவிற்கு தக்க வெகுமதி அளிக்க ரஸியா ஒப்புக் கொண்டார். அல்துானியா உடனே படை திரட்டிக் கொண்டு ரஸியா உடன்வர டில்லி நோக்கிப் புறப்பட்டார். அச்செய்தியை அறிந்த பராம்ஷா டில்லியை விட்டு வெளியே வந்து அவர்களைப் போர்க்களத்தில் சந்தித்தார். ரஸியாவும் அல்துானி யாவும் தோல்வியுற்றனர். போர்க்களத்திலிருந்து ஓடிய ரஸியா வும் அல்துானியாவும் இந்துக்களின் கைகளில் சிக்கி உயிரிழந்தனர்.

ரஸியாவின் ஆட்சிக் காலத்தில் மேலும் இரண்டு நிகழ்ச்சிகள் நடைபெற்றன. 1237ஆம் ஆண்டில் நூர் துருக் என்ற கார் மேதிய அல்லது இஸ்மாயிலி அறிஞர் ஒருவர் ஓராயிரம் ஆதர வாளர்களைத் திரட்டிக் கொண்டு ஜும்மா மசூதிக்குள் நுழைந்து அங்கு வெள்ளிக்கிழமை தொழுகைக்காகக் கூடியிருந்தவர்களை கொல்லத் தொடங்கினர். அதன் விளைவாக டில்லியில் குழப்பம் ஏற்பட்டது. நகரத்திலுள்ள சிலர் ஆயுதங்களைத் தாங்கிக்கொண்டு கார்மேதியர்களை எதிர்த்து அவர்களை விரட்டியடித்தார்கள். 1238-ல் கஜினியை ஆண்டு வந்த கோராசாமிய ஆளுநரான மலிக் ஹசன் கார்லி மங்கோலியர்களின் தாக்குதலைப் பொறுக்க இயலாமல் கஜினியை விட்டு டில்லிப் பேரரசுக்குள் ஓடிவந்து விட்டார். அவர் ரஸியாவுடன் இராணுவ ஒப்பந்தம் ஒன்றை செய்து கொள்ள விரும்பினர். எனவே தமது மகனை டில்லிக்கு அனுப்பி வைத்தார். ரஸியா அவரை மரியாதையுடன் வரவேற்று அவருடைய செலவுக்கு கொஞ்சம் பணமும் கொடுத்தார். ஆனல் அவர் கோரிய இராணுவ உடன்பாட்டினை மேற்கொள்ள மறுத்து விட்டார். இவ்வாறாக டில்லி அரசுக்கு மங்கோலியர்களால் ஆபத்து ஏற்படாதவாறு தடுத்து விட்டார்.

ரஸியாவின் பெண்மை அவரது அழிவுக்குக் காரணமாகும் என்று சில வரலாற்றாசிரியர்கள் கூறுகின்றனர். அவர் பெண்ணாகப் பிறந்து விட்டமையால் மக்கள் அவர்பால் வெறுப்புக்கொண்டு அவரை எதிர்த்து அவரைப் பதவியிலிருந்து நீக்கி விட்டார்கள் என்று கூறப்படுகிறது. இல்தூத்மிஷ் அவரை முதன் முதலில் தம் முடைய பின்னுரிமையாளராக நியமித்தபோது அவர் அருகே யிருந்த அமீர்கள் வயது வந்த ஆண் பிள்ளைகள் இருக்க ஒரு பெண்ணை சுல்தானாக நியமிப்பதால் என்ன பயனை அடைய முடியும் என்று கேட்டார்கள். இல்தூத்மிஷ் அவர்களுடைய எதிர்ப்பை அப்போது பொருட்படுத்தவில்லை. ஆனால் அவர் இறப்பதற்கு முன் பின்னுரிமையைப் பற்றி தாம் முதலில் மேற்கொண்ட முடிவினை மாற்றிக்கொண்டு ருக்னுத்தீன் பிரூஸை தமது பின்னுரிமையாள ராக நியமித்தார் என்று சிலர் கூறுகின்றனர். அதற்குச் சில ஆதா ரங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அது உண்மையெனில் அவருடைய மன மாற்றத்திற்கு ஒரே ஒரு காரணம் மட்டும் நாம் கூற இயலும். அது அக்காலத்தில் பெண்கள் ஆட்சி அதிகாரம் செலுத்துவதை மக்கள் பொதுவாக விரும்பவில்லை என்பதே யாகும். ஆகவேதான் ருக்னுத்தீன் பிரூஸ் பட்டமேறியபோது ரஸியாவை ஆதரிக்கும் வகையில் கலகம் ஏதும் ஏற்படவில்லை.

சுல்தானாகப் பதவியேற்ற பிறகு பெண்மையினால் தமக்கு ஏற்பட்ட இடையூறுகளை ரஸியா நன்கு அறிந்து கொண்டார். அரசாங்கக் காரியங்களை அவர் நேரடியாக கவனிப்பதை பர்தா முறை தடை செய்தது. அவர் அமர்ந்திருந்த அரியணைக்கும், அரச அவையில் கூடியிருந்தவர்களுக்கும் இடையே ஒரு திரைச்சீலை தொங்கவிடப்பட்டிருந்தது. அவருக்கு அருகே பெண் மெய்க் காவலர்கள் இருந்தனர். அவர்களுக்கு அப்பால் அவரது நெருங்கிய உறவினர்கள் இருந்தனர். அவர்களை அடுத்து ஏனையோர் இருந்தனர். இந்த மாதிரியான ஏற்பாடு அரச காரியங்களை அவர் நேரடியாகக் கவனிக்கவொட்டாது தடை செய்தது. ஆகவே அவர் ஆண்களைப்போல மேலங்கியையும் தொப்பியையும் போட்டுக்கொண்டு அரச சபையில் எல்லோர் முன்னிலையில் இருந்து கொண்டு நாட்டு விவகாரங்களை கவனிக்கலானார். யானை மீது அமர்ந்து கொண்டு டில்லி நகர வீதிகளில் சுற்றி வந்தார். பொது மக்கள் அனைவரும் அவரை நன்றாகப் பார்க்க முடிந்தது. இந்த மாதிரியான செய்கைகள் பலருக்குப் பிடிக்கவில்லை. மேலும் அவர் பெண்ணாகப் பிறந்துவிட்டமையால் அவரிடம் உயரிய பண்புகள் எதிர்பார்க்கப்பட்டன. அவர் யாகூத்தின் மீது காதல்

கொண்டாரோ இல்லையோ, அவரிடம் அவர் நெருங்கி பழகி வந்த அனைவருக்கும் எரிச்சலை மூட்டியது. ரஸியா குதிரை சவாரி செய்ய முற்பட்டபோது யாகூத் அவர் பக்கத்தில் நின்று கொண்டு அவரைத் தூக்கி குதிரையின்மீது அமர்த்தியதாகக் கூறப்படுகிறது. அந்த மாதிரியான காரியங்களில் எல்லோர் முன்னிலையிலும் செய்தபோது மக்கள் அவர்மீது சந்தேகமும் கோபமும் கொண்டனர். அதன் விளைவாக கலகங்கள் ஏற்பட்டன. ஆகவே அவரது அழிவுக்குக் காரணம் பெண்மையே என்று கூறப்படுகிறது.

பெண்கள் அரசாளக் கூடாது என்ற விதி அப்போது ஏற்பட்டிருக்கவில்லை. துருக்கிய வரலாற்றிலும், ஈரான் நாட்டு வரலாற்றிலும் பெண்கள் அரசருக்குரிய அதிகாரங்களை செலுத்தி வந்தனர். எகிப்தை ஆண்ட அய்யூபி வமிசத்தைச் சார்ந்த ஷஜநத்தூர், கோர்கானுடைய மனைவி, அவருடைய மகள், கோராசாமைச் சார்ந்த தர்கான் காதூம் ஆகியோர் ஆட்சி செலுத்தி வந்ததை நாம் அறிகிறோம். ஆகவே இஸ்லாமிய உலகத்தில் பெண்ணினுடைய ஆட்சி புதிதல்ல. ஆகவேதான் இஸ்லாமிய சமயத்தைப் பற்றியும், சட்டத்தைப் பற்றியும் அதிகமாகத் தெரிந்து வைத்துக் கொண்டிருந்த மின்ஹாஜ் தம் நூலில் இத்தகையப் பிரச்சினையைப் பற்றி ஓர் இடத்தில்கூட குறிப்பிடவில்லை, பெண்கள் அரசாளுவதை இஸ்லாமிய சட்டம் தடை செய்யவில்லை என்றால் ரஸியாவைத் தமது பின்னுரிமையாளராக இல்தூத்மிஷ் தேர்ந்தெடுத்தபோது அமீர்கள் எதிர்ப்புத் தெரிவித்தது ஏன்? அவருடைய விருப்பத்திற்கு மாறாக அமீர்கள் ருக்னுத்தீன் பிரூஸ் ஷாவை சுல்தானாக தேர்ந்தெடுத்தபோது, ரஸியாவினுடைய உரிமையை வற்புறுத்தும் வகையில் எதிர்ப்புகள் தோன்றாதது ஏன்? என்ற கேள்விகள் எழுப்பக் கூடும். அந்தக் கேள்விகளுக்கான பதிலை இல்தூத்மிஷ் நம் சார்பில் ஏற்கெனவே அளித்து விட்டார். ரஸியா திறமையானவர். அவர் ஆட்சிக்கு வந்தால் துருக்கிய மலிக்குகளும் அமீர்களும் செல்வாக்குப் பெற்று இருக்க முடியாது. ஆகவே அவர் பட்டம் எய்துவதை எதிர்த்தார்கள். ருக்னுத்தீன் பிரூஸை ஏன் இல்தூத்மிஷ் தமது இறுதிக்காலத்தின்போது தேர்ந்தெடுக்க வேண்டும் என்ற கேள்வியை சிலர் எழுப்பக் கூடும். இல்தூத்மிஷ் தம்முடிவை மாற்றி விட்டார் என்பதற்கு நேரடியான ஆதாரங்கள் ஏதும் நமக்குக் கிடைக்கவில்லை. ருக்னுத்தீன் பிரூஸ், இல்தூத்மிஷ் ஆகியோரின் பெயர்களைக் கொண்ட வெள்ளி நாணயம் நமக்குக் கிடைத்திருப்பது உண்மையே. ஆனால் ருக்னுத்தீன் பிரூஸ் தம்முடைய உரிமையை வலியுறுத்துவதற்காக அத்தகைய நாணயத்தைத் தயார் செய்திருப்பதற்கும் வழியுண்டு. மேற்கூறிய

வற்றிலிருந்து ரஸியாவின் தோல்விக்குக் காரணம் அவர் பெண்ணாகப் பிறந்து விட்டதாலன்று என்பது தெளிவாகிறது.

அப்படியென்றால் அவர் தோல்விக்குக் காரணங்கள் என்ன? துருக்கிய அடிமைகள் நிருவாகப் பொறுப்புகளைத் தங்கள் கைகளில் வைத்துக் கொள்ள விரும்பினார்கள். சுல்தானைத் தங்கள் கைப்பொம்மையாக மாற்ற விரும்பினார்கள். ஆனால் ரஸியா எல்லா அதிகாரங்களையும் தம் கைகளிலேயே வைத்திருப்பதென முடிவு செய்தார். ரஸியாவிற்கும் துருக்கிய அடிமைகளுக்கும் இடையே ஏற்பட்ட போர் அதிகாரம் பற்றிய போரேயன்றி ஆண்மைக்கும் பெண்மைக்கும் இடையே நடந்த போராகாது. துருக்கிய அடிமை அதிகாரிகளின் போக்கை ரஸியா போலொத்தவர்கள் புரிந்து கொள்ளுவது கடினமான காரியமாகாது. அதையறிந்ததும் துருக்கிய அடிமை அதிகாரிகளைக் கட்டுப்படுத்த துருக்கியரல்லாத அதிகாரிகளின் கூட்டமொன்றைத் தோற்றுவிப்பது அவசியமென்று உணர்ந்தார். ஆகவேதான் அவர் யாகூத்திடம் நெருங்கிப் பழகினார். துருக்கியரல்லாதார் வளர்ச்சியடைவதை துருக்கிய அடிமைகள் விரும்பவில்லை. காதலுக்காக அவர் அவ்வாறு பழகவேண்டும் என்று எண்ணியிருந்தால் அதற்காக அவர் பல பொது இடங்களில் தாறுமாறாக நடக்க வேண்டிய அவசியமேற்பட்டிராது. எனவே அவரது அழிவிற்கு அரசியல், இனம் சார்ந்த காரணங்களே முக்கியமான காரணங்களாகும் என்பது விளங்கும்.

**முயீஸ்உத்தீன் பராம்ஷா (1240-1242)**

1240ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 21 ஆம் நாள் பராம்ஷா பட்டமெய்தினார். அரசருக்குரிய மரியாதைகளை மட்டுமே பராம்ஷா பெற்று வர வேண்டும், அரசருக்குரிய ஆதிகாரங்கள்யாவும் நாயப் இ மம்லாகத்திடம் இருக்கவேண்டும் என்ற நிபந்தனையின் பேரில் அவர் சுல்தானாக அமர்த்தப் பட்டார். அந்நிபந்தனைக்கேற்ப அயிடிஜின் நாயப்-இ - மம்லாகத்தாக நியமிக்கப்பட்டார். முஹாஸாபுத்தீன் தொடர்ந்து வசீர் பதவியை வகித்து வந்தார். அரசியல் துறையில் மேற்கொள்ளப்பட்ட இந்த விசித்திரமான சோதனை முறை தொடக்கத்திலிருந்தே தோல்வியை எதிர்நோக்கி இருந்தது. இதற்கு முன் அரச அதிகாரத்தைச் சுல்தானே பெற்றிருந்தார். அவருக்கு உதவியாக வசீர் இருந்து வந்தார். வசீருடைய அதிகாரம் அரசரைப் பொறுத்திருந்தது. அரசர் பலம் பொருந்தியவராக இருந்தால் வசீருடைய செல்வாக்கு குறைந்திருந்தது. அரசர் பலமற்றவராக இருந்தால் வசீர் செல்வாக்குப் பெற்று விளங்கினார். பராம் ஷா காலத்தில் புதிய பதவியொன்று உண்டாக்கப்பட்டது. நாயப்.இ.மம்லாகத் அவரிடத்தில் அரச

ருக்குரிய அதிகாரங்கள் அனைத்தையும் ஒப்படைக்கப் பராம் ஷா ஒப்புக் கொண்டார். எனவே ஒரே விதமான அதிகாரத்தைப் பெற்றுடைய மூன்று பேர்கள் இப்போது உரிமை கொண்டாடத் தொடங்கினார்கள்—சுல்தான், நாயப்.இ.மம்லாகத், வசீர், அதன் விளைவாகச் சதித் திட்டங்களும் கலகங்களும் ஏற்பட்டன. இறுதியில் பராம் ஷா கொலையுண்டார். இதுவே அவரது ஆட்சியின் சிறப்பாகும்![1]

பராம்ஷா போற்றுதற்குரிய நற்பண்புகள் சிலவற்றைப் பெற்றிருந்தார். எளிமையானவர்; வெளிப்பகட்டை விரும்பாதவர், பிறருடன் தாராளமாகப் பழகும் தன்மையற்றவர். சில தீய குணங்களும் அவரிடத்தில் காணலாம். இரத்தம் சிந்துவதற்கு அவர் அஞ்ச மாட்டார். பராம் ஷாவைப் பெயருக்கு அரசராக வைத்துக் கொண்டு அவருக்குரிய அதிகாரங்களைத் தாங்களே செலுத்தி வர வேண்டும் என்று மலிக்குகள் எண்ணினார்கள். ஆனால் பதவி வந்தவுடன் பெயரளவில் அன்றி உண்மையான அரசராக அவர் நடக்கத் தொடங்கினார். ஆகவே அவரை வீழ்த்த சதித் திட்டம் தீட்டப்பட்டது. கொலைகாராக நடந்துகொண்டு சதிகாரர்களுடைய முயற்சியை முறியடித்தார். அதைப் பற்றி சிறிது கவனிப்போம்.

அயிடிஜின் நாய்ப்-இ-மம்லாகத்தாக நியமிக்கப்பட்டார் என்று முன்பு பார்த்தோம். அரச அதிகாரங்களைச் செலுத்தி வருவதோடு திருப்தியடையாமல் அரசருக்குரிய தனி உரிமைகளையும் அடைய முயற்சித்தார். தமது இல்லத்தின் முன்பு ஒரு யானையைக் கட்டி வைத்தார். வாயிற்படியில் ஒரு முரசினையும் வைத்தார். இவை அரசருக்கே உரிய தனியுரிமைகளாகக் கருதப்பட்டன. அதை அறிந்த சுல்தான் அவரைத் தொலைத்து விடுவதென முடிவு செய்தார். ஒரு நாள் தமது அரண்மனையில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த சமய உரையாடல் ஒன்றில் கலந்து கொள்ளும்படி சுல்தான் கேட்டுக் கொண்டார். அதற்கிணங்கி அயிடிஜின் அரண்மனைக்கு வந்தார். அப்போது பராம் ஷா தமது ஆட்களை அவர்மீது ஏவி அவரைக் கொன்றுவிட்டார். அங்கு வந்திருந்த வசீர் முஹாஸாபுத்தீனும் தாக்கப்பட்டார். ஆயினும் அவர் தப்பித்துக் கொண்டு அரண்மனையிலிருந்து ஓடிவிட்டார்.

அயிடிஜினுக்கு ஏற்பட்ட கோர முடிவு ஏனைய மலிக்குகளை கோபமடையச் செய்தது. பராம் ஷா எல்லா மலிக்குகளையும் சந்தேகக் கண்களுடன் பார்க்கத் தொடங்கினார். அவ்வாறு

[1] ACHI, P. 244

அரசர் சந்தேகித்தவர்களுள் ஒருவர் பத்ருத்தீன் சன்கர் ரூமி என்பவராவார். அவரை ஹமீர் இ ஹஜீப் பதவியில் அமர்த்தியவர் பராம் ஷாவே ஆவார். சுல்தான் தம்மீது சந்தேகம் கொண்டு விட்டார் என்பதை அறிந்து கொண்ட சன்கர் ரூமி சுல்தான் அவரைத் தாக்குவதற்கு முன் அவரை வீழ்த்திவிடுவது மேல் என்று எண்ணினுர். எண்ணியதை நிறைவேற்ற சதிகாரர்களின் கூட்டம் ஒன்றினுக்கு ஏற்பாடு செய்தார். அக்கூட்டத்திற்கு முஹாஸாபுத்தீனையும் அழைப்பதென முடிவு செய்தார். ஆகவே, சதிகாரர்களுள் ஒருவர் முஹாஸாபுத்தீனுடைய இல்லத்திற்கு வந்தார். அந்த நேரத்தில் சுல்தானுடைய நம்பிக்கைக்குரிய ஆள் ஒருவர் முஹாஸாபுத்தீனுடைய வீட்டில் இருந்தார். சதிகாரரின் வருகையின் காரணத்தை ஒருவாறு புரிந்துகொண்ட முஹாஸா புத்தீன் தம்மைக் காப்பாற்றிக்கொள்ளவும் துருக்கிய அடிமை களுக்கும் சுல்தானுக்கும் இடையே பூசலை உண்டாக்குவதற்கும் சுல்தானுடைய ஆளை மறைந்திருக்கச் செய்துவிட்டு வீட்டிற்கு வந்த சதிகாரரை பேசவிட்டு விட்டார். அவர் பேசி முடித்ததும், தமது தினக் கடன்களை முடித்துக்கொண்டு வருவதாகக் கூறி அவரை அனுப்பி விட்டார். விஷயத்தைப்புரிந்து கொண்ட சுல்தானுடைய ஆள் நேராக சுல்தானிடம் சென்று முஹாஸா புத்தீனுடைய இல்லத்தில் தாம் கேள்விப்பட்டதைக் கூறினுர். சுல்தான் உடனடியாக நடவடிக்கைகளை மேற்கொண்டு சதி திட்டத்தை முறியடித்தார். சதிகாரர்களுக்குக் கடுமையான தண்டனைகள் விதிப்பதற்குப் பதிலாக அவர்கள் பதவியிலிருந்து நீக்கினுர். வேறு சிலரை டில்லியிலிருந்து வேறு இடத்திற்கு மாற்றி விட்டார். பத்ருத்தீன் சன்கரை பதோனுக்கு இக்தாதாரராக அனுப்பி வைத்தார். காஜி ஜலாலுத்தீன் கஷானி பதவியிலிருந்து நீக்கப்பட்டார். காஜி கபீர் உத்தீனும், ஷெய்க் முகமதுஷமியும் தண்டனைக்குப் பயந்து டில்லியைவிட்டு ஓடிவிட்டார்கள். நான்கு மாதங்களுக்குப் பிறகு சுல்தானுடைய அனுமதி பெறுமல் சன்கர் ரூமி டில்லிக்கு வந்தார். அக்குற்றத்திற்காக சுல்தான் அவரை சிறையிலிட்டு பின்னர் கொன்றுவிட்டார். ஏற்கனவே சுல்தானிடம் அமீர்கள் கொண்டிருந்த வெறுப்பை இந்தக் கொலை மேலும் வளர்த்து விட்டது.

அக்காலத்தில் வாழ்ந்திருந்த அயூப் என்ற ஒரு விசித்திரமான சமயவாதியிடம் பராம்ஷா அளவு மீறிய பற்று கொண்டிருந்தார், அச் சமயவாதியை திருப்திபடுத்துவதற்காக காஜி ஷம்ஸ்உத்தீன் என்பவரை யானையின் காலடியில் இட்டுக் கொன்ருர். அந்த நிகழ்ச்சியின் விளைவாக பராம்ஷானுடைய செல்வாக்கு மேலும் குறைந்து விட்டது. மக்களுடைய அபிமானத்தை இழந்ததோடு

நிற்காமல் அவர்களுடைய பகையையும் இப்போது அவர் தேடிக் கொண்டார். பராம்ஷாவினுடைய எதிரிகளின் கைகள் மேலும் ஓங்கின. பல கொலைகளைச் செய்துவிட்ட பராம்ஷாவைக் கொல்லு வதற்கு அவர்கள் தக்க தருணத்தை எதிர்பார்த்திருந்தனர். அத் தருணமும் விரைவில் வந்துவிட்டது.

கி. பி. 1242ஆம் ஆண்டில் மங்கோலியர்களுடைய முன்னேற்றத்தைத் தடுக்கவும், வட மேற்கு எல்லையைப் பாது காக்கவும் பராம்ஷா ஒரு படையை அனுப்ப வேண்டியதாயிற்று. அப்படையினுக்கு மலிக் குத்புத்தீன் 'ஹசன் கோரியையும், குவாஜா முஹாஸாபுத்தீனையும் தலைவர்களாக நியமித்தார். டில்லிப் படைகள் பியாஸ் ஆற்றை அடைந்தபோது, முஹாஸா புத்தீன் சுல்தானுக்கு ஒரு பொய்யான செய்தியை அனுப்பி வைத்தார். அதாவது ''அவருடன் சென்ற துருக்கிய அமீர்கள் சுல்தானிடம் பற்றுகொண்டிருக்கவில்லை; அவர்கள் சுல்தானை வீழ்த்துவதற்கு தக்க தருணத்தை எதிர் நோக்கியிருக்கின்றனர்; ஆகவே அவர்களை உடனடியாக அழித்துவிட வேண்டும்; அந்த அழிக்கும் பணியினை அவரிடம் ஒப்படைத்து விடவேண்டும்; அப் பணியினை நிறைவேற்றுவதற்கு எல்லா விதமான முறைகளை அவர் கையாள அனுமதி வழங்க வேண்டும்'' என்பதாகும். வெகு நாளாக துருக்கிய பிரபுக்களிடமும் சுல்தானிடமும் முஹாஸா புத்தீன் பகைமைகொண்டு வந்திருந்தார். அவர்களை ஒழித்துக் கட்ட இதுவே தருணம் என்று அவர் எண்ணினார். அச்செய்தி சுல்தானுக்குக் கிடைத்ததும் சிறிதும் யோசிக்காமல் உடனடியாக அவர்களைக் கொன்றுவிடும்படி முஹாஸாபுத்தீனுக்கு அவர் கட்டளையிட்டார். அக்கட்டளை முஹாஸாபுத்தீனுடைய கையில் கிடைத்ததும் அதை அமீர்களிடம் காட்டி அவர்களை சுல்தானுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்யும்படி தூண்டி விட்டார். அதை அறிந்த சுல்தான் தமது முட்டாள்தனத்திற்காக வருந்தினார். நிலைமை மோசமாகி விடக்கூடாது என்பதற்காக நம்பிக்கைக்குரிய ஆள் ஒருவரை கொதிப்படைந்திருந்த அமீர்களிடம் அனுப்பி நடந்ததை அவர்களுக்குத் தெரியப்படுத்த முற்பட்டார். அந்த நபர் அவர்களைச் சமாதானம் செய்வதற்குப் பதிலாக அவர்களுடன் சேர்ந்துகொண்டு பராம்ஷாவை எதிர்க்கலானார். அந்த நேரத்திலும் சுல்தான் மனந்தளரவில்லை. மின்ஹாஜையும், வேறு சில உலாமாக்களையும் கலகக்காரர்களிடம் அனுப்பி அவர்களை சமாதானம் செய்ய முற்பட்டார். அம் முயற்சியும் தோல்வியுற்றது. பக்ருத்தீன் முபாரக்ஷா பருக்கி என்பவர்தான் இருசாராருக்கும் இடையே ஒரு உடன்பாடு ஏற்படாது தடுத்தார் என்று மின்ஹாஜ் கூறுகின்றார். சுல்தான், பருக்கியின் சொற்படி அப்போது நடந்து

வந்தார் என்பதை இங்கு குறிப்பிடுதல் அவசியமாகும். இந்த உள் நாட்டுப்போர் ஏறக்குறைய நான்கு மாதங்கள் நடைபெற்றது. 1242ஆம் ஆண்டு மே மாதம் 10ஆம் நாள் டில்லி கலகக்காரர் களின் கைகளில் சிக்கியது. பராம்ஷா சிறையிலிடப்பட்டார். பின்னர் அவர் கொலையுண்டார். வினை விதைத்தவன் வினை யறுப்பான் என்ற முதுமொழிக்கேற்ப பல கொலைகளைச் செய்த பராம்ஷா முடிவில் கொலைகாரரின் கையில் இறந்தார்.

**பராம்ஷாவும் மங்கோலியரும்**

டில்லி சுல்தான்களுடைய ஆட்சிக் காலத்தில் மங்கோலியர்கள் அடிக்கடி இந்தியாவின் மீது படையெடுத்து வந்தார்கள். முதலில் அவர்கள் கொள்ளையடிப்பதற்காக வந்தனரேயன்றி அவர்களுடைய ஆட்சியை இந்தியாவின் ஏற்படுத்த வேண்டும் என்ற காரணத்திற் காக அன்று. கொள்ளைப் பொருள் அவர்களுடைய பேரரசின் வருவாய்களுள் ஒன்ருகக் கருதப்மட்டது. எனவே அக்கம் பக்கத்தில் இருந்த நாடுகளை அவர்கள் அடிக்கடிக் கொள்ளையிட்டு வந்தனர், பராம்ஷாவினுடைய ஆட்சிக் காலத்தில்தான் மங்கோலியர்கள் முதன் முதலில் டில்லி சுல்தான்களுடைய ஆட்சிக்குட்பட்டிருந்த பகுதிகளில் கொள்ளையிட முற்பட்டனர்! ஆகவே அதைப் பற்றி சிறிது கவனிப்போம்.

இல்தூத்மிஷ் காலத்தில் செங்கிஸ்கான் தலைமையின்கீழ் மங்கோலியர்கள் ஆப்கானிஸ்தானத்தைத் தாக்கினுர்கள் என்றும், அத்தாக்குதலை எதிர் கொள்ள இயலாது ஜலாலுத்தீன் மன்க்பர்னி சிந்துவைக் கடந்து பஞ்சாபிற்கு வந்தார் என்றும் முன்பு குறிப்பிட்டுள்ளோம். செங்கிஸ்கான் தம் நாடு திரும்பிய பிறகு ஆப்கானிஸ்தானத்தில் ஜலாலுத்தீன் மன்க்பர்னியினுடைய அதிகாரி மலிக் சைப்புத்தீன் ஹசனும் அவருடைய கார்லி ஆதர வாளர்களும் கஜினி, பனியன் ஆகிய இடங்களில் தங்களுடைய ஆட்சியை நிறுவினுர்கள். மங்கோலியர்கள் கார்லிக்களின் ஆட்சிப் பகுதிகளை அடிக்கடி தாக்கி கொள்ளையிட்டு வந்தனர். 1239-40 ஆண்டில் தாயிர் பகதூர் என்ற மங்கோலியத் தலைவர் சைப்புத்தீன் கார்லியைத் தோற்கடித்து கஜினியிலிருந்து விரட்டினுர். அவ்வாறு விரட்டியடிக்கப் பட்ட சைப்புத்தீன் மூல்தான், சிந்து ஆகிய பகுதிகளை நோக்கி ஓடினுர். அதையடுத்து மங்கோலியர்கள் சிந்து நதிவரை வந்து அங்கிருந்து லாகூரைத் தாக்க திட்டமிட்டிருந்தனர். அதையறிந்த கபீர்கான் அயாஸ் ஒரு படையைத் திரட்டிக் கொண்டு சமயப்போர் ஒன்றை மங்கோலி யருக்கு எதிராக மேற்கொள்ள ஆயத்தமானுர். மூல்தானின் ஆளுநராக செயற்பட்டு வந்த கபீர்கான் அயாஸ் அப்போது

சுதந்திரம் பெற்ற ஆட்சியாளராகத் தம்மை அறிவித்துக் கொண்டார். இந்த செய்தி மங்கோலியருடைய காதுகளுக் கெட்டிய போது அவர்கள் கோபமடைந்து மேலும் தாமதிக்காமல் லாகூர் நோக்கிப் படை நடத்திச் சென்றனர். லாகூர் அப்போது மலிக் இக்தியாருத்தீன் காராகஷ் என்பவருடைய பொறுப்பில் விடப்பட்டிருந்தது. லாகூரில் போதுமான உணவுப் பொருள் களோ, ஆயுத தளவாடங்களோ சேகரித்து வைக்கப்படவில்லே. குடிமக்களிடையே ஒற்றுமை உணர்ச்சியும் ஏற்பட்டிருக்கவில்லே. அவர்களுள் அநேகர் வாணிபத்தின் பொருட்டு மங்கோலியரின் ஆட்சிப் பகுதிகளுக்குச் சென்றிருந்தனர். அப்போது தங்களுடைய பாதுகாப்பை முன்னிட்டு மங்கோலியத் தலேவர்களிடமிருந்து பாதுகாப்பு பத்திரத்தைப் பெற்றுக் கொண்டிருந்தனர். ஆகவே மங்கோலியர்களால் தமக்கு எந்த விதமான ஆபத்தும் இப்போது ஏற்படாது என்று குருட்டு நம்பிக்கையுடன் மங்கோலியர் தாக்குதலேப் பற்றி அக்கரை கொள்ளாதிருந்தனர். அதனுல் கோட்டை மதில்களேப் பாதுகாத்தல் போன்றவற்றில் சிறிதும் கவனம் செலுத்தவில்லே. காராகஷிற்கு உதவி செய்யவும் முன் வரவில்லே. டில்லியிலிருந்தும் அவருக்கு உதவி கிடைக்கவில்லே. காராகஷ் திறமையுடன் போராடினுர் என்ருலும் கோட்டை மதில்களே மங்கோலியர்கள் தரைமட்டமாக்குவதை அவரால் தடுத்து நிறுத்த இயலவில்லே. தப்பித்துச் செல்வதைத் தவிர வேறு வழியில்லே என்பதை அவர் உணர்ந்த போது ஒரு நாள் இரவில் பகைவர்களேத் தாக்க போவதாக சாக்கு சொல்லி நகரை விட்டு வெளியேறினுர். அதுபோது அவருடன் சென்ற அந்தப்புர மங்கையர்களும் ஆதரவாளர்கள் பலரும் மங்கோலியர் கைகளில் சிக்குண்டு உயிரிழந்தனர். காராகஷ் தப்பிச் சென்று விட்டார். மங்கோலியர்கள் லாகூரைக் கைப்பற்றிக் கொண்டு கொள்ளே யிலும்கொலேயிலும் ஈடுபட்டனர். மங்கோலியர்களே எதிர்த்துப் போராடுவதைத் தவிர வேறு வழி லாகூர் மக்களுக்குப் புலப்பட வில்லே. லாகூர் நகரின் கொத்வாலான அக்ஸன்கர் தலேமையில் ஒரு கூட்டத்தினரும், அமீர்-இ-ஆகூராக இருந்த தீன்தார் முகமதுவின் தலேமையின்கீழ் மற்ருெரு கூட்டனத்தினரும் மங்கோலியர்களுடன் கடுமையாகப் போராடினுர்கள், அக்ஸன் கரும் தாயிர் பகதூரும் நேருக்கு நேர் நின்று போராடி உயிர் துறந்தார்கள். 30 ஆயிரம் முதல் 40 ஆயிரம் வரை மங்கோலிய குதிரை வீரர்கள் உயிரிழந்தனர், 80,000 மங்கோலியக் குதிரைகள் சேதமடைந்தன. போர்க்களத்தில் காயமடையாத மங்ககோலியரே இல்லே என்று கூறலாம்.[1] லாகூர் நகரம்

[1] Minhaj, 235-36

அழிவுற்றது. இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு மங்கோலியர்கள் இந்தியாவை விட்டு தம் நாடு நோக்கிப் போய்விட்டனர். அதற்குக் காரணம் மங்கோலிய கானின் மரணமே என்று கூறப்படுகிறது. கான் இறந்த பிறகு 1½ ஆண்டுகள் வரை போர் செய்யக் கூடாது என்ற வழக்கத்தை மங்கோலியர்கள் கடைபிடித்து வந்தனர் என்று மின்ஹாஜ் கூறுகின்றார். அது உண்மையா, பொய்யா என்பதை நாம் அறிவதற்கில்லையென்றாலும் அந்த வகையாக டில்லி மக்கள் அப்போது எண்ணியிருந்தார்கள் என்பது மட்டும் திண்ணம். மங்கோலியர்கள் லாகூரை விட்டுச் சென்ற பின் கோக்கர்களும் ஏனையோரும் அந்நகரில் புகுந்து மிச்சம் மீதியைக் கொள்ளையடிக்க முற்பட்டனர். அதையறிந்த காராகஷ் மீண்டும் லாகூருக்கு வந்து அவர்களை விரட்டினார்.

அதே நேரத்தில் கபீர்கான் அயாஸ் மரணமடைந்தார். அவருக்குப்பின் தாஜ் உத்தீன் அபுபக்கர் அயாஸ் மூல்தானுக்கு அதிபதியானார். தந்தையைப் போன்று அவரும் சுய ஆட்சியை மூல்தானில் நடத்தி வந்தார். சிந்து முழுவதையும் தம்முடைய போர்த் திறமையைக் கொண்டு வென்று அதனைத் தம் ஆதிக்கத்தின் கீழ்க் கோண்டுவந்தார். இவ்வாறாக மூல்தான், சிந்து ஆகிய பகுதிகளில் அயாஸி அரச குலத்தினரின் ஆட்சி நிறுவப்பட்டது.

## அலாவுத்தீன் மசூத் (1242-1246)

பராம்ஷாவை தோற்கடித்த பின்னர் கலகக்காரர்கள் டில்லி நகருக்குள் புகுந்தனர் என்று முன்பு கண்டோம். அவர்களுள் மூத்த பால்பன் என அழைக்கப்படுகின்ற மலிக் - இஸ் - உத்தீன் பால்பன் கிஷ்லுகான் என்பவருடைய படைகளே டில்லி நகருக்குள் முதலில் புகுந்தன. அதனைச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு அவர் இல்தூத்மிஷின் அரண்மனையைக் கைப்பற்றிக் கொண்டார். அதையடுத்து அரியணையில் அமர்ந்து கொண்டார். அங்கு கூடியிருந்தவர்கள் அவரை சுல்தானாக ஏற்றுக் கொள்ளும்படி வற்புறுத்தினார். இது துருக்கிய அதிகாரிகளுக்குப் பிடிக்கவில்லை. இல்தூத்மிஷின் பிள்ளைகளை அவர்கள் கொல்லத் தயங்கவில்லை என்றாலும், அவருடைய குடும்பத்தினருக்கு அளிக்கப்பட்டிருந்த அரசுரிமையைப் பறித்துக்கொள்ள அவர்கள் விரும்பவில்லை. மேலும் கிஷ்லுகான் ஏனைய துருக்கிய அதிகாரிகளைக் கலந்து கொள்ளாமல் தாமாகவே ஒரு முடிவுக்கு வந்ததை அவர்கள் விரும்பவில்லை. மேலும் ஒருவர் அரண்மனையைக் கைப்பற்றி விடுவதாலேயே அரசுரிமையைப் பெறத் தகுதியுடையவராக ஆகிவிடுகிறார் என்ற கொள்கையை ஏற்க அவர்கள் மறுத்துவிட்டனர். எனவே கலகக்காரர்களின்

முக்கிய தலைவர்கள் ஒன்றுகூடி கிஷ்லூகானை பதவியிலிருந்து இறங்கும்படி கூறினர்கள். ஏனைய முக்கிய துருக்கிய தலைவர்களை எதிர்க்க இயலாது என்பதை உணர்ந்து விட்ட கிஷ்லூகான் தமக்கு நாகோர் இக்தாவை அளிப்பதாக இருந்தால் தாம் அடைந்த புதிய பதவியை விட்டுக் கொடுப்பதாக பதில் அளித்தார். அதன் பிறகு கலகக்காரர்களுடன் கிஷ்லூகான் சேர்ந்து கொண்டு ருக்னுத் தீன் பிரூஸ் ஷாவினுடைய மகனுன அலாவுத்தீன் மசூத்தை சுல்தானுக தேர்ந்தெடுத்தார். அதன் பின்னர் கலகக்காரர்கள் பதவிகளையும், இக்தாக்களையும் தம்மிடையே பகிர்ந்து கொண்டனர். நாயம்-இ-மம்லாகத் பதவி மீண்டும் புதுப்பிக்கப்பட்டது. மலிக் குத்புத்தீன் ஹசன் கோரி அப்பதவிக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டார். குவாஜா முஹாஸாபுத்தீன் வசீராகத் தொடர்ந்து பணியாற்றிவர அனுமதிக்கப்பட்டார். அமீர்-இ-ஹஜீப் பதவி மலிக் இக்தியாருத்தீன் காராகஷிற்கு அளிக்கப்பட்டது. பராம் ஷாவை ஆதரித்தார் என்பதற்காக மின்ஹாஜ் தலைமைக் காஜி பதவியிலிருந்து விலக்கப்பட்டார். அப்பதவியில் இமாத் உத்தீன் முகமது ஷபூர்கானி அமர்த்தப்பட்டார். நாகோர், ஆஜ்மீர் மண்டோர், ஆகிய இக்தாக்கனி-சு-கிஷ்லூகானுக்கு அளிக்கப் பட்டன. தாஜ்உத்தீன் சன்கர் குத்லூ பதோனைப் பெற்ருர்.

அலாவுத்தீன் மசூத்தீன் ஆட்சிக் காலத்தில் துருக்கிய அமீர்கள் தாஜிக்குகளை அழிக்கும் பணியினைத் தொடர்ந்து மேற்கொண்டு வந்தனர். முஹாஸாபுத்தீன் அவர்களுடைய முதல் பலியானுர். முஹாஸாபுத்தீனுடைய அழிவுக்கு அவரே முக்கிய காரணமாவார். அவர் பேராசைக் கொண்டவர். பராம்ஷாவை வீழ்த்துவதில் பெரும் பங்கு கொண்டிருந்தார். அதன் விளைவாக அவருடைய ஆசைகள் மேலும் பெருகின. கோல் (Kol) என்னுமிடத்தை தம் இக்தாவுடன் இணைத்துக் கொண்டார். வீட்டு வாசலின் முன் யானையைக்கட்டி வைத்தார். முரசு ஒன்றையும் அங்கு வைத் திருந்தார். ஒரு துருக்கிய அமீர்மீது மற்ருெரு துருக்கியர் ஆதிக்கம் செலுத்துவதை எப்போதுமே விரும்பியதில்லை. அவ்வாறிருக்க ஒரு தாஜிக்கு துருக்கியர்களை விடத்தாம் மேலானவராகக் கருதி அதற் கேற்ப பல சலுகைகளை அடைய நினைப்பது விவேகமற்ற செயலல்லவா? அதன் விளைவாக துருக்கிய அமீர்கள் ஒன்று சேர்ந்து அவரைக்கொன்று விட்டனர். அவர் வகித்திருந்த வசீர் பதவி சத்ருல் முல்க் நஜ்முத்தீன் அபுபக்கருக்கு அளிக்கப்பட்டது. மலிக் காராகஷ் பயானுவின் ஆளுநராக நியமிக்கப்பட்டார். அவர் வகித்திருந்த அமீர்-இ-ஹஜீப் பதவி பஹா-உத்தீன் பால்பனுக்கு வழங்கப்பட்டது. முஹாஸாபுத்தீனுக்குப் பிறகு வசீருக்கு இருந்த மதிப்பு குறைந்துவிட்டது. நயிப்-இ-மம்லாகத் பதவியும் அந்த

நேரத்தில் மறைந்து விட்டிருந்தது.[1] ஆகவே அமீர்-இ-ஹஜீப் பதவியை வகித்திருந்த பால்பனே சிறப்புடன் விளங்கினுர். அவரே அனுபவமற்ற சுல்தானுக்கு வழிகாட்டியாக இருந்து வந்தார்.

அலாவுத்தீன் மசூத்தினுடைய ஆட்சிக் காலத்தில் டில்லி அரசுக்கு பல இன்னல்கள் ஏற்பட்டன. அவற்றுள் ஒன்று கிழக்கு மாநிலங்களில் ஏற்பட்டது. அப்போது லக்னேதியை துகான்கான் என்பவர் ஆண்டு வந்தார். அவர் இல்துாத்மிஷின் துருக்கிய அடிமை அதிகாரிகளுள் ஒருவர் பக்கத்திலிருந்த பகுதிகளைக் கொள்ளையடித்துப் பெரும் பொருள் சேர்த்திருப்பினும் அவர் டில்லி அரசுக்கு அவ்வப்போது பரிசுகளை அனுப்பி வைத்துத் தாம் டில்லியின் ஆட்சிக்குக் கட்டுப்பட்டவரென்பதை அறிவித்து வந்தார். அலாவுத்தீன் மசூத் அரசெய்தியபோது துகான்கானுடைய ஆலோசகரான மஹாந்திரி ஹிலால் சௌதானியின் பேச்சைக் கேட்டுக் கொண்டு அவுத், காரா, மனிக்பூர் ஆகிய இடங்களைத் தாக்கத் திட்டமிட்டார். அப்போது தமர்கான் என்பவர் அவுத்தின் ஆளுநராக இருந்தார், ஒரு சமயம் தமர்கான் துகான் கானினுடைய உதவியாளராகப் பணியாற்றி வந்திருந்தார். அப்போது இருவருக்கும் இடையே மனக்கசப்பு ஏற்பட்டது. பழைய பகையைப் பாராட்டிக் கொண்டு துகான்கான் தமர் கானுடைய ஆட்சியிலிருந்த அவுத்தைத் தாக்கினுர் என்று கூறப்படுகிறது. ஆனுல் துகான்கானுல் எதையும் சாதிக்க இயலவில்லை. அந்த நேரத்தில் ஜாஜ் நகரை ஆண்டு வந்த முதலாவது நரசிம்மர் துகான்கானுடைய ஆட்சிப் பகுதிகளைத் தாக்க முற்பட்டார். துகான்கான் 'கதானின்' என்னுமிடத்தில் தோல்வி யுற்ருர். ஆகவே அவர் டில்லி அரசின் உதவியைக் கோரினுர். தமர்கானை அவருடைய உதவிக்குச் செல்லும்படி டில்லி கட்டளை யிட்டது. தமர்கான் படையைத் திரட்டிக் கொண்டு லக்னேதி நோக்கி வருகின்ருர் என்ற செய்தியை அறிந்ததும், லக்னேதிவரை முன்னேறிச் சென்ற ஒரியாப்படை பின் வாங்கியது. ஒரியாப் படையின் தாக்குதலிலிருந்து லக்னேதியைக் காப்பாற்ற வந்த படை அங்கு ஒரியாப்படை இல்லாததைக் கண்டு துகான்கானைத் தாக்கத் தொடங்கியது. மின்ஹாஜின் உதவியால் துகான்கானுக் கும், தமர்கானுக்கும் இடையே சமாதானம் ஏற்படுத்தப்பட்டது.[2] அதன்படி லக்னேதியை தமர்கானுக்குக் கொடுத்துவிட்டு துகான் கான் டில்லி சென்ருர். அலாவுத்தீன் மசூத் அவரை மரியாதை

[1] ACHI, P. 252

[2] தலைமை காஜி பதவியை இழந்த பின் மின்ஹாஜ் லக்னேதிக்குச் சென்று துகான்கானின் ஆதரவைப் பெற்ருர் என்பதை அறிக.

யுடன் வரவேற்று அவருக்கு அவுத் மாநிலத்தை ஆளும் பொறுப்பை வழங்கினர். லக்னோதியின் ஆளுநர் பொறுப்பை தமர்கான் ஏற்றுக்கொண்ட பிறகு அவுத் ஆளுநர் பதவி காலியாக இருந்தது என்பதை நாம் இங்கு அறிதல் வேண்டும். துகான்கானை லக்னோதியிலிருந்து வெளியேற்றியதில் மைய அரசுக்கு யாதொரு பங்கும் அளிக்கப்பட்டிருக்கவில்லை என்பதை அறியும்போது மைய அரசு எந்த அளவிற்கு பலமற்றதாகி விட்டது என்பது விளங்கும்.

இனி மேற்கு மாநிலங்களில் ஏற்பட்ட பிரச்சினைகளைப் பற்றியும் அவற்றை எவ்வாறு அலாவுத்தீன் மசூத் சமாளித்தார் என்பதைப் பற்றியும் சிறிது கவனிப்போம், அயாஸி அரச குலம் எவ்வாறு தோன்றியது என்பதைப் பற்றி முன்பு கவனித்தோம். அக்குலத்தைச் சார்ந்த அபுபக்கர் இறந்த பிறகு மன்கூடா என்ற மங்கோலியப் படைத்தலைவர் ஊச்சைத் தாக்கினர். அத்தாக்குதலை எதிர்கொள்ள இயலாது அயாஸி அதிகாரிகள் டில்லி அரசின் உதவியை நாடினர்கள். அவ்வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு ஊச்சை மீண்டும் டில்லியின்கீழ் கொண்டுவர பால்பன் சுல்தானுக்கு யோசனை கூறினர். ஏனைய அமீர்கள் அந்த வகையான நடவடிக்கையை மேற்கொள்ள விரும்பவில்லை என்றாலும், சுல்தான் பால்பனுடைய யோசனையை ஏற்று படையொன்றை அனுப்பி வைத்தார். அந்த செய்தி கிடைத்ததும் மங்கோலியர்கள் ஊச் முற்றுகையைக் கைவிட்டு பின் வாங்கினர்கள், எனவே டில்லிப் படைகள் சோத்ரா ஆறு வரை சென்று விட்டு டில்லி திரும்பி விட்டன. இதன் விளைவாக லாகூர், ஊச், மூல்தான் ஆகிய இடங்கள் டில்லி சுல்தானியத்தின் கீழ் மீண்டும் வந்தன.

இதற்கிடையில் அலாவுத்தீன் மசூத் சில கீழ்த்தரமானவர்களுடன் நட்பு வைத்துக் கொண்டார். அதன் விளைவாக அவர் சில வேண்டத்தகாத காரியங்களில் ஈடுபடலானர். மலிக்குகள் சிலர் கொல்லப்பட்டனர். தமது காலத்தை வேட்டையாடுவதிலும் சிற்றின்பத்திலும் செலவிட்டார். அரச காரியங்கள் புறக்கணிக்கப்பட்டன. எனவே மலிக்குகளும் அமீர்களும் அவரை ஒழித்துவிட்டு நாசீர் உத்தீனை சுல்தானக நியமிக்க சதி செய்தனர். பால்பன் அதில் முக்கியமான பங்கை பெற்றிருந்தார். 1246ஆம் ஆண்டு ஜூன் மாதம் 10ஆம் தேதி அலாவுத்தீன் மசூத் சிறையில் அடைக்கப்பட்டார். பின்னர் அவரும் கொலையுண்டார்.

**நாசிர் உத்தீன் மாமூத் (1246—1266.)**

நாசீர் உத்தீன் மாமுத் இல்தூத்மிஷினுடைய பேரன் என்று சிலர் கூறுகின்றனர். இல்தூத்மிஷினுடைய மூத்த மகனை நாசீர்

உத்தீன் லக்னேதியில் இறந்த பிறகு, அவருக்கு ஒரு மகன் பிறந்தார் என்று இசாமி கூறுகிறுர்.[1] அவரே நாசீர் உத்தின் மாமூத் என்ற பட்டத்துடன் பின்னர் சுல்தானுக பதவியேற்ருர் என்று கூறப்படுகிறது. இல்தூத்மிஷின் மூத்த மகனுன நாசீர் உத்தீன் இறந்த பிறகு அவருக்கு ஒரு மகன் பிறந்தார் என்றும், தம்முடைய மூத்த மகனின் நினைவாக அம்மகனுக்கு நாசீர் உத்தீன் என்ற பெயரை இல்தூத்மிஷ் சூட்டினுர் என்றும் பிரிஷ்டா கூறியுள்ளார்.[2]

சுல்தான் நாசீர் உத்தீன் மாமூத் இல்தூத்மிஷின் மகன் என்று மின்ஹாஜ் கூறுகிறுர். அவர் பிறந்தவுடன் அவருக்கு தம்முடைய மூத்த மகனுடைய பெயரைச் சூட்டி, அவருடைய அன்னையுடன் லோனி என்னும் கிராமத்திற்கு இல்தூத்மிஷ் அனுப்பிவைத்தார் என்றும் கூறியுள்ளார். ஓர் ஆண் மகவைப் பெற்றபிறகு ஒருவர் தம் மனைவியைத் தள்ளிவைத்து ஒரு கிராமத்தில் வாழ்ந்துவரச் செய்வது புரியாத புதிராக இருக்கிறது. மேலும் சுல்தான் நாசீர் உத்தீன் மாமூத்தின் அன்னை குத்லூக்கான் என்ற துருக்கிய அதிகாரியை மணம் புரிந்து கொண்டார் என்பதை நாம் அறிகிருேம். சுல்தானுடைய விதவை ஒரு துருக்கிய அதிகாரியை மணப்பதென்பது சாதாரணமாக நிகழக்கூடிய காரியமன்று. ஆகவே சுல்தான் நாசீர் உத்தீன் மாமூத்தை இல்தூத்மிஷினுடைய மகன் என்று கூறுவதைவிட பேரன் என்று சொல்வதே மேலாகத் தோன்றுகிறது.

நாசீர் உத்தீன் மாமூத் பட்டமெய்தியபோது அவருக்கு வயது 16 அல்லது 17 இருக்கும். இல்தூத்மிஷ் இறந்த பின்னர் துருக்கிய அடிமை அதிகாரிகள் அதிகாரம் அனைத்தையும் தாங்களே செலுத்திவர வேண்டும் என்றும், சுல்தான் பெயரளவு அரசராக இருத்தல் வேண்டும் என்றும் எண்ணினுர்கள். ரஸியா அத்தகைய ஏற்பாட்டினுக்கு இணங்கவில்லையாதலால் அவர் பதவியிலிருந்து நீக்கப்பட்டார். பராம் ஷா முதலில் அவ்வேற்பாட்டினுக்கு இணங்கினுர். ஆனல் அரச பதவியைப் பெற்றதும் தாமே எல்லா அதிகாரத்தையும் செலுத்திவர முயற்சித்தார். அதன் விளைவாக அவர் பதவியிலிருந்து விலக்கப்பட்டார். அலாவுத்தீன் மசூத் மலிக்குகளைக் கொல்ல ஆரம்பித்ததும் அவரும் பதவியிலிருந்து விலக்கப்பட்டார். இவை யாவற்றையும் அறிந்த நாசீர் உத்தீன் மாமூத் துருக்கிய மலிக்குகளின் சொற்படி ஆட்சி செலுத்தி வந்தாலொழிய அரச பதவியில் தொடர்ந்து இருக்க இயலாது என்பதைப் புரிந்துகொண்டார். எனவே அவர் துருக்கிய

[1] Dr. Medhi Hasan's edition, 140.

[2] I, 70

அதிகாரிகளிடம் முழுமையாக சரணடைந்து விட்டார். அவர்களுடைய அனுமதியின்றி அவர் எதையும் சொல்வதில்லை. பிரபுக்களின் கட்டளையின் பேரில்தான் அவர் கைகால்களை ஆட்டுவார் என்றும், அவர்களுடைய அனுமதி பெற்றுதான் அவர் நீர் அருந்துவாரென்றும், தூங்குவாரென்றும் கூறப்படுகிறது. அதனால்தான் அவர் மனத்தில் எந்தவிதமான சஞ்சலமும் இன்றி நிம்மதியாகச் சில காலம் கழித்தார். இந்த நிம்மதி வெகுநாள் நீடிக்கவில்லை. துருக்கிய அமீர்கள் ஒன்றுபட்டிருந்தவரை அவருக்கு பிரச்சினை ஏதும் ஏற்படவில்லை. ஏனெனில் அவர்களுடைய எண்ணத்திற்கு விரோதமாக அவர் நடக்க முயற்சிக்கவில்லை. ஆனால் அவர்கள் இரண்டு சமபலம் பொருந்திய பிரிவாகப் பிரிந்துவிட்டபோது அவர் எந்தப் பிரிவினருடைய கட்டளையை ஏற்று நடக்க வேண்டும் என்ற பிரச்சினை ஏற்பட்டது. வெற்றி வாய்ப்பைப் பெற்ற கட்சியினருடன் சேர்ந்தாலொழிய அவர் உயிர் வாழ்வதே அரிதாகிவிடும். அவருடைய பிரச்சினையெல்லாம் எந்தக் கட்சி வெற்றி வாய்ப்பைப் பெற்றிருந்தது என்பதை கண்டறிவதே யாகும். அந்த வகையிலும் அவர் வெற்றி கண்டார் என்றால் அது அவருடைய அரசியல் திறத்தினால் என்பதில் ஐயமில்லை.

நாசீர் உத்தீன் மாமூத் சமயப்பற்றுமிக்கவராகத் தோன்றுகிறார். தமது நேரத்தைப் பெரும்பாலும் அவர் தொழுகையிலும், சமயச்சடங்குகளை அனுசரிப்பதிலும் கழித்துவந்தார். ஆகவே சில ஆசிரியர்கள் அவருக்கு நாட்டு நிருவாகத்தில் அக்கரையில்லையென்றும், நிருவாகத்திறமையே அவருக்கு இல்லையென்றும் கூறுகின்றனர். இது சரியாகாது. ஏறக்குறைய இருபது ஆண்டுகள் அரச பீடத்தில் அவர் அமர்ந்து கொண்டு துருக்கிய அமீர்களுக்கிடையே ஏற்பட்டிருந்த பூசல்களை வெற்றிகரமாக எதிர்கொண்டு, அவற்றில் சிக்கி அழிந்துவிடாமல் வாழ்ந்து காட்டினார் என்பதை கவனிக்கும்போது அவர் எந்த அளவு அரசியல் அறிவு பெற்றிருந்தார் என்பது விளங்கும்.

நாசீர் உத்தீன் மாமூத் எளிய வாழ்க்கையை மேற்கொண்டிருந்தார். அரசருக்குரிய இன்ப வாழ்க்கையை விட்டொழித்தார். திருக்குரானின் கையெழுத்துப் படியை எடுத்து, அதை விற்று, அதிலிருந்து வந்த பணத்தைக் கொண்டு தமது இன்றியமையாத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொண்டார். வீட்டு வேலைகளைக் கவனிக்க வேலையாளை அவர் அமர்த்தவில்லையென்றும், அவரது மனைவியே வீட்டு வேலைகள் அனைத்தையும் செய்து வந்தார் என்றும் நாம் அறிகிறோம். இதனை அப்படியே நாம் ஏற்றுக்கொள்ள இயலாது என்றாலும் இது அவர் கடைபிடித்து வந்த எளிய

வாழ்க்கையினை எடுத்துக் காட்டுகிறது என்பதில் ஐயமில்லை. அவர் இரக்க மனப்பான்மையைக் கொண்டிருந்தார். கல்விமான்களை ஆதரிப்பதில் அவர் மிக்க ஆர்வத்தைக் காட்டி வந்தார். மொத்தத்தில் சிறந்த சுல்தானாக விளங்குவதற்குரிய குணநலன்கள் அவரிடம் இல்லையென்றுதான் கூற வேண்டும். அதற்கு ஈடு செய்யும் வகையில் அவருடைய அமைச்சர், பால்பன் எல்லா வகையிலும் சிறந்து விளங்கினார். ஆகவேதான் அவர் காலத்தில் டில்லி சுல்தானியத்திற்கு நேரவிருந்த ஆபத்துகள் சூரியனைக் கண்ட பனி போல் நீங்கின.

மங்கோலியர்கள் டில்லி சுல்தானியத்திற்கு அடிக்கடி தொல்லை கொடுத்துக்கொண்டு வந்தார்கள். டில்லி அரசர்கள் சிந்து எல்லையைக் காப்பாற்றுவதற்கு வேண்டிய திறமையைப் பெற்றிருக்கவில்லை என்று மங்கோலியர்கள் எண்ணி வந்தனர். அதுவே அவர்களுடைய படையெடுப்புகளுக்கு ஒரு காரணமாக இருந்தது. டில்லி சுல்தான் படைபலம் மிகுந்தவன் என்பதை மங்கோலியர்கள் அறியச் செய்தால் அவர்களுடைய படை யெடுப்புகள் நின்றுவிடும் என்று பால்பன் எண்ணினார். ஆகவே 1246ஆம் ஆண்டில் படையெடுப்புடன் புறப்பட்டு சிந்துவரை சென்றார். அங்கு படைகளுக்கு வேண்டிய உணவுப் பொருள்கள் கிடைக்காமையால் அவர் டில்லிக்குத் திரும்பினார். மங்கோலியர்க ளுடன் போர் புரியவில்லை என்றாலும் பால்பனுடைய போர் நடவடிக்கைகள் மங்கோலியரைப் பயமுறுத்தி விட்டன. ஆயினும் மங்கோலியர்களின் தாக்குதல் ஓயவில்லை. 1247ஆம் ஆண்டிற்குள் லாகூர் மங்கோலியரின் ஆதிக்கத்தை ஏற்றுக்கொண்டது. மங்கோலியருக்குக் கப்பம் கட்டி வரவும் அவர் ஒப்புக்கொண்டார். 1259-60ஆம் ஆண்டில் மங்கோலியரைத் தலைவருடைய தூது வர்கள் டில்லிக்கு வருகை தந்தனர். அப்போது 200,000 காலாட்படையினரையும், 50,000 குதிரை வீரர்களையும் டில்லிக்கு வரவழைத்து அவர்களைத் தெருக்களில் அணிவகுத்து நிற்கச் செய்தார்.

மூல்தான், ஊச் ஆகிய நகரங்களை டில்லி அரசு கட்டுப்படுத்தி வருவதும் கடினமாயிற்று. நாசிர் உத்தீன் ஹசன்கார்லி மூல் தானைக் தாக்க தம் நாட்டிலிருந்து புறப்பட்டார். போகும் வழியில் அவர் இறந்து விட்டார். ஆயினும் கார்லிகள் அவர் இறந்த செய்தியை மூடி மறைத்துவிட்டு மூல்தானைக் கைப்பற்றிக் கொண் டனர். தாபாரிந்தாவின் ஆளுநரான ஷெர்கான் மூல்தானைத் தாக்கி கார்லிகளிடமிருந்து கைப்பற்றிக் கொண்டார். கிஷ்லூகான் அதனைக் கைப்பற்ற மேற்கொண்ட முயற்சி வீணாயிற்று. அதை

யடுத்து ஷெர்கான் ஊச் நகரைத் தாக்கி அதையும் கைப்பற்றிக் கொண்டு கிஷ்லூகானை டில்லிக்கு அனுப்பிவிட்டார். பால்பனு டைய தூண்டுதலின் பேரில் ஷெர்கான் மூல்தான், ஊச் ஆகிய வற்றை கிஷ்லூகானுக்குத் திருப்பிக் கொடுக்க மறுத்துவிட்டார். ஆகவே அவர் பால்பனை எதிர்க்கலானார். அந்த போராட்டத்தில் கிஷ்லூகான் வெற்றி பெற்றமையால் டில்லி படைகளை அவர் மூல்தானுக்கு அனுப்பி வைத்தார். ஷெர்கான் போர் செய்ய விரும்பாமல் மங்கோலியத் தலைவர் மங்குகானிடம் சென்றார். மங்குகான் அவரை மரியாதையுடன் வரவேற்றார். வேறு திசை களில் மங்கோலியர்கள் தங்களுடைய ஆதிக்கத்தைப் பரப்ப திட்ட மிட்டிருந்தபடியால் அவர்கள் ஷெர்கானுக்கு உதவியேதும் செய்ய வில்லை. இதற்கிடையில் சிந்து மாநிலமும் தாபாரிந்தாவும் கிஷ்லூ கான் கட்சியைச் சார்ந்த மலிக் அர்சலன்கான் சன்கருக்கு அளிக்கப்பட்டது. மீண்டும் அதிகாரப் போட்டி ஏற்பட்டபோது அர்சலன்கானும் வேறு சிலரும் பால்பனை எதிர்க்க டில்லி நோக்கிச் சென்றார்கள். முடிவில் இரு சாராரும் உடன்பாடு ஒன்றினை செய்து கொண்டனர். அதன்படி கிஷ்லூகான் மீண்டும் மூல்தான், ஊச் ஆகியவற்றைப் பெற்றார். அதன் பிறகு அவர் ஹுலாகு கானுடன் தொடர்பு கொண்டார். ஆனால் ஹுலாகு அவருக்கு உதவி செய்ய மறுத்து விட்டார். ஆயினும் அவருக்குப் பாதுகாப்பளிக்க அவர் ஒப்புக்கொண்டார். மங்கோலியப் படைகள் சிந்துவில் நிறுத்தப் பட்டன. ஆனால் அவை டில்லி சுல்தானியத்தை தாக்கக் கூடாது என கண்டிப்பாக ஹுலாகு கூறினார். அந்த முடிவை அறிந்ததும் மங்கோலியரை எதிர்கொள்ளச் சென்ற டில்லிப் படைகள் திரும்பி விட்டன. சிந்து, பஞ்சாபின் ஒரு பகுதி ஆகியவற்றுடன் டில்லி அரசு இழந்தது. அதிகாரப் போராட்டத்தின்போது ஷெர்கான் தாபாரிந்தாவை அர்சலன்கானிடமிருந்து கைப்பற்றிக் கொள்ள முயற்சித்தார். இறுதியில் தாபாரிந்தாவை ஷெர் கான் பெற்றார். அர்சலன்கான் அவுத்தின் ஆளுநர் பொறுப் பேற்றார். அவ்விருவருக்கும் ஏற்பட்டிருந்த பகைமையுணர்ச்சி தொடர்ந்து இருந்து வந்தது. இருவருமே மங்கோலியருடைய துணையை நாடினார்கள். ஆகவே ஷெர்கானை தாபாரிந்தாவிலிருந்து திருப்பி அழைத்துக்கொண்டு அதனை நஸ்ரத்கான் சன்கர் சூபிக்கு கொடுத்தார். பொது மக்களை திரளாகக் கூடச் செய்தார். வெட் டுண்ட தலைகளையும், முண்டங்களையும் கொண்டு டில்லியை அலங் கரிக்கச் செய்தார்.[1] அக் காட்சிகள் எதிர்பார்த்த பலனை அளித்து விட்டன. மங்கோலியத் தூதுவர்கள் அவற்றைக் கண்டு பிரமித்து நின்றனர். டில்லி அரசின் செல்வாக்கையும் பலத்தையும் அத்

[1] ACHI, 273

தூதுவர்கள் முழுமையாக அறிந்து கொள்ள அவை துணை செய்தன. இவ்வாறாக மங்கோலியர்களை அச்சுறுத்தி அவர்களைப் படையெடுத்து வராதவாறு பால்பன் தடுத்துவிட்டார். சில ஆண்டுகளுக்குப் பின்னர் பால்பன் மூல்தானைக் கைப்பற்றிக் கொண்டார். கிஷ்லூகான் பாமியனில் தஞ்சம் புகுந்தார்.

**கிழக்கு மாநில ஆளுநர்களின் ஆதிக்க நிலை:**

*1249*ஆம் ஆண்டில் யூஸ்பக் (Yuzbak) லக்னோதியின் ஆளுநராக நியமிக்கப்பட்டார். இல்தூத்மிஷினுடைய துருக்கிய அடிமைகளுள் யூஸ்பக் ஒருவராவார். லக்னோதியின் ஆளுநராக நியமனம் பெற்ற பிறகு அவருடைய ஆசைகள் பொங்கி எழுந்தன. அவுத்தை கைப்பற்ற முயற்சி செய்யலானார். சுல்தான் முயீஸ் உத்தீன் என்ற பட்டத்தைச் சூடிக்கொண்டு குத்பாவைத் தம் பெயரில் வாசிக்கச் செய்தார். ஆனால் அவுத்தில் வெகுநாள் அவர் இருக்கவில்லை. டில்லி சுல்தானுடைய படைகள் அவுத்திற்கு வந்து விட்டன என்ற செய்தியைக் கேட்டதும் அவர் லக்னோதிக்குச் சென்று விட்டார். அதன்பின் அவர் காமரூபாவைத் தாக்கினார். அவருடைய தாக்குதலை எதிர்கொள்ள இயலாது காமரூபாவின் அரசர் தலைநகரை விட்டு ஓடினார். நகரத்தைக் கொள்ளையடித்து விட்டு இராஜாவினுடைய பூர்வீக செல்வத்தைக் கைப்பற்றினார். காமரூபா அரசர் அவரிடம் சமாதானம் நாடினார். ஆனால் யூஸ்பக் அதற்கிணங்க மறுத்து விட்டார். எனவே யூஸ்பக்கைத் தம் நாட்டிலிருந்து துரத்துவதற்கு ஒரு தந்திரத்தைக் கையாண்டார். அதன் விளைவாக யூஸ்பக் தம்மிடம் இருந்த உணவுப் பொருளை காமரூபா மக்களுக்கு விற்றுவிட்டார். அதனால் அவருக்கு உணவுப் பற்றாக்குறை ஏற்பட்டது. மேலும் ஆற்றின் அணைகளையும் திறந்து விடும்படி கட்டளையிட்டார். ஆகவே யூஸ்பக் ஊர் திரும்ப வேண்டியதாயிற்று. அவர் ஊர் திரும்ப இயலாதபடி காமரூபா மக்கள் வழிமறித்துக் கொண்டார்கள். இறுதியில் அவர்கள் கையில் சிக்கி யூஸ்பக் உயிரிழந்தார். அவர் இறந்த பிறகும் லக்னோதி டில்லியின் ஆதிக்கத்தின் கீழ் வரவில்லை. தற்காலிகமாக ஆளுநராக அமர்த்தப்பட்ட யஹியாவை காராவின் ஆளுநராக இருந்த அர்சலன்கான் கொன்று விட்டுத் தாமே லக்னோதியின் ஆட்சியாளராகப் பதவியேற்றார். அர்சலன்கான் முழுச் சுதந்திரம் பெற்ற அரசராகச் செயற்பட்டு வந்ததாக நமக்குச் சான்றுகள் கிடைக்கவில்லை. ஆயினும் அவர் லக்னோதியை டில்லி சுல்தானுடைய அனுமதி பெறாமலேயே தமது அதிகாரத்தின் கீழ் கொண்டு வந்தார் என்பது உண்மை. அர்சலன்கானுக்குப் பின் அவரது மகன் தாதார்கான் சீனா, கீழை நாடுகள் ஆகியவற்றி

லிருந்த மலிக்குகளுக்கெல்லாம் தாமே பெருந்தலைவன் என்று அறிவித்துக் கொண்டார். நாசீர் உத்தீன் மாமூத்தின் அரசு அவரை ஒன்றும் செய்யாது வாளாயிருந்து விட்டது.

### நாசீர் உத்தீன் மாமூத்தும் இந்து அரசுகளும்

ஒரிசா வலிமைபெற்ற இந்து அரசுகளில் ஒன்றுக இருந்தது. லக்னோதியை ஆண்டு வந்த யூஸ்பக் முதலில் சிறு வெற்றிகள் பெற்ற போதிலும் முடிவில் ஒரியர்களுடைய கையில் தோல்வியுற்ருர். எனவே அவர் டில்லியின் உதவியை நாடினுர். டில்லி அரசினுடைய உதவியைக் கொண்டு அரஸ்பதன் என்னுமிடத்தைக் கைப்பற்றினுர். நடியாவையும், பாகீரதிப் பள்ளத்தாக்கையும் வென்று அதன் நினைவாக வெள்ளி நாணயங்களை வெளியிட்டார்.

காமரூபம் மற்றொரு முக்கியமான இந்து அரசாகும். அதை வெல்ல யூஸ்பக் செய்த முயற்சியையும் அதன் விளைவையும் முன்னரே அறிந்துள்ளோம்.

தெற்குப் பீகாரில் இருந்த இந்து சிற்றரசர்கள் துருக்கியர்களுக்கு அடிக்கடி தொல்லை கொடுத்து வந்தார்கள். புத்தகயாவைச் சுற்றியிருந்த பகுதியில் சேனு குலத்தவர்கள் ஆட்சி செய்து வந்தனர். நாசீர் உத்தீன் மாமூத் காலத்தில் பீகார் நகரமும் இந்துக்களின் தாக்குதலுக்கு உட்பட்டது. பீகார் ஆளுநர் அத்தாக்குதலுக்கு இரையாஞர். இறுதியில் இந்துக்கள் விரட்டியடிக்கப் பட்டனர். சந்தேலர்கள் தற்கால ரேவா பகுதியில் ஆதிக்கம் பெற்றிருந்தனர். ஜான்ஸி அவர்களுடைய ஆட்சிக்குட்பட்டது. நார்வாரில் ஜாஜபெல்லர்கள் மிகப் பலம் பொருந்தியவர்களாக இருந்தனர். 1251-ல் பால்பன் நார்வாஞவைக் கைப்பற்றினுர். ஆனுல் அதனை நிலையாக டில்லியின் ஆதிக்கத்தின் கீழ் வைத்திருக்க இயலவில்லை.

பார் (Bhar) இராஜபுத்திரர்கள் தோவாப் பகுதிகளுக்குத் தொல்லை கொடுத்து வந்தார்கள். வாகேலர்கள் யமுனைக்குத் தெற்கேயிருந்த பகுதிகளை அடிக்கடி தாக்கி வந்தார்கள், அவர்களை அடக்க அவுத்தின் ஆளுநர் மேற்கொண்ட முயற்சிகள்யாவும் தோல்வியடைந்தன. 1247-ல் பால்பன் பெரும் படையுடன் அவர்களைத் தாக்கியபோதும் அவர்களை அடக்க இயலாது போயிற்று.

டில்லி சுல்தானியத்தின் மாநிலங்களில் இருந்த இந்துக்களும் டில்லி அரசை அவ்வப்போது எதிர்த்து வந்தனர். அலிகாருக்கு அருகே வசித்து வந்த இந்து சாதியினர்கள் வழிப்பறி கொள்ளையை

நடத்தி வந்தார்கள். பால்பன் அவர்களுக்கெதிராக இருமுறை படை நடத்திச் செல்ல வேண்டியதாக இருந்தது. கி.பி. 1247-ல் கன்னோசி மாவட்டத்தைச் சார்ந்த பகுதிகள் சிலவற்றை இந்துக்களிடமிருந்து மீட்டுப்பெற டில்லி அரசு படையெடுப்பு ஒன்றை மேற்கொண்டது. பதோன், சம்பல், ஆகிய இடங்களில் வசித்து வந்த கதேரியாக்களுடன் டில்லி அரசு கடுமையாக போர் செய்ய வேண்டியதாக இருந்தது, 1254ஆம் ஆண்டில் பால்பன் அவர்களுக்கெதிராக ஒரு பெரிய படையெடுப்பை மேற்கொண்டார். கதேரியர்கள் டில்லிப் படைகளுக்கு பலத்த சேதத்தை விளைவித்திருந்தார்கள்.

இராஜபுதனத்தில் டில்லி அரசு படுதோல்வி அடைந்தது. 1248 ஆம் ஆண்டில் பால்பன் சௌஹான்களுடன் போரிட்டார். பயனாவையும், தாங்கீரையும் இழந்த பிறகு யதுவம்ச இராஜ புத்திரர்கள் அல்லது மேவாத்துகள் இராஜபுதனம் முழுவதும் பரவி டில்லி அரசுக்குத் தொல்லைகளைக் கொடுத்து வந்தார்கள். ஒரு சமயம் ஹான்சிவரை அவர்கள் படைநடத்தி வந்தார்கள். 1258-ல் பால்பன் அவர்களுக்கெதிராக இருமுறை படைகளை நடத்திச் சென்றார். ஆனால் அவரால் அதிகம் சாதிக்க இயலவில்லை.

**துருக்கிய அதிகாரிகளுக்கிடையே அதிகாரம் பற்றிய போர்**

நாசீர் உத்தீன் மாமூத் காலத்தில் நடைபெற்ற முக்கிய நிகழ்ச்சி துருக்கிய அதிகாரிகளுக்கிடையே ஏற்பட்ட ஆதிக்கம் பற்றிய சண்டையேயாகும். அலாவுத்தீன் மசூத்தை நீக்கிவிட்டு நாசீர் உத்தீன் மாமூத்தை அரியணையில் அமர்த்தியவர்களுள் மிகவும் முக்கியமானவர் பால்பனேயாவார். எனவே 1289-ல் நாயிப்-இ-மம்லாகாத் பதவி பால்பனுக்கு அளிக்கப்பட்டது. இந்தப் பதவி உயர்வை அறிவிக்கும் வகையில் அவருக்கு உலூக் கான் என்ற பட்டம் அளிக்கப்பட்டது. உலூக்கான் என்பதற்கு கான்களுள் முதல்வர் என்று பொருள். பேரரசை முன்னின்று நடத்தும் பொறுப்புடன் ஹான்சி இக்தாவை நிருவகிக்கும் பொறுப்பும் அவருக்கு அளிக்கப்பட்டது. உலூக்கானுடைய சகோதரரான சைப்புத்தீன் அய்பெக் அமீர்-இ-ஹஜீப்பாக நியமிக்கப்பட்டார். அவருக்குக் கான்பட்டமும் அத்துடன் நாகோர் இக்தாவும் அளிக்கப்பட்டன. அது முதல் அவர் கஷ்லி கான் என அழைக்கப்பட்டார். ஏனைய முக்கிய பதவிகளிலும் பால்பனுடைய ஆதரவாளர்களே நியமிக்கப்பட்டனர். அவருடைய நெருங்கிய உறவினரான ஷெர்கான் சிந்துவைப் பெற்றார். எனவே பால்பன் ஏனைய மலிக்குகளைவிட மிகப் பலம் பொருந்தியவராக விளங்கினார். பால்பனுடைய மகளை நாசீர் உத்தீன் மாமூத்திற்கு மணமுடித்து வைத்து அதன் வாயிலாகவும் தம்முடைய பலத்தைப்

பெருக்கினர். இவ்வாருக ஒரு குடும்பத்தைச் சார்ந்தவர்களும் அவர்களுடைய ஆதரவாளர்களும் எல்லா முக்கியமான அரசியல் பொறுப்புகளை வகிப்பதை ஏனைய துருக்கிய அடிமை அதிகாரிகள் விரும்பவில்லை. எனவே பதவிகளை எல்லா துருக்கிய அடிமைகளின் குடும்பங்களிடையே சமமாக பங்கிட வேண்டும் என்று வற்புறுத் தலாயினர். அவர்களுள் முக்கியமானவர் ஹசாமூத்தீன் குத்லூ கான் என்பவராவார். எல்லா துருக்கிய மலிக்குகளுள் அவரே மூத்தவர். இஸ்உத்தீன் பால்பன் கிஷ்லூகான் அவருக்கு உதவி யாக இருந்தார். இமாத் உத்தீன் ரெய்ஹான் என்ற இந்திய முஸ்லிம் அவர்களுக்கு உதவி செய்ய இசைந்தார். சுல்தானும், மலிக்குகளும் பால்பனிடம் கொண்டிருந்த நம்பிக்கையைக் குலைத்தவர் அவரேயாவார். ரெய்ஹானுடைய உதவியை குத்லூகான் நாடினரா அல்லது ரெய்ஹான் தாமாகவே அவர்களுக்கு உதவி செய்ய முன்வந்தாரா என்பதை நாம் திட்ட வட்டமாகக்கூற இயலாது. பால்பனைக் கொல்லுவதற்கான முயற்சி மேற்கொள்ளப்பட்டது. என்று கூறப்படுகிறது. பால்ப னுடைய எதிரிகள் விரும்பியது அவருடைய உயிரை அல்ல, பதவி களும் இக்தாக்களும் எல்லா துருக்கிய குடும்பங்களிக்கு சமமாகப் பங்கிட்டளிக்க வேண்டும் என்பதையே அவர்கள் விரும்பினர்கள். 1252ஆம் ஆண்டில் சுல்தானுடைய படைகள் கஜினி நோக்கிப் புறப்பட்டபோது எல்லா துருக்கிய மலிக்குகளும் அதில் கலந்து கொண்டனர். அவர்களுடைய நோக்கம் பகைவருடன் போரிடுவ தல்ல. தங்களுக்கிடையே ஏற்பட்டிருந்த பிரச்சினைக்கு முடிவு காணுவதே அவர்களது நோக்கமாக இருந்தது. இறுதியில் உலூக் கான் ஹான்சிக்குப் போக வேண்டியது என்று சுல்தானை ஒரு கட்சி யினர் வற்புறுத்தினர்கள். பால்பனுடைய எதிரிகள் வலுப்பெற்றி ருந்தமையாலும், சுல்தானுடைய மனத்தை ரெய்ஹான் மாற்றி விட்டிருந்தமையாலும், சுல்தான் அவர்களுடைய வேண்டுகோளை ஏற்று பால்பனை ஹான்சிக்குப் போகும்படி கட்டளையிட்டார். பால்பனும் நிலைமையை நன்கு புரிந்து கொண்டிருந்தமையால் மறுமொழி கூருமல் ஹான்சி சென்று விட்டார். அத்துடன் மன நிறைவுபெருத ரெய்ஹான் உலூக்கான் ஹான்சியை விட்டு நகோர் போகவேண்டும் என்று கட்டளையிட்டார். அதற்கும் பால்பன் இசைந்தார். கஷ்லிகான் காராவிற்கு அனுப்பி வைக்கப்பட்டார். இஸ்உத்தீன் பால்பன் கிஷ்லூகான் உதவி அமீர்-இ-ஹஜீப்பாக பதவியேற்ருர். ரெய்ஹான் வக்கீல்தாராக நியமிக்கப்பட்டார். மின்ஹாஜ் தமது தலைமைக் காஜி பதவியை மீண்டும் இழந்தார். வசீர் பதவி மலிக்முகமது நிஜாம் ஜுனெய்திக்கு அளிக்கப்பட்டது. குத்லூகானுக்குக் கொடுக்கப்பட்ட பதவி யாதென்பதை நாம் அறிவதற்கில்லை,

பால்பனுடைய எதிரிகள் விரைவில் செல்வாக்கிழந்து விட்டனர். அதற்கு முக்கிய காரணம் இந்திய முஸ்லிம்களுக்கு அதிகமான சலுகைகளை அவர்கள் காட்டியதேயாகும். அதனுல் உலூக்கான் தாம் இழந்த செல்வாக்கை மீண்டும் பெற இயன்றது. குத்லூ, கிஷ்லூ கட்சியினர்கள் சிலரும் பால்பன் பக்கத்தில் சேர்ந்து கொள்ள முற்பட்டனர். பால்பனுடைய ஆதரவாளர்கள் பால்பனை டில்லிக்கு வரும்படி கேட்டுக் கொண்டார்கள். பால்பனும், ஜலாலுத்தீன் மசூத்ஷாவும் டில்லிக்குப் புறப்பட்டார்கள். ரெய்ஹானுடைய யோசனையின் பேரில் சுல்தான் டில்லியிலிருந்து சுனும் என்னுமிடத்திற்குக் சென்றுர். பால்பனுடைய ஆதரவாளர்கள் தாபாரிந்தாவில் கூடினுர்கள். இருதரப்பினரும் சண்டை போட விரும்பவில்லை. ஏனெனில் இவ்விரு பக்கங்களில் இருந்தவர்கள் பெரும்பாலும் உறவினர் களாகவேயிருந்தனர். எனவே அவர்கள் ஓர் உடன்பாடு காண முற்பட்டனர். இறுதியில் ரெய்ஹானை பதோனுக்கு ஆளுநராக அனுப்பி விடுவது என்றும் குத்லூகானுக்கு அவுத்தின் ஆளுநர் பதவியை அளிப்பதென்றும், கிஷ்லூகானுக்கு மூல்தான். ஊச் ஆகியவற்றை அளிப்பதென்றும், பால்பன் மீண்டும் நயிப்-இ-மம்லாகாத் ஆக நியமிப்பது என்றும் தீர்மானித்தார்கள். 1255-ல் பால்பன் மீண்டும் டில்லி வந்தார். மின்ஹாஜ் மூன்றுவது முறையாக தலைமை காஜியாக நியமனம் பெற்றுர்.

இரண்டாவது முறையாக பால்பன் நயிப்-இ-மம்லாகாத் பதவியைப் மெற்ற பிறகு முன்பைவிட இப்போது சற்று கடுமை யாக நடந்து கொண்டார். முதலில் மலிக் குத்புத்தீன் ஹசன் கோரியைக் கொல்லும்படி உத்தர விட்டார். சுல்தானுடைய குடைமீது பால்பனுக்கு ஒரு சமயம் ஆசை ஏற்பட்டது. ஆகவே சில நாட்கள் அவர் கொலு மண்டபத்திற்குச் செல்வதை நிறுத்தி விட்டார். அதையறிந்ததும் சுல்தான் பால்பனிடம் ஓர் ஆளை அனுப்பி செய்தியை அறிந்து வருமாறு கட்டளையிட்டார். தமக்கு சுல்தானுடைய குடை போன்ற ஒரு குடை வேண்டும் என்று அந்த ஆள் மூலமாக பால்பன் சொல்லியனுப்பினுர். அதை யறிந்த சுல்தான் தம்முடைய குடையையே கொடுத்து விட்டார். அந்தக் குடையுடன் பால்பன் அரசவைக்குள் நுழைந்த போது ஹசன் கோரி சில கேலி வார்த்தைகளைக் கூறினுர். அதற்காக அவரைக் கொன்று விடும்படி பால்பன் கட்டளையிட்டார்- அதை யறிந்த சுல்தான் மிகவும் வேதனைப் பட்டார். ஆனுல் பால்பன் முன்னிலையில் அவரால் ஏதும் பேச இயலவில்லை. பால்பன் நடத்திய அரசியல் சார்ந்த கொலைகளுள் இதுவே முதலாவ

தாகும்.[1] அவருக்களிக்கப்பட்டிருந்த மீரத் இக்தா கஷ்லி கானுக்கு கொடுக்கப்பட்டது.

பால்பனுடைய பழைய விரோதிகள் தொடர்ந்து அவருக்குத் தொல்லை கொடுத்து வந்தனர். ரெய்ஹான் பதோனிலிருந்து பாரெய்க் என்னுமிடத்திற்கு மாற்றப்பட்ட போது அவர் குத்லூ கானுடன் சேர்ந்து மீண்டும் பால்பனை எதிர்க்கலானுர். ரெய்ஹான் போரில் தோற்கடிக்கப்பட்டு கொல்லப்பட்டார். குத்லூகானை பாரெய்க்கின் ஆளுநராக மாற்றினுர். அதற்கு அவர் ஒப்புக் கொள்ளவில்லை. எனவே அவருக்கெதிராக பால்பன் ஒரு படையை அனுப்பி வைத்தார். சம்ராமோ என்னு மிடத்தில் நடந்த சண்டையில் டில்லிப் படை தோல்வியடைந்தது. ஆகவே பால்பன் ஒரு பெரிய படையைத் திரட்டிக் கொண்டு அவுத்துக்குச் சென்ருர். அவரைக் கண்டதும் குத்லூகான் சிர்மூர் மலைப் பகுதியை நோக்கிப் பின் வாங்கலானுர். குத்லூகானை சிறைபிடிக்க இயலாது பால்பன் திரும்பி விட்டார். இந்துஸ் தானத்தில் தமது ஆதிக்கத்தை மீண்டும் ஏற்படுத்த முடியாது என்பதை அறிந்து சிர்மூர் பகுதியிலிருந்த சன்துார்கரில் குத்லூ கான் தமது ஆதிக்கத்தை ஏற்படுத்தினுர். அங்கிருந்த ராணுவும் அவருக்குதவியாக இருந்தார். பால்பன் மீண்டும் அவர் மீது தாக்குதல் நடத்தினுர். சன்துார்கர் பால்பன் கைவசமாயிற்று. ஆனுல் குத்லூகான் அவர் பிடியிலிருந்து தப்பித்துக் கொண்டு கிஷ்லூகானிடம் சென்று விட்டார். பால்பனுடைய இருபெரும் பகைவர்கள் மீண்டும் ஒன்று சேர்ந்தனர். டில்லிக்கெதிராகக் கலகத்தில் ஈடுபட்டனர். சுனம், சமாணு ஆகியவற்றை அவர்கள் கைப்பற்றிக் கொண்டனர். உலூக்கான், கஷ்லிகான், ஷெர்கான் ஆகிய மூவருமே கலகக்காரர்களை அடக்க புறப்பட்டனர். அவர்கள் டில்லியில் இல்லாத போது அதனைப் பாதுகாப்பதற்குரிய நடவடிக்கைகள் ஒன்றையும் அவர்கள் மேற்கொள்ளவில்லை. இரண்டு படைகளும் சமாணுவிற்கருகே மிகவும் நெருக்கமாக வந்து விட்டன. ஆனுல் கைகலக்க அவர்கள் விரும்பவில்லை. ஏனெனில் அவ்விரு படைகளிலும் உறவினர்களும் நண்பர்களும்தான் அதிக மாக இருந்ததனர். குத்லூகானுக்கும் கிஷ்லூகானுக்கும் வேண்டிய பதவிகளையும், இக்தாக்களையும் கொடுக்க பால்பன் தயாராக இருந்தார். அதற்குப் பதிலாக அவர்கள் தமக்குக் கீழ்படிந்து நடக்க வேண்டும் என்று அவர் விரும்பினுர். அந்த நேரத்தில் டில்லியிலிருந்த சில அதிகாரிகள் குத்லூகானுக்கும். கிஷ்லூ கானுக்கும் இரகசியமாக கடிதங்கள் எழுதி அவர்களை டில்லிக்கு வரும்படியாகவும், டில்லியருகே வரும்போது நகரின் வாயில்கள்

[1] ACHI, p 267.

திறக்கப்படும் என்றும் கூறினார்கள். இந்தச் செய்தியை பால்பன் எப்படியோ தெரிந்து கொண்டு விட்டார். ஆகவே பால்பன் கடிதம் எழுதியவர்கள்மீது உடனடியாக நடவடிக்கை மேற் கொண்டார். அதன் விளைவாக குத்லூகானும் கிஷ்லூகானும் டில்லி வந்தபோது நகர வாயில்கள் இறுகமூடப்பட்டிருப்பதைக் கண்டார்கள். நகர மதில்கள் நன்கு பாதுகாக்கப்பட்டிருப்பதைக் கண்ணுற்றதும் குத்லூகான் அவுத்துக்கு ஓடி அங்கு ஆளுநராக இருந்த அர்சலன்கான் சன்ஞரிடம் சரண் புகுந்தார். கிஷ்லூகான் ஊச் திரும்பினார். சலிம் நோயன் என்ற மங்கோலியருடன் அவர் உடன்பாடு செய்து கொண்டு, அவர் பக்கம் சேர்ந்து கொண்டார். 1258-59ஆம் ஆண்டில் மங்கேலியர் பயம் மீண்டும் தோன்றியபோது எல்லா ஆளுநர்களையும் டில்லிக்கு வரும்படி பால்பன் கட்டளையிட்டார். அர்சலன்கானும். குத்லுகானும் அதை ஏற்று டில்லிக்கு வரவில்லை. ஆகவே அவர்களை அடக்க அவர் படையொன்றை அனுப்பினார். அப்படைகளைத் திருப்பி அழைத்துக் கொண்டால் சுல்தானுடைய முன்னிலையில் தாங்க ளாகவே வந்து நிற்பதாகக் கூறினார்கள். அவர்கள் கொடுத்த வாக்குப்படி 1258-ல் சுல்தான் முன்பு ஆஜர் ஆனார்கள். பால்பன் அவர்களை மிகவும் மரியாதையுடன் நடத்தினார். குத்லூகானுக்கு லக்னோதியும், அர்சலன்கானுக்கு காராவும் அளிக்கப்பட்டன. அதன் பிறகு குத்லூகானைப் பற்றிய தகவல்கள்நமக்குக் கிடைக்க வில்லை. பால்பன் அவரைக் கொன்று விட்டார் என்று சிலர் கருது கிறார்கள். 1260-ல் கிஷ்லூகான் மங்கோலியர்களுடைய உதவி யுடன் தாம் இழந்த பழைய இக்தாக்களை மீண்டும் பெற முயற் சித்தார். அவருடைய முயற்சிகள் தோல்வியடைந்தன. அதன் பிறகு கிஷ்லுகானைப் பற்றி நாம் ஒன்றையும் அறிவதற்கில்லை.

குத்லூகான், கிஷ்லூகான் ஆகியோரை அடக்கி விட்ட பிறகு பால்பனை எதிர்க்க வல்லவர்கள் எவருமிலர். அதன் விளைவாக அவருக்கு அரச பதவி மேல் இருந்த மோகம் அதிகமாயிற்று. நாசிர் உத்தீன் மாமூத்தினுடைய வெண்குடையை கோரிய போதும், அதைப் பற்றி கேலி செய்த ஹசன் கோரியை பலர் முன்னிலையில் அவர் கொல்லுவித்தபோதும் அவருக்கு அரச பதவியின்மீது இருந்த ஆசை வெளிப்பட்டது. அமீர்குர்த் இதைப் பற்றி திட்டவட்டமாகத் தம்முடைய சியார் உல் ஆலியாவில் குறிப்பிட்டுள்ளார். அது உண்மையெனில் அவர் ஆறு வருடங்கள் ஏன் காத்திருக்க வேண்டும் என்று சிலர் கேட்கிறார்கள். அதற்குப் பதிலிறுக்கும் வகையில் சில விவரங்கள் கொடுக்கப்படுகின்றன. மங்கோலியர்கள் பலம் பொருந்தியவர்களாக இருந்தனர். ஏனைய துருக்கிய அதிகாரிகளுடைய மனத்தை அவர் இன்னும் முழுமை

யாக அறிந்து கொள்ளவில்லை. மின்ஹாஜ் தமது வரலாற்றை 1260ஆம் ஆண்டுடன் நிறுத்தி விடுவதால் நாம் இதைப் பற்றி திட்டவட்டமாகக் கூற இயலவில்லை.

சுல்தான் நாசீர் உத்தீனைக் கொன்று விட்டு பால்பன் அரசெய்தினுர் என்று இபின்–இ-பதூதா கூறுகிருர்.[1] நாசீர் உத்தீனை விஷமிட்டுக் கொன்ருர் என்று சிலர் கூறுகிருர்கள். நாசீர் உத்தீன் நோயினுல் இறந்தார் என்பவர் சிலர். நாசீர் உத்தீனுக்கு 4 பிள்ளைகள் இருந்தனர். மலிக் குக்னுத்தீன் பிருஸ்ஷா, மலிக்ஷிஹாபுத்தீன் முகமதுஷா, மலிக் தாஜ் உத்தீன் இப்ரஹீம் ஷா, மலிக் சைப்புத்தீன் பராம்ஷா. அவர்களுள் ஒருவரையும் அரச பதவியில் அமர்த்தாமல் தாமே அரசுரிமையைப் பெற்று விட்டார். இதிலிருந்து அவருக்கு அரசப் பதவியில் அவருக்கிருந்த ஆசை நன்கு விளங்குகிறது. இதைப்பற்றிக் குறிப்பிடும்போது இசாமி ஒரு நிகழ்ச்சியை நமக்கு எடுத்துக் கூறியுள்ளார். ஒரு நாள் பால்பனுடைய பிள்ளைகளும், சுல்தானுடைய பிள்ளைகளும் விளையாடிக் கொண்டிருந்த போது, பால்பனே அதிகமான அறிவுத்திறம் பெற்றிருந்ததாகக் கூறினுர்கள். அதைக் கேட்டதும் சுல்தானுடைய பிள்ளைகள் அவரை முட்டாளாக்கி குதிரையிலிருந்து இறங்கச் செய்வதாகக் கூறி பந்தயம் கட்டினுர்கள். ஒரு நாள் அவர்களும் பால்பனும் குதிரைகளில் போய்க் கொண்டிருந்தபோது வேண்டுமென்றே அவர்கள் சவுக்கைக் கீழே போட்டுவிட்டு பால்பனைப் பரிதாபத் தோடு பார்த்தார்கள். பால்பன் குதிரையிலிருந்து இறங்கி அதை எடுத்துக் கொடுத்தார். பந்தயத்தில் அவர்கள் வெற்றி பெற்று விட்டனர். பந்தயப் பணத்தைக் கொடுத்துவிட பால்பனுடைய பிள்ளைகள் பால்பனைப் பணம் கேட்டனர். அப்போது பந்தயத்தைப் பற்றிய விவரத்தை அவருக்கு அறிவித்தார்கள். அதை அறிந்ததும் பால்பன் தீவிரமாக சிந்திக்கலானுர். இம்போது அவரை ஏமாற்றி விட்டதைப் போல் அவர்கள் சுல்தான்களாக பதவியேற்ற பிறகு எப்படி ஏமாற்று வார்களோ என்று எண்ணமிடலானுர். எனவே அவர்கள் பதவியில் அமர்வதைத் தடுத்து நிறுக்தினுலொழிய தம்முடைய உயிர் நிலைக்காது என்ற முடிவுக்கே வந்தார். ஆகவே நாசீர் உத்தீனைக் கொன்ருர் என்று இசாமி கூறியுள்ளார்.[2] அவருடன் ஷம்சி அரச குலத்தினரின் ஆட்சி முடிவுற்றது. பால்பானி அரச குலத்தின் ஆட்சி துவங்கியது.

[1] Rehla. Arabic Text, Vol II. p. 22.

[2] Futuh us Salatin, p. 156-57

# 5. பால்பனும் அவருடைய வாரிசுகளும்

**சுல்தான் கியாஸ் உத்தீன் பால்பன் (1266-1287)**

**முந்திய வாழ்க்கை:** பஹா உத்தீன் பால்பன் இல்பாரி துருக்கிய இனத்தைச் சார்ந்தவர் என்று மின்ஹாஜ் பிறர் சொல்லத் தாம் கேட்டதாக எழுதியுள்ளார். ஆகவே அவரது தோற்றத்தைப் பற்றி நாம் திட்டவட்டமாகக் கூற இயலாது. அவர் உயர்ந்த குடும்பத்தில் பிறந்தார். அவர் தந்தை 10,000 குடும்பங்களுக்குத் தலைவராக இருந்தார், மங்கோலியர்கள் அவரைக் கைப்பற்றி அடிமையாக விற்று விட்டனர். குவாஜா ஜமாலுத்தீன் பஸ்ரி என்பவர் அவரைப் பாக்தாத்தில் வாங்கினர். 1232-33-ல் ஜமாலுத்தீன் அவரை டில்லிக்குக் கொண்டு வந்தார். பால்பனுடன் கொண்டு வரப்பட்ட ஏனைய அடிமைகளை இல்துத்மிஷ் உடனே விலை கொடுத்து வாங்கினர். பால்பனை வாங்குவதில் அவர் சிறிது தயக்கம் கொண்டார். ஏனெனில் அவர் முகத்திலிருந்து அவருடைய பேராசை எண்ணங்களை அவர் கண்டு விட்டதாகக் கூறப்படுகிறது. எனினும் இறுதியில் பால்பனும் இல்துத்மிஷின் அடிமைகள் கூட்டத்தில் சேர்ந்து விட்டார். அவருக்கு முதன்முதலில் காஸாதார் அல்லது மெய்க்காவலர் பதவி அளிக்கப்பட்டது. அவருடைய கூடப் பிறந்த சகோதரனை சைப்புத்தீன் அய்பெக்கும், அவருடைய தந்தையின் சகோதரன் மகனை நஸ்ரத் உத்தீன் ஷெர்கானும் இல்துத்மிஷின் அடிமை அதிகாரிகளாகப் பணியாற்றி வந்தார்கள். ருக்னுத்தீன் பிரூஸ் காலத்தில் வேறு சில துருக்கியர்களுடன் அவர் இந்துஸ்தானம் ஓடி விட்டார். அதற்காக அவர் சிறையிலடைக்கப் பட்டார். ரஸியா அவரை முதலில் காசாதாராகவும் பின்னர் அமீர்-இ-ஷிகார் ஆகவும் நியமித்தார். பராம்ஷா அவரை அமீர்-இ-ஆகூராக நியமித்தார். அப்போது அமீர்-இ-ஹஜீப்பாக பதவியேற்றிருந்த மலிக் பத்ருத்தீன் சன்கர்ரூமி பால்பனிடம் மிகுந்த பாசத்தை வைத்திருந்தார். அதன் காரணமாக அவருக்கு ரேவாரி இக்தா கிடைத்தது. பராம்ஷாவினுடைய அதிகாரிகள் பராம்ஷாவை டில்லியில் முற்றுகை இட்டபோது பால்பன் மிகுந்த தைரியத்துடன் போராடி பராம்ஷாவின் அன்பைக் கவர்ந்தார். அதனுல் அவருக்கு ஹான்ஸி இக்தா கிடைத்தது. முஹாஸாபுத்தீனுடைய மறைவிற்குப் பிறகு

அவர் அமீர்-இ-ஹஜீப்பாக பணியாற்றி வந்தார். அப்போது நயிப்-இ-மம்லாகத் பதவியில் எவரும் அமர்த்தப்படவில்லை. வசீர் பதவியிலிருந்தவரும் செல்வாக்கைப் பெற்றிருக்கவில்லை. எனவே அனுபவமற்ற அலாவுத்தீனை ஏற்ற வகையில் நடத்திச் செல்லும் பொறுப்பு அவரைச் சார்ந்ததாகி விட்டது. அது முதற்கொண்டு அடுத்த 25 ஆண்டுகள் அவரே சுல்தானுக்குப் பின் இருந்து கொண்டு ஆட்சியை நடத்தி வரலானர். அதன் பிறகு 20 ஆண்டுகள் சுல்தானுக இருந்து கொண்டு அரசை நடத்தி வந்தார்.

பால்பன் அறிவு மிக்கவர்; தொலைநோக்குடையவர். எந்த நிலையிலும் நிதானமாக நடந்து கொள்ளும் மனப் பக்குவத்தை அடைந்திருந்தார். எனவே தவருன காரியத்தைச் செய்ய அவர் நினைத்தாலும் அதனை அவரால் செய்ய இயலாது. மிகவும் பேராசை கொண்டவர். ஆனல் அரசியல் துறையில் உச்ச நிலையை திடீரென அடைய அவர் விரும்பவில்லை. தமது ஆசைகளைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டுமெனில் தமக்கென ஒரு கட்சி அவசியமென்பதை உணர்ந்தார். அந்தக் கட்சியில் துருக்கிய அதி காரிகளைத் தவிர ஏனையோரைச் சேர்த்துக் கொள்ள அவர் விரும்ப வில்லை. தமக்கென ஒரு கட்சியைத் தொடங்கினல் ஏனையோர்கள் அதைத் தவருக எண்ணி அவரை வீழ்த்த முயற்சிக்கக் கூடும். துருக்கிய அடிமைகள் தங்களுள் ஒருவர் மற்றவர்களைவிட உயர்ந்த நிலைக்குப் போக அனுமதிக்க மாட்டார்கள் என்பதும் அவருக்கு நன்ருகத் தெரியும். எனவே அந்த வகையிலும் அவர் மிகக் கவனமாக நடந்து கொண்டு தம்முடைய ஆதரவாளர்களை முக்கிய பதவிகளிலும், மாநில ஆளுநர் பதவிகளிலும் அமர்த்தி விட்டார். சமயத்திற்கேற்றபடி நடக்கும் ஆற்றல் அவருக்குண்டு. பகை வர்கள் தம்மைவிட அதிக பலம் அடைந்தபோது டில்லியை விட்டு மறுமொழி கூருமல் ஹான்சிக்கும், பின்னர் நாகோருக்கும் அவர் சென்று விட்டார். துருக்கியப் பிரபுக்களிடம் குடி கொண்டி ருந்த சில குறைகளும் அவரிடம் காணப்பட்டன. துருக்கிய இனத்தவரே அனைவரிலும் உயர்ந்தவர் என்ற தற்பெருமை அவருக்கும் உண்டு. இந்திய முஸ்லீம்களை இழிவானவர்கள் என்று அவர் கருதி அவர்களை வெறுத்தார். அந்த ஒரு காரணத்திற் காகவே அவர் இந்தியாவில் தோன்றிய சிறந்த அரசராகக் கருதப் படுகின்ற தகுதியை இழந்து விடுகிருர். அவரிடம் அலாவுத்தீ னுடைய போர்த் திறத்தைக் காண முடியாது. பெரியதொரு போரை அவர் வென்றதாக நாம் அறிவதற்கில்லை. பாராட்டுதற் குரிய போர் நடவடிக்கையை மேற்கொள்ளவும் இல்லை. அவர் அலாவுத்தீன் மசூத் காலம் தொடங்கி சுல்தான் பதவியைப் பெற்றவரை அவர் சாதித்த காரியங்களைப் பற்றி முன்னர் கண்

டோம். அவர் சுல்தாஞக பதவியேற்ற பிறகு அவர் புரிந்த சாதனேகளே இனி கவனிக்கப் போகிருேம். அவற்றுள் அருமை யானவை அல்லது நல்லவை என்று சொல்லக் கூடியவை ஒன்று மில்லே என்பதைப் புரிந்து கொள்ள நமக்கு வெகு நேரமாகாது. அவ்வாறிருக்க அவரை அடிமை அரசர்களுள் மிகச் சிறந்தவராக எவ்வாறு கொள்ள இயலும்?

சுல்தான் பதவியை ஏற்றவுடன் பால்பன் பல பிரச்சினேகளே எதிர்கொள்ள வேண்டியதாக இருந்தது. முதலில் ஏறக்குறைய முப்பது ஆணடுகளாக சுல்தானுக்கும் துருக்கிய பிரபுக்களுக்கும் இடையே நடைபெற்று வந்த ஆதிக்கம் பற்றிய போராட்டத்தை நிறுத்த வேண்டியதாக இருந்தது. டில்லி சுல்தானியத்தின் அரசியலில் கடந்த முப்பது ஆண்டுகளில் துருக்கிய மலிக்குகளும் அமீர்களும் முக்கியமான இடத்தைப் பெற்றிருந்தார்கள். சுல்தானே தங்கள் கைப் பொம்மையாக மாற்ற வேண்டும் என்றும் அவர்கள் எண்ணிஞர்கள். அதில் பெரும் வெற்றியுங் கண்டார்கள். அந்த வெற்றிக்கு பால்பன் முக்கியமான காரணமாக விளங்கிஞர். பிரபுக்களின் துணேகொண்டு ஏறக்குறைய 25 ஆண்டுகள் அவரே அரசரின் பெயரில் ஆட்சியை செலுத்தி வந்தார். பின்னர் அவர்கள் உதவியால் சுல்தாஞகவும் பதவியேற்ருர். நாசீர் உத்தீன் மாமூத்தைப்போல பால்பன் பெயரளவில் சுல்தாஞக இருக்க விரும்பவில்லே. நாசீர் உத்தீனே பலமற்றவராகச் செய்த துருக்கிய பிரபுக்கள் பால்பனேயும் பலமற்றவராகச் செய்ய இயலுமல்லவா? பால்பனேப்போல பேராசை கொண்டவர்கள் மீண்டும் தோன்றக் கூடும் அல்லவா? அதன் விளேவாக இல்துாத்மிஷின் பிள்ளேகளுக்கும் பேரப் பிள்ளேகளுக்கும் நேர்ந்த கதி பால்பனுக்கும், அவரது பிள்ளேகளுக்கும் நேரக்கூடும் அல்லவா? இந்த நிலேயைத் தடுக்க பால்பனுக்கு ஒரே வழிதான் புலப்பட்டது. அதாவது துருக்கிய பிரபுக்களுடைய பலத்தை ஒழித்துக்கட்டுவது என்பதாகும்.

இரண்டாவது பிரச்சினே நாட்டில் அமைதியை ஏற்படுத்து வதைப் பற்றியதாகும். நாட்டில் கொள்ளேக்காரர்களின் அட்ட காசங்கள் பெருகிவிட்டிருந்தன. அதஞல் வாணிபம் தடைபட்டது. அதன் விளேவாக மக்களுடைய வாழ்க்கை வளம் குன்றியது.

மூன்ருவதாக பேரரசின் எல்லாப் பகுதிகளிலும் டில்லி அரசரின் அதிகாரத்தை நிலேநாட்டுவதைப் பற்றியதாகும். முன்பு ஒடுக்கப்பட்ட இந்துத் தலேவர்கள் டில்லியின் ஆதிக்கத்திலிருந்து விடுபட தக்க தருணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். மங்கோலியர்கள் அடிக்கடி படையெடுத்து வந்து டில்லி அரசுக்கு

ஆபத்துக்களை விளைவித்து வந்தனர். மாநில ஆளுநர்கள் அடிக்கடி கலகத்தில் ஈடுபட்டிருந்தனர். ஆட்சி முறை சார்ந்த நிறுவனங்களைப் பலப்படுத்தினாலொழிய அவர்களைக் கட்டுப்படுத்தி வருவதென்பது கடினமாக இருந்தது. இவையே பால்பன் சுல்தானாக பதவியேற்ற போது அவரை எதிர்நோக்கியிருந்த பிரச்சினைகளாகும். இனி இவற்றினுக்குத் தீர்வு காண அவர் கையாண்ட முறைகளைப் பற்றி கவனிப்போம்.

**பால்பனும் துருக்கிய பிரபுக்களும்:** இல்தூத்மிஷ் தமது ஆட்சிக்கு உறு துணையாக இருக்கும் பொருட்டு "நாற்பது" என்று அழைக்கப்பட்ட துருக்கிய அடிமை அதிகாரிகள் அடங்கிய நிறுவனத்தைத் தோற்றுவித்தார் என்று முன்னர் கண்டோம். அவர் இறந்த பிறகு அந்த நாற்பது துருக்கிய அடிமை அதிகாரிகளுடைய குடும்பத்தினர் எல்லா அதிகாரங்களையும் தங்கள் கைகளிலேயே வைத்திருக்க விரும்பினார்கள். அதற்கு இசைந்தவர்களை சுல்தான்களாகத் தேர்ந்தெடுத்தனர். அதற்கிசையாதவர்களை பதவியிலிருந்து அகற்றினார்கள். இத்தகைய அரசியல் விளையாட்டில் பால்பன் ஒரு முக்கிய பங்கினை வகித்திருந்தார். ஏனைய துருக்கிய அதிகாரிகளின் உதவிகொண்டு அவரே சுல்தான்களை பதவியிலிருந்து நீக்கியுள்ளார். அவர்களின் துணையைக் கொண்டுதான் அவரே சுல்தான் பதவியை அடைந்தார். ஆயினும் சுல்தானாகப் பதவியேற்ற பிறகு முழு அதிகாரத்தைத் தம் கைகளிலேயே வைத்திருக்க விரும்பினார். துருக்கிய அதிகாரிகள் பலமுள்ளவர்களாக இருக்கும் வரையில் தமது பதவிக்கும், அதிகாரத்திற்கும் ஆபத்து இருந்து வரும் என்பதை அவர் நன்றாகப் புரிந்து கொண்டார். எனவே அவற்றைக் காப்பாற்றிக் கொள்ள துருக்கிய பிரபுக்களை ஒழிப்பதைத் தவிர வேறு வழி அவருக்குப் புலப்படவில்லை. அவர்களை ஒழிக்கவேண்டுமென்றால் சுல்தானுக்கும், பிரபுக்களுக்கும் இடையே ஏற்பட்டிருந்த உறவு முறையை திருத்தி அமைத்தாக வேண்டும் என்று பால்பன் எண்ணினார். இதுவரை துருக்கிய பிரபுக்கள் சுல்தானை தம்முள் ஒருவராகக் கருதினார்கள். அவர்கள் ஒவ்வொருவருக்கும் சுல்தான் பதவியை அடைய அருகதை உண்டென்று எண்ணினார்கள். அந்த நிலையை மாற்றி சுல்தான் பிரபுக்களைவிட உயர்ந்தவர் என்ற எண்ணத்தைத் தோற்றுவித்தாலன்றி சுல்தானுடைய அதிகாரத்தை நிலைநாட்ட இயலாது என்று பால்பனுக்குப் புலப்பட்டது. ஆகவே அவர் ஒரு புதிய கோன்மைக் கொள்கையை அறிவித்தார்.

புதியதொரு கோன்மைக் கொள்கையை பால்பன் அறிவித்ததற்கு வேறு சில காரணங்களும் உண்டு. நாசீர் உத்தீன்

மாமூத்தைக் கொன்று விட்டு பால்பன் பட்டத்திற்கு வந்தார் என்ற கருத்து பரவலாக இருந்து வந்தது. பால்பனுடைய குற்றமுள்ள நெஞ்சும் குறுகுறுத்து வந்தது. தம்முடைய மலிக்குகள் அமீர்கள் ஆகியோரின் மனத்திலிருந்து அந்த எண்ணம் மறைவதற்காக ஒரு புதிய விதமானக் கோன்மைக் கொள்கையை அறிவித்தார். பால்பன் சுல்தானுக வேண்டும் என்பது கடவுளது விருப்பம் என்றவாறு கூறி தம்மீது படிந்திருந்த கறையை மறைத்து விடமுயற்சித்தார்.

பால்பன் அடிமைத்தனத்திலிருந்து விடுவிக்கப்படவில்லை என்று சிலர் கருதுகிருர்கள். அடிமைத்தனத்திலிருந்து அவர் விலக்கப்பட்டார் என்று மின்ஹாஜ், பரணி ஆகியோர் திட்டவட்டமாகக் கூறவில்லை என்பது இதற்கு ஆதாரமாகக் காட்டப் படுகிறது. அடிமைகள் அரசுரிமையை அடைய இயலாது என்பது அக்காலத்தில் நிலவி வந்த கருத்தாகும். அந்த வகையான தகுதியின்மையை எதிர்கொள்ளவே ஒரு புதிய கோன்மைக் கொள்கையினை அறிவித்தார் என்று சிலர் கூறுகின்றனர்.[1]

பால்பனுடைய கோன்மைக் கொள்கையின் சிறப்புக் கூறுகள் அவர் தம் பிள்ளைகளான முகமது, புக்ராகான் ஆகியோர்களுக்கு எடுத்துக் கூறிய அறிவுரைகளில் காண்கிருேம். அந்தக் கருத்துகளை அவர் பாரசீக சாசானியர்களிடமிருந்து பெற்ருர். சாசானியர்களுடைய முடியாட்சியை தெய்வீகம் பொருந்தியதாகக் கருதிஞர்கள். சாசானியரைத்தவிர வேறு எவரும் கடவுளுடைய அருட்பார்வையைப் பெறவில்லை என்பதால் அவர்களே அரசாளத் தகுதியுடையவர்கள் என்று கருதப்பட்டது. பாரசீகக் கதைகளில் வரும் கதாநாயகர்களைத் தம்முடைய அரசியல் குருக்களாக பால்பன் எண்ணி அவர்களுடைய கொள்கைகளை பின்பற்றலானுர். பாரசீக அரச சபையில் கையாளப்பட்டு வந்த பழக்க வழக்கங்களை தம் அரசசபையினர் கையாண்டு வரும்படி கட்டளையிட்டார். இல்தூத்மிஷ் அரியணையில் அமருவதற்கே அச்சப்படுவார். ஆனுல் பால்பன் பாரசீக சாசானியர்போல கம்பீரமாக அரியணையில் உட்கார்ந்தார். அவர் முகத்தைப் பார்த்தாலே பிறருக்கு அச்சம் தானுகவே ஏற்படும் அளவிற்கு அவர் முகத்தை கடுகடுப்பாக வைத்திருந்தார். இயற்கையிலேயே அவருடைய முகம் நீளமாக இருந்தது. நீண்டதொரு தாடியையும், உயரமான மணிமுடியையும் வைத்துக் கொண்டு அவர் அதனை மேலும் நீட்டிவிட்டார். அரசவையில் பொதுவாக எல்லோரும் அவரவர் பதவியையொட்டி வரிசையாக நின்று கொண்டிருந்தனர். நம்பிக்கைக்குரிய சில மலிக்குகள்

[1] ACHI, 281

மட்டுமே அவருக்கு பின்னால் உட்கார்ந்திருந்தனர். அரசவைக்கு வருபவர்கள் அவருக்குமுன் தரையில் விழுந்து வணங்கி அவரது கால்களுக்கு முத்தமிட வேண்டும் என்று கட்டளையிட்டார். அவருடைய முன்னிலையில் கேலிப் பேச்சு பேச அனுமதிக்கப்பட வில்லை. அவர் சிரிப்பதை எவருமே பார்த்திருக்க முடியாது. நகைச் சுவையாக அவர் பேசுவதையும் எவரும் கண்டிருக்க முடியாது. விழாக்காலங்களில் அரச சபை வெகு நேர்த்தியாக அலங்கரிக்கப் பட்டது. அப்போது தொங்கவிடப்பட்ட தோரணங்களும், திரைச்சீலைகளும், தரைவிரிப்புகளும், அப்போது பயன்படுத்தப் பட்ட தங்க, வெள்ளி சாமான்களும் பார்ப்போர் கண்களைப் பறிக்கவல்லனவாக இருந்தன. அயல் நாட்டு தூதுவர்கள் அவற்றைக் கண்டு பிரமித்துப் போனார்கள். அவர் தெருக்களில் வலம் வந்தபோது அவரது மெய்க்காவலர்களும் வீரர்களும் பளபளக்கும் கத்திகளை கைகளில் ஏந்திக் கொண்டு பிஸ்மில்லா, பிஸ்மில்லா என்று கத்திக்கொண்டு செல்வதைப் பார்த்தவர் களுடைய இதயங்களில் அச்சமும் மரியாதையும் தானாகவே குடிகொண்டன. குடும்ப வாழ்க்கையில்கூட அவர் பாரசீக வழிகளையே பின்பற்றினார். அவர் பட்டமெய்தியபின் அவருக்குப் பிறந்த பேரப்பிள்ளைகளுக்கு கைக்குபாத், கைக்குஸ்ரு, கைகாஸ் என்ற பாரசீக மன்னர்களின் பெயரைச் சூட்டினார்.

இனி அவருடைய கோன்மைக் கொள்கையின் சிறப்புக் கூறுகளைப்பற்றிக் கவனிப்போம். அவற்றுள், முதலாவது சுல்தான் பூவுலகில் கடவுளுடைய பிரதிநிதியாவார் என்பதாகும். சுல்தான் கடவுளுடைய நிழலாகக் கருதப்பட்டார். அரசரைத் தேர்ந் தெடுப்பது கடவுளேயன்றி பிரபுக்களோ அல்லது பொதுமக்களோ அல்ல. பூவுலகில் நபிகள் நாயகத்திற்கு அடுத்தபடியாக பெருமைக் குரியவர் சுல்தானேயாவார். சுல்தான் தாமாக எதையும் செய்வ தில்லை. கடவுள் தாம் செய்ய விரும்பியதை அவர் வாயிலாகச் செய்கிறார். ஆகவே, சுல்தானுடைய செய்கைக்கு அவரைப் பொறுப்புள்ளவராகக் கொள்ள முடியாது. அவருடைய செய் கைகளை பொதுமக்களின் தணிக்கைக்கு உட்படுத்த இயலாது. மேற்கண்ட கொள்கை அவருடைய எதேச்சாதிகாரத்திற்கு சமயச்சார்புள்ள விளக்கம் ஒன்றினைத் தேடித்தருவதாக அமைந்து விட்டது.[1]

இரண்டாவதாக, பெருமையிலும் அந்தஸ்திலும் சுல்தானே அனைவரிலும் மேம்பட்டவர் என்பதாகும். அதனை நிலைநாட்டும்

[1] ACHI, p. 281

வகையில் அவர் சாதாரண மக்களிடம் நெருங்கிப் பழகாமலும் அவர்களுடன் பேசாமலும் இருந்து வந்தார்.

மூன்றாவதாக, வெளி மதிப்புக்கு முக்கியத்துவம் கொடுக்கப் பட்டது. அரசருக்குரிய ஆடைகளின்றி அவர் அரச சபைக்கு வருவதில்லை. அவருடைய பணியாட்கள்கூட அவரை எப்போதும் அரச உடையிலேயே இருக்கக் கண்டனர்.

நான்காவதாக, உயர்குடி மக்கள்-இழிகுல மக்கள் ஆகியோருக்கிடையே ஏற்பட்டிருந்த வேறுபாட்டை எந்நேரமும் வற்புறுத்தி வந்தார். இழிகுல மக்களுடன் தொடர்பு கொள்ளுதல், அவர்களை அரசு பணியில் ஈடுபடுத்துதல் ஆகியவை அரசருடைய மதிப்பைக் குறைத்துவிடும் என்று அவர் நம்பினார். எனவே, அரசுப் பணிகளில் அமர்த்தப்பட்டிருந்த தாழ்ந்த குலத்தவர்களைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டார். ஒரு முறை அம்ரோவாவில் ஒரு பொறுப்புள்ள பதவியில் இஸ்லாம் மதத்தை ஏற்றுக் கொண்ட இந்து அடிமையின் மகன் ஒருவரை அமர்த்த வேண்டும் என்று சில உயர் அதிகாரிகள் பரிந்துரை செய்தார்கள். அதைக் கேட்டதும் சுல்தானுக்கு மிகுந்த கோபம் வந்துவிட்டது. பரிந்துரை செய்த அதிகாரிகளை அவர் பலவாறு திட்டி விட்டார். பொறுப்புள்ள அரசாங்க உத்தியோகத்தில் ஒரு தாழ்ந்த குலத்தில் பிறந்தவர் இருப்பதை தாம் காண சகிக்க இயலாது என்று அவர்களிடம் உறுதியாகக் கூறினார்.

ஐந்தாவதாக, தம்முடைய மதிப்பை மேலும் உயர்த்துவதற்காக பிர்தூசியின் ஷாநாமாவில் கூறப்பட்டுள்ள புராண கால ஆப்ராசியாப் வழியில் தாம் வந்ததாகப் பெருமையுடனும் இறுமாப்புடனும் கூறிக் கொண்டார்.[1] அது மட்டுமின்றி தம்முடைய அதிகாரிகளின் குடும்பங்களைப் பற்றி ஆராய்ந்து அவர்களுடைய: பரம்பரைகளை உறுதிப்படுத்துவதற்காக லை தேர்ந்த மரபுவழிமூலம் காட்டுபவர்களின் துணையை நாடினார்.

ஆறுவதாக, பாக்தாத்தின் வீழ்ச்சியைப் பற்றியும் கலீபாவுக்கு நேர்ந்த கதியைப் பற்றியும் அவர் அறிந்திருந்த போதிலும், கலீபாவை இஸ்லாமிய உலகின் அரசியல் தலைவராக அவர் ஏற்றுக் கொண்டார். இறந்து போன கலீபாவின் பெயரைத் தம் நாணயங்களில் பொறித்தார். குத்மாவில் கலீபாவின் பெயரும் வாசிக்கப்பட்டது. தம் ஆட்சியை கலீபா ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று அவர் அடிக்கடி வற்புறுத்தி வந்தார். இவ்வாறாக இஸ்லாமிய உலகின் சமயத் தலைவருடைய அங்கீகாரத்தைப் பெறுவதால்

[1] ACHI. p. 283. qoling, பரணி, p. 37, 39.

சுல்தானுடைய மதிப்பு மேலும் உயரும் என்று கருதினர். அதே நேரத்தில் தம்முடைய சொந்த நலன்களும், அரசாங்கத்தின் நலன்களும் பாதிக்கப்பட்டபோது அவர் இஸ்லாமிய சட்டப்படி நடக்கவில்லை என்பதை இங்கு அறிதல் அவசியமாகும்.

ஏழாவதாக, பொது மக்களின் பாராட்டுதலை சுல்தான் பெறுவதற்காக ஒருதலை சார்பற்ற நியாயத்தை வழங்க ஏற்பாடு செய்தார். சாதாரண மனிதனுக்கு அநீதி இழைக்கப்பட்டது என்பது தெரிந்தால், அதற்குக் காரணமாக இருந்த அதிகாரிகளை தண்டிக்காது அவர் விடுவதில்லை. சரியானபடி நியாயம் வழங்கப் படுகிறதா இல்லையா என்பதைக் கவனித்து அவ்வப்போது தமக்கு அறிவிக்கும்படி தமது பரீத்துகளுக்குக் கட்டளையிட்டார். அந்த வகையில் யாரேனும் தம் கடமைகளை நிறைவேற்றத் தவறினல், அவருக்கும் பால்பன் கடுமையான தண்டனைகளை விதித்தார். பதோனில் ஒரு பரீத் தம் கடமையைச் செய்யத் தவறியதற்காக மரண தண்டனையடைந்தார். வேலைக்காரர் ஒருவனைக் கொன்றதற் காக ஒரு மலிக்குக்கு மரணதண்டனையும் மற்ருெரு மலிக்குக்கு 20,000 தங்க காசுகள் அபராதமும் விதிக்கப்பட்டன.

புதிய கோன்மைக் கொள்கையின் வாயிலாக அரசரும் பிரபுக்களும் சமமான அந்தஸ்து உடையவர்கள் அல்லர் என்றும் பிரபுக்களைவிட அரசரே மேலானவர் என்றும் பால்பன் அறிவித் தார். அது மட்டும் சுல்தானுக்கு பிரபுக்களால் ஏற்படவிருந்த ஆபத்துகளிலிருந்து சுல்தானை காப்பாற்றிவிட இயலாது என்பதை பால்பன் நன்கு தெரிந்து கொண்டிருந்தார். சுல்தாவைதற்கு முன்பு அவரும் நாற்பது அடிமைகளுள் ஒருவராக இருந்தமையால் அதைத் தெரிந்து கொள்ள அவருக்கு வெகு காலம் பிடிக்கவில்லை, தாம் உயிருடன் இருக்கும் வரை துருக்கிய பிரபுக்கள் அதிகாரம் பெற முயற்சிக்காது வாளாயிருக்கக் கூடும். ஆனல் தமக்குப்பின் தமது சந்ததியார்கள் பட்டமெய்தும்போது அவர்களுடன் அப் பிரபுக்கள் போட்டியிடக் கூடும். எனவே, தாம் உயிருடன் இருக்கும் போதே அவர்களைத் தொலைத்துவிடுவது மேல் என்று கருதினர். இல்துாத்மிஷ் குடும்பத்தைச் சார்ந்தவர்கள் அனைவரையும் கொன்று விட்டார். தம்முடைய வழித் தோன்றல்களை எதிர்க்க வல்ல துருக்கிய அதிகாரிகள் சிலரைக் கொன்றுவிட உத்தர விட்டார். ஏனையோர்களைச் சிறையிலிட்டார். நாற்பது அடிமைகளுடைய குடும்பங்களின் முக்கியமான தலைவர்களைக் கொன்றுவிட்டார். தம்முடைய நெருங்கிய உறவினர்களையும் அவர் விட்டு வைக்கவில்லை. ஷெர்கான் அவர் கையில் மடிந்தார். துருக்கிய பிரபுக்களிடம் அவர் கையாண்ட கொள்கை பலத்த

கண்டனத்திற்கு உட்படுத்தப்பட்டுள்ளது. தம்முடைய சொந்த நலன்களையும் தம்முடைய குடும்ப நலன்களையும் அவர் பெரிதாக எண்ணினாரேயொழிய துருக்கிய ஆளும் வகுப்பின் நலன்களைப் பற்றி அவர் அக்கறை கொள்ளவில்லை. துருக்கிய பிரபுக்களுள் திறமையானவர்களை அவர் கொன்று விட்டார். அவர்களிடம் தோன்றியிருந்த கூட்டு வாழ்க்கையை அழித்து விட்டார். எனவே, அவர்களுடன் கல்ஜிக்கள் போட்டியிட்டபோது அவர்களை எதிர் கொள்ள அவர்களுக்கு பலமில்லாது போயிற்று. கல்ஜி புரட்சி வெகு எளிதாக நிறைவேற்றப்படுவதற்கு பால்பனே முக்கிய காரணமாவார். முந்திய துருக்கியர்களுடைய ஆதிக்கத்திற்கு அழிவு தேடியவர் அவரேயாவார். ஆயினும், கல்ஜிக்களின் வெற்றி டில்லி சுல்தானியத்தின் ஆயுட்காலத்தை நீட்டி விட்டதோ டல்லாமல், அதனுடைய ஆதிக்கம் தென்னிந்தியாவிலும் பரவ உதவியது என்பதை அறியும் போதும் பால்பனுடைய கொள்கையின் விளைவுகளின் பெருமை நன்கு விளங்கும்.[1]

அமைதியை நிலை நாட்டுதல்: அமைதி நிலைநாட்டும் பணியை பொறுத்தளவில் பால்பன் நான்கு பகுதிகளில் தீவிரமாக செயற் பட வேண்டியதாயிற்று. முதலில் டில்லியின் சுற்றுப்புற பகுதிகளில் அமைதியை நிலைநாட்டும் பணியினை மேற்கொண்டார். டில்லியின் சுற்றுப்புறப் பகுதிகளில் புதர்களும், காடுகளும் தோன்றி யிருந்தன. அங்கு மீவோக்கள் செல்வாக்குப் பெற்றிருந்தனர். இல்துாத்மிஷுக்குப் பின் அரசாண்டவர்கள் பெரும்பாலும் திறமை யற்றவர்களாக இருந்தமையாலும், திறமை வாய்ந்த ரஸியாவை நிம்மதியாக அரசாள விடாமையாலும், மீவோக்களின் எண்ணிக் கையும் பலமும் பெருகி விட்டன. இரவு வேளைகளில் அவர்கள் டில்லிக்கு வந்து, வீட்டுச் சுவர்களில் கன்னமிட்டு உள்ளே புகுந்து அங்கிருந்தவர்களைப் பலவாறு துன்புறுத்தினார்கள். ஆகவே டில்லி மக்கள் இரவு முழுவதும் பயத்தால் தூங்காது விழித்துக் கொண்டிருந்தனர். மீவோக்களுக்கு பயந்து பிற்பகல் தொழுகை யின்போது மேற்கு வாயில் கதவுகளை மூடி விட்டனர். அதன் பிறகு நகருக்கு வெளியே போக எவருக்கும் தைரியமில்லை. முற் பகற்பொழுதிலும் கூட அடிமைப் பெண்களையும் தண்ணீர் கொண்டு வரும் பெண்களையும் அவர்கள் துன்புறுத்தினார்கள்.

ஓர் ஆண்டு முழுவதையும் பால்பன் மீவோக்களை அடக்கு வதில் செலவிட்டார். முதலில் டில்லியைச் சுற்றி வளர்ந்திருந்த அடர்ந்த காடுகளை அழிக்கலானார். டில்லிக்கு வெளியே தமது

[1] ACHI, p. 286.

பாசறையை அமைத்துக் கொண்டு ஒவ்வொரு நாளும் பல மீவோக்களைப் பிடித்துக் கொன்று வந்தார். கோபால்கீரில் ஒரு கோட்டையைக் கட்டினார். பல தாணுக்களை அமைத்தார். ஒவ்வொரு தாணுவையும் ஆப்கானியர்களிடம் ஒப்படைத்தார். அத்தாணுக்களைப் பராமரிப்பதற்காக அவற்றினுக்களிக்கப் பட்டிருந்த நிலங்களுக்கு வரிவிலக்கு அளிக்கப்பட்டது.

மீவோக்களை அடக்கிய பிறகு சுல்தான் தம் கவனத்தை தோவாப் பகுதிக்குத் திருப்பி விட்டார். தோவாப்பில் வசித்து வந்த கொள்ளைக்காரர்கள் டில்லிக்குச் செல்லும் பாதைகளில் நின்றுகொண்டு அவற்றின் வழியாகச் சென்ற வியாபாரிகளைக் கொள்ளையிட்டு வந்தனர். ஆகவே, வியாபாரம் தடைபட்டது. இந்த நிலைமையைச் சமாளிக்க, பால்பன் தோவாபிலிருந்த நகரங் களையும் கிராமங்களையும் பலமுள்ள இக்தாதாரர்களுக்குப் பகிர்ந்து அளித்தார். கீழ்படியாத கிராமங்களை அழித்துவிட அவர்களுக்கு அதிகாரம் கொடுத்தார். அங்குள்ள ஆண்களைக் கொல்லவும், பெண்களையும் சிறுவர் சிறுமிகளை சிறைபிடிக்கவும் அவர்களுக்கு அனுமதி வழங்கினார். காடுகள் அழிக்கப்பட்டன. மேற்கூறிய நடவடிக்கைகளின் பயனாக தோவாப்பில் அமைதி ஏற்படுத்தப் பட்டது.

அதன் பின்னர் அவுத்திற்குச் செல்லும் சாலைகளில் மக்கள் பயமின்றி செல்வதற்கான முயற்சியை மேற்கொண்டார். கம்பில், படியாலி ஆகிய இடங்களுக்குத் தாமே சென்று ஏறக்குறைய ஆறு மாதங்கள் அங்கு தங்கியிருந்து நிலைமையைச் சீர்படுத்தினார். கொள்ளைக்காரர்களும் கலகக்காரர்களும் அடக்கப் பட்டனர். கம்பில், படியாலி, மோஜ்பூர், ஜலாலி ஆகிய இடங்கள் கொள்ளைக்காரர்களின் தலைமையிடங்களாக இருந்தமையால் அங்கு கோட்டைகளைக் கட்ட உத்தரவிட்டார். அக் கோட்டை களைக் காக்கும் பணியினை ஆப்கானியர்களுக்கு அளித்தார். அந்தக் கோட்டைகளைச் சார்ந்திருந்த பயிர் நிலங்களுக்கு வரி விலக்கு அளிக்கப்பட்டது.

அதையடுத்து கதேஹர் பகுதியில் அமைதியை நிலை நாட்டும் பணியினை மேற்கொண்டார். கதேஹர் கலகக்காரர்கள் டில்லி அரசுக்குச் சொந்தமான கிராமங்களைக் கொள்ளையடித்தும் அழித்தும் வந்தார்கள். பதோன், அம்ரோஹா ஆகிய இடங்களும் அவர்களுடைய தாக்குதலுக்கு இரையாகின. பதோன், அம்ரோஹா ஆகியவற்றின் இக்தாதார்கள் அவர்களை அடக்க இயலாது வேதனையுற்றனர். அவை யாவற்றையும் அறிந்த

பால்பன் ஒரு பெரும் படையைத் திரட்டிக் கொண்டு கதேஹர் நோக்கிச் சென்றார். கதேஹரில் பால்பன் சில நாட்கள் தங்கி யிருந்து அங்கிருந்த எல்லா மக்களையும் அவர் கொன்று விட்டதாக பரணி எழுதியுள்ளார். அவர் குடியானவர்களைக் காப்பதற்காக அங்கு சென்றமையால் கலகக்காரர்களை மட்டுமே அழித்தார் என்று கூறுவது பொருத்தமாகும். அதன் பிறகு அவர் ஜூட் குன்றுகளுக்குச் சென்றார். அங்கிருந்த கலகக்காரர்களையும் அவர் அடக்கினார். அங்கிருந்து ஏராளமான குதிரைகளை டில்லிக்குக் கொண்டு வந்தார். அதன் விளைவாக குதிரைகளின் விலை மிகவும் குறைந்து விட்டது. இவ்வாறாக பேரரசில் அமைதி குன்றியிருந்த பகுதிகளில் ஒழுங்கையும் சட்டத்தையும் நிலை நாட்டினார். இது அவரது சாதனைகளுள் மிகவும் முக்கிய மானதாகும்.

**ஆட்சி முறை பற்றிய நடவடிக்கைகள் :** இராணுவமே அரசாங் கத்தின் முக்கிய தூணாகும் என்ற உண்மையை பால்பன் நன்றாகப் புரிந்து கொண்டிருந்தார். இல்தூத்மிஷ் தோற்றுவித்த இராணுவ அமைப்பு முறை தக்க பயனை அளிக்கவில்லை என்பதை, அவருக்குப் பின் நாட்டில் ஏற்பட்டிருந்த அமைதியின்மையும் மங்கோலியர் களின் வெற்றிகளும் நன்கு புலப்படுத்திவிட்டன. எனவே, இராணு வத்தைத் திருத்தியமைப்பதை பால்பன் தம் முதல் வேலையாகக் கொண்டார். இராணுவத்தினரின் எண்ணிக்கையை உயர்த்தினார். ஆயிரக்கணக்கான விசுவாசமும் அனுபவமும் கொண்ட அதிகாரி களை நியமித்தார். அவர்களுக்கு அளிக்கப்பட்டிருந்த ஊதியத் தொகை உயர்த்தப்பட்டது. சம்பளங்களுக்குப் பதிலாக கிராமங்கள் அளிக்கப்பட்டன. படை வீரர்கள் திருப்தியாகவும் சௌகரியமாகவும் வாழவேண்டும் என்பது பால்பனின் முக்கிய நோக்கமாகும். இராணுவத்திற்காக ஆகும் செலவை சுல்தானுக்கு அவ்வப்போது அறிவித்து வரவேண்டும் என்று போர் அமைச் சருக்குக் கட்டளையிட்டார். இராணுவத்திற்காக ஆகும் செலவை அவர் எப்போதுமே அதிகம் என்று எண்ணியதில்லை. அடிக்கடி இராணுவத்தினருக்கு போர் பயிற்சி அளிக்க ஏற்பாடு செய்தார். ஒவ்வோர் ஆண்டும் பால்பன் ஆயிரம் குதிரை வீரர்கள், ஆயிரம் வில் வீரர்கள் ஆகியோர் புடைசூழ வேட்டைக்குப் போவதாகக் கூறி ரேவாரிக்குச் சென்று டில்லி திரும்புவார். அவரது உள் நோக்கம் படையினருக்கு போர் பயிற்சி அளித்தலேயாகும். தமது போர் நடவடிக்கைகளை அவர் மிகவும் இரகசியமாக வைத்து வந்தார். படை புறப்படுவதற்கு முன்இரவுதான் படைவீரர் களுக்குத் தாங்கள் எங்கு செல்லுகிறோம் என்பதும் எந்த நோக்கத் தோடு செல்கிறோம் என்பதும் தெரியவரும். நாணயமுள்ளவர்கள்,

லக்கமுடையவர்கள் ஆகியோரையே அவர் படையின் நிருவாகிகளாக நியமித்தார். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர் இமத்உல்முல்க் என்பவராவர். பால்பனுடைய படை சிறந்து விளங்கியதற்கு அவர் முக்கிய காரணமாக இருந்தார். இமத்உல்முல்க் தம்முடைய சொந்தப் பணத்திலிருந்து இராணுவ அதிகாரிகளுக்குப் பரிசுகள் வழங்கி வந்தார். பால்பன் தம்முடைய நேர்பார்வையின் கீழ் ஆயிரம்பேர் அடங்கிய ஒரு படையை வைத்திருந்தார். அவர்கள் ஒவ்வொருவரையும் அவர் நன்கு அறிந்திருந்தார். அவர் எங்கு சென்றாலும் அவர்கள் அவர் கூடவே செல்வார்கள். பால்பன் தீர ஆலோசித்தபின்பே படை ஏற்பாடுகளைச் செய்வது வழக்கம். தேவையற்ற போர் நடவடிக்கைகளை அவர் மேற்கொள்ளுவதில்லை. அவர் எல்லா ஏற்பாடுகளையும் செய்துவிட்ட பின்னரே போர் தொடங்குவது வழக்கம்.

இல்தூத்மிஷ் தம் காலத்தில் இக்தாக்களை இராணுவ வீரர்களுக்கு அளித்திருந்தார். தோவாப் பகுதியில் மட்டும் 2,000 துருக்கிய வீரர்களுக்கு இக்தாக்கள் அளிக்கப்பட்டிருந்தன. இக்தாக்களை இரு காரணங்களுக்காக அளித்திருந்தார். இந்தியாவில் துருக்கிய அரசினுக்குப் படை வீரர்கள் ஆற்றிய படைப்பணியினை பாராட்டும் வகையில் அவை அளிக்கப்பட்டன. தோவாப்பில் துருக்கிய ஆதிக்கத்தை நிரந்தரமாக ஏற்படுத்துவதற்காகவும் அவை அளிக்கப்பட்டன. இந்த இக்தாக்களைப் பெற்றவர்களுக்கு ஆட்சிமுறை பற்றிய அதிகாரங்களோ, வரி வசூல் பற்றிய பொறுப்புகளோ வழங்கப்படவில்லை. அவர்கள் அரசுக்கு ஆற்றி வந்த இராணுவ சேவைக்காக சம்பளத்திற்குப் பதிலாக நிலத்திலிருந்து கிடைத்த வருமானத்தின் ஒரு பகுதியைப்பெற்றுவந்தனர். இல்தூத்மிஷ் பலம் பொருந்தியவராக இருந்தமையால் இந்த முறையினால் ஏற்படவிருந்த தீய விளைவுகளை அவரால் தடுக்க இயன்றது. ஆனால், அவருக்குப்பின் வந்தவர்கள் திறமையற்றவர்களாக இருந்தமையால் இக்தா முறையினால் நன்மையைவிடத் தீமையே அதிகமாக ஏற்பட்டது. இக்தா தார்கள் மைய அரசுக்குக் கீழ்படிந்து நடப்பதற்குப் பதிலாக அதனை எதிர்க்கத் தொடங்கினார்கள். அதிகாரங்களை ஒருமுகப்படுத்துவதற்காகக் கொண்டு வரப்பட்ட திட்டம் அதிகாரங்களைப் பரவலாக்குவதற்குப் பயன்படுத்தப்பட்டது. பால்பன், வல்லாட்சியை ஏற்படுத்தும் நோக்கத்தினைக் கொண்டவராக இருந்தமையால் இந்த வகையான போக்கினைத் தடுத்து நிறுத்த முற்பட்டார். அதன் விளைவாக அவர் தோவாப் பகுதியிலிருந்த இக்தாக்களைப் பற்றி ஒரு விசாரணை நடத்தினர். அப்போது இக்தாக்கள் முதலாவதாகப் பெற்றுக்கொண்டவர்களுள் பலர் இறந்து விட்டனர் என்பதையும்,

அவர்கள் இறந்தபின் அவற்றை அவரது சந்ததியார்கள் மரபுரிமையாக அனுபவித்து வருவதையும், எஞ்சியிருந்த முதலாவது இக்தாதார்களுள் பலர் மூப்பு, ஊனம் ஆகிய காரணங் களினுல் படை ஊழியம் செய்யும் நிலையில் இல்லை என்பதையும் அவர் கண்டறிந்தார். இக்தாக்கள் படை ஊழியத்திற்குப் பதிலாக அளிக்கப்பட்டன. அதைப் பெற்றுக் கொண்டவர்கள் அவ்வூழியத்தைச் செய்ய இயலாத நிலை ஏற்பட்டபோது அவற்றை அரசு திருப்பி எடுத்துக் கொள்ளுவதே நியாயமானதாகும் என்று பால்பன் கருதினுர். ஆகவே, அத்தகைய இக்தாக்களை மீண்டும் அரசாங்கத்திற்குத் திருப்பித் தந்து விட வேண்டும் என்றும் அதற்காக அரசாங்கம் நஷ்ட ஈடு அளிக்கும் என்றும் அறிவித்தார். இந்த அறிவிப்பு சிறிய இக்தாதார்களிடையே சலசலப்பை உண் டாக்கியது. அவர்கள் மலிக் பக்ருத்தீனுடைய உதவியை நாடி னுர்கள். அவர்களுடைய சார்பில் பக்ருத்தீன், சுல்தானிடம் வாதாடி அவருடைய மனத்தை மாற்றி விட்டார். அதன் பயனுக அவர் அறிவித்த கட்டளை மீட்டுப் பெறப்பட்டது. இக் தாதாரர்களும் மனமகிழ்ச்சியுற்றனர்.

பால்பன் எதேச்சாதிகார அரசில் நம்பிக்கை கொண் டிருந்தார். எல்லா அதிகாரங்களையும் தம் கைகளிலேயே வைத்திருக்க விரும்பினுர். மேலும், அவையாவற்றையும் மைய அரசாங்கத்தினிடமே ஒருமுகப் படுத்த வேண்டும் என்று எண்ணினுர். அத்தகைய ஆட்சிமுறை வெற்றியடைய வேண்டு மெனில் அதிகாரிகள் திறமையுள்ளவர்களாக இருத்தல் வேண்டும் என்று அவர் கருதினுர். ஆகவே, அரசாங்க அதிகாரிகளை கூடுமான அளவு தாமே நியமித்து வந்தார். சில நேரங்களில் அவருடைய ஒப்புதலின் பேரில் அவர்கள் நியமிக்கப்பட்டனர். மாநில ஆளுநர்கள் அவ்வப்போது மைய அரசுக்கு அறிக்கைகளை அனுப்பி வரவேண்டும் என்று கட்டளையிட்டார். அவர்களுடைய நிதி பற்றிய நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்துவதற்காக ஒரு தணிக்கை முறையை நடைமுறைக்குக் கொண்டு வந்தார். எல்லைப்புறத்தில் இருந்த மாநிலங்கள் தக்கபடியாக ஆளப்பட்டு வரவேண்டும் என்பதற்காகவும் அங்கு கலகங்கள் ஏற்படக் கூடாது என்பதற் காகவும் தம்முடையே பிள்ளைகளையே அவற்றின் ஆளுநர்களாக நியமித்தார். அரசாங்க உயர் அதிகாரிகளிடம் முக்கியமான பொறுப்புகளை அவர் விட்டு வைக்கவில்லை. நயிப்-இ-மம்லாகத் பதவி மறைந்துவிட்டது. வசீருடைய அதிகாரங்கள் குறைக்கப் பட்டன. அவர் வகித்திருந்த இராணுவம், நிதி ஆகியவற்றைப் பற்றிய அதிகாரங்கள் அவரிடமிருந்து நீக்கப்பட்டன. ஆகவே, உயர் அதிகாரிகள் தங்களுடைய உயர் பதவியைப் பயன்படுத்திக்

கொண்டு, பால்பனைப்போல் அரசுரிமையைக் கைப்பற்றிக் கொள்வதென்பது இயலாத காரியமாயிற்று.[1] கலகங்களைத் தடுப்பதற்காக ஓர் அருமையான ஒற்றர் படையை பால்பன் உருவாக்கினார். நாடு முழுவதும் அவர்கள் சென்று செய்தியைச் சேகரித்து சுல்தானுக்கு உடனுக்குடன் அனுப்பி வைத்தார்கள். பரீத்துகளை நியமிப்பதில் அவர் மிகுந்த அக்கறை காட்டினார். அதே நேரத்தில் அவர்கள் சுல்தானை நெருங்க அனுமதிக்கவில்லை. ஏனெனில், அவர்கள் சுல்தானுடன் நெருங்கிப் பழகுவதை பிறர் அறிய நேர்ந்தால் சுல்தானுடைய நம்பிக்கைக்குரிய நண்பர்களும் உறவினர்களும் சுல்தானிடம் அச்சம்கொள்ளத் தொடங்கி விடுவார்கள் என்றும் அதனால் அவர்கள் கலகம் செய்ய நேரும் என்றும் பால்பன் உணர்ந்திருந்தார்.

ஆட்சிமுறையைப் பற்றி பால்பன் கொண்டிருந்த சில கருத்துகளை அவர் தன்னுடைய இரு பிள்ளைகளுக்கு எடுத்துரைத்த அறிவுரைகளின் வாயிலாக அறிகிறோம். அரசாங்கம் மெலியாரை வலியாரிடமிருந்து காப்பாற்றுவதற்குத் தேவையான சட்டங்களை இயற்றுதல் வேண்டும். மக்களிடத்தில் அரசாங்கம் மிகக் கடுமையாகவோ மிகக் கனிவாகவோ நடக்கக் கூடாது. வரிச்சுமை அதிகமாகவோ மிகக் குறைவாகவோ இருத்தல் கூடாது. வரிச்சுமை குறைவாக இருந்தால் மக்கள் கீழ்ப்படியமாட்டார்கள் என்றும் அதிகமாக இருந்தால் அவர்கள் ஏழையாகி விடுவார்கள் என்றும் அவர் எண்ணினார். மக்களுக்குத் தேவையான உணவுத் தானியங்களை உற்பத்தி செய்வது அரசாங்கத்தின் முக்கிய கடனாகும் என்று அவர் கருதினார். அரசாங்கம் தன்னுடைய முடிவுகளை அடிக்கடி மாற்றக் கூடாது. அது மேற்கொண்ட முடிவுகளை சிறிதும் பிறழாமல் நடைமுறைபடுத்த வேண்டும் என்றும் அவர் கூறினார். அரசாங்கம் தன்னுடைய வருவாயில் பாதிக்கு மேல் செலவழிக்கக் கூடாது என்றும், படைவீரர்களுக்கு சம்பளம் ஒழுங்காகக் கொடுத்து வரவேண்டும் என்றும் அவர் அறிவித்தார். வியாபாரிகள் வளமுடன் வாழச் செய்வதும் அரசாங்கத்தின் கடமையாகும் என்றார்.[2] மேற்கண்ட கொள்கைகளின் அடிப்படையில் பால்பன் பலம் பொருந்திய ஓர் அரசை நிறுவினார். நாட்டில் அமைதியையும் நீதியையும் நிலை நாட்டினார். சாதாரண மக்களை தம் அருகில் வரவும் பேசவும் அவர் அனுமதிக்கவில்லையென்றாலும் அவர்களிடம் கருணையுடன் நடந்து கொண்டார். பொது மக்களுடைய நன்மையில் அவர்

[1] ACHI, p. 290.

[2] ACHI, p. 291.

கண்ணும் கருத்துமாக இருந்தார். அவர்களிடம் தந்தைக்குரிய பாசத்துடன் நடந்து கொண்டார். மலிக்குகள், அமீர்கள் ஆகியோரிடம் அவர் காட்டிய கடுமையை சாதாரண மக்களிடம் காட்டவில்லை என்பது மேற் கூறியவற்றிலிருந்து விளங்கும்.[1]

**பால்பனும் துக்ரீல்கானும்**

பால்பனுடைய ஆட்சிக் காலத்தில் இரண்டு குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகளே நடைபெற்றன. அவை துக்ரீல்கானுடைய கலகம், மங்கோலியர் படையெடுப்பு. அவர் காலத்தில் டில்லி சுல்தானியத்தின் எல்லையை விரிவு படுத்தும் முயற்சி ஏதும் மேற் கொள்ளப்படவில்லை. அதற்கு ஒரு காரணம் அவர் போர்த் திறமை பெற்று இராமையேயாகும். அவர் சுல்தானகப் பதவி ஏற்பதற்குமுன் பல போர் நடவடிக்கைகளை முன்னிருந்து நடத்தினர் என்பது உண்மையே. ஆயினும், அவர் மாபெரும் வெற்றியேதும் அடைந்ததாக நமக்குத் தெரியவில்லை. மேலும் அவர் பட்டமெய்தியபோது மங்கோலியர் படையெடுப்பும் இந்து அரசர்களின் சுதந்திர வேட்கையும் டில்லி அரசுக்கு ஆபத்து விளைவிக்க வல்லனவாக இருந்தன. கொள்ளைக்கார பயமும் அதிகமாக இருந்தது. இந்நிலையில் புதிய நாடுகளை வெல்லுவது விவேகமான செயலாக பால்பனுக்குத் தெரியவில்லை. மேலும், திறமை மிக்க அதிகாரிகள் போதுமான அளவில் இருக்கவில்லை. ஏற்கனவே வெல்லப்பட்டிருந்த பகுதிகளைக் காப்பதற்கு வேண்டிய படை பலமும் இல்லை. இந்த நிலையில் புதிதாக நாடுகளை வெல்லு வதால் பயன் இல்லை என்று எண்ணினர். ஆகவே, ஏற்கனவே வெல்லப்பட்ட நாடுகளில் தம்முடைய அதிகாரத்தை நிலை நாட்டு வதைவிடுத்து புதிதாக நாடுகளை வெல்ல முயற்சிப்பது அறிவீனம் என்பதால் நாடுபிடிக்கும் கொள்கையை அவர் கையாளவில்லை. ஆகவேதான் அரசியல் நிகழ்ச்சிகள் அதிகமான அளவில் ஏற்பட வில்லை.

இனி துக்ரீல்கானுடைய கலகத்தைப்பற்றிக் கவனிப்போம். பால்பன் பட்டமேறியபோது தாதார்கான் லக்னோதியின் ஆளுந ராகப் பணியாற்றி வந்தார். அவர் அர்சலன்கானினுடைய மகன். பால்பனுக்கு 63 யானைகளைப் பரிசாக அனுப்பி பால்ப னுடைய அன்பைப் பெற்றார். அவருக்குப்பின் துக்ரீல்கான் ஆளுந ரானர். அவர் பால்பனுடைய அடிமைகளுள் ஒருவர். மிகவும் திறமை வாய்ந்தவர்; தைரியமிக்கவர். அவர் 1275ஆம் ஆண்டில் கலகம் செய்ததாகக் கூறப்படுகிறது. அதற்கு முன்னர் அவர் ஜாஜ் நகர் மீது படையெடுத்துச் சென்று பெருஞ் செல்வத்தைக் கொள்ளையடித்து வந்தார். அதனைச் சுல்தானுக்கு அனுப்பி

[1] *ibid*, p. 292.

வைப்பதற்குப் பதிலாக அச் செல்வம் முழுவதையும் தாமே எடுத்துக் கொண்டார். அதையடுத்து அவர் முயீஸ் உத்தீன் என்ற பெயருடன் லக்னோதியின் சுல்தானக பட்டம் சூட்டிக் கொண்டார். தம் பெயரில் நாணயங்களை அவர் வெளியிட்டார். அவர் பெயரில் குத்பா வாசிக்கப்பட்டது. அவுத்தின் ஆளுநரான அமீன் கானுக்கு பால்பன் உடனே தூதுவரை அனுப்பி அவரைத் துக்ரீல்கான்மீது போர் தொடுக்குமாறு கட்டளையிட்டார். போர் அனுபவம் முதிர்ந்த மலிக்குகள் தொடர, ஒரு பெரும் படையுடன் அமீன்கான் லக்னோதி நோக்கிப் புறப்பட்டார். அமீன்கானும் துக்ரீல்கானும் ஒருவரோடொருவர் கைச்சண்டையிட்டனர். அமீன்கான் தோற்கடிக்கப்பட்டார். அவருடன் வந்த மலிக்கு களுள் சிலர் பணம் பெற்றுக் கொண்டு துக்ரீல்கான் பக்கம் சேர்ந்துகொண்டனர். ஏனையோர் டில்லிக்குத் திரும்பினார்கள். அவர்களுடைய தோல்வியை அறிந்த பால்பன் எல்லையில்லா கோபம் கொண்டு அமீன்கானைக் கொன்று விட்டார். அவருடைய சவத்தை அவுத் நகரவாயிலின் முன் கழியின் மீது தொங்க விட்டார். அதன் பிறகு பகதூர் தலைமையின்கீழ் மற்றொரு படையினை லக்னோதிக்கு அனுப்பி வைத்தார். பகதூர் வீராவேசத் துடன் போரிட்டார். ஆயினும் முடிவில் துக்ரீல்கானே வெற்றி பெற்றார். பகதூரையும் பால்பன் கொன்று விடத் தீர்மானித்தார். ஆனால் பகதூருடைய நண்பர்கள் அவர் வீரத்துடன் போர் புரிந்தார் என்பதை விளக்கமாக எடுத்துக் கூறி பால்பனின் கோபத்திலிருந்து அவரை மீட்டார்கள். அதையடுத்து பால்பன் தாமே லக்னோதி செல்வதென்ற முடிவுக்கு வந்தார். 1280-81 ஆம் ஆண்டில் அவர் படையுடன் புறப்பட்டுச் சென்றார். அது போது தமது இரண்டாவது மகனை புக்ராகானையும் கூடவே அழைத்துச் சென்றார். அவுத்தை அடைந்ததும் படைக்கு ஆள் சேர்க்க உத்தரவிட்டார். ஏறக்குறைய 2 இலட்சம் பேர் அதில் சேர்ந்தனர். பால்பனே பெரும்படையுடன் வந்து கொண்டிருக்கும் செய்தியை அறிந்ததும் துக்ரீல் ஹாஜி நகருக்கு ஓடினார். லக்னோதி எளிதில் கைப்பற்றப் பட்டது. லக்னோதியை ஹசா முத்தீனுடைய பொறுப்பிலே விட்டு விட்டு பால்பன் சோனர் காவுள் சென்றார். அதனுடைய அரசர் பால்பனுக்கு அடிபணிந்தார். அங்கிருந்து பால்பன் ஹாஜி நகர் நோக்கிச் சென்றார். அப்போது முன்னணிப் படையை நடத்திக் கொண்டுச் சென்ற மலிக் பெக்தாஸ், மலிக் முகமது ஷெரன்தாஸ் என்பவரை அனுப்பி துக்ரீல் இருக்கும் இடத்தை அறிந்துவரச் சொன்னார். துக்ரீல் இருந்த இடம் கண்டுபிடிக்கப்பட்டது. வரவிருந்த ஆபத்தைப் பற்றி ஏதும் அறியாத துக்ரீல் திடீரெனத் தாக்கப்பட்டபோது அவர் தப்பித்துச் செல்ல முற்பட்டார். அவரைப் பின்தொடர்ந்த மலிக்

முக்காதரும், அலியும் அவரைக் கொன்று விட்டனர். பால்பன் லக்னோதியை அடைந்ததும் அங்காடியின் இருமருங்கிலும் 2 மைல் தூரத்திற்கு கழு மரங்களை நடச் செய்து அவற்றின்மீது துக்ரீலுடைய ஆதரவாளர்களை ஏற்றிக் கொன்றார். இந்த வகையான தண்டனைகளை வேறெந்த சுல்தானும் அளிக்கவில்லை என்று ஒரு வயதான அதிகாரி பரணிக்குக் கூறியதாக நம் வரலாற்றாசிரியர் கூறுகிறார். புக்ராகான் லக்னோதியின் ஆளுநராக நியமிக்கப் பட்டார். டில்லி அரியணையில் யார் அமர்ந்தாலும் சரி, அவருக்குக் கீழ்படிந்து நடக்க வேண்டும் என்று புக்ராகானுக்கு அறிவுரை கூறி விட்டு பால்பன் டில்லி திரும்பினார். டில்லி திரும்பியதும் துக்ரீலை ஆதரித்த டில்லிப் படை வீரர்களையும் அவர் கழுவிலேற்றிக் கொல்லுமாறு உத்தரவிட்டார். இறுதியில் அவர்களை மன்னித்து விட்டார். துக்ரீலுடைய கலகம் தோல்வியுற்றது. ஆயினும் அது துருக்கிய அடிமை முறை எந்த அளவு பேரரசுக்குப் பயனில் லாமல் போய்விட்டது என்பதைப் புலப்படுத்திவிட்டது. பேரரசை விசுவாசத்துடன் காக்க வேண்டிய அடிமைகள் கலகம் செய்யத் துணிந்து விட்டபின் பேரரசு அழியாமல் எங்ஙனம் நிலையாக நிற்க முடியும்?

### பால்பனும் மங்கோலியர்களும்

பால்பனுடைய ஆட்சிக் காலத்தில் மங்கோலியர்கள் இந்தியாவை வென்று அதனைத் தம் ஆட்சியின் கீழ்க் கொண்டு வருவதற்கு முயற்சி செய்யவில்லை. ஆயினும், அடிக்கடி இந்தியா வின்மீது படையெடுத்து வந்து இந்தியாவை நாசமாக்கிவிட்டுத் திரும்பிச் செல்லும் பழக்கத்தை மட்டும் அவர்கள் கைவிடவில்லை. ஆகவே, வடமேற்கு எல்லைப் பகுதியில் வாழ்ந்துவந்த மக்களுக்கு மங்கோலியர் பயம் எப்போதும் இருந்துகொண்டே வந்தது. பால்பன் எல்லைப்புற மக்களைப் பாதுகாக்க தக்க நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டது. மேற்கு எல்லைப் புற மாநிலங்களை பிறர் கைகளில் ஒப்படைப்பதில் உண்டாகும் ஆபத்தை பால்பன் நன்கு அறிவார். எல்லையில் இருந்த ஆளுநர் களுக்கு அதிகமான அதிகாரங்களும் படைப் பலமும் அளிக்கப் பட்டிருந்தமையால் அவர்கள் சுல்தானை வெற்றிகரமாக எதிர்க்கக் கூடிய நிலையில் இருந்தனர். எல்லைப்புற மாநில ஆளுநர் பதவி யானது சுல்தானுடைய பதவியை எட்டிப் பிடிக்க பயன்படுவதாக கருதப்பட்டது. ஆகவே, அத்தகைய பயனை பிறர் அடைவதைவிட தம் பிள்ளைகள் அடைவதே சரியாகும் என்றறிந்து அவற்றைத் தம் இரு பிள்ளைகளுக்கும் பகிர்ந்தளித்தார். மூத்த பிள்ளையான முகமது மிகவும் திறமை வாய்ந்தவர். கல்வி கேள்விகளில் சிறந்து

விளங்கினர். அமீர் குஸ்ரூ போன்ற கவிஞர்கள் அவருடைய ஆதரவைப் பெற்றிருந்தார்கள். மூல்தான், ஊச் ஆகிய பகுதிகள் அவருடைய பாதுகாப்பில் விட்டுவைக்கப்பட்டன. சுனும், சமானு ஆகியவை அவருடைய இரண்டாவது மகனான புக்ரா கானுக்கு அளிக்கப்பட்டன. முகமதுவைப் போல அவர் திறமை யானவராக இராமையினால் பால்பன் பரீத்துகளை நியமித்து புக்ரா கானுடைய நடவடிக்கைகளைத் தமக்கு அவ்வப்போது அறிவித்து வரும்படி கூறினர். தலைநகரில் பர்பெக் பெக்தார்ஸ் என்பவரின் தலைமையின் கீழ் ஒரு பெரும் படையைத் தயாராக வைத்தி ருந்தார். மங்கோலியர்கள் படை நடத்தி வரும்போது மூல்தானி லிருந்து முகமதுவும், சமானுவிலிருந்து புக்ராகானும், டில்லியி லிருந்து பர்பெக் பெக்தார்ஸும் மூன்று திசைகளிலிருந்து புறப் பட்டு மங்கோலியர்களை விரட்டவேண்டும் என்று ஏற்பாடு செய்தார். இவர்கள் ஒவ்வொருவரும் ஏறக்குறைய 18,000 குதிரை வீரர்களை வைத்திருந்தார்கள். அவர்களுடைய நடவடிக்கைகளின் விளைவாக பலமுறை மங்கோலியர்கள் தோல்வியைக் கண்டனர். புக்ராகானை லக்னோதி ஆளுநராக மாற்றிவிட்ட பிறகு பால்பன் சுனும், சமானு ஆகியவற்றை முகமதுவிற்கே கொடுத்து விட்டார்.

அதன் பிறகு இரண்டு மங்கோலிய படையெடுப்புகள் நடை பெற்றன. அவர்களை எதிர்கொள்ள முகமது தம் படைகளை அனுப்பி வைத்தார். தண்டி கன்டாலி என்னுமிடத்தில் நடந்த போரில் மங்கோலியர்கள் வெற்றி பெற்றனர். 1285ஆம் ஆண்டில் சும்ரா சாதியினர்கள் கலகம் செய்தனர். அவர்களை அடக்க முகமது படையுடன் சென்றார். அச் சமயத்தில் மங்கோலி யர்கள் மீண்டும் டில்லி சுல்தானியத்தைத் தாக்கினர்கள். தமர் அவர்களுக்குத் தலைமை தாங்கினர். அவரது நடமாட்டங்களை வெகு இரகசியமாக வைத்திருந்தமையால் அவர் முகமது இருக்கு மிடத்திற்கு வெகு அருகே வரும்வரை முகமதுவிற்கு அவரது படை யெடுப்புப் பற்றி தெரியாது போயிற்று. அந்த இக்கட்டான நிலையில் முகமதுவின் இராணுவ அதிகாரிகள் அவரை முல்தானுக் குச் சென்று விடும்படி கூறினர்கள். அவர்களுடைய உயிரைவிட முகம்மதுவின் உயிர் மிகவும் உயர்ந்தது என்று அவர்கள் கருதி னர்கள். ஆனால் முகமது அந்த நிலையில் போர்க்களத்தை விட்டு விடுவதால் ஏற்படவிருந்த மானக்கேட்டைவிட உயிரிழப்பது மேல் எனக் கருதி போர் புரிந்தார். போரில் முகமது கொல்லப் பட்டார். வழக்கம்போல் மங்கோலியர்கள் பெரும் பொருளைக் கொள்ளையடித்துக் கொண்டு டில்லி பேரரசை விட்டு அகன்றனர்.

முகமது இறக்கும்போது பால்பன் 80 வயதை எட்டிவிட்டார். பால்பனின் இரண்டு பிள்ளைகளுள் முகமதுவே திறமையானவர்.

அவரை இழந்த பிறகு பால்பன் தாளமுடியாத வேதனையை அடைந்தார். அதிலிருந்து அவர் மீளவே முடியவில்லை. இறப்பதற்கு முன் பால்பன் புக்ராகானை டில்லிக்கு வரவழைத்து அவருக்கு அரசுரிமையைத் தருவதாகக் கூறினார். ஆனால், டில்லியில் புக்ராகானுக்கு இருக்கப் பிடிக்கவில்லை. எனவே, அவர் லக்னோதிக்கு திரும்பிவிட்டார். புக்ராகானின் கருத்தைப் புரிந்துகொண்ட பால்பன் முகமதுவின் பிள்ளையான கைக்குஸ்ருவை தம்முடைய வாரிசாக நியமித்தார். ஆனால், மக்கள் முகமதுவிடம் பற்றுக் கொண்டிருக்கவில்லை என்பதை மலிக்குகள் புரிந்துகொண்டனர். எனவே கைக்குஸ்ருவை சுல்தானாக பதவியில் அமர்த்துவதால் ஏற்படவிருந்த குழப்பத்தைத் தடுக்க பால்பன் இறந்த பிறகு புக்ராகானின் மகனை கைக்குபாத்தை சுல்தானாகத் தேர்ந் தெடுத்தனர்.

மதிப்பீடு: இடைக்கால இந்திய வரலாற்றிலே பால்பன் சிறப்பு மிக்க இடமொன்றைப் பெற்றுள்ளார். 40 ஆண்டுகளுக்கு மேலாகப் பொது வாழ்க்கையில் இடைவிடாது உழைத்து அவரைப் போல பெருமை அடைந்தவர்கள் இடைக்கால இந்தியாவிலே தோன்றவில்லை என்று உறுதியாக நாம் கூற இயலும். பால்பன் பல போர்களைச் செய்துள்ளார். ஆயினும், அவரை சிறந்த போர் வீரராகக் கொள்ள இயலாது. அவர் அடைந்த வெற்றிகள் மிகச் சாதாரணமானவையாகும். பால்பனை ஒரு சிறந்த அரசியல் மேதை என்று சிலர் கூறுகின்றனர். அரசியலில் அவர் புரிந்த சாதனைகளுள் மிகச் சிறந்தது அமைதியை நிலைநாட்டுதலாகும். அவர் பட்ட மெய்திய போது சுல்தானுடைய அதிகாரத்தை மதித்து நடக்கக் கூடியவர்களை நாம் விரல் விட்டு எண்ண முடியும். ஆட்சிப் பொறுப்பை ஏற்றிருந்தவரிடத்தில் எவரும் அச்சங்கொள்ளவில்லை. எங்கும் கலகங்களும் கொள்ளைகளும் தடங்கலின்றி நடைபெற்றன. அவற்றை ஒழித்து அரசரிடம் மரியாதையையும் பயத்தையும் மக்களிடம் தோற்றுவித்தவர் பால்பனே என்பதில் ஐயமில்லை. பொதுமக்களுடைய கண்களுக்கு அரசர் தெய்வீகம் பொருந்தியவ ராகக் காட்சியளிப்பதற்கு என்னென்ன முயற்சிகளை மேற்கொள்ள வேண்டுமோ அவ்வளவையும் அவர் மேற்கொண்டார். கொள் ளையர், திருடர் ஆகியோரை ஒழித்து மக்களுக்கு நிம்மதியை உண்டாக்கினார். ஏற்கெனவே வெல்லப்பட்ட நாடுகளை மைய அரசுடன் நெருக்கமாக பிணைத்து அதனுடைய மேலாதிக்கத்தை ஏற்கச் செய்தார். அதிகாரங்களை மைய அரசாங்கத்திடம் ஒரு முகப்படுத்தினார். அதன் விளைவாக, மைய அரசு மிகவும் பலம் பொருந்தியதாக மாறியது. இந்த வகையான முன்னேற்பாடுகளை பால்பன் செய்யவில்லையென்றால் டில்லி சுல்தானியத்தின் தெற்கு

எல்லை கல்ஜிக்கள் காலத்தில் மேலும் விரிவடைந்திருக்க இயலாது. மங்கோலியர்கள் இந்தியாவைக் கைப்பற்றி தங்களுடைய ஆட்சியை டில்லியில் அமைக்க கல்ஜிக்கள் காலத்தில் முற்பட்ட போது அவர்களுடைய முயற்சியை சின்னுபின்னமாக்கி இருக்கவும் முடியாது. ஆகவேதான் பால்பனை அலாவுத்தீனுடைய முன்னோடி என்று கூறுகிறோம். கல்ஜி வல்லாட்சிக்கு வித்திட்டவரும் பால்பனேயாவார். மேலும் 'நாற்பது அடிமைகள்' என்ற நிறுவனத்தை பால்பன் ஒழித்துக் கட்டினார். சுல்தானுடைய ஆதிக்க வளர்ச்சிக்கு இடையூருக இருந்த ஒரு தடையை அகற்றி விட்டார். அதன்பயனுக டில்லி சுல்தானியத்தினுடைய வாழ்நாள் நீடிக்கப்பட்டது.

ஆயினும், அவர் சில தவறுகளைச் செய்துள்ளார். அக்காலத்தில் வளர்ச்சிபெற்று வந்த இருபெரும் இயக்கங்களுக்கேற்ப அவரது அரசியல் கொள்கையை அமைக்காதது ஒரு பெருங் குறையாகும். இந்தியாவில் இஸ்லாமிய மதம் வேகமாக பரவி வந்தது. பல இந்தியர்கள் இஸ்லாமிய மதத்தைத் தழுவிக்கொண்டார்கள். அவர்கள் ஆட்சியில் பங்கு பெற துடித்தனர். ஆனல், பால்பன் ஆட்சி உரிமை உயர் குலத்தோருக்கே உரியது என்று கூறி வந்தார். உயர் குலத்தினர் என்பது துருக்கிய அடிமைகளையும், அவர்களுடைய சந்ததியார்களையும், அன்னிய நாட்டு முஸ்லிம்களையுமே குறிக்க பயன்படுத்தப்பட்டது. இந்திய முஸ்லிம்கள் இழிகுலத்தோராகக் கருதப்பட்டனர். இந்த வகையான இனவெறி டில்லி சுல்தானியத்திற்கு நன்மையைவிடத் தீமையையே உண்டாக்கியது. ஒரு காலத்தில் இன அடிப்படையில் அரசு அமைக்கப்பட வேண்டியதாக இருந்தது. இந்தியாவை வெல்லுவதற்கு அது துணை புரிந்தது. இன உணர்ச்சியின் உதவியால் தான் வென்ற நாடுகளை அவர்களுடைய ஆதிக்கத்தின் கீழ் வைத்திருக்க இயன்றது. இடைவிடாது துருக்கியர்கள் இந்தியாவிற்கு வந்த வண்ணமாக இருந்தபோது ஆட்சி செலுத்துவதற்கு வேண்டிய ஆள்பலம் கிடைத்துவந்தது. பால்பன் பட்டமெய்தியபோது நிலைமை மாறிவிட்டது. வெளியில் இருந்து துருக்கியர் வருவது படிப்படியாக குறைந்துவிட்டது. இஸ்லாம் மதத்தை ஏற்றுக் கொண்ட இந்தியர்களின் எண்ணிக்கை நாளுக்குநாள் வளர்ந்து வந்தது. மங்கோலியர்களுடைய படையெடுப்புகளும் நாள் தோறும் பெருகி வந்தது. இந்த நிலையில், எண்ணிக்கையில் குறைந்துவிட்ட துருக்கிய அடிமைகளைக் கொண்டு அவர்களை சமாளிப்பதென்பது இயலாத காரியமாகத் தோன்றியது. துருக்கியர், இந்திய முஸ்லிம்கள் ஆகியோர் கலந்து செயற்பட்டாலன்றி இஸ்லாமிய அரசை நிலைநிறுத்த இயலாது என்ற ஒரு சாதாரண

உண்மையை பால்பன் புரிந்து கொள்ளவில்லை.[1] அதிர்ஷ்டவசமாக கல்ஜிக்கள் அதனை நன்கு புரிந்துகொண்டு அதற்கேற்றவாறு அரசியல் கொள்கையை வரையறுத்து வெற்றி கண்டனர்.

இரண்டாவதாக, இந்துக்கள் பலர் பாரசீக மொழியைக் கற்று வந்தனர். ஆட்சி முறை சரிவர நடத்தப் பெருமைக்கு ஒரு காரணம், போதுமான அளவு ஆள் பலமின்மையேயாகும். வரி வசூலிக்கும் விஷயத்தில் மொழி ஒரு பெரிய தடையாக இருந்தது. ஆட்சியாளருக்கு பாரசீக மொழி மட்டுமே தெரியும், வரி செலுத்து பவர்களுக்கு உள்ளூர் மொழி மட்டுமே தெரியும். இப்போது அந் நிலை மாறி விட்டது. இரண்டு மொழிகளையும் தெரிந்து கொண் டிருந்த இந்துக்களை அரசாங்கப் பணியில் அமர்த்துவதால் அரசாங்கக் காரியங்களை எளிதில் நிறைவேற்ற இயலும் என்பதை யும் வேறு பல புதிய திட்டங்களை அரசாங்கம் மேற்கொள்ள இயலும் என்பதையும் பால்பன் அறியவில்லை. ஆகவே, இந்துக்களை அவர் தக்க வழியில் அரசு காரியங்களில் ஈடுபடுத்தவில்லை. அக் காலத்தில் சிவில் பணியில் ஈடுபட்டிருந்தவர்கள் இராணுவப் பணியிலும் ஈடுபட்டிருந்தனர். ஆகவே, சிவில் பணிக்கு ஆள் இல்லையெனில் இராணுவ பணிக்கும் ஆள் இல்லாது போகும். இவர் ஆட்சிக்காலத்தில் மங்கோலியர்கள் வெற்றி பெற்றமைக்குக் காரணம் எண்ணிக்கை பலமேயாகும் என்று இசாமி கூறுகிறார். 40,000 பேர்களை சமாளிக்க அதற்கு மேலான படையை டில்லி சுல்தான்கள் திரட்ட இயலவில்லை. துருக்கியர், அன்னிய முஸ்லிம்கள் ஆகியோரைக் கொண்டே பால்பன் ஆட்சி நடத்த முயற்சி செய்தார் என்பதே அதற்குக் காரணமாகும். அலாவுத்தீன் திறமை, பற்று ஆகியவற்றினுக்கு மதிப்பு கொடுத் தாரேயொழிய இனத்திற்கு மதிப்புக் கொடுக்கவில்லை.

பால்பன் இஸ்லாமிய மதத்தில் மிகுந்த பற்று கொண்டிருந் தார். அவர் சுன்னி மதத்தைப் பின்பற்றிவந்தார். சமயக் கடன்களை வழுவாது நிறைவேற்றிவந்தார். முஸ்லிம் ஞானிக ளுடன் நெருங்கிப் பழகிவந்தார். அவர் ஏனைய மதத்தினரைத் துன்புறுத்தினார்.

ஈவு இரக்கமின்றி பலரைக் கொன்று குவித்திட்ட பால்பன் கல்வியையும் கலையையும் போற்றினார் என்பதை அறியும்போது நாம் வியப்படைகிறோம். அவருடைய அரசவையில் பல அறிஞர்கள் இருந்தனர். அவர்களுக்குத் தாராளமாக உதவி செய்தார். கட்டிடக் கலையில் அவருக்குத் தனி முறையான ஆர்வம் ஏற்பட்டிருந்தது.

[1] Dr. Habibullah, The Foundation of Muslim Rule in India, pp. 179-81

அடிமை அரசர்களுள் மிகச்சிறந்தவர் பால்பனு, இல்தூத்மிஷா என்ற கேள்வி வரலாற்றுசிரியர்களிடையே தோன்றியுள்ளது. இல்தூத்மிஷ் தான் மிகச் சிறந்தவர் என்பதற்காக காரணங்களை முன்னரே கூறியுள்ளோம். பால்பன் மிகச் சிறந்தவர் என்பதற்கு சில காரணங்கள் கூறப்படுகின்றன. அவற்றுள் முக்கியமானது நாட்டில் அமைதியை ஏற்படுத்தியது. அதைப் பற்றி முன்பே கூறியுள்ளோம், அடுத்தது சுல்தானுடைய மதிப்பை உயர்த்தியது இல்தூத்மிஷ் காலத்தில் சுல்தான் துருக்கிய அடிமைகளுள் முதல்வராகக் கருதப்பட்டார். கடவுளுடைய அருள் பெற்றவர் அரசர் என்று கூறி அரசராக அனைவரிலும் மேம்பட்டவராக்கினார். துருக்கிய அடிமைகளை ஒழித்து அரசருடைய அதிகாரம் பெருகுவதற்கு உதவி செய்தார். அவரை மிகச் சிறந்தவராகக் கொள்ளாதற்குக் கூறப்படும் காரணங்களை சற்று கவனிப்போம். இல்தூத்மிஷினுடைய சந்ததியார்கள் 30 ஆண்டுகள் ஆட்சி செலுத்துமளவிற்கு மக்களுடைய அன்பை இல்தூத்மிஷ் சம்பாதித்து விட்டார். அதற்குப் பிறகுகூட அவருடைய சந்ததியார்களே ஆட்சி நடத்த அருகதையுள்ளவர்கள் என்று மக்கள் நினைத்து வந்தனர். ஆனால் பால்பனுடைய சந்ததியார்கள் பால்பன் இறந்த மூன்று ஆண்டுகளுக்கு மேல் ஆட்சி செய்ய இயலவில்லை. பால்பனுடைய கொடூரச் செயல்கள் மக்களுடைய வெறுப்பை சம்பாதித்து விட்டன. இல்தூத்மிஷ் போன்று பால்பன் போரில் சிறந்து விளங்கவில்லை. ஓர் அடிமை துவக்கிய கலகத்தை அடக்கவே அவருக்கு ஆறு ஆண்டுகள் பிடித்தன. இந்து அரசர்களுடன் போரிட்டு அவர்களை வென்றதாக நமக்குக் குறிப்புகள் கிடைக்கவில்லை. மங்கோலியர்கள் டில்லிப் படைகளை பல முறை தோற்கடித்தனர். அவர்கள் நினைத்திருந்தால் டில்லியைக்கூட கைப்பற்றியிருக்கக்கூடும். அவர் சிறந்த அரசியல் மேதையும் அல்ல. அதற்குரிய காரணங்களை முன்னரே கூறியுள்ளோம். மிகப்பெரியது, மிகவும் நன்றானது என்று சொல்லக் கூடிய சாதனைகள் ஒன்றையும் அவர் நிறைவேற்றவில்லை. எனவே அவரை அடிமை அரசர்களுள் மிகச் சிறந்தவராகக் கருத இயலாது.

## முயீஸ் உத்தீன் கைக்குபாத் (1287-1290)

கைக்குபாத் பட்டமெய்திய போது அவருக்கு வயது 17 அல்லது 18 இருக்கும். அழகான தோற்றமுடையவராக இருந்தார். பால்பன் அவரை மிகவும் கட்டுப்பாடுடன் வளர்த்து வந்திருந்தார். மாது, மது ஆகியவற்றில் அவருக்கு பிடிப்பு ஏற்படாதவாறு அவருடைய ஆசிரியர்கள் அவரை மிக்ககவனமாக

பாதுகாத்து வந்தனர். எல்லா கலைகளிலும் நன்கு தேர்ச்சி பெற்றிருந்தார். ஆனால் பட்டமெய்திய பிறகு அவர் தம் காலத்தை மது அருந்துவதிலும் மங்கையருடன் கொஞ்சி விளையாடுவதிலும் செலவழித்தார். அவருடைய அரசவையில் கோமாளிகளும், நடனமாதர்களும், பாடகர்களும் சிற்றின்பப் பிரியர்களும் நிறைந்திருந்தனர். கைலூகரியில் ஓர் அழகான அரண்மனையைக் கட்டிக்கொண்டு அங்கு இன்ப வாழ்க்கையை வாழ்ந்துவரலானார். அரசாங்கக் காரியங்களை கவனிக்க அவருக்கு நேரமில்லாது போயிற்று. அதிர்ஷ்டவசமாக டில்லி சுல்தானியத்தைப் பாதுகாக்க இரண்டு திறமை வாய்ந்த அதிகாரிகள் தேகன்றியிருந்தனர். மலிக் நிஜாமுத்தீன், மலிக் காவாமுத்தீன் இலகாதாபீர். அறிவிலும், ஆற்றலிலும் அவர்கள் சிறந்து விளங்கினார்கள். அவர்களுள் நிஜாமுத்தீன் அரசாங்கக் காரியங்களை கவனித்து வரலானார். டில்லியின் கொத்வாலாக பணியாற்றி வந்த பக்ரூத்தீனுடைய மருமகனே நிஜாமுத்தீன் ஆவார். தாத்பெக் என்ற பதவியை அவர் வகித்து வந்தபோதிலும் நடைமுறையில் சுல்தானுடைய உதவியாளராக இருந்து அரச அதிகாரங்களை அவரே செலுத்தி வந்தார். அவருடைய மனைவி அரண்மனையை கட்டுப்படுத்தி வந்தார். நாளடைவில் நிஜாமுத்தீன் தன்னிகரின்றி விளங்கலானார். அத்தகைய நிலையை அடைந்தபோது அவருடைய ஆசைகள் பெருகத்தொடங்கின. தாமே சுல்தானாக வேண்டும் என்ற எண்ணம் அவரிடம் வளரலாயிற்று. அதன் விளைவாக அவர் பல கொலைகளுக்குக் காரணமானார். கைக்குஸ்ரூவின் மரணத்திற்கு அவரே காரணமாக இருந்தார் என்று சிலர் கூறுகின்றனர். கைக்குஸ்ரூ அரசபதவியை மங்கோலியருடைய துணைகொண்டு பெறுவதற்காக மூல்தானிலிருந்து கஜினிக்கு சென்றார் என்றும், பின்னர் அங்கிருந்து மங்கோலிய நாட்டிற்கு சென்றார் என்றும், விரும்பிய உதவி கிடைக்காமையால் அவர் இந்துஸ்தானம் திரும்பினார் என்றும், அரசப் பதவியை பெறுதற்கு அன்னியருடைய உதவியை நாடுவதற்கும் தயக்கங்கொள்ளாத ஒருவரை உயிருடன் விட்டு வைப்பது சரியல்ல என்று நிஜாமுத்தீன் கைக்குபாத்திற்குக் கூறினார் என்றும், அதனால் அவர் கொல்லப்பட்டார் என்றும் வேறு சில வரலாற்றாசிரியர்கள் கூறுகின்றனர்.[1] அப்போது வசீராக இருந்த குவாஜா கதீர் என்பவரை கழுதை மீது ஏற்றி டில்லி நகரவீதிகளில் ஊர்வலமாக அழைத்துச் செல்லும்படி உத்தரவிட்டார். இந்த வகையான கொடுஞ் செயல்கள் ஏனைய துருக்கிய மலிக்குகளுக்கு அச்சத்தை விளைவித்தன. எனவே அவர்கள்

[1] Isam. p. 190-2.

நிஜாமுத்தீனை வெறுத்தனர். அவர்களுடைய வெறுப்புணர்ச்சியைப் புரிந்து கொண்ட நிஜாமுத்தீன் அவர்களுள் முக்கியமானவர்களைத் தீர்த்துக்கட்ட முடிவு செய்தார். ஒருநாள் கைலூகரியில் ஓர் அரசகொலுவிற்கு ஏற்பாடு செய்து அங்கு மங்கோலியர்களை டில்லிப் படைகள் தோற்கடித்தன என்ற பொய்யான செய்தியை வாசித்தளித்தார். மங்கோலியரை வெற்றிகண்ட சுல்தானை எல்லா மலிக்குகளும் அமீர்களும் வந்து பாராட்டும்படி கேட்டுக் கொண்டார். அதற்காக பலர் கைலூகரிக்கு வந்தனர். அந்த வாய்ப்பினைப் பயன்படுத்திக் கொண்டு சில துருக்கிய அதிகாரிகளை அவர் கொன்று விட்டார். சிலர் நாடு கடத்தப்பட்டனர். சிலருடைய பதவிகள் மாற்றியளிக்கப்பட்டன. பால்பன் துவக்கிய திறமைமிக்க துருக்கிய அதிகாரிகளை ஒழிக்கும் திட்டத்தை நிஜாமுத்தீன் முடித்து வைத்தார் என்று கூறின் அது மிகையாகாது.

இதற்கிடையில் தமர்கான் தலைமையின் கீழ் மங்கோலியர்கள் இந்தியாவின் மீது படையெடுத்து வந்து லாகூர் முதல் மூல்தான் வரையிலான பகுதிகளை அழித்து வந்தனர். கான்-இ-ஜஹானின் தலைமையின் கீழ் படையொன்றை சுல்தான் அனுப்பிவைத்தார். டில்லிப்படைகள் தங்களை தாக்கவருகின்றன என்பதை அறிந்த மங்கோலியர்கள் திரும்பிச் செல்லலானார்கள். அவர்களுள் சிலர் டில்லிப் படைகளின் கைகளில் சிக்குண்டு உயிரிழந்தனர். இந்த வாய்ப்பை பயன்படுத்திக் கொண்டு நிஜாமுத்தீன் சுல்தானுடைய அனுமதியை தந்திரமாகப்பெற்று பல புதிய முஸ்லிம்களைக் கொன்று விட்டார்.

நிஜாமுத்தீனுடைய நடவடிக்கைகளை புக்ராகான் லக்னோதியிலிருந்துகொண்டே கவனித்து வரலானார். நிஜாமுத்தீனை மேலும் வளர விடக்கூடாது என்பதற்காக புக்ராகான் தம்முடைய மகனுக்குப் பல கடிதங்களை எழுதினார். ஆனால் கைக்குபாத் தம்முடைய தந்தையின் எச்சரிக்கைகளைப் பொருட்படுத்தவில்லை. ஆகவே தம் மகனை நேரில் கண்டு அவருக்கு ஏற்படவிருந்த ஆபத்தை நீக்குவதற்காக புக்ராகான் டில்லியை நோக்கிப் புறப்பட்டார் என்று சிலர் கூறுகின்றனர். டில்லியைக் கைப்பற்றுவதற்காக புக்ராகான் டில்லிக்குப் புறப்பட்டார் என்று வேறுசிலர் கூறுகின்றனர். மற்றும் சிலர் தம்முடைய தந்தையை அடக்குவதற்கு கைக்குபாத் படை நடத்திச் சென்றார் என்பர். இருவரும் ஒருவரை ஒருவர் நெருங்கி வந்த பிறகு போர் செய்யும் எண்ணத்தைக் கைவிட்டார்கள். புக்ராகான் கைக்குபாத்திற்கு பரிசுகள் அனுப்பி வைத்தார், கைக்குபாத் தம்முடைய மகன்

கையிமூர்ஸை புக்ராகானிடம் அனுப்பி வைத்தார். இறுதியில் புக்ராகான் கைக்குபாத்துக்கு சுல்தான் என்ற முறையில் அளிக்கப் படவேண்டிய மரியாதைகளை அளிக்க ஒப்புக் கொண்டார். சந்திப்பு ஏற்பட்டபோது கைக்குபாத் அரியணையில் உட்கார்ந் திருந்தார். புக்ராகான் அவர்முன் கீழே விழுந்து வணங்கினுர். அப்போது கைக்குபாத்தினுடைய மனம் உருகிவிட்டது. கண்களில் நீர் மல்க அவர் காலில் விழுந்து வணங்கினுர். பாசத்திற்கு முன் பதவி எம்மாத்திரம் என்பதை இந்நிகழ்ச்சி அறிவுறுத்தியது. புக்ராகான் லக்னேதிக்குச் செல்வதற்கு முன்பு சிற்றின்பத்தை அதிகமாக நாடவேண்டாமென்றும், நிஜாமுத்தீன் விஷயத்தில் வெகு கவனமாக நடந்து கொள்ளும்படியும் தம் மகனிடம் கூறினுர்.

தந்தையின் அறிவுரைபடி கைக்குபாத் சில நாட்கள் ஒழுங்காக நடந்து கொண்டார். விரைவில் அவர் பழைய இழிநிலைக்கு வந்து விட்டார். அதன் விளைவாக அவருடைய உடல் நிலை வெகுவாக பாதிக்கப்பட்டது. அந்த நிலையில் நிஜாமுத்தீனை மூல்தானுக்குச் செல்லும்படி கட்டளையிட்டார். நிஜாமுத்தீன் சிறிது தயங்கினுர். அதற்காக அவர் விஷமிட்டுக் கொல்லப்பட்டார். அவருடைய மறைவிற்குப்பின் ஆட்சி முறை சீரழிந்து விட்டது.

# 6. கல்ஜிப் புரட்சி

## (Khalji Revolution)

கி.பி. 1290 ஆம் ஆண்டு ஏற்பட்ட அரச குல மாற்றத்திற்கு சில வரலாற்று ஆசிரியர்கள் கல்ஜிப் புரட்சி என்ற பெயரைச் சூட்டியுள்ளனர். இது எவ்வாறு நடத்தப் பெற்றது என்பதை முதலில் கவனிப்போம்.

முயீஸ் உத்தீன் கைக்குபாத்தினுடைய அரசு நிஜாமுத் தீனுடைய மறைவிற்குப் பிறகு ஆட்டங்கண்டது என்பது முன் அத்தியாயத்தில் கண்டோம். அந்த நேரத்தில் தான் கைக்குபாத் மலிக் பிரூஸ் கல்ஜி என்பவரை டில்லிக்கு வரவழைத்து அவரைப் போர் அமைச்சராக (ariz-i-mamalik) நியமித்தார். அத்துட னின்றி அவரை பரன் பகுதிக்கு ஆளுநராக நியமித்தார். மேலும் அவருக்கு ஷயிஸ்டகான் என்ற பட்டமும் வழங்கப்பட்டது. அவர் அநேக ஆண்டுகள் பால்பனிடம் வேலை பார்த்து வந்தார். மங்கோலியப் படையெடுப்புகளின்போது தமது போர்த்திறனை வெளிக் காட்டி அனைவருடைய நன்மதிப்பைத் தேடிக் கொண்டார். கைக்குபாத் காலத்தில் அவர் சமானாவின் ஆளுநராகப் பணியாற்றி வந்தார். அந்த சமயத்தில் தான் அவருக்கு டில்லியிலிருந்து அழைப்பு வந்தது. அவரது முன் னேற்றம் ஒரு சில பிரபுக்களின் பொறாமையைத் தூண்டிவிட்டது. அப்பொறாமைத் தீ மேலும் வளர முக்கிய காரணமாக அமைந் திருந்தது அவரது இனச்சார்பு ஆகும். அவரை சிலர் துருக்கிய இனத்தைச் சார்ந்தவரென்று என்று கருதினார்கள்; வேறு சிலர் துருக்கியரேயெனினும் இல்பாரி மரபைச் சார்ந்தவரென்று என்று கருதினார்கள். இதைப் பற்றி பின்னர் விவரமாக கவனிப்போம். கைக்குபாத் ஆட்சி காலம் வரை பழைய துருக்கிய பிரபுக்களே நாட்டில் மிக்க செல்வாக்குப் பெற்றிருந்தனர். அப்பிரபுக்கள் தொடர்ந்த உயர் அதிகாரத்தைச் செலுத்தி வர விருப்பங் கொண்டனர். அவ்வதிகாரத்தை ஏனையோருடன் பகிர்ந்து கொள்ள விரும்பினரென்று. எனவே இல்பாரி துருக்கிய இனத்தைச் சாராதவர்கள் உயர் நிலைக்கு வருவதைக் காண அப்பிரபுக்கள் விரும்பவில்லை. தமது உரிமைகளையும், நலன்களையும் புதிய

சக்திகளிடமிருந்து காப்பாற்றிக் கொள்ள ஒரே வழிதான் அவர்களுக்குத் தோன்றியது. பால்பனுடைய குடும்பத்தினரை எப்பாடு பட்டேனும் டில்லி அரியணையில் வீற்றிருக்கச் செய்ய வேண்டும் என்பதே அவர்களுக்குத் தோன்றிய ஒரே வழியாகும். அந்த நேரத்தில்தான் கைக்குபாத் மலிக் பிரூஸ் கல்ஜியை போர் அமைச்சராக நியமித்தார். ஏற்கனவே பிரபுக்கள் மத்தியில் புகைந்து கொண்டிருந்த பகைமை உணர்ச்சி இப்போது வெளிப் படலாயிற்று. அவர்கள் இப்போது இரண்டு அணியாகப் பிரிந்தனர். அவ்வணிகளுள் ஒன்றினுக்கு மலிக் பிரூஸ் கல்ஜி தலைமைப் பொறுப்பேற்ருர். மற்றென்றினுக்கு மலிக் அயித்மார் சுர்க்கா தலைவராக இருந்தார். கைக்குபாத் வாத நோயின் காரணமாக படுக்கையை விட்டு அசைய இயலாத நிலையை எய்தினர். மேலும் அவர் மலிக் பிரூஸ் கல்ஜிக்குப் பதவி உயர்வு அளித்தமையால் பழைய துருக்கிய பிரபுக்களின் நன்மதிப்பையும் ஆதரவையும் இழந்தார். எனவே அவர் மேலும் பழைய துருக்கிய பிரபுக்களுககுக் கெடுதி இழைப்பதற்கு முன் அவர்கள் முந்திக் கொள்ளுதல் நல்லதென்று முடிவு கட்டினர். ஆகவே கைக்குபாதினுடைய மகனை கையிமூர்ஸ் (Kaımurs) என்பவரை அரச பீடத்தில் அமர்த்தினர்கள். கையிமூர்ஸ் இரண்டாவது ஷம்ஸ் உத்தீன் என்ற பட்டத்தைப் பெற்ருர். சபுத்ரா-இ-நாசிரீ (Chabutra-i-Nasiri) என்னுமிடத்தில் அவரது முடிசூட்டு விழா நடைபெற்றது.

அதைத் தொடர்ந்து மலிக் பிரூஸ் கல்ஜியையும், அவரது கூட்டத்தையும் தொலைத்துக் கட்டுவதற்கான முயற்சியைச் செய்யத் தொடங்கினர்கள். துருக்கிய மலிக்குகள் ஒன்றுகூடி ஒரு சதித்திட்டத்தை வகுத்தார்கள். ஒழித்துக்கட்டப்பட வேண்டிய மலிக்குகளின் பெயர் பட்டியலொன்று தயாரிக்கப் பட்டது. பிரூஸ் கல்ஜியின் பெயர் அதில் முதலிடம் பெற்றிருந்த தென்றல் அவர் எந்த அளவிற்குத் தமது பகைவர்களின் வெறுப்பையும். கோபத்தையும் கிளறி விட்டிருப்பார் என்பது புலனுகும். சதித்திட்டத்தைப் பற்றிய தகவல்கள் மலிக் பிரூஸ் கல்ஜியினுடைய காதுகளுக்கு உடனடியாக எட்டி விட்டன, இதற்கு உதவியாக இருந்தவர் அப்போது நாய்ப்-இ-அமீர்-இ-ஹஜீப் (Naib-i-Amir-i-Hajib) ஆகப் பணியாற்றி வந்த அகமது சாப் (Ahmad Chap) என்பவராவர், அந்த நேரத்தில் அவர் பூகல் பஹாரி (Bhugal Pahari) என்னுமிடத்தில் அரசப் படைகளைப் பார்வையிட்டுக் கொண்டிருந்தார்.[1] டில்லிக்குச் சென்ருல் ஆபத்து

[1] Isami, 203, பஹார்பூர் என்ற இடத்தில் மேற்பார்வையிட்டு வந்ததாக பரணி குறிப்பிடுகிருர்,

விளையும் என்று அவர் எண்ணியதால் அங்கிருந்து கியாஸ்பூருக்குத் தமது தலைமையிடத்தை மாற்றிக் கொண்டார். தம்மைப் பலப்படுத்திக் கொள்ளும் நோக்குடன் அதர் தம் உறவினர்களை பரன் வந்து சேருமாறு செய்தி அனுப்பினர். அவர்களுடைய வருகை பகைவர்களுடைய பயத்தைப் பெருக்கி விடக் கூடாது என்பதற்காக ஒரு உத்தியைக் கையாண்டார். வரப்போகும் மங்கோலியப் படையெடுப்பை எதிர் கொள்ளுவதற்காக அவர்களுடைய உதவி தமக்குத் தேவைப்படுவதாக அறிவித்தார், இதற்கிடையில் சதிகாரர்கள் விறுவிறுப்புடன் தங்களது வேலையைத் தொடங்கினர்கள். எவ்வாறேனும் பிரூஸ் கல்ஜியை டில்லிக்கு அழைத்து வந்துவிட்டால் தங்களது வேலையை எளிதில் முடித்து விடலாம் என்று எண்ணி பிரூஸ் கல்ஜிக்கு ஒரு செய்தியை அனுப்பினர்கள். மலிக்கு பிரூஸ் கல்ஜி டில்லிக்கு உடனடியாக வந்து சுல்தானுக்கு முன்பு ஆஜர் ஆகவேண்டும் என்பது அச் செய்தியின் சாரமாகும். அவருடைய சந்தேகம் வலுப்பெறக் கூடாது என்பதற்காக அச்செய்தியில் அவரை பேரரசர் ஜலாலுத்தீன் என்றவாறு குறிப்பிடப்பட்டிருந்தார். எதற்காகத் டில்லிக்கு அழைக்கப்படுகிறுர் என்பதை பிரூஸ் கல்ஜி விரைவில் புரிந்து கொண்டார். அந்போது அவர் கன்ஞேசியில் அரசப் படைகளைப் பார்வையிடும் பணியில் ஈடுபட்டிருந்தார். அதுவே அவர் அவ்வாணைக்கு உடனடியாகக் கீழ்படியத் தவறியமைக்கு உற்ற காரணமாக இருந்தது. இதையறிந்த அவரது பகைவர்கள் மற்ஞெரு அரச செய்தியை அயித்மார் கச்சன் (Aitmar Kacchan) என்ற சதிகாரரின் வாயிலாக அனுப்பி வைத்தனர். அவர் கன்ஞேசி வந்த போது பிரூஸ் கல்ஜி மிக்க சாதுரியமாக நடந்து கொண்டார். தமக்குச் சதியைப் பற்றி தெரிந்தாற்போல் காட்டிக் கொள்ளவில்லை. மிக்க அமைதியுடனும் கவனத்துடனும் அவர் நடந்து கொண்டார். பார்வையிடும் வேலை முடிந்தவுடன் வருவதாகவும் அதுவரை அவரை கூடாரத்தில் சற்று இளைப்பாறும் படியும் கூறினர். பயணத்தின் காரணமாகக் களைத்துப் போயிருந்த கச்சன் அருகிலிருந்த கூடாரத்திற்குச் சென்று இளைப்பாறலானர். அப்போது பிரூஸ் கல்ஜியினுடைய ஆட்கள் கூடாரத்தில் புகுந்து கச்சனுடைய தலையைக் கொய்து அதனை யமுனை ஆற்றில் வீசி எறிந்தனர். அதையடுத்து இரு பிரிவுகளுக் கிடையே மோதல் ஏற்பட்டது. அதுசமயம் பிரூஸ் கல்ஜியினுடைய பிள்ளைகள் அரண்மனைக்குள் புகுந்து கையிமூர்ஸைக் கைப்பற்றிக் கொண்டு பிரூஸ் கல்ஜியினுடைய படை முகாமிற்கு கொண்டு சென்றனர். அவருடன் டில்லியின் கொத்வாலாகப் பணியாற்றி வந்த மலிக் பக்ருத்தீனுடைய பிள்ளைகளையும் கொண்டு சென்றனர். இச்செய்தியையறிந்த அயித்மர் சுர்க்கா

அவர்களைத் துரத்திக் கொண்டு சென்று பஹார்பூருக்கு அருகே இவர்களை முந்திக் கொண்டு வழி மறித்தார். அப்போது நடை பெற்ற சண்டையில் பிரூஸ் கல்ஜியினுடைய மூத்த மகனை இக்தியாருத்தீன் (Ikthiyaruddin) குதிரையிலிருந்து கீழே விழ நேர்ந்தது. அந்த வாய்ப்பினைப் பயன்படுத்திக் கொண்டு சுர்க்கா அவரைத் தம் வாள் கொண்டு தாக்கினார். அத்தாக்குதலிலிருந்து தப்பித்துக் கொண்ட இக்தியாருத்தீன் தம் வாளால் சுர்க்கா வினுடைய தலையைத் துண்டித்து வீழ்த்தினார்.

இதற்கிடையில் கையிமூர்ஸ் வலுக்கட்டாயமாகக் கடத்திச் செல்லப்பட்ட செய்தி டில்லி நகர மக்களிடையே தீ போல் பரவியது. அதையறிந்த மக்கள் கொதித்தெழுந்தனர். பஹார் பூருக்குச் சென்று தங்களுடைய மன்னரை மீட்டுவரத் துடித்தனர். அந்த நேரத்தில் மலிக் பக்ருத்தீன் தலையிட்டு அவர்களை பஹார் பூருக்குச் செல்லாமல் தடுத்தார். அவரது சுயநலமே அதற்குக் காரணமாகும். பிரூஸ் கல்ஜியிடம் சிறைபட்டிருந்த தமது மைந்தர்களுக்கு ஆபத்து விளையுமோ என்ற அச்சம் பக்ருத்தீனுக்கு ஏற்பட்டது. ஆகவேதான் அவர் தலையிட்டு டில்லி மக்களைக் கலைந்து போகும்படிச் செய்தார். தங்களுடைய இரு தலைவர்களை யும் இழந்து விட்ட துருக்கிய அமீர்கள் பலர் பிரூஸ் கல்ஜியுடன் போர் செய்வதைவிட அவருடன் சேர்ந்து கொள்ளுதல் நலம் பயக்கும் என்று எண்ணி அவர் பக்கம் சாய்ந்து விட்டனர். அதனால் பிரூஸ்கல்ஜியின் ஆதரவாளர் எண்ணிக்கை மேலிட்டது. அது மட்டுமின்றி அவரை எதிர்த்துப் போராடக் கூடியவர் எவருமிலர் என்ற நிலையும் ஏற்பட்டு விட்டது.

பழைய துருக்கிய பிரபுக்கள் முழுமையாக ஒடுக்கப்பட்ட நிலையில் ஒரு புறமிருக்க, முயீஸ் உத்தீன் கைக்குபாத் பாரிச நோயினால் பீடிக்கப்பட்டு படுத்த படுக்கையாய் இன்னொரு புற மிருக்க, கையிமூர்ஸ் பிரூஸ் கல்ஜியின் கைகளில் சிக்குண்டு மற் றொரு புறமிருக்க, மலிக் பக்ருத்தீன் ஆணைக்கிணங்கி டில்லி மக்கள் போர்க் கோலத்தை விட்டொழித்து செய்வதறியாது மற்றுமொரு பக்கம் திகைத்து நிற்க பிரூஸ் கல்ஜி ஈடு இணையற்ற தலைவராகக் காட்சியளித்தார். அந்நேரத்தில் அவர் எண்ணியதை நிறை வேற்றக் கூடும்.

இதற்கிடையில் தர்கெஷ் (Tarkesh) என்ற பெயர் படைத்த ஒருவரை கைலீகாரிக்கு அனுப்பி வைத்தார். தர்கெஷினுடைய தந்தை முயீஸ் உத்தீன் கைக்குபாத்தின் கையில் முன்பு கொலை யுண்டார். தமது தந்தையைக் கொன்றவரின் உயிரைக் குடிக்க

அவர் துடித்துக் கொண்டிருந்தார். அதையறிந்த பிரூஸ் கல்ஜி கைக்குபாத்தை ஒழித்துக்கட்டும் பணியினை தர்கெஷுக்கு வழங்கினார். தர்கெஷ் கைலீகாரி அரண்மனைக்குள் நுழைந்து சுல்தான் கைக்குபாத்தினுடைய உடலை துணி கொண்டு மூட்டையாகக் கட்டி, காலால் உதைத்து, யமுனையில் தள்ளிவிட்டார். இவ்வாறாக கைக்குபாத்தினுடைய கதை முடிக்கப்பட்டது. இந் நிகழ்ச்சி 1290ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் முதல் தேதியன்று நடைபெற்றது.

டில்லி அரசரின் மணிமகுடம் அவருடைய மடியில் கிடந்திருந்தது. அவர் நினைத்தால் அரசராகவும் முடியும். ஆனால் அரசப் பொறுப்பேற்க அவர் தயக்கம் கொண்டார். நிலைமை மேலும் அவருக்குச் சாதகமாக அமைய வேண்டும் என்று எண்ணினார் போலும்! எனவே பஹார்பூரிலேயே ஷம்ஸுத்தீனை அரியணையில் அமர்த்தினார்.[1] அரசோச்சுதற்குரிய வயதினை ஹம்ஸுத்தீன் எய்தியிராமையால் ஒரு பகர ஆட்சியாளரை (Regent) அமர்த்த வேண்டியதாக இருந்தது. பால்பனுடைய நெருங்கிய உறவினரான மலிக் சஜ்ஜுவுக்கு அப்பதவியை வழங்க பிரூஸ் கல்ஜி முன் வந்தார். தாம் மூல்தான், பாதிந்தா, திபால்பூர் ஆகியவற்றின் ஆளுநராகப் போகத் தயாராக இருப்பதாக அறிவித்தார், ஆனால் சஜ்ஜு அப்பகுதியை ஏற்க இசையவில்லை. காரா, மணிக்பூர் ஆகியவற்றின் ஆளுநராக இருப்பதை அவர் விரும்புவதாகக் கூறினார். அதன் பின்னர் அப்பதவியை பக்ருத்தீனுக்குக் கொடுத்தார். அவரும் அதை ஏற்க மறுத்து விட்டார். எனவே தாமே அப்பதவியை ஏற்க வேண்டிய நிலை பிரூஸ் கல்ஜிக்கு ஏற்பட்டது. இந்த ஏற்பாடு வெகு நாள் நிலைத்திராது என்று அனைவருமே எண்ணியிருந்தனர். அதற்கேற்ப மூன்று மாதங்கள் கழித்து கைலீகாரி அரண்மனையில் ஜலாலுத்தீன் பிரூஸ் கல்ஜி என்ற பட்டத்துடன் பிரூஸ் கல்ஜி முடி சூட்டிக் கொண்டார். ஷம்ஸுத்தீன் சிறையிலடைக்கப் பட்டார். சில காலத்திற்குப் பிறகு சிறையிலேயே அவர் பூவுலகை விட்டு மறைந்தார். இவ்வாறாக கல்ஜி புரட்சி வெற்றிகரமாக நிறைவேற்றப்பட்டது.

### கல்ஜிப் புரட்சியின் சிறப்பு

கல்ஜிப் புரட்சி டில்லியில் புதியதொரு அரசகுலம் ஏற்படுத்துவதற்கு வழி கோலியது. அரசகுல மாற்றம் என்பது இந்திய மக்களுக்குப் பெருத்த ஆச்சரியத்தை விளைவிக்கக்கூடிய நிகழ்ச்சியன்று. இந்திய வரலாற்று ஏடுகளில் இத்தகைய புரட்சிகள்

[1] கைலிகாரி அரண்மனையில் இந்நிகழ்ச்சி நடைபெற்றதாக "Comprehensive History" கூறுகிறது.

மலிந்து கிடப்பதை நாம் காண்கிறோம். அடிக்கடி ஏற்பட்ட அரச குல மாற்றங்கள் ஒரு குறிப்பிட்ட அரச குலத்தினரிடம் பக்தியையும், விசுவாசத்தையும் மக்களிடையே தோற்றுவிக்கத் தடையாக அமைந்து விட்டன. ஆயினும் ஓரிரு சமயங்களில் இந்திய மக்களும் தங்களை ஆண்ட அரச குலங்களிடம் பற்றுக் கொண்டிருந்தனர் என்பதற்கு நமக்கு சான்றுகள் கிடைத்துள்ளன. எடுத்துக்காட்டாக இல்பாரி துருக்கியர்களிடம் மக்கள் ஒரு விதமான பற்றை வளர்த்திருந்தனர். திட்டவட்டமான அரசுரிமைச் சட்டம் ஏற்படுத்தப் பெறாத காலத்தில் இல்தூத்மிஷினுடைய சந்ததியார்களே அரசுரிமை பெறவேண்டும் என்ற எண்ணம் டில்லி மக்களிடம் பரவலாகத் தோன்றியிருந்ததென்றால் அது அவர்களிடம் மக்கள் கொண்ட பற்றின் காரணமாகவேயன்றி வேறெதனாலும் அல்ல என்பதைக் கூறித்தான் தெரிந்து கொள்ள வேண்டுவதில்லை. அந்த நேரங்களில்கூட அவர்கள் தமது ஆதரவை தேவை ஏற்பட்டால் மற்றொரு அரச குலத்திற்கு மாற்றி விடுவதற்கு அவர்கள் தயக்கம் கொள்வதில்லை. ஆகவே மக்களைப் பொறுத்தளவில் இப்போது ஏற்பட்ட அரசுரிமை மாற்றம் பெரியதொரு விளைவை ஏற்படுத்தவில்லை என்று கூறலாம்.[1]

கல்ஜிக்கள் சாதாரண குடும்பத்தைச் சார்ந்தவர்கள். அவர்களுடைய உடம்பில் அரச இரத்தம் ஓடவில்லை. இல்பாரி துருக்கிய பிரபுக்கள் இரத்தமும் அவரது உடம்யில் பாய்ந்திருக்கவில்லை. இல்பாரி துருக்கிய இனத்தைச் சாராதவர்கள். தம்மைவிடத் தாழ்ந்தவர்கள் என்று இல்பாரி துருக்கியர்கள் எண்ணி வந்த காலமது. அவர்களே அரசாளப் பிறந்தவர்கள் என்று எண்ணி வந்தனர். ஆகவே கல்ஜி புரட்சியினை உயர்குடி மரபினரது ஆட்சிக்குப் பதிலாக சாதாரண குடிமகனது ஆட்சியினை ஏற்படுத்திய ஒரு புரட்சி எனக் கூறுவது மிகையாகாது.

இது வரை டில்லியை ஆண்ட சுல்தான்களுள் சிலர் அரசுரிமையை மரபுரிமையாகப் பெற்றனர். வேறு சிலர் அரசப் பதவிக்கு தேர்ந்தெடுக்கப்பட்டனர். மற்றும் சிலர் கிளர்ச்சியின் விளைவாக அரச பதவியைப் பெற்றனர். ஆனால் எதிர்பாராத வகையில் மேற்கொண்ட கடுந்தாக்குதலின் விளைவாக கல்ஜிக்கள் அரசுரிமையை இல்பாரி துருக்கிய அரச குலத்தவர்கள் கைகளிலிருந்து கவர்ந்து கொண்டனர். அவ்வாறு கைப்பற்றிய அரசுரிமையை மக்களுடைய ஆதரவின் மூலமாகவோ. அல்லது பிரபுக்களின் உதவி பெற்றோ உலாமாக்களின் தயவைக்

[1] Dr. K. S. Lal, History of the Khaljl, p 14

கொண்டோ அவர்கள் காப்பாற்றிக் கொள்ள முன்வரவில்லை. அதற்கு மாறாக படையினுடைய உதவி கொண்டு அதனைத் தொடர்ந்து வகிக்க முற்பட்டனர். படைப்பலத்தினை அடிப் படையாகக் கொண்ட அவரது ஆட்சி இராணுவ ஆட்சி (Militarion) என்று கூறப்படுகிறது.

கல்ஜிப் புரட்சி புதியதொரு அரசியல் கோட்பாட்டினை தொடங்கிவைக்கக் காரணமாக அமைந்தது. அது வரை அரசர் இஸ்லாமிய சட்டத்திற்குக் கட்டுப்பட்டு அச் சட்டத்திற்கேற்ற வகையில் ஆட்சியை நடத்த வேண்டும் என்று வலியுறுத்தப் பட்டது. ஆனால் கல்ஜிக்கள் காலத்தில் குறிப்பாக அலாவுத்தீன் ஆட்சிக் காலத்தில் சமய சட்டமும், அரசாங்க சட்டமும் வெவ்வே றானவை என்றும் அரசாங்க சட்டத்தைப் பொறுத்தளவில் மக்களுக்கு எது நன்மை பயக்கும் என்று அரசர் கருதுகிறாரோ அதனை நிறைவேற்ற அவருக்கு முழு அதிகாரம் உண்டென்றும், அவர் உலாமாக்களுக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டுவதில்லை என்றும் திட்டவட்டமாகக் கூறினார்கள்.

கல்ஜிக்கள் காலத்தில் அரசியல் துறையில் மட்டுமின்றி பொருளாதாரத் துறையிலும் புரட்சிகரமான மாறுதல்கள் ஏற்படுத்தப் பெற்றன. அலாவுத்தீன் கல்ஜி பண்டங்களின் விலைகளை நிர்ணயித்து பொருள்களை அரசாங்கம் குறிப்பிட்ட விலைகளுக்கு அவை மக்களுக்குக் கிடைக்க ஏற்பாடு செய்து அதில் பெரும் வெற்றியை அடைந்தார்.

கல்ஜிக்கள் ஆட்சி இந்தியாவில் முஸ்லிம்கள் நடத்திய ஆட்சியில் ஒரு திருப்புக் கட்டமாக அமைந்துள்ளது. அவர்கள் காலத்தில்தான் முஸ்லிம்கள் தென்னிந்தியாவில் தம் படைகளை வெற்றிகரமாக நடத்திச் சென்று பல இந்து அரசர்களை அடிபணிய வைத்தனர்.

மங்கோலியர்கள் இந்தியாவைக் கைப்பற்றுவண்ணம் பார்த்துக் கொண்டவர்கள் கல்ஜிக்களே ஆவார்கள். அலாவுத்தீன் கல்ஜியினுடைய ஆட்சிக்கு முன் மங்கோலியர்கள் பல முறை படை யெடுத்து வந்தனர் என்பது உண்மையே. ஆனால் அக்காலத்தில் அவர்கள் இந்தியாவின் பொருட் செல்வத்தைச் சூறையாடு வதையே தம் முக்கிய நோக்கமாகக் கொண்டிருந்தனர். அலாவுத்தீன் காலத்தில் அவரது நோக்கம் முற்றிலும் மாறுபட் டிருந்தது. டில்லியைக் கைப்பற்றி அங்கு தமது ஆட்சியை நிறுவ வேண்டும் என்பதே அவர்களது நோக்கமாக இருந்தது. அதிர்ஷ்ட

வசமாக அக்காலத்தில் அலாவுத்தீன் ஆட்சி பீடத்தில் அமர்ந்திருந்தார். மங்கோலியர்களுக்கு எதிராக உடனடியாக நடவடிக்கைகள் மேற்கொள்ளுதற்கு வேண்டிய திறமையையும் மன உறுதியையும் பெற்றிருந்த அலாவுத்தீனுக்கு அவர்களை எளிதில் விரட்டியடித்தல் கடினமான காரியமாகத் தோன்றவில்லை. இந்தியாவை மங்கோலியர் தாக்குதலிலிருந்து காப்பாற்றிய பெருமை கல்ஜிக்களையே சாரும்.

இந்தியக் கலை வளர்ச்சி வரலாற்றிலும் கல்ஜிக்கள் குறிப்பிடத் தக்க இடத்தைப் பெற்றுள்ளனர். அவர்கள் காலத்தில்தான் 'இந்தியக் கிளி' (Parrot of India) என்று கருதப்பட்ட அமீர்குஸ்ரு தமது புலமையை வெளிப்படுத்தினர். கட்டிடக்கலை வளர்ச்சியிலும் கல்ஜிக்கள் சிறந்த பணியினை ஆற்றியுள்ளனர்.

மேற் கூறியவற்றிலிருந்து கல்ஜிப் புரட்சி எத்துணை சிறப்பு வாய்ந்தது என்பது தெளிவாகும்.

# 7. கல்ஜிக்களின் ஆட்சி

**கல்ஜிக்களின் தோற்றம்:** கல்ஜிக்கள் யார் என்பதைப் பற்றி வரலாற்றாசிரியர்களிடையே பல திறப்பட்ட கருத்துக்கள் தோன்றியுள்ளன.

கல்ஜிக்கள் துருக்கியர் அல்லர் என்று பரணி தமது வரலாற்று நூலில் திட்டவட்டமாகக் கூறியுள்ளார். கைக்குபாத் கடுமையான நோய்வாய்ப்பட்டிருந்தபோது பால்பனுடைய முக்கிய அதிகாரிகள் ஒன்று கூடி கைக்குபாத்தினுடைய இளைய மகன் ஒருவனை அரியணையில் அமர்த்தினர். ஆட்சி செலுத்துதற்குரிய வயதினை அவர் எய்தப்பெறாதக் காரணத்தால் ஆட்சிக் குழுவொன்றினை அவர்கள் அமைத்து அதன் வாயிலாக நிருவாகம் செய்ய திட்டமிட்டனர். இந்த ஏற்பாடுகள் அனைத்தும் துருக்கியர் கைகளிலிருந்து ஆட்சி உயர் அதிகாரம் மற்றொரு இனத்தினரின் கைகளுக்கு மாறிவிடக் கூடாது என்பதற்காகவே மேற்கொள்ளப் பட்டன என்று பரணி கூறுகிறார்[1]. மேலும் ஜலாலுத்தீன் மற்றொரு வகை இனத்தைச் சார்ந்தவராக இருந்தகையால் துருக்கியர்களிடம் அவர் நம்பிக்கை வைக்கவில்லை. அவ்வாறே துருக்கியர்களும் கல்ஜிக்கள் இடத்தில் நம்பிக்கை கொள்ளவில்லை என்று பரணி கூறுகிறார். மேலும் கல்ஜிக்கள் தம் அதிகாரத்தை நிலைநாட்டிய போது, சாதாரண மக்களும், படை வீரர்களும், பிரபுக்களும் செய்வதறியாது விழித்தனர்; ஆச்சரியத்தினால் வாயடைத்து நின்றனர். துருக்கியர் அமர்ந்திருந்த அரியணையில் கல்ஜிக்கள் உட்கார்ந்திருந்த காட்சி ஓர் அசாதாரண காட்சியாக அவர்களுக்குத் தோன்றியது. துருக்கிய இனத்தவரிடமிருந்து அரசுரிமை முடிவில் மற்றொரு இனத்தவரின் கைகளுக்கு மாறி விட்டது என்று பரணி முடிக்கின்றார். கல்ஜிக்கள் எந்த இனத்தைச் சார்ந்தவர் என்பதை அவர் திட்டவட்டமாகக் கூறவில்லை என்பது உண்மையேயென்றாலும் அவர்கள் துருக்கியர் அல்லர் என்பதை மட்டும் அவர் ஐயத்திற்கிடந்தராத வகையில் கூறியுள்ளார்.

குலிஜ் கானுடைய வழித்தோன்றல்களே கல்ஜிக்கள் என்று பிற்கால வரலாற்று ஆசிரியர்களுள் ஒருவரான நிஜாமுத்தீன்

[1] Barani, 171

அகமது கூறுகிறார். குலீஜ்கான் என்பவர் மங்கோலியத் தலைவர் செங்கிஸ்கானுடைய மருமகப் பிள்ளையாவார். அவருக்கும் அவரது மனைவிக்கும் இடையே ஏற்பட்டிருந்த உறவுமுறை திருப்தி யளிக்கவல்ல வகையில் அமைந்திருக்கவில்லை. எனவே செங்கிஸ் கானுடைய பிடியிலிருந்து தப்பிவிடுவதற்குரிய தருணத்தை அவர் ஆவலுடன் எதிர்நோக்கியிருந்தார். அத்தகைய சமயம் ஒன்று ஏற்பட்டபோது அவர் கோர், ஜுர்ஜிஸ்தான் பள்ளத்தாக்குப் பகுதிகளுக்குச் சென்று அங்கு குடி அமைத்துக் கொண்டார். அவரது குடும்பத்தினரும், அவரைப் பின் பற்றி வந்த 30,000 பேர்களும் அவருடன் சென்று அங்கு குடியேறினார்கள். அவர்கள் கால்ஜீக்கள் என்றழைக்கப்பட்டனர். நாளடைவில் கால்ஜீக்கள் என்பது கல்ஜியாக மாறியது. கோரி அரசர்கள் இந்தியாவை வென்ற போது கல்ஜிக்களுள் அநேகர் அவர்களுடன் இந்தியாவிற்கு வந்து, சுல்தான்களின் கீழ் வேலைக்கமர்ந்தனர். பிற்காலத்தில் டில்லி அரியணையில் அமர்ந்த ஜலாலுத்தீன், மாளவத்தை ஆண்டுவந்த மாமூத் ஆகியோரின் முன்னோர்கள் அவ்வாறு வந்து குடியேறிய வர்களேயாவார்கள்.

மாளவக் கல்ஜிக்களின் வரலாற்றினை எழுதிய ஹாஜிஉத்தாபீர் அவ்வரசகுலத்தின் தோற்றத்தைப் பற்றிய விவரங்களை நமக்கு அளித்துள்ளார். அதன்படி மாமூத் கல்ஜியின் முன்னோர்கள் கலீஜ்கானுடைய வழித்தோன்றல்கள் என்றும், கலீஜ்கான் அஃப்ராசியாப் என்பவருடைய மகன் என்றும், அஃப்ராசியாப் செங்கிஸ்கானுடைய மருமகப்பிள்ளை என்றும் கூறியுள்ளார். ஜலாலுத்தீன் சுல்தானுடைய முன்னோர்களைப் பற்றிய தகவல்களை அவர் குறிப்பிடவில்லை என்பதை நாம் கருத்தில் கொள்ளுதல் அவசியமாகும்.

இவ்விரு வரலாற்றாசிரியர்கள் கூறியதிலிருந்து இரு உண் மைகள் நமக்குக் கிடைக்கின்றன. முதலாவதாக, கல்ஜி அரசர்கள் கலீஜ்கான் வழி வந்தவர்கள் என்பது. மற்றொன்று கலீஜ்கான் செங்கிஸ்கானுடைய நெருங்கிய உறவினன் என்பது. இவர்களு டைய கருத்தினை ஏற்றுக்கொள்வதில் சில கஷ்டங்கள் நமக்குண்டு. செங்கிஸ்கானுக்கு எதிராகப் போராடிய கோராஸாமியப் படை களில் அநேக கல்ஜி வீரர்கள் சேர்ந்திருந்தனர் என்று நிஜாமுத்தீனே தமது நூலில் குறித்துள்ளார். அப்படியென்றால் அவர்கள் செங்கிகானுடைய காலத்திற்கு முன்பே தோன்றி யிருத்தல் வேண்டும் என்பது புலனாகிறது. பிரிஷ்டாவும் இதே கருத்தினை தமது வரலாற்று நூலில் எழுதியுள்ளார். அதாவது கஜினியினுடைய முந்திய வரலாறுகளில் கல்ஜிக்கள் இடம் பெற்றி

ருந்தனர் என்றும், செங்கிஸ்கானுடைய காலத்திற்கு முன்பே அவர்கள் தோன்றியிருந்தனர் என்றும் அவர் கூறியிருக்கின்றார், ஒன்றுக்கொன்று முரணான கருத்துக்களைத் தாம் அளித்திருப்பதை உணர்ந்துவிட்ட நிஜாமுத்தீன் இச்சிக்கலிலிருந்து விடுபடவேண்டி இன்னுமொரு கருத்தினை கூறியுள்ளார். கலீஜ்கானே கல்ஜி குலத்தினராக இருந்திருக்கக்கூடும் என்றும், சுல்தான்கள் ஜலாலுத்தீனும், மாமூத்தும் கலீஜ்கான் வழி வந்தவர்கள் என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார். கலீஜ்கானுக்கும், செங்கிஸ் கானுக்கும் தொடர்பு உண்டோ இல்லையோ, ஜலாலுத்தீனுக்கும் கலீஜ்கானுக்கும் நிச்சயமாகத் தொடர்பு உண்டு என்பதே அவரது வாதம். பதௌனி இதனைக் கடுமையாக எதிர்க்கிறார். கலீஜ்கானுக்கும் யாதொரு தொடர்பும் இல்லையென்பதே அவரது வாதம்.

கல்ஜிக்கள் துருக் (Turk) என்பவரின் வழி வந்தவர்கள் என்பது இன்னொரு கருத்தாகும் துருத் என்பவர் ஜபத் (Jabeth) என்பவரின் மகனாவார். ஜபத் என்பவர் நோவாவின் மகனாவார். இக்கருத்தினை செல்ஜூக் நாமா (Seljuknama)வினுடைய ஆசிரியர் கூறியுள்ளதாக நிஜாமுத்தீன் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார். இக் கருத்து முந்திய கருத்தைவிட அறிவுக்குப் பொருத்தமானதாக அமைந்துள்ளது என்று பிரிஷ்டாவும், பதௌனியும் எண்ணுகின்றனர்.

நிஜாமுத்தீன், பதௌனி, பிரிஷ்டா ஆகியோர்களுடைய கருத்தை டாக்டர் கே. எஸ். லால் அவர்கள் நிராகரித்துள்ளார். அவர்களது கருத்துக்கள் அனைத்தும் கட்டுக்கதைகளை அடிப்படையாகக் கொண்டுள்ளனவேயன்றி ஆராய்ச்சியின் பயனாக வெளி வந்த உண்மைகளை அடிப்படையாகக் கொண்டிருக்கவில்லை என்பதே அவர் தரும் காரணமாகும்.[1]

கல்ஜிக்கள் துருக்கிய இனத்தைச் சார்ந்தவர்கள் என்பது மற்றொரு வாதம். கி. பி. பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த இபின்ஹோகல் என்ற அரபு புவியியல் வல்லுநர் கல்ஜிக்கள் துருக்கியரே என்று கூறியுள்ளார். இந்துஸ்தானத்திற்கும் சிஜிஸ்தானத்திற்கும் இடையேயுள்ள பகுதிகளில் அவர்கள் நெடுங்காலம் வாழ்ந்திருந்தனர். அப்பகுதிகளில் ஒன்று கல்ஜ் என்பதாகும். ஆகவே அவர்கள் கல்ஜிக்கள் எனப்பட்டனர் என்பது நோக்கற்பாலது. அவர்களுடைய பழக்க வழக்கங்கள், நடையுடை பாவனைகள் துருக்கியர்களுடைய பழக்க வழக்கங்களையும், அவர்

[1] History of the Khaljis, p. 12

களது ஆடைகளையும், ஒத்திருந்தன என்று கூறியுள்ளார்.[1] இஷ்டாகரி (Ishtakari) போன்ற ஆசிரியர்கள் பலரும் அவர்களை துருக்கியர்களாகவே கருதுகின்றனர். பக்ருத்தீன் தமது வரலாற்று நூலில் அறுபத்தி நான்கு துருக்கிய மரபுகள் அடங்கிய பட்டியல் ஒன்றை நமக்குத் தந்துள்ளார். அதில் கல்ஜிக்களுடைய பெயர் இடம் பெற்றுள்ளது. மேஜர் ராவர்டி (Major Raverty) யும் அவர்களைத் துருக்கியர்களாகவே கருதுகின்றார். நெடுங்காலம் ஆப்கானிஸ்தானத்தில் வாழ்ந்து வந்தமையால் ஆப்கானியர் களுடன் இரண்டறக் கலந்துவிட்டனர். எனவே அவர்கள் தோற்றத்திலும், நடையுடை பாவனைகளிலும் அவர்கள் ஆப்கானியர்கள் போன்று காணப்பட்டனர். மேற்காசிய வரலாற்று வல்லுநர்களுள் ஒருவரான பர்தோல்ட் (Barthold) அவர்களை துருக்கியர்களே என்று கூறுகின்றார்.

ஓலப் கரோ (Olaf Caroe) பதான்களுடைய வரலாற்றினை எழுதும்போது கல்ஜிக்களைப்பற்றி குறிப்பிட்டுள்ளார். அவர் கல்ஜிக்களை ஆப்கானியர்கள் என்று கூறியுள்ளார். ஆப்கானியரே யெனினும் அவர்கள் துருக்கிய இனத்தின் வேரிலிருந்து தோன்றியவர்கள் என்று குறிப்பிட்டிருப்பதை ஈண்டு கூறுதல் அவசியமாகும்.

மேலே கூறப்பட்ட கருத்துக்களை அனைத்தையும் ஆராய்ந்து பார்க்கின் கல்ஜிக்கள் துருக்கிய இனத்தைச் சார்ந்தவர்கள் என்பதை நாம் தைரியமாகக் கூறலாம் என்பது புலனாகும். அவர்களுள் பலர் கஜினி, கோரி அரசர்களுடைய படைவீரர்களாக இந்தியாவிற்கு வந்தனர். மற்றும் சிலர் மங்கோலியர்கள் மத்திய ஆசியாவையும் ஆப்கானிஸ்தானத்தையும் தாக்கியபோது அப் பகுதிகளை விட்டு இந்தியாவில் புகலிடம் நாடிவந்தனர். எனவே தான் அவர்களை இல்பாரி துருக்கிய இனத்தினின்றும் மாறுபட்டவர்கள் என்று கருதப்பட்டனர். டில்லியை ஆளும் உரிமை இல்பாரி துருக்கியர்களை மட்டுமே சார்ந்தது என்ற கருத்து உலவி வந்த நேரத்தில் இல்பாரி துருக்கிய இனத்தைச் சாராத கல்ஜிக்களை துருக்கியர் அல்லாதார் என்றும், துருக்கிய இனத்தினின்றும் வேறுபட்ட இனத்தினர் கல்ஜிக்கள் என்றும் பரணி குறிப்பிட்டிருப்பதில் வியப்பு ஏது? எனவே கல்ஜிக்களும், இல்பாரிகளும் ஓர் இனத்தைச் சார்ந்தவர்களே என்றும், அவ்வினம் துருக்கிய இனம் என்றும் உறுதியாகக் கூறலாம்.

[1] Kitab Moujamal Buldan, II, 419

# 8. ஜலாலுத்தீன் பிரூஸ்கல்ஜி
## (1290-1296)

ஜலாலுத்தீன் பிரூஸ்கல்ஜி 1290ஆம் ஆண்டு ஜூன் மாதம் 13ஆம் தேதி (ஹிஜிரி ஆண்டு 689) அரியணையில் அமர்ந்தார்.[1] தாரீக்-இ-முபாரக்ஷாஹியில் இந்நிகழ்ச்சி ஏப்ரல்–மே மாதத்தில் ஏற்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது.[2] ஹிஜிரி ஆண்டு 688-ல் அவர் அரியணை ஏறியதாக பரணி குறிப்பிட்டுள்ளார். இந்நிகழ்ச்சி ஹிஜிரி ஆண்டு 687-ல் நடைபெற்றது என்று பிரிஷ்டா கூறுகின்றார். இரண்டாவது ஷம்ஸுத்தீனுடைய நாணயங்கள் அனைத்திலும் 689ஆம் ஆண்டு பொறிக்கப்பட்டுள்ளமையாலும் ஜலாலுத்தீனுடைய நாணயங்கள் 689ஆம் ஆண்டினைத் தொடக்க மாகக் கொண்டிருப்பதாலும் ஹிஜிரி ஆண்டு 689-ல் ஜலாலுதீன் பிரூஸ்கல்ஜி அரியணை ஏறினார் என்பதை நாம் திடமாகக்கூற இயலும்.

ஜலாலுத்தீன் பிரூஸ்கல்ஜி சுல்தானகப் பதவியேற்ற போதிலும் அவர் டில்லிக்குச் செல்ல தைரியங் கொள்ளவில்லை. அதற்கு முக்கியமான காரணம் டில்லி மக்களுடைய வெறுப்புக்கு அவர் ஆளாகியிருந்ததேயாகும். இல்பாரி துருக்கியரே தங்களை ஆளவேண்டும் என்ற எண்ணத்தை அவர்கள் கொண்டிருந்தனர். ஏறக்குறைய எண்பது ஆண்டுகள் அவர்களுடைய ஆட்சி நடந்து வந்தமையால் அவர்களிடம் ஒரு பற்று ஏற்பட்டிருந்தது.

ஜலாலுத்தீன் பிரூஸ்கல்ஜி இல்பாரி குலத்தைச் சாராதவராக இருந்தமையால் மக்கள் பொதுவாக அவரை வெறுத்தனர். ஜலாலுத்தீனுடைய பிள்ளைகள் திடீரென அரண்மனைக்குள் புகுந்து ஷம்ஸுத்தீனைக் கடத்திச் சென்ற விதம் அவர்களுடைய வெறுப்பை மேலும் பெருக்கி விட்டது. ஆகவே ஜலாலுத்தீன் தமது அரசின் தலைமையிடத்தை கைலூகரியிலேயே அமைத்துக் கொண்டார். முயீஸ் உத்தீன் கைக்குபாத் கட்டத் தொடங்கிய அரண்மனையை ஜலாலுத்தீன் கட்டிமுடித்தார். அவ்வரண்மனைச்

[1] Amir Khusru, Miftahul Futuh, E and D, III, 536.

[2] T.M.S. Trs. 58

சுவர்களில் வாசகங்கள் பலவற்றை அழகுற செதுக்கி வைக்குமாறு பணித்தார். யமுனை ஆற்றங்கரையில் ஈடுயிணையற்ற ஓர் அழகான தோட்டத்தை அமைத்தார். அத்தோட்டம் அரண்மனையின் அழகைப் பன்மடங்கு அதிகரிக்கச் செய்தது. அங்கு வந்து குடியேறிய உயர்படி மக்களை பெரிய பெரிய மாளிகைகளைக் கட்டும் படிவேண்டிக்கொண்டார். கடைகள் பல திறக்கப்பட்டன. கைலூகரி ஒரு புதிய நகரமாகக் காட்சியளித்தது.

ஜலாலுத்தீன் பட்டமெய்தியபோது ஒரு சிக்கலான சூழ்நிலை உருவாகியிருந்தது. 1290ஆம் ஆண்டில் ஓர் அரசகுலம் ஒழிக்கப் பட்டு மற்றொரு அரசகுலம் துவக்கப்பட்டது. அது ஒரு சாதாரண நிகழ்ச்சி: அதைவிட முக்கியமான மற்றொரு சம்பவமும் அப்போது நடந்தேறியது. இதுவரை டில்லி அரசர்களைப் பீடித்திருந்த இனவெறி இல்பாரி துருக்கிய சுல்தான்களுடன் ஒழிந்து விட்டது. வடஇந்தியாவில் முஸ்லிம்கள் ஆட்சியை முதன் முதலில் நிரந்தரமாக ஏற்படுத்தியவர்கள் துருக்கியர்களேயாவர். ஆகவே அவர்களது ஆளுகைக்குட்படுத்தப் பெற்ற பகுதிகளை அவர்கள் தங்களுடைய சொத்தாகக் கருதினர்கள். வேறு இனத்தவர்களை ஆட்சி அமைப்பில் முக்கிய இடம் வகிப்பதை அவர்கள் விரும்ப வில்லை. ஆனால் மங்கோலியப் படையெடுப்பு, சூழ்நிலை மாற்றம் போன்ற காரணங்களால் புதிய சக்திகள் தோன்றின. ஆட்சியினைத் தங்கள் பொறுப்பிலேயே வைத்துக் கொள்வதென்பது இனி கடினமான காரியமாக அவர்களுக்குத் தோன்றியது. ஆகவே தான் பால்பனுடைய ஆட்சியின்போது அவர்களுடைய ஏகபோக அரசியலுரிமையை அபகரிக்கக் காத்திருந்த எதிரிகளை கொன்று விடமுற்பட்டனர். ஆயினும் அதில் அவர்கள் வெற்றி காணவில்லை. அதற்குமாருக இல்பாரி துருக்கிய இனத்தைச் சாராத கல்ஜிக் களும் அவர்களுடைய ஆதரவாளர்களும் 1290ஆம் ஆண்டில் மிக எளிதாக இல்பாரி துருக்கியர்களை வீழ்த்திவிட்டனர். அவர் களுடைய வெற்றி இன அடிப்படையில் அமைக்கப்பட்டிருந்த சர்வாதிகார ஆட்சிக்கு சாவுமணி அடித்தது. வளர்ந்து வரும் புதிய சக்திகளுக்கும் உணர்ச்சிகளுக்கும் ஆட்சியில் இடமளிப்பது அவசிய மாயிற்று. பழைய சக்திகளையும் புதிய சக்திகளையும் இணைத்து ஒரு புதிய சமுதாயத்தையே உருவாக்க வேண்டிய நிலைஏற்பட்டது. அத்தகையதொரு சமுதாயத்தை அமைக்க திறமைவாய்ந்த ஒரு நிருவாகம் தேவைப்பட்டது.

ஜலாலுத்தீனுடைய சமரச மனப்பாங்கு இப்புதிய திட்டத்தை நிறைவேற்றுவதற்கு உறுதுணையாக இருந்தது. அரியணையை ஏறியவுடன் துருக்கியர்கள் வகித்திருந்த எல்லா பொறுப்புகளையும்

அவர்களிடமிருந்து பறித்துக் கொள்வதற்குப் பதிலாக சிலவற்றை அவர்களிடமே விட்டு வைத்தார். பால்பனுடைய நெருங்கிய நண்பரும் டில்லியின் முக்கிய குடிமகனுமான மலிக்குல் உமரா பக்ருத்தீனை மீண்டும் டில்லியின் கொத்வாலாக அமர்த்தினர். மற்றொரு துருக்கியர் குவாஜா கதீர் (Khuaja Khatir) வசீராகத் தொடர்ந்து பணியாற்ற அனுமதிக்கப்பட்டார். மலிக் சஜ்ஜுவி னுடைய விருப்பப்படி அவருக்கு காரா ஆளுநர் பதவி அளிக்கப் பட்டது. பால்பனுடைய குடும்பத்தினர்களுள் எஞ்சியிருந்தோர் காராவிற்குச் சென்று குடியேற அனுமதிக்கப்பட்டனர். அதே நேரத்தில் முக்கியமான பதவிகளைத் தம்முடைய பிள்ளைகளுக்கும் நெருங்கிய உறவினர்களுக்கும் கொடுத்தார். சுல்தானுடைய மூத்தமகனை இக்தியாருத்தீனுக்கு கான்-இ-கானன் (Khan-i-Khanan) என்ற பட்டம் வழங்கப்பட்டது. அத்துடன் டில்லியைச் சுற்றியிருக்கும் நிலப்பகுதிகள் அவருக்கு மானியமாக (fief) அளிக்கப்பட்டன. ஜலாலுத்தீனுடைய இரண்டாவது மகனை இசாமுத்தீன் (Hisamuddin) என்பவர், அர்க்கலி கான் என்ற பட்டத்தையும், கடைசி மகன், காதர்கான் என்ற பட்டத்தையும் பெற்றனர். அவரது தம்பியின் பிள்ளைகளான அலாவுத்தீனும், அல்மாஸ்பெக்கும் அமீர்-இ-துஸக், அக்கூர் பெக் என்ற பட்டங்களை முறையே பெற்றனர். மலிக் ஹுசேனுக்கு தாஜ் உல்முல்க் என்ற பட்டம் அளிக்கப்பட்டது. மலிக் காமோஷ் யோக்ரெஷ் கான் (Yoghresh Khan) என்ற பட்டத்துடன் போர் அமைச்சர் பதவியையும் பெற்றார். மலிக் அகமது சாப் நாயப் பார்பக் (Naib Barbak) பதவியைப் பெற்றார்.

தோல்வியுற்ற துருக்கிய பிரபுக்களிடம் ஜலாலுத்தீன் பிருஸ் கல்ஜி காட்டிய பரிவும், அன்பும் மக்களை வியப்பில் ஆழ்த்திவிட்டன ஒரு சில மாதங்களுக்குள்ளாகவே அவர்கள் ஜலாலுத்தீனிடம் அன்பு செலுத்தலாயினர். அவரது நடத்தை அவர்களது பாராட்டை முழுமையாகப் பெற்று விட்டது எனலாம். அவருடைய தன்னடக்கம் அவர்களை வெட்கமடையச் செய்தது. எனவே டில்லி மக்கள் சாரை சாரையாக கைலூகரிக்குச் சென்று அவருடன் சமாதானம் நாடினர். ஜலாலுத்தீன் அவர்களை அன்புடன் வரவேற்று அவர்களுக்குப் பதவிகளையும், பரிசுகளையும் வழங்கி அவர்களைத் திக்கு முக்காடச் செய்தார். இவ்வாறாக டில்லி மக்கள் அவர்பால் கொண்டிருந்த வெறுப்புக்குப் பதிலாக மதிப்பு வளரத் தொடங்கியது. அதன் பயனாக அவரது அரச பதவிக்கு இனி எந்த விதமான ஆபத்தும் ஏற்படாது என்பது உறுதியாயிற்று. எனவே அவர் தைரியமாக ஒரு நாள் டில்லிக்குப் புறப்பட்டுச் சென்றார்

டில்லியில் பால்பனுடைய சிவப்பு அரண்மனையைப் பார்வையிட்டார். அவ்வரண்மனையினை அடைந்தபோது பழைய எண்ணங்கள் அவர் மனத்தில் தொன்றத் துவங்கின. அரியணைக்கு முன்னால் எவ்வாறு பயபக்தியுடன் அவர் நின்று கொண்டிருந்த காட்சி பளிச்சென அவர் கண்முன் தோன்றியபோது அவரையும் அறியாமல் அவரது கண்களிலிருந்து நீர் வழியத் தொடங்கியது. அரண்மனையின் வெளி வாயிலை அடைந்தவுடன் அவர் குதிரையினின்றும் கீழே இறங்கி வணக்கம் செலுத்தினார். அதைக் கண்ட அகமது சாப் அவ்வரண்மனை அவருக்குச் சொந்தமாகி விட்டது என்றும் ஆகவே அவர் அம்மாதிரியாக நடக்கக் கூடாது என்றும் கூறினார். அதைக் கேட்ட சுல்தான் உணர்ச்சி மேலீட்டால் ஓவென்று கதறி அழுது விட்டார். பின்னர் பின்வரும் பதிலை அவருக்களித்தார். "என்னுடைய மூதாதைகளுள் ஒருவர்கூட அரசராகவில்லை என்பது உனக்குத் தெரியும். ஆகவே அரசருக்குரிய செருக்கும் கண்ணியமும் நான் மரபுரிமையாகப் பெறவில்லை. சுல்தான் பால்பன் இங்குதான் அரியணையில் அமர்ந்திருந்தார். நான் அவருக்கு ஊழியம் செய்து வந்தேன். அந்த அரசர்பால் கொண்டிருந்த பயமும், மதிப்பும் என்னுடைய நெஞ்சத்தினின்றும் அகலவில்லை. இந்த அரண்மனையை பால்பன் கான் பதவியைப் பெற்றிருந்த காலத்தில் கட்டினார். ஆகவே இது அவருடைய சொத்தாகும். இது அவருடைய பிள்ளைகளுக்கும் உறவினர்களுக்கும் உரியதாகும்."[1] கொலு மண்டபத்தில் அரசருடைய இருக்கையில் அவர் அமர மறுத்து விட்டார். பால்பன் அரசராக இருந்த போது அவரும் ஏனைய பிரபுக்களும் சிம்மாதனத்திற்கு எதிரே கைகட்டி வாய் பொத்தி நின்று கொண்டிருந்த காட்சி அவரது அகக்கண் முன்னே மீண்டும் தோன்றியது. அவருடன் பணிவுடன் நின்றிருந்த பிரபுக்கள் சிலர் இப்போது அவர் முன் கைகட்டி நிற்க தாம் அரியணையில் உட்காருவதென்பது அவருக்கு மனவேதனையை அளித்தது. ஆகவே அரியணையில் அமர்வதற்குப் பதிலாக அவர்களுடன் இணையாக அமர்ந்தார்.

மேற்கூறிய நிகழ்ச்சிகள் ஜலாலுத்தீனுடைய தாராள மனப்பாங்கினையும், கருணை உள்ளத்தையும் கள்ளங்கபடமற்றத் தன்மையினையும் வெளிப்படுத்துவனவாகத் தோன்றின. பால்பனுடைய அரண்மனையில் அவர் கண்ணீர் உகுத்த காட்சி பலரை மெய்சிலிர்க்க வைத்து விட்டது. அவருடைய பகைவர்கள் பலர் அவர்பால் கொண்டிருந்த பகைமையை விட்டொழித்து அவரை ஆதரிக்கத் தலைப்பட்டனர். அரசியலில் மூழ்கியிராத

[1] Barani, 179.

சாதாரண மக்களுக்கு அவர் தெய்வீகத் தன்மை வாய்ந்த அரசராகக் காட்சியளித்தார். அரசியல் பற்றிய செய்திகளில்கூட அவர் தம்முடைய உள்ளத்திலிருந்து பீறிட்டெழுந்த மனிதாபிமான உணர்ச்சிகளுக்கு;மேலிடத்தைத் தந்துள்ளார். தண்டிக்க வேண்டிய இடத்தில் அவர் மன்னித்தருளியதற்குக் காரணம் அவர் அன்பின் சக்தியின்பால் கொண்டிருந்த அசையா நம்பிக்கையேயாகும்.

சாதாரண நாட்களில் இத்தகைய நடத்தை நாட்டிற்கு நன்மையைத் தேடித் தந்திருக்கும். ஆனுல் ஜலாலுத்தீன் பட்டத்திற்கு வந்த போது நாடு மிக இக்கட்டான நிலையில் இருந்தது. மங்கோலியர்கள் இராச்சியத்தின் மேற்குப் பகுதியில் வலுப்பெற்று வந்தனர். அவர்களை விரட்டியடிக்க வேண்டியது முதல் வேலையாகும். கிழக்கு மாகாணங்கள் மைய அரசின் பிடியிலிருந்து நழுவி விட்டன. அவற்றை மீண்டும் டில்லி அரசின் கீழ்கொண்டு வரவேண்டியது புதிய அரசின் கடமையாக இருந்தது. ஜலாலுத்தீன் பிரூஸ் அரசுரிமைப் பெறத் தகுதியற்றவர் என்று பலர் கருதினுர்கள் என்று முன்னரே குறிப்பிட்டோம். பால்பனுடைய அரண்மனையில் அவர் நடந்து கொண்ட விதம் பலருடைய மனத்தை மாற்றி விட்டது என்பது உண்மையேயாயினும் அவர்கள் அனைவரையும் புதிய அரசகுலத்திற்கு விசுவாசமுள்ளவர்களாக மாற்றுவது என்பது மிகமிக அவசியமானதொரு காரியமாக இருந்தது. நாட்டில் அமைதி நிலவச் செய்ய வேண்டுவது மற்றுமொரு வேலையாகும். பால்பனுக்குப் பிறகு பலமற்றவர்கள் ஆட்சிப் பீடத்தில் அமர்ந்திருந்தமையால் மைய அரசின் செல்வாக்குக் குறைந்து விட்டது. அதனை மீண்டும் நிலைநாட்டுவது அவசியமாயிற்று. மேற்கூறியப் பணிகளைச் சிறப்பாகவும், வெற்றிகரமாகவும் நிறைவேற்றுவதற்கு கடுமையான நடவடிக்கைகள் தேவைப்பட்டன. ஆனுல் இயற்கையாகவே மென்மை உள்ளம் படைத்த ஜலாலுத்தீன் பிரூஸ் அத்தகைய நடவடிக்கைகளை மேற்கொள்ள இயலாதிருந்தார், மேலும் எழுபது வயதை எட்டிவிட்ட அவர் அத்தகைய நடவடிக்கைகளை மேற்கொள்ளுதற்கு வேண்டிய உடல் வலிமையைப் பெற்றிருக்கவில்லை. எனவே ஜலாலுத்தீன் பிரூஸ் கல்ஜியின் காலத்தில் அவரைவிட அரசப் பொறுப்புக்குத் தகுதியற்றவர் வேறெருவரும் இருக்க முடியாது என்று கூறப்படுகிறது.[1]

எவரிடமும் அவர் பகைமை எண்ணம் கொள்ள அவரால் இயலாது. அவருக்குத் தீங்கிழைத்தவர்களுக்கும் நன்மை செய்யக்

[1] HCIP' Vol VI, p 12.

கூடிய மனப்பாங்குடையவர். முன்பு ஒரு சமயம் சிராஜ் உத்தீன் சா வீ என்பவரும் இராஜபுத்திரத் தலைவர் ஒருவரும் அவருக்குப் பெரிய தீங்கை விளைத்திருந்தனர். ஜலாலுத்தீன் அரசராகி விட்டார் என்ற செய்தி அவர்களுடைய காதுகளுக்கெட்டியபோது அவர்கள் இனி பிழைப்பதரிது என்று எண்ணினுர்கள். ஆகவே தாங்கள் அவருக்கு இழைத்த கொடுமைக்கு வருந்தும் வகையில் தங்களுடைய தலைகளைத் தொங்கப் போட்டுக் கொண்டு அவர் முன்னர் சென்று அவர்கள் நின்றனர். அக்காட்சியினைக் கண்டதும் சுல்தானுடைய மென்மை உள்ளம் தீயிற்பட்ட மெழுகென உருகியது. சுல்தான் அவர்களை மன்னித்து விட்டதுடன் நிற்காமல் அவர்களுக்கு ஏராளமான பரிசுகளை வழங்கி கூடியிருந்த அனைவரையும் வியப்பில் ஆழ்த்தி விட்டார்.

சிற்சில சமயங்களில் அவர் குழந்தை போல் நடந்து கொண்டார். ஒரு சமயம் அவர் அல்முஜாஹித் ஃபி சபிலுல்லா (கடவுள் வழியில் போராடுபவர்) என்ற பட்டத்தைச் சூடிக் கொள்ள வேண்டும் என்று ஆசைப்பட்டார். விரும்பிய பட்டத்தைச் சூடிக் கொள்ளுதற்கு அரசருக்கு முழு உரிமை உண்டு. என்றுலும் அவர் அப்பட்டத்தைத் தாமாகவே சூட்டிக் கொள்ள விரும்பவில்லை. பிரபுக்களே அப்பட்டத்தை அரசவையில் பலர் முன்னிலையில் அளிக்க வேண்டும் என்று எண்ணினுர். ஆகவே தமது மனைவியாரை பிரபுக்களிடம் அனுப்பி வைத்தார். பிரபுக்களும் இதற்கு இசைந்தனர், ஆனுல் அப்பட்டத்தை அரசர் சூடிக் கொள்ள வேண்டும் என்று வேண்டிய போது அதனை ஏற்க மறுத்துவிட்டார். அதுமட்டுமன்றி பிரபுக்கள் இதைத் தாமாகச் செய்யவில்லை என்றும், தமது தூண்டுதலின் பேரில்தான் செய்தார்கள் என்றும் பலரறியக் கூறினுர்.[1]

ஜலாலுத்தீன் கல்ஜி சமயப்பற்றுமிக்கவர். கடவுளிடம் மிக்க பயம் கொண்டிருந்தார். தமது குடும்பத்தினரிடம் அன்பாக நடந்து கொண்டார். பிரபுக்களைத் தமது நண்பர்கள் போல் நடத்தினுர். மக்களைத் தம்முடைய குழந்தைகளெனப் பாவித்தார். அனைவருக்கும் நன்மையே செய்யும் மனப்பான்மையுடையவர். எளிய வாழ்க்கையில் அசையா நம்பிக்கைக் கொண்டவர்.

மேற்கூறியவற்றிலிருந்து அவர் ஒரு நல்ல மனிதர் என்பதற்குரிய பண்புகளைப் பெற்றிருந்தார் என்பது விளங்கும். அதே நேரத்தில் திறமை வாய்ந்த அரசருக்குரிய குணநலன்களை அவர்

[1] Dr. K. S. Lal, History of the Khaljis, p. 18.

பெற்றிருக்கவில்லை என்பதும் தெளிவாகும். அரச பதவியை அவர் விரும்பவில்லை என்றே சொல்லவேண்டும். தம்மைக் கொல்ல சதி செய்ததற்காக அவர் தமது பகைவர்களை வெறுக்க வில்லை. அவரை அரச பதவிக்கு உயர்த்த அவர்கள் காரணமாக் இருந்தமைக்கே அவர்களை அவர் வெகுவாக வெறுத்தார்.[1] இத்தகையதொரு அரசரை டில்லி மக்கள் பெற்றது அவர்கள் முற் பிறவியில் செய்த தீமையின் விளைவாக என்று எண்ணுவதில் வியப்பேது?

ஜலாலுத்தீன் பிருஸ் கல்ஜியினுடைய அளவு மீறிய கனிவும், கருணையும் பலரைக் கலகம் செய்யத் தூண்டின. அவர்களுள் முதல் கலகக்காரர் மலிக் சஜ்ஜு என்பவராவார். அவர் பால்ப னுடைய குடும்பத்தைச் சார்ந்தவரென்பதால் மக்களிடையே அவருக்கு செல்வாக்கு இருந்தது. அச்செல்வாக்கைப் பயன்படுத்தி அரசுரிமையைக் கைப்பற்றிவிட இயலும் என்று அவர் நம்பினர். அந்த நம்பிக்கை மேலும் வளரத் துணையாக இருந்தது ஜலாலுத்தீ னுடைய அளவு மீறிய கனிவேயாகும். அவுத்தின் ஆளுநரான அமீர் அலீ ஹதீம் கானும், பழைய ஆட்சியினை ஆதரித்த பிரபுக் களும் அவருடன் சேர்ந்து கொண்டனர். ஜலாலி பிரபுக்கள் சிலரும் அவருக்கு ஆதரவளித்தனர். அவர்களுள் குறிப்பிடத் தக்கவர்கள் தாஜ் உத்தீன் கூச்சி, முகமது குத்லாகான் ஆகியோ ராவார்கள். கங்கையின் வடக்குப் பகுதிகளில் இருந்த இந்துத் தலைவர்கள் பலரும் அவருடன் சேர்ந்தனர். டில்லி ஆட்சியின் இரு ஆளும் வகுப்பினர்கள் — முஸ்லீம் இக்தாதார்கள், இந்து ராணுக்கள்— ஒன்று சேர்ந்து மலிக் சஜ்ஜுக்கு உதவி செய்வதென் பது ஒரு முக்கிய நிகழ்ச்சியாகும். டில்லி பிரபுக்கள் சிலரும், மக்கள் பலரும் பழைய அரசகுலத்தவர்களிடம் தொடர்ந்து விசுவாசம் கொண்டுள்ளனர் என்பதையும், கல்ஜிக்களிடம் பற்று கொள்ள வில்லை என்பதையும் மலிக் சஜ்ஜு அறிந்திருந்தார். ஆகவே மஜிக் சஜ்ஜு கலகத்தில் ஈடுபட்டார். சுல்தான் முயீஸ் உத்தீன் பட்டத்தைச் சூடிக்கொண்டார். தம் பெயரில் நாணயங்களை அச்சிட்டார். குத்பா அவருடைய பெயரில் வாசிக்கப்பட்டது. கலகம் காட்டுத்தீயெனப் பரவியது. பழைய அரச குலத்தின் ஆதரவாளர்கள் மலிக் சஜ்ஜுவை எறும்புகள் போன்றும் பூச்சிகள் போன்றும் நாடிச்சென்றனர்.[2] கலகம் கட்டுக்கடங்காது போவதை தோவாப்பிலும் அதற்கு கிழக்கேயும் இருந்த பகுதிகளை ஆண்டு வந்த ஜலாலி அதிகாரிகள் உணர்ந்தனர். நிலைமை மேலும் மோச

[1] *Ibid.*

[2] Barani. 7

மாவதற்கு முன்பு அவ்விடங்களை விட்டு மேற்கு நோக்கிச் செல்வதே மேல் என்று எண்ணி அங்கிருந்து அவர்கள் அகன்றனர். அவர்களது செய்கை மலிக் சஜ்ஜுவை மேலும் ஊக்கி விட்டது. எனவே டில்லியை நோக்கிப் படையெடுப்பதென அவர் முடிவு செய்தார். அம்ரோஹா பகுதியிலிருந்து டில்லியைத் தாக்குவது சாலச் சிறந்ததென அவர் எண்ணி தம் படையை கங்கையாற்றின் கரையோரமாக வடக்கு நோக்கிப் புறப்பட்டார். பதௌன் நகரை அடைந்தபோது மலிக் பஹதூரும் அலப் காஜியும் தங்கள் படைகளுடன் அவர் பக்கம் சேர்ந்து கொண்டனர்.

ஜலாலுத்தீன் பிருஸ் கல்ஜி மென்மையுள்ளம் படைத்தவர் மட்டுமல்ல. திறமையான போர் வீரரும்கூட. எனவே மலிக் சஜ்ஜுவின் கலகத்தைப் பற்றிய செய்தி எட்டியதும் போர் ஏற்பாடுகளை விரைவாக மேற்கொள்ளத் தொடங்கினார். தலைநகரிலிருந்து கொண்டு ஆட்சிப் பொறுப்புகளை நிறைவேற்றும் பணியினைத் தம்முடைய மூத்த மகன், கானி-இ-கானுனுக்கு அளித்துவிட்டு கலகத்தையொடுக்க படையுடன் தாமே பதௌன் நோக்கிப் புறப்பட்டுச் சென்றார், யமுனை ஆற்றைக் கடந்த பின்னர் தம்படையை இரு பிரிவுகளாகப் பிரித்து அவற்றுள் ஒன்றினுக்கு அர்க்கலி கானைத் தலைவராக நியமித்து அவரை முதலில் போகும்படி ஆணையிட்டார். முதலில் சென்ற அர்க்கலீகான் இராம்கங்கா ஆற்றின் மறுகரையில் சென்று கொண்டிருந்த கலகப் படையினைக் கண்டார். படகுகள் அனைத்தையும், அவருக்குமுன் அங்கு வந்து சேர்ந்த மலிக் சஜ்ஜுவின் படைகள் கைபபற்றிக் கொண்டமையால் ஆற்றைக் கடக்க இயலாது தவித்தார். எனினும் இரவு நேரத்தில் தெப்பங்கள், பரிசல்கள் துணைகொண்டு படையின் ஒரு பகுதியை அனுப்பி பகைவனுடைய பாசறையைத் தாக்கினார்.[1] அத்தாக்குதல் பெருத்த வெற்றியில் கொண்டு விட்டது. பகைவரிடையே குழப்பத்தை ஏற்படுத்தி அவர்களது பாசறையைக் கலைத்து அவர்களை வடக்கேயுள்ள ஜுபலா குன்றுகளை நோக்கி துரத்தி அடித்தனர்.[2] அர்க்கலீகான் இரண்டு நாட்கள் அவர்கள் விட்டுச் சென்ற பாசறையைக் கொள்ளையடித்துவிட்டு பகைவரைத் தொடர்ந்து சென்றார். டில்லிப் படைகள் மலிக் சஜ்ஜுவைத் தப்பிச் செல்லவொட்டாமல் தடுத்து அவரைப் போர் செய்யும்படி கட்டாயப்படுத்தின. பகல்வேளை முழுவதும் வாட்கள் ஓய்வின்றி ஒன்றோடொன்று மோதின. இரவு வந்தபோது அலிகார் சிற்றரசர் சுல்தானுடைய படைகள் அர்க்கலீகானுடைய படைகளுடன்

[1] Amir khuesru Miftahul Futnh, 12-13

[2] *Ibid 13*

சேர நெருங்கி வந்து கொண்டிருக்கின்றன என்ற செய்தியை மலிக் சஜ்ஜூவிற்கு அறிவித்தார். அச்செய்தியைக் கேட்ட மலிக் சஜ்ஜூ மனம் உடைந்து போனார். எனவே அன்றிரவே படைகளை விட்டு ஓடிப் போனார். தலைவரற்ற படைகள் நிபந்தனையின்றி பகைவர் களிடம் சரணடைந்தன. மலிக் சஜ்ஜூ தப்பியோடுவதற்குக் காரணமான அலிகார் சிற்றரசரை அர்க்கலீகான் தாக்கி அவரைப் போரில் கொன்றார். பின்னர் மலிக் சஜ்ஜூவைத் தொடர்ந்து சென்றார். இறுதியில் மலிக் சஜ்ஜூ ஒரு கிராமத்தில் மறைந் திருப்பதை அறிந்து அங்கு சென்று அவரைக் கைது செய்தார்.

இதற்கிடையில் ஜலாலுத்தீன் பிருஸ் போஜ்பூர் என்னுமிடத் தில் ஆற்றைக் கடந்து ரோஹில்கண்டு சென்றார். அங்கிருந்த மலிக் சஜ்ஜூவின் ஆதரவாளர்களை அவர் தண்டித்து விட்டு பதௌன் திரும்பி வந்தார். அங்கு அர்க்கலீகான் சுல்தான் படை களுடன் சேர்ந்து கொண்டார். தமது மைந்தனுடைய வீரச் செயல்களைக் கேட்டு உள்ளம் பூரித்துப் போன ஜலாலுத்தீன் அர்க்கலீகானை மூல்தானுக்கு ஆளுநராக நியமித்தார்.

பின்னர் காக்ரா நதியின் ஓரமாக அமைந்திருந்த கிழக்கு மாவட்டங்களின்பால் சுல்தான் தமது கவனத்தைத் திருப்பினார். அங்கிருந்த சஜ்ஜூவின் ஆதரவாளர்களைத் தண்டிப்பதுடன் அப் பகுதியின் அமைதியைக் குலைத்து வந்த கொள்ளைக்காரர்களை அடக்குவது அவர் நோக்கமாக இருந்தது. ரூபல் தலைவர் போன்ற சிலர் சுல்தானுக்குக் கீழ்ப்படிந்தனர். கப்பம் கட்டுவதற்கும் இசைந்தனர். வேறு சிலர் பணிய மறுத்தமையால் அவர்களுடைய ஆட்சிப் பகுதிகளைச் சூறையாடும்படி சுல்தான் ஆணையிட்டார். இந்துக்கள் பலர் கொலையுண்டனர். பல இந்திய முஸ்லீம்கள் அடிமைகளாக விற்கப்பட்டனர்.

அதன் பின்னர் கலகக்காரர்களைத் தண்டிப்பதற்கென்று அரசவையைக் கூட்டினார். சங்கிலியால் பிணைக்கப்பட்டு கலகக்கார பிரபுக்கள் அரசர் முன்னிலையில் கொண்டு வந்து நிறுத்தப் பட்டனர். தலைப்பாகை ஏதுமின்றி, கிழிந்த ஆடைகளுடன் அவர்கள் காட்சியளித்தனர். அவர்கள் முகங்களில் வேதனையின் பிரதிபலிப்பைத் தவிர வேறொன்றையும் காண இயலவில்லை. ஏறிட்டுப் பார்க்கவும் இயலாமல் தரையை நோக்கி அவர்கள் நின்றிருந்த காட்சி சுல்தானுடைய உள்ளத்தை உருக்கி விட்டது. வேதனை தாங்காமல் சுல்தான் முகத்தைக் கைகளால் மூடிக்கொண்டு ஓவெனக் கதறினார். விரைவில் தம்மைத் தேற்றிக் கொண்டு சுல்தான் கலக்காரர்களைக் குளிப்பாட்டி நல்ல ஆடைகளைக்

கொண்டு அலங்கரிக்கச் செய்தார். கலகக்காரர்களை உற்சாகப் படுத்துவதற்காக அவர்களுடைய செய்கையைப் பாராட்டிப் பேசினர். பழைய அரச குலத்தின்பால் அவர்கள் கொண்டிருந்த பற்றைப் புகழ்ந்து பேசுவதுடன் நில்லாமல் அவர்கள் மேற் கொண்ட நடவடிக்கை சரியானதென்று வாதம் செய்தார். அவர்களைத் தமது சிறப்பு விருந்தினர்களாகக் கருதி அவர்களுக்கு கோப்பைகளில் மதுவை அளிக்கும்படி செய்தார். சுல்தான் காட்டிய பரிவு கலகக்காரர்களை வெட்கமடையச் செய்தது. இத் துணை கருணையைப் பொழியும் சுல்தானுக்குத் தீங்கிழைக்க முற் பட்டோமே என்று அவர்கள் வெதும்பினர்கள். இவையனைத்தை யும் கண்ணுற்ற அகமதுசாப், சுல்தானுடைய செய்கை சரியான தல்லவென்றும், அது நல்லதொரு ஆட்சியை அமைக்க உதவாது என்றும் சுல்தானுக்கு எடுத்துரைத்தார். மேலும் அவர்கள் கலகக் காரர்களுக்குக் காட்டும் பரிவைப் பயன்படுத்தி ஏனையோரும் கலகம் செய்யக் கூடும் என்றும் தெளிவுப் படுத்தினர். அதைக் கேட்ட சுல்தான் பின்வரும் பதிலை அவருக்களித்தார். "ஓ! அகமது சாப்பே! முற்காலத்தில் அரசர்கள் கலகக்காரர்களை எவ்விதமாக நடத்தினர்கள் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். ஆனல் நான் வயது முதிர்ந்த ஒரு முஸ்லிம். முஸ்லிம்களுடைய இரத்தத்தைச் சிந்தும் வழக்கம் எனக்கு இல்லை. நான் எழுபது வயதைக் கடந்து விட்டபோதிலும் (கடவுள் ஒருவரே என்பதில் நம்பிக்கைக் கொண் டவர்) இதுவரை ஒரு முஹாதியைக்கூட கொன்றதில்லை.[1] மனிதாபி மான உணர்ச்சிகளைக் கைவிட்டு விட்டு மனிதர்களைக் கொல்லும் பணியில் ஈடுபடுவதே அரசருடைய இலட்சணம் என்று எவரேனும் கருதுவாரேயானல் அத்தகைய ஒருவரிடம் ஆட்சிப் பொறுப்பை விட்டுத் தாம் பதவியிலிருந்து விலகத் தயாராக இருப்பதாக அவர் கூறினர். ஒரு காலத்தில் தம்முடைய புரவலர்களாகவும், நண்பர்க ளாகவும் இருந்தவர்களைத் தம்முடைய வாழ்நாளின் கடைசி காலத்தில் கொன்று தமது கரங்களை மாசுபடுத்திக் கொள்ள விரும்பவில்லை என்றும் அவர் கூறினர். மேலும் கலகக்காரர்கள் என்று குற்றம் சாட்டப்பட்டு தம் முன் நிறுத்தப்பட்டிருக்கும் பிரபுக்களுள் ஒருவரான ஹதீம்கான் தம்முடைய வணக்கத்தை ஏற்றுக் கொண்டு பதில் வணக்கம் செய்வாரா என்று முன்பு அவர் ஏங்கியிருந்த நாளை மறக்க இயலாது என்றும் கூறினர். ஒருக்கால் கலகக்காரர் வெற்றி பெற்றிருப்பின் பெருங் கேடு அவருக்கு விளைவித்திருக்கக் கூடும் என்பதை அவர் அறிந்திருப்பினும் அவர்களுக்கு கெடுதல் செய்ய தாம் விரும்பவில்லை என்றும், அவர்களுக்குரிய தண்டனையைக் கடவுள் அளிப்பாரென்றும், இப்

[1] Barani p. 185

போது அவர்களுக்குக் கருணை காட்டுவதின் வாயிலாக அவரைத் திருத்த இயலும்,'' என்றும் கூறி முடித்தார். அவர் நினைத்தது போல் அப்பிரபுக்கள் அதன் பின்னர் அவருக்குத் தீங்கிழைக்க முற்படவில்லை என்பது அறியற்பாலது.

இறுதியில் கலகக்காரர்கள் தண்டனையின்றி விடுவிக்கப் பட்டனர். மலிக் சஜ்ஜு மூல்தானில் சிறையிடப்பட்டார். அதே நேரத்தில் அவரைக் கண்ணியமாக நடத்துவதற்குரிய ஏற்பாடுகளை யும் செய்தார். காரா அலாவுத்தீனுடைய பொறுப்பில் விடப் பட்டது.

**ஜலாலுத்தீனும் தக்கர்களும்:** தக்கர்கள் என்ற கொள்ளைக் கூட்டத்தினர் டில்லி, டில்லியைச் சுற்றிய பகுதிகள் ஆகியவற்றில் வாழ்ந்து வந்த மக்களுக்கு பெரும் தொல்லைகளைக் கொடுத்து வந்தனர். அவர்கள் கொள்ளைக்காரர்களாக மட்டும் இருக்க வில்லை. கொலைகாரர்களாகவும் இருந்தனர். அவர்களுள் ஓர் ஆயிரம் பேரைப் பிடித்து வந்து சுல்தான் முன்னிலையில் நிறுத்தினார்கள். அவர்களை தண்டிப்பதற்குப் பதிலாக அவர்களைப் படகில் ஏற்றிக் கொண்டு லக்னோதி வரை ஆற்று வழியாகச் சென்று, அங்கு அவர்களை விடுவிக்கும்படி கட்டளையிட்டார். இவ் வாறாக லக்னோதியில் மீண்டும் குற்றச் செயல்களில் ஈடுபடுதற் குரிய வாய்ப்பினை அவர்களுக்கு அவர் கொடுத்தார்.

மலிக்சஜ்ஜுவினுடைய ஆதரவாளர்களையும் தக்கர்களையும் அவர் நடத்தியவிதம் பல பிரபுக்களை குடிபோதையில் தாறுமாறாகப் பேசத் தூண்டிவிட்டன. ஒரு சமயம் இல்துாத்மிஷின் நாற்பது அமீர்கள் கூட்டத்தைச் சார்ந்த மலிக் தாஜ்உத்தீன் கூச்சி ஒரு விருந்திற்கு ஏற்பாடு செய்து இருந்தார். அதுபோது விருந்தினர் களுக்கு மது பரிமாறப்பட்டது. குடிமயக்கத்தில் அகமது சாப்பைத் தவிர ஏனைய கல்ஜிக்கள் உதவாக்கரைகள் என்று கூறினார். ஜலாலுத்தீன் ஆட்சிப் பீடத்தில் அமருதற்குரிய குணநலன்களைப் பெறவில்லை என்றும் ஆகவே அவர் அப்பதவிக்குத் தகுதியற்றவர் என்றும் கூறினார். அத்துடன் நிற்காமல் தாஜ் உத்தீன் கூச்சியே ஆளத்தகுதி பெற்றவர் என்று சொல்லிமுடித்ததும் அங்கு குழுமி யிருந்த பிரபுக்கள் அனைவரும் தாஜ் உத்தீன் கூச்சிக்கு ஆதரவளிக்க முன் வந்தனர். அவர்களுள் சிலர் ஜலாலுத்தீனைக் கொல்ல போட்டியிட்டனர். ஒற்றர்கள் மூலமாக அங்கு நடந்த வற்றையெல்லாம் ஜலாலுத்தீன் அறிந்து கொண்டார். உடனே ஆளை அனுப்பி அவர்கள் அனைவரையும் அரண்மனைக்கு அழைத்து வரச்செய்தார். அவர்கள் வந்ததும் அவர்களை வாய்க்கு வந்தபடி ஏசினார். பின்னர் தம் வாளை உருவிக் கொண்டு, அவர்களில்

எவரேனுக்கும் ஆண்மையிருப்பின் அவருடன் நேருக்குநேர் போரிடலாம் என்று கர்ச்சித்தார். அப்போது நஸ்ரத் சுபா என்ற பிரபு சுல்தான் முன்வந்து கண்ணியமும் பொறுமையும், தாராள மனப்பான்மையும் கொண்ட சுல்தானுக்கு எதிராகச் சதி செய்வதற்கு எக்காலமும் அவர்கள் எண்ணியதில்லை என்றும், பிரபுக்களை தம்குழந்தைகள் போல் பாவிக்கும் சுல்தானை வீழ்த்த அவர்கள் ஒருகாலும் சம்மதிக்க மாட்டார்கள் என்றும், அவர்களைப்போல சுல்தானிடம் விசுவாசத்துடன் நடக்கக் கூடியவர்கள் வேறேவரும் இருக்கமுடியாது என்றும் கூறினர். இந்த வகையான முகமனுரைகள் சுல்தானுடைய கோபத்தைக் குறைத்து விட்டன. சுல்தான் அவர்களை ஓராண்டுவரை அரசவைக்கு வரக்கூடாது என்று கூறி அவர்களை மன்னித்து அனுப்பி வைத்தார்.

ஜலாலுத்தீனும் சிதிமௌலாவும் : எல்லாரிடமும் கருணையுடன் நடந்துவந்த சுல்தான் ஒருவர்பால் மட்டும் மிகக் கடுமையாக நடந்து கொண்டது வியப்புக்குரிய செய்தியாகும், அந்தத் துரதிருஷ்டசாலி சிதிமௌலா என்ற அருட்டொண்டராவார். சிதிமௌலா பாரசீக நாட்டவர். பால்பன் காலத்தில் டில்லியில் குடியேறினர். அவரைப்பற்றி மாறுபட்ட கருத்துக்களை வரலாற்று நூல்கள் நமக்களிப்பதால் அவர் ஒரு அருட்டொண்டரா அல்லது போலிச் சாமியாரா என்பதை நாம் உறுதியாகக்கூற இயலவில்லை. பிரிஷ்டா அவரை ஒரு புனிதராகக் கருதுகிருர். ஆனுல் அவர் ஜமா மசூதிக்கு எப்போதும் சென்றதில்லை என்றும் நமாஸை படித்தது உண்மையெனினும் அதைத் தொழுகைக் கூட்டத்தில் படித்ததில்லை என்றும் எளிய வாழ்க்கையினை நடத்தி வந்தார் என்றும் உணவுப்பற்றிய செய்தியில் மிகச் சிக்கனமாக இருந்தார் என்றும் மனிதனுக்குரிய ஆசைகளுக்கு அவர் இடமளிக்கவில்லை என்றும் பிரிஷ்டா கூறியுள்ளார்.[1] திருமணவாழ்க்கையை அவர் மேற்கொள்ளவில்லை. வீட்டில் பணிபுரிய பெண்களை வேலைக்கமர்த்திக்கொண்டாரில்லை. மக்களிடம் எதையும் வேண்டிப் பெற்றதில்லை. அதே நேரத்தில் அவர்களுக்கு தாராளமாகச் செலவு செய்தார். ஆகவே அவரை ஒரு மந்திரவாதியாக சிலர் எண்ணியதுண்டு. மட்ட உலோகத்தைப் பொன்னுக்கி தம் செலவிற்கு வேண்டிய பொருளைப் பெற்ற ஓர் இரசவாதி என அவரைக் கருதியவர்களும் உண்டு. தக்கர்கள் அவருக்கும் பணம் கொடுத்தனர் என்றும் கான்-இ-கானுன் அவருக்குப் பண உதவி செய்து வந்தார் என்றும் கூறப்படுகிறது. அஜோத் கேட் (Ajod gate)இல் அவர் ஒரு கன்காவை (Khankah) (புனிதர்கள் வாழுமிடம்)

[1] p 92

அமைத்தார். நாற்றிசையிலிருந்து மக்கள் அக்கன்காவை நாடி வந்தனர். ஒவ்வொரு நாளும் 2,000 மணங்கு (maund) மைதா மாவும், 500 மணங்கு இறைச்சியும் 500 மணங்கு நெய்யும், 300 மணங்கு சர்க்கரையும் 200 மணங்கு காய்கறிகளும் அவரது சமையற்கூடத்தில் செலவாகின என்று பரணி கூறுகிறார்.[1] ஒரு முறை ஜலாலுத்தீன் பிருஸ்கல்ஜி மாறுவேடமணிந்து அந்த கன்காவிற்குச் சென்றதாகவும், அவர் கேள்வியுற்றதற்கு மேலாக அங்கு பணம் செலவிடப்பட்டு வருவதை அவர் நேரில் கண்டதாகவும் கூறப்படுகிறது.[2]

சிதிமௌலா அரசியல் விவகாரங்களில் தலையிட்டும் வந்தார். கான்-இ-கானுனுடைய அன்பையும் ஆதரவையும் அவர் பெற்றிருந்தமையால், சுல்தானுடைய இளைய மகன் அர்க்கலிகானுடைய பகைவராகக் கருதப்படலானார். புதிய அரச குலத்தினை ஏற்றுக் கொள்ள விரும்பாத பழைய துருக்கிய பிரபுக்களின் சந்திப்பிடமாகவும் அவரது கன்கா பயன்பட்டது. கான்-இ-கானுன், காஜி ஜலால் கஷானி போன்ற புதிய ஆட்சியின் முக்கியத் தலைவர்களும் அவரது கன்காவிற்கு அடிக்கடி விஜயம் செய்தனர். விரைவில் அவரைப் பின்பற்றி வந்தவர்களின் எண்ணிக்கை 10,000-ஐ எட்டி விட்டது.[3]

விரைவில் அவருடைய சகாக்கள் ஒரு சதித் திட்டத்தை வகுத்தனர். அவர்களுள் முக்கியமானவர்கள். கொத்தவால் நிரன்ஜன், ஹதியா பெய்க் என்ற அதிகாரிகளாவார்கள். தொழுகைக்காக ஜும்மா மசூதிக்குச் செல்லும்போது ஜலாலுத்தீனைக் கொன்றுவிடுவதென முடிவு கட்டினார்கள். ஜலாலுத்தீனைத் தீர்த்துக்கட்டிய பிறகு சிதிமௌலாவை கலீபாவாக அறிவிப்பதென்று முடிவு செய்தனர். சுல்தான் நாசிர் உத்தீனுடைய மகள் ஒருத்தியை அவருக்கு மணமுடித்து வைத்து அவரது நிலையைப் பலப்படுத்தி விடவும் அவர்கள் திட்டமிட்டனர். காஜி ஜலால் கஷானிக்கு காஜி கான் என்ற பட்டம் அளித்து மூல்தான் இக்தாதாராக நியமிக்கவும் அவர்கள் முடிவு செய்தனர். அதையடுத்து பால்பனுடைய பிரபுக்களின் சந்ததியாருக்கு எல்லா பதவிகளையும் பகிர்ந்தளிக்க வேண்டும் என்று திட்டமிட்டனர்.

சதிகாரிகளுள் ஒருவர் சதித்திட்டத்தை அம்பலப்படுத்தி விட்டார். சிதிமௌலாவின் கன்காவில் நடைபெற்ற நிகழ்ச்சிகள்

[1] p. 209

[2] Badauni, Ranking I, 234

[3] Ferishta, 93

அனைத்தையும் ஒன்றுவிடாமல் சுல்தானுக்கு அறிவித்தார். சதிகாரர்கள் அனைவரும் கைது செய்யப்பட்டு சுல்தானுடைய முன்னிலையில் கொண்டுவந்து நிறுத்தப்பட்டனர். கைது செய்யப்பட்டவர்கள் தங்களுக்கு ஒன்றும் தெரியாது என்றும், தாங்கள் நிரபராதிகள் என்றும் கூறினர். எனவே உண்மையை வெளிப்படுத்தும் நோக்கத்துடன் பஹார்பூரில் ஒரு பெருந் தீ மூட்டப்பட்டது. சதிகாரர்கள் அத்தீயில் உட்கார வேண்டும் என்றும், அவர்களைத் தீ ஒன்றும் செய்யாவிடில் அவர்கள் குற்றமற்றவர்களாகக் கருதப்படுவர் என்றும் சுல்தான் அறிவித்தார். அதைக் கேட்ட உலமா தீயினுடைய குணம் அதில் இடப்படும் பொருள் எதுவாயினும் அதனை எரித்துவிடுவதேயாகும். குற்றமற்றவர், குற்றவாளி என்று அது பாகுபாடு செய்து அதற்கேற்ப தன்னுடைய எரிக்கும் தன்மையை மாற்றிக் கொள்ளாது என்றும் அவர்கள் கூறினர்கள். எனவே அம்முறை சரியானதல்ல என்று வாதாடினர்கள். எனவே சுல்தான் அம்முறையைக் கைவிட்டார். சதிகாரர்கள் குற்றவாளிகள் என்று தாம் உறுதியாக கருதுவதால், அவர்களுடைய குற்றத்தை மெய்ப்பிக்க வழியில்லாது இருப்பினும் அவர்களைத் தாம் தண்டிக்காது விடுவதில்லை என்றும் சுல்தான் அறிவித்தார். நிரன்ஜன் கொத்வால், ஹதியா பெய்க் ஆகியோரைக் கொல்லுமாறு ஆணையிட்டார். ஏனைய பால்பானி பிரபுக்களையும் டில்லியை விட்டு வெளியேற்றினர். அதன் பின்னர் சங்கிலியால் பிணைக்கப்பட்டு சிதிமௌலா சுல்தான் முன்னர் கொண்டு வரப்பட்டார். அவரைக் கண்டதும் சுல்தானுடைய கோபம் கடலெனப் பொங்கியது. அப்போது அங்கு வந்திருந்த ஹைதரி துறவுக்குழு(order)வைச் சார்ந்த அபுபேக்கர் தூசி என்பவரைப் பார்த்து சிதிமௌலாவின்மீது வஞ்சம் தீர்த்துக் கொள்ளும்படி சுல்தான் கூறினர். அதற்காகவே காத்திருந்த சிதிமௌலாவின் பகைவர்கள் அவரை ஆயுதங்களைக் கொண்டு தாக்கி கீழே வீழ்த்தினர்கள். அர்க்கலிகான் யானைப்பாகனை அழைத்து சிதிமௌலாவை யானையைக் கொண்டு மிதித்து அவரை சாகடிக்க கட்டளையிட்டார். இவ்விதமான குரூரச் செயல்களை எல்லாம் தாம் முற்றிலும் ஆமோதிக்கும் வகையில் சுல்தான் பாாத்துக்கொண்டு வாளாயிருந்தார். சிதிமௌலா இறந்த பிறகு பத்து கஜம் நீளம், மூன்று கஜம் அகலமுள்ள ஒரு குழியை வெட்டி, அதில் மூட்டி, அத்தீயில் எஞ்சியிருந்த சிதியினுடைய முக்கிய ஆதரவாளர்களை இடுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டன என்றும், அர்க்கலிகான் தலையிட்டு அக்கொடூரச் செயலை தடுத்தார் என்றும் யஹியா கூறுகின்றார்.[1] அர்க்கலீகா

[1] T. M. S. 67

னுடைய பரம விரோதி சிதிமௌலாவே ஆவார். அவரைக் கொன்றுவிட்டபிறகு ஒன்றுமறியா அவருடைய ஆதரவாளர்களைக் கொல்லுவதால் பயன் ஏதும் ஏற்படாது என்று அவர் எண்ணி யிருக்கக்கூடும்.

சிதிமௌலாவின் மரணத்தையடுத்து டில்லியில் புழுதிக் காற்று வீசியது. அதைத் தொடர்ந்து வறட்சி நிலை உருவாகியது. டில்லியிலும், சிவாலிக் குன்றுகளிலும் பஞ்ச நிலை ஏற்பட்டது. இறுதியில் சுல்தான் பரிதாபமாகக் கொல்லப்பட்டார். இந் நிகழ்ச்சிகள் அனைத்தும் சிதிமௌலாவின் குற்றமற்றத் தன்மையினை மெய்ப்பிக்கும் வகையில் நடைபெற்றன என்று அவரது ஆதரவாளர்கள் நம்புவதாக பரணி தம் நூலில் எழுதி யுள்ளார். இடைவிடாது மக்கள் பிரார்த்தனையில் ஈடுபட்டமை யால் நிலைமை இரண்டாண்டுகள் கழித்து சீராகியது என்று அவர் குறிப்பிட்டுள்ளார். சிதிமௌலா குற்றமற்றவர் என்பதை எடுத்துக்காட்டவே பரணி இவ்வாறு எழுதியுள்ளார். பரணி மரபு வழுவாத முஸ்லிம்களுள் ஒருவர். சிதிமௌலாவை அவர் பல முறைச் சந்தித்திருந்தார். அவருடன் அவர் மடத்தில் பரணி உண்டு களித்த நாட்கள் பல. மேலும் சிதிமௌலா குற்றமற்றவர் என்பதை உறுதியாக நம்பியிருந்தார். எனவே சிதி மௌலாவைக் கொலை செய்தது தவறு என்று திடமாக எண்ணியமையால் மேற் கொண்டவாறு அவர் எழுதியுள்ளார். சிதியினுடைய கொலைக்குக் காரணம் அவரை விரும்பாத மற்ற துறவுக் குழுக்களும், அர்க்கலீ கானுமே ஆவார்கள் என்பர் சிலர். ஜலாலுத்தீனுடைய மூத்த மகன் கான்-இ-கானன் சிதிமௌலாவிடம் அடிக்கடி செல்வதுண்டு. சிதிமௌலாவின் செலவுக்கு அவரே பணம் கொடுத்துவந்தார் என்றும் சிலர் கருதினர்கள். சமயப் பற்றுடைய கான்-இ-கானன் அவ்வாறு நடந்திருப்பின் அதில் தவறு ஏதுமில்லை என்றே கூற வேண்டும். சிதிமௌலாவும் கான்-இ-கானன் இடம் மிக அன்பாக இருந்தார். இளவரசரை அன்பின் காரணமாக அவர் மகனே என்று அழைப்பதுண்டு. அண்ணனிடம் பொறாமை கொண்ட அர்க்கலீகான் இதைக் கேட்டதும் சிதிமௌலாவிடம் வெறுப்புக் கொண்டது இயற்கையே. மேலும் சிதிமௌலாவை மரபு வழுவாத சமயத் தலைவராகக் கருத இயலாது. எனவே மரபு வழுவாத துறவுக் குழுவினர்கள் அவரை வெறுத்தனர். இவர்கள் அனைவரும் சேர்ந்து சிதிமௌலாவின் மீது வீண் பழி சுமத்தி அவரைக் கொலை செய்ய சுல்தானைத் தூண்டினர்கள் என்பர் ஒரு சிலர். சுல்தானுக்கு எதிராக உருவாகிய சதி திட்டத்தில் சிதி மௌலா முக்கிய பங்கினை வகித்திருந்தார் என்பது பரணி அளிக்கும் விவரங்களிலிருந்து நன்கு புலப்படுகிறது என்று டாக்டர்

கே. எஸ். லால் அவர்கள் கூறியுள்ளார். பல மாதங்களாக சிதிமௌலாவின் கன்காவில் நடைபெற்று வந்த அரச துரோகச் செயல்களை வேறு எந்த சுல்தானும் சகித்துக் கொண்டிருக்க முடியாது என்றும், சிதி செய்த குற்றத்திற்கு வேறெந்தவிதமான தண்டனையை அவர் எதிர்பார்க்க இயலாது என்றும், அவரிடம் ஜலாலுத்தீன் நடந்துகொண்ட விதம் முற்றிலும் சரியானதே என்று லால் கூறுகிறார்.[1]

### ஜலாலுத்தீனுடைய படையெடுப்புகள்

சிதிமௌலாவின் சதியினை முறியடித்த பிறகு சுல்தான் இராஜ புதனத்தை நோக்கி படை நடத்திச் சென்றார். புறப் படுதற்கு முன்னர் அர்க்கலீகானை பகராட்சியாளராக நியமித்து தாம் டில்லியில் இல்லாத காலத்தில் ஆட்சியை நடத்தும் பொறுப்பினை அவருக்கு சுல்தான் அளித்தார். சிதியின் மறை விற்குப் பின்னர் கான்-இ-கானன் சந்தேகத்திற்கிடமளிக்கும் வகையில் இவ்வுலகை விட்டு மறைந்தார். ஆதலால் தான் அர்க்கலீகான் பகராட்சியாளராக நியமிக்கப் பட்டார்.

1291ஆம் ஆண்டு மார்ச் மாதம் 22ஆம் நாள் படை சீரியினின்றும் இரண்தம்பார் நோக்கிப் புறப்பட்டது.[2] டில்லியை விட்டு விரட்டியடிக்கப்பட்ட சௌஹான் அரசர்கள் இரண்தம் பாரில் பலம் வாய்ந்த கோட்டையொன்றை அமைத்து அங்கு தமது ஆதிக்கத்தை நிலைநாட்டியிருந்தார்கள். ஜலாலுத்தீன் பிரூஸ் காலத்தில் இராணா ஹமீர்தேவ் அதனையாண்டு வந்தார். போர்த்திறத்தில் சிறந்து விளங்கிய இராணா அண்டை அரசர் களுடன் பொருது அவர்களை அடிபணிய வைத்தார். அவர்களுள் ஒருவர் கர்ஹ மண்டலாவைச் சார்ந்த கோண்ட் ராஜா என்பவர். அவர் ஹமீருக்குக் கப்பம் செலுத்த ஒப்புக் கொண்டார். உஜ்ஜயினி அரசரான இரண்டாம் போஜ ராஜனுடைய தலை நகரைக் கைப்பற்றினார். ஆஜ்மீர் போன்ற நகரங்கள் வழியாக அவர்தம் நாடு திரும்பி வரும்வழியில் பல ஹரியானா பகுதிகளும் அவர் தாக்குதலுக்குள்ளாயின. இடங்களைக் கைப்பற்றினார். ஹமீருடைய போர்ச் செயல்களால் டில்லியினுடைய மேலாதிக்கத் திற்கு ஆபத்து விளையுமோ என்ற அச்சம் ஜலாலுத்தீனுக்கு ஏற்பட்டது. இதுவே ஜலாலுத்தீனுடைய படையெடுப்புக்கு முக்கிய காரணமாக அமைந்திருக்கக் கூடும். ஜலாலுத்தீன் ஒரு சிறந்த அனுபவமிக்க போர் வீரர். தமது போர்த் திறமையை

[1] Op. cit p. 27

[2] Iswari Prasad 1290-ல் புறப்பட்டது என்கிறார். (M.I. p. 209)

மீண்டும் வெளிப்படுத்துவதற்கு சமயம் நோக்கிக் காத்திருந்தார். மேலும் அவர் சமயப்பற்று மிக்கவர். இந்துக்கள் மீது புனிதப் போர் நடத்த அவர் துடியாய்த் துடித்திருந்தார்.

சுல்தானுடைய படைகள் ரேவாரி, நார்னேல் வழியாகச் சென்று ஆள்வாருக்குள் (Alwar) புகுந்து மாண்டவரை முற்றுகை யிட்டன. மாண்டாவர் விரைவில் சுல்தான் கைவசமாயிற்று. அங்கிருந்து டில்லிப் படைகள் இரண்தம்பாரை நோக்கிச் சென்றன. இரு வாரங்கள் பிரயாணத்திற்குப் பின்னர் அவை ஜெயினை வந்து அடைந்தன. அவற்றை எதிர்த்த சௌஹான் படைகள் இரு சண்டைளிகளும் தோற்கடிக்கப்பட்டன. குர்தான் சாயினி (Gurdan Saini) என்ற சிறப்புமிக்க சௌஹான் படைத்தலைவர் போரில் வீர மரணமடைந்தார், ஜெயின் கோட்டை பகைவர்கள் கையில் சிக்குண்டது - சுல்தான் அக்கோட்டையைத் தரைமட்ட மாக்கும்படி ஆணையிட்டார். ஜெயினில் காணப்பட்ட இந்து சிற்பங்களையும், செதுக்கோவியங்களையும் கண்டு ஜலாலுத்தீன் பிரூஸ் வியப்படைந்தார், அவற்றின் அழகில் மெய்மறந்து ஒரு கணம் நின்றார். உருவ வழிபாட்டில் அவர் கொண்டிருந்த வெறுப் புணர்ச்சி விரைவில் மேலோங்கியது, எனவே அவற்றையெல்லாம் சுக்கு நூறாக உடைத்தெறியும்படி கட்டளையிட்டார். சுமார் ஆயிரம் மணங்கு எடையுள்ள வெண்கலத்தாலான இரண்டு பெரிய பிரம்மாவின் உருவச் சிலைகளை சிறு துண்டுகளாக உடைத்து அவற்றை டில்லியிலுள்ள ஜும்மா மசூதியின் வாயிற்படியில் கிடத்துவதற்காக தம்முடைய அதிகாரிகளிடையே பங்கிட்டளித் தார். ஜெயினைக் கைப்பற்றும் முயற்சியில் சுல்தான் ஒரே ஒரு துருக்கிய வீரரை மட்டுமே இழந்தார். ஆனால் பகைவர்கள் ஆயிரக்கணக்கில் மடிந்தார்கள் என்று அமீர் குஸ்ரு கூறியுள்ளார்.[1]

மாமுத் சர்ஜான்தார் தலைமையின் கீழ் ஒரு படையினை மாள வத்திற்கு அனுப்பி வைத்தார். சம்பல், குவாரி ஆறுகளைக் கடந்து அப்படை மாளவத்தை அடைந்தது. டில்லிப் படைகள் அங்கி ருந்த கோயில்கள் பலவற்றை அழித்தன. ஏராளமான பொருளைக் கொள்ளை அடித்து விட்டு அவை திரும்பின.

இவையறிந்த ஹமீர்தேவ் அண்டை நாட்டுத் தலைவர் களுடைய உதவியுடன் தமது கோட்டையைப் பலப்படுத்திக் கொள்வது நலமென்றறிந்து அம்முயற்சியில் தீவிரமாக ஈடுபட்டி ருந்தார். ஜலாலுத்தீன் பிரூஸ் ஜெயிலில் இருந்தவாறே முற்று கைக்கு வேண்டிய ஏற்பாடுகளை மேற்கொள்ளுதற்குரிய ஆணை

[1] Miftah up Furuh, p 30,

களைப் பிறப்பித்தார். தேவையான கல்லெறியும் பொறி போன்ற கருவிகளை அமைக்கக் கட்டளைகளைப் பிறப்பித்தார். முற்றுகைக்கு வேண்டிய பூர்வாங்க வேலைகள் நடந்து கொண்டிருந்தபோது அவற்றை மேற்பார்வையிடத் தாமே இரண்தம்பாருக்குச் சென்றார். எளிதில் தகர்க்க இயலாத நிலையில் கம்பீரமாக எழும்பியிருந்த இரண்தம்பார் கோட்டையைக் கண்டதும் அதைக் கைப்பற்ற எத்தனை முஸ்லீம் உயிர்களைத் தியாகம் செய்ய வேண்டிவரும் என்பதை ஜலாலுத்தீன் ஆராயத் தொடங்கினர். அன்றே ஜெயின் திரும்பிய சுல்தான் தாம் முற்றுகையைக் கைவிட்டு விட்டதாகத் தமது அதிகாரிகளுக்கு அறிவித்தார். பல உயிர்களுக்கு சேதம் விளைவிக்கத் தாம் விருப்பங்கொள்ளவில்லை என்பதையும் உயிரிழந்தவர்களின் விதவைகளையும், அனாதைகளையும் நேருக்கு நேர் சந்திக்க தமக்கு தைரியமில்லை என்பதையும், முற்றுகையைக் கைவிட்டதற்குக் காரணங்களாகக் கூறினர்.[1] சுல்தானுடைய முடிவு சரியானதல்ல என்று அகமது சாப் எடுத்துக் கூறினர். இரண்தம்பார் கோட்டையைக் கைப்பற்றவில்லையெனில் சுல்தானுடைய பெருமை குன்றிவிடும் என்றும், இரண்தம்பார் அரசருடைய மதிப்பு உயர்ந்து விடும் என்றும் சமயப்பற்றுடன் அரசருக்குரிய வீரத்தைப் பெற்றிருந்த மாமூத் போன்ற அரசர்களைப் பின்பற்றுதல் நல்லது என்றும் கூறினர், இரண்தம்பார் போன்ற பத்து கோட்டைகளைவிட ஒரு முஸ்லீமினுடைய ஒரு மயிரை மேலாகக் கருதுபவன் நான் என்றும் உருவ வழிபாடு செய்பவர்கள் எவரையும் தங்கள் நாட்டில் விட்டு வைக்காத மேன்மை வாய்ந்த அரசர்களுடன் தம்மை ஒப்பிடுதல் சரியாகாது என்றும் கூறி முற்றுகையை முடிவாகக் கைவிட்டு டில்லி திரும்பினர். டில்லியில் அவருக்கெதிராக சூழ்ச்சிகள் உருவாகி வருகின்றன என்ற செய்தி சுல்தான் காதுக்கெட்டியமையால் அவர் முற்றுகையைக் கைவிட்டார் என்றும் கூறப்படுகிறது.[2]

மங்கோலியப் படையெடுப்பு: இவரது ஆட்சிக் காலத்தில் மங்கோலியர்கள் மீண்டும் இந்தியாவின் மீது படையெடுத்து வந்தனர். இப் படையெடுப்பு கி. பி. 1291-92இல் நடைபெற்றது. பாரசீகத்தை ஆண்டு வந்த மங்கோலிய அரசர் ஹுலாகூகான் (Huliaku Khan) என்பவரின் பேரப்பிள்ளையான அப்துல்லா என்பவர் இப்படையெடுப்பினை முன்னின்று நடத்தினர். ஹுலாகூ கான் செங்கிஸ்கானுடைய பேரனாவார். 150,000 மங்கோலியர்களுடன் புறப்பட்ட அப்துல்லா வேகமாகப் படை நடத்தி சுனும்

[1] Dr. K. S. Lal, p. 29

[2] ACHI, v p. 319

(Sunam) என்னுமிடத்திற்கருகே வந்து சேர்ந்தார். இதற்கிடையில் ஜலாலுத்தீன் பிரூஸ் மங்கோலியப் படையெடுப்பைப் பற்றிய செய்தியைக் கேள்வியுற்ற உடனேயே படை திரட்டிக் கொண்டு மங்கோலியர்களை எதிர்கொள்ளப் புறப்பட்டார். இரு படைகளும் சிந்து நதிக்கரையை அடைந்தன. தீர்மானிக்கும் ஆற்றலுள்ள சண்டையொன்றை மேற்கொள்ள இருசாராரும் முனைந்து இருந்தனர். இதற்கிடையில் சில்லறைச் சண்டைகளும் அவ்வப்போது ஏற்பட்டன. ஒரு நாள் மங்கோலியப் படையின் ஒரு பகுதி ஆற்றைக் கடந்து டில்லிப் படையின் ஒரு பகுதியுடன் சண்டையிட்டது. அச் சண்டையில் பகைவர்கள் தோற்கடிக்கப்பட்டனர். அவர்களுள் பலர் உயிரிழந்தனர். பலர் சிறை பிடிக்கப்பட்டனர். அதையடுத்து போர் நிறுத்தப் பேச்சுகள் நடை பெற்றன. அப்துல்லாவும், ஜலாலுத்தீன் பிரூஸும் ஒருவரையொருவர் சந்தித்துப் பேசலானார்கள். ஒருவரை ஒருவர் நண்பர்கள் போன்று வாழ்த்தலானார்கள். அப்துல்லாவை தம்முடைய மகன் என்று சுல்தான் அழைக்கும் அளவிற்கு அவர்களிடையே நட்புறவு ஏற்பட்டது. இறுதியில் அப்துல்லா தமது தாயகம் திரும்பினார். ஆனால் உல்கூ (Ulghu)வும் சில மங்கோலியத் தலைவர்களும் 4,000 மங்கோலியர்களும் இஸ்லாம் மதத்தைத் தழுவிக் கொண்டு இந்தியாவிலேயே தங்கி விடுவதென முடிவு கட்டினார்கள். சுல்தானுடன் அவர்களும் டில்லிக்குச் சென்றார்கள். டில்லிக்கருகேயுள்ள இந்தர்பத், கைலூகரி, கையாஸ்பூர் ஆகிய இடங்களில் அவர்கள் குடியேற்றங்களை அமைத்துக் கொண்டனர். அவை முகல்புரா என்று அழைக்கப்படலாயின. சுல்தான் அம் மங்கோலியர்களுக்கு வசதிகள் பல ஏற்படுத்திக் கொடுத்தார். பணவுதவியையும் அவர்களுக்குச் செய்தார். நாளடைவில் இம் மங்கோலியர்கள் இந் நாட்டு மக்களுடன் இரண்டறக் கலந்து விட்டனர். இவர்களை புதிய முஸ்லிம்கள் என்று கூறுகின்றனர். ஜலாலுத்தீன் தம்முடைய மகள் ஒருவளை உல்கூவிற்கு மணமுடித்து வைத்தார்.

**ஜலாலுத்தீனும் குர்ஷாஸ்ப்பும்:** ஜலாலுத்தீடைய மருமகனும், சகோதரனுடைய மகனும், பின்னர் அலாவுத்தீன் என்ற பட்டத்துடன் அரியணை ஏறியவருமான அலீ அல்லது குர்ஷாஸ்ப்பின் தலைமையின் கீழ் சில படையெடுப்புகள் நடத்தப்பட்டன. அவற்றை அறிவதற்கு முன் குர்ஷாஸ்ப்பின் முந்திய வாழ்க்கையைப் பற்றி அறிவது அவசியமாகும்.

அலாவுத்தீனுடைய பிறப்பு, குழந்தைப் பருவம், வாலிபப் பருவம் ஆகியவற்றைப் பற்றிய விவரமான குறிப்புகளை நமக்கு அக்கால வரலாற்று ஆசிரியர்கள் அளிக்கவில்லை என்று கூறின் அது

மிகையாகாது. இடைக்கால இந்தியாவில் தோன்றிய பெரும் புள்ளிகளில் ஒருவராகக் கருதப்படும் அலாவுத்தீனுடைய முந்திய வாழ்க்கையினை பற்றிய குறிப்புகளை வரலாற்றுப் பதிவாளர்கள் நமக்குத் தராமல் போனது, வியப்புக்குரியதாகும்.[1] அவர் எப்போது பிறந்தார் என்பது பற்றி திட்டவட்டமாகக் கூறிய வரலாற்றாசிரியர் எவருமிலர். பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஹாஜி உத்தபீர் என்ற வரலாற்றாசிரியர் அலாவுத்தீன் தமது முப்பத்தி நான்காவது ஆண்டில் இரண்தம்பாரைக் கைப்பற்ற படையுடன் புறப்பட்டார் என்ற தகவலை நமக்குத் தருகின்றார். இப் படையெடுப்பு கி. பி. 1300—1301-ல் நடை பெற்றது என்று நாம் அறிகிறோம். இதைக் கொண்டு அலாவுத்தீன் கி. பி. 1266—1267-ல் பிறந்திருக்கக் கூடும் என்று கணக்கிடலாம்.

அலாவுத்தீனுடைய தந்தை ஷிஹாப்புத்தீன் மசூத் கல்ஜி என்பவராவார். ஷிஹாப்புத்தீனும் சுல்தான் ஜலாலுத்தீன் பிருஸ் கல்ஜியும் உடன் பிறப்புக்களாவார்கள். ஷிஹாப்புத்தீனைப் பற்றி நாம் அதிகமாகத் தெரிந்து கொள்ள வாய்ப்பில்லை. அமீர் குஸ்ரு தமது தேவால் இராணியில் அவர் ஒரு தைரியமிக்க போர் வீரர் என்று விவரித்துள்ளார்.[2] தமது சகோதரன் ஜலாலைப் போலவே சுல்தான் பால்பனிடம் பணியாற்றி வந்திருந்தார் என்றும் நாம் அறிகிறோம்.

ஜலாலுத்தீன் ஆட்சிப் பொறுப்பை அடைவதற்கு முன்பே ஷிஹாப்புத்தீன் இறந்து விட்டார் என்பது உண்மை. ஏனெனில் அவர் ஆட்சிக்கு வந்த பின்னர் ஒரு முறையாவது ஷிஹாப்புத் தீனுடைய பெயர் அடிபடவில்லை. மேலும் பரணி போன்ற ஆசிரியர்கள் அலாவுத்தீன் தமது பெரியப்பாவின் ஆதரவில் வளர்ந்து வந்தார் என்று கூறியுள்ளனர். இதிலிருந்து அவர் இளமையிலேயே தம் தந்தையை இழந்திருக்க வேண்டும் என்பது புலனாகிறது.

அலாவுத்தீனுடைய இயற்பெயர் அலீ அல்லது குர்ஷாஸ்ப் என்பதாகும். அவருக்கு மூன்று இளைய சகோதரர்கள் இருந்தனர். அல்மாஸ்பெக் (Almas Beg), குத்லூ திகீன் (Qutlugh Tighin), முகமது (Muhammad). குத்லூ திகீன், மலிக் சஜ்ஜூவிற்கு எதிராகப் போராடினார் என்பதைத் தவிர அவரைப் பற்றி வேறு குறிப்புகளை நாம் பெற்றிருக்கவில்லை. அதே போன்று பின்னர் அய்கத்கான்

[1] Dr. K. S. Lal P. 33

[2] Delva Rami, 52

(Ikat Khan) என்றழைக்கப்பட்ட சுலைமானுடைய தந்தை முகமது என்பது தவிர முகமதுவைப் பற்றி வேறு விவரங்கள் நமக்குக் கிடைக்கவில்லை. குழந்தைப் பருவத்தில் அவர் முறையாகக் கல்வி கற்கவில்லை. ஆனுல், வாலிபப் பருவத்தை எய்தியபோது போர் கருவிகளைப் பயன்படுத்தும் முறை, குதிரை ஏற்றம் போன்றவற்றில் நல்ல தேர்ச்சி பெறும் அளவிற்கு அவருக்குப் பயிற்சி அளிக்கப் பட்டது. அவர் வாழ்க்கையின் முந்திய காலத்தில் அடைந்த பெரும் வெற்றிகள் அவர் பெற்றிருந்த பயிற்சியின் மேன்மையை பறைசாற்றுகின்றன.

ஜலாலுத்தீன் அரசுரிமையைப் பெறுவதற்கு மேற்கொண்ட முயற்சிக்கு பெரும் ஆதரவளித்தவர்களுள் அலாவுத்தீனும் ஒருவர். ஜலாலுத்தீனை ஒழித்துக்கட்டுவதற்கான சதி திட்டத்தைத் தீட்டியவர்களுள் முக்கியமானவர் என்று கருதப்படும் அயித்மார் கக்சன் என்பவரைக் கொன்றவர் அலாவுத்தீனே ஆவார். ஜலாலுத்தீன் பட்டமேறியவுடன் அலாவுத்தீனுக்கு அமீர் இதுஸக் என்ற பதவியை அளித்தார் என்று பரணி குறிப்பிடுகிறுர், குதிரைப் படையின் வலது அணித்தலைவர் (Akhurueg-i-maimha) பதவியில் அவர் நியமிக்கப்பட்டார் என்று தாரிக் இ. முபாரக் ஷாயி கூறுகிறது. பிரபுக்கள் கூட்டத்தில் அலாவுத்தீன் சேர்க்கப் பட்டார் என்பதைத் தவிர வேறெதையும் பிரிஷ்டா கூறவில்லை. தமக்கு புதிதாக அளிக்கப்பட்ட பதவிக்கும் கௌரவத்திற்கும் தாம் அருகதையானவர் என்பதைக் காட்ட மலிக் சஜ்ஜுவின் கலகம் அவருக்கு ஒரு வாய்ப்பினை ஏற்படுத்தித் தந்தது. கலகத்தின் போது அலாவுத்தீன் தமது போர்த் திறத்தை வெளிப்படுத்தும் வகையில் போராடினுர். இச் சம்பவம் அவரது வளர்ச்சிக்கு அடித் தளமாக அமைந்து விட்டது. அவரது வருங்கால வாழ்க்கை மேலும் சிறக்க அது வழி ஏற்படுத்தியது.

கலகத்திற்குப் பிறகு 1291ஆம் ஆண்டில் காராவின் ஆளுநர் பதவி அவருக்களிக்கப்பட்டது. இது அவரது வாழ்க்கையில் ஒரு திருப்புக் கட்டமாக அமைந்து விட்டது. மலிக் சஜ்ஜுவின் கலகம் ஒடுக்கப்பட்டு விட்டது என்பது உண்மையேயானுலும், ஜலாலுத்தீ னிடம் வெறுப்பு காட்டி வந்த அமீர்கள் இன்னும் மனமாறினு ரில்லை. அவர்கள் ஜலாலுத்தீனை தகா முறையில் அரசுரிமையைக் கைப்பற்றியவராகவேக் கருதி வந்தனர். மேலும் அவரை வலிமை வாய்ந்த அரசராகக் கருதவில்லை. எனவே அவரை எளிதில் வீழ்த்தி விட இயலும் என்று எண்ணி வந்தனர். எவரேனும் அத்தகைய முயற்சியில் ஈடுபடுவாரேயாயின் அவருக்கு எல்லா ஆதரவையும் அளிக்க அவர்கள் தயாராக இருந்தனர். அந்த வகையான

அமீர்கள் நிரம்பிய காரா பகுதிக்கு ஆளுநராக சென்றது அவரது அதிர்ஷ்டம் என்றுதான் கூற வேண்டும். ஆளுநர் பொறுப்பேற்ற அதே ஆண்டில் அரசுரிமையைக் கைப்பற்றுவதற்குரிய முயற்சியை அலாவுத்தீன் மேற்கொள்ளுமாறு அவ்வமீர்கள் தூண்டி விட்டனர். அதற்காக ஒரு பெரும் படையை திரட்டுவது எத்துணை எளிய காரியம் என்பதையும் அவர்கள் எடுத்துக் கூறினூர்கள். மேலும் மலிக் சஜ்ஜுவின் தோல்விக்கு முக்கிய காரணமாக அமைந்தது போதிய பணமின்மையே யன்றி வேறல்ல என்பதையும் அவர்கள் தெளிவுபடுத்தினூர்கள். இந்த அறிவுரைதான் அலாவுத்தீனுடைய தேவகிரி படையெடுப்பிற்குக் காரணமாகும் என்று கூறின் அது மிகையாகாது. காராவின் பக்கத்திலிருந்த இந்து அரசுகளைக் கொள்ளை அடித்துப் போதிய பணம் பெறுவதற்கு வாய்ப்பு இருந்தது.

காராவில் ஏற்பட்டிருந்த சூழ்நிலை மட்டும் அலாவுத்தீனுடைய ஆசையைக் கிளறி விடுவதற்குக் கரரணமாகும் என்று கூற இயலாது. அவரது குடும்பத்தில் ஏற்பட்டிருந்த அமைதியின்மையும் ஒரு முக்கிய காரணமாகும். அலாவுத்தீன் ஜலாலுத்தீனுடைய சகோதரனுடைய மகன் மட்டுமல்ல; அவரது மருமகனும்கூட. அவரது மனைவி ஜலாலுத்தீனுடைய மகளாவாள். அவ்விருவருக்கும் எப்போது திருமணம் நடைபெற்றது என்பதை பரணி நமக்கு எடுத்துக் கூறவில்லை. இத்திருமணம் ஜலாலுத்தீன் கைலுாகரியில் குடியேறிய பிறகே நடைபெற்றது என்றும், அலாவுத்தீன் மூத்த மருமகன் என்றும் பிரிஷ்டா கூறியுள்ளார். அலாவுத்தீனுடைய இளவல் அல்மாஸ்பெக் ஜலாலுத்தீனுடைய இளைய மகளை மணம் புரிந்து கொண்டார் என்பது ஈண்டு அறியற்பாலது. அலாவுத்தீனுடைய மண வாழ்க்கை சுவையானதாக அமையவில்லை. தாம் சுல்தானுடைய மகள் என்ற எண்ணம் அவரது மனைவியின் அகங்காரத்தை வளர்த்து விட்டது. கணவன்மீது ஆதிக்கம் செலுத்த வேண்டும் என்ற எண்ணத்தை அவர் ஏற்படுத்தவும் அதுவே காரணமாகும். அவ்விருவரிடையே மனத்தாங்கல் ஏற்பட மற்றொரு காரணமும் இருந்தது. அலாவுத்தீனுக்கு மற்றொரு மனைவியும் உண்டு. அவர் பெயர் மாஹ்ரூ. அவர் பின்னர் அலப் கான் (Alp Khan) என்றழைக்கப்பட்ட மலிக் சஞ்சர் என்பவருடைய சகோதரி. அலாவுத்தீனுக்கு மற்றொரு மனைவி உண்டு என்பதை அறிந்த சுல்தானுடைய மகள் அலாவுத்தீனுடைய விவகாரங்களில் தலையிடலானூர். ஒரு நாள் அலாவுத்தீன் மாஹ்ரூடன் இன்பமாக காலங் கழித்திருந்தபோது ஜலாலுத்தீனுடைய மகள் அவர்களைக் காண நேர்ந்தது. அதைக் காணப் பொறுமல் மாஹ்ரூவை தம் கால் செருப்பால் அவர் அடிதது

விட்டார். இந்த அவமானம் தாங்காமல் அலாவுத்தீன் தம் வாளை உருவி அவரைத் தாக்கினர். அதிர்ஷ்டவசமாக அவர் தப்பித்துச் சென்று விட்டார். இந்த நிகழ்ச்சி சுல்தானுக்கு உடனடியாக அறிவிக்கப்பட்டது. தம்முடைய சகோதரன் மகன் பால் கொண்டிருந்த பாசமும், தம் மகள் செய்தது தவறு என்று அவர் எண்ணியதாலும், சுல்தான் இச்சம்பவத்தைப் பொருட் படுத்தாது விட்டார். ஆயினும் அலாவுத்தீனுக்குத் தம் மனைவி யால் ஏற்பட்ட ஆத்திரம் அடங்கவில்லை. அதற்குத் தூபம் போடுவது போல் அவரது மாமியாரின் நடத்தை அமைந்து விட்டது. அலாவுத்தீனிடத்தில் மரியாதை குறைவாக நடக்கும் படி தமது மகளை அவர் தூண்டிவிட்டார், மேலும் அலாவுத்தீன் சுல்தானைக் கவிழ்க்க திட்டம் போட்டு வருகிருர் என்றும் அவர் தம் கணவரிடத்தில் கூறி அவரை எச்சரித்து வந்தார். இத்தகைய குடும்பச் சூழ்நிலையிலிருந்து விடுபடவே அவர் காராவிற்குச் செல்ல இசைந்தார் என்று கூறப்படுகிறது. அலாவுத்தீனுடைய அமைதி யற்ற குடும்ப வாழ்க்கைக்கு காரணம் அவரது மனைவியும், மாமியும் மட்டும் என்று கூற இயலாது. அலாவுத்தீனும் ஓரளவு அதற்கு பொறுப்புள்ளவராக இருந்தார். அவர் ஒரு கல்நெஞ்சக்காரர்; விட்டுக்கொடுக்கும் மனப்பான்மை அவருக்கில்லை; பழி பாவத்திற்கு அஞ்சாதவர். தன்னலமிக்கவர்; சூழ்ச்சிக்காரர். ஆகவே அவரும் அவரது குடும்பத்தில் வீசிய புயலுக்குக் காரணமாக விளங்கினர். அவரது குடும்ப வாழ்க்கை சீராக அமையாததற்குக் காரணம் எது வாயினும், குடும்ப வாழ்க்கையில் ஏற்பட்ட கசப்பு அரசுரிமையைக் கைப்பற்றும் எண்ணத்தை அவருக்கு உண்டாக்குவதற்கு ஒரு தூண்டுகோலாக அமைந்தது என்பதையும் நாம் மறுக்க இயலாது.

கி. பி. 1292ஆம் ஆண்டிலேயே அலாவுத்தீன் அரசுரிமையைக் கைப்பற்றுவதற்கான திட்டத்தை மேற்கொள்ளலானர் என்று கூற இயலும். அவ்வாண்டில் விதிசா அல்லது பில்சாவைத் தாக்கு வதற்கு சுல்தானுடைய அனுமதியைக் கோரினர். இப்படை யெடுப்பின் நோக்கத்தைப் புரிந்து கொள்ளாமல் ஜலாலுத்தீனும் அவ்வனுமதியை உடனடியாக வழங்கி விட்டார். அலாவுத் தீனுடைய திடீர் தாக்குதல் பில்சா மக்களை நிலை குலையச் செய்தது. முஸ்லிம்களுடைய கைகளில் தங்களுடைய வழிபாட்டுச் சிலைகள் அகப்பட்டு சீரழியக்கூடாது என்பதற்காக அவற்றை பெத்வா ஆற்றில் புதைத்து வைத்தனர். அச்செய்தியை எப்படியோ அறிந்து கொண்ட அலாவுத்தீன் அவற்றைத் தோண்டியெடுக்கு மாறு ஆணையிட்டார். கோயில்கள் பலவற்றை அழித்தார். நகரத்தைச் சூறையாடும்படி ஆணை பிறப்பித்தார். தாம் கைப் பற்றிய கொள்ளைப் பொருட்கள், உருவச் சிலைகள் ஆகியவற்றை

எடுத்துக் கொண்டு நேராக டில்லிக்குச் சென்று சுல்தானிடம் அவற்றை ஒப்படைத்தார். அலாவுத்தீன் தாம் பெற்ற எல்லா பொருட்களையும் தமக்குக் கொடுத்து விட்டார் என்று ஜலாலுத்தீன் எண்ணி ஏமாந்து போனுர். ஏனெனில் எல்லாவற்றுக்கும் மேலான ஒரு பொருளை அவர் ஜலாலுத்தீனுக்குக் கொடுக்கவில்லை தென்னிந்திய இந்து அரசுகளில் மலிந்து கிடக்கின்ற பொருட் செல்வம், அவர்களுடைய பாதுகாப்பு முறையில் காணப்பெற்ற குறைபாடுகள், அவ்ற்றை சென்று அடைவதற்குரிய மார்க்கங்கள் ஆகியவற்றைப் பற்றி தாம் அறிந்து கொண்டவையை மட்டும் சுல்தான் முன்னிலையில் சமர்ப்பிக்கவில்லை என்பதாகும். சுல்தான் அவரிடம் நம்பிக்கைக் கொள்ள வேண்டும் என்பதற்காக மேற் கொள்ளப்பட்ட நடவடிக்கையேயன்றி உண்மையில் அவருக்கு மரியாதை செலுத்த வேண்டும் என்பதற்காக மேற் கொள்ளப் பட்டதன்று. அலாவுத்தீன் தாம் கொண்டு வந்த பொருட்களைச் சுல்தானிடம் சேர்த்த போது அவர் உள்ளம் பூரித்துப் போயிற்று. தம் மருமகனைப் பற்றி பெருமிதத்தோடு பேசலானுர். அவர் கொண்டுவந்த விக்கிரகத்தை பாதௌன் வாயிற்படியில் இஸ்லாமிய மதத்தில் பற்றுக் கொண்டவர்கள் மிதிக்கும் படியாக கிடத்தினுர். அலாவுத்தீனைப் போர் அமைச்சராக நியமித்து அவுத் மாகாணத்தையும் அவருக்கு அளித்தார். அதுமட்டுமன்றி தமது பொறுப்பில் விடப்பட்ட பகுதிகளிலிருந்து பெறப்படுகின்ற உபரி வருமானத்தை தமது படைகளைப் பெருக்குதற்குப் பயன்படுத்த அவர் அனுமதி கோரிப் பெற்றுர். சாந்தேரிக்கு அப்பால் இருந்த அப்படையைக் கொண்டு தாக்கி, அவற்றைக் கொள்ளையடித்து, கொள்ளையடித்தப் பொருட்களை டில்லி கருவூலத்தில் சேர்ப்பிக் கவும் அனுமதி கேட்டுப் பெற்றுர். இவ்வாருகத் தமக்கு எதிராக சுல்தானிடம் கோள் சொல்லி வருபவர்களின் வாயை அடைத்து சுல்தான் தம்மிடம் கொண்டிருந்த நம்பிக்கையை மேலும் பெருக்கினுர். அதே நேரத்தில் சுல்தானுடைய அனுமதியுடன் தம் படைப் பலத்தைப் பெருக்கிக் கொண்டார். அதுமட்டுமன்றி இனி நடக்க விருந்த அரசுரிமைப் போராட்டத்தில் தமக்குத் தேவைப்பட்ட பொருளை கொள்ளையடித்துப் பெற இப்போது வழி ஏற்படுத்திக் கொண்டார். சாந்தேரிக்குப் அப்பால் இருக்கும் பகுதிகளைத் தாக்கச் செல்வதாகக் கூறி தேவகிரிக்குத் திருட்டுத் தனமாகச் செல்ல இப்போது வாய்ப்பு ஏற்பட்டது.

இத்தகைய முன்னேற்பாடுகளுடன் கி.பி. 1296ஆம் ஆண்டில் 8,000 தேர்ந்தெடுத்த குதிரை வீரர்களுடன் தேவகிரியைத் தாக்க அலாவுத்தீன் காராவை விட்டுப் புறப்பட்டார். புறப்படுவதற்கு முன்னர் தமது நம்பிக்கைக்குரிய அலாஉல் முல்க்கிடம் காராவின்

ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்தார். அத்துடன் ஜலாலுத் தீனுக்கு சந்தேகம் ஏற்படாத வகையில் அவ்வப்போது தமது படைப்புடை பெயர்ச்சிகளைப் பற்றி பொய்யான தகவல்களை சுல்தானுக்கு அறிவிக்கவும் ஏற்பாடு செய்தார். சாந்தேரி வரை அவர் பகிரங்கமாகத் தமது படைகளை நடத்திச் சென்ருர். அதன் பிறகு தமது படைகளின் நடமாட்டம் வெளியார் அறியா வண்ணம் மேற்கொள்ளப்பட்டது. சாந்தேரியிலிருந்த விதிசா விற்குத் தம்படைகளை வேகமாக நடத்திச் சென்ருர். அங்கிருந்து விந்திய மலையையும், குறுக்கிட்ட ஆறுகளையும் கடந்து எல்லிச் பூரை அடைந்தார். எல்லிச்பூர் அக்காலத்தில் யாதவர்களுடைய அரசின் வடவெல்லைக் காவல் அரணுக இருந்தது. அங்கிருந்து தேவகிரி நோக்கி புறப்பட்டார். அங்கிருந்து மக்களின் சந்தேகத்தை ஒழிக்க ஜலாலுத்தீனிடம் தாம் சண்டை போட்டுக் கொண்டு தெலுங்காணுவிலுள்ள இராஜமஹேந்திர அரசரிடம் புகலிடம் தேடிப் போய்க் கொண்டிருப்பதாக ஒரு வதந்தியைக் கிளப்பி விட்டார். எனவே அவரை எதிர்த்து நின்று போராட எவரும் வரவில்லை. வேகமாக முன்னேறி தேவகிரிக்கு 12 மைல் தூரத்திலுள்ள காதில ஜோரா கணவாயை வந்தடைந்தார். அப்பகுதியை அப்போது கன்ஹா (Kanha) என்ற சிற்றரசர் ஆண்டு வந்தார். கன்ஹா அலாவுத்தீனை வழி மறித்து அவருடன் போரிட்டார். அப்போரில் போர்க்கலையில் சிறந்து விளங்கிய இருபெண்மணிகள் கலந்து கொண்டதாகவும், அலாவுத்தீனைப் பின்னடையும் அளவிற்கு அப்பெண்புலிகள் போராடினர் என்றும் இறுதியில் அலாவுத்தீன் வெற்றி பெற்ருர் என்றும் இசாமி கூறுகிருர்[1]. எதிர்நோக்கியிருந்த இன்னல்களைத் தம்முடைய படைகள் சமாளிக்க இயலுமா என்பதை அறிந்து அதன் பின்னர் தேவகிரியைத் தாக்குதல் நலம் என்று கருதி தம் படைகளை நோக்கி முதலில் அவர்களுக்கு நேரவிருந்த ஆபத்தைப் பற்றிக் கூறினர். ''போர்க்களத்தில் பெண்கள் கூட தம்மைக் கண்டு பின்வாங்காதிருக்கும்போது ஆண்கள் நமக்கு என்ன தீங்கு இழைப் பார்களோ என்பதை எண்ணிப் பார்க்க இயலாது என்று அப் போதே கூறினர். அதே நேரத்தில் தேவகிரியைக் கைப்பற்று வதால் அவர்கள் பெறவிருந்த பெருஞ் செல்வத்தைப் பற்றியும் கூறினர். இவ்விரு கருத்துக்களையும் கேட்ட அவரது படைகள் பொருட் செல்வத்தையடைய எந்த விதமான ஆபத்தையும் தாங்கள் எதிர்கொள்ளத் தயாராக இருப்பதாக பதிலளித் தார்கள். அதன் பிறகுதான் அலாவுத்தீன் தேவகிரியைத் தாக்க முற்பட்டார்.

[1] Futuh-us Salatin P. 223 24

தேவகிரியை அப்போது இராமச்சந்திரதேவா என்பவர் ஆண்டு வந்தார். அவர் யாதவ குலத்தைச் சார்ந்தவர். அவர் காலத்தில் தேவகிரியில் அமைதிநிலை ஏற்பட்டிருந்தது. வாணிபம் செழித்தோங்கியிருந்தது. ஆயினும் பல ஆண்டுகள் அன்னியர் படை யெடுப்பு இன்மையால் அத்தகையதொரு படையெடுப்பு ஏற்பட்டபோது மக்களிடத்தில் பெரும் பீதி தோன்றியது இயற்கையேயாம். மேலும் அரசருக்கு வயதாகி விட்டதாலும், அவரது மகன் சிங்கன தேவா[1] ஒரு படையுடன் தீர்த்த யாத்திரைக்குச் சென்று விட்டிருந்ததாலும் அலாவுத்தீனை எதிர்த்துப் போராடி விரட்டியடிக்க எவருக்கும் தைரியமில்லாது போயிற்று. எனவே அனைவரும் கோட்டைக்குள் புகுந்து கொண்டு முற்றுகைக்குத் தங்களை ஆயத்தம் செய்து கொண்டனர். அலாவுத்தீனுடைய படைகள் அரண் பாதுகாப்பற்ற நகரத்தின் ஒரு பகுதியைக் கைப்பற்றிக் கொண்டு அதனைச் சூறையாடினார். பிராம்மணர்கள், வணிகர்கள் பலர் சிறைப்பட்டனர். ஏறக்குறைய 40 யானைகளையும் ஓராயிரம் குதிரைகளையும் அலாவுத்தீன் கைப்பற்றிக் கொண்டார். தேவகிரி மன்னருக்கு மேலும் பயத்தை உண்டாக்க மற்றொரு வதந்தியைக் கிளப்பினர். தாம் நடத்தி வந்த படை டில்லிப் படையின் முன்னணிப் படை யென்றும், இருபதாயிரம் படை வீரர்கள் பின்னால் வந்துகொண்டிருக்கிறார்கள் என்றும் அவர் அறிவித்தார். அவ்வதந்தி இராமச்சந்திர தேவாவின் காதுக்கெட்டியதும் அவர் மனம் தளர்ந்து போனார். உடனே சமாதானம் நாடினார். அலாவுத்தீனுடைய தேவகிரி படையெடுப்பு சுல்தானுடைய அனுமதியின்றி நடத்தப்பட்ட படையெடுப்பாகும். ஆகவே அதனை மிகவும் இரகசியமாக வைத்திருந்தார். அந்த இரகசியம் வெளியாவதற்கு பின்பு காரா திரும்பி விடுவது மிகமிக அவசியமாகும். இல்லையெனில் டில்லிப் படைகள் அவரை வழி மறித்து நிற்கக்கூடும். அதன் விளைவாக அவரது திட்டம் தவிடு பொடியாகக் கூடும். மேலும் அலாவுத்தீன் மீண்டும் இந்துக்கள் ஆட்சிப் பகுதிகளின் வழியாகத் திரும்ப வேண்டிய நிலையில் இருந்தார். அவர்கள் யாவரும் திரண்டு தம்மை மடக்குவதற்கு முன்பு காரா திரும்பி விடுவது உசிதமாகும். அதுவன்றி சிங்கன தம் படையுடன் தேவகிரி வருவதற்கு முன்னர் கையில் கிடைத்தவற்றைச் சுருட்டிக் கொண்டு ஊர் திரும்புவது மேலான செய்கையாகப்பட்டது. எனவே தேவகிரி அரசர் சமாதானம் நாடியபோது உடனே அதனை ஏற்றுக் கொண்டார். அதன்படி அவர் 15 நாட்களுக்குள் தேவகிரியை விட்டு நீங்குவதாக ஒப்புக் கொண்டார்.

[1]. இவர் சங்கர தேவா என்றும் அழைக்கப் படுகிறார். (See C.H.I. Vol III. p. 96)

சிறை பிடிக்கப்பட்டவர்களை விடுவிக்கவும் இசைந்தார். அதற்குப் பதிலாக அவருக்கு போர் நஷ்ட ஈடு வழங்க தேவகிரி அரசர் ஒப்புதல் அளித்தார்.

இதற்கிடையில் தேவகிரிக்கு ஏற்பட்ட கேட்டினை சிங்கனு அறிந்து கொண்டார். ஆகவே தம் படைகளை வேகமாக நடத்தித் தலைநகர் வந்து சேர்ந்தார். அதை அறிந்த இராமச்சந்திர தேவா தம் மகனைப் போர்க்கோலம் விட்டொழிக்கும்படி கட்டளையிட்டார். அலாவுத்தீனுடன் போர் மீண்டும் தொடக்குவதால் இதை மேலானதொரு உடன்படிக்கையை செய்து கொள்ள இயலாது என்று இடித்துக் கூறினர். இயற்கையிலேயே நெஞ்ச முத்தம் கொண்டிருந்த சிங்கனு அவரது சொற் கேளாமல் அலாவுத்தீனிடம் தூதுவர் ஒருவரை அனுப்பினர். அலாவுத்தின் தாம் கைப்பற்றிய செல்வமனைத்தையும் விட்டு விட்டுத் தம் நாட்டை விட்டுச் செல்ல வேண்டும் என்றும் தவறினல் அவருடன் போரிட நேரும் என்ற செய்தியை அத்தூதுவர் வாயிலாக அனுப்பி வைத்தார். அதைக் கேட்ட அலாவுத்தீன் மிக்க கோபமடைந்து தூதுவரை அவமானப் படுத்தி அனுப்பி விட்டார். நஸ்ரத்கான் தலைமையில் ஓராயிரம் குதிரை வீரர்களை தேவகிரி கோட்டையை வளைத்து நிற்கும்படி விட்டு ஏனையப் படைகளுடன் சிங்கனுவுடன் போர் செய்யப் புறப்பட்டார். முதலில் யாதவப் படைகள் வெற்றி வாய்ப்பைப் பெற்றிருந்தன. அதையறிந்த நஸ்ரத்கான் தமது தலைவரைக் காக்கும் பொருட்டு முற்றுகையை விட்டொழித்து போர்க்களம் நோக்கி விரைந்தார். நஸ்ரத்கான் படையைக் கண்ட யாதவர்கள் முன்பு அலாவுத்தீன் அறிவித்திருந்த 20,000 பேர் கொண்ட டில்லி குதிரைப் படை இதுவாகத் தான் இருக்கும் என்று தவறுதலாக எண்ணி விட்டனர். அதன் விளைவாக யாதவப் படையினை பீதி கவ்விக் கொண்டது. யாதவப் படைகள் சிதறியோடின. அவ்வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு அலாவுத்தீன் மீண்டும் முற்றுகையைத் தொடங்கினர். உணவுப் பொருட்கள் போதிய அளவில் இராமையால் தேவகிரி மன்னர் நீண்டதொரு முற்றுகையை சமாளிக்க இயலாதென்று உணர்ந்து மீண்டும் சமாதானம் நாடினர். அலாவுத்தீன் இப்போது கடுமையான நிபந்தனைகளை விதித்தார். முன்பு தீர்மானிக்கப் பட்ட போர் நஷ்டஈட்டுத் தொகையைவிட அதிகமான தொகை இப்போது அளிக்க வேண்டும் என்றும் எல்லிச்பூரை அலாவுத்தீனுக்குக் கொடுக்க வேண்டும் என்றும் கூறினர். 600 மணங்கு பொன், 7 மணங்கு முத்துக்கள், இரண்டு மணங்கு நவ ரத்தினங்கள், 400 பீஸ் பட்டுத் துணிகள் அவருக்கு அளிக்கப்

பட்டதாகக் கூறப்படுகிறது.[1] ஆண்டுதோறும் கப்பம் செலுத்தவும் இராமச்சந்திர தேவா இசைந்தார். இசாமி போன்ற ஆசிரியர்கள் அலாவுதீனுக்கும், இராமச்சந்திர தேவாவின் மகளுக்கும் இடையே ஏற்பட்ட திருமணத்தைப் பற்றி குறிப்பிட்டுள்ளார்கள். இச்செய்தியை அக்கால வரலாற்ருசிரியர் எவரும் குறிப்பிடவில்லை என்பதை நாம் அறிதல் வேண்டும். காரா திரும்பும் வழியில் ஆசீர்கார் கோட்டையைத் தாக்க பல பேர்களின் உயிரைக் குடித்தார். தேவகிரி படையெடுப்பைப் பற்றிக் கூறும்போது பிரிக்ஸ் பின்வருமாறு எழுதியுள்ளார். இப்படையெடுப்பினைத் திட்டமிடுவதில் அலாவுத்தீன் காட்டிய மன உறுதி, அதை நிறைவேற்றுவதில் அவர் காட்டிய தைரியம், அதன் விளைவாக அவர் பெற்ற செல்வம் ஆகியவற்றைக் கொண்டு பார்க்குமிடத்து இதைப் போன்றதொரு படையெடுப்பை வரலாற்றில் வேறெங்கும் காண இயலாது என்றே கூறுதல் வேண்டும்.[2]

அலாவுத்தீன் தேவகிரி படையெடுப்பினை நடத்திக் கொண்டு வந்த சமயத்தில் ஜலாலுத்தீன் பிரூஸ் தமது படையுடன் குவாலியர் சென்ருர். அவர் குவாலியரில் இருந்தபோதுதான் அலாவுதீனுடைய தேவகிரி படையெடுப்பு, அதில் அவர் கண்ட வெற்றிகள் ஆகியவற்றைப் பற்றிய செய்திகள் காற்று வாக்கில் அவர் காதுக்கெட்டின. தமது சகோதரனுடைய மகன் பெற்ற வெற்றிகளைக் கேட்ட சுல்தான் கோபமும் பொருமையும் அடைவதற்கு பதிலாக மெத்த மகிழ்ச்சியுற்ருர். அது மட்டுமின்றி அதனைக் கொண்டாடும் வகையில் ஒரு விருந்திற்கும் ஏற்பாடு செய்தார். இதற்கிடையில் தேவகிரியில் கொள்ளையிட்ட பெருஞ் செல்வத்துடன் அலாவுத்தீன் திரும்பி வருகின்ற செய்தியும் அவருக்குக் கிடைத்தது. இதுவரை டில்லியை ஆண்ட அரசர்கள் எவரும் பெற்றிலாத அளவு செல்வத்தை அலாவுத்தீன் கைப்பற்றி இருப்பதாக செய்தி கிடைத்தது. அப்போதுதான் சுல்தான் இதைப்பற்றி ஓரளவு சிந்திக்கத் தொடங்கினுர். தம்முடைய முக்கிய ஆலோசகர்களை அழைத்து மேற்கொண்டு செய்ய வேண்டியதைப் பற்றி அறிய முற்பட்டார். அதுபோது அகமதுசாப் பின்வருமாறு கூறினுர். யானைகளும், பெருஞ்செல்வமும் அதிகளவில் ஒருவர் பெற நேரின் அவர் தலைகால் புரியாமல் ஆடத் தொடங்கி விடுவார். அதுவே சண்டைக்குக் காரணமாகி

[1]. Ferishta, 96

[2]. Vol, 311

விடுகிறது. மலிக் சஜ்ஜுவை ஆதரித்துக் கலகம் செய்தவர்கள் பலர் இப்போது அலாவுத்தீனைச் சுற்றிக் கொண்டிருக்கிறார்கள். சுல்தானுடைய அனுமதி பெறாமல் அண்டை நாட்டுடன் போரிட்டு அதில் வெற்றி பெற்றுப் பெருஞ் செல்வத்தைக் கொண்டு வந்துள்ளார். பணமும், சண்டை சச்சரவும் ஒன்றோடொன்றி நெருக்கமாகப் பிணைக்கப் பட்டுள்ளன என்று அறிவாளிகள் கூறுகின்றனர். சாந்தேரிக்குச் சென்று அலாவுத்தீனை காராவிற்குச் செல்லு முன்னர் தடுத்து நிறுத்தினால் அவர் கொண்டு வருகின்ற செல்வமனைத்தையும் சுல்தான் பெற இயலும். அலாவுத்தீன் கொண்டு வருகின்ற செல்வம் பத்து அரசுகளின் செல்வத்திற்குச் சமம் என்று கூறுகின்றனர். அந்த அளவு செல்வத்தை அவர் கைவசமிருக்க அனுமதிக்கக் கூடாது. அவரைத் தடுத்து நிறுத்தி அவர் கொண்டு வருகின்ற செல்வத்தை சுல்தான் பறித்துக் கொள்ளவில்லையென்றால் சுல்தான் அழிந்து விடுவது திண்ணம் என்று கூறி முடித்தார். அதைக் கேட்ட சுல்தான் அலாவுத்தீனைத் தம் மடியில் வைத்து வளர்த்தாரென்றும், தம் பிள்ளைகள் தமக்குத் தீங்கு நினைத்தாலும் நினைக்கலாம். அலாவுத்தீன் ஒருகாலும் தமக்குத் தீங்கிழைக்க விரும்பமாட்டார் என்றும்,அலாவுத்தீன் தமக்குக் கேடு விளைவிக்குமளவிற்குத் தாம் அவருக்குக் கெடுதல் ஒன்றையும் செய்யவில்லை என்றும், ஆகவே அலாவுத்தீன் மீது வீண் பழி சுமத்த வேண்டாம் என்றும் கேட்டுக் கொண்டார். அதன்பிறகு ஏனையோர்களுடைய கருத்தைத் தெரிந்து கொள்ள விரும்பினார். சுல்தானுடைய மனநிலையை நன்கு புரிந்து கொண்ட மலிக் பக்ருத்தீன் கூச்சி பின் வருமாறு கூறினார். அலாவுத்தீனுடைய நடவடிக்கைகளைப்பற்றி உண்மை எவரும் அறிந்திலர். அவ்வாறிருக்க நாம் படையுடன் சென்று அவரை வழிமறித்தால் அவருடைய படைகள் பயந்து போய் கட்டுக்குள் புகுந்து ஒளிந்து கொள்ளக் கூடும். தேவகிரியிலிருந்து அவர் கொண்டு வந்த செல்வம் நமக்குக் கிடைக்காது போகலாம். எனவே ஒரு படையை நாம் தயாராக வைத்திருக்க வேண்டும். கலகம் ஏற்படும்போது அதனைப் பயன்படுத்திக் கொள்ளலாம். கலகத்தில் ஒருவர் ஈடுபடுவதற்கு முன்பே அவருக்கெதிராக போர்க் கோலம் பூணுதல் தமக்கு நியாயமாகப் படவில்லை என்றும், சுல்தான் படையுடன் டில்லி சென்று அங்கு இரம்ஜான் மாதத்தைக் கழிப்பதுதான் உசிதமானதென்றும் அவர் கூறினார். அவரது யோசனையை ஏற்று சுல்தான் குவாலியரிலிருந்து டில்லி புறப்பட்டார்.

இதற்கிடையில் அலாவுத்தீன் வேகமாகப் படையை நடத்திக் கொண்டு காராவை 1296ஆம் ஆண்டு ஜுன் திங்கள் 2ஆம் நாள் வந்து சேர்ந்தார். இந்தப் படையெடுப்பு ஓராண்டு காலத்திற்கு

மேல் நடைபெற்றது என்று பரணி குறிப்பிட்டுள்ளார். அலாவுத்தீன் புறப்பட்ட தேதி, திரும்பி வந்த தேதி ஆகியவற்றை அமீர்குஸ்ரூ திட்டவட்டமாகக் குறிப்பிட்டுள்ளார். அவற்றிலிருந்து அலாவுத்தீன் தம் படையெடுப்பை சற்றேறக்குறைய மூன்று மாதங்களில் முடித்து விட்டார் என்பதை அறியலாம். இவ்விருவரலாற்றுசிரியர்கள் தரும் கருத்துக்களில் அமீர்குஸ்ரூ தரும் தேதி ஏற்றுக் கொள்ளத்தக்கதாக உள்ளது. 1317-18ஆம் ஆண்டில் முபாரக்கல்ஜி என்பர் இரண்டு மாத காலத்தில் டில்லியிலிருந்து தேவகிரி எல்லையை அடைந்ததாகக் கூறப்படுகிறது. வேகமாகப் படை நடத்திச் சென்ற அலாவுத்தீனுக்கு அதைவிடக் குறைவான நேரம் பிடித்திருக்க வேண்டுமல்லவா ? அலாவுத்தீன் தம் படையெடுப்பை வெகு இரகசியமாக வைத்திருக்க முயன்றமையால் படையெடுப்பு ஓராண்டு காலம் நீடித்திருக்க வழியில்லை. இரண்டு மாதங்களில் திரும்பி விடுவதற்கேற்ற வகையில் அலாவுத்தீன் தம் திட்டத்தை வகுத்தார் என்று இசாமி கூறியுள்ளார். ஆகவே பரணி இதுபற்றி அளிக்கின்ற விவரங்கள் சரியானவையாகக் கருத இடமில்லை என்பது தெளிவாகிறது.

அலாவுத்தீன் தமது திட்டத்தை இரகசியமாக வைத்திருக்க அரும்பாடுபட்டிருந்த போதிலும், அவரது நடவடிக்கைகளின் உண்மை நோக்கம் அறிவுசால் அவையினருக்குப் புரியாது போகவில்லை. அவர்களுள் அகமது சாப் தமது சந்தேகத்தை ஐயத்திற்கிடமற்ற வகையில் சுல்தானுக்கு எடுத்துக் கூறுதற்கு அஞ்சவில்லை. இவையறிந்த அலாவுத்தீன் சற்று அதிகமான கவனத்துடன் செயற்படத் தொடங்கினர். காராவை அடைந்தவுடன் சுல்தானுக்கு ஒரு கடிதம் எழுதினர். சுல்தானிடம் தாம் எப்போதும் போல விசுவாசமாக இருப்பதாகவும், சுல்தானுடைய அனுமதியின்றி தாம் தேவகிரிக்கு படை நடத்திச் சென்றமைக்கு வருந்துவதாகவும், அதற்காக அவரது மன்னிப்பைத் தாம் நாடி நிற்பதாகவும், அச்செய்கையினைப் பயன்படுத்திக் கொண்டு தம்முடைய பகைவர்கள் சுல்தானுடைய காதுகளில் இல்லாததும் பொல்லாததும் கூறிவருகின்றனர் என்றும், தாம் தேவகிரியில் இருந்து கொண்டு வந்த செல்வமுழுமையையும் சுல்தானிடம் ஒப்படைக்கத் தயாராக இருப்பதாகவும், சுல்தான் மட்டும் தாம் செய்த குற்றங்களை எல்லாம் மன்னித்து விட்டதாக கையொப்பமிட்ட கடிதத்தை எழுதி விட்டால் போதுமானது என்றும் அலாவுத்தீன் எழுதியிருந்தார். அதே நேரத்தில் சுல்தான் தம்மைத் தண்டிக்க படையெடுத்து வரநேரின் காராவை விட்டு லக்னௌதிக்குச் சென்று அங்கு தமது அரசை ஏற்படுத்துவது என்ற மாற்றுத்திட்டத்தையும் அலாவுத்தீன் வகுத்தார்.

அதற்காக சரு ஆற்றைக் கடப்பதற்கு படகுகளைத் தயாராக வைத்திருக்கும் பணியினை ஜபர்கானுக்கு அளித்தார்.

அலாவுத்தீனுடைய கடிதத்தைப் படித்ததும் ஜலாலுத்தீன் உள்ளம் பூரித்துப் போனார். அலாவுத்தீன் செய்த முறை கேடுகளை தாம் மன்னித்து விட்டதாகவும், அவரிடம் தமக்கு இருந்த அன்பு குறையவில்லை என்றும் பதில் எழுதினார். அக்கடிதத்தை நேரடியாக அலாவுத்தீனிடம் கொண்டு சேர்க்க இரு பிரபுக்களை அனுப்பி வைத்தார். அவர்கள் அலாவுத்தீனுடைய பாசறையைவந்தடைந்த போதுதான் அலாவுத்தீனுடைய உண்மை சொரூபத்தைக் காண முடிந்தது. தங்களுடைய அரசரை எந்த அளவிற்கு இந்த நன்றியில்லா காரா ஆளுநர் ஏமாற்றி விட்டார் என்பது அவர்களுக்குப் புலப்பட்டது. உண்மை நிலையினை சுல்தானுக்கு அவர்கள் அறிவிக்க எவ்வளவோ பாடுபட்டும் அவர்களது முயற்சி பயனற்றுப் போயிற்று. ஏனெனில் அவர்களை அலாவுத்தீன் காராவிலேயே தம்முடைய கண்காணிப்பில் வைத்துக் கொண்டார். ஜலாலுத்தீனுக்குச் சந்தேகம் ஏற்படக்கூடாதென்பதற்காக மற்றொரு கடிதத்தை எழுதினார். இக்கடிதம் இம்முறை அவருடைய தம்பி அல்மாஸ் பெக்கிற்கு எழுதப்பட்டது. அல்மாஸ்பெக் அப்போது குதிரைப்படைத் தலைவனாக இருந்தார். அவரும் ஜலாலுத்தீனுடைய மகள் ஒருவரை மணம்புரிந்து கொண்டிருந்தார். அக்கடிதத்தில் தாம் சுல்தானுக்குத் துரோகம் இழைத்து விட்டதாகவும், ஆகவே சுல்தான் தம்மைக் கடுமையாகத் தண்டிக்கக் கூடும் என்றும், சுல்தானே நேராகவந்து தம்மை மன்னித்து தம்மை டில்லிக்கு அழைத்துச் செல்லவில்லையெனில் தாம் உயிர் வாழ்தலில் பயனில்லை என்றும் அலாவுத்தீன் எழுதியிருந்தார். அல்மாஸ்பெக் அக்கடிதத்தை சுல்தானுக்குக் காண்பித்தார் அதைக் கண்ணுற்ற சுல்தான் தம்முடைய மனநிலையை அலாவுத்தீனுக்குத் தெரிவிக்கும்படி அல்மாஸ் பெக்கை காராவிற்கு அனுப்பினார். சுல்தானை தம்மைத் தண்டிப்பாரோ என்ற அச்சம் அலாவுத்தீன் கொள்ள வேண்டுவதில்லை என்றும், சுல்தானே காராவிற்குப் புறப்பட்டு வந்து அவருக்கு ஆறுதல் கூறுவார் என்றும் அறிவிக்கும்படி அல்மாஸ்பெக்குக்கு கட்டளையிட்டார்.

அல்மாஸ் பெக்கை காராவிற்கு அனுப்பிய சில நாட்களுக்குப் பிறகு ஜலாலுத்தீன் தம் நம்பிக்கைக்குரிய பிரபுக்கள், ஓராயிரம் குதிரை வீரர்கள் புடைசூழ காராவை நோக்கிப் புறப்பட்டார். தம்ஹை என்னுமிடத்தில் சுல்தானும், அவர் நண்பர்கள் சிலரும் சில படகுகளில் ஏறிக்கொண்டனர். அகமது சாப் ஆற்றின் கரையோரமாக ஒரு படையை நடத்திக் கொண்டு வந்தார். அச்

செய்தியை அறிந்த அலாவுத்தீன் ஆற்றைக் கடந்து மறுபுறம் சென்று மணிக்பூரில் தமது பாசறையை அமைத்துக் கொண்டார். சுல்தானுடைய பரிவாரங்கள் கண்ணுக்கெட்டிய தூரத்தில் வந்த வுடன் அல்மாஸ்பெக் ஒரு படகில் ஏறிக்கொண்டு சுல்தானை சந்தித்து சுல்தான் தம்முடைய நெருங்கிய நண்பர்கள் சிலருடன் முன்னே சென்று அலாவுத்தீனைச் சந்திப்பது நல்லது என்றும், எல்லா பரிவாரங்களுடன் அவர் வரின் அலாவுத்தீனுடைய அச்சம் அகலுவதற்கில்லை யென்றும் கூறினார். ஜலாலுத்தீன் அதற்கும் இசைந்தார். அவரும் அவரது நண்பர்களும் இரண்டு படகுகளில் ஏறிக்கொண்டு கரை நோக்கி வந்தனர். வழியில் அல்மாஸ் பெக் மற்றுமொரு விண்ணப்பத்தை சுல்தான் முன் சமர்ப்பித்தார். அவர்கள் அனைவரும் ஆயுதம் தாங்கியிருந்தால் அலாவுத்தீனுடைய சந்தேகம் தீராது என்றும் ஆகவே அவர்கள் நிராயுதபாணிகளாக வருவது நல்லது என்றும் கூறினார். இந்த வகையான விண்ணப்பம் கூட சுல்தானுடைய சந்தேகத்தைக் கிளப்பிவிடவில்லை என்பதை அறியும் போது எந்த அளவிற்கு சுல்தான் தம்முடைய சகோதர னுடைய மகனிடம் பாசம் கொண்டிருந்தார் என்பதும் மேலும் பொன்னாசை அவருடைய கண்களை எப்படி மறைத்து விட்டது என்பதும் நன்றாகப் புலப்படும். சுல்தானுடைய கட்டளைப்படி அவரது நண்பர்கள் தங்களுடைய ஆயுதங்களைத் தூக்கி எறிந்தனர்.

சுல்தானுடைய படகு கரையை நெருங்கியபோது அங்கு அவரது நண்பர்கள் கண்ட காட்சி அவர்களைத் தூக்கிவாரிப் போட்டது. அங்கு அலாவுத்தீனுடைய படைகள் அணிவகுத்து நின்றிருந்தன. யானைகளும் குதிரைகளும் போர் செய்யத் தயாராக கவசங்கள் பூட்டப்பட்டிருந்தன. இதைப்பற்றி அவர்கள் அல்மாஸ் பெக்கை விசாரித்தபோது, சுல்தானுக்கு அரசருக்குரிய மரியாதை யுடன் வரவேற்று அவர் காலடியில் தாம் கொண்டு வந்த செல்வத்தை சமர்ப்பணம் செய்வதே அலாவுத்தீனுடைய நோக்க மாகும் என்று மழுப்பி விட்டார். எனவே சுல்தான் தம் சொந்த மகன் வீட்டிற்குச் செல்லுகின்ற தகப்பனைப் போன்று ஒரு விதமான சந்தேகமோ அச்சமோயின்றி கரையை அடைந்தார்.

படகு கரையை அடைந்தவுடன் அலாவுத்தீன் தமது முகத்தில் மகிழ்ச்சிக் குறிகளை வரவழைத்துக் கொண்டு ஜலாலுத்தீன் காலடியில் வீழ்ந்து வணங்கினார். ஜலாலுத்தீனுடைய உள்ளம் மெழுகென உருகிவிட்டது. அலாவுத்தீனைத் தூக்கி மார் போடணைத்து பாச உணர்ச்சி பொங்க பின்வருமாறு கூறினார். "குழந்தைப் பருவத்திலிருந்து உன்னை வளர்த்துள்ளேன் இப்போது

நீ பெரியவனாகி விட்டாய். பதவி உயர்வைக் கொடுத்தேன், இவையனைத்தும் உன்னைக் கொல்லுவதற்காகவா நான் செய்தேன்? என்னுடைய பிள்ளைகளைக் காட்டிலும் நீ என்னிடம் அன்பாக நடந்து வந்திருக்கிறாய். உலகம் மாறலாம்; ஆனால் எனக்கும் உனக்கும் உள்ள உறவுமாறாது. உன்பால் எனக்கேற்பட்டிருக்கும் பாசம் குறையாது.[1] இவ்வாறு பேசிய பின்னர் அலாவுத்தீனுடைய கையைப்பற்றிக் கொண்டு சுல்தான் படகுகளை நோக்கிச் சென்றார். அப்போது நஸ்ரத்கான் ஒரு சமிக்ஞை செய்தார். அருகிலிருந்த மாமூத் சாலிம் சுல்தானை நெருங்கி கத்தியால் தாக்கினார். அடி சரியாகப் படவில்லை. மற்றொருமுறை தாக்கி சுல்தானுக்கு காயத்தை உண்டாக்கினார். செய்வதறியாது சுல்தான் படகை நோக்கி ஓடினார். அப்போது இக்தியாருத்தீன் ஹூத் என்பவர் அவரைக் கீழே தள்ளி, தலையைக் கொய்து, அலாவுத்தீனுக்கு அர்ப்பணித்தார். பக்ருத்தீன் ஏனையோர் நீரில் மூழ்கியோ அல்லது சதிகாரர்களின் கைகளிலேயோ மாண்டார். இந்நிகழ்ச்சி 1296ஆம் ஆண்டு ஜுலை மாதம் 20ஆம் தேதி (17, ரம்ஜான், 695 A.H.) நடைபெற்றது.[2]

ஜலாலுத்தீனைக் கொன்றுவிட வேண்டும் என்ற எண்ணம் அலாவுத்தீனுக்கு எப்போது ஏற்பட்டது என்பதை திட்டவட்டமாகக்கூற இயலாது. இவ்வெண்ணம் தேவகிரியிலிருந்து திரும்பிய உடனே ஏற்பட்டிருக்கும் என்பர் சிலர். தேவகிரி அரசரை கப்பப் பணத்தை தமக்கு அனுப்பும்படி அலாவுத்தீன் கட்டளையிட்டிருந்தார். சுல்தானுக்கெதிராகக் கலகம் செய்ய வேண்டுமென்ற எண்ணம் அவருக்கு அப்போதே தோன்றியிருக்கக் கூடும். ஆனால் அவர் சுல்தானுக்குக்கெழுதிய கடிதங்களிலிருந்து அவ்வெண்ணம் அப்போது தோன்றவில்லை என்பதை அறிகிறோம். சுல்தானுடைய கோபக்கனலிலிருந்து தப்பிக்க அவருக்கு இருவழிகள் தோன்றின என்பதை அவற்றிலிருந்து அறிகிறோம். அதில் ஒன்று தம்மை மாய்த்துக் கொள்வதென்பது. மற்றது வங்காளம் சென்று அங்கு ஒரு தனியரசை ஏற்படுத்திக் கொள்வதென்பது. ஆகவே சுல்தான் தக்க பாதுகாப்புடன் வரவில்லை என்பதை உணர்ந்த போது தான் அவரைக் கொல்ல வேண்டும் என்ற எண்ணம் தோன்றியது என்பது ஊகித்தறியலாம். ஆனால் அவரைக் கொன்ற பிறகு அதற்காக அவர் சிறிதளவேனும் வருந்தவில்லை. எனினும் தாம் செய்தது சரியான காரியமென்று ஒரு நாளும் அவர் வாதிக்கவில்லை. அதனையே அவர் தம்முடைய பெரியப்பா தம்மிடம்

[1] Barani, 234

[2] Dr. K. S. Lal, 56.

காட்டிய அன்பிற்கு செலுத்திய நன்றிக்கடனாக எண்ணினார் போலும்!

மதிப்பீடு: அரச பதவிக்கு எந்த வகையிலும் ஜலாலுத்தீன் பொருத்தமானவர் அன்று என்று சில வரலாற்று ஆசிரியர்கள் கூறியுள்ளனர்.[1] அவரது ஆட்சி மேலும் நீண்டிருப்பின் நாடு குட்டிச்சுவராகி யிருக்கும் என்று கூறுவாரும் உளர். அவருக்கு வயது அதிகமாகி விட்டதால் சுறுசுறுப்பாக நாட்டுக் காரியங்களை அவர் கவனிக்க இயலவில்லை. கருணையுள்ளம் படைத்தவராதலின் தண்டிக்கவேண்டிய இடங்களில் மன்னிப்பு வழங்கினார். நாட்டைக் கொள்ளையடித்து வந்த கூட்டத்தினரை தண்டிக்காது விடுவித்து விட்டார். கலகக்காரர்களை மன்னித்ததுடன் நிற்காமல் அவர்களுக்கு விருந்துபசாரங்களை செய்து மீண்டும் பதவிகளில் அமர்த்தினார். சமயப்பற்று மிக்கவர். இந்து கோயில்களை கொள்ளையிடவும், வழிபாட்டுச் சிலைகளை உடைத்தெறியவும் அவர் கட்டளையிட்டார். முஸ்லிம்களின் ஒரு மயிர்கூட சேதமடையக் கூடாது என்பதற்காக ஒரு கோட்டையைக் கைப்பற்றும் முயற்சியையே விட்டவர் என்பதை அறியும்போது மதத்திற்காக நாட்டு நலனையே விட்டுக் கொடுக்கத் தயங்கமாட்டார் என்பது புலனாகிறது. அவர் காலத்தில் இந்து அரசர்களுக்கு எதிராக குறிப்பிடத்தக்க போர் ஏற்பாடுகளைச் செய்ததாக நாம் அறியவில்லை. மேற்கூறிய காரணங்களைக் கொண்டு அவர் அரசபதவிக்குப் பொருத்தமானவரில்லை என்று கூறுகின்றனர்.

உண்மை அதுவல்ல. ஜலாலுத்தீனுடைய ஆட்சி சிறந்தது என்று கூற இயலாது எனினும் மக்கள் நலத்தைக் குறிக்கோளாகக் கொண்ட வல்லாட்சியை முதன்முதலில் டில்லியில் ஏற்படுத்த முயன்ற துருக்கிய சுல்தான் இவர்தான் என்று நாம் கூற இயலும். அரசராவதற்கு முன்னர் போர்ச் செயல்களிலேயே காலங்கழித்து, டில்லி சுல்தான்களின் மதிப்பைத் தேடிக்கொண்ட ஜலாலுத்தீன் அரசரான பிறகு அதிகமாக போரில் ஈடுபடாததற்கு அவர் வயது மட்டும் காரணமாகாது; கைக்குபாத்தின் மூன்று ஆண்டு ஆட்சிக் காலத்தில் டில்லி அரசு சீர்குலைந்து போயிற்று. அதைத் திருத்தியமைப்பதில் முழு கவனத்தையும் செலுத்த வேண்டியதொரு நிலை ஏற்பட்டிருந்தது. அதற்காகத்தான் அவர் ஒரு மிதமான கொள்கையைக் கைப்பற்றினார். கல்ஜிக்களின் பகைவர்களையும் தம்பால் இழுத்துக்கொண்டு பழைய, புதிய சக்திகள் இரண்டையும் இணைத்து நிருவாகத்தைப் பலப்படுத்த வேண்டும் என்ற

[1] H. C. I. P: vol. IV, p. 12.

உயரிய நோக்கத்துடன் பல கலகக்காரர்களை மன்னித்துவிட்டாரே யன்றி, பலமற்ற தன்மையினுல் அல்ல. அதே நோக்கத்தோடு தான் பால்பனுடைய அதிகாரிகள் பலரைத் தொடர்ந்து பதவியி லிருக்கச் செய்தார். டில்லி சுல்தானியத்தின் வரலாற்றிலே பலவகைகளாகப் பிரிந்திருந்த முஸ்லிம் மக்களை ஒன்ருக இணைத்து முஸ்லிம் ஆட்சியை பலம் பொருந்தியதாகச் செய்ய முற்பட்ட முதல் அரசர் ஜலாலுத்தீனேயாவார். அதுமட்டுமன்றி மங்கோலி யர்களுடன் போரிட்டு வடமேற்கு எல்லையைக் காத்த பெருமையும் அவருக்குண்டு. மேலும் மங்கோலியர் பலரை இஸ்லாம் மதத்தைத் தழுவும்படி செய்து தம் நாட்டில் அவர்கள் தங்குவதற்கு வேண்டிய வசதிகள் அனைத்தையும் செய்து கொடுத்தார். இறுதியாக சமய நலத்தில் விட நாட்டு நலனில் அதிக அக்கரை காட்டினுர் என்பது அவர் சித்தி மௌலா விஷயத்தில் நடந்து கொண்ட விதத்திலிருந்து அறிகிறோம். அவர் தேவைக்கு மேலாகக் கனிவுடன் நடந்து கொண்டார் என்று குற்றம் சாட்டப் பட்டுள்ளது. சித்தி மௌலாவிடம் அவர் நடந்துகொண்ட விதமானது தேவை ஏற்படும்போது கடுமையாகவும் நடக்க அவருக்குத் தெரியும் என்பதை எடுத்துக்காட்டுகிறது. மேற்கூறிய வற்றிலிருந்து அரச பதவிக்கு முற்றிலும் பொருத்தமற்றவர் என்ற கருத்து தவறுனது என்பதும், பெருமை படத் தக்கச் செயல் களையும் அவர் செய்துள்ளார் என்பதும் தெளிவாகும்.

•

# 9. அலாவுத்தீன் கல்ஜி
## (கி. பி. 1296-1316)

**அரசெய்தல்**

ஜலாலுத்தீனுடைய தலையிலிருந்து இன்னும் இரத்தம் சொட்டிக் கொண்டிருந்த போதே அலாவுத்தீன் சுல்தானாக நியமிக்கப்பட்டார் என்ற அறிவிப்பு வெளியிடப்பட்டது. அது போது அவருக்கு, அலாவுத் துனியா வத்தீன் முகமது ஷா உஸ் சுல்தான் என்ற பட்டம் அளிக்கப்பட்டது. கொலையுண்ட சுல்தானின் தலையை ஓர் ஈட்டியின் முனையில் தூக்கிக்கொண்டு காரா, மணிக்பூர் நகர வீதிகளில் அலாவுத்தீனுடைய அதிகாரிகள் ஊர்வலமாகச் சென்றனர். இத்தகையதொரு நடவடிக்கை ஒரு சாதாரண குற்றவாளி விஷயத்தில் மேற்கொள்வது அக்கால வழக்கம். அதன் பின்னர் பொது மக்களுடைய பார்வைக்காக அது அயோத்திக்கு அனுப்பப்பட்டது.

அலாவுத்தீன் தம்முடைய சிற்றப்பாவிற்கு மாபெரும் தீங்கினை இழைத்தார் என்பதில் ஐயமில்லை. இல்தூத்மிஷ் காலம் முதல் அத்தகைய நிகழ்ச்சிகள் தொடர்ந்து நடைபெற்று வந்தன என்பதை நாம் அறியும் போது அலாவுத்தீனுடைய செயல் புதிதான செயலாகத் தோன்றுவதற்கில்லை. அக்காலத்திய சதிகாரர்கள் செயலை அறமுறைக்குக் புறம்பான செயலெனக் கருதவும் இயலாது. அலாவுத்தீன் காலத்தில் வாழ்ந்த அமீர் குஸ்ருவும் அலாவுத்தீனுடைய குடும்பத்தினர் முற்றிலும் மறைந்து விட்ட பிறகு வாழ்ந்த இசாமியும் அலாவுத்தீனை கடவுளால் தேர்ந் தெடுக்கப்பட்ட கருவி என்று கூறியுள்ளார். ''கடவுள் ஒருவருக்கு உதவி செய்கிறார் என்றால், உலகமனைத்தும் அவருக்குக் கீழ்படிந்து விடுகிறது'' என்று இசாமி குறிப்பிட்டுள்ளார்.

பட்டமேறிய முதல் இரண்டு நாட்கள் காராவில் தற் பொழுதைக்கான அரசை அமைப்பதிலும் டில்லிக்குப் படை நடத்திச் செல்வதற்கான ஏற்பாடுகளை மேற்கொள்ளுவதிலும் செலவிடப்பட்டன. பட்டங்களையும் விருதுகளையும் தம்மைச் சார்ந்தோருக்கு வழங்குவது அவர் முதல் வேலையாக இருந்தது.

உலூக்கான் என்ற பட்டத்தை அல்மாஸ்பெக் பெற்றார். மலிக் ஹிஜாப்ருத்தீனுக்கு ஜபர்கான் என்ற பட்டமும், மலிக்சன்ஜா ருக்கு[1] அலப்கான் என்ற பட்டமும், மலிக் நஸ்ரத் ஜலேஸரிக்கு நஸ்ரத்கான் என்ற பட்டமும் வழங்கப்பட்டன, தமது நம்பிக்கைக் குரிய நண்பர்கள் அனைவரையும் அமீர்களாக உயர்த்தினார். ஏற்கெனவே அமீர் நிலையை அடைந்திருந்தவர்களை மலிக்குகளாக உயர்த்திவிட்டார்.[2]

தம்மைச் சார்ந்தவர்களையும், தமது ஆதரவாளர்களையும் மேற்கண்டவாறு திருப்தி செய்துவிட்ட பிறகு டில்லியைக் கைப் பற்றுவதில் தம் முழு கவனத்தையும் செலுத்தினார். மறைந்து போன சுல்தானுடைய பிள்ளைகளின் கைவசம் டில்லி இருக்கும் வரை தம்முடைய அரசை நிலையாக அமைப்பதற்கில்லை என்பதை அலாவுத்தீன் நன்கு அறிந்திருந்தார். எனவே அதைக் கைப் பற்றுவதில் மேலும் காலம் தாழ்த்த விருப்பங் கொள்ளவில்லை. படை திரட்டுவதற்கான பணியில் கொட்டும் மழையையும் பொருட்படுத்தாது அவர் முழு மூச்சுடன் இறங்கினார். தமது அதிகாரிகளிடம் தேவகிரியிலிருந்து தாம் கொண்டு வந்த பணத்தைக் கொடுத்து பல இடங்களுக்கு அனுப்பி படை திரட்டிக் கொண்டு வருமாறு பணித்தார். விரைவில் படை திரட்டுவதற்காக மற்றுமொரு கட்டளையைப் பிறப்பித்தார். படைக்கு ஆள் திரட்டும்போது தொன்றுதொட்டு வந்தி ருக்கும் நடைமுறைகளைப் பின்பற்ற வேண்டுவதில்லை என்பதே அக்கட்டளையின் சாரமாகும். அலாவுத்தீனுக்கு அப்போது தேவையானது எண்ணிக்கையே அன்றி திறமை அல்ல. படையில் சேர வருபவர் போர் செய்யும் திறமையுடையவரா இல்லையா என்பதைப் பற்றி அதிகாரிகள் கவனிக்க வேண்டாம் என்றும், படையில் சேர வருபவர்களை உத்திரவாதப் பத்திரங்கள் ஏந்தி வரவேண்டும் என்பதை அவர்கள் வற்புறுத்த வேண் டாம் என்றும் அதிகாரிகளுக்கு உத்திரவிட்டார். மேலும், அதிகாரிகள் கற்கள் வீசும் இயந்திரங்களில் பொற் காசுகளை நிரப்பிக்கொண்டு திரளாகக் கூடியிருந்த மக்கள் மத்தியில் வீசும்படிக் கட்டளைப் பிறப்பித்தார். அலாவுத்தீனுடைய தாராள மனப்பான்மையை அதன் வாயிலாக அறிவித்து அவர்களுடைய அன்பையும், ஆதரவையும் அவர் பெற எண்ணங் கொண்டார். டில்லிக்குச் செல்வதற்கு வேண்டிய படையை சேகரிக்கும் பணி எந்த விதமான இடையூறு இன்றி

1 இவர் அலாவுத்தீனுடைய மனைவியான மாஹ்ருவின் சகோதரனாவார்,

2 Barani, 242

நடைபெற வேறு சில நிகழ்ச்சிகளும் அலாவுத்தீனுக்கு உதவி புரிந்தன. பெரு மழை காரணமாக கங்கையும் யமுனையும் கடல் போல் காட்சியளித்தன. கிளையாறுகள் கங்கை, யமுனை ஆறுகளைப் போல் காட்சியளித்தன. ஆகவே டில்லிப் படைகள் அவற்றைக் கடந்து எளிதில் வர இயலாது போயின. அர்க்கலீகான் மூல்தானை விட்டுப் புறப்பட்டு வர மறுத்து விட்டார். அலாவுத்தீன் யாரை யேனும் கண்டு அஞ்சினுர் என்ருல் அது அர்க்லீக்கானுகத்தான் இருக்க முடியும். ஏனெனில் ''அக்கால ருஸ்தூம் என்று மக்கள் அவரைப் போற்றினுர்கள். அவருடைய போர்த் திறனை மலிக் சஜ்ஜுவின் கலகத்தின்போது அலாவுத்தீன் நேரில் கண்டறிந்தார். அவர் டில்லிக்கு வரவில்லையென்ற செய்தி அலாவுத்தீனுக்கு மெத்த மகிழ்ச்சியை உண்டாக்கி விட்டதில் வியப்பேதும் இல்லை.

அர்க்கலீகான் டில்லி வராததற்குக் காரணம் என்ன வென்பதை இப்போது கவனிப்போமாக. ஜலாலுத்தீன் கொலை யுண்ட செய்தியை அறிந்தவுடன் அகமதுசாப் தலைநகரம் திரும்பி டில்லி மக்களுக்கு சுல்தான் கொலையுண்ட செய்தியை அறிவித் தார். அரண்மனையில் மூன்று நாட்கள் துக்கம் கொண்டாடப் பட்டது. பின்னர் ஜலாலுத்தீனுடைய மனைவி மலிகா-இ-ஜஹான் இனி காலம் தாழ்த்தினுல் ஆபத்து விளையும் உன்று எண்ணி தம்முடைய இளைய மகன் காதர்கானை அரியணையில் அமர்த்தி ருக்னுத்தீன் இப்ராஹீம் என்ற பட்டத்தைச் சூட்டினுர். அதன் பின்னர் தம் இருப்பிடத்தை கைலீகரியிலிருந்து டில்லி நகருக்குள்ளி ருந்த காசர்-இ-கபிஸ் (Qasr-i-Sabz) அல்லது பச்சை அரண்மனைக்கு மாற்றி விட்டார். மலிகா. இ. ஜஹான் புகழார்வம் மிக்கவர். ஆட்சியைத் தாமே நடத்த வேண்டும் என்ற எண்ணமுடையவர். ஆகவேதான் அர்க்கலீகானுக்குப் பதிலாக அரச காரியங்களைக் கவனிக்கத் தக்க திறமை பெற்றிராத காதர்கானை அரியணையில் அமர்த்தினுர். ஜலாலீ பிரபுக்கள் டில்லி அரசருக்கு விசுவாசமாக வேண்டும் என்பதற்காக அவர்களுக்கு இக்தாக்களைப் பகிர்ந்தளித் தார். அரசரிடம் அனுப்பப்பட்ட விண்ணப்பங்களைத் தாமே பெற்று அவற்றைப் பற்றியக் கட்டளைகளைத் தாமே பிறப்பித்தார். இவையனைத்தையும் கேள்வியுற்ற அர்க்கலீகான் தமது அன்னையார் தமக்கிழைத்த அநீதியை எண்ணி எண்ணி மனம் வெதும்பினுர். ஜலாலுத்தீன் உயிருடன் இருந்தபோது தாய்க்கும் மகனுக்கும் இடையே மனத்தாங்கல் ஏற்பட்டிருந்தது. அது இப்போது அதிக மாயிற்று. எனவே தான் அவர் மூல்தானிலேயே இருந்து விடுவ தென முடிவு கட்டினுர்.

அர்க்கலீகானுடைய முடிவுக்குக் காரணம் மலிகா. இ. ஜஹானே என்று கூறுவார் உளர். அற்பர்களுள் அற்பர் என்று

பரணி மலிகாவைப் பற்றி எழுதியுள்ளார். அவரது ஆசையே ஜலாலுத்தீன் குடும்பத்தினருடைய அழிவுக்குக் காரணம் என்பாரும் உண்டு. டாக்டர் K. S. லால் மலிகாவின் செயலே சரியானதென்று வாதாடுகிறார். ஜலாலுத்தீனுடைய மறைவிற்குப் பின்னர் டில்லியில் நெருக்கடி நிலை ஏற்பட்டது. சிறிது காலம் தாழ்த்தினால் டில்லி அரியணை சுல்தானைக் கொன்றவருடைய கையில் அகப்பட்டுவிடும் போல் தோன்றியது. இறந்த சுல்தானை நினைத்து மலிகாவிற்கு அழுவதற்குக்கூட நேரமில்லை. அந்த சூழ் நிலையில் மூல்தானிலிருந்து அர்க்கலீகான் டில்லி வரும்வரை காத் திருப்பதென்பது தற்கொலைக்குக் சமமாகி விடும் என்று டில்லி ஆட்சியாளர்கள் கருதினார்கள். டில்லி அரியணையைக் காலியாக வைத்திருந்தால் அலாவுத்தீன் டில்லிக்கு விரைவாக படையுடன் வருவதற்கு வசதியாக அமைந்துவிடும் என்று மலிகா எண்ணியதில் தவறேதும் இல்லை.

மேற்கண்ட நிகழ்ச்சிகள் அலாவுத்தீனை உடனே டில்லிக்கு புறப்பட்டுச் செல்ல ஊக்குவித்தன. தாம் திரட்டிய படைகளுடன் அவர் பதௌன் வருவதற்குள்ளாகவே ஏறக்குறைய 56,000 குதிரைப் படையினரும், 60,000 காலாட்படையினரும் அவர் படையில் சேர்ந்துவிட்டனர். அங்கு தமது படையை இரண்டாகப் பிரித்தார். அவற்றுள் ஒன்றினை ஜபர்கான் தலைமையின் கீழ் வைத்தார். கோல் (அலிகார்) வழியாக ஜபர்கானை டில்லிக்கு வந்து சேரும்படி பணித்தார். இரு படைகளும் ஒரே நேரத்தில் டில்லியை அடையவேண்டும் என்பதற்காக ஜபர்கானைத் தாம் செல்லுகின்ற வேகத்திற்கேற்ப ஜபர்கான் முன்னேற வேண்டும் என்று அலாவுத்தீன் அவருக்குக் கட்டளையிட்டார். பதௌன் வழியாகத் தாமே நடத்திக் கொண்டு டில்லியை நோக்கிப் பயண மானார். விரைவில் அலாவுத்தீன் பரண் சென்றடைந்தார். அங்கு மற்றும் பல வீரர்களைப் படையில் சேர்த்துக் கொண்டார். அது மட்டுமன்றி அவரை எதிர்ப்பதாக அனுப்பப்பட்ட பல ஜலாலி பிரபுக்கள் அவர் பக்கம் சேர்ந்து கொண்டனர். அவர்களுள் குறிப்பிடத் தக்கவர்கள் தாஜ்உல் முல்க் கூச்சி, மலிக் அபாஜி, மலிக் உஸ்மான், மலிக் உமர் சுர்க்கா ஆகியோராவார்கள். அவர் கள் ஒவ்வொருவருக்கும் 30 முதல் 50 மணங்குபொன் வாரி வழங்கினார். அவர்களுடைய படை வீரர்கள் ஒவ்வொருவரும் 300 வெள்ளி தங்காக்களைப்[1] பெற்றனர். இவர்களுடைய செய்கை ஜலாலுத்தீன் குடும்பத்தினை உடைத்தெறிய வழி ஏற்படுத்தியது.

[1] Dr. K. S. Lal, 100 தங்காக்கள் கொடுக்கப் பட்டதாகக் கூறியுள்ளார், History of the Khaljis p. 60

டில்லியிலிருந்த பிரபுக்கள்கூட மதில் மேல் பூனையைப்போல் இருந்தனர்.

இந்த இக்கட்டான சூழ்நிலையிலிருந்து விடுபடுவதற்காக மலிகா-இ-ஜஹான் தம்முடைய பிள்ளை அர்க்கலீகானை மூல்தானிலிருந்து டில்லிக்கு வரும்படி அழைத்தார். அர்க்கலீகானை சமாதானப் படுத்துவதற்காக அவர் பின்வருமாறு கூறினார். ''மூத்தவன் உயிரோடு இருக்க இளையவனை அரியணையில் அமர்த்தியது பெருங்குற்றம் மட்டுமல்ல. அநீதியும்கூட என்பதை நான் உணர்கிறேன். மலிக்குகள், அமீர்கள் ஒருவரும் சுல்தானைக் கண்டு பயப்படுவதாக இல்லை. அவர்களுள் அநேகர் அலாவுத்தீன் பக்கம் சேர்ந்து விட்டனர்; ஆகவே அரசருக்குரிய உயர் அதிகாரம் நம் கைகளிலிருந்து அலாவுத்தீன் கைகளுக்குப் போய்க் கொண்டிருக்கிறது. எனவே தாமதியாமல் புறப்பட்டு வந்து அரியணையில் அமர்ந்துகொள்.'' அர்க்கலீகான் நிலைமையை நன்றாக ஆராய்ந்து பார்த்தார். நிலைமை மோசமாகி விட்டதென்பதை எளிதில் புரிந்து கொண்டார். டில்லிக்குச் சென்று செத்துக் கொண்டிருக்கும் ஒரு கட்சியின் பக்கம் சேர்ந்து கொள்ள விரும்பவில்லை. ஆகவே எல்லா பிரபுக்களும் அவர்களது படை வீரர்களும் பகைவர் பக்கம் சேர்ந்து கொண்ட பின்னர் தாம் வந்து என்ன சாதிக்க இயலும் என்று கூறி டில்லிக்குப் போகாமல் நின்று விட்டார்.

அர்க்கலீகான் டில்லிக்கு வர மறுத்த செய்தி அலாவுத்தீனுக்கு பெருத்த மகிழ்ச்சியை உண்டாக்கியதில் வியப்பேதும் இல்லையல்லவா? செய்தியறிந்ததும் அலாவுத்தீன் தம் பக்கம் சேர்ந்தவர்களுக்கு உவகை மேலீட்டால் பொன்னையும் பொருளையும் வாரிக் கொடுத்தார், அக்டோபர் திங்கள் அவர் யமுனை ஆற்றங் கரையை அடைந்தார். யமுனையில் அப்போது ஏற்பட்டிருந்த வெள்ளப் பெருக்கு அவரது முன்னேற்றத்தை ஓரளவு தடுத்து நிறுத்தியது. அந்த நேரத்தைப் பயன்படுத்திக்கொண்டு மேலும் பலரை இலஞ்சம் கொடுத்துத் தம் பக்கத்தில் சேர்த்துக் கொண்டார். வெள்ளம் சற்றுத் தணிந்ததும், மீரத் மாவட்டத்திலுள்ள பக்பத் (Bhagpat) என்னுமிடத்தில் ஆற்றைக் கடந்து சீரி (Siri) யை அடைந்தார். அங்கு தமது பாசறையை அமைத்தார். ருக்னுத்தீன் இப்ராஹீம் நகரை விட்டு வெளியே வந்து போரிடுவதைத் தவிர வேறு வழியில்லை என்று அறிந்துகொண்டார். எனவே அவர் நகரைவிட்டு வெளிவந்து தம் படையினை அணிவகுத்து நிறுத்தினார். அந்த நேரத்தில் தம் படையின் ஒரு பகுதி அவரை விட்டொழித்து அலாவுத்தீன் பக்கத்தில் சேர்ந்து கொண்டது. இந்த நிலையில் உயிர் தப்பிச் செல்வதைவிட வேறு

வழி அவருக்குப் புலப்படாது போகவே தம் அன்னையுடனும், அகமது சாப், உல்கூ போன்ற சில முக்கியத் தலைவர்களுடனும், கஜினி வாயில் வழியாக இரகசியமாக மூல்தானுக்கு ஓடிவிட்டார். காப்பாற்றுவாரற்றுக் கிடந்த தலைநகர் எளிதில் அலாவுத்தீன் கைவசம் வந்தது. தங்களுடைய பதவிகளைக் காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டு டில்லி அதிகாரிகள் அனைவரும் ஒருவருடன் ஒருவர் போட்டி போட்டுக்கொண்டு அலாவுத்தீனுடைய அன்பைப் பெற ஓடினார்கள். 1296ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 21ஆம் நாள் திங்கட்கிழமை (22, ஜில்ஹஜ், A.H. 700) யன்று அலாவுத்தீன் இல்துூத்மிஷின் வெள்ளை அரண்மனையில் (காசர்-இ-சபத்) அரியணையில் ஏறினார். சீரியில் ஆயிரம் தூண்கள் கொண்ட அரண்மனை (Hazar Sutun) கட்டி முடிக்கிறவரை பால்பனுடைய சிவப்பு அரண்மனையை (Qasr-e-Lal) தமது இருப்பிடமாக்கிக் கொண்டார். தொன்றுதொட்டு வந்திருந்த வழக்கத்தின்படி குத்பா அவர் பெயரில் வாசிக்கப்பட்டது. அலாவுத்தீன் பெயரில் நாணயங்கள் அச்சிடப்பட்டன. அந்த நல்ல நேரத்தைக் கொண்டாடும் வகையில் பரிசுகள் மக்களுக்குத் தாராளமாக வழங்கப் பட்டன. மது வகைகள், பானங்கள், வெற்றிலைப் பாக்கு முதலியவை இலவசமாக வழங்கப்பட்டன. ஆங்காங்கே இசைக் கச்சேரிகள் ஏற்பாடு செய்யப்பட்டன. படை வீரர்களுக்கு ஆறு மாதசம்பளம் சன்மானமாக வழங்கப்பட்டது. உலமாக்களுக்கும் ஷெய்க்குகளுக்கும் நன்கொடைகள் அளிக்கப்பட்டன. அலாவுத்தீனுடைய தாராள மனப்பான்மை மக்களிடையே ஒரு குதூகலத்தை உண்டாக்கிவிட்டது. மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்துவிட்ட மக்கள் பழைய அரசர் கொலையுண்ட செய்தியையும் அதனால் ஏற்பட்ட மன வருத்தத்தையும் முற்றிலும் மறந்துவிட்டனர்.

மக்களைத் திருப்தி செய்தபிறகு அரசவையினரைத் மகிழ்விக்க வைப்பது அவரது அடுத்த வேலையாக இருந்தது. பிற்காலத்தில் தம்மை எதிர்த்தவர்களை தவிடு பொடியாக்குவதற்கு அவர் சிறிதும் அஞ்சினார் அன்று. ஆனால் அவர் டில்லியைக் கைப்பற்றிய வுடனே அவ்வாறு செய்வதற்கு பதிலாக அவர்களை சமாதானப் படுத்தி தம் ஆட்சியினை ஏற்றுக்கொள்ளும்படியாகச் செய்வதே மதிநுட்பம் வாய்ந்த செயலெனக் கருதினார். எனவே ஜலாலி பிரபுக்களுக்கு உயர்ந்த பதவிகளை அளித்தார். அது மட்டுமன்றி அவர்களையும் தம் ஆதரவாளர்களையும் இணைத்து ஒரு கூட்டு அமைச்சரவையை அமைத்தார். அவரது கூட்டு அமைச்சரவை மூன்று கூறுகளைக் கொண்டிருந்தது. 1. இன்னும் தொடர்ந்து பதவியிலிருந்து வந்த முந்திய துருக்கிய பிரபுக்கள் 2. தம் பக்கம் சேர்ந்துகொண்ட ஜலாலி பிரபுக்கள் 3. அலாவுத்தீன் நியமித்த

அதிகாரிகள். ஜலாலுத்தீன் காலத்தில் வசீர் பதவி ஏற்றிருந்த குவாஜா கதீர் தொடர்ந்து வசீராகப் பணியாற்றும்படி கேட்டுக் கொள்ளப்பட்டார். காஜி சத்ருத்தீன் அரிஃப் என்பவருக்கு இரு பதவிகள் அளிக்கப்பட்டன. சாதர்-இ-ஜஹான், தலைமைக்காஜி. அதிகமாகப் படிக்கவில்லையென்றாலும் அடிமட்டத்தில் நடக்கும் தில்லுமுல்லுகள் அனைத்தும் அவர் அறிந்திருந்தமையால் எவரும் அரசனை ஏமாற்றாதவாறு பார்த்துக் கொண்டார். பிரதம நீதிபதி மலிக் உம்தத் உல்முக் அரசாங்கச் செயலாளராக (Divan-i-Insha) நியமிக்கப்பட்டார். அவருடைய பிள்ளைகளான ஹமீத் உத்தீனும், ஆயிஸ் உத்தீனும், நீதிமன்ற மேற்பார்வையாளராகவும், கடிதப் போக்குவரத்துத் துறை மேற்பார்வையாளராகவும் முறையே நியமிக்கப்பட்டனர். பழைய ஆட்சியின் சையத் அஜல், ஷெய்க் உல்இஸ்லாம், கதீப் தொடர்ந்து பதவிகளை வகித்து வர அனுமதிக் கப்பட்டார்கள். நஸ்ரத்கான் ஜலேஸ்ரி இப்போது டில்லி கொத் வாலாக நியமிக்கப்பட்டார். மலிக் பக்ருத்தீன் கூச்சி தலைநகர நீதிபதியாக அமர்த்தப்பட்டார். அரிஸ்-இ-மமாலிக் பதவி ஜபர்கானுக்கு அளிக்கப்பட்டது. மலிக்அலாஉல் முல்க் காராவின் ஆளுநர் பதவியைப் பெற்றார். முன்பு அர்க்கலீகானுடைய அதிகாரியாகவிருந்த முயித்-உல்-முல்க் பரண் ஆளுநராக நியமிக் கப்பட்டார். மலிக்ஜூனா தொடர்ந்து உதவி வக்கீல்தாராகப் பதவி வகித்து வர அனுமதிக்கப்பட்டார். ஜலாலி பிரபுக்கள், மலிக் அமாஜீ குதிரை லாயத்தின் மேற்பார்வையாளராகவும், மலிக் ஹிரன்மார் உதவி பார்பக்காகவும் நியமனம் செய்யப் பட்டனர். அரசாங்கம் அளித்திருந்த கொடைகளும், அறக் கொடைகளும் அதிகரிக்கப்பட்டு மீண்டும் உறுதிப்படுத்தப் பட்டன.

பரணி அப்போது ஏற்பட்டிருந்த நிலைமையை பின்வருமாறு விளக்கியுள்ளார்.[1] அலாவுத்தீனுடைய அரசவையை ஜலாலி பிரபுக்களும், அலாயிகான்களும் மலிக்குகளும் இதற்குமுன் எந்த அரசர் காலத்திலும் இராத வண்ணம் அலங்கரித்திருந்தனர். பழைய படை புதிய வீரர்களைச் சேர்த்துக் கொண்டமையால் எண்ணிக்கையில் உயர்ந்து விட்டது. ஒவ்வொரு படை வீரரும் 1½ மாத சம்பளத்தை இனாமாகப் பெற்றனர். வேறெந்த அரசருடைய காலத்தில் நான் காணாத வகையில் பிரபுக்களும், சாதாரண மக்களும் இந்த ஆண்டில் பல வகையான சந்தோஷங்களை அனுபவித்தனர். என்னைவிட வயதில் மூத்தவர்கள் இந்த வகை யான ஒரு மகிழ்ச்சிகரமான ஆண்டை அவர்கள் நினைவிற்குக் கொண்டுவர இயலா நிலையில் இருந்தனர்.

[1] Barani. 248

அலாவுத்தீனுடைய பிரச்சினைகள்: ஏறக்குறைய 90 ஆண்டுகள் வட இந்தியாவைத் துருக்கியர்கள் ஆண்டு வந்திருந்தபோதும் அவர்களுடைய ஆதிக்கம் முழுமையாக நிலைநாட்டப்படவில்லை. வட இந்தியாவின் பல பாகங்களில் அவர்களது ஆதிக்கம் செல்லுபடியாகவில்லை. மேலும் அவர்களது ஆதிக்கத்திற்கு பல திசைகளிலிருந்து ஆபத்து வரத் தொடங்கியது. மேற்கில் சுல்தானுடைய ஆதிக்கம் ரவி ஆறுவரை பரவியிருந்தது. லாகூருக்கு அப்பால் இருந்த பகுதியில் எப்பொழுதும் குழப்ப நிலை ஏற்பட்டிருந்தது. கோக்கர்கள் அடிக்கடி கிளர்ச்சி செய்து வந்தனர். மங்கோலியர்கள் அடிக்கடி படையெடுத்து வந்து அமைதியைக் குலையச் செய்தனர். சுல்தானுடைய அதிகாரத்திற்குட்பட்டிருந்த மூல்தான் தற்போது அலாவுத்தீனுடைய பரம எதிரியான அர்க்கலீகான் கைவசமிருந்தது. டில்லியிலிருந்து தப்பி ஓடிச் சென்றவர்களுக்கு அவர் புகலிடம் அளித்து அலாவுத்தீனுக்கு அவர்பால் ஏற்பட்டிருந்த மனக் கசப்பை மேலும் வளர்த்து விட்டார். இராஜபுத்திர அரசுகள் பல இன்னும் டில்லியின் ஆதிக்கத்தை ஏற்றுக்கொள்ளாதிருந்தன. அவற்றுள் சித்தூரும் இரண்தம்பாரும் குறிப்பிடத்தக்கவனவாக இருந்தன. இராஜபுதனத்திற்குத் தெற்கே வாகேள அரச குலத்தினர் குஜராத்தை வெற்றிப் பெருமிதத்துடன் ஆண்டு வந்தனர். மத்திய இந்தியாவில் சுல்தானுடைய படைகள் பல இடங்களில் வெற்றி வாகை சூடியிருப்பினும், உஜ்ஜயினி, சாந்தேரி, தார் போன்ற இடங்களை நிலையாக அவருடைய ஆட்சிக்குட்படுத்த இயலவில்லை. கிழக்கில் பீகாரும், வங்காளமும் சுதந்திர நாடுகளாகவே இயங்கி வந்தன. அயோத்தி, காரி, கோரக்பூர் ஆகிய இடங்களிலும் சுல்தானுடைய ஆதிக்கம் முழுமையாக ஏற்படுத்த பெறவில்லை. மீரத் தொடங்கி பிலிபித் வரையில் உள்ள பகுதி அடக்குதற்கு இயலாத நில மானியத் தலைவர்கள் கைவசம் இருந்தது. டில்லி சுல்தானுடைய அரசு அதனுடைய எதிர்ப்பாளர்களால் சூழப்பட்டிருந்தது என்று கூறின் அது மிகையாகாது.

விந்திய தலைக்குத் தெற்கே பல இந்து அரசுகள் தோன்றியிருந்தன.—தேவகிரி, வாரங்கல், துவார சமுத்திரம், சோழ, சேர, பாண்டிய அரசுகள். அவை ஒன்றோடொன்று போரிட்டுக் கொண்டிருந்தன.

பால்பனுடைய மறைவிற்குப் பிறகு ஆட்சி முறை சீர்கேடுற்றது. ஜலாலுத்தீனுடைய திறமையற்றத் தன்மை அதனை மேலும் சீர்குலையச் செய்தது. பிரபுக்கள் அரசருக்கு அடிக்கடி தொல்லைகள் கொடுத்து வந்தனர். பெரிய நிலக்கிழார்கள்

அரசுக்குக் கொடுத்து வந்த இன்னல்கள் பலவாகும். கூத் (Khut) முக்கடம் போன்ற உள்ளாட்சி சார்ந்த அதிகாரிகள் அளவு மீறிய சுதந்திரத்தைப் பெற்றிருந்தனர். பெருஞ் செல்வத்தை திரட்டவும் அவர்களுக்கு வாய்ப்பு இருந்தது. மைய அரசுக்கும் உள்ளாட்சித் துறைக்கும் இடையே நெருக்கமான தொடர்பு ஏற்படுத்தப்பட்டிருக்கவில்லை. ஆகவே மைய அரசின் நலன்கள் பொதுவாகப் புறக்கணிக்கப்பட்டு வந்தன.

மேற்கூறியவற்றிலிருந்து அலாவுத்தீனுடைய பிரச்சினைகள் மூன்று வகையாக இருந்தன என்பது புலனாகும். அவற்றுள் ஒன்று டில்லி அரசைச் சூழ்ந்திருந்த ஆபத்துக்களினின்றும் அதனைக் காப்பதென்பது. அவ்வாபத்துக்களில் மிக முக்கியமானது மங்கோலியப் படையெடுப்பாகும். இவர் காலத்தில் தான் மங்கோலியர்கள் இந்தியாவைக் கைப்பற்றும் நோக்கத்துடன் படையெடுத்து வந்தனர் என்பதை அறியும் போது இவ்வாபத்து எத்துணை அளவு சுல்தானுடைய கவனத்தை ஈர்த்திருக்கும் என்பது தெளிவாகும். இரண்டாவது வட இந்தியா முழுவதையும் ஒரு குடைகீழ் கொண்டுவருவதைப் பற்றியதாகும். இந்துஸ்தானம் முழுவதையும் வென்று தம் ஆதிக்கத்தை அங்கு நிலைநாட்டுவதே அவரது பிரச்சினைகளில் மிகப்பெரியதாகும். அதுவே அவரது பேரவாவாகும். மூன்றுவது பிரச்சினை ஆட்சிமுறையைப் பற்றிய தாகும். டில்லி சுல்தானுடைய அதிகாரத்தை நாட்டில் நிலை நாட்டுவது மிகமிக அவசியமாக இருந்தது. அவரது ஆட்சிக்கு ஊறுவிளைவிக்கவல்ல ஜலாலி குடும்பத்தினரை ஒழித்தால் அன்றி அவர் ஆட்சி நிலையாக நிற்க வழியில்லை. அரசருக்கு எதிராக சதித் திட்டங்களைத் தீட்டி பழக்கப்பட்டிருந்த பிரபுக்களை ஒடுக்குவதும் அவசியமாகத் தோன்றியது. மைய ஆட்சியின் வலுவின்மைக்குக் காரணமாக இருந்த உள்ளாட்சி அதிகாரிகளின் கொட்டத்தை அடக்குவதும் மிகமிக அவசியமான காரியமாக இருந்தது. இனி இப் பிரச்சினைகளை எங்ஙனம் சமாளித்தார் என்பதைக் கவனிப்போமாக.

**அலாவுத்தீனும் ஜலாலுத்தீன் குடும்பத்தினரும் :** அலாவுத்தீனுடைய முதல் வேலை அவர்களது குடும்பத்தைச் சார்ந்தவர்களை ஒழித்துக் கட்டுவதேயாகும். ஜலாலுத்தீனுடைய பிள்ளைகளுள் ஒருவரான அர்க்கலீகான் மூல்தானில் அதிகாரம் செலுத்தி வந்தார் என்றும், அலாவுத்தீனிடம் போர் செய்ய இயலாது என்றறிந்தவுடன் டில்லியை விட்டு ருக்னுத்தீன் இப்ராஹீம் தம் தாயுடன் மூல்தானுக்கு ஓடிவிட்டார் என்றும் முன்னர் கண்டோம். மூல்தானில் அவர்கள் இருக்கும் வரை தமக்கு நிம்மதி ஏற்பட வழியில்லை என்றுணர்ந்த அலாவுத்தீன்

தமது நம்பிக்கைக்குரிய படைத் தலைவர்களான உலூக்கானையும், ஜபர்கானையும் ஏறக்குறைய 40,000 வீரர்களுடன் மூல்தானுக்கு அனுப்பி வைத்தார். மூல்தானை அடைந்ததும் அவர்கள் முற்றுகையைத் தொடங்கினார்கள். தமக்கு நேரவிருந்த ஆபத்தினை முன்கூட்டியே அறிந்திருந்த அர்க்கலீகான் போதுமான அளவு முற்றுகையைச் சமாளிப்பதற்கு வேண்டிய முன்னேற்பாடுகளைச் செய்திருந்தார். நீண்ட நாள் முற்றுகையினால் ஏற்படக் கூடியத் தீங்குகளை அறிந்திருந்தமையாலும், அலாவுத்தீனே வெற்றி வாய்ப்பினைப் பெற்றிருந்தார் என்பதை அறிந்தமையாலும், மூல்தானின் கொத்வால் முற்றுகைத் தொடங்கிய இரண்டு மாதங்களில் பகைவர் பக்கம் சேர்ந்து கொண்டார். தோல்வியடைவது திண்ணம் என்பதை உணர்ந்த அர்க்கலீகான் இறுதியில் மூல்தானிலிருந்த ஷெய்க் ருக்னுத்தீனை இவ்விவகாரத்தில் தலையிட்டு அமைதியை ஏற்படுத்துமாறு வேண்டிக் கொண்டார். அவ்வேண்டுகோளுக்கிணங்கி ஷெய்க் ருக்னுத்தீன் இவ்விரு சண்டைக்காரர்கள் விஷயத்தில் குறுக்கிட்டு சமாதானத்தை ஏற்படுத்தினார். ஜலாலுத்தீன் பிள்ளைகளை அவர் உலூக்கானிடம் அழைத்துச் சென்றார். அங்கு அவர்களுக்கு இளவரசர்களுக்குரியவரவேற்பளிக்கப்பட்டது. டில்லிப் படைகள் தலைநகர் நோக்கிப் புறப்பட்டன. அவர்களுடன் இளவரசர்களும், அவர்களுடைய குடும்பத்தினர்களும் சென்றனர். போகும் வழியில் நஸ்ரத்கான் அவர்களை ஹன்சிக்கு அருகிலுள்ள அபுஹார் என்னுமிடத்தில் சந்தித்தார். கைப்பற்றப்பட்ட பகைவர்களுக்கு தண்டனைகள் அளிக்கும் பணியினை சுல்தான் தமக்கு அளித்திருப்பதாகவும் யார்யாருக்கு என்ன என்ன தண்டனைகள் அளிக்க வேண்டும் என்பதை சுல்தான் தம்மிடம் கூறியிருப்பதாகவும் நஸ்ரத்கான் படைத் தலைவர்களிடம் கூறினார். அதற்கேற்ப அர்க்கலீகான், இப்ராஹீம், மலிக் அகமது சாப், மலிக் அல்கூ ஆகியோர் கண்கள் குருடாக்கப் பட்டன. பின்னர் அர்க்கலீயும், இப்ராஹீமும் அர்க்கலீகானுடைய இருபிள்ளைகளும் ஹன்சிகொத்வாலிடம் ஒப்படைக்கப்பட்டனர். அவர்கள் அனைவரையும் ஹன்சி கொத்வால் பின்னர் கொன்று விட்டார். மலிக் அகமது சாப்பும், அல்கூவும் நஸ்ரத்கானுடைய மாளிகையில் சிறை வைக்கப்பட்டனர். இளவரசர்களுடைய குடும்பங்களும், அடிமைகளும், செல்வங்களும் பறிமுதல் செய்யப்பட்டன. மலிகா-இ-ஜஹானும் ஏனைய பெண்களும் நஸ்ரத்கானுடைய மாளிகையில் சிறைவைக்கப்பட்டார்கள். அவருக்கு நேர்ந்த கதியைப்பற்றிய குறிப்பு ஏதும் வரலாற்று நூல்களில் காண இயலாது எனினும், அவருக்கு என்ன கைதி நேர்ந்திருக்கும் என்பதை நாம் எளிதாக ஊகிக்க இயலும்.[1] இவ்வாறாக சுல்தானுக்கு ஊறுவிளைவிக்கக் கூடிய

[1] Dr. K. S. Lal op. cit. p.66.

பழைய அரச குடும்பத்தினர் அனைவரும் இருந்த இடம் தெரியாத வாறு முழுமையாக ஒழிக்கப்பட்டனர்.

எஞ்சியிருப்பவர்கள் ஜலாலி பிரபுக்களேயாவார்கள். அவர்களுள் பலர் அலாவுத்தீனிடம் பணத்தைப் பெற்றுக் கொண்டு அவரை ஆதரித்து வந்திருந்தனர். ஓர் எஜமானுக்குத் துரோகம் இழைத்த ஒருவன் மற்றொரு எஜமானனுக்கு உண்மையாக இருக்க முடியாது என்பதை அலாவுத்தீன் நன்கு உணர்ந்திருந்தார். எனவே அவர்களுக்குப் பாடம் கற்பித்தலைத் தம் முதல் வேலையாகக் கொண்டார். அப்பணி நஸ்ரத்கானிடம் ஒப்படைக்கப்பட்டது. நஸ்ரத்கான் அப்போது வசீர் பதவியை வகித்திருந்தார். அப்பதவியில் அமர்த்தப்பட்ட குவாஜா கதீர் கதி என்னவாயிற்று என்பதை நாம் அறியோம். ஜலாலி பிரபுக்கள் பலர் கைது செய்யப்பட்டு சிறையிலடைக்கப்பட்டனர். வேறு சிலரது கண் பார்வை பறிக்கப்பட்டது. மற்றும் சிலர் கொலையுண்டனர். அவர்கள் அலாவுத்தீனிடமிருந்து பெற்றுக் கொண்ட பணம் பறிமுதல் செய்யப்பட்டது. அவர்களுடைய சொத்துக்கள் அரசுடைமையாக்கப்பட்டன. அவர்களுடைய குடும்பங்கள் அழிக்கப்பட்டன. அவர்களுடைய படை வீரர்களையும், அடிமைகளையும் அலாயி பிரபுக்களுக்குப் பகிர்ந்தளிக்க ஏற்பாடு செய்யப்பட்டது. பழைய ஜலாலி பிரபுக்களுள் மூவர் மட்டுமே உயிர் தப்பினார்கள்— மலிக் குத்புத்தீன் அல்வி, மலிக் நாசீர் உத்தீன் ராணு, மலிக் அமீர் ஜமால் கல்ஜி. அவர்கள் மூவரும் ஜலாலுத்தீன் குடும்பத்தினை இறுதிவரை கைவிடவில்லை. அலாவுத்தீனிடம் ஒரு காசுகூட கை நீட்டி வாங்கவில்லை. அதுவே அவர்கள் உயிரோடு வாழ விடப்பட்டதற்குக் காரணமாகும். மேற்கூறிய நடவடிக்கைகள் இரு பலன்களை அளித்தன. பழைய துருக்கிய பிரபுக்கள் கூட்டம் முற்றிலும் ஒடுக்கப்பட்டு விட்டது. அலாவுத்தீனுக்கு எப்போதும் கீழ்ப்படிந்து நடக்கக்கூடிய புதியதொரு பிரபுக்கள் கூட்டம் உருவாக இது துணை நின்றது. மேலும் ஏறக்குறைய ஒரு கோடி தங்காக்கள் (Tankas) இப்போது அரசருடைய கருவூலத்தில் சேர்க்கப்பட இது உதவியது.

அதனை அடுத்து கூட்டு அரசாங்கம் கலைக்கப் பட்டது. குவாஜா கதீருக்குப் பதிலாக நஸ்ரத்கான் வசீராக நியமிக்கப் பட்டார் என்பதை முன்னரே கண்டோம். பழைய கொத்வால் மலிக் உல் உமாரா பக்ருத்தீனுக்குப் பதிலாக அலாஉல்முல்க்கை கொத்வாலாக நியமித்தார். துருக்கிய இனத்தைச் சாராத நகராட்சி ஊழியர்கள் அனைவரும் அவருடைய பொறுப்பில் பணி யாற்றி வரும்படி செய்தார்.

குஜரத் படையெடுப்பு: ஜலாலுத்தீனுடைய குடும்பத்தினரையும், ஜலாலி பிரபுக்களையும் ஒழித்த பின்னர் அலாவுத்தீனுடைய ஆட்சி நிலையாக நிறுத்தப்பட்டது, ஆகவே தம் இராச்சியத்தை மேலும் விரிவடையச் செய்யும் முயற்சியினை மேற்கொள்ள இப்போது வாய்ப்பு ஏற்பட்டது. அவரது தாக்குதலுக்கு இலக்கான முதல் இந்து இராச்சியம் குஜரத்தேயாகும். இந்தியாவின் மிகச் செழுமையான பகுதிகளுள் குஜரத் ஒன்றாகும். அங்கு விவசாயம், வாணிபம் ஆகிய இரண்டுமே செழித்தோங்கி இருந்தன. அரேபியா, பாரசீகம் ஆகிய நாடுகளுடன் குஜரத் வியாபாரத் தொடர்பு கொண்டிருந்தது. செல்வச் செழிப்புடன் விளங்கியிருந்த குஜரத் இந்தியாவினைக் கொள்ளையிடும் பொருட்டு படையெடுத்து வந்த மாமூத் கஜினியின் கவனத்தை ஈர்த்து விட்டதில் வியப்பென்ன இருக்கிறது! குத்புத்தீன் காலத்தில் குஜரத் இரு முறை முஸ்லீம்களின் தாக்குதலுக்கு இரையாகியது என்பதை முன்னர் கண்டோம். அலாவுத்தீன் காலத்தில் வாகேள இராஜ புத்திர குடும்பத்தைச் சார்த்த கரன் குஜரத்தை ஆண்டு வந்தார்.

கரனுடைய அமைச்சர் மாதவருடைய மனைவியான ரூபசுந்தரி என்பவரின் சாபமே அலாவுத்தீனுடைய குஜரத் படையெடுப்புக் காரணம் என்பதை குஜராத்தி வரலாற்றுச் சான்றுகள் நமக்குக் கூறுகின்றன. ரூபசுந்தரியின் அழகில் கரன் மயங்கி அவர் மீது காதல் கொண்டார் என்றும், மாதவர் ஊரில் இல்லாத சமயம் பார்த்து அவரை வலுக்கட்டாயமாக அடைய நினைத்தார் என்றும், தம் கணவரிடமிருந்து அவர் பிரிக்கப்பட்டதுபோல கரனுடைய மனைவியும் அவரை விட்டுப் பிரிக்கப்படுவார் என்றவாறு அவர் சாபங் கொடுத்தார் என்றும், செய்தியை அறிந்த மாதவர் அலாவுத்தீனுடைய உதவியைக் கொண்டு பழி வாங்க முற்பட்டார் என்றும் குஜராத்தி சான்றுகள் பகர்கின்றன.

இந்தப் படையெடுப்பு எப்போது ஏற்பட்டது என்பதில் முஸ்லீம் வரலாற்றாசிரியர்களிடையே கருத்து வேறுபாடு தோன்றியிருக்கிறது. பரணி, அமீர் குஸ்ரூ ஆகியோர் இப்படையெடுப்பு கி.பி. 1299-ல் ஏற்பட்டதாகக் கூறுகின்றனர். பிரிஷ்டா 1297-1298-ல் நடைபெற்றதாகக் கூறியுள்ளார். டாக்டர் K.S. லால் இப்படையெடுப்பு 1299ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 24 ஆம் நாள் தொடங்கப்பட்டிருக்க வேண்டும் என்று கருதுகிறார்.[1] படையினுக்குத் தலைமை தாங்கி நடத்தும் பொறுப்பு உலூக்கான்,

[1] op cit p. 68

நஸ்ரத்கான் ஆகியோரிடம் ஒப்படைக்கப் பட்டது. சிந்துவிலிருந்து புறப்பட்டு நஸ்ரத்கானுடைய படையுடன் சேர்ந்து பின்னர் குஜரத்தைத் தாக்க வேண்டுமென்று அலாவுத்தீன் உலூக்கானுக்குக் கட்டளையிட்டார். சுல்தானுடைய கட்டளைக் கிணங்கி உலூக்கான் சிந்துவிலிருந்து புறப்பட்டார். போகும் வழியில் உலூக்கான் ஜெய் சால்மரைத் தாக்கினர். பின்னர் சித்தூருக்கு அருகில் நஸ்ரத்கான் படையுடன் சேர்ந்து கொண்டார். டில்லியிலிருந்து குஜரத்திற்கு நேராகச் செல்ல வேண்டுமெனில் ஜலோர் வழியாகத்தான் போக வேண்டும், ஜலோர் அப்போது இராஜபுத்திரர்களிடமிருந்தது. ஆகவே ஜலோர் அரசரான கன்ஹர்தேவாவை அவர் நாட்டின் வழியாகத் தம் படை செல்லுதற்கு அலாவுத்தீன் அனுமதி கேட்டார். ஆனல் கன்ஹர்தேவா அதற்கிசைய மறுத்து விட்டார், எனவே சித்தூர் வழியாக சுல்தான் படைகள் செல்ல வேண்டியதாயிற்று. பனஸ் (Banas) ஆற்றைக் கடந்து அப்படைகள் ரடோஸா (Ratosa) கோட்டையைக் கைப்பற்றிக் கொண்டன. ஜீன பிரபா சூரி தமது சந்திரப் பிரபாவில் சித்தூர் அரசரான சமர்சிங் படையெடுப்பாளர்களை வென்று மேவார் நாட்டைக் காப்பாற்றினர் என்று எழுதியுள்ளார். இதிலிருந்து சுல்தானுடைய படைகள் மேவாரை தாங்கள் விரும்பியபடி சூறையாட முடியவில்லை என்பது தெளிவாகும். கன்ஹத்-தெ-பிரபந்த் என்னும் காவியத்தில் சமர்சிங் சுல்தானுடைய படைகளை சித்தூர் வழியாகப் போக அனுமதித்தார் என்று கூறப்பட்டுள்ளது.

குஜரத்தை அடைந்த பிறகு உலூக்கான் வழக்கம் போல் கொள்ளையிடும் பணியில் தீவிரமாக ஈடுபட்டார். அழகு மிக்க அன்ஹில் வாரா நகரம் அழிக்கப்பட்டது. எதிர்பாராத விதமாக ஏற்பட்ட தாக்குதல் குஜரத் அரசரை நிலை குலையச் செய்துவிட்டது. தேவகிரிக்குத் தப்பியோடுவதைத் தவிர வேறு வழியில்லை என்று அவர் உணர்ந்தமையால் காலதாமதம் செய்யாமல் நாட்டை விட்டு ஓடி விட்டார். அவரைப் பின் தொடர்ந்து சென்ற சுல்தானுடைய படைகள் அவருடைய தலைமை அரசி கமலா தேவியையும், பெருஞ்செல்வத்தையும் கைப்பற்றிக் கொண்டனர். கமலா தேவியை தக்க பாதுகாப்புடன் டில்லிக்கு அனுப்பி வைத்தார்கள். அலாவுத்தீன் அவரைத் தம் அந்தப்புரத்தில் சேர்த்துக் கொண்டார். பின்னர் குஜரத் நாட்டின் ஏனைய நகரங்கள் முஸ்லிம்கள் தாக்குதலுக்கு இலக்காகி நின்றன. சுல்தானுடைய படைகள் பெரும் பொருளைக் கொள்ளையடித்தன, அதுமட்டுமன்றி இந்து கோயில்களை இடித்துத் தரைமட்டமாக்கி விட்டன. அவற்றுள் ஒன்று சோமநாதபுரக் கோயிலாகும்.

மாமூத் கஜினியின் படையெடுப்பிற்குப் பின்னர் அக்கோயில் குமார பாலா என்பவரால் புதுப்பிக்கப்பட்டது. புகழ்மிக்க அக் கோயிலைச் சூறையாடி அங்கிருந்த வழிபாட்டுச் சிலைகளை உடைத்து மாட்டு வண்டிகளில் அவற்றை ஏற்றி டில்லிக்கு அனுப்பி வைத்தார்கள். டில்லியில் முஸ்லிம்கள் மிதித்துச் செல்லும்படி யாக வழியில் கிடத்தப்பட்டன. நஸ்ரத்கான் பின்னர் காம்பே (Cambay) சென்றார். அங்கிருந்த முஸ்லிம் வணிகர்களிடமிருந்து விலைமதிக்க இயலாத பொன்னும், நவரத்தினங்களும் பறிமுதல் செய்து கொண்டு நாடு திரும்பினார். அங்கு தான் கபூர் (Kafur) கைப்பற்றப்பட்டார். கபூருடைய எஜமானன் அவரை ஆயிரம் தினார்கள் கொடுத்து வாங்கியிருந்தமையால் அவரை ஹஜார் தினாரி என்று அழைத்தனர். குஜரத்தை முழுமையாக சூறையாடி விட்டு உலூக்கானும், நஸ்ரத்கானும் டில்லி திரும்பினார்கள், சுல்தா னுடைய ஆதிக்கத்தின்கீழ் குஜரத் தொடர்ந்து இருக்க வேண்டும் என்பதற்கு அங்கு ஒரு படை நிறுத்தப்பட்டது. சுல்தானுடைய மைத்துனரான அலப்கான் குஜரத்தின் ஆளுநராக நியமிக்கப் பட்டார்.

டில்லியிலிருந்து குஜரத் சற்று தூரத்தில் இருந்த போதிலும், டில்லிக்கும் குஜரத்திற்கும் இடையே இராஜபுத்திர இராச்சியங்கள் இருந்த போதிலும் சுல்தானுடைய படைகள் எளிதாகவும், துரித மாகவும் குஜரத்தை டில்லியின் ஆதிக்கத்தின் கீழ்கொண்டு வருவதற்கு துணையாக இருந்தவை யாவை என்பதை நாம் திட்ட வட்டமாகக் கூறுதற்கில்லை. கரன் தம்முடைய மக்களிடையே செல்வாக்குப் பெறாத காரணத்தாலோ அல்லது அவருடைய இராணுவம் மற்றும் நிருவாக அமைப்பு முறை காலத்திற்கேற்ற வாறு அமைந்திராத காரணத்தாலோ குஜரத்தை எளிதில் பகைவர் கைவசப்படுத்தியிருக்கக்கூடும்.[1] கரன் பகைவர்களை எதிர்கொள்ள போதுமான முன்னேற்பாடுகளைச் செய்யத் தவறி விட்டமை ஒரு முக்கிய காரணமாக இருக்கக்கூடும். பகைவர் வாளேந்தியிருந்தபோது அவர் தூங்கிக் கொண்டிருந்தார் என்று இசாமி கூறுகின்றார். உலூக்கானும், நஸ்ரத்கானும் ஜாலோர் வழியாக டில்லி திரும்பி வந்து கொண்டிருந்த போது அவர்கள் ஒரு படை கலகத்தைச் சமாளிக்க வேண்டியதாயிற்று. குஜரத் படையெடுப்பின்போது படைவீரர்கள் பெரும் பொருளைக் கொள்ளையிட்டு இருந்தனர். அப்பொருளின் பெரும் பகுதியைத் தங்களிடமே மறைத்து வைத்துக் கொண்டனர். அதையறிந்த படைத்தலைவர்கள் மறைக்கப்பட்ட பொருளில் சுல்தானுக்குச்

[1] ACHI. p. 335.

சேர வேண்டிய பங்கைக் கொடுத்து விடும்படி கேட்டனர். அதற்கு அவர்கள் இசையவில்லை. எனவே அதனைப் பெறுவதற் காக கடுமையான முறைகளை அவர்கள் கையாண்டனர். அதுவே படைக் கலகத்திற்குக் காரணமாகும். அதில் புதிய முஸ்லிம்கள் பெருவாரியாக ஈடுபட்டனர். இசாமி அதில் ஈடுபட்ட நான்கு அதிகாரிகளின் பெயர்களைக் குறிப்பிட்டுள்ளார். முகமது ஷா, கப்ரு, யல்ஹக், புர்ராக். அவர்கள் தாங்கள் கொள்ளையடித்தப் பொருட்களை சுல்தானுக்குக் கொடுக்க மறுத்து விட்டனர் என்றும் இசாமி கூறுகின்றார். கொள்ளையடித்தப் பொருட்களைத் திருப்பித் தர மறுத்துவிட்ட வேறு பல புதிய முஸ்லிம்கள் பெயர்களை யஹியா தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.[1] புரட்சியாளர்களுக்கு ஜாலோர் மன்னர் உதவி புரிந்தார்.

சுல்தானுடைய படைகள் ஜாலோர் வழியாக குஜரத் செல்ல அவர் அனுமதிக்கவில்லை என்று முன்னர் கண்டோம். வெற்றி வாகை சூடி திரும்பி வந்து கொண்டிருந்த சுல்தானுடைய படைகள் ஜாலோர் மன்னருக்கு ஒரு பாடம் கற்பிக்க எண்ணி யிருக்கக் கூடும். எனவே ஜாலோர் மன்னர் சுல்தானுடைய படைகளுக்குத் தொந்தரவு அளிக்க முற்பட்டிருக்கக் கூடும். கலகக்காரர்கள் ஒருநாள் காலையில் மலிக் ஆயிஸ் உத்தீனைக் கொன்று விட்டார். அவர் நஸ்ரத்கானுடைய சகோதரன். அவர் உலூக்கானுடைய செயலாளராகப் பணியாற்றி வந்தார். உலூக் கானுடைய பாசறைக்குச் சென்றனர். சுல்தானுடைய சகோதரியின் மகனை உலூக்கான் என்று தவறாக எண்ணி அவரைக் கொன்று விட்டனர். உலூக்கான் தப்பியோடி நஸ்ரத்கானுடைய உறைவிடத்திற்குச் சென்று விட்டார். இரு படைத்தலைவர்களும் உடனடியாகத் தம் படைகளைத் திரட்டுவதற்காக முரசு கொட்டு வித்தனர். பக்கத்திலிருந்த இந்து அரசர்கள் தங்களைத் தாக்க வந்து விட்டனர் போலும் என்று எண்ணி அநேக படை வீரர்கள் தலைவர்கள் முன் அணிவகுத்து நின்றனர். அதைக் கண்டதும் புரட்சியில் ஈடுபட்ட மங்கோலிய அதிகாரிகள் பயந்துபோய் அங்கிருந்து ஓடிவிட்டனர். முகமதுஷாவும் கப்ருவும் இரண்தம்பார் சென்று அங்கு புகலிடம் நாடினார்கள். வேறு சிலர் கரனிடம் சென்று அவருடைய பாதுகாப்பை வேண்டினார்கள். கரன் அது போது நன்தர்பார் என்னுமிடத்தில் தேவகிரி அரசனின் விருந்தின ராக இருந்தார் என்பது அறியற்பாலது. கலகம் நான்கு நாட்களில் முடிவுற்றது. அலாவுத்தீனுடைய படைத்தலைவர்களின் சமயோசித புத்தி அவர்களைக் காப்பாற்றி விட்டது. ஆயினும் அவர்களை அது

[1] T. M.S. p. 76,

உலுக்கி விட்டது என்று கூறின் அது மிகையாகாது. அதன் பிறகு அவர்கள் படை வீரர்களைச் சுல்தானுக்குச் சேர வேண்டிய பங்கைக் கொடுத்து விடுமாறு வற்புறுத்தவில்லை. வட மதுரை வழியாக படைகள் டில்லி திரும்பின. வட மதுரையில் உலூக்கான் ஒரு மசூதி கட்டுவதற்கு ஏற்பாடு செய்ததாகக் கூறப்படுகிறது.

கலகத்திற்குக் காரணமாகவிருந்த முக்கிய புதிய முஸ்லிம் வகுப்பைச் சார்ந்த அதிகாரிகள் தண்டனையிலிருந்து தப்பிக்க வேற்று நாட்டரசர்களிடம் தஞ்சம் புகுந்தனர் என்று முன்னர் கூறினோம். ஆனால் அவர்களுடைய குடும்பத்தினர்கள் அவர்களுக்குப் பதிலாகத் தண்டனையேற்க வேண்டியதாயிற்று. அவர்களுடைய மனைவி மக்களைச் சிறையிலிடும்படி சுல்தான் கட்டளையிட்டார். அத்துடன் மன நிறைவு பெறாத நஸ்ரத்கான் தமது சகோதரனின் கொலைக்குக் காரணமாக இருந்தவர்களின் மனைவிமார்களின் கற்பை தோட்டிகளைக் கொண்டு சூறையாடினார். அவர்களுடைய குழந்தைகளின் தலைகளை அவர்கள் தாய்மார்களின் கண்ணெதிரில் சுக்கு நூறாக உடைத்தெறியும்படி கட்டளையிட்டார். மேற்கண்ட கொடூரமான செயலை பரணி கண்டிக்கும் வகையில் பின் வருமாறு எழுதியுள்ளார்.[1] ஆண்கள் செய்த குற்றத்திற்காக மனைவி மக்கள் தண்டிக்கப்படும் வழக்கம் இந்த ஆண்டு தான் தொடங்கியது. இதற்கு முன்னர் தங்களுடைய கணவன்மார்கள் செய்த குற்றங்களுக்காக டில்லியில் பெண்களும், அவர்களுடைய குழந்தைகளும் தண்டிக்கப்பட்டதேயில்லை என்றும் இந்த வகையான தண்டனையை உலகில் எந்த சமயச் சட்டமும் அனுமதிக்கவில்லை என்றும் கூறியுள்ளார்.[1]

உலூக்கானும், நஸ்ரத்கானும் குஜரத்தில் சுல்தானுடைய படை வலிமையை பறைசாற்றிக் கொண்டிருந்த நேரத்தில் மங்கோலியப் படையெடுப்பு ஒன்று ஏற்பட்டது. ஜபர்கானை அனுப்பி அதனை முறியடித்தார். அதைப் பற்றி பின்னர் விரிவாக கவனிப்போம். அரியணை ஏறிய சில ஆண்டுகளுக்குள்ளாக சுல்தானுக்கு வெற்றிமேல் வெற்றி கிடைத்துக் கொண்டு வந்தது. அரச காரியங்களும் திருப்திகரமாகக் கவனிக்கப்பட்டு வந்தன. ஏராளமான செல்வங்களையும், யானைகளையும் குதிரைகளையும் சேர்த்து விட்டார். நாட்டில் அவருக்குப் பகைவரே இல்லை என்ற எண்ணத்தில் இறுமாந்திருந்தார். இத்தகையதொரு சூழ்நிலையில் தான் அவர் உள்ளத்தில் அசாதாரணமானதும் அறிவுக்குப் பொருந்தாததுமான சில திட்டங்கள் உருவாயின. அவற்றுள்

[1] 253

ஒன்று ஒரு புதிய மதத்தை ஏற்படுத்துவதென்பதாகும். அவ்வாறு ஒரு சமயத்தைத் தோற்றுவித்து விட்டால் அவரது புகழ் நபி நாயகத்தின் புகழைப்போல் நிலைத்திருக்கும் என்று அவர் எண்ணினர். நபிநாயகம் நான்கு முக்கிய சீடர்களைப் பெற்றிருந் தார். அதே போன்று இவருக்கும் நான்கு முக்கிய துணைவர்கள் இருந்தனர்—அலப்கான், நஸ்ரத்கான். ஜபர்கான், உலூக்கான். இவர்களுடைய துணையுடனும், தம் படையின் வலிமையைக் கொண்டும் ஒரு மதத்தை ஏற்படுத்தி அதனை மக்கள் மீது திணித்து விட இயலும் என்று அவர் கருதினர். சமயம் நேர்ந்தபோதெல் லாம் தமது திட்டத்தை அவர் விளக்குவது வழக்கம். ஒரு விருந்தின் போது ஒரு மதத்தை ஏற்படுத்தப் போவதாக அவர் அறிவித்த போது அலா உல்முல்க் அவருக்குத் தக்க அறிவுரையை வழங் கினர். சமயத்தை ஏற்படுத்துவதென்பது எல்லோராலும் செய்யக் கூடிய காரியமன்று. அதற்கென கடவுள் அவ்வப்போது ஒருவரைத் தேர்ந்தெடுத்து அவர் வாயிலாக உண்மையை எடுத்துக் கூறி வருகின்றார். மனிதன் தன் அறிவுத் திறமையின் காரணமாக சமயத்தை ஏற்படுத்த இயலும் என்பது ஏற்றுக்கொள்ளத் தக்க தல்ல. கடவுளுடைய அருளைப் பெற்றவர்தாம் அக்காரியத்தைச் செய்ய இயலும். செங்கிஸ்கான் போன்ற பெரிய படைத் தலைவர்கள் தங்கள் படை வலிமையைக் கொண்டு இஸ்லாமிய மதத்தை ஒழிக்க மேற்கொண்ட முயற்சி யாவும் தோல்வி அடைந்ததற்குக் காரணம் இஸ்லாம் கடவுளுடைய படைப்பாக இருந்தமையேயாகும். மேலும் அலாவுத்தீன் தங்களுடைய மதத்தில் தலையிடுகிறார் என்ற எண்ணம் மக்கள் மத்தியில் தோன்றினல் அவர்கள் அரசரிடம் காட்டி வரும் விசுவாசத்தைத் திரும்பப் பெற்றுக் கொண்டு கலகத்திலும், அரச துரோகச் செயல் களிலும் ஈடுபடுவார்கள் என்று அலா உல்முல்க் எடுத்துக் கூறினர். இதைக் கேட்டதும் சுல்தான் நிலைமையை நன்கு புரிந்துகொண்டு இனி மதம் ஒன்றை ஏற்படுத்தும் எண்ணத்தைத் தம் மனத்தில் தோன்ற அனுமதிக்கப் போவதில்லை என்று உறுதி கூறினர்.

மேற்கொண்ட தகவல்களை அப்படியே ஏற்றுக் கொள்வதில் சில இடர்ப்பாடுகள் உண்டு. அலாவுத்தீனுடைய நான்கு உற்ற நண்பர்களுள் ஒருவரான ஜபர்கானை ஒழித்துவிட வேண்டும் என்று அலாவுத்தீன் ஒரு சமயம் எண்ணினர். ஜபர்கான் இறந்துபட்ட செய்தியைக் கேட்டதும் அலாவுத்தீன் எல்லையற்ற மகிழ்ச்சியை அடைந்தார். அவ்வாறிருக்க ஜபர்கான் உட்பட நான்கு உற்றத் துணைவர்களின் உதவியைக் கொண்டு ஒரு புதிய சமயத்தை உருவாக்க நினைத்தார் என்பது பொருந்தாது அல்லவா? அலாவுத்தீன் இஸ்லாமிய மதத்தில் அசையா நம்பிக்கைக் கொண்

டிருந்தார் என்று பரணி நமக்கு அடிக்கடி எடுத்துக் கூறியுள்ளார். அவ்வாறிருக்க அவர் ஒரு புதிய சமயத்தை உருவாக்க முனைந்தார் என்பது அறிவுக்குப் பொருத்தமானதாகத் தோன்றவில்லை. மேலும் புதிய மதம் ஒன்றைத் தோற்றுவிக்க அலாவுத்தீன் எண்ணினார் என்று பரணி கூறுகின்றாரேயொழிய, அப்புதிய சமயத்தின் அடிப்படைக் கோட்பாடு என்ன என்பதை அவர் குறிப்பிடவில்லை. புதிய சமயம் தோற்றுவிக்க எண்ணியிருந்தாலல்லவா அவர் அதைப்பற்றிக் குறிப்பிட இயலும்? பரணியைத் தவிர சமகாலத்து ஆசிரியர்கள் வேறெவரும் இத்தகவல்களை நமக்கு அளிக்கவில்லை. அலாவுத்தீனைப் பற்றிய வதந்திகளை பரணி உண்மையென நம்பி அவற்றைத் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார் என்று கூறுவது தவறொன்றும் இல்லை.

அலாவுத்தீன் மனத்தில் தோன்றிய அடுத்த திட்டம் அலெக்சாண்டரைப் போல் நாடுகளை வெல்வதைப் பற்றியதாகும். அலாவுத்தீன் சிக்கந்தர் சானி அல்லது இரண்டாவது அலெக்சாண்டர் என்ற பட்டத்தை சூட்டிக் கொண்டு அதனைத் தம் நாணயங்களில் அச்சிட்டார். டில்லியில் தமக்குப் பதிலாக ஒருவரை ஆட்சி செலுத்தி வர ஏற்பாடு செய்து விட்டு அலெக்சாண்டரைப் போல் கிழக்கு நாடுகளையும் மேற்கு நாடுகளையும் வென்று தம் ஆளுகையின் கீழ் கொண்டுவர ஆசைப்பட்டார். அதைப் பற்றி தம்முடைய நண்பர்களிடம் அவர் அடிக்கடி ஆலோசனை நடத்துவார். ஒரு சமயம் இதைப்பற்றி ஒரு விருந்தில் விளக்கமாக பேசினார். அதுபோது அலா உல் முல்க் சுல்தானுடைய திட்டத்தைப் பாராட்டினார், ஆனால் அலெக்சாண்டருடைய போர் நடவடிக்கைகளுக்கு உதவியாக இருந்த சூழ்நிலைகள் அலாவுத்தீன் காலத்தில் ஏற்பட்டிருக்கவில்லை என்றும், கிரேக்க நாட்டில் அலெக்சாண்டரது ஆட்சி உறுதியான அஸ்திவாரத்தின் மேல் கட்டப்பட்டிருந்தது என்றும், அலாவுத்தீனுடைய ஆட்சி அத்தகையதொரு அடித்தளத்தைக் கொண்டிருக்கவில்லை என்றும், அலெக்சாண்டருக்கு தக்க யோசனை கூற அரிஸ்டாடில் போன்ற அறிஞர்கள் இருந்தனர் என்றும், ஆனால் அலாவுத்தீனுக்கு அவ்வப்போது ஆலோசனைக் கூறத்தக்க அறிவு சால் பெருமக்கள் எவரும் இல்லையென்றும், ஆகவே அவர் டில்லியில் இல்லாதபோது ஆட்சியை நடத்தவல்லவர்கள் எவருமில்லை என்றும் ஆகவே அத்திட்டத்தைப் பற்றி யோசிப்பதில் பயனில்லை என்றும் கூறினார். அலா உல் முல்க்கின் அறிவுரையை கவனமாகக் கேட்ட பின்னர் சுல்தான் அலா உல் முல்க்கை ஒரு கேள்வி கேட்டார், பெருஞ் செல்வத்தையும், யானைகள் பலவற்றையும், கணக்கிலடங்கா குதிரைகளையும் தம் கையில் வைத்துக் கொண்டு புதிய நாடுகளை

வென்று அவற்றைத் தம் இராச்சியத்துடன் இணைக்கவில்லை என்றார். அவர் பெற்றிருந்த வாய்ப்பு வளங்களினால் அவருக்கு என்ன பயன் உண்டாகும் என்றும் அவற்றின் துணை கொண்டு வியப்புக்குரிய சாதனைகளைப் புரியாவிடில் அவர் புகழை அடைவது எப்படி என்றும் கேட்டார். அக்கேள்விக்குப் பதிலளிக்கும் வகையில் அவர் இரண்டு யோசனைகளைக் கூறினார். இந்துஸ்தானத்திலேயே கைப்பற்ற வேண்டிய நாடுகள் பல உண்டு. வட இந்தியாவில் இரண்தம்பார், சித்தூர், சாந்தேரி, மாளவம், தார், உஜ்ஜயினி, பீகார். வங்காளம் ஆகியவை இன்னும் டில்லியின் ஆதிக்கத்தினை ஏற்றுக் கொள்ளவில்லை. தென்னிந்தியாவில் முஸ்லிம்களின் ஆட்சி இன்னும் தொடங்கவில்லை. இரண்டாவதாக வடமேற்குப் பகுதியில் மங்கோலியர் தாக்குதல் ஓயவில்லை. எல்லைப்பாதுகாப்பு சரிவர மேற் கொள்ளப்படவில்லை. இவ்விரு வேலைகளை செய்து முடித்த பின்னர் வேண்டுமானால் இந்தியாவிற்கு வெளியிலுள்ள நாடுகளை வெல்லுதற்கான முயற்சியை மேற் கொள்ளலாம் என்று கூறி முடித்தார். மற்றும் அதிகமாகக் குடிப்பதனால் அவர் நாட்டு நிருவாகத்தை திறம்பட நடத்த இயலாமல் போகிறது என்றும், அதனால் மக்கள் கலகம் செய்யத் துவங்கி விடுகின்றனர் என்றும், ஆகவே கேளிக்கை விருந்துகளில் குடிப்பதை அவர் நிறுத்த வேண்டும் என்றும் அறிவுரை வழங்கினார்.

அலாஉல் முல்க்கினுடைய அறிவுரைகள் சுல்தானுடைய கண்களைத்திறந்து விட்டன. தம் மனத்தில் தோன்றிய இருதிட்டங்கள் நடைமுறைக்கேற்றதாக என்பதை அவர் இப்போது உணர்ந்து விட்டார். இந்தியாவிலுள்ள சுதந்திர நாடுகளை வென்று இந்தியா முழுவதையும் ஒரே குடைக்கீழ் கொண்டு வருவதைத் தமது முக்கிய நோக்கமாகக் கொண்டார் தக்க அறிவுரைகளைக் தக்க நேரத்தில் தக்கபடி கூடிய அலாஉல்முல்க்கிற்கு சுல்தான் பொன்னுடையை அணிவித்து அரை மணங்கு பொன், 10,000 தங்காக்கள் 2 குதிரைகள், 2 கிராமங்கள் ஆகியவற்றைக் கொடுத்து அவரை பெருமைப் படுத்தினார்.

மேலே குறிப்பிடப்பட்ட அலாவுத்தீனுடைய இரண்டு திட்டங்கள், அவற்றை அவர் கைவிட்டதற்குக் காரணம் அதில் அலாஉல்முல்க்கின் பங்கு ஆகியவற்றைப் பற்றிய குறிப்புகளை பரணியின் வரலாற்று நூலில் காண்கிறோம். அலாஉல்முல்க் பரணியின் நெருங்கிய உறவினர். எனவே அவருக்கு வரலாற்று ஏடுகளில் ஒரு சிறப்பான இடத்தைத்தர வேண்டும் என்பதற்காக இத்தகைய உரையாடல் ஒன்றை பரணி படைத்திருக்கக் கூடும்.

இவ்வுரையாடல் மூலம் அலாவுத்தீன் ஒரு குடிகாரர். கேளிக்கை விருந்துகளில் அர்த்தமற்றவகையில் அவர் பேசுவது வழக்கம் என்பதை பரணி நமக்கு அறிவிக்க முயற்சித்துள்ளார். அவரது ஆட்சியில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளை நன்முக ஆராய்ந்து பார்க்கு மிடத்து அவர் ஒரு திறமையான போர் வீரராகவும், அரசியல் வல்லுநராகவும், செயல் முறைக்கேற்ற திட்டங்களை மட்டுமே நிறைவேற்ற ஆர்வம் கொண்டவராகவும் விளங்கினுர் என்பது புலப்படும். மேலும் அலெக்சாண்டரைப் பின்பற்றி உலகை வெல்ல வேண்டும் என்ற ஆர்வம் அலாவுத்தீனிடம் மட்டும் ஏற்பட்ட தன்று. பல முஸ்லிம் அரசர்கள் தங்களை இரண்டாவது அலெக்சாண்டராகக் கருதியது உண்டு. எனவே இத்திட்டங்களைப் பற்றி பரணி கூறியிருக்கும் கருத்துக்களை அப்படியே ஏற்றுக் கொள்வதென்பது அவ்வளவு சிறந்ததாகக் காணப்படவில்லை அல்லவா?

**அலாவுத்தீனும் வங்காளமும் :** சித்தூர் படையெடுப்பு மேற்கொள்ளப்பட்ட அதே ஆண்டில் மலிக்ஜூனு, மலிக் ஜூஜூ, ஆகியோர் தலைமையின் கீழ் வாரங்கலுக்கு ஒருபடை அனுப்பப் பட்டது என்று பரணி கூறுகின்முர். வங்காளம், ஒரிசா ஆகியவற்றின் வழியாகச் செல்ல வேண்டும் என்று அவர் ஏற்பாடு செய்தார். வாரங்கலுக்குச் செல்ல வழிகள் பலஉண்டு. எல்லிச்பூர் வழியாகச் சென்முல் பிரயாண தூரம் குறையும். அலாவுத்தீன் முன்பு தேவகிரியின் மீது படையெடுத்தபோது இந்த வழியைத் தான் பயன்படுத்தினுர். அவ்வாறிருக்க வாரங்கல் போவதற்கு வங்காளம், ஒரிசா ஆகியவற்றின் வழியாக ஏன் சுற்றிக் கொண்டு போக வேண்டும் என்ற வினு எழுகிறது. மேலும் வடஇந்தியாவிலேயே வெல்ல வேண்டிய பகுதிகள் அநேகம் இருக்க வாரங்கலுக்கு ஏன் போக வேண்டும் என்ற கேள்வியும் எழுகிறது. எனவே டாக்டர் K.S.லால் போன்ற ஆசிரியர்கள் இப்படையெடுப்பு வாரங்கலுக்கு எதிராக மேற்கொள்ளப்படவில்லை என்றும், வங்காளத்தை வெல்லுவதற்காகவே இப்போது படைகள் அனுப்பப்பட்டன என்றும் கூறுகிமுர்கள்.[1]

பால்பன் காலத்தில் வங்காளம் அவரது மகன் புக்ராகானின் பொறுப்பில் விடப்பட்டது என்று முன்பு படித்தோம். பால்பன் மறைந்த உடனே புக்ராகான் சுல்தான் நாசீர் உத்தீன் என்ற பட்டத்தைச் சூட்டிக் கொண்டு டில்லியின் ஆதிக்கத்தினின்றும் வங்காளத்தை விடுவித்தார். அது முதல் வங்காளம் ஒரு சுதந்திர நாடாக இருந்து வந்தது. 1291-ல் நாசீர் உத்தீன் மாமூத்

[1] *ibid* p. 78.

மறைந்தார். ருக்னுத்தீன் கைக்கோஸ் வங்காள சுல்தானுக பதவி யேற்ருர். அவர் 1296 வரை ஆட்சி செய்து இருக்க வேண்டும் என்று அவருடைய நாணயங்கள் வாயிலாக அறிகிருேம். அதுமுதல் 1301 ஆம் ஆண்டு வரையிலான வரலாற்றினைச் சரியாக அறிந்து கொள்ள இயலவில்லை. கைக்கோஸை அடுத்து ஷம்சுத்தீன் பிரூஸ் வங்காளத்தை ஆண்டு வந்தார். டில்லியின் ஆதிக்கத்தின் கீழ் வங்காளத்தைக் கொண்டு வரவேண்டும் என்ற ஆசை அலாவுத்தீன் சுல்தானுகப் பதவியேற்பதற்கு முன்பே தோன்றி யிருந்தது. தேவகிரி படையெடுப்பினை வெற்றிகரமாக முடித்து விட்டு வந்த உடனேயே ஜபர்கானை வங்காளத்திற்கு அனுப்பி அங்கு ஓர் இராச்சியத்தை அமைப்பதற்கான ஏற்பாடுகளை மேற் கொள்ளுமாறு பணித்தார். ஜலாலுத்தீனுக்கு எதிராக அவர் வகுத்து வந்த சதித் திட்டம் ஒருகால் தோல்வியில் முடிந்தால் வங்காளத்திற்குச் சென்று அங்கு ஓர் இராச்சியத்தை அமைப்பதே அவரது நோக்கமாகும்.[1] அலாவுத்தீன் டில்லி சுல்தானுகப் பதவி யேற்ற பின்னரும் வங்காளத்தை வென்று அங்கு ஒரு இராச் சியத்தை அமைக்க வேண்டும் என்ற எண்ணம் அவருக்கு ஏற்பட் டிருந்தது. ஜபர்கான் வெற்றிவாகை பலமுறை சூடி மக்களின் இதயத்தில் நிரந்தரமான இடத்தைப் பெற்று விட்டார். அவரது செல்வாக்கு வளரவளர சுல்தானுக்குத் தம் பதவிக்கு ஆபத்து வருமோ என்ற பயம் ஏற்பட்டது. எனவே ஒரு படையுடன் அவரை வங்கத்திற்கு அனுப்ப முடிவு செய்தார். வங்கத்தின் ஆளுநராக அவரை நியமித்து விட்டால் அவரால் தமக்கு ஆபத்து ஏதும் விளையாது என்று அலாவுத்தீன் எண்ணினுர்.[2] வங்கப்படை யெடுப்புக்கு உடனடியான காரணம் ஷம்சுத்தீன் பிரூஸின் நடத்தையேயாகும். ஷம்ஸுத்தீன் சுல்தான் பட்டத்தைச் சூட்டிக் கொண்டு, தம் பெயரில் நாணயங்களை அச்சிட்டும், குத்பாவைப் படிக்கச் செய்தும் வந்தார். வங்காளம் தனியரசாக விளங்க ஆதிக்க வெறி பிடித்த அலாவுத்தீன் அனுமதி வழங்க விரும்ப வில்லை.

இப்படையெடுப்புப் பற்றிய முழு விவரங்களை நாம் அறிவதற் கில்லை. இப்படையெடுப்பு தோல்வியில் முடிந்திருக்க வேண்டும். அதனுல்தான் அதனைப் பற்றிய போதிய விவரங்கள் நமக்குக் கிடைக்கவில்லை. மலிக்கபூரின் வாரங்கல் படையெடுப்பைப்பற்றி பிரிஷ்டா குறிப்பிடும்போது அதற்கு முன்னர் வங்காளம் வழியாக மேற்கொள்ளப்பட்ட படையெடுப்பு ஒன்றையும் சாதிக்க

[1] Dr K, S. Lal op. cit p, 79

[2] Barani p. 254.

இயலாமல் தோல்வியடைந்தது என்று கூறியுள்ளார். மேலும் ஷம்சுத்தீன் பிருஸ் 1321 ஆம் ஆண்டு வரை வங்காளத்தில் முழு அதிகாரத்துடன் ஆட்சி செய்து வந்தார் என்பதை அறிகிறோம். மேற்கூறியவற்றிலிருந்து வங்காளப் படையெடுப்பு தோல்வியில் முடிந்தது என்பது புலனாகும்.

**அலாவுத்தீனும் இராஜ புத்திர நாடுகளும்:** அலாவுத்தீனுடைய தாக்குதலுக்கு இலக்கான இராஜ புத்திர நாடுகள் ஒன்று ஜெய் சால்மர் ஆகும். இராஜ புதன பாணர்கள் இரண்டு கல்ஜி படையெடுப்புகளைப் பற்றி கூறியுள்ளனர். அவற்றுள் முதலாவது 1286-ல் நடைபெற்றது என்றும் அப்போது ஏற்பட்ட சண்டையில் 3,800 இராஜ புத்திரர்கள் இறந்தனர் என்றும் பல பெண்கள் தீயில் குதித்து உயிரை மாய்த்துக் கொண்டனர் என்றும் கூறியுள்ளனர். அதை அடுத்து துருக்கிய படைகள் ஜெய்சால்மரில் நிறுத்தப்பட்டன என்றும் ஆனால் இந்த ஆக்கிரமிப்பு இரண்டு ஆண்டுகளுக்கு மேல் நீடிக்கவில்லை என்றும் கூறியிருக்கின்றனர். இரண்டாவது படையெடுப்பு 1295-ல் அலாவுத்தீன் காலத்தில் நடத்தப் பெற்றதாகக் கூறப்படுகிறது. அப்போது ஜெய்சால்மரில் தூதா (Duda) என்பவர் ஆண்டு வந்தார். அவர் ஒரு சிறந்த போர் வீரர். துருக்கியர் வசமிருந்த பகுதிகளை அவர் அடிக்கடி தாக்கினார். ஒரு சமயம் ஆஜ்மீர் வரை படை நடத்திச் சென்று அனாசாகரில் நீர் அருந்த வந்த சுல்தானுடைய குதிரைகளைக் கைப் பற்றிக் கொண்டு தம் நாடு திரும்பினார். அதுவே அலாவுத்தீனுடைய படையெடுப்புக்குக் காரணமாகும். அப்போது 16,000 பெண்கள் தீக்குளித்தனர். தூதாரும் அவரைச் சார்ந்த 700 பேர்களும் போரில் உயிர் துறந்தனர். இந்நிகழ்ச்சி தாரீக்-இ-ம-ஆசூமி என்ற பாரசீக வரலாற்றிலும் குறிப்பிடப் பட்டுள்ளது. 1299-ல் குஜரத் அலாவுத்தீன் குஜரத்தைத் தாக்க முடிவு செய்தார் என்றும், சிந்துவிலிருந்து குஜராத்திற்கு ஜெய் சால்மர் வழியே படை நடத்திக் கொண்டு போகும்படி உலூக்கானுக்கு சுல்தான் கட்டளையிட்டார் என்றும் முன்பு கவனித்தோம். அக் கட்டளைக்கிணங்க அவர் ஜெய் சால்மரைக் கைப்பற்றி பல கபீர்களைக் கொன்றார். அங்கு 200 குதிரை வீரர்கள் நிறுத்தி விட்டு டில்லியிலிருந்து புறப்பட்டு வந்த சுல்தானுடைய படை களுடன் சேர்ந்து கொண்டார் என்று அந்நூலில் கூறப் பட்டுள்ளது. படையெடுப்புத் தேதியைப் பற்றி பாணர்கள், தாரீக்-இ-ம-ஆசூமி ஆகியவற்றிக்கிடையே கருத்து வேறுபாடு இருத்தலாலும் இப்படையெடுப்பைப் பற்றிய குறிப்புகள் வேறெந்த சமகால வரலாற்று நூல்களிலும் காண இயலாமை யாலும் இப்படையெடுப்பு நடத்தப்படவேயில்லை என்பர் சிலர்.

இந்த ஒரு காரணத்தைக் கொண்டு நாம் படையெடுப்பு நடத்தப் படவில்லை என்று கூறுவது சரியாகாது என்று கேம்பிரிட்ஜ் இந்திய வரலாறு கூறுகிறது. இக்கருத்தை நாமும் ஏற்றுக் கொள்ளலாம். 1296-ல் சுல்தான் அலாவுத்தீன் பட்டமேறினர் என்பதில் கருத்து வேறுபாடு இராமையினால் இராஜபுதன பாணர்கள் தரும் தேதியை நாம் ஏற்பதற்கில்லை. எனவே இப்படையெடுப்பு 1299-ல் நடைபெற்றிருக்க வேண்டும் என்பதைத் திண்ணமாகக் கூறலாம்.

**இரண்தம்பார் படையெடுப்பு:** இராஜ புத்திரர்களுக்கு எதிராக அலாவுத்தீன் மேற்கொண்ட முதல் முக்கியமான படையெடுப்பு இதுவேயாகும். இரண்தம்பாரை முதலில் தாக்க முனைந்ததற்கு சில காரணங்களை டாக்டர் K. S. லால் அவர்கள் கூறியுள்ளார். முதலாவது அது டில்லிக்கு வெகு அருகாமையில் இருந்தது. இரண்டாவதாக ஜலாலுத்தீன் அதைக் கைப்பற்றும் முயற்சியில் தோல்வியுற்றார். மூன்றாவதாக அதை எவரும் எளிதில் கைப்பற்ற இயலாது என்ற பெருமை அதற்கேற்பட்டிருந்தது.[1] போர் நடவடிக்கைக்கு உகந்த முறையில் அது அமைக்கப்பட்டிருந்தமையால் அலாவுத்தீன் அதைக் கைப்பற்றுவதன் வாயிலாக தமது ஆசைகளை நிறைவேற்ற இயலும் என்று கருதினர். குஜரத் படையெடுப்பை முடித்து விட்டு திரும்பும் வழியில் சுல்தானுடைய படையைச் சார்ந்தவர்களுள் சிலர் கலகம் செய்தனர் என்றும், அவர்களுக்கு முகமதுஷாவும் கெப்ருவும் தலைவர்களாக இருந்தனர் என்றும் முன்பு கண்டோம். கலகக்காரர்களுள் பெரும்பாலோர் புதிய முஸ்லிம்கள் ஆவார்கள். தக்க நடவடிக்கைகளை மேற்கொண்டதன் காரணமாக கலகம் எளிதில் அடக்கப்பட்டு விட்டது. முகமதுஷாவும், கெப்ருவும் அவர்களைச் சார்ந்த சிலரும் உயிருடன் தப்பி இரண்தம்பார் அரசரிடம் புகலிடம் நாடினர்கள். அப்போது இரண்தம்பாரை ஹமீர் தேவா என்பவர் ஆண்டு வந்தார். அவர் சௌஹான் குலத்தைச் சார்ந்தவர்; அவர் பிருதிவி ராஜாவின் நேரடி வழித் தோன்றல். வீர மிக்கவர்; மாளவத்தை வென்றார்; 3 மாடி பொன் வேய்ந்த அரண்மனை யொன்றைக் கட்டினர். தஞ்சம் புகுந்தவர்களைத் தலைக்கொடுத் தாவது காப்பாற்றும் பண்பில் ஊறி வளர்ந்த ஹமீர் தேவா வரவிருக்கும் ஆபத்தைப் பொருட்படுத்தாது அவர்களுக்குப் புகலிடமளித்தார். அவரது செய்கை அலாவுத்தீனுடைய கோபத்தைக் கிளறி விட்டது. 1300-ல் உலூக்கானையும் நஸ்ரத்கானையும் இரண்தம்பாரைத் தாக்கும்படி ஆணையிட்டார். அவ்வாணைக்

[1] Op. cit p. 83

கிணங்க 80,000 குதிரை வீரர்களுடனும் கணக்கற்ற காலாட் படையினருடனும் அவர்கள் இரண்தம்பாரை நோக்கிப் புறப் பட்டனர்.[1] உலூக்கான் புறப்படுவதற்கு முன்பு தூதுவர்கள் மூலம் முகமதுஷா, கெப்ரூ முதலானவர்களைக் கொன்று விடும்படியும் தவறினால் போருக்குத் தயாராகும்படியும் ஹமீர்தேவாவிற்குச் செய்தி அனுப்பினார். ஹமீர் தேவாவுடைய ஆலோசகர்கள் தஞ்சம் புகுந்த முஸ்லிம்களை உலூக்கானிடம் ஒப்படைத்து விடும்படி யோசனை கூறினார்கள். அரசருடன் நேரடியாக உறவு கொண் டிராதவர்களுக்காக அவருடைய குலத்திற்கே ஆபத்து தேடிக் கொள்வது விவேகமற்ற செயலாகும் என்று அவர்கள் கூறினார்கள். அவர்களுடைய யோசனையை அரசர் ஏற்கவில்லை. அதற்கு மாறாக ''என்னிடம் போதுமான அளவு பணமும், படை யும் இருக்கின்றன. பிறருடன் சண்டை போட எனக்கு விருப்ப மில்லை. ஆனால் போர் புரிவதற்கு அஞ்சேன். தங்களுடைய உயிர்களுக்கு ஆபத்து வருமோ என்று அஞ்சி என்னிடம் ஓடிவந்த இரண்டு அல்லது மூன்று துருக்கியர்களை நான் கைவிடமாட்டேன்'' என்று பதில் கடிதம் அனுப்பினார்.[2] அதன் விளைவாகப் போர் மூண்டது.

முதலில் ஜெயின் (Jhain) கைப்பற்றப்பட்டது. அதற்கு 'புதிய நகரம்' (Shahr-i-nau) என்ற பெயர் அளிக்கப்பட்டது. அதன் பின்னர் டில்லிப்படைகள் இரண்தம்பாரை முற்றுகையிட்டன. 12,000 குதிரை வீரர்களும், பல யானைகளும், கணக்கற்ற காலாட் படையினரும் கோட்டைக்குள் இருந்ததாக யாஹியா கூறுகிறார்.[3] 10,000 குதிரை வீரர்களை ஹமீர்தேவா வைத்திருந்ததாக அமீர் குஸ்ரூ கூறியுள்ளார்.[4] கோட்டைக்குள் பகை வராதபடி இராஜ புத்திரர்கள் கவண் கற்களை வீசிக்கொண்டிருந்தனர். முற்றுகையின் போது ஒருநாள் நஸ்ரத்கான் கோட்டையின் மதிலுக்கு வெகு அருகாமையில் சென்று விட்டார். அப்போது கவண் கல்லொன்று (mimjoniq stone) அவர் மீது விழுந்தது. அச்சம்பவம் நடந்த இரண்டு அல்லது மூன்று நாட்களின் அவர் உயிர் நீத்தார். ஆற்றல் மிக்க படைத்தலைவர் ஒருவரை இழந்து விட்ட முஸ்லிம் படைகள் துக்கத்தில் மூழ்கி விட்டதில் வியப்பேதும் இல்லை. பாசறை முழுவதிலும் மயான அமைதி நிலவியது. அவ்வமைதி நிலை தோல்வியின் காரணமாக ஏற்பட்டுள்ளது என்று இராஜ

[1] Hammir Kanya Bib. Ind. Text. English, preface. 29.

[2] Isami 261-63

[3] TMS, 77

[4] Deval Rani, 65

புத்திரர்கள் தப்புக்கணக்குப் போட்டனர். எனவே கோட்டையி னின்றும் வெளியேறி முஸ்லிம் படைகளைத் தாக்க முற்பட்டனர். அப்போது நடந்த சண்டையில் உலூக்கான் தோல்வியடைந்து ஜெயினை நோக்கிப் பின்வாங்கினர். முதல் வேலையாக அவர் சுல்தானுக்கு நிலைமையை விளக்கி கடிதம் ஒன்றை அனுப்பி வைத்தார். செய்தி அறிந்ததும் சுல்தான் படையுடன் இரண தம்பார் நோக்கி விரைந்தார். போகும் வழியில் தில்பத் என்னு மிடத்தில் சிறிது காலம் தங்கினர். அப்போதுதான் அக்கத்கான் அவரைக் கொல்ல முயற்சித்லார். அதைப்பற்றி பின்னர் கவனிப் போம். அதன்பின்னர் அவர் படைகளை வேகமாக நடத்திக்கொண்டு இரணதம்பார் சென்றடைந்தார். அவர் இரணதம்பார் சென்ற வுடன் முற்றுகை முழுமூச்சுடன் மேற்கொள்ளப்பட்டது. கோட்டை வாயிலை நேரடியாகத் தாக்கி அதனைக் கைப்பற்றுவது கடினமாகும் என்பதை சுல்தான் விரைவில் புரிந்து கொண்டார். ஏனெனில் கவண் கற்களை எறிவதிலும், அம்புகளை எய்துவதிலும் கோட்டைக் குள்ளிருந்தவர்களுக்குத்தான் மேலான வாய்ப்பு ஏற்பட்டிருந்தது. ஆகவே கோட்டையின் உச்சிக்குச் செல்வதற்கான மண்மேடையை (pasheb) அமைக்க முற்பட்டார். அதைக் கட்டும் பணியில் அநேக உயிர்களைத் தியாகம் செய்யவேண்டும் என்பதையும் அதை அமைக்க பலநாள் பிடிக்கும் என்பதையும் அலாவுத்தீன் அறிந் திருந்தபோதிலும் அதைவிட வேறுவழி அவருக்குப் புலப்படவில்லை. பக்கத்து ஊர்களிலிருந்து தையற்காரர்களை வரவழைத்து தோல் பைகளைத் தைக்கச் செய்தார். அவற்றைப் படை வீரர்களிடம் கொடுத்து அவற்றில் மண்நிரப்பச் செய்தார். மண்ணால் நிரப்பப் பட்டபைகள் அகழிகளில் போடப்பட்டன. பைகள் தீர்ந்துவிட்ட பிறகு கால்சட்டைகளைப் பைகளாகப் பயன்படுத்தினர்கள். அவற்றை அடிக்கல்லாகக் கொண்டு மண்மேடையொன்றை அமைத்தார். அந்த மேடையின் மீது கட்டுமானம் (gargaj) ஒன்றை அமைத்தார். அவற்றை அமைக்கும்போது கோட்டைக் குள்ளிருந்து இடைவிடாது வீசப்பட்ட கற்களும் அம்புகளும் பல உயிர்களைக் குடித்தன. இறுதியில் தரையிலிருந்து கோட்டை மதிலின் உச்சிவரை சாய்வான ஒரு மண்சாலை அமைக்கப்பட்டு விட்டது. அதன் வழியாக அலாவுத்தீனுடைய குதிரைகளும் படை வீரர்களும் கோட்டையின் உச்சிக்குச் செல்லவழி ஏற்பட்டது. இதற்கிடையில் கோட்டையில் சேர்த்து வைக்கப்பட்டிருந்த உணவுப் பொருட்கள் எல்லாம் செலவழிந்து விட்டன. பஞ்சநிலை அங்கு உருவாகி விட்டது. ஒரு மணி (grain) அரிசி வாங்க இரண்டு குண்டுமணி பொன் கொடுக்க வேண்டியதாயிற்று.[1] பசியின்

[1] Amir Khusrau, Khazain-ul-Futuh, 52-53

வேதனையைப் பொறுக்க இயலாது என்ற நிலை ஏற்பட்டவுடன் ஹமீர் தீயை மூட்டச்செய்து அதில் இராணி ரங்கதேவியையும் ஏனைய பெண்களையும் வீழ்ந்து உயிரைமாய்த்துக் கொள்ளும்படி செய்தார். இராஜபுத்திர வீரர்கள் மஞ்சள்நிற ஆடையை அணிந்து கொண்டு பகைவர்களிடம் போராடினார்கள். போர் கடுமையாக நடைபெற்றது. இரத்தவெள்ளம் எல்லா பக்கங்களிலும் பாய்ந்தது. இறுதியில் ஹமீர் போர்க் களத்தில் உயிரிழந்தார். அவர் தம் தலையைக் கொய்து மஹாதேவக் கடவுளுக்கு அர்ப்பணம் சேய்தார் என்று இராஜபுத்திர குறிப்புகள் கூறுகின்றன. ஹமீருடைய குடும்பத்தைச் சார்ந்தவர்கள் எவரும் உயிர் பிழைக்கவில்லை என்று இசாமி கூறுகிறார்.[1] புதிய முஸ்லிம்கள் பலர் கொல்லப்பட்டனர். 1301ஆம் ஆண்டு ஜுலை மாதம் 10ஆம் தேதி சுல்தான் கோட்டைக்குள் நுழைந்தபோது முகமதுஷா படுகாயமுற்றுத் தரையில் கிடந்ததைப் பார்த்தார். அவர் பட்டகாயங்களைக் குணப்படுத்தி அவரது உயிரைக் காப்பாற்றிவிட்டால் சுல்தானிடம் எந்த வகையாக நடந்துகொள்வார் என்று அலாவுத்தீன் அவரைப் பார்த்துக் கேட்டார். அவ்வாறு அவர் குணமடைந்து விட்டால் அவர் முதலில் அலாவுத்தீனைக் கொன்று விட்டு பின்னர் ஹமீர் தேவாவின் மகனை அரியணையில் அமர்த்த முயற்சிப்பார் என்று பதில் அளித்தார். தம்மை அவமதித்துப் பேசியதற்காக அவரை யானையின் காலடியில் இட்டுக் கொல்லுமாறு சுல்தான் கட்டளையிட்டார். இறக்கும் தறுவாயில் முகமதுஷா காட்டிய வீரத்தையும் நன்றி விசுவாசத்தையும் கண்டு சுல்தான் வியந்து பாராட்டி அவரது சடலத்தை தக்கமரியாதையுடன் புதைக்கும்படி ஆணையிட்டார்.[2]

இரண்தம்பார் வீழ்ச்சிக்கு ரன்மல், வேறு சில இராஜபுத்திரர்களுடைய துரோகச் செயலும் ஒரு காரணமாகும். ரன்மலுடைய துரோகச் செயலை இராஜபுத்திர சான்றுகள் நமக்குத் தெளிவாக விளக்குகின்றன. இரண்தம்பார்கோட்டை பகைவர் வசம் வீழ்ந்து விடுவது திண்ணம் என்ற நிலை ஏற்பட்டபோது, ஹமீருடைய அமைச்சர், ரன்மல் என்பவர் இராஜபுத்திரர்கள் சார்பில் சமாதான நிபந்தனைகளை வரையறுக்க அலாவுத்தீனிடம் சென்றார். ஆனால் அவரிடம் சென்ற பிறகு அவர் பக்கத்தில் சேர்ந்து கொள்ள ரன்மல் தீர்மானம் செய்து விட்டார். அலாவுத்தீன் அவருக்கு மன்னிப்பு வழங்க எழுத்து மூலமாக ஒப்புக் கொண்டார். அந்த மன்னிப்புக் கடிதத்தை ரதிபால் என்ற மற்றொரு அமைச்சரிடமும்

[1] Futuh, 267

[2] Ferishta, 108

தமது நண்பர்களிடமும் காட்டி, அவர்களையும் சுல்தான் பக்கத்தில் சேர்த்து விட்டார்.[1] அலாவுத்தீனிடம் பணம் வாங்கிக்கொண்டு ராணுவின் தானியக் கிடங்கிலிருந்து தானியத்தை அப்புறப்படுத்தி விட்டார்கள்.[2] பகைவரது வெற்றிக்கு அது ஒரு காரணமாயிற்று. போர் முடிந்த பிறகு ரன்மல், ரதிபால் ஆகிய இருவரையும் அலாவுத்தீன் கொன்றுவிட உத்தரவிட்டார். இதுகாறும் பதவியில் வைத்துப் போற்றி வந்த அரசருக்கே துரோகம் செய்யத் துணிந்த வர்களிடம் அலாவுத்தீன் நம்பிக்கைக்கொள்ள இயலாதல்லவா? இரண்தம்பாரைக் கைப்பற்றிய பிறகு அங்கிருந்த வழிபாட்டுச் சிலைகள் உடைத்தெறியப்பட்டன. ஹர்தேவாகோயில் உட்பட பல கோயில்கள் தரைமட்டமாக்கப்பட்டன. கோயில்களிலும் வீடு களிலும் சுல்தானுடைய படைகள் புகுந்து கொள்ளையிட்டன. இரண்தம்பார் கோட்டையையும், ஜெயினையும் உலூக்கானிடம் ஒப்படைத்து விட்டு சுல்தான் 1301-ல் டில்லி திரும்பினார்.

**உலூக்கான் மறைவு:** உலூக்கான் இரண்தம்பாரை ஆறு மாத காலம் ஆண்ட பிறகு டில்லி திரும்பினார். போகும் வழியில் அவர் திடீரென இறந்தார். அவர் விஷமிட்டுக் கொல்லப்பட்டார் என்று இசாமி கூறுகிறார்.[3] அவரது கொலைக்கு அலாவுத்தீனே காரணமாவார். தமது தம்பியின் மீது அவருக்கு சந்தேகம் ஏற்படலாயிற்று. அக்கத்தகான் அலாவுத்தீனைக் கொலை செய்ய முயற்சி செய்தார் என்பதை முன்னர் கூறியுள்ளோம். அப்போது அலாவுத்தீன் படுகாயமுற்றார். அச்செய்தியைக் கேள்விப்பட்ட போது அலாவுத்தீன் இறந்தால் காலியான அரியணையில் அமர அவரது தம்பி இருக்கிறார் என்று அவர் கூறினாராம். அவர் கூறிய வற்றைச் சுல்தானுடைய நம்பிக்கைக்குரிய வேலையாட்கள் கேட்டு விட்டனர். அவற்றை அப்படியே சுல்தானுடைய காதுகளுக் கெட்டவும் செய்து விட்டனர். அதுவே அவர் தம் தம்பியின்மீது சந்தேகம் கொள்ளக் காரணமாயிற்று. ஹாஜி உத்தமீரும் உலூக்கானும் விஷம் வைத்துக் கொல்லப்பட்டார் என்றும் இச் சம்பவம் இரண்தம்பாரிலிருந்து டில்லிக்குப் போகும் வழியில் நடை பெற்றது என்றும் கூறியுள்ளார்.[4] டில்லிக்குத் திரும்பும்போது மரணம் உலூக்கானைத் தழுவிக்கொண்டது என்றும் உலூக்கா னுடைய மரணம் சுல்தானுக்கு வருத்தத்தை உண்டாக்கியது என்றும், உலூக்கானுடைய ஆன்மா சாந்தி பெற பல

[1] K.S Lal, p. 95

[2] Hammir Kanya quoted by Dr. K. S. Lal, footnote *Ibid.*

[3] Futuh, 272-273

[4] Zafarul wali, 811

தருமங்களைச் செய்தார் என்றும் பரணி எழுதியுள்ளார்.[1] இதி லிருந்து உலூக்கானுடைய மரணத்திற்கு சுல்தான் காரணமில்லை என்பது புலனாகும். ஆனாலும் அலாவுத்தீன் பழிவாங்கும் எண்ணம் படைத்தவர். ஆகவே அவர் உலூக்கானுடைய மறைவிற்குக் காரணமாக இருந்தார் என்பதை முற்றிலும் பொய் என்று ஒதுக்கி விட இயலாது.

**சித்தூர் படையெடுப்பு:** இரண்தம்பாரில் அவருக்குக் கிடைத்த வெற்றி மேலும் பல வெற்றிகளைப் பெற அலாவுத்தீனை ஊக்கு வித்தது. எனவே அவர் தம் கவனத்தை சித்தூர் பக்கம் திருப்பினார். சித்தூர் அப்போது மேவாரின் தலைநகராக இருந்தது. குஹிலா இராஜபுத்திரர்கள் அதுபோது மேவாரை ஆண்டு வந்தனர். 1299-ல் குஜரத்திற்குப் படை நடத்திச் செல்லும்போதும் மேவாரைத் தாக்க உலூக்கான் முயற்சி செய்தார். ஆனால் அவரது தாக்குதலை மேவார் அரசர் முறியடித் தார் என்பதை நாம் முன்பே படித்துள்ளோம். 1303-ல் அலாவுத்தீன் சித்தூர் முற்றுகையை மேற்கொண்டார். சித்தூர் முற்றுகை வரலாற்றுச் சிறப்புப் பெற்ற முற்றுகைகளுள் ஒன்றாகும். சித்தூர் கோட்டை 150 மீட்டர் உயரத்தில் ஒரு குன்றின் மீது அமைக்கப்பட்டுள்ளது. உச்சியில் அக்கோட்டையின் சுற்றளவு 5½ கிலோ மீட்டர்களாகும். அதன் அடிப்பாகத்தின் சுற்றளவு 13 கிலோ மீட்டர்கள் ஆகும். சித்தூரை முற்றுகையிட சுல்தான் 1303ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 28ஆம் நாள் புறப்பட்டார். அவருடன் சென்ற அமீர் குஸ்ரூ இப்படையெடுப்பைப் பற்றிய முழு விவரத்தை நமக்கு அளித்துள்ளார். அப்போது சித்தூரை ஆண்டு வந்த அரசர் ராணா ரத்தன்சிங் ஆவார். இந்துஸ்தான் அரசர்களுள் மிகப் பெருமை வாய்ந்தவர் என்றும் அவர்கள் அனைவரிலும் அவர் மேலானவராகக் கருதப்பட்டார் என்றும் அமீர் குஸ்ரூ கூறியுள்ளார்.[2] 8 மாதங்கள் இம்முற்றுகை நடை பெற்றது. இராஜபுத்திரர்கள் வீராவேசத்துடன் அலாவுத்தீனை எதிர்த்தார்கள். இறுதியில் கோட்டை அலாவுத்தீன் கையில் சிக்கியது. பரணி இப்படையெடுப்பைப் பற்றி ஒரே வரியில் எழுதி முடித்து விட்டார். சித்தூர் கோட்டை குறுகிய காலத்தில் கைப்பற்றி விட்டதாக எழுதியுள்ளார். உதயபூர் பொருட்காட்சி சாலையில் பாதுகாக்கப்பட்டு வருகின்ற கல்வெட்டில் மகாராணா லக்ஷ்மி என்ற சிரோதியா இராஜபுத்திர சிற்றரசர் தம்முடைய ஏழு புதல்வர்களுடன் முஸ்லிம்களுடன்[3] போரிட்டு மடிந்தார்.

[1] 299
[2] Deval Rani, 66-67
[3] Arch. Sur, Rep. 1925-26, 149

என்று பொறிக்கப்பட்டுள்ளது. இவர் சித்தூரின் ஆதிக்கத்திற் குட்பட்ட அரசர்களுள் ஒருவர். இதிலிருந்து சித்தூர் போர் மிகக் கடுமையான வகையில் நடைபெற்றிருக்க வேண்டும் என்பது புலனுகிறது. சித்தூர் கோட்டை வீழ்வதற்கு முன்னர் ரத்தன் சிங்கின் மனைவி பத்மினியும் ஏனைய இராஜபுத்திர பெண்மணிகளும் தீமூட்டி அதில் குதித்து தங்கள் உயிரை மாய்த்துக் கொண்டனர். கோட்டையைக் கைப்பற்றிய பிறகு இந்துக்களை கொல்லும்படி ஆணையிட்டார். ஒரே நாளில் 30,000 இந்துக்கள் கொல்லப் பட்டனர் என்று அமீர் குஸ்ரூ எழுதியுள்ளார். கோயில்கள் இடித்துத் தள்ளப்பட்டன. சித்தூருக்கு கிஸ்ராபாத் என்ற பெயர் சூட்டப்பட்டது. ரத்தன்சிங்குக்கு ஏற்பட்ட கதியைப்பற்றி பலவிதமாக வரலாற்ருசிரியர்கள் எழுதியுள்ளனார். அலாவுத்தீனு டன் போரிட்டுக் கொண்டு ரத்தன்சிங் மரணமடைந்தார் என்று நாயின்சீ கூறியுள்ளார். இதே கருத்தை டாட் அவர்களும் கூறி யுள்ளார்.[1] சித்தூர் கோட்டை பிடிபட்ட பின்னர் ரத்தன்சிங் அலாவுத்தீனிடம் சரண்புகுந்தார். ஆகவே அவர் உயிரோடு வாழ அனுமதிக்கப்படடார் என்று அமீர் குஸ்ரூ கூறுகிருர்.[2] இசாமியும் இதே கருத்தை நமக்களித்துள்ளார். நாபி நந்தனு ஜினே தாரா பிரபந்தா என்ற ஜெயின் நூலில் ரத்தன்சிங் அலாவுத்தீனிடம் பிடிபட்டார் என்றும், அலாவுத்தீன் அவரைக் குரங்கு போல் ஆட்டி வைத்தார் என்றும் கூறப்பட்டுள்ளது. இவ்விருவிதக் கருத்துக்களுள் இரண்டாவதாகக் கூறப்பட்ட கருத்தே ஏற்றுக் கொள்ளும் வகையில் இருக்கிறது என்று டாக்டர் K.S. லால் கூறுகிருர்.[3]

சித்தூர் கோட்டையைக் கைப்பற்றிய பிறகு அதனை கிஸர் கானிடம் ஒப்படைத்து விட்டு சுல்தான் டில்லி திரும்பினுர். சில ஆண்டுகள் கிஸர்கான் சித்தூரை ஆண்டு வந்தார். தங்களுடைய நாட்டை அன்னியர் ஆளுவதை இராஜபுத்திரர்கள் விரும்பவில்லை. எனவே அவர்கள் கிஸர்கானுக்குத் தொல்லைகள் பல கொடுத்து வரலாயினர். ஆகவே சித்தூரை விட்டொழித்து டில்லி வந்து விடுமாறு சுல்தான் கிஸர்கானுக்குக் கட்டளையிட்டார். அதன் பிறகு சுல்தான் சித்தூரை மால்தேவா என்பவருக்கு அளித்தார். மால்தேவ் என்பவர் ஜாலோரை ஆண்டுவந்த சௌஹான் அரசரின் சகோதரன் ஆவார். ஜாலோர் முற்றுகையின்போது சுல்தானுக்கு நேரவிருந்த ஆபத்தில் இருந்து அவர் தப்பவைத்தார்.

[1] Annals. 1, 311-312

[2] Khazain, Habib Trs 49.

[3] Op cit, 102.

அதற்குக் கைம்மாறு செய்யும் வகையில் சித்தூர் ஆளுநர் பதவியை மால்தேவாவிற்கு சுல்தான் அளித்தார். மால்தேவா கப்பத்தை ஒழுங்காகக் கட்டி வந்தார், படைகளையும் சுல்தானுக்குக் கொடுத்துதவினர். அவரது செய்கைகள் இராஜபுத்திர கௌரவத்திற்கு இழுக்கு ஏற்படுத்தி விட்டனவாகக் கருதப் பட்டன. எனவே அவருக்கும் தொல்லைக் கொடுக்கத் தலைப் பட்டனர். மால்தேவாவினுடைய முக்கிய எதிரிகளுள் ஒருவர் ஹமீர் என்ற சிசோதாவின் அரசர், ஹமீரை சமாதானப் படுத்தும் வகையில் மால்தேவா பல முயற்சிகள் செய்தார். தம் மகளை அவருக்கு மணம் முடித்தும் வைத்தார். ஆயினும் பகைமை ஒழியவில்லை. 1321-ல் ஹமீர் மேவாரைக் கைக் பற்றினர். மஹாராணு என்ற பட்டத்தையும் சூட்டிப் கொண்டார்.

**பத்மினியைப் பற்றிய கதை:** மேலே குறிப்பிட்ட வரலாற்று உண்மைகளை வைத்துக் கொண்டு மலிக் முகமது ஜெய்சீ என்ற பதினரும் நூற்றுண்டு கவிஞர் ஒருவர் 1540ஆம் ஆண்டில் 'பத்மாவாத்' என்ற தலைப்புக் கொண்ட காவியம் ஒன்றை எழுதி யுள்ளார். இக் காவியத்தின் சாரம் பின்வருமாறு: பத்மினி அல்லது பத்மாவதி இலங்கையைச் சார்ந்த இளவரசி. அழகு மிக்கவர். சித்தூர் அரசர், ரத்தன்சிங், அவரது அழகைப்பற்றி ஒரு கிளியின் மூலம் கேள்விப்பட்டார். அவளது காதலைப் பெறும் நோக்குடன் சந்நியாசி வேடம் அணிந்து கொண்டு இலங்கைக்குச் சென்றூர். 12 ஆண்டுகள் அவரது அன்பிற்காகத் தவம் கிடந்தார். இறுதியில் அவரை மணம் புரிந்து கொண்டு சித்தூர் வந்தடைந்தார். ஒரு நாள் ராகலா என்ற சந்நியாசி பத்மினியைக் காண நேர்ந்தது. அவரது அழகினைக் கண்டு மயக்கமுற்றூர். அலாவுத்தீனிடம் அவரது பேரழகைப்பற்றிக் கூறினர். அதைக் கேட்டதும் சுல்தா னுக்கு பத்மினியை அடைய வேண்டும் என்ற ஆசை மேலிட்டது. எனவே பத்மினியை சுல்தானுடைய அந்தப்புரத்தில் சேர்ப்பிக்கு மாறு ரத்தன்சிங்கிற்கு கட்டளையிட்டார். ரத்தன்சிங்கே அதை ஏற்க மறுத்தார். ஆகவே அலாவுத்தீன் சித்தூரை முற்றுகையிட் டார். 8 ஆண்டுகள் முற்றுகைக்குப் பிறகும் கோட்டையைக் கைப்பற்ற இயலவில்லை. ஆகவே பத்மினியின் உருவத்தைக் கண்ணுடியிலாவது காண தமக்கு வாய்ப்பளித்தால் டில்லிக்குத் திரும்ப போய் விடுவதாக ரத்தன்சிங்கிற்கு செய்தி அனுப்பினர். ரத்தன்சிங் அதற்கு இணங்கினர். பத்மினியைக் கண்ணுடியில் கண்டுவிட்டு நீங்கினர். வழி அனுப்புவதற்காக ரத்தன்சிங் கோட்டையின் வாயில் வரை அலாவுத்தீனுடன் சென்றூர். கோட்டையின் வாயிற்புறத்தில் அலாவுத்தீன் ரத்தன்சிங்கை

சிறைபிடித்து டில்லிக்குக் கொண்டு சென்றூர். இந்தச் செய்தி சித்தூர் மக்களை கொதித்தெழச் செய்தது. அந்த நேரத்தில் அலாவுத்தீனுடைய அந்தப்புரத்தில் பத்மினி சேர்க்கப்பட்டால். ரத்தன்சிங் விடுவிக்கப்படுவார் என்ற செய்தி அலாவுத்தீனிடமிருந்து வந்தது. பத்மினி உடனே கோரா, பாதல் என்ற இரு படைத்தலைவர்களை அழைத்து மேற்கொண்டு செய்ய வேண்டியதைப் பற்றி ஆலோசனை நடத்தினர். இறுதியில் அவர் டில்லிக்குப் போவது என்று முடிவு செய்தார். அதற்காக 1,600 பல்லக்குகளுக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. அவற்றில் பத்மினியும், எதற்கும் அஞ்சாத ஆயுதம் தாங்கிய இராஜபுத்திர வீரர்களும் ஏறிக் கொண்டனர். பல்லக்குகள் அனைத்தும் நன்ருக மூடப்பட்டன. அவற்றில் பத்மினியின் தோழிகளும், வேலைக்காரிகளும் செல்வதாக அறிவிக்கப்பட்டது. டில்லி சேர்ந்தவுடன் பத்மினி அலாவுத்தீனிடம் ஒரு வேண்டுகோளை விடுத்தார். அதாவது தாம் அந்தப்புரம் சேர்வதற்கு முன் தம்முடைய கணவரை ஒரு முறை சந்தித்துப் பேச வேண்டும் என்பதாகும். அலாவுத்தீன் அதற்கு இசைந்தார். இராஜபுத்திர வீரர்களைத் தாங்கிச் சென்ற பல்லக்குகள் ரத்தன்சிங் சிறைப்பட்டிருந்த அரண்மனைக்குள் சென்றன. உள்ளே சென்றதும் இராஜபுத்திர வீரர்கள் பல்லக்கினின்றும் வெளியே வந்து ரத்தன்சிங்கைவிடுவித்து, அவரையும் பத்மினியையும் தப்பிச் செல்வதற்குத் துணை புரிந்தனர். தப்பியோடிச் சென்றவர்களைப் பிடிக்க சுல்தான் தம் படைகளை அனுப்பினூர். அப்போது நடைபெற்ற சண்டையில் கோரா மரணமடைந்தார். ஆயினும் ரத்தன்சிங் தம் இராணியுடன் சித்தூர் அடைய அச் சண்டை மிகவும் உதவியாக இருந்தது. சித்தூரில் தாம் இல்லாத சமயத்தில் கும்பல்கர் (Kumbhalgarh) கோட்டைக் கதிபதியான தேவ பாலா என்பவர் பத்மினியை அடைய முயற்சித்தார் என்ற செய்தியை ரத்தன்சிங் அறியலானூர். ஆகவே கும்பல்கர் மீது அவர் படையெடுத்துச் சென்று தேவபாலாவைக் கொன்றூர். போரில் அவரும் படுகாயமுற்றூர். சித்தூர் திரும்பிய உடன் அவர் உயிரிழந்தார். பத்மினியும் ஏனைய இராணிகளும் அவரது சிதையில் வீழ்ந்து மடிந்தனர். இதற்குள் சுல்தான் சித்தூருக்கு வந்து அக்கோட்டையின் மீது கொடியைப் பறக்க விட்டார். இதுவே முகமது ஜெய்சி நமக்களித்திருக்கும் கதையின் சாரமாகும்.

இக்கதையை வரலாற்றுசிரியர்கள் உண்மையென நம்பி தங்களுடைய நூலில் குறித்துள்ளனர். அவர்களுள் பிரிஷ்டாவும், ஹாஜீ உத்தபீரும் தரும் விவரங்களை மட்டும் இங்கு குறிப்பிடுதல் அவசியமாகும். சித்தூரைப் பற்றிய குறிப்புகளை பிரிஷ்டா இரண்டு

இடங்களில் தந்துள்ளார். ஆறு மாத முற்றுகைக்குப் பிறகு அலாவுத்தீன் சித்தூரை வென்று அதனை கிஸர்கானுடைய பொறுப்பில் விட்டு வைத்தார் என்று ஓரிடத்தில் கூறியுள்ளார். 1304ஆம் ஆண்டில் நடை பெற்ற நிகழ்ச்சிகளைப் பற்றிக் கூறும்போது சித்தூர் படையெடுப்பின்போது சிறை பிடிக்கப்பட்ட ரத்தன்சிங் ஒரு விநோதமான முறையில் சிறையிலிருந்து தப்பியோடினார் என்று குறிப்பிட்டுள்ளார். ரத்தனுடைய அந்தப்புரத்திலிருந்த பெண்களுள் பத்மினி என்ற மங்கை இருந்தார். அவருடைய அழகைப் பற்றி கேள்விப்பட்ட அலாவுத்தீன் அவரை அடைய விரும்பினார். பத்மினியைத் தம்மிடம் சேர்ப்பித்தால் ரத்தன் சிங்கை விடுவிப்பதாக சுல்தான் கூறினார். ரத்தன்சிங் அதற்கிணங்கினார். ஆனால் அவருடைய நெருங்கிய உறவினர்கள் அதற்கிசையவில்லை. அலாவுத்தீன் கையில் சிக்கி இழிநிலை அடைவதைவிட அவர் இறப்பது மேல் என்று எண்ணி அவரை விஷமிட்டுக் கொல்ல முடிவு செய்தனர். அச்செய்தியைக் கேட்ட ரத்தன்சிங்கினுடைய மதி நுட்பம் வாய்ந்த மகள் ஒருவர் பத்மினி, ரத்தன்சிங் ஆகிய இருவரையும் காப்பாற்றுவதற்கு ஒரு திட்டம் வகுத்துக் கொடுத்தார். அத்திட்டத்தின்படி இராஜபுத்திரர்கள் மாறுவேடமணிந்து கொண்டு பல்லக்குகளில் ஏறிக்கொண்டு டில்லி அடைந்து ரத்தன்சிங் தப்பியோடிவர உதவிபுரிந்தனர். தப்பிச்சென்றரத்தன் சிங் அலாவுத்தீனுக்குத் தொல்லைகள் கொடுத்துவரலானார். இறுதியில் சித்தூரைத் தம்மிடம் வைத்துக் கொள்ள இயலாதென்றறிந்து கிஸர்கானை அங்கிருந்து வந்துவிடும்படி கட்டளையிட்டார்.

ஹாஜீஉத்தபீர் இக்கதையினை விதவிதமாகக் கூறியுள்ளார். சித்தூரைக்கைப்பற்றிய பிறகு சித்தூருக்கு அருகிலேயே ஒரு கோட்டையில் இராணு சிறைவைக்கப்பட்டார். பின்னர் அவருடைய மனைவியை சுல்தானிடம் ஒப்படைத்தால் அவரை சிறையினின்றும் விடுவிப்பதாக சுல்தான் டில்லியிலிருந்தபடியே ஒரு செய்தியை இராணுவிற்கு அனுப்பிவைத்தார். இது ஒருவகையான கூற்று. அதே ஆசிரியர் மற்றொரு விதமாக இக்கதையைக் கூறியுள்ளார். சித்தூரிலிருந்து புறப்படுவதற்கு முன்பே அலாவுத்தீன் பத்மினியைத் தம்மிடம் ஒப்படைத்து விடுமாறு கேட்டார். அதற்குப் பதிலாக இராணுவை விடுதலை செய்வதாகக் கூறினார். மேவாரிலேயே தங்கி தமது மனைவியை சுல்தானுடைய மாளிகைக்கு அனுப்பி வைப்பதற்கான முயற்சிகளை மேற்கொள்ள அனுமதி வழங்கும்படி இராணு கேட்டுக்கொண்டார். பத்மினியின் மேல் கொண்டிருந்த மோகத்தின் காரணமாக அலாவுத்தீன் அதற்கு இசைந்தார். அலாவுத்தீன் டில்லி சென்றதும் இராணு தமது

நம்பிக்கைக்குரிய பிரபுக்களும் பணியாளர்களும் இனி செய்ய வேண்டியன யாவை என்பதை சொல்லி அனுப்பினர். 2,500 பேர் பல்லக்குகளில் வந்து சண்டையிட்டு அவரை பகைவரிடமிருந்து மீட்டனர். இதைக் கேட்டவுடன் அலாவுத்தீன் சித்தூரை இராணுவின் சகோதரி மகளுக்குக் கொடுத்தார். இராணுவின் அமைச்சர்கள் அவனைக் கொன்று விட்டனர். இராணு மீண்டும் அரச பதவியில் அமர்ந்தார்.

இக்கதையை டாட் அவர்களும் தமது நூலில் பெருமைபடத் தக்கமுறையில் விவரித்துள்ளார்.

மேற்கண்ட கதையினை உண்மையெனக் கொள்ளலாகாது என்று வரலாற்றாசிரியர்கள் சிலர் கூறுகின்றனர். அவர்களுள் டாக்டர் K.S. லால் ஒருவர். அவர்கள் பல காரணங்களை நமக்கு அளித்துள்ளனர். முதலாவதாக அக்கால வரலாற்றாசிரியர்களும், கவிஞர்களும் பத்மினியைப் பற்றிய கதையை குறிப்பிடவில்லை. சித்தூர் படையெடுப்பில் கலந்து கொண்டிருந்த அமீர்குஸ்ரூகூட இதைப்பற்றி ஏதும் கூறவில்லை. படையெடுப்பிற்கு பத்மினி முக்கிய காரணமாக இருந்திருப்பாரேயானால் அதைப்பற்றி பரணி, அமீர் குஸ்ரூ ஆகியோர் ஏதும் கூறாதது விந்தையாகக் காணப்படுகிறது. இரண்டாவதாக பிரிஷ்டா, ஹாஜிஉத்தபீர், டாட் ஆகியோர் அளிக்கும் விவரங்கள் சில ஒன்றுக்கொன்று மாறுபட்டிருப்பினும் மொத்தத்தில் அவர்கள் அளிக்கும் கதை முகமது ஜெய்சி அளிக்கும் கதையினைப் பெரும்பாலும் ஒத்திருக்கிறது. ஆகவே அவர்கள் அனைவரும் முகமது ஜெய்சியின் கதையினை உண்மையென நம்பி அப்படியே தங்கள் நூல்களில் எழுதி விட்டனர். முகமது ஜெய்சி 16ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவர். அவர் தமது பத்மாவதத்தை 1540-ல் எழுதியுள்ளார். ஆகவே அவர் சம்பவத்தினை நேரில் கண்டறிந்தவரன்று. அவர் சித்தூர் இராணியின் வாழ்க்கை வரலாற்றினை நமக்கு அளிக்க முற்பட்டாரா என்பதே ஐயத்திற்குரியதாக உள்ளது. ஏனெனில் அவர் தம் காப்பியத்தின் இறுதியில் "இந்த காப்பியத்தின் சித்தூர் உடலாகவும் இராஜா உள்ளமகாவும், இலங்கை இருதயமாகவும், பத்மினி அறிவாகவும், சுல்தான் மாயையாகவும் விளங்குகின்றனர்" என்று கூறியுள்ளார். இதிலிருந்து அவர் ஓர் உருவகக் கதை எழுத முற்பட்டாரேயன்றி உண்மைச் சம்பவத்தை எழுத முற்படவில்லை என்பதை அறியலாம். மூன்றாவதாக ஜெய்சியும் ஏனையோரும் தரும் தகவல்கள் உண்மைக்குப் புறம்பானதாகத் தோன்றுகின்றன. அலாத்வுத்தீன் படையெடுப்பு இராணு பட்டத்திற்கு வந்த முதலாவது ஆண்டின் முடிவில் நடைபெற்றது என்று கூறப்படுகிறது. இராணு 12

ஆண்டுகள் இலங்கையில் பத்மினியின் அன்பிற்காகத் தவங் கிடந்தார் என்று ஜெய்சி கூறுகிறுர். இவை இரண்டும் ஒன்றுக் கொன்று முரணுக உள்ளன. அப்போது இலங்கையை கோவர்த்தன் என்பவர் ஆண்டதாக ஜெய்சி கூறுகிறுர். ஹமீர் சங்க் என்பவர் ஆண்டதாக டாட் கூறுகிறுர். ஆனுல் அக்காலத்தில் நான்காவது பராக்கிரமபாகு ஆண்டு வந்தார் என்பது தான் உண்மை. சித்தூர் முற்றுகை 8ஆண்டுகள் நடைபெற்றதாக ஜெய்சி கூறுகிறுர். இதனை ஆமோதிக்கும் வகையிம் வேறெந்த வரலாற்று ஆசிரியரும் தம் நூலில் எழுதிவைக்கவில்லை. நான்காவதாக இவர்கள் அளிக்கும் விவரங்கள் சில ஒன்றுக்கொன்று முரணுக இருக் கின்றன. இராஜபுத்திர வீரர்கள் 1,600 பல்லக்குகளில் டில்லிக்குச் சென்றதாக ஜெய்சி கூறுகிறுர். பிரிஷ்டா 700 பல்லக்குகளில் சென்றனர் என்றும் கூறுகின்றுர். ஹாஜி உத்தபீர் 500 பல்லக்கு களில் சென்றனர் என்றும் கூறுகின்றுர். ஜெய்சியும், பிரிஷ்டாவும் இராணு டில்லியில் சிறைவைக்கப்பட்டதாகக் கூறுகின்றனர். இராணு டில்லிக்கு செல்லவில்லை என்று ஹாஜீ உத்தபீர் குறிப்பிடு கிறுர். பத்மினி இராணுவின் மனைவி என்கிறுர் ஜெய்சி. பத்மினி இராணுவின் மனைவியா, மகளா என்பது பிரிஷ்டாவிற்கு சந்தேக மாக இருந்தது. தப்பிச் செல்லுவதற்கான திட்டத்தை இராணுவே வகுத்தார் என்பது ஹாஜீ உத்தபீருடைய கருத்து. இராணுவின் மகள் அதனை வகுத்ததாக பிரிஷ்டா கூறுகிறுர். பத்மினியே வகுத்ததாக ஜெய்சி கூறியுள்ளார்.

டாக்டர் A.L.ஸ்ரீ வஸ்தவா போன்ற ஆசிரியர்கள் பத்மினி கதையை பொய்யெனத் தள்ளிவிட இயலாது என்று வாதிக்கின்ற னர். அமீர்குஸ்ரூ இக்கதையினை நேரடியாகக் கூறவில்லையென்ரு லும் அவர் தரும் சில குறிப்புகள் இக்கதைக்கு அடிக்கல்லாக விளங்குகின்றன. அலாவுத்தீனை சாலமனுக்கு ஒப்பிட்டு விட்டு சித்தூர் கோட்டையில் ஒரு ஷீபா இருந்ததாகவும், அந்த ஷீபாவின் அழகைப் பற்றி சாலமனுக்கு எடுத்துக் கூறிய பறவை தாமே என்றும் கூறியுள்ளார். மேலும் சித்தூர் கோட்டை வீழ்வதற்கு முன்பே அலாவுத்தீன் கோட்டைக்குள் சென்றுர் என்பதை அவர் தெளிவாகக் கூறியுள்ளார். இவற்றிலிருந்து இக்கதையின் அடிப்படைக் கருத்துக்களை அமீர்குஸ்ருவிடமிருந்து ஜெய்சி பெற்றிருக்க வேண்டும் என்று கூறுவதற்கு இடமுண்டு. அப்படியென்றுல் அமீர்குஸ்ரூ ஏன் இக்கதையைத் தெளிவாக எடுத்துரைக்கவில்லை என்ற கேள்வி எழக்கூடும். அமீர்குஸ்ரூ அலாவுத்தீனுடைய அவைப்புலவர். ஆகவே சுல்தான் விரும்பாத தகவல்களை அவர் எழுதாமல் விட்டிருக்கக்கூடும். ஜலாலுத்தீன் கொலையுண்ட செய்தி, மங்கோலியரின் டில்லி முற்றுகை போன்ற

நிகழ்ச்சிகள் அமீர்குஸ்ரூவின் படைப்புகளில் நாம் காண்பதற் கில்லை என்பதை அறியும்போது பத்மினியின் கதையை அவர் விவரிக்காமல் விட்டது வியப்புக்குரியதொன்றாகாது.

பத்மினியைப் பற்றி வேறு வகை சான்றுகள் நமக்குக் கிடைக்கும் வரை இக்கதையினை நாம் முற்றிலும் உண்மையெனக் கொள்ள இயலாது. ஆயினும் அலாவுத்தீன் பத்மினியின் மேல் மோகம் கொண்டார். எனவே அவரது கணவரை அவர் கைது செய்தார் என்ற மூலக் கருத்துக்களைப் பொய்யென நாம் தள்ளவும் இயலாது. பேரரசுக் கொள்கையினைப் பின்பற்றி வந்த அலாவுத்தீ னுக்கு சித்தூர் படையெடுப்பை மேற்கொள்ள ஒரு பத்மினி தேவையில்லைதான். ஆனால் இந்து அரசிகளை அடைவதில் அவருக் கிருந்த பேரார்வத்தை யார் மறுக்க இயலும்? எனவே கற்பனைகள் அதிகம் மிளிர்ந்திருப்பினும் ஜெய்சியின் கதையில் சிற்சில உண்மை களும் இருக்கத்தான் செய்கின்றன என்பதை மறுக்க இயலாது.

**மாளவப் படையெடுப்பு:** 1305ஆம் ஆண்டிற்குள் வட இந்திய அரசர்கள் அலாவுத்தீனுடைய ஆதிக்கத்திற்கு உட்படுவதே விவேகமான செயலெனக் கருதி அவருக்குப் பணிந்து விட்டனர். எனவே மாளவம், சிவானா, ஜாலோர் ஆகியவற்றின்மீது படை யெடுக்க சுல்தானுக்கு வாய்ப்பு ஏற்பட்டது. மாளவம் அக் காலத்தில் ஒரு பெரிய நாடாக இருந்தது. புவியியல் வல்லுநர்க ளால் கூட அதனுடைய பரந்த எல்லையை திட்டவட்டமாக நிர்ணயிக்க இயலாது என்கிறார் அமீர்குஸ்ரூ. அதனை அப்போது மஹ்லக் தேவா என்பவர் ஆண்டு வந்தார். ஏறக்குறைய நாற்பதாயிரம் குதிரை வீரர்களையும் கணக்கற்ற காலாட்படை யினரையும் கொண்ட பெரும் படையொன்றை அவர் வைத்திருந் தார்.[1] இப்படைக்கு மஹ்லக் தேவாவின் வளர்ப்பு சகோதரர், ஹரநந்தா தலைவராக இருந்தார். ஹரநந்தாவை கோகபிரதான் என்று பொதுவாக அழைத்து வந்தனர்; அவர் சிறந்த போர் வீரர்; அரசியல் அறிவு முதிர்ந்தவர்.

மாளவத்தை வெல்ல சுல்தான் 10,000 பேர்கள் கொண்ட குதிரைப் படையொன்றை அனுப்பி வைத்தார். இப்படைக்கு அயின் உல்முல்க் என்பவரைத் தலைவராக நியமித்தார்.[2] அயின் உல்முல்க் போர் வீரர் மட்டுமல்ல; ஒரு சிறந்த எழுத்தாளரும்கூட. போரில் சுல்தான் படைகள் வெற்றி வாகை சூடின. போர்க் களத்தில் எங்குப் பார்த்தாலும் இரத்த வெள்ளம். அதன் காரண

[1] Amir Khusrau, Khazain, Habib Trs. 43

[2] Dr. K, S. Lal op. cit. 144, படைத்தலைவரின் பெயரை வரலாற்று நூல்கள் நமக்களிக்கவில்லை, ACHI. 395

மாக போர்க்களம் முழுவதும் சேருகி விட்டது. அந்த சேற்றில் கோகாவின் குதிரை சிக்கிக் கொண்டது. கோகா எளிதில் கொல்லப்பட்டார். அவரது தலையை டில்லிக்கு அனுப்பி வைத்தார். அங்கு அரண்மனை வாயிலில் குதிரைகளைக் கொண்டு அத்தலையை மிதிக்கச் செய்தனர். கோகாவின் மரணச் செய்தியைக் கேட்டவுடன் மஹ்லக் தேவா மாண்டூவிற்கு (Mandu) ஓடிவிட்டார். கைப்பற்றப்பட்ட பகுதியைஆளும் பொறுப்பை அயின் உல் முல்க்கிற்கு சுல்தான் அளித்தார். நிருவாகத்தினை முழுமையாகப் பெற்றிருந்த அயின் உல்முல்க் மாளவத்தில் விரைவில் அமைதியை நிலைநாட்டினார். பின்னர் மாண்டுவை நோக்கிப் படையெடுத்துச் சென்றார். மஹ்லக் தேவாவின் பிள்ளையை வழியில் சந்தித்து அவரைத் தோற்கடித்தார். அதையடுத்து மாண்டுவை முற்றுகையிட்டார். இதற்கிடையில் ஒரு துரோகி இரகசிய வழியாக அயின் உல்முல்க்கை கோட்டைக்குள் அழைத்துச் சென்றான். பகைவனின் திடீர் விஜயம் மஹ்லக் தேவாவிற்கு பேரதிர்ச்சியைத் தந்தது. அப்போது ஏற்பட்ட கைகலப்பில் இராணு கொல்லப்பட்டார். மாண்டூ சுல்தானின் கைக்குள் வந்துவிட்டது. அதையடுத்து உஜ்ஜயினி, சாந்தேரி, தார் ஆகிய நகரங்களும் பிடிபட்டன. மாளவம் முழுவதும் சுல்தானுடைய ஆதிக்கத்திற்குட்பட்டது. அயின் உல்முல்க் சுல்தானுக்கு ஆற்றிய சேவைகளைப் பாராட்டும் வகையில் சுல்தான் அவரை மாளவத்தின் ஆளுநராக நியமித்தார்.

சிவாணு (Sivana) படையெடுப்பு: மாளவப் படையெடுப்பிற்குப் பின்னர் அலாவுத்தீன் சிவாணு மீது படையெடுத்துச் சென்றார். சிவாணு ஜோத்பூருக்குத் தென் மேற்கில் 50 மைல் தூரத்தில் இருக்கிறது. அப்போது சிதல்தேவா என்ற பரமார் இரஜபுத்திரத் தலைவர் ஆண்டு வந்தார். அவர் புகழ் மிக்க போர் வீரர். அநேக இராஜபுத்திர ராய்களையும் (Rais) ராவாத்துகளையும் (Rawats) வென்றார். அவர் பலம் பொருந்திய கோட்டையொன்றைப் பெற்றிருந்தார். இப் படையெடுப்பு 1309 ஆம் ஆண்டில் துவக்கப்பட்டது.[1] சிவாணு அடைந்ததும் அலாவுத்தீன் முற்றுகையைத் தொடங்கினர். கோட்டையைக் கைப்பற்ற சுல்தான் கையாண்ட உத்திகள் தோல்வியில் முடிந்தன, இராஜபுத்திரர்கள் கோட்டையைப் பகைவர்கள் கைவசம் சிக்கி விடாமல் பல மாதங்கள் காத்து வந்தனர். இறுதியில் ஒரு துரோகியின் உதவியால் கவண் இயந்திரத்தைக் கொண்டு செல்லுவதற்கான வழியைப் பகைவர்கள் கண்டறிந்தார்கள். அவ்வழியே கவண்

[1] Dr. K. S. Lal. 1308 ஆம் ஆண்டில் துவக்கப்பட்டதாக எழுதியுள்ளார். op cit, 115

கற்கள் வீசும் கருவி எடுத்துச் செல்லப்பட்டது. அதன் துணை கொண்டு கோட்டைக்குள்ளிருந்தவர்களுக்குக் குடித்தண்ணீர் அளித்து வந்த ஏரியில் பசுவின் தலையொன்றை வீசி எறிந்தனர். ஆகவே இராஜபுத்திர வீரர்கள் நீர் அருந்துவதை நிறுத்த வேண்டியதாயிற்று.[1] அத்துடன் அவர்கள் கதையும் முடிந்தது. கோட்டை பகைவர் வசமாயிற்று. சிதல்தேவா ஜாலோருக்கு ஓட முயற்சித்தார். ஆனால் அவர் பகைவர்களிடம் சிக்கி உயிரிழந்தார். அவரது பெருத்த உடலையும் தலையையும் கண்டு சுல்தானுடைய படைகள் வியப்பில் மூழ்கின. சிவானாவை ஆளும் பொறுப்பினை கமல் உத்தீன்குர்க் என்பவரிடம் ஒப்படைத்து விட்டு அலாவுத்தீன் டில்லி திரும்பினார்.

**ஜாலோர் படையெடுப்பு:** ஜாலோர் கோட்டை சிவானாவிற்கு தென்கிழக்கில் 50 மைல் தூரத்தில் இருக்கிறது. இதனை அப்போது கன்ஹர்தேவா (Kenhar Deva) என்பவர் ஆண்டு வந்தார். இவர் சௌஹான் அரச குலத்தைச் சார்ந்தவர். இக்கோட்டையை அலாவுத்தீன் இருமுறை முற்றுகையிட்டதாக நயின்சீ கூறுகிறார்.[2] 1299-ல் குஜரத் படையெடுப்பை முடித்துவிட்டு சுல்தான் படைகள் டில்லி திரும்பும்போது முதல் முறையாக ஜாலோர் தாக்கப்பட்டது. முற்றுகையைப் பற்றிய விவரங்களைக் குறிப்பிடும்போது அலாவுத்தீன் அங்கிருந்துகொண்டு முற்றுகையை நடத்தியதாகக் கூறியுள்ளார். குஜரத் படையெடுப்பை அலாவுத்தீன் தாமே முன்னின்று நடத்தவில்லை என்பது அனைவரும் அறிந்த உண்மை. ஆகவே இப்படையெடுப்பைப் பற்றி நயின்சீ அளிக்கும் குறிப்புகளை நாம் ஏற்க இயலா நிலையில் உள்ளோம். இரண்டாவது முற்றுகை 1311-ல் நடைபெற்றதாக அவர் கூறுகிறார். பிரிஷ்டாவும் இரு படையெடுப்புகளைப் பற்றி கூறியிருக்கின்றார். அவற்றுள் முதல் படையெடுப்பு 1304-ல் நடைபெற்றது என்று அறிவித்துள்ளார். மாளவத்திலிருந்து திரும்பும்போது அலப்கானும் நஸ்ரத்கானும் ஜாலோர் சென்றனர். கோகாவிற்கு ஏற்பட்ட கதியை ஜாலோர் அரசர் அறிந்திருந்தமையால், சுல்தானுக்கு அடிபணிவதே மேலான செயலெனக் கருதினார். அதனைச் செயலில் காட்டி விட்டார்.[3] இரண்டாவது படையெடுப்பு 1309-ல் நடத்தப்பட்டது என்று கூறுகிறார்.

ஜாலோர் மீது தொடங்கப்பட்ட போராட்டத்தின் காரணங்கள் யாவை? ஒரு நாள் அலாவுத்தீன் தம்மை எதிர்த்துப்

[1] Padmanaba, Shodh Patrika, 55 quoted by Dr. K. S. Lal of 115 F. N.

[2] Khayat, 1, 153

[3] Ferishta, 118.

போராட வல்ல இந்து அரசர்கள் எவரும் இல்லை என்று இறுமாப்புடன் தம் அரசவையில் கூறினர். அப்போது அங்கிருந்த கன்ஹர் அவமானம் தாங்காமல் தாம் போரிடத் தயாராக இருப்பதாகவும் அதில் தோற்றுப்போனால் உயிரிழக்கவும் தயார் என்றும் கூறினர். அதைக் கேட்ட சுல்தான் கோபமுற்று உடனே போருக்கு ஆயத்தம் செய்யும்படி கூறினர். இது பிரிஷ்டா நமக்குக் கூறும் காரணமாகும்.[1] சுல்தானுடைய படைகள் நம் நாட்டிற்கு வந்ததும் அவற்றுடன் போராடுவதை ஒழித்து, சுல்தானுக்கு அடி பணிந்து, நான்கு ஆண்டுகள் சுல்தானுக்குக் கீழ்ப்படிந்து நடந்து வந்த கன்ஹர் மேற்கண்ட விதமாக நடந்து இருப்பாரா என்பதை நாம் சற்று சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

நயின்சீ மற்றுமொரு வேடிக்கையான காரணத்தைக் கூறுகின்றார். கன்ஹரின் மகன், விக்ரம், டில்லியில் சில காலம் வசித்து வந்தார். அப்போது முஸ்லிம் இளவரசி ஒருவர் அவர்மீது காதல் கொண்டார். அவர் பெயர் பிரோஸா என்றும், அவர் சுல்தானின் மகள் என்றும் பத்மநாப் கூறியுள்ளார். அதையறிந்த அலாவுத்தீன் அவர்களிருவருக்கும் மணம் முடிக்கத் தீர்மானம் செய்தார். விக்ரம் ஒரு துருக்கியப் பெண்ணை மணம் புரிய விரும்பவில்லை. எனவே தம் ஊர் சென்று, தம் உற்றார் உறவினருடன் வந்து முறைப்படி மணம் செய்து கொள்வதாக சாக்கு கூறினர். அலாவுத்தீன் அதனை அறிந்து கொண்டு ஓர் இராஜபுத்திர இளவரசனை பிணையாக நிறுத்திவிட்டுப் போகும்படி கூறினர். ஜாலோர் சென்ற விக்ரம் மீண்டும் டில்லி வரவில்லை. எனவே சுல்தான் படையெடுப்பு ஒன்றினை நடத்த முடிவு செய்தார். இக்காரணமும் நம்பத் தகுந்ததாக இல்லை. படையெடுப்பிற்கு முக்கிய காரணம் ஜாலோர் சுதந்திர நாடாக இருந்தமையேயாகும். வட இந்தியா முழுவதிலும் தம் ஆதிக்கத்தை நிலை நாட்டவேண்டும் என்ற எண்ணத்துடன் செயலாற்றி வந்த சுல்தானுக்கு ஜாலோரின் சுதந்திர நிலை அவர் கண்ணை உறுத்தியதில் ஆச்சரியம் என்ன இருக்கிறது?

1311ஆம் ஆண்டில் ஜாலோர் நோக்கி டில்லிப் படைகள் புறப்பட்டன. இப்படைக்குத் தலைமை தாங்கியவர் யார் என்பதை நாம் கூற இயலாது. அலாவுத்தீனுடைய வைப்பாட்டிகளுள் ஒருவர் இதற்குத் தலைமை தாங்கினர் என்று பிரிஷ்டா கூறுகிறார். தைரியமிக்க துருக்கிய அதிகாரிகள் இருக்க ஒரு பெண்ணைப் படைத்தலைவராக நியமித்தார் என்பது அறிவுக்குப் பொருத்தமானதாகத் தோன்றவில்லை. இராஜபுத்திரர்கள் பல பகைவர்

[1] 118

களைத் தோற்கடித்தனர் என்றும் போர் சில ஆண்டுகள் நடைபெற்றது என்றும் கன்ஹித்-தெ-பிரபந்த் கூறுகிறது. முஸ்லிம் படைகள் தோற்கடிக்கப்பட்ட செய்தியை அறிந்த சுல்தான் பெரும் படையொன்றைக் கமல் உத்தீன் குர்க்கினுடைய தலைமையின்கீழ் அனுப்பி வைத்தார். செஜ்வால் என்ற துரோகி சுல்தானிடம் பணம் பெற்றுக் கொண்டு அவரது படைகளை இரகசிய வழியாகக் கோட்டைக்குள் அழைத்துச் சென்றார். அதையறிந்த செஜ்வாரின் மனைவி அவரைக் கொன்றுவிட்டதாக பத்மநாப் கூறுகிறார். இறுதியில் ஜாலோர் கோட்டையை கமல் உத்தீன் குர்க் கைப்பற்றினார். இராஜபுத்திரர் பலர் உயிரிழந்தனர். உயிர் தப்பிய மிகச் சிலருள் ஒருவர் கன்ஹரின் சகோதரர் மால்தேவா என்பவராவார். தமது வெற்றியைக் கொண்டாடும் வகையில் அலாவுத்தீன் ஜாலோருக்கருகிலுள்ள சோன்கீன் கோட்டையில் ஒரு மசூதியைக் கட்டினார். ஜாலோருக்கருகிலுள்ள சன்கோர் என்னுமிடத்திலுள்ள மஹாவீரர் கோயிலை சுல்தான் அழித்ததாகக் கூறப்படுகிறது. ஜாலோர் படையெடுப்பின் ஒரு பகுதியாக இதனைக் கருதலாம்.[1]

இப்படையெடுப்பு கி. பி. 1311-12-ல் முடிவுற்றதாக நயின்சீ கூறுகிறார். 1308-ல் முடிவுற்றதாக பிரிஷ்டா கூறுகின்றார். 1308-ல் சிவானு படையெடுப்பு மேற்கொள்ளப்பட்டதாலும், அதே ஆண்டில் தக்காணத்திற்கு ஒரு படை அனுப்பப்பட்டமையாலும், அவ்வாண்டில் ஜாலோர் முற்றுகை மேற்கொள்ளப்பட்டிராது என்று கூற இயலும். எனவே 1311-ல் இப்படையெடுப்பு நடந்திருக்க வேண்டும் என்று நாம் கூறலாம்.

**அலாவுத்தீனுடைய இராஜஸ்தானக் கொள்கை :** ஜாலோரைக் கைப்பற்றிய பிறகு இராஜஸ்தானிலிருந்த முக்கியமான நாடுகள் அனைத்தும் அலாவுத்தீனுடைய ஆளுகைக்குட்பட்டு விட்டன என்று நாம் கூற இயலும். ஜெய்சால்மர், இரண்தம்பார், சித்தூர், சிவானு, ஜாலோர் ஆகிய நாடுகளும் அவற்றை அடுத்திருந்த பண்டி, மாண்டோர், தோங்க் போன்ற பகுதிகளும் அலாவுத்தீனுடைய படையெடுப்பிற்கு இலக்காகி இருந்தன. ஜோதிபுரி (Jodhpur) யும் அவருடைய ஆதிக்கத்தின்கீழ் வந்து விட்டது எனலாம். அலாவுத்தீன் அதன்மீது படையெடுத்தற்குச் சான்றுகள் இல்லையென்றாலும் ஜோதிபுரியிலுள்ள பாண்டோ என்னுமிடத்தில் கிடைத்த கல்வெட்டு ஒன்றில் ஜோகினிபுரத் (டில்லி) தைச் சார்ந்த அலவடி (அலாவுத்தீன்) அதனை ஆண்டு

[1] Dr. K. S. Lal, Op. cit. p. 118.

வந்ததாகக் கூறப்பட்டுள்ளது. இக்கல்வெட்டு 1301-ல் பொறிக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. 1310ஆம் ஆண்டிற்குள் இராஜஸ்தான் முழுவதும் அலாவுத்தீனுடைய ஆட்சியின் கீழ் கொண்டுவரப்பட்டு விட்டது என்பது தெளிவாகும்.

இராஜஸ்தானத்தை வெல்ல அலாவுத்தீன் பல கஷ்டங்களை அனுபவித்திருக்க வேண்டும். இராஜபுத்திரர்கள் வீரத்திற்குப் பெயர் போனவர்கள். சுதந்திர வேட்கை அவர்களிடம் மிகுதியாகக் காணப்பட்டது. சுதந்திரமற்ற வாழ்க்கையை அவர்கள் அறவே வெறுத்தனர். போரில் வீரமரணம் எய்துவதை அவர்கள் பெரும் பேருகக் கருதினார்கள். துரோகச் செயல்கள், சூழ்ச்சிகள் ஆகியவற்றின் துணைகொண்டு வெற்றி பெற அவர்கள் எக்காலமும் எண்ணியதில்லை. அரசியல் தந்திரம் அவர்களுக்குத் தெரியாது என்று கூறுவது மிகையாகாது. நாட்டை இழந்தாலும் மனம் ஒடியாத பண்புள்ளவர்கள். அரும்பாடுபட்டாவது இழந்த பொன்னாட்டை மீட்க அவர்கள் எப்போதும் தயக்கம் கொள்ளவில்லை. அதே நேரத்தில் அலாவுத்தீன் முன் வைத்த காலை பின் வைக்க எப்போதுமே விழைந்ததில்லை. ஓரிரு சமயம் அவர் தோல்வியுற நேர்ந்தாலும் மேற்கொண்ட காரியத்தை சாதிக்காமல் அவர் விடுவதில்லை. ஆகவேதான் ஒவ்வொரு கோட்டையின் முன்பாகக் கடுமையான சண்டைகள் நடைபெற்றதைக் காண்கிறோம். எண்ணற்ற உயிர்கள் சேதமடைந்ததையும் நாம் பார்க்க முடிகிறது. கடுமையான முயற்சிக்குப் பின்னரே ஒவ்வொரு கோட்டையும் கைப்பற்றப்பட்டதால் ஒவ்வொரு முறையும் சுல்தானுடைய கோபம் பொங்கி எழுந்தது. அதன் விளைவாக பல்லாயிரக்கணக்கான குடிமக்கள் வெட்டி வீழ்த்தப்பட்டனர். இராஜபுத்திரர்கள் தங்களைக் காப்பாற்றிக் கொள்ள இயலாதென்பதை உணர்ந்தபோது தங்களுடைய மனைவி மக்கள் பகைவர் கையில் சிக்கி அவமானமடைவதைத் தடுக்க தீமூட்டி அவர்களை அதில் குதித்து இறக்கச் செய்தனர். இராஜஸ்தானில் அலாவுத்தீன் மேற்கொண்ட ஒவ்வொரு போர் நடவடிக்கையும் ஏறக்குறைய இந்த வகையாகவே நடந்தேறியது என்று கூறின் அது பொய்யாகாது. கோட்டைகளைக் கைப்பற்றிய போதும் முஸ்லிம்கள் மனநிம்மதியுடன் ஆள அனுமதிக்கப்படவில்லை. இழந்த பொன்னாட்டை மீட்க இராஜபுத்திரர்கள் முஸ்லிம்களுக்கு அடிக்கடித் தொல்லை கொடுத்து வந்தனர், எனவே இராஜபுதனத்தில் அலாவுத்தீனுடைய ஆதிக்கம் நீர்க்குமிழி போல் நிலையற்றிருந்தது. சித்தூரை விட்டு கிஸர்கான் டில்லிக்குத் திரும்பிவிட்ட செய்தியை நாம் முன்னரே குறித்துக் காட்டியுள்ளோம். அதற்குக் காரணம் அலாவுத்தீனுடைய

ஆட்சி இராஜஸ்தானில் நிலையாக ஏற்படுத்த இயலாமையே யாகும். ஜாலோரும் சில காலத்திற்குப் பிறகு சுதந்திரமடைந்தது. இரண்தம்பாரில் அவர்களுடைய ஆட்சி விரைவில் ஆட்டங்கண்டு விட்டது. இதிலிருந்து இராஜபுதனம் அலாவுத்தீனுடைய ஆட்சியை முழுமையாக ஏற்கவில்லை என்பது புலப்படும்.

அலாவுத்தீன் திட்டவட்டமான ஓர் ஆட்சி முறைக் கொள்கையையும், பொருளாதாரக் கொள்கையையும் கடைபிடித்து வந்தார். அது போலவே தக்காணப் படையெடுப்பின் போதும் ஒரு திட்டவட்டமானக் கொள்கையைப் பின்பற்றி வந்தார். இவற்றைப்பற்றி நாம் பின்னர் விரிவாகக் கவனிக்கலாம். இராஜபுதனத்தில் அத்தகைய கொள்கையைப் பின்பற்றினரா என்ற கேள்விக்கு இப்போது நாம் பதில் காண்பதவசியம். அக்கால வரலாற்றாசிரியர்கள் இக்கேள்விக்குச் சரியான விடையை அளிக்கும் வகையில் குறிப்புகளை எழுதிவைக்கவில்லை. எனவே இக்கேள்விக்குப் பதில் காண அலாவுத்தீனுடைய இராஜஸ்தான் பற்றிய நடவடிக்கைகளை ஆராய்தல் வேண்டும். அவர் இராஜ ஸ்தானில் வென்ற நாடுகளுள் இரண்தம்பாரை மட்டுமே டில்லி சுல்தானியத்துடன் இணைத்தார். அவரது பொருளாதாரத் திட்டமும் அங்குமட்டுமே நடைமுறைப் படுத்தப்பட்டது. இராஜ ஸ்தானின் ஏனைய பகுதிகள் பேரரசின் சட்டதிட்டங்களுக்குட் படுத்தப் பெறவில்லை. சில சமயங்களில் இராஜபுத்திர அரசர்கள் அவரது அவைக்குச் சென்று அவருடைய அதிகாரிகள் போல நடந்து கொண்டு பரிசுகளை அவருக்களித்ததால் அவர்களை அவர் ஒன்றும் செய்யாது விட்டுவிட்டார். சில இடங்களில் இராஜபுத்திர அரசர்களை நீக்கிவிட்டு தம்முடைய அதிகாரிகளை அங்கு ஆட்சி செலுத்திவர ஏற்பாடு செய்தார். அந்தவிடங்களில் அவ்வதி காரிகள் இராஜபுத்திர சமுதாய அமைப்பில் தலையிடாதவாறு பார்த்துக்கொண்டார். உள்ளூர் தலைவர்கள் (ராவத்துகள்) தொடர்ந்து தங்கள் பணியினை ஆற்றிவர அனுமதிக்கப் பட்டனர். அவர்கள் ஒழுங்காகப் பணம் கட்டி வரும் வரை அவர்களுடைய விவகாரத்தில் தலையிடவில்லை. அலாவுத்தீனுடைய படை யெடுப்புகள் பல காரணங்களுக்காக மேற்கொள்ளப்பட்டன. பொன்னையும் பொருளையும் வேண்டி அவர் நடத்திய போராட்டங்கள் பலப்பல. இராஜஸ்தானத்தைப் பொறுத் தளவில் பொன்னாசை அவரது போர் நடவடிக்கைகளுக்குக் காரண மாகா. ஏனெனில் மலைகளும், பாலைவனமும் நிறைந்த இராஜ புதனத்தில் பெருஞ் செல்வத்தை அடைய இயலும் என எண்ணிப் பார்த்ததில்லை. டில்லியின் ஆதிக்கத்திற்கு எதிர்ப்பு ஏற்படும் போதும் அவர் போர் நடவடிக்கைகளை மேற்கொண்டு வந்தார்.

அக்காரணம் இராஜபுதனப் படையெடுப்புகளுக்கு ஓரளவு பொருந்தும். சாலைகளில் வணிகர்களும், ஏனைய மக்களும் அச்சமின்றி செல்லத்தக்க நிலையை உருவாக்குவதற்காக போர் நடவடிக்கைகள் பலவற்றை மேற்கொண்டார். அதுவும் அவரது இராஜஸ்தான் படையெடுப்புகளுக்கு ஒரு காரணமாக அமைந்திருக்கக்கூடும். தம் படைவலிமையைப் பறைசாற்றும் நோக்கத்துடனும் அவர் படையெடுப்புகளை நடத்தியிருக்கக்கூடும். ஆனால் இராஜஸ்தானை நிரந்தரமாக டில்லியுடன் இணைத்து ஆட்சி செய்யவே பல போர் ஏற்பாடுகளைச் செய்தார் என்பதை நாம் திடமாகக் கூறஇயலாது. இராஜஸ்தானிலிருந்த ஒரு சில நாடுகளை மட்டுமே அவர் டில்லியுடன் இணைக்க முயற்சித்தார். அம் முயற்சியும் தோல்வியுறவே அந்த எண்ணத்தை முற்றிலும் கைவிட்டார். அவர்காலத்தில் இராஜஸ்தான் முக்கியமான இடத்தைப் பெற்றிராமையே அவரது புறக்கணிப்புக்கு ஒரு காரணமாகும். இதுவே அவரது இராஜபுதனக் கொள்கையாகும்.

இராஜஸ்தான் கொள்கையின் விளைவாக அவர் பெரும் பொருள் நஷ்டத்தை அடைந்தார். இராஜஸ்தான போர் ஏற்பாடுகளுக்காக அவர் பெரும்பணத்தைச் செலவிட்டார். அவர் கொள்ளையடித்த பொருட்களோ மிகக்குறைவாகும். ஆயினும் அவை அவரது பெருமையை மிகவும் உயர்த்திவிட்டன. அவரது படைப்பலத்தை வெளிப்படுத்த அவை உதவின. வடஇந்தியா முழுவதையும் டில்லியின் கீழ் ஒன்று படுத்தும் முயற்சிக்கு ஊக்கமளித்தது இக்கொள்கையேயாகும்.

இராஜபுத்திரர்களின் தோல்விக்குக் காரணங்கள் பல உண்டு. அவர்களுக்குள் ஒற்றுமை ஏற்பட்டிருக்கவில்லை. சுல்தான் அலாவுத்தீனை எதிர்த்துப் போராடி வெற்றி கொள்ளுமளவிற்கு தனிப்பட்ட இராஜபுத்திர அரசர் எவரும் இல்லை என்று தான்கூற வேண்டும். ஆனால் இரண்டு அல்லது மூன்று அரசர்கள ஒன்று சேர்ந்திருப்பார்களேயானால் அலாவுத்தீனை வெல்லுவதற்குரிய வலிமையைப் பெற்றிருப்பார்கள்.[1] ஒவ்வொரு அரசரும் மற்றவர்களுக்கு ஏற்பட்ட இன்னல்களைப்பற்றி கவலை கொள்ளாது வாளாயிருந்தனர். சிவானுவை சுல்தான் தாக்கியபோது அதற்கு 50 மைல் தூரத்திலிருந்த ஜாலோர் அரசர் கவலையின்றி தம் கோட்டைக்குள்ளேயே இருந்து விட்டார். விளைவு என்னவாயிற்று? சிவானுவைக் கைப்பற்றிய சிறிது காலத்திற்குப் பின்னர்

[1] Dr. K.S. Lal, op. cit. p. 120

ஜாலோர் தாக்கப்பட்டது. சுல்தானுடைய பணியும் எளிதில் முடிவடைந்தது.[1]

இராஜபுத்திரர்கள் வீராவேசத்துடன் போர் புரிந்தனர் என்பதில் ஐயமில்லை. போரில் வெற்றி பெற வீரம் மட்டும் போதாது. சமயம் நேர்ந்தபோது தந்திரத்தையும் கையாள வேண்டும். சுல்தானுடைய துருக்கியப் படைகள் வீரத்துடன் சண்டை போடவும் அவ்வப்போது தந்திரத்தைக் கையாளவும் கற்றிருந்தனர். பொன்னையும் பொருளையும் காட்டி துரோகிகளை தங்களுடைய காரியத்திற்குப் பயன்படுத்திக் கொண்டனர். போர்க்களத்தில் வீரம் மட்டும் போதாதென்ற நிலை ஏற்பட்ட போது தந்திரத்தின் துணையை அவர்கள் நாடுவதற்குத் தயக்கம் கொள்ளவில்லை. ஒரு குறிப்பிட்ட குறிக்கோளை அடைய அவர்கள் எல்லா வழிகளையும் கையாண்டனர். இராஜபுத்திரர்கள் அரசியல் தந்திரம், அல்லது துரோகச் செயலின் வாயிலாக வெற்றியைத் தேட விருப்பங்கொள்ளவில்லை. அறமுறையாகப் போரிடவே அவர்களுக்குத் தெரியும். அவர்கள் போரில் உயிரிழப்பதை மேலான இன்பமாகக் கருதினர்கள். டாக்டர் K. S. லால் கூறி யுள்ளது போல அவர்களுக்கு இறக்கத்தான் தெரியுமே ஒழிய வாழத் தெரியாது. ஆனல் துருக்கியர்கள் உலகில் வாழ்வ தெப்படி என்பதை நன்கு கற்றறிந்தனர். இதுவே அவர்களுடைய வெற்றிக்கு மற்றொரு காரணமாகும்.[2]

இராஜபுத்திரர்கள் பழைய போர் முறையைக் கையாண்டு வந்தனர். துருக்கியப் படைகள் அடிக்கடி மங்கோலியர்களுடன் போரிட்டு வந்தமையால் அவர்களிடமிருந்து புது வகையான போர் முறைகளைக் கற்க வாய்ப்பு ஏற்பட்டது. மன்ஜனீக் போன்ற போர் இயந்திரங்களை அவர்கள் கையாண்டனர்.[3] சுல்தான் இராஜபுத்திர நாடுகளைத் துவக்கியபோது இராஜபுத்திர அரசர்கள் பெரும் பாலும் கோட்டைக்குள் புகுந்து கொண்டனர். அவர்களுடைய கோட்டைகள் பொதுவாக மலை உச்சியில் கட்டப் பட்டிருந்தன. திடீர் தாக்குதல் ஏற்பட்டபோது அரச குடும்பத் தினரும், பெண்களும், குழந்தைகளும், ஆடுமாடுகளும் அவற்றி னுள் சென்று பாதுகாப்பினைத் தேடிக் கொள்வது வழக்கம். பகைவர்கள் எளிதாகக் கோட்டையை அடைய முடியாது என்பது உண்மையே. ஆயினும் கோட்டைக்குள்ளிருப்பவர்களுக்குத்

[1] Ibid.

[2] Op. cit, 121

[3] Ibid

தேவையான பொருட்களை சுற்றுப் புறத்திலிருந்து கோட்டைக்குள் எடுத்துச் செல்லாதவாறு பகைவர்களால் தடுக்க இயலும். முற்றுகை பல நாட்கள் நீடித்தபோது கோட்டைக்குள் இருந்த மக்கள் பட்டினியால் வாடினர். கோட்டைகள் வீழ்வதற்கு இது ஒரு காரணமாக அமைந்திருந்தது. போர்க் காலத்தில் கோட்டைக்குள்ளிருந்த மக்கள் தொகை பெருக்கமடைந்தது. போதிய சுகாதார வசதியின்மையால் கொள்ளை நோய் பரவியது. அதனால், மக்களுடைய துன்பம் அதிகமாயிற்று. இராஜபுத்திரர்களுடைய வைதீகத் தன்மையும் அவர்களுக்குத் துன்பத்தை விளைவித்தது. குடிநீர் வழங்கும் குளத்தில் பசுவின் தலையை வீசி எறிந்து அதன் வாயிலாக ஒரு கோட்டையை கைப்பற்றிவிட்டதை நாம் காண்கிறோம்.

**அலாவுத்தீனும் மங்கோலியர்களும்:** அலாவுத்தீன் காலத்திற்கு முன்பே மங்கோலியர்கள் இந்தியாவின்மீது படையெடுத்திருந்தனர் என்பதை முன்னர் கண்டோம். அலாவுத்தீன் காலத்தில் அவர்களது படையெடுப்புகளின் எண்ணிக்கை மிகவும் உயர்ந்து விட்டது. மேலும், அவர் காலத்தில் தான் இந்தியாவைவென்று அதனைத் தங்கள் ஆதிக்கத்தின் கீழ் கொண்டு வரவேண்டும் என்ற ஆசை மங்கோலியரிடம் தோன்றியது. அந்த நேரத்தில் அவர்களை எதிர்த்துப் போராடி வெற்றி பெறக் கூடிய அளவிற்கு வலிமைப் பெற்ற அரசர் டில்லியின் அரியணையில் அமர்ந்திருந்தது மிகவும் நல்லதாயிற்று. மங்கோலியரின் தோல்விக்கு அலாவுத்தீனுடைய திறமை ஒரு முக்கிய காரணமாகும்.

செங்கிஸ்கானின் மறைவிற்குப் பிறகு மங்கோலியர்களின் பேரரசு பல துண்டுகளாகப் பிரிந்து விட்டது என்பதை முன்னர் கண்டோம். அலாவுத்தீன் காலத்தில் காஜான்கான் (1294-1304); அவருக்குப்பின் அவரது சகோதரன் பண்டா அல்ஜைதூ (Banda Aljaitu) பாரசீகத்தில் ஆட்சி செலுத்தி வந்தனர். தவகான் என்பவர் டிரான்ஸ் ஆக்ஸியானாவை 1306ஆம் ஆண்டு வரை ஆண்டு வந்தார். அவருக்குப்பின் அவரது பிள்ளைகள் குயூக் (Kuyuk), குபக் (Kubak), தலிகு (Taliku) அரசாண்டனர். மங்கோலிஸ்தானத்தில் அல்ஜைது (1294-1307), குபக் (1307-11) புயன்து (Buyantu) (1311-1320) ஆகியோர் ஆட்சி செலுத்தி வந்தனர். மேற்கண்ட அரசர்களுள் தவகானே இந்தியாவின் முக்கிய எதிரியாக இருந்தார். பாரசீக இல்கான்களிடமிருந்து கஜினியைக் கைப்பற்றிக் கொண்டு அங்கிருந்து இந்தியாவிற்கு படைகளை அனுப்பி வைத்தார்.

அலாவுத்தீன் அரியணை ஏறிய சிறிது காலத்திற்குள்ளாகவே மங்கோலியரின் படையெடுப்புகளின் வன்மையைத் தாங்கிக் கொள்ள வேண்டியதாயிற்று. இப்படையெடுப்பு 696ஆம் ஹிஜிரா ஆண்டில் மேற்கொள்ளப்பட்டதாக பரணியும் பிரிஷ்டாவும் கூறு கின்றனர். மங்கோலியப் படைகளுக்கும் சுல்தானுடைய படைக ளுக்கும் இடையே 697ஆம் ஹிஜிரா ஆண்டில் (1298) கைகலப்பு ஏற்பட்டதாக அமீர் குஸ்ரு எழுதியுள்ளார்.[1] டிரான்ஸ் ஆக்ஸியானாவின் அரசரான தவகான் இப்படையெடுப்பிற்கு ஏற்பாடு செய்தார். காதர் என்பவர் 100,000 வீரர்களைக் கொண்ட படைக்குத் தலைவராக நியமிக்கப்பட்டார். முதலில் கக்கர் (Gakkkars)களுடைய கிராமங்களைத் தீக்கிரையாக்கி விட்டு பின்னர் பஞ்சாப் சமவெளிக்கு அவர்கள் வந்தார்கள். செய்தியை அறிந்ததும் அலாவுத்தீன் ஒரு பெரும் படையை பஞ்சாபிற்கு அனுப்பி வைத்தார். உலூக்கானும் ஜபர்கானும் அப்படைக்குத் தலைமை வகித்தனர். சட்லஜ் நதிக்கரையில் ஜாரன்மன்சூர் என்னு மிடத்தில் இவ்விரு படைகளுக்குமிடையே சண்டை நடைபெற்ற தாக அமீர் குஸ்ரு எழுதியுள்ளார். ஜலந்தருக்கருகில் சட்லஜ், பியாஸ் நதிகளுக்கிடையே ஓரிடத்தில் போர் நடைபெற்றதாக பரணி கூறுகிறார்.[3] லாகூருக்கருகே போர் நடைபெற்றிருக்க வேண்டும் என்பது பிரிஷ்டாவின் கருத்தாகும்.[4] லூதியானாவிற்கு மச்சிவாராவில் (Machivara) போர் நடந்ததென்று பேராசிரியர் ஹோடிவாலா கூறுகிறார்.[5] டாக்டர் K. S. லால், பரணியின் கருத்து ஏற்று, போர் ஜலந்தருக்கருகே நடை பெற்றது என்று கூறியிருக்கின்றார்.[6] 20,000 மங்கோலியர்கள் போரில் உயிரிழந் தார்கள். பலர் சிறைபிடிக்கப்பட்டனர். பின்னர் அவர்கள் கொடூரமாகக் கொலை செய்யப்பட்டனர். பெண்கள், குழந்தைகள் பலரும் கைப்பற்றபட்டனர். அவர்களையும், கொலையுண்ட மங்கோலியர்களின் தலைகளையும் உலூக்கான் சுல்தானுக்கு அனுப்பி வைத்தார். இவ்வெற்றி சுல்தானுடைய பெருமையை உயர்த்தியது. அவருடைய ஆட்சி நிலைத்திருக்கவும் இது உதவியது என்றால் அது மிகையாகாது.[7] அன்புடன் ஆதரித்து ஆளாக்கி பெருமை பெறுதற்குரிய வழியைக் காட்டிய சிற்றப்பாவைக்

[1] Barani, 250; Khazain, Habib Trs. 2; Ferishta 102.

[2] Deval Rani, 60

[3] 250

[4] 102

[5] 246.47

[6] 131

[7] K. S. Lal, Op. cit. 132

கொலை செய்து பட்டத்திற்கு வந்தவர் என்ற பழிச் சொல்லின் காரணமாக டில்லி மக்கள் பிரபுக்கள் ஆகியோரின் அதிருப்தியைப் பெற்றிருந்த அலாவுத்தீனுக்கு இவ்வெற்றி அவ்வதிருப்தியை ஓரளவு குறைத்து விட்டது. உலூக்கான், நஸ்ரத்கான் ஆகியோரின் தலைமையில் சுல்தானுடைய படைகள் மீண்டும் குஜரத் படையெடுப்பில் ஈடுபட்டிருந்த வேளையில், மங்கோலியர்கள் மீண்டும் படையெடுத்து வந்தனர். இப் படையெடுப்பைப் பற்றி பரணி பின் வரும் தகவல்களை அளிக்கின்றார். மங்கோலியர்கள் இந்தியாவின் வடமேற்குப் பகுதியைத் தாக்கிய பின்னர் சிவிஸ் தானைக் கைப்பற்றினார்கள். சுல்தான் ஜபர்கான் தலைமையின் கீழ் படையொன்றை அனுப்பி சிவிஸ்தானை மீட்கும்படி ஆணையிட்டார். அக்கட்டளைக்கிணங்க சிவிஸ்தானை அடைந்ததும் ஜபர்கான் அதனை முற்றுகையிட்டார். மன்ஜ்னீக் போன்ற போர் இயந்திரங்களின் துணையின்றியே கோட்டைக்குள்ளிருந்து வீசப்பட்ட அம்பு மாரியையும் பொருட்படுத்தாது ஜபர்கான் அதனைக் கைப் பற்றினார். ஜபர்கான் அப்போது காட்டிய வீரத்தைக் கண்டு மங்கோலியர்கள் பேரதிர்ச்சியையும் ஆச்சரியத்தையும் அடைந் தனர். சல்தீ, அவரது சகோதரர் உட்பட பல மங்கோலியர்களைச் சிறைபிடித்துக் கொண்டு ஜபர்கான் டில்லி வந்தார். படைக்குத் தலைமை தாங்கி வந்தவர் யார் என்பதை பரணி திட்டவட்டமாகக் கூறவில்லை. இந்த படையெடுப்பினை விவரிக்கும்போது டிரான்ஸ் ஆக்ஸியானுவின் அரசாரன தவகானும் அவருடைய சகோதரர் சல்தீயும், (Chaldi or Saldi) சிவிஸ்தானைக் கைப்பற்றினார்கள் என்று பிரிஷ்டா கூறியுள்ளார்.[1] தவகான் இந்தியாவின் மீது படையெடுத்து வந்ததாக பிரிஷ்டா கூறும் கருத்தினை நாம் ஏற்க இயலாது என்பதற்கு K. S. லால் அவர்கள் சில காரணங்களைக் கூறியுள்ளார். கிழக்கு ஆசிய அரசியலில் தவகான் தம் முழு கவனத்தைச் செலுத்தி வந்திருந்தமையால் அவர் இந்தியாவிற்கு வந்திருக்க இயலாது. அப்போது மேற்கொள்ளப்பட்ட இந்திய படையெடுப்பு சிறிய அளவில் மேற்கொள்ளப்பட்ட படையெடுப் பாகும். அதற்குத் தவகான் போன்ற சிறந்த தலைவர்கள் தேவைப் படவில்லை. மேலும் போர்த் திறத்தில் சிறந்து விளங்கிய தவகான் ஜபர்கானை வெகு எளிதாகக் கோட்டையைக் கைப்பற்றவிட் டிருக்க மாட்டார். மேலும் அவர் சிறைப்படுத்தப்பட்டு டில்லிக்கு அழைத்துச் செல்லப்பட்டார் என்று பரணியும் பிரிஷ்டாவும் கூறி யிருக்கின்றனர். அதன் பின்னர் அவருக்கு நேர்ந்த கதி என்ன என்பதை எவரும் நமக்கு கூறவில்லை. ஆயினும் அலாவுத்தீனைப் பற்றி நன்கு அறிந்தவர்கள் அவருக்கு எந்தவிதமான கதி ஏற்பட்

[1] 103

டிருக்கும் என்பதை ஒருவாறு ஊகித்தறியலாம். தமது பகைவர்களை அலாவுத்தீன் சாதாரணமாக அழிக்காது விடுவதில்லை. 1306ஆம் ஆண்டு வரை தவகான் டிரான்ஸ் ஆக்ஸியானுவை ஆண்டு வந்த தாக நமக்கு வரலாறு செப்புகிறது. எனவே அவர் இந்தியாவிற்கு வரவில்லை என்பது உறுதி. இறுதியாக எல்லா வரலாற்றாசிரியர் களும் சல்தீயும், அவரது சகோதரனும் வந்தனர் என்று கூறுகின் றனரேயொழிய, தவகானும் அவரது சகோதரனை சல்தீயும் வந்தனர் என்று கூறவில்லை. தவகான் அப்போது ஆட்சிப் பீடத்தில் இருந்தமையால் அவர் இந்தியா வந்திருந்தால் அவருக்கு முக்கியத் துவத்தைக் கொடுத்து அவருடைய பெயரை முதலில் எழுதியிருப் பார்கள். அவர்கள் சல்தீயும், அவரது சகோதரனும் என்று குறித் திருப்பதனால் தவகான் வதிந்ருக்க மாட்டார் என்பது திண்ணம்.[1] எனவே படையுடன் வந்தவர்கள் தவகானுடைய சகோதரன் சல்தீயின் பெயர் கொண்ட ஒரு படைத்தலைவனும் அவனுடைய சகோதரனுமாக இருக்கக் கூடும்.

ஜபர்கானுடைய வெற்றி அவருக்கு மக்களுடைய நன் மதிப்பைப் பெற்றுத் தந்தது. அத்துடன் சுல்தானுடைய பொறாமை உணர்ச்சியையும் தூண்டி விட்டது. ஜபர்கானுடைய செல்வாக்கு தம்முடைய பதவிக்கு ஊறுவிளைவிக்குமோ என சுல்தான் அஞ்சினார், எனவே ஜபர்கானை சமானுவிலிருந்து திருப்பி அழைத்துக் கொண்டு தமது அவையிலே வைத்துக் கொண்டால் அவரது நடவடிக்கையினை கவனித்து வர இயலும் என்று சுல்தான் எண்ணினார். அல்லது வங்காளத்திற்கு அனுப்பி அதனைவென்று அங்கேயே அவர் ஆட்சி செய்து வர அனுப்பி விடுவது மேல் என்று சுல்தான் எண்ணினார்.[2] ஜபர்கானை குருடாக்கவும், விஷமிட்டுக் கொல்லவும் சுல்தான் துணிந்து விட்டார். சுல்தான் மட்டுமன்றி உலூக்கானும் ஜபர்கானைக் கண்டு பொறாமையடைந்தார். உலூக்கான் மூல்தானிலும், குஜராத்திலும் பெற்ற பெரும் வெற்றிகளை மக்கள் மறந்துவிடக் காரணமாகவிருந்த ஜபர் கான் சிவிஸ்தான வெற்றியே அவரது பெருமைக்குக் காரண மாகும். ஜபர்கானைப் பற்றி அவர்கள் கொண்ட அச்சத்திலிருந்து எளிதாகவும், சந்தடியின்றியும் விடுபட அவர்களுக்கு ஓர் அரிய வாய்ப்பு 1299-ல் ஏற்பட்டது. இனி அதைப் பற்றி சிறிது கவனிப்போம்.

1299ஆம் ஆண்டில் இறுதியில் தவகான் 2,00,000 பேர்கள் (20 துமன்கள்) கொண்ட படையொன்றை தமது மகன் குத்லூ

[1] Dr. K. S. லால், Op. cit 133

[2] Barani. 254

குவாஜாவின் தலைமையின்கீழ் இந்தியாவிற்கு அனுப்பி வைத்தார். சிவிஸ்தானில் மங்கோலியர்களுக்கு ஏற்பட்ட அவமானத்தைப் பழி தீர்த்துக் கொள்ளுவது என்பது இப்படையெடுப்பின் ஒரு நோக்கமாகும். ஆனால் இதனுடைய முக்கிய நோக்கம் டில்லியைக் கைப்பற்றுவதேயாகும். இதற்கு முன்னர் மங்கோலியர்கள் இந்தியாவைக் கொள்ளை அடிப்பதற்கென்றே வந்தனர் என்பதை ஈண்டு அறிவது அவசியமாகும். ஆகவே டில்லிக்குப் புறப்படுவதற்கு முன்னர் தக்க முன்னேற்பாடுகளைச் செய்ததுடன் நிற்காமல் டில்லிக்குப் போகும் வழியில் இருந்த நகரங்களைக் கொள்ளை அடிக்கவோ, கோட்டைகளைக் கைப்பற்றவோ முயற்சிக்கவில்லை. அதற்கு மாறாக வழியில் மூல்தான். சமானு ஆகிய எல்லைப்புறப் பகுதிகளிலிருந்த படைத்தலைவர்கள் பலவாறு தொல்லைகள் கொடுத்திருந்த போதிலும் அவர்களுடன் போரிடாது டில்லியை நோக்கி விரைந்து வந்தனர். ஒரு சமயம் குத்லூ குவாஜாவை தம்மோடு இருவர் போராட்டம் ஒன்றில் கலந்து கொள்ளும்படி ஜபர்கான் அழைத்தார். அதற்கு குத்லூ குவாஜா அரசர் அரசருடன் போரிடுவாரென்றி சாதாரண படைத்தலைவரிடம் போரிடமாட்டார் என்று கூறி அந்த வகைப் போரையும் மேற்கொள்ளாது டில்லி சென்றார். டில்லியிலிருந்து ஆறு மைல் தூரத்திலுள்ள கிலீ என்னுமிடத்தில் மங்கோலியர்கள் தங்களுடைய பாசறையை நிறுவினார்கள்.

டில்லிக்குச் செல்ல எந்த வழியினைப் பயன்படுத்தினார் என்ற வினாவிற்குத் திட்டவட்டமான பதிலை நாம் கூற இயலாது. அவரது நோக்கம் டில்லிக்கு விரைந்து செல்ல வேண்டும் என்பதாக இருந்தமையால் பெரு நகரங்கள் அமைந்திராத வழிகளின் ஊடாக அவர் வந்து சேர்ந்திருக்க வேண்டும். தமது படையினருக்கும், குதிரைகளுக்கும் வேண்டிய உணவுப் பொருட்களைத் தரவல்ல நாட்டுப்புற பகுதிகள் வழியினை அவர் தேர்ந்தெடுத்திருக்க வேண்டும் என்பது திண்ணம். மங்கோலியர்கள் சிந்து நதியைக் கடந்து வந்து கொண்டிருக்கின்றனர் என்ற செய்தியை அறிந்ததும் எல்லா கோட்டைகளும் பயத்தால் நடுங்கின. எல்லைப் பகுதிகளிலிருந்த எல்லைப் படைகள் பகல் வேளைகளில் கோட்டைக்குள் புகுந்து கொண்டும் இரவு நேரங்களில் வெளியே வந்து பகைவர் படைகளைப் பின்னிருந்து தொல்லைக் கொடுத்தும் வந்தன. டில்லிக்குச் சுற்றியிருந்த மாவட்டங்களில் வாழ்ந்த மக்கள் தங்களைக் காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டு டில்லிக்கு வந்து விட்டனர். தெருக்களிலும், அங்காடிகளிலும், மசூதிகளிலும் மக்கள் கூட்டம் பெருகி விட்டது. டில்லிக்கு வந்து கொண்டிருந்த வணிகப் பொருட்களை மங்கோலியர்கள் கைப்பற்றலாயினர்.

அதனுல் பொருட்களின் விலே ஏறியது. பற்ருக்குறையும் ஏற்பட்டது.

மங்கோலியர் படையெடுப்புப்பற்றிய செய்தி அவர்கள் சிந்து நதியைக்கடந்து விட்டபிறகே டில்லி சுல்தானின் காதுக் கெட்டியது. ஆகவே அவருக்கு முன்னேற்பாடுகள் செய்ய போதிய நேரம் கிடைக்கவில்லே. ஓரிருவாரங்களில் போர் ஆயத்தங்களேச் செய்ய வேண்டிய இக்கட்டான நிலேயில் இருந்தார். எனினும் மாகாண ஆளுநர்களுக்குப் போர் உதவிகளேப்பற்றியக் கட்டளேகளே உடனடியாக அனுப்பிவிட்டு சிவப்பு அரண்மனேயை விட்டு வெளியே வந்து சீரியில் தமது பாசறையை அமைத்துக் கொண்டார். மங்கோலியருடன் போரிடத் தயாராக விருந்தார். அந்த நேரத்தில் அலாவுத்தீன் அவசரப்பட்டு எந்த நடவடிக்கையையும் மேற்கொள்ளக் கூடாது என்பதற்காக அவரைச் சந்தித்து அலாஉல்முல்க் அறிவுரை கூறினுர். எந்தப் பக்கம் வெற்றி பெறும் என்பதை திட்டவட்டவமாகக்கூற இயலாத நேரத்தில் பழங்கால அரசர்கள் ஆபத்தான போர்களில் ஈடுபடுவதில்லே. சமவலிமையுள்ள இரு அரசர்கள் மிகவும் புத்திசாலித்தனமாக நடந்துகொண்டு போர் புரிவதை எவ்வளவு காலம் தள்ளிப்போட இயலுமோ அவ்வளவு காலம் தள்ளிவைத்துள்ளனர். ஒரு சண்டையின் விளேவையொட்டி ஒரு பேரரசின் தலேயெழுத்து நிர்ணயிக்கப்பட விருப்பினும் அவர்கள் அவ்வாறே போரிடாமல் காலம் தாழ்த்தி வந்தனர். அப்படியிருக்க எதற்காக வேண்டு மென்றே அலாவுத்தீன் ஓர் ஆபத்தான நெருக்கடியில் மாட்டிக் கொள்ள வேண்டும்? மங்கோலியர்களுடன் போர் செய்வதை தள்ளிப்போட்டுக் கொண்டே வருதல் வேண்டும். அலாவுத் தீனுடைய படையில் இந்துஸ்தான வீரர்களே அதிகமாக உள்ளனர். இந்துக்களுடன் போரிட்டே தங்கள் வாழ்நாட்களேக் கழித்து வந்துள்ளனர். அவர்கள் மங்கோலியர்களுடன் போரிட்டு பழக்கமடையவில்லே. ஆகவே மங்கோலியர்களின் போர்த் தந்திரகளேப் பற்றியும், போர் முறைகளேயும் அவர்கள் அறிந்திலர். ஆகவே அவர்களேக் கொண்டு மங்கோலியருடன் போர்புரிவது மிகவும் ஆபத்தானது. மேலும் மங்கோலியர்கள் கொண்டுவந்த உணவுப் பொருட்கள் தீர்ந்து போகும்வரை அவர்களோடு போரிடாமல் இருந்தால் சுல்தானுக்கு நன்மை ஏற்படும் என்றும், உணவுப் பொருட்களே அவர்கள் தேடப்புறப்படும் போது அவர்களேத் தாக்கினுல் வெற்றி கிடைக்கும் என்றும் அவர் கூறினுர் அலாஉல் முல்க்கினுடைய அறிவுரைகளுக்கு அலாவுத்தீன் எப்போதுமே மதிப்புக் கொடுத்து வந்தார். ஆனுல் இப்போது அவரது அறிவுரை சரியானதாக அலாவுத்தீனுக்குப் படவில்லே.

ஆகவே அவருக்கு தக்கபதிலே அனைவரும் அறிய அளிக்கவேண்டும் என்பதற்காக முக்கியமான படை அதிகாரிகளை வரவழைத்தார். அவர்கள் முன்னிலையில் அலாஉல்முல்க் தமக்குக்கூறிய அறிவுரைகளை அப்படியே ஒப்புவித்தார். "இந்தவகையான அறிவுரை வழங்கியதற்காக அவருக்கு வசீர் பதவியை அளிக்கலாம் ஆனால் அவர் உடல் பருத்து விட்டகாரணத்தால் கொத்வால் பதவியே அளிக்கப்பட்டுள்ளது. ஓர் ஒட்டகத்தைத் திருடிவிட்டு யாருக்கும் தெரியாமல் அதை மறைத்து எடுத்துக் கொண்டு போவதென்பது இயலாது. அதுபோல டில்லிப் பேரரசை ஆண்டு கொண்டுவர வேண்டும். ஆனால் அதனால் ஏற்படும் ஆபத்துக்களை சமாளிக்க இயலாதென்பது அறிவீனம். மங்கோலியர்களைப் பகைவர்களாக எண்ணவேண்டும். ஆனால் அவர்களோடு போரிடுவது மட்டும் கூடாதென்பது அர்த்தமற்றதாகும். அன்னியப் படையெடுப்பாளர்களுடன் போரிட அஞ்சினால் டில்லியின் மேலாட்சியை எங்ஙனம் நிலைநாட்ட இயலும்? இரண்டாயிரம் "கரோக்கள்" (Karohs) கடந்து டில்லிக்கருகே வந்து போருக்கழைக்கும் மங்கோலியர்களுடன் போரிடாமல் இருந்தால் பகைவர்கள் தம்மைப் பற்றி என்ன நினைப்பார்கள்? இந்த நேரத்தில் நான் என் பலவீனத்தைக் காட்டி ஒட்டகத்திற்குப் பின்னால் ஒளிந்து கொண்டால் நாட்டு மக்களும் போர் வீரர்களும் நமக்குக் காட்டிவரும் எல்லா விதமான மரியாதையையும் குறைத்து விடமாட்டார்களா? என்னைக்கண்டு வருங்கால மக்கள் எள்ளி நகையாடமாட்டார்களா? போரிடாமல் ஒளிந்து கொண்டால் நான் எந்த முகத்தோடு அந்தப்புரம் செல்ல முடியும்? என்ன நேரினும்சரி; நாளை நான் சீரியிலிருந்து கீலிக்குப் போகப் போகிறேன். அங்கு குத்லூகுவாஜாவுடன் போர் செய்யப் போகிறேன். கடவுள் யாருக்கு வெற்றி அளிக்கப் போகிறார் என்பதைப் பார்த்து விடுவோம். ஓ, அலா உல்முல்க்கே! உமக்கு நான் கொத்வால் பதவியை அளிக்கிறேன். அத்துடன் என்னுடைய சொத்துகளையும் அந்தப்புரத்தையும் நகரத்தையும் பாதுகாக்கும் பணியினையும் உமக்களிக்கிறேன். எங்கள் இருவரில் யார் வெற்றி பெற்றாலும், வெற்றி பெற்றவரை வணங்கி, நகரவாயில்களின் சாவிகளை முத்தமிட்டு அவரிடம் கொடுத்துவிடும். அன்னாருக்குக் கீழ்ப்படிந்து விசுவாசத்துடன் நடந்து வருக" என்று கூறி முடித்தார்.[1] அலாஉல்முல்க்கின் அறிவுரை, அலாவுத்தீன் அதற் களித்தபதில் ஆகியவற்றை பரணியின் வாயிலாக அறிகிறோம். இசாமி இதைப்பற்றி ஒன்றையும் கூறவில்லை. பின்னர் அலாவுத்தீன் தம்படைகளுடன் கீலீக்குச் சென்று அங்கு தம் பாசறையை குத்லூகுவாஜாவின் படைகளுக்கெதிரே நிறுவினார். அவர் கீலீக்குச் சென்ற பிறகு அலாஉல்முல்க் பதௌன் வாயிலைத்

தவிர ஏனைய நகரவாயில்களை மூடும்படி உத்தரவிட்டார். தேவை ஏற்பட்டால் அவ்வழியாகத் தப்பிச் செல்லவே இந்த ஏற்பாட்டினை செய்தார்.

அலாவுத்தீனுடைய படைகள் மிகவும் பாதுகாப்பான இடத்தில் நிறுத்தப்பட்டன. யமுனை ஆறு ஒரு புறமும் முட்புதர்கள் மற்றொரு புறமும் இருந்து அவற்றினைப் பகைவர் களிடமிருந்து பாதுகாத்தன. அலாவுத்தீன் வழக்கம் போல் தம் படைகளை மூன்று பிரிவுகளாகப் பிரித்தார். வலது அணிக்கு ஜபர்கான் தலைமை தாங்கினார். சில இந்து அரசர்களும், தேர்ச்சி பெற்ற வீரர்களும் அவருக்குத் துணை நின்றனர். இடது அணிக்கு உலூக்கான் தலைமை ஏற்றார். போரின் போது ஏதாவது ஓர் அணி சிதறடிக்கப்படும்போது அதற்கு துணை செய்ய வேண்டும் என்பது அவருக்கு அளிக்கப்பட்ட கட்டளையாகும். அலாவுத்தீன் மத்திய அணிக்குத் தலைமைத் தாங்கினார். நஸ்ரத்கான் அவருக்குத் துணையாக இருந்தார். ஒவ்வோர் அணிக்கு முன்பாக 22 யானைகள் அரண்போல் நிறுத்தப்பட்டன. ஒரு முறை தமது படைகளின் அணி வகுப்பைப் பார்வையிட்டார். போர் ஏற்பாடுகள் அனைத்தும் சரியான முறையில் மேற் கொள்ளப்பட்டு விட்டன என்று உணர்ந்தபின் தம் படையினர் எவரும் அவருடைய கட்டளையின்றி அசையக் கூடாது என்று ஆணை யிட்டார். டில்லிப் பேரரசின் தலைவிதி இந்த ஒரு சண்டையைப் பொருத்திருந்தமையால் அச்சண்டையை அவசியமேற்படும்போது மட்டுமே மேற்கொள்ள வேண்டும் என்பது அவரது கருத்து. அலாவுத்தீன் போலவே குத்லூ குவாஜாவும் தம்படைகளை மூன்று அணிகளாகப் பிரித்தார். வலப்புறத்தில் தமர் புகாவும் (Tamar Bugha) இடப்புறத்தில் ஹஜ்லக்கும், மத்தியில் குத்லூ குவாஜா வும் படைகளுடன் நின்று கொண்டனர். தர்கீ என்ற மங்கோலியர் ஒரு படைப்பிரிவுக்குத் தலைமைத் தாங்கினார். மறைவான இடத்தில் பதுங்கியிருந்து சமயம் நேர்ந்தபோது பகைவர்களைத் தாக்க வேண்டிய பொறுப்பு அவருக்கு அளிக்கப்பட்டது.

ஜபர்கானுக்குப் போரிடுவதில் ஏற்பட்டிருந்த ஆர்வம் வேறெவருக்கும் ஏற்பட்டிருக்கவில்லை, எனவே சுல்தானுடைய அனுமதிக்காக காத்திராமல் மங்கோலியரைத் தாக்கினார். அவருக்கு எதிராக அணிவகுத்திருந்த ஹஜ்லக்கின் படைகள் அத்தாக்குதலின் வேகத்தைத் தாங்க முடியாமல் பின் வாங்கின. மங்கோலியப் படை சிதறுண்டு ஓடியது. டில்லிப் படைகள் அதனை விடாது தொடர்ந்தது. அப்போது மங்கோலியத் தலைவர் தமர் புகாபும், அவருடைய வீரர்களும் ஓடிக்கொண்டே பின்னால்

தொடர்ந்து வரும் பகைவர் மீது அம்பு மாரியைப் பொழிந்தனர். இந்த மாதிரியான செயலில் மங்கோலியர்களுக்கு இணை மங்கோலியரே யாவார். இதற்கிடையில் மங்கோலியருடைய மத்திய அணி சுல்தானைத் தாக்கியது. சுல்தான் அதனை முறியடித்து மங்கோலியர் பலரைக் கொன்றார். ஒவ்வொரு மங்கோலியத் தலைக்கு ஒரு பொற்காசை தம் படை வீரர்களுக்கு அளித்ததாக அமீர் குஸ்ரு கூறியுள்ளார்.[1] வெற்றியின் விளைவாக முன்பு மங்கோலியர்களால் சிறை பிடிக்கப்பட்டிருந்த இந்தியர்கள் விடுவிக்கப்பட்டனர்.

இதற்கிடையில் ஜபர்கானுடைய தாக்குதலை ஒருவாறு சமாளித்து விட்டு ஜபர்கானை முன்னேறி ஹஜ்லாக் தாக்க முற்பட்டார். தமது அனுமதியின்றி போரைத் தொடங்கினார் என்பதற்காக சுல்தான் ஜபர்கான்மீது கோபமுற்றிருந்தார். ஜபர்கானுடைய செல்வாக்குப் பெருக்கம் அலாவுத்தீனுடைய பொறாமையை ஏற்கனவே தூண்டி விட்டிருந்தது. எனவே சுல்தான் தம் கீழிருந்த படைகளை ஜபர்கானுக்கு உதவி புரிய அனுப்பவில்லை. ஜபர்கானைத் திரும்பி வந்துவிடும்படியும் கட்டளை இடவில்லை. ஜபர்கானிடம் பொறாமை கொண்ட உலூக்கானும் அவருக்கு உதவி புரிய படைகளை அனுப்பவில்லை. இதற்குள் பகைவருடைய தாக்குதல் மேலும் வலுவடைந்தது. இந்த இக்கட்டான நிலையிலிருந்து விடுபட பகைவரை எதிர்த்துப் போராடுவதைவிட வேறு வழியில்லை என்பதை ஜபர்கான் புரிந்து கொண்டார். எனவே பகைவரை முன்னேறித் தாக்கும்படி ஜபர்கான் கட்டளையிட்டார். ஹஜ்லாக் அத்தாக்குதலை எதிர்த்து நிற்க இயலவில்லை. ஆகவே அவர் பின்னடைந்தார். ஜபர்கான் பகைவர்களை விடாது பின் தொடர்ந்தார். மங்கோலியர் பலர் ஜபர்கானுடைய கையில் சிக்கி உயிரிழந்தனர். அதுபோது தர்கீ தம் கீழிருந்த 10,000 வீரர்களுடன் ஒரு பக்கத்தில் மறைந்து கொண்டு ஜபர்கானை முன்னே போக விட்டார். பதினெட்டு கரோக்கள் வரை பகைவரைப்பின் தொடர்ந்து சென்று ஜபர்கான் திரும்பிப் பார்த்தபோது ஓராயிரம் குதிரை வீரர்களே அவர் போன வேகத்தில் அவருடன் வந்திருந்தனர் என்பதை அறியலானார். தம்முடைய படை வீரர்களுள் பெரும்பாலோர் பின்னாலேயே தங்கி விட்டனர். எனவே மேலும் பகைவர்களைத் துரத்திச் செல்வது அறிவீனம் என்றுணர்ந்து அவர் திரும்பி விட்டார். அதுபோது தர்கீ தாம் பதுங்கியிருந்த இடத்திலிருந்து வெளியேறி ஜபர்கானை வழிமறித்து நின்றார். ஜபர்கான் உடனே

[1] Deval Rani 61

தமது அதிகாரிகளுடன் ஆலோசனை நடத்தினர். எவ்வாறேனும் தப்பித்துச் சென்று அலாவுத்தீனிடம் போகலாமென்றால், அலாவுத்தீன் அவர்களைக் கொல்லாமல் விடமாட்டார் என்பது உறுதி. எனவே அலாவுத்தீன் கைகளில் இறப்பதைவிட போரிட்டு வீர மரணமடைவது மேல் என்று எண்ணினர்கள். இதற்குள் நிலைமையும் மோசமாகி விட்டது; பகைப் படைகள் அவர்களைச் சூழ்ந்து கொண்டன. எனவே அவர்களுக்குப் போர் செய்வதைத் தவிர வேறு வழியில்லாது போயிற்று. ஜபர்கான் வீரத்துடன் போரிட்டு 5,000 பேர்களைக் கொன்றார். இவர் பக்கத்தில் 800 பேர் இறந்தனர். எஞ்சியிருந்தவர்களுடன் கடைசி வரை போரிட்டார். ஜபர்கானுடைய குதிரை இறந்த போதிலும், போரிடுவதை அவர் நிறுத்தவில்லை. அச்சமயத்தில் ஜபர்கானைத் தம் பக்கத்தில் சேர்த்து கொண்டால் அவரைத் தம் தந்தையிடம் அழைத்துச் சென்று அலாவுத்தீன் அவருக்கு அளிக்கும் மரியாதை யைவிட அதிகமான மரியாதையைத் தம் தந்தையிடம் அவருக்குப் பெற்றுத் தருவதாகச் செய்தி ஒன்றை ஜபர்கானுக்கு குத்லூகுவாஜா அனுப்பி வைத்தார். அந்த நேரத்தில்கூட அந்த வகையாகத் தம்மைக் காப்பாற்றிக் கொள்ள ஜபர்கான் விரும்பாது அந்த வேண்டுகோளை நிராகரித்தார். ஜபர்கானை உயிரோடு சிறை பிடிக்க இயலாது என்ற நிலை ஏற்பட்ட போது மங்கோலியர்கள் எல்லா பக்கங்களிலிருந்தும் நெருங்கி வந்து அவரைக் கொன்று விட்டனர். அவருடனிருந்து போராடிய சுல்தானுடைய படை வீரர்களுள் ஒருவர்கூட உயிர் தப்ப இயல வில்லை. ஜபர்கானுடைய வீரம் மங்கோலியரை நிலை குலைய செய்து விட்டது. ஜபர்கான் அவர்கள் உள்ளத்தில் அப்போது ஏற்படுத்தி விட்ட அச்சம் பல ஆண்டுகள் இருந்ததாக அக்கால வரலாற்றாசிரியர்கள் நமக்குக் கூறுகின்றனர். தங்களுடைய குதிரைகள் நீர் பருக மறுத்தபோது "நீங்கள் ஜபர்கானைப் பார்த்து விட்டீர்களா? அதனால்தான் நீர் அருந்த மறுக்கி றீர்களா?" என்று மங்கோலியர்கள் கூறுவார்கள் என்பதை வரலாற்றாசிரியர்கள் மூலம் அறிகிறோம்.

ஜபர்கான் வீரப்போராட்டம் நடத்தியபோதிலும் அன்றைய போரில் மங்கோலியர்களே வெற்றி பெற்றனர் என்பதில் ஐய மில்லை. மங்கோலியரின் வெற்றி டில்லி படைத் தலைவர்களின் மனத்தைத் தளர்த்தி விட்டது. எனவே படைத்தலைவர்கள் அலாவுத்தீனை அணுகி டில்லிக்குச் சென்று டில்லிக் கோட்டை சுவர்களுக்குப் பின்னிருந்து கொண்டு மங்கோலியத் தாக்குதலை எதிர்கொள்ளுவது நலம் என்று யோசனை தெரிவித்தார்கள். அலாவுத்தீன் அந்த யோசனையை ஏற்க மறுத்துவிட்டார்.

தம்முடைய ஆணைகளை மீறி போரிட்ட படையின் ஒரு பகுதி அவருக்கு முந்திய நாள் தோற்றுவிட்ட காரணத்தால் தம் படைகள் பின்னடைய வேண்டும் என்பது சரியல்ல; தம்மைச் சூழ்ந்திருந்த ஆபத்துக்களைத் தாம் அறியாதவர் அல்லர்; ஒருவேளை தாம் இருந்த இடத்திலிருந்து பெயர நேரின், அப்போது தாம் முன்னேறிச் செல்வதற்காகவேயன்றி பின்னடைவதற்காக இராது'' என்று அலாவுத்தீன் கூறினார். அந்த நேரத்தில்கூட அவர் தம் படைகளைப் போரிட அனுமதிக்கவில்லை. குத்லூ குவாஜாவும் போரிடத் தயாராக இல்லை. ஆகவே இரண்டாம் நாள் முழுவதும் இருபடைகளும் நேருக்குநேர் நின்றிருந்தனவே யன்றி போரிடவில்லை. மூன்றும் நாளன்றும் இதேபோன்று அவ் விரு படைகளும் அணிவகுத்து நின்றன. அன்றிரவு மங் கோலியர்கள் தங்கள் ஊர் திரும்பிவிட்டனர். மங்கோலியப் படைகளை துரத்திச் செல்வது அறிவார்ந்த செயலாகாது என்று எண்ணி அவை பத்திரமாகத் திரும்பச் செல்ல அனுமதித்தார்.

குத்லூ குவாஜாவின் படையெடுப்பு ஜபர்கானிடம் அலாவுத் தீன் கொண்டிருந்த அச்சம் அகல உதவியது. அத்துடன் சுல்தா னுடைய மதிப்பும் உயர்ந்தது.

தர்கி படையெடுப்பு: அடுத்த மங்கோலியப் படையெடுப்பு தர்கியின் தலைவையின் கீழ் நடத்தப்பட்டது. 120,000 குதிரை வீரர்களுடன் அவர் புறப்பட்டு வந்ததாகப் பரணி முதலில் கூறி விட்டு பின்னர் 30 முதல் 40 ஆயிரம் பேர்களைக் கொண்ட படை யுடன் அவர் வந்தார் என்று பரணி கூறியுள்ளார். 200,000 குதிரை வீரர்களுடன் வந்தார் என்று அமீர்குஸ்ரூவும், 120,000 பேர்களுடன் வந்தார் என்று பிரிஷ்டாவும் கூறுகின்றனர். இந்தியாவை வெல்ல வேண்டும் என்ற நோக்கத்துடன் மங்கோலியர்கள் இப்போது படையெடுத்து வந்தமையால் பரணி அளிக்கும் படைவீரர்களின் எண்ணிக்கை ஏற்றுக்கொள்ளத்தக்க தாக இருக்கிறது.

1302 ஆம் ஆண்டில் சுல்தான் அலாவுத்தின் வங்காளம் வழி யாக வாரங்கல்லுக்குப் படையொன்றை அனுப்பி வைத்தார். 1303 ஆம் ஆண்டில் சித்தூர் நோக்கி படையெடுப்பு ஒன்றும் மேற்கொள்ளப்பட்டது. அவற்றின் விளைவாக எல்லைப்புறத்தி லிருந்து பேரரசின் படைகள்கூட சில திருப்பி அழைக்கப்பட் டிருந்தன. ட்ரான்ஸ் ஆக்ஸியானாவிலிருந்த மங்கோலியர்கள் அலாவுத்தீன் படையெடுப்புகளைப் பற்றிக் கேள்விப்பட்டனர். டில்லியைப் பாதுகாக்கப் போதிய படைகள் அப்போது தலைநகரில்

இல்லையென்பதையும் அவர்கள் அறிந்து கொண்டனர். அந்த வாய்ப்பினைப் பயன்படுத்திக் கொண்டு டில்லியைக் கைப்பற்றி விடலாம் என்ற எண்ணத்துடன் தர்கீ இந்தியாவிற்கு அனுப்பப் பட்டார். வழியிலிருந்த கோட்டைகள் நகரங்கள் ஆகியவற்றைத் தாக்கி நேரத்தை வீணுக்காமல் படைகளை வேகமாக நடத்திக் கொண்டு தர்கீ டில்லிக்கருகே வந்துவிட்டார். அதிர்ஷ்டவசமாக தர்கீ டில்லி வந்தடைவதற்குள் சுல்தான் டில்லிக்குத் திரும்பி விட்டார். தலைநகரத்தில் இருந்த படைகளை ஒன்று திரட்டி சீரீயில் அவற்றை அணிவகுத்திருக்கச் செய்தார். தமக்குக் கிடைத்த சிறு படையினைக் கொண்டு மங்கோலியர்களுடன் போரிடுவதென்பது இயலாது என்பதை உணர்ந்த சுல்தான் தம் முடைய பாதுகாப்பு அரண்களை வலுப்படுத்துவதில் கவனம் செலுத்தினர். கிழக்கே யமுனை ஆறும், தெற்கே அடர்ந்த காடு களும், தென் மேற்கே பழைய கோட்டையும் தக்க பாதுகாப்பை அளித்திருந்தமையால் வடக்குப் பக்கத்தை பலப்படுத்த முற் பட்டார். அங்குதான் மங்கோலியர் தங்கள் பாசறையை அமைத்திருந்தனர் என்பது அறியற்பாலது. வடபக்கத்தில் தமது பாசறையைச் சுற்றி குழிகள் வெட்டச் செய்தார். அவற்றைச் சுற்றிலும் மரப்பலகைகளாலான சுவர்களை எழுப்பினர். ஒவ் வொரு குழியின் பின்னல் 5 பெரிய யானைகள், ஒரு பிரிவு குதிரை வீரர்கள், காவலர் படை ஆகியவை நிறுத்தப்பட்டன. மற்ற இடங்களிலிருந்து உதவி வரும் வரை மங்கோலியர்களுடன் நேருக்கு நேர் நின்று போர் செய்வதை எவ்வளவு நேரம் ஒத்திப் போட முடியுமோ அவ்வளவு நேரம் ஒத்திப் போட்டு வர வேண்டும் என்பது அலாவுத்தீனுடைய நோக்கமாகும். அலாவுத்தீன் அமைத்திருந்த பாதுகாப்பு அரண்களுள் ஏதாவது ஒன்றின் வழியாக ஊடுருவிச் சென்று சுல்தானுடைய படைகளை திடுமெனத் தாக்க வேண்டும் என்பது மங்கோலியரின் நோக்க மாகும். எனவே அவர்கள் எந்நேரமும் அலாவுத்தீன் அமைத் திருந்த போர்க்குழிகள் பக்கமாக அங்கும் இங்கும் அலைந்து கொண்டிருந்தனர். எனவே சுல்தான் தம்முடைய படைகளை எப்போதும் போரிடத் தயாராக வைத்திருந்தார். சுல்தான் எதிர்பார்த்த அளவு படையுதவி அவருக்குக் கிடைக்கவில்லை. வங்காளத்திலிருந்து மலிக் ஜூனுவும், ஜூஜூவும் திரும்பி வந்தனர். ஆனுல் அவர்கள் கொண்டு சென்ற படை முழுமை யாக அழிந்து விட்டது. மூல்தான், சமானு, திபால்பூர் ஆகிய இடங்களிலிருந்து படைகள் டில்லிக்கு வந்து சேரா வண்ணம் மங்கோலியர் வழி மறித்து நின்றனர். கிழக்கு மாகாணங்களி லிருந்தும் படைகள் டில்லி வருவதை மங்கோலியர்கள் வெற்றி கரமாக தடுத்து நிறுத்தினுர்கள். டில்லியைச் சுற்றியுள்ள பகுதி

களை அவ்வப்போது தாக்கி உணவுப் பொருட்கள் முதலியன டில்லிக்குக் கொண்டு போவதைத் தடை செய்தார்கள். சில சமயங்களில் அவர்கள் டில்லியைத் தாக்கி உணவுக் களஞ்சி யங்களைக் கொள்ளையிட்டனர். இத்துணை இன்னல்களுக்கிடையே அலாவுத்தீன் மனம் தளர்வுறுமலும் தம் நிலையினின்றும் சிறிதும் அசையாமலும் இருந்தார். ஓரிரு சமயங்களில் இவ்விரு படை களும் சில்லரைச் சண்டைகளில் ஈடுபட்டன. ஆனல் அச் சண்டைகள் யாருக்கும் வெற்றி தோல்வியின்றி முடிவுற்றன.

டில்லிப் படைகளை ஐயத்திற்கிடமற்ற வகையில் தோற் கடித்து விட்டு டில்லியைக் கைப்பற்றும் நோக்கத்துடன் தர்கீ இந்தியா வந்தார். நீண்ட நாள் முற்றுகையை மேற்கொள்ளவோ அல்லது நீண்ட நாள் போருக்கோ அவர் தயாராக வரவில்லை. அலாவுத்தீனுடைய போர்த் திட்டம் தர்கீயினுடைய எண்ணத் திற்கு உதவி செய்வதாக இல்லை. அலாவுத்தீனைத் தாக்கி அவரைப் போரிடும்படி கட்டாயப்படுத்தவும் இயலவில்லை. எனவே இரண்டு மாதங்கள் காத்திருந்த பின்னர் தர்கீ நாடு திரும்புவதே மேல் என எண்ணி படைகளைத் தாய்நாடு திரும்பும்படி ஆணையிட்டார்.

மங்கோலியப் படைகள் போரிடாமலும், டில்லி நகரத்தைக் கைப்பற்றித் தங்களுடைய ஆட்சியை ஏற்படுத்தாமலும் பின்ன டைந்துவிட்ட செய்தி பலரை வியப்பில் ஆழ்த்தி விட்டது. இது நம்ப முடியாத ஒரு நிகழ்ச்சியாகக் காணப்பட்டது. நிஜாமுத்தீன் ஆலியாவின் பிரார்த்தனைதான் மங்கோலியர்களை நாட்டைவிட்டு விரட்டியது என்று பலர் நம்பினுர்கள். சுல்தானுடைய போர் ஏற்பாடுகளும், பாதுகாப்பு நடவடிக்கைகளும் மங்கோலியருக்கு அச்சத்தை விளைவித்திருக்க வேண்டும். மங்கோலியர்கள் நீண்ட நாள் போர் செய்வதற்கான ஏற்பாடுகளுடன் வரவில்லை. எனவே இந்துஸ்தானத்தில் அவர்கள் வெகு நாள் தங்கும் நோக்கத்துடன் வரவில்லை. ஆகவே அவர்கள் திரும்பியதற்கு தெய்வத் திருவருள் மட்டும் காரணமாகாது என்பது தெளிவாகும்.

தர்கீயின் படையெடுப்பு முடிந்தவுடன் அலாவுத்தீன் அடிக்கடி ஏற்படுகின்ற மங்கோலியத் தாக்குதலை எதிர்கொள்ள உரிய பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற்கொள்ளலானுர். வேறெந்த போர் நடவடிக்கைகளையும் மேற்கொள்ளாது தம் முழு கவனத் தையும் அவற்றில், செலவிடலானுர். முதலாவதாக தமது தலைமையிடத்தை சீரீக்கு மாற்றி விட்டார். டில்லியைக் காட்டிலும் சீரீ பாதுகாப்பு மிக்க இடமாக அவருக்குத் தோன் றியது. சீரீ கோட்டையையும் அரண்மனையையும் கட்டி முடித்

தார். இரண்டாவதாக டில்லி நகரத்திற்குள் பகைவர்கள் எளிதில் புகா வண்ணம் அதைச் சுற்றிலும் ஒரு பெரிய மதிற் சுவரை யெழுப்பினர்.

மூன்றுவதாக, பழைய கோட்டைகளை புதுப்பித்தார். நான்காவதாக, மங்கோலியர்கள் டில்லி அடைவதற்குப் பயன் படுத்திய வழிநெடுக புதிய கோட்டைகளைக் கட்டுவித்தார். ஐந்தாவதாக மங்கோலியர்களை எல்லையிலேயே தடுத்து நிறுத்து வதற்காக அனுபவமிக்க அதிகாரிகளை எல்லைப்புற பாதுகாவலர் களாக நியமித்து போதுமான ஆயுதங்கள் தாங்கிய வீரர்களை அவர்களிடம் ஒப்படைத்தார். ஆருவதாக டில்லிப் படைகளின் எண்ணிக்கை உயர்த்தப் பட்டது. அவற்றின் அமைப்பு முறையும் மாற்றி அமைக்கப்பட்டது. இறுதியாக போர் இயந்திரங்கள், போர்க்கருவிகள் ஆகியவற்றைப் பெருமளவில் உற்பத்தி செய் வதற்காக தொழிற் கூடங்கள் நிறுவப்பட்டன. அரசாங்க பொறியாளர்கள் அவற்றினை நடத்தி வந்தனர். மேற்கூறிய முன்னேற்பாடுகள் மங்கோலியருடைய படையெடுப்புகளை முற்றி லும் தடுத்து நிறுத்தவில்லை என்பது உண்மையே. ஆனல் அப் படையெடுப்புகள் ஏற்படும்போது அவற்றை வெற்றிகரமாக எதிர்த்து நிற்க இம்முன்னேற்பாடுகள் துணை புரிந்தன என்பதை மறுக்க இயலாது.

அடுத்த மங்கோலியப் படையெடுப்பு 1305-ல் நடை பெற்றது. இந்தியப் படைகளிடம் தொடர்ந்து தோல்வி யடைந்து வருவதை மங்கோலியர் விரும்பவில்லை, அத்தோல்வியை பழி தீர்த்துக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் தலைதூக் கியது. அதுவே அப்படையெடுப்பிற்கு முக்கிய காரணமாகும். அலீபேக், தர்தாக் (Tartaq) ஆகியோர் இப்படைக்குத் தலைமை தாங்கினர்கள். தர்கீயும் தாம் முன்னர் அடைந்த தோல்விக்குப் பரிகாரம் தேட அவர்களுடன் சேர்ந்து கொண்டனர். 50,000 பேர்கள் இப்படையெடுப்பில் கலந்து கொண்டதாக அமீர்குஸ்ரு கூறுகிருர். 30முதல் 40 ஆயிரம் பேர்கள் இப்படையெடுப்பில் கலந்து கொண்டதாக பரணி நமக்கு அறிவிக்கிருர். சிந்துநதிக்கு வடமேற்குப் பகுதியிலுள்ள மலைப் பிரதேசங்களைக் கடந்து, பின்னர் சிந்துவையும் கடந்து டில்லியை நோக்கி இப்படை வேகமாக முன்னேறியது. வழிநெடுக பல கொடூரச் செயல்களை ஆற்றிவிட்டு இறுதியில் தோவாப் பகுதியை அடைந்தார்கள். டில்லிக்குச் செல்லாமல் தோவாப் நோக்கிச் சென்றமைக்கு இரு காரணங்கள் உண்டு. முதலாவதாக டில்லி பலமாகப் பாது காக்கப்பட்டு வந்தது. எனவே அதனைத் தாக்கி கைப்பற்றுவ்

தென்பது எளிதான காரியமாகாது என்று மங்கோலியர்கள் அறிந்தனர். இரண்டாவதாக இதற்குமுன் டில்லியைக் கைப்பற்ற மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள் வீணுகின என்பதையும் அவர்கள் உணர்ந்திருந்தனர். தோவாப் பகுதிக்கு வந்து சேரு வதற்குள்ளாகவே தர்கீ அம்பு ஒன்றினுல் தாக்கப்பட்டு உயிரிழந்தார். தோவாப் பகுதியை அடைந்த மங்கோலியப் படைகள் அங்குள்ள நகரங்களைக் கடுமையாகத் தாக்கின. வீடு களைத் தீக்கிரையாக்கின. மக்கள் செய்வதறியாது அங்கிருந்து ஓடி ஆறுகளில் வீழ்ந்தனர்.

பகைவரின் அட்டகாசங்கள், மக்களின் திக்கற்ற நிலை ஆகிய வற்றை சுல்தான் அறிய நேர்ந்ததும் 30 முதல் 40 ஆயிரம் பேர்கள் கொண்ட ஒரு பெரும் படையை மலிக் நாயக் என்பவரின் தலைமையின் கீழ் பகைவர்களின் கொட்டத்தை அடக்க அனுப்பி வைத்தார்.[1] மலிக் நாயக் ஓர் இந்து என்று அமீர் குஸ்ரூ குறிப்பிட்டுள்ளார்.[2] அம்ரோஹா என்ற இடத்திற்கருகே இரு படைகளும் மோதிக் கொண்டன. மங்கோலியர் பலர் கொலையுண்டனர். 20,000 குதிரைகள் கைப்பற்றப்பட்டன. அலிபெக்கும், தர்தாக்கும் சிறைபட்டனர். இச்சண்டை 1305 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 30ஆம் தேதி நடைபெற்றது.

டில்லிப்படைகள் அடைந்த பெரும் வெற்றியைக் கேள்வி யுற்றதும் சுல்தான் மகிழ்ச்சிக்கடலில் மூழ்கி விட்டார். உடனே ஒரு தர்பாருக்கு ஏற்பாடு செய்தார். அரசருடைய இருக்கை முதல் இந்தர்பத் வரையில் வெற்றி வாகை சூடி வந்த படைகள் இரண்டு வரிசைகளில் நிறுத்தப்பட்டன. சிறைபிடிக்கப்பட்ட மங்கோலியர்களைக் காணவும் அவர்களுக்கு அளிக்கப்படவிருந்த தண்டனைகளை அறியவும் மக்கள் திரளாகக் கூடியிருந்தனர். சிறைபட்ட மங்கோலியர்கள் இம்மக்கள் கூட்டத்தின் வழியாக, அரசர் முன் கொண்டு வந்து நிறுத்தப்பட்டனர். அரசருடைய ஆணைக்கிணங்க அவர்கள் ஒட்டகங்களின்மீது ஏற்றப்பட்டு நகர வீதிகளில் அழைத்துச் செல்லப்பட்டனர். பின்னர் அவர்கள் தலைகள் அறுத்தெறியப் பட்டன. அத்தலைகளைக் கொண்டு கோட்டைக்கு வெளியே கோபுரங்கள் அமைத்தனர். சீரியில் கருங்கற்கள், செங்கற்களுக்குப் பதிலாக 8,000 மங்கோலியத் தலைகள் கோபுரங்கள் கட்டப் பயன்படுத்தப் பட்டன என்று

[1] அமீர் குஸ்ரூவும், பரணியும் மலிக் நாயக் என்பவரை அனுப்பி வைத்ததாகக் கூறுகின்றனர்.

[2] இசாமி அவரை மலிக்கானக் என்றும், பிரிஷ்டா மலிக் நாயிப் என்றும் குறிப் பிட்டுள்ளார்கள்.

பிரிஷ்டா கூறியுள்ளார். புதிய கட்டிடங்கள் கட்ட மங்கோலி யர்கள் தங்களுடைய இரத்தத்தைக் கொடுத்தனர் என அமீர் குஸ்ரூ கூறியுள்ளார்.

அலீபேக்குக்கும், தர்தாக்குக்கும் நேர்ந்த கதியென்ன என்ப தைப்பற்றி பலவகையான கருத்துகள் நமக்குக்கிடைத்துள்ளன. தலைவர்கள் உட்பட சிறைபட்ட எல்லா மங்கோலியர்களையும் யானைகளின் கால்களில் இட்டு அலாவுத்தீன் கொல்லுவித்தவர் என்று பரணி கூறுகின்றார். அலீபேக், தர்தாக் ஆகிய இருவருக்கும் மன்னிப்பு வழங்கப்பட்டது என்றும் அவர்களுள் ஒருவர் நாளடை வில் இறந்துவிட்டார் என்றும், மற்றவர் தனித்து வாழ்ந்து வரலானார் என்றும் அமீர்குஸ்ரூ கூறியுள்ளார். அத்துடன் நிறுத்திக் கொள்ளாமல் உயிர்களைக் குடிக்கும் விளையாட்டில் வெற்றி வாகை சூடிவந்த பேரரசர் அவ்விருவருடைய உயிர்களுடன் ஒன்றின்பின் ஒன்றாக விளையாடி அவற்றை எடுத்து விட்டார் என்று கூறி முடித் திருக்கிறார்.[1] அவ்விருவரையும் முதலில் மன்னித்து விட்டார் என்றும், அவர்களுக்குத் தேவையான எல்லாப் பொருள்களையும் கொடுத்து உதவினார் என்றும் பின்னர் தர்தாக் குடிபோதையில் டில்லி அரசர் பதவி, போர்க்கருவிகள், படை ஆகியவற்றைப்பற்றி விசாரித்தால் அலாவுத்தீன் கோபமுற்று அவரைக் கொல்லும்படி உத்திரவிட்டார் என்றும் அலீபேக்குக்கும் இதேகதி பின்னால் நேர்ந்தது என்றும் இசாமி கூறுகிறார்.[2] அலாவுத்தீன் முதலில் இவ்விரு படைத்தலைவர்களையும் மன்னித்து விட்டார். சில காலத் திற்குப் அவர்களைக் கொல்லுவித்தார் என்ற கருத்து ஏற்க வல்ல தாக உள்ளது.

கி.பி. 1306 மற்றொரு மங்கோலியப் படையை தவகான் இந்தியாவிற்கு அனுப்பிவைத்தார். அலீபெக், தர்தாக் ஆகியோ ரின் மரணத்தைப் பழிவாங்குவதற்காக இப்போர் நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது.[3] இப்படைக்கு குபக்-தலைமை தாங்கி னார். குபக் தவகானின் புதல்வராவார். பரணி இவரை குங் (Kunk or Gung) என்று அழைத்துள்ளார். அமீர்குஸ்ரூ கபக் (Kapak or Gabak) என்று குறிப்பிட்டுள்ளார். இசாமி கபக் (Kabak) என்றும் பிரிஷ்டா குங் (Gung) என்றும் குறிப் பிட்டுள்ளார்கள். குபக் தலைமையில் வந்தபடை சிந்து ஆற் றைக்கடந்து ரவி நதியை நோக்கி விரைந்து சென்றது. போகும் வழியில் மங்கோலியர்கள் பல கிராமங்களையும் நகரங்களையும்

[1] Khazain. Habib Trs., 28

[2] Futuh, 298

[3] Dr. K. S. Lal op-cit P. 143

தீக்கிரையாக்கினர். பலரைக் கொன்றனர். இக்பால் மண்ட் (Iqbalmand) என்பாரின் தலைமையின் கீழான மற்ெருரு மங்கோலி யப்படை தெற்கு நோக்கிச்சென்று நாகோருக்கு அருகே வந்து சேர்ந்தது. இப்படையைச் சார்ந்தோரும் நாசவேலையில் மும்முர மாக ஈடுபட்டனர். மங்கோலியர்களை எதிர்த்துப் போராட அலாவுத்தீன் மலிக் நாயீப் காபூலின் தலைமையின் கீழ் ஒரு படையை அனுப்பிவைத்தார். அவருடன் அனுபவமிக்க படைத்தலைவர் களும் அனுப்பப்பட்டனர். அவர்களுள் ஒருவர் மலிக் துக்ளக் என்பவராவார். அவர் அப்போது தீபால்பூரின் ஆளுநரராகப் பணியாற்றி வந்தார். படை வீரர்களுக்கு உற்சாக மூட்டுவதற்காக அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஓராண்டு சம்பளம் கூடுதலாக அளிக்க அலாவுத்தீன் ஏற்பாடு செய்தார். மலிக்காபூர் உற்சா கத்துடன் போர்புரிய வேண்டும் என்பதற்காக அவரை வான ளாவப்புகழ்ந்து பேசினுர். பகைவரை நெருங்கும்வரை இப்படை இரவு பகல் எனப்பாராமல் வேகமாக முன்னேறிச் சென்றது. இறுதியில் பகைவரை ரவி நதிக்கரையில் சந்தித்தது முதலில் மலிக் காபூர் மங்கோலியரின் தாக்குதலைச் சமாளிகக இயலாது பின்ன டைந்தார. ஆனுல் பின்னர் தம் படைகளைத் திரட்டிக்கொண்டு வீரத்துடன் போரிட்டு பகைவரைத் தோற்கடித்தார். குபக் சிறை பிடிக்கப்பட்டார். அதுபோது சில டில்லி வீரர்கள் அவரைக் கொன்றனர். மங்கோலியர் தலைதெறிக்க ஓடினுர்கள். மங்கோலி யப்பெண்களும் குழந்தைகளும் டில்லிக்கு அனுப்பபப்பட்டனர். அதன்பிறகு மலிக்காபூரும். மலிக்துக்ளக்ரும் நாகோர் நோக்கிச் சென்றனர். இக்பால் மண்ட், தாயி. பூ (Tai-Bu) என்ற மங்கோ லியப் படைத்தலைவர்கள் குபக்குக்கு நேர்ந்த கதியை அறிந்து மனம் ஒடிந்து போனுர்கள். எனவே டில்லிப்படைகள் அவர்களை திடுமெனத்தாக்க முற்பட்டபோது அவர்களுடைய உயிர்களைக் காப்பாற்றிக் கொள்ளத் தாயகம் நோக்கி ஓடினுர்கள். டில்லிப் படைகள் அவர்களைத் துரத்திச்சென்று அவர்களை முழுமையாக முறியடித்தார்கள். அநேக போர்க்கைதிகளுடன் டில்லிப்படை வெற்றியுடன் திரும்பியது. போர்க்கைதிகளை யானைகளின் காலடியில் இட்டுக் கொல்லும்படி சுல்தான் ஆணையிட்டார். மங்கோலியப் பெண்களும், குழந்தைகளும் விற்கப்பட்டனர்.

இந்த மங்கோலியப் படையெடுப்பை பல வரலாற்ருசிரியர்கள் பல விதமாக விவரித்து எழுதியுள்ளனர். மங்கோலியர் ஒரே ஒரு போர் ஏற்பாட்டினை 1306-ல் செய்தனர் என்றும், இதில் மூன்று படைப்பிரிவுகள் கலந்து, கொண்டன என்றும், இப்பிரிவு களுக்கு குபக், இக்பால் மண்ட், தாயி பூ தலைமை தாங்கினுர்கள்

என்றும் அமீர் குஸ்ரூ கூறுகிறார்.[1] குபக்கைத் தவிர வேறுபடைத் தலைவர்களின் பெயர்களை இசாமி குறிப்பிடவில்லை[2]. பரணி மூன்று போர் நடவடிக்கைகளைப் பற்றிக் கூறியிருக்கிறார். மூன்று படைகள் வெவ்வேறு காலத்தில் இந்தியாவின் மீது படையெடுத்து வந்தன என்று கூறுகிறார். கங்க் (குபக்) இக்பால் மண்ட் ஆகிய இருவரும் இருபடைகளை நடத்தி வந்தனர். மூன்றாவது படைத்தலைவரின் பெயர் நமக்கு அறிவிக்கப்படவில்லை. கங்க் தலைமையின் கீழான படை கேகர் என்னுமிடத்தில் தோற்கடிக்கப் பட்டது. கங்க், பல மங்கோலிய வீரர்கள், பெண்கள், குழந்தைகள் ஆகியோர் சிறைபட்டனர். அவர்கள் அனைவரும் யானையின் காலடியில் இடப்பட்டுக் கொல்லப்பட்டனர். பதௌன் வாயிலுக் கருகே அவர்களுடைய தலைகளாலான கோபுரம் ஒன்று அமைக்கப் பட்டது. மற்றோர் ஆண்டில் மற்றொரு மங்கோலியப்படையுடன் சுல்தானுடைய படைகள் சண்டையிட்டன. இச் சண்டை சிவாலிக் குன்றுப் பகுதியில் நடைபெற்றது. மங்கோலியர்கள் எந்த வழியாக சிவாலிக் குன்றுப் பகுதிக்கு படை நடத்திச் சென்றார்களோ அந்த வழியினை அடைந்து அவர்கள் திரும்பிப்போகா வண்ணம் டில்லிப் படைகள் வழிமறித்து நின்றன மங்கோலியப்படைகள் குடிக்க தண்ணீர் கிடைக்காது அவதியுற்றனர். இறுதியில் ஏற்பட்ட கை கலப்பில் மங்கோலியர் தோல்வியுற்றனர். அவர்களுள் அநேகர் கொலையுண்டனர். மற்றோர் ஆண்டில் இக்பால் மண்ட் மற்றொரு மங்கோலியப் படையினை நடத்திவந்து இந்தியாவைத் தாக்கினார். இக்பால் மண்ட் போரில் தோற்று உயிரிழந்தார். அவருடன் ஆயிரக்கணக்கான மங்கோலியர்கள் கொலையுண்டனர். பிரிஷ்டா இரண்டு படையெடுப்புகளை மட்டுமே குறித்துள்ளார். அவற்றுள் ஒரு படையெடுப்பு சிந்து நதிக்கரையிலேயே முறியடிக்கப்பட்டு விட்டது என்று கூறுகிறார். இப்படை யெடுப்பினை குபக் நடத்தி வந்ததாகக் கூறுகின்றார். வெகுநாள் கழித்து இக்பால் மண்ட் என்ற மங்கோலியர் ஒரு பெரிய படையை நடத்திக் கொண்டு இந்துஸ்தானத்திற்கு வந்து பலத்தசேதத்தை உண்டாக்கினார். காஜி மலிக்துக்ளக் அவரை எதிர்த்துப் போராடி அவரைக் கொன்றார். யானைகளால் மிதித்துக் கொல்லப்படுவதற்காக பல மங்கோலியர்களை அவர் டில்லிக்கு அனுப்பி வைத்தார். இவர் தரும் விவரங்கள் பெரும்பாலும் பரணியின் நூலிலிருந்து பெறப் பட்டனவாக இருக்கின்றன.

அமீர்குஸ்ரூ, அலாவுத்தீன் காலத்தில் வாழ்ந்தவர். அவர் காலத்திலேயே தமது நூல்கள் பலவற்றை எழுதி முடித்துவிட்டார்.

[1] Khazain, 29931 j Daval Rani, 62-65

[2] Futuh, 310-314

பரணி தமது நூலை அலாவுத்தீன் இறந்த பல ஆண்டுகள் கழித்து எழுதியுள்ளார். மேலும் அமீர்குஸ்ரூ தரும் விவரங்கள் பலவற்றை இசாமியும் நமக்குத் தந்துள்ளார். எனவே அமீர்குஸ்ரூ தரும் செய்தியை நாம் உண்மையெனக் கருதலாம்.

குபக்கினுடைய படையெடுப்பு அலாவுத்தீன் காலத்தில் மங்கோலியர் நடத்திய படையெடுப்புகளில் கடைசி படையெடுப்பாகக் கருதப்படுகிறது. அடிக்கடி இந்தியாவிற்குப் படைகளை அனுப்பி வந்த தவாகான் 1306-ல் மரணமடைந்தார். அதையடுத்து டிரான்ஸ் ஆக்ஸியானுவில் குழப்பம் ஏற்பட்டது. மூன்று ஆண்டுகளில் மூன்றுகான்கள் அங்கு பட்டமேறினர் என்பதை நாம் அறிகிறோம். இந்த குழப்ப நிலையைப் பயன்படுத்திக்கொண்டு எல்லைப்புற படைத்தலைவர் காஜி மலிக்துக்ளக் ஒவ்வோர் ஆண்டும் சிந்துவைக் கடந்து காபூல், கஜினி, காந்தகார் ஆகிய இடங்களை தாக்கி கொள்ளையிட்டு திரும்பினர். தங்களுடைய எல்லைகளைக் காப்பாற்றுவதற்கு மங்கோலியர்கள் யாதொரு நடவடிக்கையையும் மேற்கொள்ளவில்லை. அதற்கு வேண்டிய தைரியமும் அவர்களுக்கில்லை என்று வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர்[1]. மூல்தானிலுள்ள ஜும்மா மசூதியில் காஜி துக்ளக் அரபு மொழியில் பொறித்து வைத்துள்ள எழுத்து மூலத்தின் வாயிலாக அவர் 29 முறை மங்கோலியருடன் போரிட்டு அவர்களைத் தோற்கடித்தார் என்பதையும் ஆகவேதான் அவருக்குக் காஜி என்ற பட்டம் அளிக்கப்பட்டதென்பதையும் அறிகிறோம்.

மங்கோலியரின் கொட்டத்தை அடக்கியது அலாவுத்தீனுடைய அருஞ்செயல்களுள் ஒன்றாகும் என்பதில் மாறுபட்ட கருத்து ஏதும் இராது. அவர் காலத்தில் டில்லிப்பேரரசின் வடமேற்கெல்லை ரவி நதியிலிருந்து வடமேற்காக சிந்து நதிக்குத் தள்ளப்பட்டது. ரவி நதிக்கு வடக்கே மங்கோலியர்கள் ஏற்படுத்தியிருந்த ஆதிக்கம் அதன் விளைவாக அழிவுற்றது. காபூல், கஜினி ஆடிய இடங்களைத் தம்முடைய கட்டுக்குள் கொண்டுவந்து மங்கோலியர்களுடைய ஆபத்திலிருந்து இந்தியாவை மீட்ட பெருமை அவரையே சாரும்.

இனி மங்கோலியருடைய தோல்விக்குரிய காரணங்களை சிறிது கவனிப்போம். செங்கிஸ்கானுடைய மறைவிற்குப் பிறகு அவருடைய வழித்தோன்றல்கள் மங்கோலியப் பேரரசைத் தமக்குள் பங்கு போட்டுக்கொண்டனர் என்பதை முன்னர் கண்டோம். அவர்களுக்குள் ஏற்பட்டிருந்த பூசல்களின் விளைவாக மங்கோலியர் தம்

[1] Barani, 322-23.

முழு கவனத்தையும் பலத்தையும் இந்தியாவின் மீது செலுத்த இயலாமல் போயிற்று. அலாவுத்தீன் காலத்தில் மங்கோலியப் படையெடுப்புகள் யாவும் தவாகானுல் ஏற்பாடு செய்யப்பட்டவை யாகும். தவாகான் சீனுவில் ஆட்சி செய்து வந்த கான்களுடன் எந்நேரமும் போரிட வேண்டிய நிலே ஏற்பட்டிருந்தது. மத்திய ஆசியாவில் மட்டும் அவர் 40 சண்டைகளில் கலந்து கொண்ட தாகக் கூறப்படுகின்றது. பங்காளிச் சண்டைகள் டில்லிப் பேர ரசைக் காப்பாற்றின என்று பேராசிரியர் ஹபீப் அவர்கள் கூறியுள் ளார்கள்.[1] எல்லா மங்கோலியத் தலைவர்களும் ஒன்று சேர்ந்து இந்தியாவின்மீது படை நடத்தியிருப்பார்களேயாளுல் நம் இந்திய நாட்டு வரலாறு வேறுவிதமாக அடைந்து விட்டிருக்கும் என்பதில் ஐயமில்லே.

மங்கோலியர்கள் தம் முழுபடைப் பலத்தைக்கொண்டு இந்தி யாவைத் தாக்கவில்லே. 200,000 பேர்கள், 120,000 பேர்கள் படை யெடுத்து வந்தனர் என்று வரலாற்றுசிரியர்கள் நமக்குக் கூறுகின்ற னர். அத்தனே பேர்கள் வந்தார்களா என்பது ஐயத்திற்குரியதாகும். மேலும் அத்தனே பேர்களும் போர் வீரர்களா என்பது சந்தேகத் திற்குரியதாகும். ஏனெனில் பெண்கள், குழந்தைகள் பலர் சிறை பட்டனர் என்பதாக நாம் கேள்விப்படுகிறோம். எனவே 200.000 பேர்கள் என்பது போர்வீரர்கள் மட்டுமன்று; பெண்கள், குழந்தை கள், வயோதிகர் போன்றோரும் சேர்ந்து வந்திருத்தல் வேண்டும் என்பது தெளிவாகிறது. பலர் கொள்ளேயடிக்க வந்தனரேயன்றி போர்புரிவதற்கல்ல. மங்கோலியர்கள் தங்கள் பெண்டு பிள்ளே களுடன் வந்தமையால் அவர்களுடைய போர்த்திறன் பெருமள வில் பாதிக்கப்பட்டது.

அலாவுத்தீனுடைய போர்த்திறன் மங்கோலியர் தோல்விக்கு ஒரு முக்கிய காரணமாகும். எத்தகைய இன்னல் வரினும் மனம் தளராதவர். அஞ்சா நெஞ்சம் படைத்தவர்; மேற்கொண்ட காரியத்தை விடாப்பிடியாக இருந்து சாதிக்கும் ஆற்றல் மிக்கவர். திறமைமிக்கப் படைத் தலேவர்கள். அவருக்கு உதவியாக நின்றது மற்ருெரு சிறப்பாகும். இவையனேத்தும் ஒருங்கிணேந்து மங்கோ லியர் தோல்விக்கு வழி வகுத்தன.

விளேவுகள் : முதலில் டில்லி அரசர்கள் தங்களுடைய ஆட்சிப் பகுதிகள் சிலவற்றை இழந்தனர். இந்துகுஷ் மலே அடிவாரத்தி லிருந்து ரவி நதிக்கரை வரையிலான பகுதிகளே டில்லி அரசர்கள்

[1] Khazani. Habib Trs. 25

இழந்தனர். ஆனால் பின்னர் சிந்து நதி டில்லி அரசின் வட மேற்கு எல்லையாக அமைந்துவிட்டது.

மங்கோலியப் படையெடுப்பு டில்லி அரசர்களை ஏனைய விஷயங்களில் தங்களுடைய முழுக் கவனத்தைச் செலுத்தா வண்ணம் தடை செய்தது. இந்தியாவிலிருந்த ஏனைய நாடுகளை வெல்வது, வென்ற நாடுகளைத் தொடர்ந்து தங்களுடைய ஆதிக்கத்தில் வைத்திருப்பதற்காக நடவடிக்கைகளை மேற் கொள்ளுதல் போன்ற பணிகள் தடைபட்டன.

வடமேற்கெல்லையைப் பாதுகாக்கவேண்டி நியமிக்கப்பட்ட அதிகாரிகளுக்கு மேலான அதிகாரங்கள் வழங்கவேண்டிய அவசியத்தை மங்கோலியப் படையெடுப்புகள் தோற்றுவித்தன. அவ்வதிகாரிகள் டில்லி அரசைக் கைப்பற்றும் அளவிற்கு அதிகா ரங்களை அனுபவித்தனர். கல்ஜி, துக்ளக் அரச குலங்களைத் தோற்றுவித்தவர்கள் மேற்கு எல்லைப் பகுதிகளின் காவலர்களாக ஒரு காலத்தில் இருந்தனர் என்பதை ஈண்டு நாம் கவனித்தல் அவசியமாகும்.

மைய அரசின் பலத்தைக் குறைக்க மங்கோலியப் படை யெடுப்பு ஒரு காரணமாக அமைந்திருந்தது. அடிக்கடி ஏற்பட்ட படையெடுப்புகளைச் சமாளிக்க அரசர் தமது பிரபுக்களின் உதவியைக் கோரி எந்நேரமும் காத்திருக்க வேண்டியதாயிற்று. அது பிரபுக்களின் பலத்தைப் பெருக்கமடையச் செய்துவிட்டது.

அலாவுத்தீன் காலத்தில் இராணுவத் துறை மேம்பாடுற மங்கோலியப் படையெடுப்பு ஒரு காரணமாகும். இராணுவத் தினரின் எண்ணிக்கை உயர்த்தப்பட்டது. அவர்கள் வசதியாக வாழ சில பொருளாதார நடவடிக்கைகளை அரசு மேற்கொண்டது. இராணுவம் நிருவாக அமைப்பின் முக்கிய ஊன்றுகோலாக இருந்தது.

மங்கோலியர்கள் ஆப்கானிஸ்தானம், பாரசீகம் ஆகிய இடங்களைக் கைப்பற்றிவிட்டமையால் டில்லியில் ஆண்டு வந்த முஸ்லிம்கள் இந்தியாவிற்கு வெளியேயிருந்த முஸ்லிம் அரசர் களுடன் நேரடித் தொடர்பு கொள்ள இயலாது போயிற்று. ஆகவே தங்களுடைய கவனம் முழுவதையும் இந்தியாவிலேயே செலவிட வேண்டியதாயிற்று. இந்தியாவைத் தங்களுடைய தாயகமாகக் கருதத் தலைப்பட்டனர். அதன் விளைவாக இஸ்லாமிய கலாச்சாரமும், இந்து கலாச்சாரமும் ஒன்றோ டொன்று கலந்து உறவாட வழி ஏற்பட்டது. மேலும் பாரசீகம்

போன்ற பகுதிகளில் வாழ்ந்து வந்த முஸ்லிம் அறிஞர்கள், கலைஞர்கள் பலர் மங்கோலியரிடமிருந்து தப்பித்துக்கொள்ள இந்தியாவிற்கு வந்து டில்லியில் புகலிடம் நாடினர்கள். அவர்களின் வருகை டில்லியை ஒரு கலாகேந்திரமாக மாற்றிவிட்டது.

**தென்னிந்திய படையெடுப்பு**

அலாவுத்தீன் காலத்தில் தக்காணத்தில் நான்கு பெரிய அரசுகள் அமைக்கப்பட்டிருந்தன. விந்திய மலைக்குத் தெற்கே தேவகிரி அரசு நிறுவப்பட்டிருந்தது. அதற்கு வடக்கிலும் வடமேற்கிலும் முறையே மாளவமும், குஜராத்தும் எல்லை நாடுகளாக அமைந்திருந்தன. தேவகிரிக்குக் கிழக்கில் வாரங்கல் அரசும் தெற்கே துவாரசமுத்திர அரசும் நிறுவப்பட்டிருந்தன. மேற்குத் தொடர்ச்சி மலை அதனுடைய மேற்கெல்லையாக இருந்தது. அதனை யாதவர்கள் ஆண்டு வந்தனர். யாதவர்கள் முதலில் சாளுக்கிய அரசர்களுடைய ஆதிக்கத்திற்குட்பட்ட சிற்றரசர்களாக இருந்தனர். 12ஆம் நூற்றாண்டின், இறுதியில் பில்லம யாதவர் என்பவர் சாளுக்கியர் மேலாதிக்கத்தை ஒழித்துத் தனி யாதவ அரசு ஒன்றை அமைத்தார். பதிமூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆட்சி செய்து வந்த சிங்கண என்பவர் பல பகுதிகளை வென்று யாதவ அரசின் எல்லையை விரிவாக்கினர். 1271-ல் இராமச்சந்திர தேவா பட்டமெய்தினர். அக்காலத்தில் தக்காண அரசர்களுள் அவரே மிகச் சிறந்தவராகக் கருதப்பட்டார். அவர் காலத்தில் தேவகிரி செல்வச் செழிப்புடன் சிறந்து விளங்கியது. ஜலாலுத்தீன் காலத்தில் அலாவுத்தீன் தேவகிரியைத் தாக்குவதற்கு அதனுடைய பெருஞ்செல்வமே காரணமாகும்.

தேவகிரிக்குக் கிழக்கில் தெலிங்கானா அல்லது வாரங்கல் அரசு அமைக்கப்பட்டிருந்தது. 12ஆம் நூற்றாண்டின் இறுதியில் வாரங்கலை ஆண்டு வந்த கணபதி என்ற அரசர் பல நாடுகளை வென்று வாரங்கலின் எல்லையை விரிவுபடுத்தினர். முஸ்லிம்கள் வாரங்கலின் மீது படையெடுத்தபோது அதனை பிரதாபருத்ர தேவா என்பவர் ஆண்டு வந்தார்.

தெலிங்கானாவிற்கு மேற்கேயும், வட மேற்கிலும் ஹோய்சல அரசு அமைந்திருந்தது. அதனுடைய தலைநகர் துவாரசமுத்திரம் என்பதாகும். சோழப் பேரரசின் வீழ்ச்சி ஹோய்சலர்களின் அரசு தெற்கே திருச்சி வரை பரவ துணை செய்தது.

தென்னிந்தியாவின் தென் கோடியில் பாண்டிய அரசு நிறுவப்பட்டிருந்தது. பதிமூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மாற

வர்மன் சுந்தர பாண்டியர் பாண்டியப் பேரரசுக்குப் புத்துயிர் கொடுத்தார். பதிமூன்றும் நூற்றுண்டின் பிற்பகுதியில் ஆட்சி செலுத்திய ஜடாவர்மன் சுந்தரபாண்டியர் சோழர், சேரர், ஹோய்சலர் ஆகியோரை வென்று தமது அரசைப் பெரிதாக்கினர். அவருக்குப் பின் பட்டமெய்திய மாறவர்மன் குலசேகரன் கி.பி. 1310 வரை ஆட்சி செலுத்திஞர். இரண்டாவது பாண்டியப் பேரரசைச் சார்ந்தவர்களுள் இவரே தலைசிறந்தவராகக் கருதப் படுகிறுர். மதுரை அவரது தலைநகராக விளங்கியது. அவருக்கு இரு பிள்ளைகள் இருந்தனர். அவர்களுள் ஒருவர் சுந்தரபாண்டியர்; மற்றவர் வீர பாண்டியர் என்றழைக்கப்பட்டனர். பின்னவர் முறைப்படி பிறந்தவரல்லர். எனினும் திறமை மிக்கவர். எனவே தமக்குப்பின் அவரே பட்டத்திற்குரியவர் என்று குலசேகர மன்னர் அறிவித்தார். அது சுந்தர பாண்டியரின் பொறுமையைக் கிளறி விட்டது. ஆகவே கி.பி. 1310-ல் சுந்தர பாண்டியர் தமது தந்தையைக் கொன்றுவிட்டார். அதன் பிறகு இரு சகோதரர் களும் மணிமுடியைப் பெற போரில் ஈடுபட்டனர்.

மேற்கூறியவற்றிலிருந்து ஒரு பெரிய உண்மை புலப்படுகிறது. அதாவது தென்னிந்திய அரசர்கள் ஒருவருடன் ஒருவர் எந் நேரமும் சண்டையிட்டு இருந்தனர். மண் ஆசை அச் சண்டை களுக்கு முக்கிய காரணமாக இருந்தது. அதுமட்டுமின்றி பாண்டிய நாட்டிலே 1310ஆம் ஆண்டில் வாரிசுரிமைப் போர் தொடங்கி யிருந்தது. 'ஊர் இரண்டுபட்டால் கூத்தாடிக்குக் கொண் டாட்டம்' என்ற பழமொழிக்கிணங்க சுல்தான் அலாவுத்தீன் இவ்வரிய வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு தமது மேலா திக்கத்தைத் தென்னிந்தியாவில் நிலைநாட்ட முற்பட்டதில் வியப் பென்ன இருக்கிறது?

அலாவுத்தீனுடைய தக்காணப் படையெடுப்புக்கு மற்றெரு காரணம் தக்காணத்தின் செல்வச் சிறப்புமாகும். தக்காணத்தில் பயணம் மேற்கொண்ட அன்னியர் பலர் அதைப் பற்றியக் குறிப் புகளை விட்டுச் சென்றுள்ளனர். தென்னிந்திய அரசர்கள் தங்க ளுடைய முன்னேர்கள் விட்டுச் சென்ற பொன் ஆபரணங்களை அழித்துவிடாமல் பாதுகாத்து வந்தனர். அதுமட்டுமின்றி தம் முன்னேர்களைப் போல தாமும் பொன் அணிகலன்களை புதிதாகச் செய்து தம் முன்னேர்கள் விட்டுச் சென்ற அணிகலன்களுடன் சேர்த்துவிடுவது வழக்கமாகயிருந்தது. அதன் விளைவாக அவர் களுடைய குடும்பச் சொத்து மேன்மேலும் வளர்ந்துகொண்டே யிருந்தது. பாண்டிய மன்னர்கள் மிக நேர்த்தியான பெரிய முத்துக்களை தங்களிடமே வைத்துக்கொண்டனர். அந்நிய நாடு

களுக்கு அவற்றை எடுத்துச் செல்ல அவர்கள் அனுமதிக்கவில்லை. அதன் பயனாகவும் அவர்களிடம் பெருமளவு சொத்து சேர்ந்து விட்டது. தக்காணத்தின் செல்வச் சிறப்பை அலாவுத்தீனே நேரில் கண்டறிந்தார். ஜலாலுத்தீன் காலத்தில் அவர் தேவ கிரியைத் தாக்கி பெரும் செல்வத்தைக் கொள்ளையடித்து வந்தார் என்று நாம் முன்னரே பார்த்துள்ளோம்.[1]

தக்காணப் படையெடுப்பு மேற்கொள்ளுதற்குரிய வாய்ப்பு வளங்கள் பல அவர் பெற்றிருந்தார். 4,75,000 பேர்கள் கொண்ட படையொன்று அவரிடமிருந்தன. படை வீரர்கள் குறித்த காலத்தில் ஊதியத்தைப் பெற்று வந்தனர். அவர்கள் வசதியுடன் வாழ வழிவகுக்கப்பட்டது. நவீன போர்க் கருவிகளையும் சிறந்த பயிற்சியையும் பெற்றிருந்தனர். வட இந்தியா முழுவதிலும் அலாவுத்தீனுடைய ஆதிக்கத்தை எதிர்த்து நிற்கத் தக்கவர் எவரு மிலர். மங்கோலியரிடமிருந்து வந்த ஆபத்திலிருந்து டில்லி முழுமையாகக் காப்பாற்றப்பட்டுவிட்டது. மங்கோலியர்கள் ஆதிக்கம் பெற்றிருந்த பகுதிகளில் டில்லிப் படைகள் செல்லு மளவிற்கு அவர்கள் முறியடிக்கப்பட்டுவிட்டனர். பிரபுக்களின் செல்வாக்கு ஒழிக்கப்பட்டுவிட்டது. அதன் விளைவாக சுல்தா னுடைய அதிகாரம் பெருகியது. வலுவான ஓர் ஆட்சி டில்லியில் நிறுவப்பட்டமையால் நாட்டில் அமைதி நிலவியது. ஆகவே சுல்தான் தமது கவனத்தை வேறு திசையில் திருப்ப வாய்ப்பு ஏற்பட்டது.

**தேவகிரி படையெடுப்பு:** 1296ஆம் ஆண்டில் அலாவுத்தீன் தேவகிரியின்மீது முதல்முதலாகப் படையெடுத்துச் சென்று, தேவ கிரி அரசரான இராமச்சந்திர தேவாவை அடிபணியச் செய்தார் என்பதை முன்னரே பார்த்தோம். அதுபோது ஆண்டுதோறும் டில்லி அரசருக்கு கப்பம் செலுத்தி வருவதாக தேவகிரிமன்னர் ஒப்புதல் தெரிவித்தார். இரண்டு மூன்று ஆண்டுகளாக அவர் கப்பம் செலுத்துவதை நிறுத்திவிட்டார் என்று பரணி கூறு கின்றார்.[2] ஆனால் அதற்கான காரணங்களை அவர் நமக்களிக்க வில்லை. எனினும் அக்காரணங்களை ஒருவாறு ஊகித்தறியலாம். 1296ஆம் ஆண்டிற்குப் பிறகு அலாவுத்தீன் தக்காணத்திற்குச் செல்லவில்லை. எனவே தக்காணத்தைப் பற்றிய நினைவே அலாவுத்தீனிடமிருந்து அகன்றுவிட்டிருக்கும் என்று இராமச் சந்திரதேவா எண்ணியிருக்கக்கூடும். அதற்கேற்ப குஜராத்தி

[1] Yule, Ser Macro Polo, II, 323.

[2] Barani, 326

லிருந்து தப்பியோடிய கரன் தேவகிரியில் புகலிடம் நாடியபோது அலாவுத்தீன் எந்தவிதமான மறுப்பையும் தெரிவிக்கவில்லை. அதைத்தடுக்க எவ்விதமான நடவடிக்கையையும் மேற்கொள்ள வில்லை. மேலும் டில்லியானது தேவகிரியிலிருந்து வெகுதூரத்தில் இருந்தமையாலும், மங்கோலியர், இராஜபுத்திரர்கள் ஆகியோர் கொடுத்துவந்தத் தொல்லைகளை அவர் சமாளிப்பதில் தம் கவனத்தைச் செலுத்தியிருந்தமையாலும், அந்நேரத்தில் தாம் கப்பம் கட்டுவதை நிறுத்திவிடுவதால் தமக்கு எந்த ஆபத்தும் விளையாது என்று இராமச்சந்திரதேவா எண்ணியிருக்கக்கூடும்.[1]

இசாமி வேறுவிதமான விளக்கத்தை நமக்கு அளித்துள்ளார். இராமச்சந்திரதேவா டில்லிசுல்தானுக்கு என்றென்றும் கீழ்ப் படிந்து இருக்க விரும்பினார். ஆனால் அவரது மகனுக்கு அவ்வாறு நடக்க விருப்பமில்லை. எனவே மக்களின் துணைகொண்டு தம்மு டைய தந்தையின் விருப்பத்திற்கு மாறாக தேவகிரியின் சுதந் திரத்தை மீண்டும் நிலைநாட்டும் முயற்சியில் அவர் ஈடுபட்டார். அதனால் இராமச்சந்திரா கோபமடைந்து, சுல்தானுடைய உதவியை நாடினார்.[2] படையெடுப்பின்போது ஏற்பட்ட நிகழ்ச் சிகள் இக்கருத்தை வலியுறுத்தும் வகையில் அமையவில்லை என் பதால் இக்கருத்தை சில வரலாற்றாசிரியர்கள் ஏற்க மறுக்கின் றனர்.[3] போரில் ஒருவேளை தேவகிரி தோற்றுப்போனால் சுல்தான் கடுமையான நிபந்தனைகளை விதிக்க முற்படக்கூடாது என்பதற் காக இந்த வகையான ஒரு நாடகத்தை தேவகிரிமன்னர் ஆடினார் என்ற கருத்தும் நிலவி வருகிறது.[4]

அலாவுத்தீன் பேரரசுக் கொள்கையினைக் கடைபிடித்து வந்தார் என்பதை எவரும் மறுக்க இயலாது. வட இந்தியாவில் தம் ஆதிக்கத்தை நிலை நாட்டிவிட்ட பிறகு எஞ்சியிருந்தது தக்காணமேயாகும். மேலும் தேவகிரியிலிருந்து பெற்ற செல்வமே அவர் சுல்தானாக முடிசூட்டிக் கொள்ளுவதற்கு பெரும் உதவியாக இருந்தது. அதன் துணையால் பெற்ற மணிமுடியினைத் 'தொடர்ந்து தம்மிடம் வைத்திருக்க அதனுடைய செல்வத்தின் துணையை மீண்டும் நாடியதில் வியப்பேதும் இல்லை. மண்ணாசையும் பொன் னாசையும் கொண்ட சுல்தானுக்கு தேவகிரிமன்னர் கப்பம் செலுத் தாமை போர்புரிவதற்கு ஒரு சாக்குப் போக்காக அமைந்து விட்டது.

[1] Dr. K. S. Lal, op.cit, 233

[2] Futuh, 274-76

[3] Dr. K. S. Lal, *I bid*

[4] HCIP, VI, 80.

தேவகிரி படையெடுப்பிற்காக 30,000 குதிரை வீரர்கள் கொண்ட படை திரட்டப்பட்டது. அப்படைக்கு மலிக்காபூர் தலைவராக நியமிக்கப் பட்டார். மலிக்காபூர் இப்போது அரசருடைய அன்பிற்குரிய ஓர் அதிகாரியாக இருந்தார். அவருடைய திறமையை அனைவருக்கும் உணர்த்த வேண்டும் என்பது அலாவுத்தீனுடைய ஆசை. மங்கோலியப் படையெடுப்பின் போது அவர் தம் போர்த்திறமையை நன்கு வெளிப்படுத்தி விட்டார். மற்றுமொரு வாய்ப்பினை அவருக்கு நல்கி அவரே ஈடு இணையற்ற அதிகாரியாக ஆக்கிவிட்டால் தமக்கு நல்லது என்று அலாவுத்தீன் எண்ணினர். காபூருக்கு உதவியாக போர் அமைச்சராக இருந்த சிராஜ்உத்தீன் குவாஜா ஹாஜி அவருடன் சென்றார். அவர் கடுமையாக உழைக்க அஞ்சாதவர்; திறமையானவர். அயின் உல்மூல்க் மூல்தானியும், குஜரத்தின் ஆளுநர் அலப்கானும் மலிக்காபூருடன் சேர்ந்து தேவகிரியைத் தாக்கும்படி சுல்தான் அவர்களுக்குக் கட்டளையிட்டார். அவர்கள் அனைவரும் காபூரின் ஆணையின்படி நடக்க வேண்டும் என்றும் எல்லா அதிகாரிகளும் ஒவ்வொரு நாளும் காபூருக்கு மரியாதை செலுத்தி அவரிடமிருந்து ஆணைகளைப் பெற்றுச் செல்ல வேண்டும் என்றும் அலாவுத்தீன் ஏற்பாடு செய்தார். தேவகிரிக்கு அனுப்பப்பட்ட படை யாதவ அரசரைத் தண்டித்து, அவரிடமிருந்து 3 ஆண்டுகள் செலுத்தப் பெறுமல் இருந்த கப்பப் பணத்தை வசூலித்து வருவதுடன், குஜரத் மன்னரின் முன்னுள் மனைவியும், அப்போது அலாவுத்தீனுடைய அந்தப்புர மங்கைகளுள் ஒருவராக இருந்த கமலா தேவியின் மகள் தேவால் தேவியையும் பிடித்துக் கொண்டுவர வேண்டும் என்று சுல்தான் கட்டளையிட்டிருந்தார். குஜரத் படையெடுப்பின்போது இராஜகரன் தம் நாட்டைவிட்டு ஓட வேண்டிய நிலை ஏற்பட்டது என்றும் அப்போது அவரது மனைவி பகைவர்வசம் சிக்கினர் என்றும், அவர் அலாவுத்தீனுடைய அந்தப்புரத்தில் சேர்க்கப்பட்டார் என்றும் முன்னர் கண்டோம். தப்பியோடிய கரன் தேவகிரி அரசரிடம் புகலிடம் நாடினர். தேவகிரிமன்னர் அவரைத் தக்கபடி உபசரித்து தமது நாட்டின் ஒருபகுதியான பக்லாளுவை அவருக்குக் கொடுத்தார். நந்தர் பாரைத் தலைநகராகக்கொண்டு அதனை ஆண்டுவரலானர். அவருடைய மகளின் அழகில் மயங்கிவிட்ட தேவகிரி இளவரசர் அவளைத் திருமணம் புரிந்துகொள்ள விரும்பினர். ஆனல் இராஜபுத்திரப் பெண்ணை ஒரு யாதவத் தலைவருக்குக் கொடுக்க கரன் எளிதில் இசையவில்லை. அந்த நேரத்தில்தான் தேவகிரி மீது அலாவுத்தீன் போர் தொடுத்தார். அதைக் கேள்வியுற்றதும் கமலாதேவியின் மனம் சஞ்சலமடைந்தது. அவரை டில்லிக்குக் கொண்டு போகும்போது ஆறுமாதம் நிரம்பிய ஒருபெண் குழந்தை

அவருக்கிருந்தது. அவள்தான் இப்போது தேவால் இராணி என்ற பெயருடன் வனப்புமிக்க யுவதியாக வளர்ந்திருந்தாள். படையெடுப்பினுல் அவளுக்கு ஆபத்து விளையுமோ என்ற அச்சம் கமலாதேவிக்கு ஏற்பட்டது. ஆகவே அவர் சுல்தானை அணுகி தம் மகளை தம்மிடம் சேர்ப்பிக்குமாறு வேண்டினுர். கமலாதேவி யிடம் கொள்ளை ஆசை கொண்டிருந்த சுல்தான் தேவால் இராணியை எப்படியாவது கொண்டுவர வேண்டும் என்று தம் படைகளுக்கு ஆணையிட்டார்.

அக்காலத்தில் டில்லியிலிருந்து தக்காணம் செல்ல இரண்டு நேர்வழிகள் இருந்தன என்பதை அக்கால வரலாற்ருசிரியர்கள் தரும் குறிப்புகளிலிருந்து நாம் அறிகிருேம். அவற்றுள் ஒன்று யமுனை ஆற்றின் மேற்குக்கரையோரமாக ஆக்ரா வரை சென்றது. அங்கிருந்து அலகாபாத் சென்றது. பின்னர் அலகாபாத்திலிருந்து சாந்தேரி வழியாக ஹோசங்காபாத்தை அடைந்தது. பிறகு தென்மேற்குத் திசையாக விந்திய மலைகளின் ஊடாகச் சென்று எலிச்பூரை அடைந்தது. இங்கு பாதை மிகவும் குறுகலாக இருந்தது. ஆனுல் இப்பாதையின் வழியாகச் செல்வதால் நர்மதை ஆற்றை அதன் மேல் பாகத்தில் எளிதாகக் கடக்க இயலும். எலிச்பூரிலிருந்து தெற்கு நோக்கிச் சென்ருல் தேவ கிரியை அடையலாம். தெற்கு, பிறகு தென்கிழக்காகச் சென்ருல் வாரங்கலை அடையலாம். மற்ெருருவழி இராஜபுதனம் வழி யாகச் சென்றது. இராஜபுதனத்திலிருந்து மாளவத்திலுள்ள தார்வழியாகச் சென்று அங்கிருந்து தேவகிரி செல்ல இயலும்.

காபூர் தம் படை வீரர்களை தில்பத் என்னுமிடத்தில் கூட்டினுர். அங்கிருந்து தார் வழியாக தேவகிரிநோக்கிப் புறப் பட்டார். காடி சகுன் (Ghati Sagun) கணவாய் வழியாக தாரை அடைந்தார். அலப்கானும், அயின் உல்முல்க் மூல்தானியும் அவருடன் சேர்ந்து கொண்டனர். மாளவத்தைக் கடந்தபின்னர் காபூர் தூதுவர் ஒருவரை கரனிடம் அனுப்பி தேவால் தேவியைத் தம்மிடம் ஒப்படைக்குமாறு கேட்டார். கரன் அதற்கிசைய மறுத்துவிட்டார். எனவே காபூர் அலப்கானை பக்லானுவிற்கு அனுப்பிவைத்துவிட்டு தேவகிரி நோக்கி காபூர் புறப்பட்டார். இரண்டு மாதங்கள் கரன் பகைவரை எதிர்த்துப் போராடினுர். அந்த நேரத்தில் சிங்கனு தேவால் தேவியைத் தமக்கு மணமுடித்து வைக்குமாறு மீண்டும் கோரினுர். தமது சகோதரர் பில்லமாவை ஒரு சிறு படையுடன் கரனிடம் அனுப்பிப் பெண்கேட்கச் சொன்னுர். கரனைப் பின்தொடர்ந்து சென்ற அலப்கானுடைய படையின் ஒரு பகுதி விடுமுறைபெற்றுக் கொண்டு எல்லோரா

குகைகள் பக்கம் சென்றது. அப்போது தேவால் தேவியை தேவ கிரிக்கு அழைத்துச் சென்ற படையினை அவர்கள் கண்டனர். வழித்துணைப்படையை கரன் படையாக இருக்குமோ என்று சந்தேகித்து அதனை தாக்கினார்கள். அதுபோது தேவால் தேவி ஏறிச்சென்ற குதிரை அடிபட்டு கீழே விழுந்தது. தேவால் தேவியும் கீழே விழுந்தார். உடனே அவரைக் கைப்பற்றிக் கொண்டு முஸ்லிம் படைகள் அலப்கானிடம் ஒப்படைத்தார்கள். இதற்கிடையில் கரன் அலப்கானிடம் தோல்வியுற்று நாட்டை விட்டு ஓட நேர்ந்தது. அந்த நிலையில் தம் மகனை சிங்கனாவிற்கு திருமணம் செய்துகொடுக்க முடிவு செய்தார். பில்லமாவுடன் தேவால் தேவியை அனுப்பி வைத்தார். போகும் வழியில் தேவால் தேவியும் அவருடன் சென்ற வழித்துணைப் படையும் அலப்கானுடைய படையினர் கண்களில் தற்செயலாகப் பட்டு விட்டன. அவர்தான் தேவால் தேவி என அறிந்தபோது அலாப்கான் அளவற்ற மகிழ்ச்சியை எய்தினார். உடனே அவரை டில்லிக்கு அனுப்பிவைத்துவிட்டு மலிக்காபூருடன் சேர்ந்து கொள்ள தேவகிரி நோக்கிப் புறப்பட்டார்.

தேவகிரி அரசர் போருக்கு வேண்டிய ஏற்பாடுகளை மேற் கொள்ளுதற்கு முன்பாகவே மலிக்காபூர் தேவகிரியை அடைந்து விட்டார். எனவே தம்முழுபலத்துடன் பகைவர்களை எதிர்க்க வியலாத நிலையில் இராமசந்திர தேவா இருந்தார். இராமசந்திர தேவா அடிபணிந்தார். அவரது மகன் சில வீரர்களுடன் ஓடி விட்டாரென்று அமீர்குஸ்ரு கூறியுள்ளார். தக்காணத்திற்குச் சென்றதும் மலிக்காபூர் அங்கிருந்த மக்களை தம் பாதுகாப்பின் கீழ் கொண்டுவந்தாரென்றும் அங்கிருந்த மக்களுக்கு எந்தவித மான தீங்கும் நேராவண்ணம் பார்த்துக் கொண்டாரென்றும் மலிக்காபூரை எதிர்த்து நின்று போராடுவது மிகக் கடினமென் பதை அறிந்து தாமே நேரில் சென்று மலிக்காபூரிடம் நட்பு நாடி நின்றார் என்றும் பிரிஷ்டா கூறுகின்றார். சில யானையும், பெருமளவு செல்வத்தையும் எடுத்துக் கொண்டு காபூர் டில்லி திரும்பினார். போகும் போது இராமச்சந்திராவையும் தம்முடன் அழைத்துச் சென்றார். சுல்தானைக்கண்டு நேரடியாக அவர் அடிபணிய வேண் டும் என்பது காபூரின் நோக்கமாகும். தோல்வியுற்ற இராமச் சந்திர தேவாவை அலாவுத்தீன் தக்க மரியாதையுடன் வரவேற்றார். அவர் அரசவையில் புகும்போது முத்துக்களும், விலையுயர்ந்த மணிகளும் அவர் தலையின்மீது தெளிக்கப்பட்டன. ஆறுமாத காலம் அவர் அலாவுத்தீன் அரசபையில் தங்கியிருந் தார். அவருக்கும் சுல்தானுக்கும் வேறுபாடுகாணாத அளவிற்கு அவருக்கு மரியாதைகள் நடந்தன. ஒவ்வொரு நாளும் அவருக்கு

அளிக்கப்பட்ட கௌரவம் வளர்பிறைபோல் வளர்ந்து வந்தது என அமீர்குஸ்ரு கூறியுள்ளார். இறுதியில் அவருக்கு சுல்தான் ஒரு இலட்சம் பொன் தங்காக்களைக் கொடுத்தார். இசாமி இரண்டு இலட்சம் பொற்காசுகள் தரப்பட்டதாக எழுதியுள்ளார். ராய் ராயன் என்ற பட்டமும் அளிக்கப்பட்டது. அத்தகுதியை எடுத்துக்காட்டுதற்கு ஒரு வெண்குடையும் அளிக்கப்பட்டது. நவகரி என்ற குஜரத் மாவட்டம் அவருக்குப் பரிசாக வழங்கப் பட்டது. தமது நன்றியைக்காட்டும் வகையில் இராமசந்திரதேவா தமது மகள் ஜத்யாபலி (Jhatyapali) என்பவரை அலாவுத்தீனுக்கு மணமுடித்து வைத்தார். அதுமட்டுமன்றி தாம் உயிருடன் இருந்தவரை கப்பப்பணத்தை ஒழுங்காகக் கட்டி வந்தார். சுல் தானுடைய ஆணைகளை நிறைவேற்றி வைத்தார். அலாவுத்தீ னுடைய விசுவாசம் நிறைந்த நண்பராக தேவகிரி மன்னர் தம் வாழ்நாள் முழுவதும் நடந்துகொண்டு அதற்குப் பின்னால் ஏற் பட்ட முஸ்லிம் படையெடுப்புகளுக்கு தக்க உதவியை ஆற்றி வந்தார். இப்படையெடுப்பு கி. பி. 1306-ல் ஏற்பட்டது என்று பிரிஷ்டா கூறுகிறார். அமீர்குஸ்ரு 1307ஆம் ஆண்டு நடை பெற்றது என்றும் பரணி 1308-ல் நடைபெற்றது என்றும் கூறியுள்ளார்கள்.

இராமச்சந்திரதேவாவை அலாவுத்தீன் நடத்திய விதம், அவருக்கு காட்டிய மரியாதை இவையாவும் அக்காலத்தவரை வியப்பில் ஆழ்த்தியிருக்கக்கூடும். தோற்றுப்போன பகைவர் களிடம் கடுமையாக நடந்து கொள்வது அவரது வழக்கமாகும். அவ்வாறிருக்க இராமச்சந்திர தேவாவிற்கு ஏன் அந்தவகையான உபசரிப்பு அளிக்கப்பட்டது என்ற வினா எழக்கூடும். அதற்கு ஒரே விடையைத்தான் நாம் தர இயலும். தேவகிரியிலிருந்து கொண்டுவந்த பொன்னையும் பொருளையும் பயன்படுத்தி இந்துஸ் தானத்தை அலாவுத்தீன் கைப்பற்றினார் என்று முன்னர் கண் டோம். வெளிநாடுகளிலிருந்து வந்த ஆபத்துக்கள், உள்நாட்டில் ஏற்பட்ட கலவரங்கள் ஆகியவற்றிலிருந்து தாம் பெற்ற நாட்டைக் காப்பாற்றுவதற்கு ஒரு பெரும் படையைத் திரட்டினார். அப் படையை வைத்துப் பராமரிக்க அவருக்குப் பெருஞ் செல்வம் தேவைப்பட்டது. அச்செல்வத்தைத் தக்காண நாடுகளிலிருந்து பெற எண்ணினார். ஆகையால் தக்காண அரசர்களை பொன் கொடுக்கும் கறவைமாடுகளாகப் பயன் படுத்த விருப்பங் கொண்டார்.[1] இதுவே நாம் எழுப்பிய வினாவிற்குத் தக்க விடை

[1] Aiyangar, S. India & her Muhammadan Invaders, p. 87

யாகும். தக்காணத்தில் அவர் கையாண்ட கொள்கையினைப் பற்றி பின்னர் விரிவாக கவனிக்கலாம்.

வாரங்கல் படையெடுப்பு : வாரங்கல் படையெடுப்பு 1309ஆம் ஆண்டு அக்டோபர் 31ஆம் நாள் தொடங்கப் பட்டது. சுல்தானுடைய படைகள் வெகுதூரம் செல்ல வேண்டியதாக இருந்தமையாலும், இதுவரை முஸ்லிம் படைகள் செல்லாத இடமாக இருந்தமையாலும் படைபுறப்படுவதற்கு முன்னர் தக்க அறிவுரைகளை சுல்தான் காபூருக்கு அளிக்க முற்பட்டார். "நீ வெகுதூரத்திலுள்ள நிலப்பகுதிக்கு செல்ல இருக்கிறாய். வாரங்கலைப்பற்றி ருத்ரதேவாவைத் தோற்கடிக்க உன் முழு பலத்தையும் செலவிடவேண்டியதாக இருக்கும். ஆனால் வாரங்கல் அரசர் தம்முடைய செல்வம், யானைகள், குதிரைகள் ஆகியவற்றை இழக்க ஒப்புக்கொண்டு, வருங்காலத்தில் கப்பம் கட்டுவதாக வாக்குறுதி அளித்தால் அந்த ஏற்பாட்டினை நீ ஒப்புக் கொள்ள வேண்டும். உன்னுடைய புகழை நிலை நாட்டுவதற்காக அவர் உன் முன்னர் மண்டியிடும்படி வற்புறுத்தவோ அல்லது டில்லிக்கு அவரை அழைத்துவரவோ முற்படக்கூடாது. ஏனைய மலிக்குகள், அமீர்கள் ஆகியோரிடம் தக்கவாறு நடந்துகொள். பெரிய படைத்தலைவர்களுக்கு மரியாதைகொடு; குவாஜா ஹாஜியையும் மற்ற மலிக்குகளையும் கலந்தாலோசியாமல் எந்த போர் நடவடிக்கையையும் மேற்கொள்ளாதே. படைவீரர்களிடம் அன்பாக இரு. தேவையில்லாமல் கடுமையாக நடக்கலாகாது, கொடூரச் செயல்களில் ஈடுபடக்கூடாது. படையில் கலகம் உண்டாக்கவல்ல செய்கையில் ஈடுபடலாகாது. சிறு தவறுகள் ஏற்படும்போது அவற்றைக் கண்டும் காணாதது போல் நடந்துகொள். கையாடல்களையும் கவனியாதவாறு இருந்துவிடு; அதிகாரிகளிடம் காணப்பெறும் நற்பண்புகளையும் தீயப்பண்புகளையும் பற்றி முழுமையாக நீ தெரிந்துகொள். அமீர்கள் கூட்டங்கள் போடுவதையும், ஒருவருடைய பாசறைக்கு மற்றவர் செல்வதையும் அனுமதிக்காதே. அவர்களிடம் பக்குவமாக நடந்து கொள்ள வேண்டும். தைரியத்தையும், கிளர்ச்சி மனப்பான்மையும் அவர்களிடம் தோன்றுமளவிற்கு அவர்களிடம் கனிவாக இருக்கக் கூடாது. உனது பகைவர்களாக மாறி உன்னை அவர்கள் வெறுக்குமளவிற்கு நீ அவர்களிடம் கடுமையாக நடந்து கொள்ளாதே. பொன், வெள்ளி நீங்கலாக ஏனைய பொருட்களில் ஐந்தில் ஒரு பகுதியைப் பெறுவதில் மிகவும் கடுமையாக இருக்காதே. தாம் கைப்பற்றிய ஒருசில அடிமைகளையும் குதிரைகளையும் தாமே வைத்துக்கொள்ள ஓர் அமீர் விருப்பப்பட்டால் அவற்றை அவரிடமே விட்டு விடு; தமக்காகவோ அல்லது தம்முடைய வீரர்

களுக்காகவோ ஒரு மலிக் அல்லது ஓர் அமீர் கடன்கேட்டால் ரசீது பெற்றுக்கொண்டு அவருக்கு முன் பணம் கொடு. ஓர் அதிகாரி ஒரு படை வீரமுடைய குதிரை திருட்டுப்போனாலும் சரி அல்லது போரில் இறக்கநேர்ந்தாலும் சரி அல்லது வேறு காரணத்தால் அழிய நேரினும் சரி அரசாங்க லாயத்திலிருந்து அதைவிட மேலான குதிரையை அவருக்குக் கொடு. ஆனால் குவாஜா ஹாஜியிடம் கூறி அவ்வாறு இழக்கப்பட்ட குதிரைகள் பற்றிய கணக்குகளை தமது அலுவலக பதிவேடுகளில் குறித்து வைக்கச்சொல். ஏனெனில் அரசாங்க வேலைகளுக்கு அது மிகமிக அவசியமாகும்.'' என்றவாறு அலாவுத்தீன் மலிக்காபூருக்கு அறிவுரை வழங்கினார்[1].

அதுமட்டுமின்றி தம்படையின் நடமாட்டங்களைப் பற்றிய செய்திகளை அவ்வப்போது அறிந்து கொள்ளுதற்காக வழக்கமாக மேற்கொள்ளப்பட்ட ஏற்பாடுகளை அவர் செய்தார். தில்பத்தில் ஒரு தானுவை அமைத்தார். அதே போன்று முக்கியமான இடங்களில் தானுக்கள் அமைக்க ஏற்பாடு செய்தார். ஒவ்வொரு தானுவிலும் வேகமாக ஓடக்கூடிய குதிரைகள் வைத்திருக்க ஆணையிட்டார். ஒரு தானுவிற்கும் படைமுகாமிற்கும் இடையே அரை காஸ் அல்லது கரோ தூரத்திற்கு ஓர் அஞ்சல் கொண்டோடுபவர் வீதம் வழிநெடுக பல அஞ்சல் கொண்டோடுபவர் உட்கார்ந்திருந்தனர் ஒவ்வொரு தானுவிலும் செய்தி எழுத்தர்கள் இருந்தனர். அஞ்சல் கொண்டோடுபவரிடமிருந்து பெறப்பட்ட செய்தியை அவர் குறித்துக் கொண்டு உடனே அதனை சுல்தானுக்கு அனுப்பிவைப்பார். இந்த ஏற்பாட்டின் விளைவாக சுல்தானுடைய படை எங்கு, என்ன செய்து வருகிறது என்பதை ஒவ்வொரு நாளும், தவறினால் மறுநாள் அல்லது அதற்கடுத்தநாள் சுல்தான் அறியலானார். அதேபோன்று படைவீரர்களுக்கும் சுல்தானுடைய உடல் நலம் போன்ற செய்திகளை அறியவும் முடிந்தது. மேலும் தவறான வதந்திகள் டில்லியிலோ அல்லது போர் முனையிலோ பரவ வழியில்லாது போயின.

சுல்தான் கருணையுடன் வழங்கிய செந்நிற விதானத்துடனும் அதிர்ஷ்டக் குதிரைகளுடனும் வாரங்கல் நோக்கிப் புறப்பட்ட மலிக் காபூர் முதலில் ரேவாரியை அடைந்தார். படைகளை நடத்திச் சென்ற வழியைப் பற்றிய விவரங்களை அமீர் குஸ்ரு வழங்கியுள்ளார். ஆனால் அவர் குறிப்பிட்டுள்ள பட்டணங்களை இன்றும் நாம் காண இயலாது. அவர் கொடுத்துள்ளப் பட்டணங்களையும் ஆறுகளையும் தற்போதுள்ளவற்றுடன்

[1]. Barani 327, 328.

ஒப்பிட்டு ஒன்றென உறுதி படுத்துவது மிகக்கடினமாக உள்ளது. எனினும் தற்போதுள்ள நிலையில் அமீர்குஸ்ரு குறித்துக்காட்டியுள்ள வழியிலே அவர் சென்றிருத்தல் வேண்டும் என்பதை ஓரளவு உறுதியாகக் கூறலாம். ஒன்பதுநாள் படையை நடத்திச் சென்ற பின்னர் மசூத்பூரை அடைந்தார். நவம்பர்மாதம் 13ஆம் நாள் படை மீண்டும் புறப்பட்டது. மழையின் காரணமாக சாலை பல இடங்களில் அரிக்கப்பட்டு விட்டன. அதனால் போகும்வழி மேடும் பள்ளமுமாக இருந்தது. மக்கள் நடமாட்டம் அற்ற அவ் வழியை அமீர்குஸ்ரு 'நரகத்தின் கூர்முனைக் கத்திப்பால' (Razar bridge & Hell)திற்கு ஒப்பிட்டுள்ளார். ஆறு நாட்களில் ஐந்து ஆறுகளை நீரில் இறங்கிக் கடந்து சென்றனர் அந்த ஐந்து ஆறுகளாவன; ஜூன், சாம்பல், குன்வாரி, பினுஸ், போஜி. ஜூன் என்பது சாம்பலில் கலக்கும் ஒரு சிறு ஆறு என்று அய்யங்கார் கூறியுள்ளார். சம்பல் ஆறு அனைவருக்கும் தெரிந்ததே. குன்வாரி என்பது இன்று குவாரி என்ற பெயர் பெற்றுள்ளது. பினுஸ் அல்லது நீயாஸ் போஜி அல்லது பஹூஜி என்பவை முறையே சிந்து, பெட்வா ஆறுகளேயாகும் என்று எலியட் கூறியுள்ளார். பேராசிரியர் ஹோடி வாலா நியாஸ் என்பது நிவாஜை (Niwaj) யும், பஹூஜி என்பது பஹூஜ் (Pahuj) ஐயும் குறிக்கும் என்று கருதுகிறார். நிவாஜ், பஹூஜ் ஆகிய இரண்டும் சிந்துவின் (Kalisind) உப நதியாகும் என்றும், சிந்து நதி சம்பலின் உபநதி என்றும் தர்ன்ட்டன் கூறியுள்ளார், அதன் பின்னர் அவர் சுல்தான் பூரைச் சென்றடைந்தார். பழைய எலிச்பூரை முஸ்லிம்கள் சுல்தான்பூர் என அழைத்தனர்.[1] சுல்தான்பூரில் நான்கு நாட்கள் தங்கியிருந்தார். நவம்பர் மாதம் 25 ஆம் நாள் மீண்டும் படை புறப்பட்டது. பதினேருநாள் பிரயாணத்திற்குப் பின்னர் படை கந்தாரை (Kandhar) அடைந்தது.[2] கந்தாரில் ரம்ஜான் பெருநாளையொட்டிய முதல் 14 நாட்களை இங்கு கழித்தார்கள். அதன் பின்னர் நர்மதை ஆற்றையும் வேறு பல சிற்றாறுகளையும்,

[1] எலிச்பூருக்கு மற்றொரு பெயர் இரஜ்பூர். (Irajpur) தற்போதைய இரிக் (Irich) தான் அக்காலத்தில் இரஜ்பூர் என அழைக்கப்பட்டது என்பது பேராசிரியர் ஹோடி வாலாவின் கருத்து. குவாலியருக்குத் தென்கிழக்கில் 65 மைல் தூரத்தில் இது இருக்கிறது. குவாலியருக்குத் தெற்கே 105 மைல் தூரத்தில் சாங்தேரி இருக்கிறது. சாங்தேரியில்தான் அமீர்கள் மலிக்காபூரைச் சந்தித்தனர் என்று பரணி கூறுகிறார். அமீர் குஸ்ரு சாங்தேரியைப் பற்றி குறிப்பிடவேயில்லை. இப்படையெடுப்பு ஏற்பட்டு பல ஆண்டுகள் கழித்து பரணி இதைப் பற்றி எழுதியுள்ளார் என்பதையும், தக்காண புவி அமைப்பைப் பற்றி பரணிக்குச் சரியாகத் தெரியாது என்பதையும நாம் கவனிக்கும்போது அமீர்குஸ்ருவின் குறிப்புகளைச் சரியானதென கொள்ளுவது நல்லதாகும்.

[2] காந்தார் எந்த இடத்தைக் குறிக்கிறதென்பதை நாம் திடமாகக் கூற இயலாது. கந்தா என்ற இரயில் சந்திப்பு நிலையம் தான் காந்தார் என்று அய்யங்கார் கூறுகிறார். இதனை வேதாடி வாலா ஏற்றுக் கொள்ள மறுக்கிறார். ஏனெனில் கந்தா நாபதைக்குத் தெற்கேயுள்ளது, 14 நாட்கள் தங்கிய பின்னரே நர்மதையைக் கடந்ததாக அமீர் குஸ்ரு எழுதியுள்ளார்.

ஓடைகளையும் கடந்து நில்கந்தை (Nilgantu) அடைந்தனர். நில்கந்த் என்பது தபதி நதிக்கரையில் இருந்ததாக அய்யங்கார் கூறியுள்ளார். நில்கந்த் தேவகிரி அரசின் எல்லைக்குள் இருந்த ஓர் இடமாகும். தேவகிரியின் எல்லையை மிதித்ததும் காபூர் தம் படைகள் கொள்ளை முதலிய கொடுஞ் செயல்களில் ஈடுபடக் கூடாது என்று கட்டளை பிறப்பித்தார். நில்கந்த்தில் இரண்டு நாள் தங்கிய பின்னர் படைகள் தெலிங்கானாவை நோக்கிப் புறப் பட்டன. அதே சமயத்தில் தேவகிரி அரசரின் அமைச்சர் அவரைச் சந்தித்து அவரது படைகள் எல்லாவித வசதிகளுடன் தம் நாட்டின் வழியாக வாரங்கலுக்குச் செல்ல ஏற்பாடுகள் செய்து கொடுத்தார். வழிநெடுக அங்காடிகள் அமைத்துக் கொடுத்தார். பொருட்கள் டில்லியில் சுல்தான் நிர்ணயித்திருந்த விலைக்கு விற்கப்பட்டன. முஸ்லிம் படைகளின் வலிமையைப் பெருக்கும் நோக்குடன் தேவகிரி அரசர் சில யாதவப் படைகளை அவருக்குக் கொடுத்துதவினார்.

நில்கந்தை விட்டு வாரங்கலை நோக்கிப் புறப்பட்ட படைகள் இன்னல் சூழ்ந்த பாதையின் வழியாக போக வேண்டியதாக இருந்தது. இவற்றை அமீர் குஸ்ரூ மிக அழகாக விவரித்துள் ளார். போகப் போக பாதை குறுகிக்கொண்டே வந்தது. இறுதியில் கிடார் இசைக்கருவியின் கம்பியின் அளவு குறுகலாகி விட்டது. அழகான பெண்ணின் கருநிறக் கூந்தல் போல் இருட்டாகி விட்டது. மலைகளிலிருந்து ஓடி வந்த நீர் மலைச் சரிவுகளில் இடறி விழ நேர்ந்த ஆட்கள், விலங்குகள் ஆகியவை போட்ட சத்தம் காதுகளை கிழித்து விட்டன. அவ்வப்போது மேகக்கூட்டங்கள் மழையைப் பொழிந்த வண்ணம் இருந்தன. இத்தனை இடையூறுகளையும் சமாளித்துக் கொண்டு படைகள் பீஹார், பரகீ ஆகிய இரு ஆறுகளுக்கிடையேயுள்ள பீஜாகார் இடைத்துறை பகுதியை அடைந்தன. தெலிங்கானா நாட்டில் அடியெடுத்து வைத்ததும் காபூர் வழியில் இருந்த நகரங்களையும் கிராமங்களையும் கொள்ளையிட முற்பட்டார். வைரச்சுரங்கங்கள் நிறைந்த நிலப்பகுதியின் வழியாக முஸ்லிம் படைகள் சென்று தெலிங்கானாவிலிருந்த சர்பா (Sorbar) அல்லது சிர்பூர் கோட்டையை அடைந்தன. உடனே முற்றுகையிட படைகளுக்கு ஆணை பிறப்பித்தார். கோட்டைக்குள்ளிருந்த ரவாத்துகள் (Rawats) இந்த திடீர் தாக்குதலை எதிர்பார்க்கவில்லை. அவர்களுள் சிலர் தீமூட்டி அதில் தங்கள் மனைவிகளையும் குழந்தைகளையும் இட்டுக் கொன்றனர். இறுதியில் முஸ்லிம்கள் கோட்டைக்குள் சென்று எதிர்பட்ட அனைவரையும் வாளால் வெட்டி வீழ்த்தி னார்கள். கோட்டையிலிருந்த முக்கடம்கள் ஒவ்வொருவரும்

போரிட்டு உயிர் துறக்க முடிவு செய்தனர். அப்போது குவாஜா ஹாஜி தலையிட்டு மேலும் போர் நீடிக்கவொட்டாது தடுத்தார். கோட்டைத்தலைவர் போரில் உயிரிழந்தமையால், அவரது சகோதரர் அனனூரைத் தேடிக் கண்டுபிடித்து கோட்டையை அவரிடம் ஒப்படைத்தார்கள். அதற்கு பதிலாக சுல்தானுக்கு அவர் கீழ்படிந்து நடப்பதாக ஒப்புக்கொண்டார். உயிர் தப்பிய பல ரவாத்துக்கள் வாரங்கலுக்கு ஓடி விட்டனர். அவ்வாறு ஓடியதன் மூலம் மாலிக்காபூருடைய வேலையை மிக எளிதாக்கி விட்டனர். அதற்கு மாறாக சுற்றுப்புறத்திலிருந்த மக்களின் உதவியைக் கொண்டு அவர்கள் கொரில்லா போர் முறையைக் கைப்பற்றி முஸ்லிம் படைகளை ஆங்காங்கே தாக்கி அவற்றினுக்கு இன்னல் விளைவித்து வந்திருப்பார்களேயானால் முஸ்லிம் படைகள் களைப்புற்று திரும்ப வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கும். பொது மக்கள் ஆதரவு இராமையால் அவர்கள் அவ்வாறு செய்யவில்லை என்று நாம் நினைக்கக்கூடும். அது உண்மையெனில் அவர்களே பல இடங்களிலிருந்து கொண்டு முஸ்லிம் படைகளை எதிர்த்து வந்திருக்கலாம். அவ்வாறு செய்வதன் மூலம் முஸ்லிம் படைகள் வாரங்கலை விரைவில் சென்றடையா வண்ணம் பார்த்திருக்கக் கூடும். நீண்டதொரு போர் செய்ய முஸ்லிம் படைகள் தயாராக இல்லை. எவ்வளவு சீக்கிரத்தில் இந்து அரசரை அடிபணிய வைத்து அவரிடமிருந்து போதிய அளவு செல்வத்தைப் பெற்று டில்லி திரும்ப இயலுமோ அவ்வளவு விரைவாக அவர்கள் காரியத்தை முடிக்க விருப்பப்பட்டனர். அவர்களுடைய எண்ணத் திற்கேற்ற வகையில் சிர்பூர் ரவாத்துகள் நடந்து கொண்டனர். 1310ஆம் ஆண்டு ஜனவரி மாதம் வாரங்கலுக்கு அருகே குனர்பல் என்னுமிடத்திற்கு முஸ்லிம் படைகள் வந்து சேர்ந்தன. அங்கிருந்து கொண்டு ஆயிரம் குதிரை வீரர்களை வாரங்கலைச் சுற்றி பார்வையிட்டு வரும்படி அனுப்பி வைத்தார். அவர்களுள் இரண்டு அதிகாரிகளும் 40 குதிரை வீரர்களும் அனும்கொண்டா என்ற குன்றின்மீது ஏறினுர்கள், அதன்மீது இருந்து கொண்டு வாரங்கலின் வீடுகள், தோட்டங்கள் ஆகியவற்றைப் பார்வை யிட்டனர். கடுமையான வெயிலையும் பொருட்படுத்தாது மலிக்காபூரே நேரில் சென்று வாரங்கல் கோட்டையின் அமைப்பைப் பார்வையிட்டார். வாரங்கல் கோட்டை இரண்டு பெரிய மதிற்சுவர்களைப் பெற்றிருந்தது. உட்புறச் சுவர் கருங் கல்லால் கட்டப்பட்டிருந்தது. அதற்குள்தான் அரசருடைய அரண்மனையிருந்தது. வெளிப்புறச் சுவர் மண்ணுலானது, ஆயினும் அது மிகவும் பலமாகக் கட்டப்பட்டிருந்தது. இரும் பாலான ஈட்டிகூட அதனைத் துளைத்து உள்ளே செல்ல இயலாது.

கவண் கற்களை அதன்மீது வீசியெறிந்தால் அவை பந்து போல் மீண்டும் திரும்பி பறக்கும். இவ்விரு மதில்களுக்கு இடையில் ரவாத்துகள் தங்கியிருந்தனர். வெளிப்புறச் சுவரைச் சுற்றிலும் ஆழமான அகழி அமைக்கப்பட்டிருந்தது. முஸ்லிம் படைகள் வாரங்கலை நெருங்கி விட்ட செய்தியை அறிந்தவுடன் முற்றுகையை முறியடிப்பதற்கான முயற்சி மும்முரமாக மேற்கொள்ளப் பட்டது. கவண் வீசும் யந்திரங்கள் தயாராக வைக்கப் பட்டன, போதியகற்கள் சேகரிக்கப் பட்டன.

வாரங்கல் கோட்டை வாயிலுக்கெதிரே ஒரு மைல் தூரத்தில் மலிக்காபூர் தமது பாசறையை அமைத்தார். கோட்டையைச் சுற்றிலும் ஒன்றுக்கொன்று நெருக்கமாக இருக்கும் வகையில் பல கூடாரங்களை அடிக்கச் செய்தார். கோட்டையைச் சுற்றியுள்ள இடத்தை 1,200 கஜ நீளமுள்ள பகுதிகளாகப் பிரித்தார். ஒவ்வொரு பகுதியையும் ஒரு துமனிடம் (Tumon) அதாவது 10,000 வீரர்களிடம் ஒப்படைத்தார். இவ்வாறாக 12,546 கஜம் சுற்றளவு கொண்ட கோட்டையைச் சுற்றி தம் படைகளை நிறுத்தி வைத்தார். ஒவ்வொரு கூடாரத்தைச் சுற்றிலும் ஒரு வலிமை பொருந்திய மரச் சுவரை எழுப்பினார். இச்சுவர் கோட்டையின் வெளிப்புறத்திலிருந்து ஏற்படக் கூடிய தாக்குதலைத் தடுத்து நிறுத்தப் பயன்பட்டது.[1] ஒரு நாள் நடுநிசி வேளையில் மாணிக்கதேவா[2] என்ற முக்கடம் ஆயிரம் குதிரை வீரர்களைக் கொண்டு முஸ்லிம் படைகளைத் தாக்கினார். அவரது போர் நடவடிக்கை தோல்வியில் முடிவுற்றது. அதையடுத்து மலிக்காரா பெக் சுற்றுப்புறப் பகுதியைத் தாக்கி சில யானைகளைக் கைப்பற்றினார்.

அகழியைக் கடந்து கோட்டைக்குள் போவதற்காக பாலம் அமைக்கும் வேலை தொடங்கியது. கற்களையும் மண்ணையும் கொண்டு அகழியின் ஒரு பகுதியை மூடினார்கள். முதலில் கோட்டையின் உச்சியை அடைய சாய்வான பாதை அமைக்க எண்ணினார். ஆனால் அதைக் கட்டி முடிக்க நேரமாகும் என்பதால் காபூர் தமது மலிக்குகளின் ஆலோசனையின் பேரில் கோட்டையை உடனடியாகத் தாக்கும்படி வீரர்களுக்குக் கட்டளையிட்டார்.

ஒவ்வொரு படைப்பிரிவும் நீளமான ஏணிகளையும் மண் கொத்து கருவிகளையும் கொண்டுவரும்படிக் கூறினார். பிப்ரவரி

[1] நெருப்பு மழை பெய்தாலும்கூட அவர்களுடைய பாசறைக்கு எந்தவித ஆபத்தும் நேராவகையில் அவை பலமாக அமைக்கப்பட்டன என்று கூறப்படுகிறது.

[2] அமீர் குஸ்ரூ பர்னிக் தேவா என்றும், டாக்டர் K. S. லால் விநயக் தேவா என்றும் அவரை அழைத்துள்ளனர்.

மாதம் 14ஆம் நாள் கோட்டையைத் தாக்கும் பணி தொடங்கியது. சிலர் ஏணியின் உதவியைக் கொண்டு கோட்டையின் மதில் மேல் ஏற முற்பட்டனர். வேறு சிலர் மண்கொத்துக் கருவிகளைக் கொண்டு கோட்டையின் அடித்தளத்தைப் பெயர்க்க முனைந்தனர், மற்றும் சிலர் கவண் இயந்திரங்களைக் கொண்டு கோட்டைக்குள் கற்களை வீசினர். கோட்டைக்குள்ளிருந்த வீரர்கள் கவண் கற்களை எறிந்த வண்ணமாக இருந்தனர். அந்தி வேளை நெருங்கியபோது கோட்டை மதிலின் ஒரு பாதி ஆகாயத்தில் தூசியாகப் பறந்து விட்டது என்றும் மறு பாதி தரைமட்டமாகி விட்டது என்றும் அமீர் குஸ்ரு கூறுகிறார். அவரே மற்றொரு இடத்தில் மதிலின் ஒரு பகுதியை முஸ்லிம் படைகள் பிடித்து விட்டன என்று குறிப்பிட்டுள்ளார். புறமதிலைக் கைப்பற்ற மூன்று நாட்கள் பிடித்தன என்று அய்யங்கார் கூறியிருக்கிறார்.[1] பிப்ரவரி 16-ம் தேதி கைப்பற்றபட்டதாக ஹபீபும் நிஜாமியும் குறிப்பிட்டுள்ளனர்.[2] புறமதிலை அடைந்த முஸ்லிம் படைகள் தங்களுக்கு முன்பு மற்றொரு அகழியும் கல்லால் ஆன கோட்டை சுவரும் இருக்கக் கண்டனர். அதன்மீது எறும்பு கூட ஏற இயலாத அளவு அதன் சுவர்கள் வழவழப்பாக இருந்தன. கொத்துக்கருவி அவற்றினுக்கு ஊறுவிளைவிக்கா வண்ணம் கருங்கற்கள் நேர்த்தியாக அவற்றில் பொருத்தப்பட்டிருந்தன. கவண் கற்கள் எறியும் இயந்திரங்கள் அவற்றினுக்கு எந்த தீங்கும் செய்ய இயலாது. அத்தகைய அமைப்புடன் கூடிய உட்புறக் கோட்டையினைச் சூழ்ந்திருந்த அகழியை படகுகள் துணையின்றி கடக்க இயலாது முஸ்லிம் படைகள் விழித்திருந்தன.[3] அந்த நேரத்தில் ருத்ரதேவா சரணடைவதென்று முடிவு செய்து பேச்சு வார்த்தைகளைத் தொடங்கினார். தம்மைப்போல் ஓர் உருவத்தைப் பொன்னால் செய்து அதன் கழுத்தைச் சுற்றிலும் ஒரு சங்கிலியை அணிவித்து அதனை காபூரிடம் அனுப்பி வைத்தார். தாம் காபூருக்கு அடிபணிந்துவிட்டதற்கு அடையாளமாக அதனை அனுப்பினார்.[4] தம்மிடமிருந்த செல்வத்தை அவரிடம் சேர்ப்பிக்கவும் ஆண்டுதோறும் கப்பம் செலுத்தி வரவும்அவர் இசைந்தார். அத்துடன் 20,000 குதிரைகளையும், 100 பலம் பொருந்திய இளவட்ட யானைகளையும் அவர் கொடுக்க ஒப்புக் கொண்டார். இந்தியாவிலுள்ள எல்லா மலைகளுக்கும் முலாம் பூசும் அளவிற்கு

[1] Op. cit. 89

[2] Habib and Nizami (Ed), ACHI., 409

[3] தேவலால் இராணியில் ருத்ரதேவா நேரில் சென்று காபூருக்கு தாம் அடிபணிந்து விட்டதாக அறிவித்தார் என்று கூறப்பட்டுள்ளது.

[4] Dr. K. S. லால் உள் அகழியைக் கடந்து கோட்டையை முற்றுகையிட்டதாகக் கூறியுள்ளார், p. 241

பொன்னும், பலவகைப்பட்ட விலையுயர்ந்த கற்களும் அவரிடம் இருந்ததாகக் கூறப்படுகிறது. தெலிங்கானுவில் உற்பத்தி செய்யப் பட்ட பொருட்கள் அனைத்தையும் காபூர் தம்மிடம் ஒப்படைக்கும் படி கூறியதாகவும், அதற்கு ருத்ரதேவா இசைந்தார் என்றும் கூறப்படுகிறது. அடுத்த நாள் காபூர் வேண்டிய எல்லாப் பொருட்களையும் தூதுவர்கள் மூலம் ருத்ரதேவா கொடுத்தனுப் பினுர். அவற்றுள் ஒன்று ஈடுஇணையற்ற கோஹினூர் வைரமாகும். என காஃபி கான் கூறியுள்ளார். எதிர் பார்த்த அளவுக்கு மேலாகவே ருத்ரதேவா பொன்னையும் பொருளையும் கொடுத் தனுப்பினுர். அவை யாவற்றையும் பெற்றுக் கொண்ட பிறகு, ருத்ரதேவா ஏதேனும் ஒரு பொருளை காபூருக்குக் கொடுக்காமல் தமக்காக மறைத்து வைத்து விட்டதாக பின்னர் கண்டு பிடிக்கப் பட்டால் ருத்ரதேவாவின் மக்களைக் கொல்லுப்படி உத்தரவு இடுவதாக காபூர் பயமுறுத்தினுர். 1310ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 20 ஆம் தேதி மலிக்காபூர் டில்லிக்குத் திரும்பிச் செல்லும் பயணத்தைத் தொடங்கினுர். தேவகிரி, தார், ஜெயின், ஆகிய வற்றின் வழியாகச் சென்று ஜூன் மாதம் 9ஆம் தேதி டில்லி அடைந்தார். அதே மாதம் 23ஆம் தேதி பதௌன் வாயிலுக்கருகே சபூத்ரா-இ-நாசிரியின் முன்னுல் கறுப்பு கூடாரத்திற்கடியில் அலங்கரிக்கப்பட்ட தர்பார் ஒன்றினை அலாவுத்தீன் ஏற்பாடு செய்து அங்கு மலிக்காபூரை வரவேற்றுர். ஆயிரம் ஒட்டகங்கள் மீது கொண்டு வரப்பட்ட பெருஞ் செல்வத்தை சுல்தான் முன்னிலையில் மலிக்காபூர் வைத்தார். அப்போது பொது மக்களும் அவற்றைக் கண்டு களிக்க போதிய ஏற்பாடுகள் செய்யப்பட்டன. மலிக்காபூருக்குத் தக்க வெகுமதி அளித்து சுல்தான் அவரை கௌரவப்படுத்தினுர்.

துவார சமுத்திரத்தின்மீது படையெடுப்பு: இப் படையெடுப்பின் நோக்கத்தை அமீர்குஸ்ரு தெளிவாக நமக்கு எடுத்தியம்பி உள்ளார். வாரங்கல் படை எடுப்பின்போது மாபாரை ஆண்டு வந்த அரசரிடம் 500 பெரிய யானைகள் இருப்பதாக மலிக்காபூர் கேள்வியுற்றுர். அச் செய்தியை டில்லி திரும்பியவுடன் அலாவுத்தீனிடம் அவர் எடுத்துக் கூறினுர். அங்கிருந்த யானைகளை யும், செல்வத்தையும் அடைவதற்காக அலாவுத்தீன் மற்றுமொரு படையினைத் தென்னிந்தியாவிற்கு அனுப்பி வைத்தார். மாபாரை அடைந்த பிறகு மலிக்காபூர் அந்த யானைகளை சுல்தானுக்குக் கொடுப்பதற்குப் பதிலாகத் தாமே வைத்திருக்க விருப்பங் கொண்டார் என்று அமீர்குஸ்ரு கூறியுள்ளார். இவற்றிலிருந்து தென்னிந்தியாவின் யானைகளையும், செல்வத்தையும் பெற் றடைவதே இப்படையெடுப்பின் நோக்கமெனத் தெரிகிறது.

இந்த நோக்கத்துடன் உருவ வழிபாடு முறையை ஒழிக்கும் நோக்கத்தையும் மலிக்காபூர் படையெடுப்பின்போது கலந்து விட்டாரென்று அமீர் குஸ்ரு கூறியுள்ளார். கஜினி முதல் கங்கை யாற்றின் முகத்துவாரம் வரையிலுள்ள நிலப்பகுதியில் தமது ஆதிக்கத்தை ஏற்படுத்திவிட்ட அலாவுத்தீனுக்கு அங்கிருந்த இந்து கோயில்களை இடித்து தள்ளுவது கடவுட் சிலைகளை உடைத் தெறிவது பெரிய வேலையாகத் தெரியவில்லை. அந்த வகையான வேலையை மேற்கொண்டு அலாவுத்தீன் வட இந்தியாவில் இந்து மதத்தை ஒடுக்கி இஸ்லாமிய மதத்தைப் பரவச் செய்தார். அதே பணியினை தென்னிந்தியாவிலும் மேற்கொள்ள விரும்பினார். அங்கு செல்வாக்குப் பெற்றிருந்த உருவ வழிபாட்டு முறையை அழித்து விட எண்ணங்கொண்டார்.

1310ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 20 ஆம் தேதி ஒரு பெரிய படையை நடத்திக்கொண்டு மலிக்காபூர் மீண்டும் தக்காணம் நோக்கிப் புறப்பட்டார்.[1] யமுனையாற்றின் கரையோரமாக 14 நாட்கள் பயணம் செய்து தனக்கல் (Tanakal) என்னுமிடத்தை அடைந்தார். அங்கிருந்து 21 நாட்கள் படைகளை அணிவகுத்து நடத்திச் சென்று இராஜபுதனத்திலுள்ள கன்ஹூன் என்னு மிடத்தைச் சேர்ந்தார். பின்னர் 17 நாட்கள் பயணம் செய்து குர்காம் (Gurgam) என்னுமிடத்தைச் சென்றடைந்தார். இந்த 17 நாட்களில் பல கணவாய்களையும் நர்மதை உட்பட மூன்று ஆறுகளையும் கடந்து சென்றதாகக் கூறப்படுகிறது. இந்தப் பயணத்தின் முடிவில் பிரதாபருத்ர தேவாவினுடைய தூதுவர்கள் அவரைச் சந்தித்து 23 வலிமை வாய்ந்த யானைகளைப் பரிசாக வழங்கினார்கள். இருபது நாட்கள் குர்காமில் தங்கிய பின்னர் மீண்டும் படையை நடத்திக்கொண்டு தவி (தபதி) நதியை அடைந் தார். தபதி நதியைக் கடந்து சென்று தேவகிரியை அடைந்தார். மலிக்காபூருக்கு தக்க வரவேற்பு அளிக்க இராமச் சந்திரதேவா எல்லாவித ஏற்பாடுகளையும் செய்தார்.[2] நகரத்தை தேவலோகம் போல் அலங்கரிக்கச் செய்தார். படையினருக்குத் தேவையான பொருள்கள் அனைத்தையும் அங்காடிகளுக்குக் கொண்டுவரச் செய்தார். ஒவ்வொரு அங்காடியையும் ஒவ்வொரு விதமாக அமைத்தார். பொன், வெள்ளி, தங்காக்களைக் கொண்ட பைகளுடன் நாணயமாற்றுபவர்கள் அல்லது ஷராப்பு (Sarafs)கள் ஒவ்வொரு அங்காடிகளிலும் உட்கார்ந்திருந்தனர். எல்லாவித

[1] Habib's Trs Khazain, அவ்வாண்டின் இறுதியில் புறப்பட்டார் என்று பரணி எழுதியுள்ளார்.

[2] இராமச்சந்திர தேவா அதற்குள் இறந்துவிட்டதாக பரணி கூறுகிறார். அமீர் குஸ்ரு அப்போது உயிருடனிருந்தார் என்று திட்டவட்டமாகக் கூறியுள்ளார்

மான துணிகள் கடைகளுக்குக் கொண்டு வரப்பட்டன. பழங்கள் குவியல் குவியலாகக் குவிக்கப்பட்டிருந்தன. பொருட்கள் நியாய மான விலைக்கு விற்கப்பட்டன. துருக்கியர் இந்துக்களைத் துன்புறுத்தவில்லை. இந்துக்களும் துருக்கியர்களுக்கு விரோதமாக நடக்கவில்லை. ஆனால் இஸ்லாமியப் படைகள் 3 அல்லது 4 நாட்களுக்கு மேல் தேவகிரியில் தங்க முடியவில்லை. தமது எல்லைப் புறத் தலைவர்களுள் ஒருவரரே தளவாய் பரசுராம தேவாவை டில்லிப் படைகளுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து தருமாறு இராமச்சந்திர தேவா கட்டளையிட்டார். படையின் வருகைக்காக அதற்குத் தக்க உதவிகளைப் புரிந்தார். சினி, கோதாவரி, பின்ஹூர் நதிகளைக் கடந்து 1311ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 7ஆம் தேதி பரசுராம தேவாவின் ஆட்சிப் பகுதியிலிருந்த பந்த்ரி (Bandri) வந்து சேர்ந்தார். மலிக்காபூருக்கு வேண்டிய சரியான செய்திகளைச் சேகரித்துக் கொடுத்தார் என்று மீண்டும் அமீர்குஸ்ரு கூறியுள்ளார். மாபாரின் இரண்டு அரசர்களும் ஒரே மனப் பான்மையைக் கொண்டிருந்தனர். அவர்களுள் வயதில் சிறியவ ரான சுந்தர பாண்டியர் தமது தந்தையைக் கொன்று தம் கரங்களில் கறைபடியச் செய்து விட்டார். அவரது மூத்த சகோதரன் வீரபரண்டியர், தாம் தலைநகரில் இல்லாதபோது தமது இரு நகரங்களையும் பாதுகாப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யாமலேயே பல்லாயிரக் கணக்கான இந்து வீரர்களுடன் தந்தையைக் கொன்ற மாபாவியின் தோலையுறித்துக் கொல்லப் புறப்பட்டுவிட்டார். இச் செய்தியை அறிந்த துவாரசமுத்ர அரசர் பல்லாளதேவா அவ்விரு நகரங்களில் இருந்த மகா ஜனங்களைத் (பாங்கர்கள்) தாக்க அவர்களிடமிருந்த செல்வத்தைக் கொள்ளை யடிக்க மாபாருக்கு விரைந்து சென்றார். அந்த நேரத்தில் டில்லிப் படைகளின் தக்காண வருகையைப் பற்றிக் கேள்வியுற்றார். தமது தலைநகரை அவர்களிடமிருந்து காப்பாற்றுவதற்காக அவர் தம் நாடு திரும்பினார்.

இதற்கிடையில் மலிக்காபூர் தம் மலிக்குகளையும் அமீர்களையும் அழைத்து போர் ஆலோசனைக் கூட்டம் ஒன்றை நடத்தினார். பல்லாளதேவா தமது அரண்களைப் பலப்படுத்துவதற்கு முன்பு அவரைத்தாக்க வேண்டும் என்று முடிவு செய்தார்கள். அந்த முடிவிற்கேற்ப, 10,000 தேர்ந்தெடுத்த குதிரை வீரர்களுடன் மலிக் காபூர் துவார சமுத்திரம் நோக்கிப் புறப்பட்டார். 12 நாள் பிரயாணத்திற்குப் பிறகு அவர் 1311ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 26ஆம் நாள் துவார சமுத்திரத்தை அடைந்தார். தண்ணீரால் சூழப்பட்ட வலிமைமிக்க கோட்டையை அவர் அங்கு கண்டார். அதனை அமீர் குஸ்ரு பிர் (Bir) என்று அழைத்துள்ளார். பிர்

என்றால் கிணறு என்று பொருள். சாதாரணமாக கிணற்றுக்குள் நீர் இருப்பதைக் காண்கிறோம். ஆனால் இங்கு நீருக்குள் பிர' (கிணறு) இருப்பதைப் பார்க்கிறோம் என்று அமீர் குஸ்ரூ கூறியுள்ளார். அடுத்த நாளே முற்றுகையைத் துவக்கினார். அன்றிரவு தமது அதிகாரிகளுள் ஒருவரான கேசுமல் (Gesamal) என்பவரை அனுப்பி பகைவருடைய பலத்தையும் அவரது திட்டத்தையும் அறிந்துவர பல்லாளதேவா அனுப்பி வைத்தார். அடுத்தநாள் காலையில் கோட்டைத் தாக்கப்படும் என்றும் அதன் விளைவாக கோட்டை தரை மட்டமாக்கப்படும் என்றும் அவர் பல்லாள தேவாவிற்கு அறிவித்தார். வீர பல்லாளாவிற்கு உதவி செய்ய வீர பாண்டியர் படையொன்றை அனுப்பியிருந்த போதிலும்,[1] மலிக் காபூருக்கு அடிபணிந்து தம் நாட்டை எதிர்நோக்கியிருந்த அழிவிலிருந்து காப்பாற்றுவது மேலென அவர் கருதி பலக் தேவாவையும் மற்றும் சில தூதுவர்களை மலிக்காபூரிடம் அனுப்பி வைத்தார். இராமச்சந்திர தேவா பிரதாப ருத்ர தேவா ஆகியோர் எந்த நிபந்தனைகளின் பேரில் சரண் அடைந்தனரோ அதே நிபந்தனைகளின் பேரில் வீரபல்லாளவும் அடிபணிய விரும்புவதாக மலிக் காபூரிடம் கூறப்பட்டது. அதாவது தம்மிடமுள்ள செல்வம் முழுவதையும் மலிக் காபூரிடம் கொடுத்து விடத்தயாராக வீர பல்லாள இருப்பதாக அறிவிக்கப்பட்டது. அந்த நேரத்தில் மலிக் காபூர் தூதுவர்களிடம் பின்வருமாறு பேசியதாக அமீர் குஸ்ரூ கூறியுள்ளார். அல்லாவைத்தவிர வேறு கடவுள் எவருமிலர் என்ற இஸ்லாமியக் கொள்கையினை வீர பல்லாளாவும் ஏனைய இந்து அரசர்களும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பது சுல்தானுடைய விருப்பமாகும். அதனை அவர்கள் ஏற்றுக்கொள்ள விரும்பவில்லையெனில் அவர்களிடமிருந்து கப்பம் வசூலிக்க வேண்டும் என்று சுல்தான் தமக்கு ஆணையிட்டு இருப்பதாகவும், அதற்கும் அவர்கள் தயாராக இல்லையெனில் அவர்களைக் கொல்லும்படி தமக்கு உத்திரவிட்டிருப்பதாகும் மலிக் காபூர் கூறினார். அலாவுத்தீன் மலிக் காபூருக்கு இந்த மாதிரியானதொரு ஆணையை இட்டதற்கு அமீர் குஸ்ரூவைத்தவிர வேறு சான்றுகள் இல்லை. பல்லாள அரசருடைய தூதுவர்கள் வேண்டுகோளுக்கிணங்க மலிக்காபூர் தமது ஆட்கள் இருவரை பல்லாள தேவாவிடம் அனுப்பி வைத்தார். தாம் அணிந்திருந்த பூணூலைத்தவிர தம்மிடமுள்ள எல்லாப் பொருட்களையும் ஒப்படைத்து விடுவதாக பல்லாளதேவா அவர்களிடம் கூறினார். ஆண்டுதோறும் கப்பம் செலுத்தவும் ஒப்புக்கொண்டார். அடுத்த நாள் பாலக் தேவாவும் ஏனைய தூதுவர்களும் மலிக்காபூரைச் சந்தித்து அவரிடம் 36 யானைகளைக்

[1] Wasaaf, p. 50, Elliot III

கொடுத்தார்கள். பிறகு பல்லாள தேவா குதிரைகளை மலிக்காபூரிடம் அனுப்பிவைத்தார். பின்னர் தாமே கோட்டையை விட்டு வெளியே வந்து அலாவுத்தீனுடைய விதானத்தின்முன் வணக்கம் செலுத்தி தம்மிடமிருந்த விலையுயர்ந்த பொருட்களை அனைத்தையும் மலிக்காபூரிடம் ஒப்படைத்தார். அவற்றைப் பெறுவதற்கு மலிக்காபூர் ஓர் இரவு முழுவதையும் செலவிட்டார். துவார சமுத்திரத்தில் 12 நாட்கள் தங்கியிருந்தார். அதற்கிடையில் ஏனைய டில்லிப்படைகள் மலிக்காபூருடன் வந்து சேர்ந்து கொண்டன. மாபாரைக் கொள்ளையடிப்பதில் மலிக்காபூருக்கு பல்லாள தேவா உதவியாக இருந்தார் என்றும், பின்னர் அவர் டில்லிக்குச் சென்றார் என்றும் பிற்கால வரலாற்றாசிரியர்கள் கூறியுள்ளனர். அமீர் குஸ்ரூவும் ஏனைய சம காலத்து வரலாற்றாசிரியர்களும் இவற்றைப்பற்றி ஏதும் கூறவில்லை. வீரபல்லாளாவின் டில்லிப்பயணத்தைப்பற்றிய குறிப்பினை சில சாசனங்களில் காண்கிறோம்[1].

1311ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 10ஆம் தேதி படைகள் மாபாரை நோக்கிப் புறப்பட்டன. பாண்டிய நாட்டில் இரு சகோதரர்களுக்கிடையே ஏற்பட்டிருந்த அரசுரிமைப் போராட்டம் நடைபெற்று வந்தது என்பதை முன்பு கண்டறிந்தோம். அப்போராட்டத்தின்போது வீரபாண்டியர் மதுரையைக் கைப்பற்றிக் கொண்டு அங்கிருந்து சுந்தரபாண்டியரைத் துரத்தியடித்தார். ஆகவே சுந்தரபாண்டியர் டில்லி அரசரின் உதவியை நாடினார். அவர் டில்லி அரசரை நேரில் சந்தித்து உதவியைக் கோரினாரா அல்லது அப்போது தென்னிந்தியாவில் படை நடத்திக் கொண்டிருந்த மலிக்கரிபூரின் வாயிலாக டில்லி அரசரின் உதவியை வேண்டினாரா என்பதை நாம் உறுதியாகக் கூற இயலாது. மலிக்காபூருக்கு மாபார் படையெடுப்பிற்கு இந்த மாதிரியான ஒரு காரணம் அவசியமா என்பது நமது சிந்தனைக்குரிய ஒரு பொருளாகும். மேலும் படையெடுப்பின் போது மலிக்காபூர் பாண்டியர் இருவரையும் தாக்கினார் என்பதை அறிகிறோம். ஆகவே சுந்தர பாண்டியரின் முறையீடு படையெடுப்பிற்கு ஒரு காரணமாகக் கூற இயலாது. துவார சமுத்திராவை மலிக்காபூர் முற்றுகையிட்டிருந்தபோது வீரபல்லாள தேவா மாபார் அரசர் வீரபாண்டியரின் உதவியை நாடினார் என்றும் வீரபரண்டியர் படையொன்றை துவார சமுத்திராவிற்கு அனுப்பி வைத்தார் என்றும் வகாப் கூறியுள்ளார் வீரபாண்டியரின் செய்கை மலிக்காபூருடைய கோபத்தைக் கிளறியிருக்கக் கூடும். ஆகவே அதனையும் ஒரு காரணமாக நாம் கருத இடமுண்டு மாபாரின் செல்வத்தைக்

[1] S. K. Aiyangar p. 94

கொள்ளையிடுவதே படையெடுப்பின் முக்கியக்காரணம் என்பதை நாம் மறைக்கவோ, மறுக்கவோ இயலாது. 1,200 கோடி பொன்னும் கணக்கற்ற நவரத்தினங்களும் மதுரை கருவூலத்தில் இருந்ததாக வகாப் கூறியுள்ளார்.

துவார சமுத்திராவை விட்டுப்புறப்பட மலிக்காபூர், 5 நாள் பிரயாணத்திற்குப்பிறகு ஹோய்சல நாட்டினையும் மாபாரையும் பிரித்த மலைப்பகுதியை வந்தடைந்தார் தர்மலி, தபர்[1] என்ற கணவாய்கள் வழியாகச்சென்று காவேரியின் கரையை அடைந்தார். அங்கிருந்து பிர்தூல் (Birdhul) நோக்கிச்சென்றார். அமீர் குஸ்ரூ பிர்தூல் என்ற சொல்லை ஒரு சமயம் தலைநகரைக் குறிக்கவும் மற்றொரு சமயம் அரசரைக் குறிக்கவும் பயன்படுத்தியுள்ளார். அய்யங்கார் அதனை தலை நகரின் பெயராகக்கொள்ளலாம் என்று கூறுகிறார். வீரசோழ நகரைக் குறிக்க அது பயன் படுத்தப் பெற்றுள்ளது என்பது பொருத்தமாகும். பிர்தூல் விருத்தாசலத்தைக் குறிக்கிறது என்பது பர்னலின் கருத்து. போகும் வழியில் முஸ்லிம் படைகள் கொலை, கொள்ளை ஆகிய கொடூரச் செயல்களில் ஈடுபட்டன. வீரபாண்டியர் தமது உயிரை காத்துக்கொள்ளும் பொருட்டு கடல் நடுவிலுள்ள தீவுகளுக்கு ஓடப்பார்த்தார். ஆனால் அவரை உள் நாட்டிலேயே பாதுகாப்பைத் தேடிக்கொள்ளும்படி அவருக்கு ஆலோசனை கூறப்பட்டது. அதற்கிணங்க அவர் சிறிது செல்வத்தை எடுத்துக்கொண்டு கந்தூர் (Kandur) சென்றார். கொட்டும் மழையையும் பொருட்படுத்தாது முஸ்லிம் படைகள் தண்ணீர் நிறைந்த பாதையின் வழியாக பகைவரைத் தொடர்ந்துச் சென்றன. கந்தூர் பாதுகாப்பிற்கேற்ற இடமாக வீரபாண்டியர் கருதாமையால், அங்கிருந்து அவர் காட்டுக்குள் ஓடி வீட்டார். மலிக்காபூர் அவரை விடாது பின் தொடர்ந்தார். ஆனால் முட்புதர்கள் நிறைந்த காடுகளை ஊடுருவிச்செல்வது கடினமாகத் தோன்றியதால் அவர் கந்தூருக்குத் திரும்பி விட்டார். கந்தூரில் பல முஸ்லிம்கள் வீரபாண்டியரிடம் வேலைக்கமர்ந்திருந்ததை மலிக்காபூர் கண்டார். வீரபாண்டியர் ஓடி விட்டமையால் மலிக்காபூர் பக்கத்தில் சேர விருப்பம் தெரிவித்தனர். இந்துக்களிடம் வேலை பார்த்த குற்றத்திற்காக அவர்கள் மரணதண்டனைக்குரியவர்களாக இருந்த போதிலும், கலீயாவை ஒப்பித்த காரணத்தால் மலிக்காபூர் அவர்களை

[1] தபர் என்பது தோப்பூரையும், தர்மலி என்பது தாரமங்கலத்தையும் குறிக்கின்றன என்பர் சிலர்.

[2] S. K. Iiyangar. op. cit. p. 98

[3] ACHI இல் வீரசோழத்தில் என்று கூறப்பட்டிருக்கிறது. p, 145.

மன்னித்து விட்டார். கந்தூரிலிருந்து மீண்டும் வீரசோழத்திற்கு மலிக்காபூர் வந்தார். வீரசோழத்தில் பேரரசுப் படையினருக்கும் ரவாத்துகளுக்கும் ஏற்பட்ட சண்டையில் பலர் உயிரிழந்தனர். பேரரசுப்படையின் ஒரு பகுதி வீரபாண்டியரைத் தேடும் முயற்சியில் ஈடுபட்டது. ஜல்கோடாவில் (Jal-Kota) அவர் இருப்பதாக செய்தி கிடைத்ததும் அதை நோக்கிப் படை புறப்பட்டது. இது தீவுக் கோட்டையை குறிக்கிறது என்றும் இதுவே பின்னர் தேவக் கோட்டை என அழைக்கப்பட்டது என்றும் இது கொள்ளிடத்தின் முகத்துவாரத்தில் உள்ளது என்றும் கூறப்படுகிறது.[1] முஸ்லிம் படைகள் தம்மை நோக்கி வந்து கொண்டிருக்கின்றன என்ற செய்தியை அறிந்த வீரபாண்டியர் அங்கிருந்து காட்டிற்குள் ஓடி ஒளிந்தார். ஆகவே தமது போர் ஆலோசனைக் குழுவின் கருத்துப்படி மலிக்காபூர் மீண்டும் கந்தூர் திரும்பினர்.

அடுத்தநாள் பர்மத்புரி அல்லது பிரமஸ்த்புரி[2] என்னுமிடத்தில் பொன்னுலான கோயில் ஒன்று இருப்பதாகவும் அந்த ஊரைச் சுற்றி வீரபாண்டியரின் யானைகள் மேய்ந்துகொண்டிருக்கின்றன என்றும் மலிக் காபூர் கேள்வியுற்றார். உடனே மலிக்காபூர் பர்மத்புரியை நோக்கி விரைந்தார். 250 யானைகளை அங்கு கைப்பற்றினர். பிறகு பொன்னுலான கோயிலை சென்றடைந்தார். தன் சுவர்களும், மச்சும் விலை உயர்ந்த கற்களால் அலங்கரிக்கப்பட்டு இருந்த அக் கோயில் தேவலோகத்தைப் போல் அவர்களுக்குத் தோன்றியதில் வியப்பேதுமில்லை. மலிக் காபூர் கோயிலை இடித்துத் தள்ளும்படி உத்தரவிட்டார். நூற்றுக் கணக்கான பிராமணர்களும் ஏனைய இந்துக்களும் அவரது கத்திக்கு இரையாகினர். லிங்க மகாதேவா என்ற பெயரால் அழைக்கப் பட்ட வழிபாட்டுச் சிலை உடைத்தெறியப்பட்டது. தேவநாராயண சிலையையும் ஏனைய சிலைகளையும் அவற்றின் இருப்பிடத்திலிருந்து ஆகாயத்தில் வீசி எறியப்பட்டன. கோயிலில் மறைத்து வைக்கப் பட்டிருந்த செல்வத்தைத் தோண்டி எடுப்பதில் தீவிரமான முயற்சி மேற்கொண்டு பெரும் பொருளை திரட்டினர்கள். பிர்தூல் திரும்பிய பிறகு அங்கிருந்த கோயில்களை அழித்து அவற்றையும் கொள்ளையடித்து தாங்கள் ஏற்கனவே பெற்ற செல்வத்துடன் சேர்த்தனர்.

இப்படையெடுப்பின் போது ஸ்ரீரங்கம் கோயில் முஸ்லிம் படைகளின் தாக்குதலுக்கு இலக்காகியிருந்ததா என்ற கேள்வி

[1] ACHI, F.N. p. 416.

[2] இது சிதம்பரத்தைக் குறிக்கிறது.

எழுப்பப்பட்டுள்ளது. பர்மத்புரி என்பது ஸ்ரீரங்கத்தைக் குறிக்கிறது என்பர் சிலர். பர்மத்புரியில் இருந்த லிங்கம் உடைக்கப்பட்டது என்று கூறி இருப்பதாலும், ஸ்ரீரங்கக் கோயில் லிங்கத்தைக் காணுவதற்கரிது என்பதாலும் பர்மத்புரி என்பர் சிலர். ஸ்ரீரங்கத்தைக் குறிக்காது என்பர். ஸ்ரீரங்கக் கோயிலை அழித்ததாக அமீர் குஸ்ரு ஐயத்திற்கிடமற்ற வகையில் குறிப்பிட்டிருக்கவில்லை என்றாலும் கந்தூருக்குச் சுற்றியிருந்த இடங்களில் அமைக்கப்பட்டிருந்த கோயில்களை அழித்தார் என்று கூறியுள்ளார். கந்தூர் என்பது கண்ணனூரைக் குறிக்கின்றது என்பதை ஏற்றுக் கொள்வோமேயானல் அதற்கருகேயிருந்த கோயில்களுள் சிறப்பு வாய்ந்த ஸ்ரீரங்கம் கோயில் முஸ்லிம்களின் தாக்குதலிலிருந்து தப்பிக்க வழியில்லை. கோயிலேலுஹு (koyiloluhu) என்னும் நூலில் ஸ்ரீரங்கம்கோயில் அழிக்கப்பட்டதைப் பற்றியும், அங்கிருந்த சிலையை மலிக் காபூர் டில்லிக்குக் கொண்டு சென்றதைப் பற்றியும் கூறப்பட்டுள்ளது.[1] இதில் அளிக்கப்பட்டுள்ள குறிப்புகள் செப்புத் தகடுகளிலும் கற்களின் மீதும் பொறிக்கப்பட்டுள்ள சாசனங்களை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டிருப்பதால் இது வரலாற்று சிறப்பு வாய்ந்த நூல் எனக் கருதப்படுகிறது. எனவே ஸ்ரீரங்கக் கோயிலையும் மலிக் காபூர் அழித்திருக்க வேண்டும் என்பது புலனாகும்.

**1311**ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 7ந் தேதி டில்லிப் படைகள் மீண்டும் அணி வகுத்து நடந்து கனும் (Kanum) அல்லது கும் (Kum) என்னுமிடத்தை அடைந்தன.[2] அங்கிருந்து புறப்பட்டு ஐந்தாவது நாளன்று சுந்தர பாண்டியருடைய தலைநகரான மதுரையை அடைந்தன. இரண்டு அல்லது மூன்று யானைகளை ஜக்நார் கோயிலில் விட்டுவிட்ட தமது இராணிகளுடன் நகரை விட்டு சுந்தரபாண்டியர் ஓடிவிட்டார்.[3] கோயிலில் இருந்த யானைகளைக் கைப்பற்றிக்கொண்டு கோயிலைத் தீக்கிரையாக்கிவிட்டு மதுரை விட்டு நீங்கினர். இத்துடன் தமது தாரீக்-இ-அலாயில் அமீர்குஸ்ரு மலிக் காபூரின் தென்னிந்தியப் படையெடுப்பு முற்றுப் பெற்றுவிட்டதாகக் கூறியிருக்கின்றார். ஆனல் ஆஷிகா என்னும் நூலில் மேலும் பல விவரங்களை இப்படையெடுப்புடன் சேர்த்துள்ளார். இலங்கை வரை தமது படையை நடத்திச் செல்லும் நோக்குடன் மலிக் காபூர் மாபாரை நோக்கிப் புறப்

[1] For details see Aiyangar op. cit 113-116.

[2] கனும் என்பதும் கடம்ப வனத்தைக் குறிக்கிறது என்று அய்யங்கார் கூறியுள்ளார்.

[3] இது விஷ்ணுவினுடைய ஆலயமென்று எலியட் கருதுகிறார். ஜக்நார் என்பது Chokkanatha என்பதன் திரிபு என்கிறார் அய்யங்கார்.

பட்டார். அப்போது பாண்டியகுரு என்பவர் அதனை ஆண்டு வந்தார். அவருக்குப் பல பட்டணங்கள் சொந்தமாக இருந்தன. அவற்றுள் ஒன்று ஃபதன் (Fatan). அதுவே அவரது தலைநகர மாகும். அங்கு அணிகலன்கள் நிரம்பிய ஓர் உருவச் சிலையிருந்தது என்று அதில் குறிப்பிடப்பட்டுள்ளது. பாண்டியகுரு என்பது பாண்டிய இளவரசர்களுள் ஒருவராக இருக்கக் கூடும். அவரிடம் பல வீரர்களும் கப்பல்களும் இருந்தனர். ஆயிரம் குதிரைகள் அவர் வைத்திருந்தார். முஸ்லிம் படையெடுப்பின்போது ஃபதனை விட்டு அவர் ஓடினார். 500 யானைகள் அவரிடமிருந்து கைப்பற்றப் பட்டன. அங்கிருந்த உருவச் சிலையை உடைத்துவிட்டு டில்லி திரும்பினர் என்றும் அமீர் குஸ்ரு கூறியுள்ளார். ஃபதன் என்பது பட்டணத்தைக் (Pattanam) குறிக்கிறது என்றும், அது இராமேஸ் வரத்தைக் குறிப்பிடவில்லையென்று சொன்னாலும் அதன் அருகி லுள்ள ஓரிரு பட்டணங்களுள் ஒன்றாக இருத்தல் வேண்டும் என்றும் அமீர் குஸ்ரு குறிப்பிட்டுள்ள கோயில் இராமேஸ்வரக் கோயிலைக் குறிப்பிடுகின்றதென்றும் அய்யங்கார் கூறியுள்ளார்.[1] சித் பந்த் ராமிசார் என்னுமிடத்தில் மசூதி ஒன்று தம் காலத்தில் இருந்ததாகவும் அதனை மலிக் காபூர் கட்டியதாகவும் பிரிஷ்டா கூறுகிறார். துவார சமுத்திராவிலிருந்து சரன்தீப் (இலங்கை)பிற்குச் சென்று மகாதேவா லிங்கத்தை மலிக்காபூர் உடைத்தார் என்று ஹாஜி உத்தபீர் கூறியுள்ளார்.

தென்னிந்தியப் படையெடுப்பின் போது மலிக் காபூர் புகழ் மிக்க சிவாலயம் ஒன்றை அழித்தார் என்பதை எல்லா வரலாற் றாசிரியர்களும் கூறியுள்ளனர். அமீர் குஸ்ரு இராமேஸ்வரம் என்ற பெயரை எந்த இடத்திலும் கூறவில்லை. தேவால் இராணியில் இலங்கை கடலின் கரை வரை சென்றதாக மட்டுமே கூறியுள்ளா ரேயன்றி இராமேஸ்வரத்திற்குச் சென்றதாகக் குறிப்பிடவில்லை. காஜாயினில் மர்ஹத்புரி என்னுமிடத்தில் சிவாலயம் ஒன்றை அழித்திருப்பதை அவர் குறிப்பிட்டுள்ளார். அது பர்மத்புரி அல்லது பிரம்ஹஸ்த்புரியை குறிப்பதாக பலர் கருதுகின்றனர். பர்மத்புரி என்பது சிதம்பரத்தைக் குறிக்கின்றது என்று அய்யங்கார் எடுத்துக்காட்டியுள்ளார். ஆகவே மலிக் காபூர் அழித்த சிவாலயம் சிதம்பரத்தில் இருக்கும் ஆலயமேயன்றி இராமேஸ்வரத்தில் உள்ள ஆலயமன்று என்று கருதப்படுகிறது. மேலும் தேவால் இராணியில் கூறப்பட்டிருக்கும் ஃபதன்கள் காவிரிப்பட்டினம், நாகப்பட்டினம் ஆகியவற்றை குறிப்பிடு கின்றதேயன்றி இராமேஸ்வரத்தைக் குறிக்கவில்லை என்று

[1] p. 101.

கே. எஸ். லால் கருதுகிருர்.[1] மேலும் மலிக் காபூர் பல நதிகளேக் கடந்ததாக அமீர் குஸ்ரூ கூறியுள்ளாரேயன்றி கடலேக் கடந்ததாக எங்கும் கூறவில்லே. தற்கால ஆசிரியர்களுள் சிலர் மலிக் காபூர் மதுரைவரை செல்லவில்லே என்று வாதாடுகின்றனர்.[2] கோயிலோ லூஹு்வில் முஸ்லிம்கள் 1324ஆம் ஆண்டிற்குப் பிறகுதான் மதுரை வரை ஊடுருவிச் சென்றனர் என்று கூறப்பட்டுள்ளது என்பதை ஈண்டு அறிதல் அவசியமாகும். அவ்வாறிருக்க தற்போது நமக்குக் கிடைத்திருக்கும் சான்றுகளே வைத்துக்கொண்டு காபூர் இராமேஸ்வரம் வரை சென்றதாகக் கூறுவது சரியாகாது.[3]

படையெடுப்பை முடித்துவிட்டு 512 யானேகள், 5,000 குதிரைகள், 500 மணங்கு விலேயுயர்ந்த கற்கள் ஆகியவற்றுடன் 1311ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 25ஆம் தேதி டில்லி நோக்கிப் புறப்பட்டார். அதே ஆண்டு அக்டோபர் மாதம் 19ஆம் தேதி மலிக் காபூரையும் ஏனேய படைத் தலேவர்களேயும் வரவேற்க தர்பார் ஒன்றினுக்கு ஏற்பாடு செய்தார். மலிக் காபூருடன் வீர பல்லாளாவும் டில்லி சென்ருர். பல்லாளா காபூருக்கு அளித்த உதவியையும் அவர் டில்லி அரசருக்குக் காட்டிய விசுவாசத்தையும் பாராட்டும் வகையில் அலாவுத்தீன் அவருக்கு கௌரவ உடையையும், மணி முடியையும், வெண் குடையையும், 10 இலட்சம் தங்காக்களேயும் பரிசாக வழங்கினுர். பல்லாளாதேவாவின் டில்லி விஜயத்தைப் பற்றி இசாமி மட்டுமே நமக்குக் கூறியுள்ளார். பரணியும் அமீர் குஸ்ரூவும் இதைப்பற்றி நமக்குக் கூறவில்லே. ஆயினும் வீரபல்லாளதேவா டில்லிக்குச் சென்றதைப்பற்றிய குறிப்பு நமக்கு ஒரு கல்வெட்டின் வாயிலாகவும் கிடைத்திருக்கிறது என்பதை அறியும் போது இசாமி நமக்கு ஒரு உண்மைச் செய்தியைத் தந்துள்ளார் என்பது புலப்படுகிறது.[4]

### மூன்ருவது தேவகிரி படையெடுப்பு

1312ஆம் ஆண்டில் இராமச்சந்திர தேவா இறந்தார். அவருக்குப் பின் சிங்கஞ பட்டத்திற்கு வந்தார். தக்காணத்தில் முஸ்லிம் படையெடுப்புத் தொடங்கிய நாள் முதற்கொண்டு சிங்கஞ முஸ்லிம்களே வெறுத்து வந்தார். தம்மை மணக்க வந்து கொண்டிருந்த தேவால் இராணியை முஸ்லிம்கள் கடத்திக் கொண்டு சென்றபோது அவருடைய வெறுப்பு மேலும்

[1] p. 351.

[2] Ind. Ant. 1911, 131-44

[3] K.S. Lal op. cit. p. 353

[4] Epic. Carn. VII Shimoga taluk, Inscription No. 68

வளர்ந்தது. சிங்கனுவைக் கட்டுப்படுத்த இயலாமல் இராமச் சந்திர தேவா ஒருசமயம் டில்லி சுல்தானுடைய உதவியை நாட வேண்டியதாக இருந்தது என்பதை முன்னர் கண்டோம். எனவே சிங்கனு அரசுரிமையைப் பெற்றதும் சுதந்திரமாகச் செயல்படத் துவங்கியதில் வியப்பேதும் இல்லையல்லவா? அதே நேரத்தில் தாம் செலுத்த வேண்டிய கப்பப்பணத்தை வாங்கிக்கொள்ள யாரையேனும் அனுப்பும்படி சுல்தானை பிரதாப் ருத்ர தேவா கேட்டுக் கொண்டார். அச்சமயத்தில் மலிக் காபூருக்கும் மல்கா-இ-ஜஹான் அவரது புதல்வர் கிஸர்கான் ஆகியோருக்கும் இடையே பகைமை உணர்ச்சி வளர்ந்து வந்தது. மலிக் காபூர் மல்கா-இ-ஜஹானைக் கண்டு மிகவும் பயப்பட்டார். ஆகவே இத்தருணத்தைப் பயன் படுத்திக் கொண்டு தக்காணம் போய்விடுவதே மேலாகும் என்று காபூர் எண்ணினார். ஆகவே அவர் சுல்தானை அணுகி தம்மை தக்காணத்திற்கு அனுப்பி வைத்தால் ஒரே நேரத்தில் பிரதாப் ருத்ர தேவா அளிக்கவேண்டிய பணத்தை வாங்கிக்கொண்டும், புரட்சிக் கொடியை உயர்த்தி விட்ட சிங்கனுவை அடக்கி விட்டும் வருவதாகக் கூறினார். சுல்தானும் அதற்கிசைந்து அவரை தக்காணத்திற்கு அனுப்பி வைத்தார்.

முதலில் அவர் தேவகிரிக்குச் சென்றார். சிங்கனு போரில் தோற்று உயிர்துறந்தார் என்பர் சிலர்.[1] மற்றும் சிலர் மலிக் காபூருடன் போர் செய்யாது தேவகிரியை விட்டு ஓடிவிட்டார் என்று கூறுகின்றனர். அதன் விளைவாக இரத்தம் சிந்தாமல் தேவகிரியை மலிக்காபூர் கைப்பற்றி விட்டார் எனக் கூறப் படுகிறது. இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு சிங்கனுவின் பெயரை நாம் கேள்விப்படுவதில்லை. மலிக்காபூர் டில்லி திரும்பி விட்டபிறகு தேவகிரியை ஹர்பால் தேவா ஆட்சிசெய்தார் என்று அறிகிறோமே யொழிய சிங்கனு ஆண்டுவந்ததாக நாம் அறிவதில்லை. தெலிங் கானு, ஹோய்சளா நாடுகளின் எல்லையிலிருந்த சில நகரங்களையும் காபூர் தாக்கியதாகக் கூறப்படுகிறது. டில்லி அரசிடத்தில் போதிய பயத்தை உண்டாக்கவே இத்தாக்குதலை நடத்தினார்[3]. தேவகிரியில் 1314ஆம் ஆண்டுவரை அவர் இருந்து தக்காண விவகாரங்களை கவனித்துவந்தார். அப்போது மராத்திய மக்களைத் தம் பக்கத்தில் சேர்த்துக் கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டார். மராத்தியர்களைக் கொல்லுதல், சிறையிலடைத்தல் போன்ற செயல்கள் அக்காலத்தில் நடைபெறவில்லை. அவரது பாது

[1] Lal, Op. cit. 256

[2] ACHI., p. 420

[3] Lal op. cit. 256

காப்பின் கீழ் மக்கள் சுதந்திரமாகத் திரிந்தனர். ஒரு தோட்டத்தில் பருவ மழை பெய்வது போன்று தேவகிரியில் நீதி தவறுமல் ஆட்சிசெய்து மக்களுடைய வாழ்வை வளம்படுத்தினர். சுல்தானுடைய மற்ருெரு மகன் ஷாதிகானுடைய திருமணத்தில் கலந்து கொள்ளுவதற்காக அவருக்கு அவசர அழைப்பு ஒன்று டில்லியிலிருந்து வரவே செய்திவந்த ஒருவாரத்திற்குள் அவர் டில்லி திரும்பி விட்டார்.

அலாவுத்தீனுடைய தென்னிந்தியப் படையெடுப்பின் வெற்றிக்குப் பல காரணங்கள் உண்டு. தென்னிந்திய அரசுகளிடம் ஒற்றுமை ஏற்பட்டிருக்கவில்லை. அதற்கு மாருக அவை ஒன்றோடொன்று போரிட்டு இருந்தன. இதைப்பற்றி நாம் முன்பே கவனித்துள்ளோம். அதுமட்டுமின்றி தென்னிந்திய அரசுகளுக்கு எதிராக மலிக்காபூர் படை நடத்திச் சென்றபோது மற்ற தென்னிந்திய அரசர்கள் அவருக்கு உதவி புரிந்தனர். தெலிங்காஞவை வெல்ல இராமச்சந்திர தேவா மலிக்காபூருக்கு உதவி செய்தார். அதேபோல் மாபார் படையெடுப்பின்போது பல்லாள தேவா காபூருக்கு உதவியளித்தார். அன்னியப் படையெடுப்பின்போது எல்லா அரசர்களும் தங்களிடம் ஏற்பட்டிருந்த பகைமையுணர்ச்சியை மறந்து விட்டு அனைவரும் ஒன்று சேர்ந்து எதிர்த்திருப்பார்களேயாஞல் தென்னிந்தியாவின் வரலாறு வேறு விதமாக அமைந்து விட்டிருக்கும்.

தென்னிந்திய அரசர்கள் கையாண்ட போர் முறை சரியானதன்று. மலிக்காபூரின் நோக்கம் தென்னிந்தியாவின் செல்வத்தைக் கைப்பற்றுவதேயாகும். அக்காரியத்தை எவ்வளவு விரைவில் முடிக்க இயலுமோ அவ்வளவு விரைவாக அதனை முடிக்க அவர் விரும்பினர். ஏனெனில் தலைநகரில் இருந்து வெகுதூரம் சென்று அவர் போர்புரிய வேண்டியதாக இருந்தமையால் அங்கிருந்து போர் உதவிகள் எளிதாகப் பெற இயலாது. மேலும் இந்துக்கள் வாழ்கின்ற பகுதியில் அவர் போரிட வேண்டியதாக இருந்தது. மக்கள் அவருக்கு எதிராக எழுவதற்கு முன் அவர்களுடைய அரசர்களை விரைவில் தோற்கடித்து அவர்களிடமிருந்த செல்வத்தைப் பறித்துக்கொண்டு விரைவில் திரும்பி விடுவதே நலமென அவர் எண்ணினர். இதை இந்து அரசர்களும் அவர்களுடைய அதிகாரிகளும் புரிந்து கொண்டிருப்பின் அவர்கள் கோட்டைக்குள் புகுந்து கொண்டிருக்கமாட்டார்கள். அதற்கு மாருக நாட்டில் பல பகுதிகளுக்குச் சென்று ஒருவிதமான 'கொரில்லா' போர்முறையில் ஈடுபட்டிருப்பார்கள். பகைவருடைய பலத்தை இத்தகையப் போர்முறையைப் பின்பற்றி

சீரழித்து இருப்பார்களேயானல் மலிக்காபூர் வெற்றியடையாது திரும்பிவிட நேர்ந்திருக்கும். தெலிங்கான ரவாத்துகள் அனைவரும் கோட்டையில் புகலிடம் தேடிப் போனார்கள் என்றும் ஆகவே கோட்டைக்கு வெளியேயிருந்து பகைவரைத் தாக்க இயலாது போயிற்று என்றும் முன்னர் அறிந்தோம் பாண்டிய மன்னர்கள் இத்தகைய போர் முறையைக் கையாளவில்லை. பகைவர்கள் அவர்களுடைய இருப்பிடத்தை நெருங்கியபோது அவ்விடத்தை விட்டு வேறோர் இடத்திற்கு ஓடிவிட்டனர். ஆகவேதான் அவர்கள் ஏனைய அரசர்களைப்போல ஆண்டுதோறும் கப்பப்பணம் செலுத்தி வரவேண்டிய நிலையினை அடையவில்லை.

தென்னிந்தியப் படைகள் துருக்கியப் படைகளுக்குச் சமமான உடல் வலிமையையும், பயிற்சியையும் பெற்றிருக்கவில்லை. 12, 13, ஆம் நூற்றாண்டுகளில் தென்னிந்திய படைவீரர்களின் நிலைமையைப்பற்றி மார்கோ போலோ விவரமாக எழுதியுள்ளார். படைவீரர்கள் போர்க்களத்திற்கு ஆடையின்றி கையில் ஈட்டியை கேடயத்தையும் ஏந்திக்கொண்டு சென்றனர். அவர்கள் காய்கறி உணவை உட்கொண்டனர். அரிசி அவர்களுடைய முக்கிய உணவாகும். வைதீகத்தில் மிகுந்த நம்பிக்கை உண்டு. குளிப்ப திலும், தீண்டாமையிலும் அவர்கள் காட்டிய அக்கறையை போர் செய்கைகளில் காட்டவில்லை என்று மார்கோபோலோ கூறி யுள்ளார். அதற்கு மாறாக டில்லிப் படையின் மங்கோலியர் களுடன் அடிக்கடி போரிட்டு தக்க போர் பயிற்சியைப் பெற்றிருந் தனர். அவர்கள் புதிய வகையான போர்க் கருவிகளையும், மங்கோலியரிடமிருந்து கற்றறிந்த போர் முறைகளையும் பயன் படுத்தினார்கள். அவர்களுடைய உணவு அவர்களைப் பலசாலி களாக்க உதவியது. பொன் மீதிருந்த ஆசையும், மதப்பற்றும் அவர்களுக்குப் போதிய ஊக்கத்தை அளித்திருந்தன. அவர் களுடைய குதிரைப்படைகள் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு எளிதில் செல்ல மிகவும் பயனுள்ளதாக இருந்தன. மேலும் அலாவுத்தீன் சீர்திருத்தங்கள் பல மேற் கொண்டு படை யின் எண்ணிக்கையையும், போர்த்திறத்தினையும் வெகுவாக உயர்த்திவிட்டார். மலிக்காபூரின் ஈடு இணையற்ற படை நடத்தும் திறமும் முஸ்லிம்களுடைய வெற்றிக்கு ஒரு காரண மாகும்.

இனி தக்காணத்தில் அலாவுத்தீன் கையாண்ட கொள்கையைப் பற்றி சிறிது கவனிப்போம். முஸ்லிம் ஆட்சியினை நிலையாகத் தென்னிந்தியாவில் ஏற்படுத்த வேண்டும் என்ற எண்ணம் அலா வுத்தீனுக்கு ஏற்படவில்லை. இராஜஸ்தானில் நாடு சேர்க்கும்

கொள்கையினுல் அலாவுத்தீன் அடைந்த இன்னல்கள் பல. ஆகவே தக்காணத்தில் மீண்டும் அக்கொள்கையினைக் கடைபிடித்து மேலும் இன்னல் அனுபவிக்க அவர் விரும்பவில்லை. மலிக்காபூர் வாரங்கல் நோக்கிப் படை நடத்திச் செல்லும்போது அலாவுத்தீன் கூறிய அறிவுரைகளிலிருந்து தக்காண அரசுகளை தம்முடைய நேரடி ஆட்சியின் கீழ் கொண்டுவர விரும்பவில்லை என்பது நன்கு புலனுகும். அலாவுத்தீன் விரும்பியதெல்லாம் தக்காணத்தின் செல்வமே யாகும். தக்காண நாடுகளைத் தமது நாட்டோடு இணைக்காமலேயே அவற்றைப் பெற வாய்ப்பு உண்டு என்பதை அவர் உணர்ந்து விட்டமையால் அக்கொள்கை அவர் கடைபிடிக்க வில்லை. மேலும் தக்காண அரசுகள் முழுமையாகத் தோல்வி யடைந்து விட்டதாக எண்ணவில்லை. சிங்கனு தமது சுதந்திரத்தை மீண்டும் பெறுவதற்கு இடைவிடா முயற்சியில் ஈடுபட்டார். வீரபாண்டியரை மலிக்காபூர் நேரடிச் சண்டையில் தோற்கடிக்க இயலாது போயிற்று. இந்தநிலையில் அவ்வரசுகளை தம் நாட்டோடு அலாவுத்தீன் இணைத்து விட்டிருப்பின் அவரது கஷ்டங்கள் பெருகி யிருக்கும் என்பது திண்ணம்.

தக்காணப்படையெடுப்புகள் அலாவுத்தீனுக்குப் பெருஞ் செல்வத்தைத் தேடித்தந்தன. அவரது செல்வாக்கும் பெருமை யும் பெருகியது. மலிக்காபூரின் பெருமையும் உயர்ந்தது. மலிக் காபூருக்கு நாயிப் (naib) பட்டத்தைத் தேடித்தந்ததும் தக்காணப் படையெடுப்பேயாகும்.

**அலாவுத்தினுடைய கோன்மைக் கோட்பாடு: (Theory of Kingship)**

அலாவுத்தீன் ஒரு சிறந்த படைத்தலைவர் மட்டு மன்று. அவர் ஒரு சிறந்த நிருவாகியும் கூட. அவரது கோன்மைக் கோட் பாடு (Theory of Kingship) அவருடைய நிருவாகத்திறமைக்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டாகும்.

முஸ்லிம் அரசர்களுடைய வேலைகளுள் ஒன்று இஸ்லாமிய மதத்தைப் பரப்புவதாகும். அதற்காக அவர்கள் நாடுகளை வெல்வது வழக்கமாகும். டில்லி சுல்தானியமும் அவ்வாறே தோன்றியதாகும். டில்லி சுல்தானியத்தில் முஸ்லிம் அல்லாதாரே பெரும்பான்மையினராக இருந்தனர். ஆகவே இஸ்லாமிய மதத்தைப் பரப்பும் முறற்சியில் முஸ்லிம் அல்லாதாரின் நலன்களை முழுமையாக புறக்கணிக்க இயலாத நிலை இந்தியாவில் ஏற்பட்டு விட்டது. அதன் பொருட்டு சில முஸ்லிம் அரசர்கள் அரசியலில் சமயம் செல்வாக்குப் பெறுவதை அனுமதிக்கவில்லை. அவர்களுள் அலாவுத்தீன் முக்கியமானவர்களுள் ஒருவராகக் கருதப்படு கின்றனர்.

அலாவுத்தீனுடைய கோன்மைக் கோட்பாட்டினை அவருக்கும் காஜி முகீஸ் உத்தீனுக்கும் இடையே ஏற்பட்ட உரையாடலின் வாயிலாக நாம் அறிகிறோம். இந்த உரையாடலை பரணியின் தாரீக்-இ-பிருஸ் ஷாயியில் காணலாம். இந் நூலில் பலருடைய பேச்சுகளைக் காண்கிறோம். அவர்கள் அந்த வகையாகப் பேசினார்களா இல்லையா என்பதை நாம் திடமாகக் கூற இயலாது. ஆனால், அலாவுத்தினுக்கும் காஜி முகீஸ் உத்தீனுக்கும் இடையே இந்த வகையான உரையாடல் ஏற்படவேயில்லை என்றும் கூற முடியாது[1]. ஏனெனில் காஜி முகீஸ் உத்தீன் கூறியவற்றிலிருந்து இஸ்லாமிய சமயக்கொள்கை, சமயநூல்கள் ஆகியவற்றைப்பற்றி காஜி முகீஸ் உத்தீன் நன்கு அறிந்து இருந்தார் என்பது விளங்குகிறது. அந்த அளவிற்கு சமய அறிவினை பரணி பெற்றிருக்கவில்லை. எனவே காஜி முகீஸ்உத்தீன் கூறியதாக பரணி நமக்களித்திருக்கும் கருத்துகள் காஜி முகீஸ் உத்தீனுடைய கருத்துகளாக இருக்க வேண்டுமே ஒழிய பரணியினுடையதாக இருக்க முடியாது. எனவே இவ் உரையாடல் உண்மையில் நிகழ்ந்திருக்க வேண்டும். இந் நிகழ்ச்சி நடைபெற்று 50 ஆண்டுகள் கழிந்தபின்னர் இது எழுதப்பட்டமையால் சில தவறுகள் ஆங்காங்கே ஏற்பட்டிருக்க வாய்ப்பு உண்டு; அதனால் இவ்வுரையாடலே பொய்யெனக் கூறுவதும் சரியாகாது.

இவ்வுரையாடலின் மேன்மையை விளக்குவதற்காக அலாவுத்தீன் இஸ்லாமிய மதத்தைப் பற்றி நன்கு அறியாதவராக சித்திரிக்கப்பட்டுள்ளார். 'அவருக்குக் கல்வியறிவு கிடையாது; சமய அறிஞர்களுடன் நெருங்கிப் பழகுவதில்லை; ஆகவே, இஸ்லாமியச் சட்டத்தைப் பற்றி அவருக்கு ஒன்றும் தெரியாது. திருக்குரானில் கூறப்பட்டுள்ளவை யாவை என்பதையும், நபிகள் நாயகத்தின் ஹதீசுகள் என்ன கூறுகின்றன என்பதையும் அவர் அறிந்திருக்கவில்லை' என்றவாறு பரணி நமக்கு எடுத்துக் காட்டுகிறார்.

இவ்வுரையாடலில் நான்கு முக்கியப் பிரச்சினைகள் இடம் பெற்றிருந்தன. அவற்றுள் முதலாவது இந்துக்களைப் பற்றியதாகும். அலாவுத்தீன் இந்துக்களை மிகக் கடுமையாக நடத்தினார். அவர்களை ஜிசியா வரியைச் செலுத்துமாறு வற்புறுத்தினார். விளைச்சலில் 50 சதவீதம் நில வரியாக வசூலித்தார். மேய்ச்சல் வரி, வீட்டு வரி போன்ற வரிகளையும் அவர்கள்மீது சுமத்தினார். குதிரைமீது செல்லுதல், நல்ல ஆடைகள் அணிதல், வெற்றிலைப்

[1] ACHI., p. 362.

பாக்கு போடுதல் போன்ற மிகச் சாதாரண ஆடம்பர வழக்கங்களைப் பின்பற்றுதல் ஆகிய காரியங்கள் இந்துக்களுக்கு இயலாதனவாகி விட்டன. இந்துத் தலைவர்களுடைய மனைவி மார்கள் முஸ்லிம்கள் இல்லத்தில் வீட்டு வேலை செய்யும் அளவிற்கு அவர்கள் ஏழையாகி விட்டனர். ஆனால் இந்துக்களை மிரட்டி இஸ்லாமிய மதத்தைத் தழுவச் செய்யவில்லை. இஸ்லாமிய மதத்தைத் தழுவ விரும்பாதவர்களைக் கொல்லுவதா அல்லது ஜிசியா வரியை மட்டும் செலுத்தச் செய்வதா என்பதில் அலாவுத்தீனுக்கு ஐயம் ஏற்பட்டது. ஆகவே, திருக்குரானும் ஹதீசுகளும் அதைப்பற்றிக் கூறுவது யாது என்பதை அவர் அறிய விரும்பினார். இந்துக்கள் நபிகள் நாயகத்தினுடைய எதிரிகளுள் மிக முக்கியமானவர்கள் என்றும் ஆகவே அவர்களைக் கொல்ல வேண்டும் அல்லது கொள்ளையடித்து அவர்களை அடிமைகளாக்க வேண்டும் என்று நபிகள் நாயகம் கூறியிருப்பதாகக் காஜி முகீஸ் உத்தீன் சுல்தானிடம் கூறினார். இவையிரண்டும் முழுப் பொய்கள். தமது வாழ்நாளில் இந்துக்களை நபிகள் நாயகம் சந்தித்ததேயில்லை. அவர்களைக் கொல்ல வேண்டும், அடிமை களாக்க வேண்டும், அவர்களுடைய செல்வத்தைப் பறித்துக் கொள்ள வேண்டும் என்று அவர் ஆணையிட்டதாக ஹதீசுகளில் எங்கும் காண முடியாது. அக் கேள்விக்குப் பதில் அளிக்கும் வகையில் மேலும் சில கருத்துகளை காஜி முகீஸ் உத்தீன் கூறினார். முஸ்லிம்களுள் இரு பிரிவுகள் உண்டு. ஒரு பிரிவினர் இமாம் அபு ஹனீபாவினுடைய கருத்தினை ஏற்றுக் கொண்டனர். அதாவது ஜிசியா வரியைச் செலுத்திய இந்துக்களுக்கு அவர்கள் விரும்பிய மதத்தைத் தொடர்ந்து பின்பற்ற அனுமதி அளிக்க வேண்டும் என்பதாகும். மற்றொரு வகையினர் இந்துக்களை இஸ்லாமிய மதத்தை ஏற்றுக்கொள்ளச் செய்ய வேண்டும்; தவறினால் அவர்களைக் கொன்றுவிட வேண்டும் என்ற கொள்கையில் நம்பிக்கை கொண்டிருந்தனர். காஜி முகீஸ் உத்தீன் முதலில் கூறப்பட்ட கூட்டத்தைச் சார்ந்தவர். ஆகவே, அலாவுத்தீன் இந்துக்களை நடத்திய விதம் சரியானது என்று கூறுவதுடன் அவர் மனநிறைவு கொள்ளாமல் பின்வருமாறும் கூறினார்: இந்துக்கள் கப்பம் செலுத்தப் பிறந்தவர்கள். வரி வசூல் அதி காரிகள் அவர்களிடம் வெள்ளியைக் கேட்டால் மறுமொழி ஏதும் கூறாமல் தங்கத்தைக் கொடுக்க வேண்டும்; ஓர் இந்துவி னுடைய வாயில் வரி வசூல் அதிகாரி எச்சில் துப்ப வேண்டும் என்று விருப்பங் கொண்டால் அந்த இந்து தன்னுடைய வாயை முழுமையாகத் திறக்க வேண்டும்; அவ்வாறு செய்வதன் வாயி லாக அவர் அவ்வதிகாரியிடம் கொண்டிருக்கும் மரியாதையையும், கீழ்ப்படியும் தன்மையையும் வெளிப்படுத்த வேண்டும் என்றார்.

அடுத்த பிரச்சினை அரசாங்கப் பணத்தைத் திருடுதல், இலஞ்சம் வாங்குதல், தப்புக்கணக்கு எழுதுதல் போன்ற செய்கைகளில் ஈடுபட்டிருந்த அரசாங்க அலுவலர்களைப்பற்றியதாகும். அலாவுத் தீன் அத்தகைய அதிகாரிகளைக் கடுமையாகத் தண்டித்துவந்தார். படைகளின் கூட்டணி பார்வையீட்டின்போது (military review) ஒரு குதிரை வீரர் வரத்தவறினால் அவரிடமிருந்து 3 ஆண்டு சம்ப ளத்தைத் திருப்பி வாங்கும்படி அலாவுத்தீன் தம் அதிகாரிகளுக்குக் கட்டளை யிட்டிருந்தார். அரசாங்கப் பணத்தைக் களவாடியிருந்த வர்களிடமிருந்து களவுபோன பணம் முழுவதையும் திரும்பப் பெறும்வரை அவர்களை அடித்துத் துன்புறுத்தும்படி ஆணை யிட்டார். பணத்தைத் திரும்பப் பெறும்வரை அவர்களைச் சங்கிலி யால் பிணைத்து வைக்கும்படி உத்தரவிட்டார். அரசியல் குற்ற வாளிகளை ஆயுட்காலம் வரை சிறையிலிட்டார். மாற்றானுடைய மனைவியை இச்சித்தவர்களுடைய ஆண்மையை அழித்தார். அதற்கு உடன்பட்ட பெண்களைக் கொல்லுவித்தார். மதுவகைகளைத் தயாரிப்பவர்களையும் குடிப்பவர்களையும் ஆழமான குழிகளில் போடும்படி ஆணையிட்டார். கலகங்கள் ஏற்பட்டபோது நல்லவர் கெட்டவர் என்ற பாகுபாடின்றி அனைவரையும் கொன்றார். அவர் களுடைய மனைவிமார்களையும் மக்களையும் அனாதைகளாக்கி வறுமையில் ஆழ்த்திவிட்டார். இந்த வகையான தண்டனைகளை இஸ்லாமிய சட்டம் அனுமதிக்கிறதா இல்லையா என்பதைக் கூறும் படி காஜி முகிஸ் உத்தீனை அலாவுத்தீன் கேட்டார். இதைப்பற்றி ஷரியத்தில் யாதொரு குறிப்பும் இல்லை. ஆகவே, காஜி முகீஸ் உத்தீன் இதைப்பற்றித் தாம் எந்த நூலிலும் படிக்கவில்லை என்றும் தவறு செய்யும் அதிகாரிகளைத் தம் விருப்பம்போல் தண்டிக்க அரச ருக்கு உரிமை உண்டு என்றும் கூறினார். திருடர்களுடைய கையைத் துண்டிக்கும்படி குரான் கூறியிருப்பது உண்மையே. ஆனால், கூட்டாளிகள் ஒருவரை ஒருவர் ஏமாற்றுவது திருடாகாது. அரசாங்கக் கருவூலம் அரசருக்கு மட்டும் சொந்தமானதல்ல. முஸ்லிம்கள் அனைவரும் அதனுடைய பங்குதாரர்கள். ஆகவே, அப்பணத்தைக் கையாடல் செய்யும் முஸ்லிம்கள் திருடர்கள் ஆக மாட்டார்கள். ஆகவே அதற்காக அவர்களுடைய கைகளை வெட்டி விடுவது இஸ்லாமிய சட்டத்திற்கு விரோதமாகும் என்று அவர் கூறினார்.

மூன்றாவது பிரச்சினை அலாவுத்தீன் தேவகிரியிலிருந்து கொள்ளையிட்டு வந்த செல்வத்தைப் பற்றியதாகும். தேவகிரி யிலிருந்து கொண்டு வந்த செல்வம் தமக்கே உரியது என்பது அலாவுத்தீனுடைய கருத்து. அவர் அரசராவதற்கு முன்பே அச் செல்வத்தைக் கைப்பற்றியிருந்தமையாலும், அரசாங்கக் கரு

லூலத்திலிருந்து தனியாக அதனை எடுத்து வைத்திருந்தமையாலும் அதனைப் பொதுச் சொத்தாகக் கொள்ள வேண்டும் என்பது மற்றோர் கருத்து. எனவே, ஷரியத் அதைப்பற்றி யாது கூறு கின்றது என்று அறிய அலாவுத்தீன் விரும்பினர்.

தேவகிரியிலிருந்து கொண்டுவரப்பட்ட செல்வம் அலாவுத்தீ னுடைய திறமையினுல் மட்டும் பெறப்பட்டதன்று. அது இஸ்லாமியப் படை வலிமையின் வாயிலாகப் பெறப்பட்டதாகும். அவ்வாறு பெறப்பட்ட பொருள் அனைத்தும் பொதுக் கருவூலத்தில் சேர்க்கப்பட வேண்டும் என்று காஜி முகீஸ் உத்தீன் பதில் அளித் தார். அதைக் கேட்டதும் சுல்தான் வெகுண்டெழுந்து அந்தச் செல்வம் எங்ஙனம் அரசுடைமையாகக் கருதப்படும் என மீண்டும் கேட்டார். 'மேன்மை தங்கிய அரசர் சட்டத்தைப் பற்றிய கேள்வியினை என்னைக் கேட்டார். நான் சட்டப் புத்தகத்தில் படித்ததை அப்படியே எடுத்துக் கூறிவிட்டேன். என்னைச் சோதிக்க வேண்டி வேறு சில அறிஞர்களை இதே கேள்வியை சுல்தான் கேட்டு, அவர்களுடைய பதில் நான் அளித்த பதிலில் இருந்து வேறுபட்டு இருக்க நேரின் நான் சுல்தான் அன்பைப் பெறவேண்டு வதற்காகப் பொய் சொன்னேன் என்று சுல்தான் எண்ணக்கூடும். அதன் பிறகு சுல்தான் என்னிடம் நம்பிக்கை கொள்வதும் சட்டத்தைப் பற்றி என்னைக் கலந்தாலோசிப்பதும் அரிதாகி விடுமல்லவா?' என்று காஜி பதிலளித்தார்.

நான்காவது பிரச்சினை அரசாங்கக் கருவூலத்திலுள்ள பணத்தில் சுல்தானும் அவரது குடும்பத்தினரும் பெற்றுள்ள பங்கினைப் பற்றியதாகும். இந்த விஷயத்திலும் திருக்குரானும், ஹதீசுகளும் தக்க பதிலை அளிக்க இயலாத நிலையில் இருந்தன. ஆயினும், காஜி முகீஸ் உத்தீன் தமக்குட்பட்ட கருத்துகளைக் கூறலானர். 'சமயப்பணி ஆர்வம் கொண்ட கலீஃபா'க்களின் (Pious Caliphs) வழியினைப் பின்பற்றி ஆண்டு ஒன்றுக்கு 234 தங்காக்களை அரசர் எடுத்துக்கொள்ளலாம். அதாவது ஒரு குதிரை வீரருக்கு அளித்த ஊதியத் தொகையை அவர் சம்பளமாகப் பெற்றுக் கொள்ளலாம். அல்லது நடுத்தரமான ஒரு கொள்கையை சுல்தான் பின்பற்ற எண்ணினுல் அவர் ஓர் உயர் அதிகாரிக்குக் கொடுத்து வந்த ஊதியத் தொகையைத் தமக்காக எடுத்துக் கொள்ளலாம். அல்லது அவர்களுக்குக் கொடுத்த சம்பளத்தை விடச் சிறிது அதிகமாகவே அவர் எடுத்துக் கொள்ளலாம் என்று சமய அறிஞர்கள் கூறுவார்கள். ஆனுல், அதைப்போல் ஆயிரம் மடங்கு பணத்தை சுல்தான் தமக்கெனச் செலவழிப்பது தவரு காது என்று தாம் கருதுவதாக காஜி கூறினர். ஏனெனில் பண மில்லாக் காரணத்தால் அரச கௌரவத்திற்கு இழுக்கு ஏற்படக்

கூடாது என்றும் அவ்வாறு அவரது கௌரவம் குறைந்துவிடுமே யானுல் நாட்டில் அமைதி நிலவாது என்றும் தாம் கருதுவதாக அவர் கூறினுர். மேற்கண்ட மூன்று வழிகளுள் ஏதேனும் ஒன்றைக் கடைபிடித்து நடக்காமல் கோடிக்கணக்கான பொருளேப் பொதுக் கருவூலத்திலிருந்து எடுத்து சுல்தான் தம்முடைய மனேவி மக்களுக்கு செலவழிப்பாரேயானுல் அதற்காகத் தீர்ப்பு நாளன்று (Day of Judgement) அவர் வருந்த வேண்டியதாக இருக்கும் என்று கூறினுர். அதைக் கேட்டதும் சுல்தான் எல்லேயற்ற கோபம் கொண்டார். காஜி முகீஸ் உத்தீனேக் கடுமையாகத் தண்டிக்கப் போவதாக அறிவித்துவிட்டுத் தமது கேள்விகளுக்கு யோசித்துப் பதிலளிக்குமாறு கேட்டார். ‘ஐயனே! இந்த ஏழை வேலேக்காரனேச் சிறைக்கு அனுப்பினுலும் சரி, அல்லது இரு துண்டுகளாக வெட்டிப்போட்டாலும் சரி, நீர் செய்வதெல்லாம் சட்டவிரோத மாகும். அவற்றை ஆதரிக்கக்கூடிய குறிப்புகள் திருக்குரானிலும் சரி, சமய அறிஞர்களின் கூற்றுகளிலும் சரி, ஏதும் காண இயலாது’ என்று காஜி பதில் கூறினுர்.

மேற்கூறியவாறு சுல்தானிடம் பேசியதற்காக அவர் தம்மைத் தண்டிக்காது விடமாட்டார் என்று காஜி முகீஸ் உத்தீன் எண்ணினுர். ஆகவே, மரணதேவதை தம்மைத் தழுவிக்கொள் வதற்கு முன் தம் மனேவி மக்களிடம் இறுதி விடை பெற்றுக் கொண்டு மறுநாள் அரசவைக்குப் புறப்பட்டுச் சென்ருர். அவர் எதிர்பார்த்ததற்கு நேர்மாருக சுல்தான் அவருக்கு கௌரவ ஆடையை அணிவித்து ஆயிரம் தங்காக்களேப் பரிசாக வழங்கி விட்டு, சுல்தான் பின்வருமாறு கூறினுர்: “மௌலானு முகீஸ் அவர்களே! நான் நூல் ஏதும் படிக்கவில்லே. போதிய அறி வையும் பெற்றிருக்கவில்லே. ஆயினும் நான் ஒரு முஸ்லிமாகப் பிறந்துள்ளேன். என்னுடைய முன்னேர்கள் வழி வழியாக முஸ்லிம்களாகவே இருந்து வந்தனர். கலகங்கள் ஏற்படும் போது பல உயிர்கள் சேதமடைகின்றன. எனவே, நாட் டுக்கும் நாட்டு மக்களுக்கும் எது நன்மை பயக்கும் என்று நான் கருதுகிறேனே அதனே நான் கட்டளேயிடுகின்றேன். ஆனுல், இக்கால மக்கள் எதற்கும் அஞ்சாதவர்களாக இருக்கின்றனர். எதையும் பொருட்படுத்துவதில்லே. எனக்குச் சரியானபடி கீழ்ப் படிந்து நடப்பதில்லே. ஆகவே, அவர்களேக் கீழ்ப்படியவைப்பதற் காகக் கடுமையான தண்டனே கொடுக்கவேண்டியதாக இருக்கிறது. நாட்டுக்கு எது நன்மை பயக்கும் என்றும், எது சூழ்நிலேக்கு உகந்ததாக இருக்கும் என்று நான் கருதுகிறேனே அதனே நான் கட்டளேயாகப் பிறப்பிக்கின்றேன். இஸ்லாமியச் சட்டம் (ஷரியத்) அவற்றை அனுமதிக்கிறதா இல்லேயா என்பது எனக்குத்

தெரியாது. கடவுள் தீர்ப்பு நாளன்று என்னை எவ்வாறு நடத்து வார் என்பதும் நான் அறியேன். ஆனால் மௌலானா முகீஸ் அவர்களே நான் தொழுகை நடத்தும்போது, 'கடவுளே, ஒருவன் மாற்றானுடைய மனைவியை அடைவதால் எனக்குத் தீங்கிழைப்ப தில்லை. அவன் திருடும்போது, என்னுடைய பரம்பரைச் சொத்தி லிருந்து ஏதும் எடுத்துக்கொள்வதில்லை, அவன் மதுவருந்தும்போது எனக்குத் தனிப்பட்டமுறையில் எவ்விதத் தீங்கும் இழைப்பதில்லை; சம்பளத்தை வாங்கிக்கொண்டு படை கூட்டணி மேற்பார்வை யீட்டின்போது வராது நின்றுவிட்டால், மேற்பார்வையீடு தடை பட்டு நின்று போவதில்லை; இவையனைத்தும் உங்களுக்குத் (கடவுளுக்கு) தெரியும்; இந்த நான்கு விதமான குற்றவாளிகளைப் பொறுத்தளவில் நான் நபிகள் நாயகத்தின் கட்டளைகள் படி நடக்கின்றேன்' என்று கூறுகிறேன். ஆனால் இந்த நாட்களில் தங்கள் உயிரைப் பற்றியும் மரணத்திற்குப்பின் தங்களுக்கு நேர விருப்பதைப் பற்றியும் கவலை கொள்ளாதவர்கள், மீசையை முறுக்கி விடுபவர்கள், துரோகச் சிந்தனையில் ஈடுபடுபவர் ஆகி யோரின் எண்ணிக்கை ஒன்றிலிருந்து இலட்சமாகவும், ஒரு இலட்சத்திலிருந்து ஐந்து இலட்சமாகவும் பத்து இலட்சங்களாக வும் உயர்ந்து விட்டிருக்கிறது. நானோ ஒன்றும் அறியாதவன். எனக்கு எழுதவும் படிக்கவும் தெரியாது...... மணமான ஒருவன் மாற்றான் மனைவியிடம் தகாதமுறையில் நடந்து கொண்டால் நான் அவனுடைய ஆண்மையை அழித்துவிடும்படிக் கட்டளை யிடுகின்றேன். இந்தமாதிரியான பயங்கரமான கட்டளையை நான் பிறப்பித்திருந்தும் மாற்றான் மனைவிமார்களைக் கெடுத்து விட்டவர்கள் பலர் என் முன்னிலையில் கொண்டுவந்து நிறுத்தப் படுகின்றனர். மூன்று ஆண்டுகள் சம்பளத்தை திருப்பித்தர வேண்டும் என்று நான் கூறியிருப்பினும், நூறு அல்லது இருநூறு குதிரை வீரர்களுக்குக் குறையாமல் ஒவ்வொரு படை அணிக் கூட்ட மேற்பார்வையீட்டின்போதும் குதிரைவீரர்கள் வராது நின்று விடுகின்றனர்; பணத்தை வாங்கிக் கொண்டு படையணிக் கூட்டமேற்பார்வையீட்டின்போது வராது நின்றுவிட்டுத் தங்க ளுடைய வாழ்க்கையைச் சிறையில் கழிக்கத் தொடங்கிவிடுகிறார் கள். ஊழல் காரணத்திற்காக வருவாய்த்துறை எழுத்தர்களையும், அமீர்களையும் ஆயிரக் கணக்கில் வறுமையில் வாடச் செய்துள் ளேன். அவர்களுடைய உடம்பில் புழுக்களை உட்புகுத்தியுள்ளேன். ஆயினும் தீய வழிகளை அவர்கள் கையாளாது இருப்பதில்லை. வருவாய்த்துறை எழுத்தர் பதவியும், ஊழலும் இரட்டைப் பிறப்புகள் என்று நீ சொல்லலாம். மது விற்பனை செய்தல், மது அருந்துதல் ஆகிய குற்றங்களுக்காக அநேகரை நீரில்லா ஆழமான குழிகளில் தள்ளிக் கொன்று இருக்கிறேன். அதே மாதிரியாக

இன்றும் தொடர்ந்து செய்துவருகிறேன். இந்தவகையான கிணறு களில் அவர்களுக்குக் குடிப்பதற்கும் விற்பதற்கும் என்ன இருக் கிறது? கடவுளுடைய குழந்தைகளைத் திருத்தும் பணியில் யாருமே வெற்றி கண்டதில்லை. அப்படியிருக்க நான் எங்ஙனம் வெற்றி காண முடியும்?''

மேற்கூறியவற்றிலிருந்து அலாவுத்தீனுடைய கோன்மைக் கொள்கை நன்கு விளங்கும். பால்பனைப் போலவே அலாவுத்தீனும் அரசரே அனைவரிலும் உயர்ந்தவர் என்று கருதினுர். அரசரே அனைவரிலும் மிக்க அறிவுடையவர் என்று எண்ணினுர். ஆகவே அவருடைய விருப்பத்தையே சட்டமாகக் கொள்ள வேண்டும். இஸ்லாமிய சட்டம், அரசாங்கக் கொள்கை ஆகிய இரண்டும் வெவ்வேறுனவை என்று அவர் கருதினுர். அரசாங்கக் கொள்கையை நிர்ணயிப்பது அரசருடைய பொறுப்பாகும். அதில் தலையிட யாருக்கும் உரிமை கிடையாது. கொள்கையை வரை யறுக்கும்போது நாடு, நாட்டு மக்கள் ஆகியோரின் நன்மைதான் குறிக்கோளாக இருக்க வேண்டும் என்று எண்ணினுர். அது இஸ்லாமியச் சட்டத்திற்கு ஒத்து இருக்கிறதா இல்லையா என்பதைப் பற்றி அரசர் கவலை கொள்ளக் கூடாது. இதுவரை அரசாங்கக் கொள்கையை நிர்ணயிப்பதில் உலேமாக்கள் முக்கியப் பங்கினைக் கொண்டிருந்தனர். அந்த நிலையை முற்றிலும் மாற்றிய முதல் இந்திய முஸ்லிம் அரசர் அலாவுத்தீனேயாவார். அதே நேரத்தில் இஸ்லாமியச் சட்டத்தை விளக்கிக் கூறும் பொறுப்பை யும், அதையொட்டிய விதிமுறைகளை வெளியிடும் பணியினையும் உலேமாக்களிடமே விட்டு வைத்தார். நாட்டு நிருவாகப் பணியில் தாமே தலைசிறந்தவராக இருக்க வேண்டும்; தம்மை எவரும் கட்டுப்படுத்தக்கூடிய நிலையில் இருக்கலாகாது என்பதே அவரது கோன்மைக் கொள்கையின் முக்கிய நோக்கமாகும்.

ஒருசிலர் அவர் சமயச் சார்பற்ற ஆட்சியை அமைத்தார் என்று கூறுகின்றனர். அது சரியாகாது. அவர் இறக்கும் வரை இஸ்லாமிய மதத்தில் பற்றும் நம்பிக்கையும் கொண்டிருந்தார். இஸ்லாமியச் சட்டத்தில் அவருக்கிருந்த நம்பிக்கை குறைய வில்லை. அதற்கு விரோதமாகவும் அவர் நடக்க விரும்பவில்லை. அதுமட்டுமின்றி முஸ்லிம்களைக் காட்டிலும் இந்துக்களை மிகவும் கடுமையாக நடத்தினுர். தமது அதிகாரத்தையும், தமது சொந்த நலன்களையும் பாதுகாப்பதே அவரது நோக்கம். அவற்றில் தலையிட யாருக்கும் அவர் அனுமதி அளிக்க விரும்பவில்லை. ஏனைய விஷயங் களில் குறிப்பாக இந்துக்கள் பற்றிய விஷயங்களில் உலேமாக்களின் ஆலோசனையை அவர் ஏற்க மறுத்ததில்லை. எனவே, இந்துக்

களிடத்தில் அவர் கையாண்ட கொள்கை இஸ்லாமியச் சட்டத்திற்குகந்ததாக இருந்தது என்று அறிந்தபோது எல்லையில்லா மகிழ்ச்சியை எய்தினர்.

**அலாவுத்தீனும் பிரபுக்களும்:** அலாவுத்தீனுடைய உயர் அதிகாரத்திற்கு இருபுறங்களிலிருந்து ஆபத்து வந்திருந்தது. ஒன்று உலேமாக்களிடமிருந்தும் மற்றொன்று பிரபுக்களிடமிருந்தும் வந்திருந்தது. உலேமாக்களை அரச காரியங்களில் தலையிடாதயிருக்கச்செய்யத் தமது எண்ணத்தைக் கோன்மைக் கொள்கையின் வாயிலாக வெளிப்படுத்திவிட்டார். எஞ்சியிருப்பவர் பிரபுக்களே யாவர். சமயம் நேர்ந்தபோதெல்லாம் அவர்கள் கலகம் செய்ய முற்பட்டனர்.

அலாவுத்தீனுக்கு எதிராக முதன் முதலில் கலகம் செய்தவர்கள் 'புதிய முஸ்லிம்களே' யாவார்கள்; அதைப் பற்றி முன்னரே கவனித்துள்ளோம். அடுத்தது அக்கத்கானுடைய கலகமாகும். அக்கத்கான் அலாவுத்தீனுடைய காலஞ் சென்ற தம்பி முகமதுவின் மகன். இரன்தம்பார் நோக்கிப் படையெடுத்துச் சென்றபோது வழியில் சுல்தான் வேட்டையாடச் சென்றார். நேரங்கழிந்துவிட்டமையால் ஒரு நாள் வேட்டையாடும் இடத்திலேயே இராப்பொழுதைக் கழிக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. மறுநாள் காலை தமது குதிரை வீரர்களை அனுப்பி வேட்டைக்கான மிருகங்களைத் தம்மிடத்தில் துரத்தும்படி ஆணையிட்டார். அவர்கள் சென்ற பிறகு ஒரு மோன்தா (பிரம்பால் பின்னப்பட்ட நாற்காலி) வில் அமர்ந்து கொண்டு விலங்குகளின் வருகைக்காகக் காத்திருந்தார். அந்த நேரத்தில் அக்கத்கானும் புதிய முஸ்லிம்கள் சிலரும் அங்கு வந்தனர். யாதொரு பாதுகாப்பும் இன்றி சுல்தான் அமர்ந்திருப்பதைக் கண்டதும் அக்கத்கானுடைய பேராசை அவருடைய உள்ளத்தில் கொழுந்துவிட்டெரியத் தொடங்கியது. சுல்தானைக் கொன்றுவிட்டுத் தாமே பதவியேற்க அதுவே தக்க தருணமென அறிந்து சுல்தானைத் தாக்கினர்கள். சுல்தானிடம் விசுவாசம் கொண்ட அடிமையொருவனும், மெய்க்காவலர்களும் சுல்தானைக் காக்க முயற்சித்தார்கள். அப்போது குளிர்காலமாகையால் சுல்தான் பஞ்சு நிரப்பப்பட்ட ஆடைகளை அணிந்திருந்தார். ஆகவே, அவருக்கு இரண்டு பெருத்த அம்புக் காயங்களைத்தவிர வேறு காயம் ஏதும் ஏற்படவில்லை. ஆயினும், அவை அவரை மயக்கமுறச் செய்வதற்குப் போதுமானதாக இருந்தன. மெய்க்காவலர்கள் கைகளில் வாளை ஏந்தி சுல்தானைச் சூழ்ந்து நின்று கொண்டனர். அக்கத்கான் சுல்தானைக் கொல்ல நெருங்கியபோது சுல்தான் இறந்துவிட்டார் என்றும் அவரது தலையைக் கொய்து

விடுவதால் பயன் ஏதும் இல்லை என்றும் உரக்கக் கத்தினார்கள். அக்கத்கான் அவர்கள் கூறுவது உண்மையென நம்பி அரசருடைய பாசறைக்கு விரைந்தார். சுல்தானைத் தாம் கொன்றுவிட்டதாகக் கூறி அரியணையில் அமர்ந்து கொண்டார். சுல்தான் உயிருடன் இருக்கும்வரை அரியணையில் உட்கார எவருக்கும் துணிச்சல் வராது என்பதால் அமீர்களும், மலிக்குகளும் அக்கத்கான் கூறிய வற்றை உண்மையென நம்பி அவரை அரசராகக் கொண் டாடினார்கள். அந்தப்புரம் நுழையும்போதுதான் அக்கத்கானுக்கு எதிர்ப்புத் தோன்றியது. அலாவுத்தீன் தலையைக் காட்டின லொழிய அந்தப்புரக் காவலர்கள் அக்கத்கான் கூறுவதை நம்ப இயலாது என்று திட்டவட்டமாகக் கூறினார்கள். அவர்கள் காண வேண்டும் என்று கூறிய தலையும் வந்துவிட்டது. அந்தத்தலை அதற் குரிய தோள்களின்மீது இருக்க அனைவரும் கண்டனர்.[1] மயக்கம் தெளிந்தவுடன் ஜெயினுக்குச் சென்று உலூக்கானிடம் சேர்ந்து விடுவது என்று எண்ணினார். அவ்வாறு செய்யின் சதித்திட்டம் வலுவடைந்துவிடுமென்றும், அக்கத்கான் கூறியவற்றை நம்பி அவரை அரசராக ஏற்றுக்கொண்ட அமீர்கள் தங்களுடைய உயிருக்குப் பயந்து அக்கத்கான் பக்கம் சேர்ந்து விடுவார்கள் என்றும் மலிக் ஹமீத் உத்தீன் கூறினார். எனவே, அலாவுத்தீன் ஜெயினுக்குச் செல்லும் எண்ணத்தைக் கைவிட்டுத் தமது பாசறைக்குச் சென்றார். அவர் பாசறையை அடைவதற்கு முன்னரே நூற்றுக்கணக்கான குதிரை வீரர்கள் அவர் பக்கம் சேர்ந்து கொண்டார்கள். அக்கத்கான் அதைக் கண்டு பயந்து விட்டார். ஆகவே, ஆப்கானிஸ்தானம் நோக்கி அவர் ஓடத் தலைப் பட்டார். அவரைப் பின்தொடர்ந்து சென்ற இரண்டு அதிகாரிகள் அவரைப் பிடித்துக் கொன்றுவிட்டனர். அதற்கடையாளமாக அவரது தலையை அலாவுத்தீனிடம் கொண்டுவந்து காண்பித்தனர். பல நாள்கள் தம் மடியின்மீது கிடந்த தலை அப்போது அறுபட் டிருக்கக் கண்ட சுல்தான் ஒருகணம் மனமுடைந்து நின்றார். அக்கத்கானுடைய தம்பி குத்லூகானும் கொல்லப்பட்டார். சதித் திட்டத்தில் சம்பந்தப்பட்டவர்கள் யாவரும் பூவுலகிலிருந்து அப்புறப்படுத்தப்பட்டனர்.

அலாவுத்தீனுடைய சகோதரியின் புதல்வர்கள் மலிக் உமர், மங்குகான் ஆகிய இருவரும் கலகம் செய்தனர். உமர் அப்போது பதௌனின் ஆளுநராகவும், மங்குகான் அவுத்தின் ஆளுநராகவும் செயலாற்றி வந்தனர். இரன்தம்பார் முற்றுகையை சுல்தான் மேற்கொண்டிருந்த சமயத்தில் அவர்கள் கலகம் செய்தனர்.

[1] Stanley Lanepoole, Medieval India, p. 100.

கலகத்தின் நோக்கம் யாது என்பதை நாம் கூற இயலாது. சுல்தானுடைய கொடூரச் செயல்கள் ஒரு காரணமாகயிருக்கும் என்பர் சிலர்.[1] அக்கத்கானுடைய கலகம் இவர்களைத் தூண்டி யிருக்கக்கூடும். அனுபவம் முதிர்ந்த அதிகாரிகளை அனுப்பி வைத்துக் கலகத்தை அடக்கினார். மங்குகானும், உமர்கானும் கைது செய்யப்பட்டு சுல்தானிடம் அழைத்துச் செல்லப்பட்டனர். அவர்களைத் தம் முன்னாலேயே கொன்றுவிடும்படி சுல்தான் ஆணையிட்டார். அவர்களுடைய கண்கள் முலாம்பழம்போல வெட்டி எடுக்கப்பட்டன. அவர்களுடைய குடும்பத்தினரையும் ஆதரவாளர்களையும் கொன்றுவிடும்படி சுல்தான் ஆணையிட்டார்.

அதனையடுத்து டில்லியின் ஹாஜி மௌலா கலகம் செய்தார். டில்லியின் முன்னாள் கொத்வால் மலிக் பக்ருத்தீனுடைய அடிமைகளுள் ஹாஜி ஒருவராவார். அவர் மிக்க தைரிய சாலி. கெட்ட குணமுடையவர். அப்போது அவர் ரதோலில் உள்ள சொந்தமான நிலங்களை மேற்பார்வையிட்டு வந்தார். டில்லியின் கொத்வாலான திர்மிசீ (Tirmizi) பதௌன் வாயிலைச் சீர்படுத்துவதற்காக அதனருகே தமது இருப்பிடத்தை மாற்றிவிட்டார். சீரியில் புதியதொரு கோட்டையைக் கட்டு வதற்காக அலாவுத்தீன் அயாஸ் (சீரியின் கொத்வால்) கோட்டை கட்டுமிடத்திலேயே வசித்து வரலானார். சுல்தான் அலாவுத்தீன் இரன்தம்பாரில் போர் நடவடிக்கைகளை நேரடியாக மேற் பார்வையிட்டுக் கொண்டிருந்தார். இரன்தம்பாரில் சுல்தா னுடைய படைகள் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கின்றன என்ற செய்தி தலைநகருக்கு எட்டியது. மேற்கண்ட சூழ்நிலைகள் கலகம் துவக்குவதற்கு உகந்தனவாகக் காணப்பட்டன. எனவே ஹாஜி மௌலா சில போர் வீரர்களுடன் திர்மிசீ வீட்டிற்குச் சென்று தாம் சுல்தானிடமிருந்து கொண்டு வந்த செய்தியை வெளியே வந்து பெற்றுக் கொள்ளுமாறு கூறினார். திர்மிசீ வெளியே வந்ததும் அவரைக் கொன்று விட்டார். திருட்டுக் கையொப்பமிடப்பட்ட ஒரு காகிதத்தை அங்கு கூடிவிட்ட மக்க ளுக்குக் காட்டி அது சுல்தானிடமிருந்து தாம் பெற்ற ஆணைச் சீட்டு என்றும் அதில் சுல்தான் திர்மிசீயைக் கொல்லும்படிக் கூறி யுள்ளார் என்றும் அவர்களுக்கு எடுத்துச் சொன்னார். பின்னர் நகரின் வாயில்கள் அனைத்தையும் மூடச் செய்தார். பிறகு அலாவுத்தீன் அயாசைக் கொல்ல திர்மிசீயிடம் கையாண்ட முறையைப் பின்பற்றினார். ஆனால், ஹாஜி மௌலாவின் திட்டத்தை நன்கு புரிந்துகொண்டமையால் அவர் சீரீ கோட் டையின் கதவுகளை இறுக மூடிக்கொண்டு வெளியே வர மறுத்து

[1] Dr. K.S. Lal, loc. cit., p. 89.

விட்டார். அதன் விளைவாக ஹாஜி மௌலா டில்லியில் தன்னிகரற்று விளங்கினார். சிறைக் கதவுகளைத் திறந்துவிட உத்தர விட்டார். சிறையிலிருந்து வெளியேறியவர்களுள் சிலர் அவர் பக்கம் சேர்ந்து கொண்டனர். அரசாங்க கஜானாவைக் காலி செய்து, அதிலிருந்து எடுத்த பணத்தைப் பொது மக்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்தார். அரசாங்கக் குதிரை லாயத்திலிருந்து குதிரைகளையும், ஆயுதக் கிடங்குகளிலிருந்த ஆயுதங்களையும் தம் பக்கம் சேர்ந்தவர்களுக்குப் பகிர்ந்தளித்தார். இல்துத் மிஷின் வழிவந்த அல்வியைப் பெயருக்கு அரசராக அமர்த்திக்கொண்டு அதிகாரம் முழுவதையும் தாமே செலுத்தி வருவதற்கான திட்டமொன்றைத் தீட்டினார். நகரப் பெருமக்களை அழைத்து அல்விக்கு மரியாதையைச் செலுத்த வேண்டுமென வற்புறுத்தினார். அச் செய்தியைக் கேட்ட அலாவுத்தீன் மலிக் ஹமீத் உத்தீனை டில்லிக்கு அனுப்பினார். பின்னர் உலூக்கானைத் தலைநகருக்கு அனுப்பி வைத்தார். உலூக்கான் வந்து சேருவதற்கு முன்பே மலிக் ஹமீத் உத்தீனும், அரச சமூகத்திற்கு ஒரு விண்ணப்பத்தைக் கொடுக்க அம்ரோவிலிருந்து வந்த ஜபர்கானுடைய ஆட்களும் சேர்ந்து கஜினி வாயிலின் வழியாக டில்லி நகருக்குள் நுழைந்து ஹாஜி மௌலாவைத் தோற்கடித்தார்கள். ஹாஜி மௌலாவை நடுத்தெருவில் ஹமீத் உத்தீன் கொன்றார். பின்னர் அல்வியையும் கொன்று அவருடைய தலையை ஈட்டி முனையில் ஏந்திக் கொண்டு டில்லி நகர வீதிகளில் ஊர்வலம் வந்தார். ஹாஜி மௌலாவின் ஆதரவாளர்கள் கைது செய்யப்பட்டனர். அவர்களிடமிருந்த பணம் யாவும் பறிமுதல் செய்யப்பட்டது. இதற்கிடையில் உலூக்கானும் டில்லி வந்து சேர்ந்தார்; கலகக் காரர்களைக் கொல்லும்படி அவர் ஆணையிட்டார். முன்னாள் கொத்தவாலான உமாரா பக்ருத்தீனுடைய பேரப் பிள்ளைகள் அக் கலகத்தில் பங்கு கொள்ளவில்லையென்றாலும், அவர்களும் உலூக்கானுடைய கத்திக்கு இரையானார்கள்.

மேற்கூறிய கலகங்கள் ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றியதற்குக் காரணங்களை ஆராய்ந்து அதற்கு முடிவுகாண அலாவுத்தீன் இரகசிய ஆலோசனைக் கூட்டம் ஒன்றைக் கூட்டினார். மலிக் ஹமீத் உத்தீன், மலிக் ஆயிஸ் உத்தீன், மலிக் அயின் உல்முல்க் மூல்தானி போன்ற அறிவு நிறைந்த ஆதரவாளர்களை அக் கூட்டத்திற்கு வரவழைத்தார். பல நாள்கள் விவாதங்கள் நடைபெற்றன. இறுதியில் கலகத்திற்கு நான்கு முக்கிய காரணங்கள் கண்டறியப் பட்டன. முதலாவதாக மக்களைப்பற்றி சுல்தான் அதிகமான அக்கறை கொள்வதில்லை. அவர்கள் வளமுடன் வாழ்கின்றனரா இல்லையா என்பதை அவர் அறியமுற்படுவதில்லை. அவர்கள்

ஆற்றிய நற்பணிகளையும், அவர்கள் செய்த தீச்செயல்களையும் அவர் கூர்ந்து கவனிப்பதில்லை. இரண்டாவதாக மக்களிடையே குடிப்பழக்கம் பரவலாக இருந்தது. மக்கள் அடிக்கடி மதுவருந்து வதற்கான விருந்துகளை ஏற்பாடு செய்தனர். அப்போது குடி போதையில் இஷ்டம்போல் பேசினார்கள். நினைவிழந்த நிலையில் பேசிய பேச்சுகள் சதித் திட்டங்களின் அடித்தளங்களாக மாறி விட்டன. ஒருவரை ஒருவர் சந்தித்து உறவுகொள்ள இவ் விருந்து கள் வழி செய்தன. மூன்றாவதாக பிரபுக்கள் ஒருவரோடு ஒருவர் இரத்தபந்தத்தால் இணைக்கப்பட்டிருந்தனர். அதற்கு முக்கிய காரணம் அவர்கள் தங்கள் விருப்பம்போல் உறவு முறைகளை ஏற்படுத்திக்கொள்ள அனுமதிக்கப்பட்டனர். அதன் விளைவாக அவர்களுள் ஒருவர் மீது நடவடிக்கை மேற்கொள்ள நேர்ந்தால் அவரோடு ஏதேனும் ஒருவகையில் சம்பந்தப்பட்ட ஒரு நூறு பேர்கள் அவர் பக்கம் பேச முன்வருவது வழக்கமாக யிருந்தது. இறுதியாக மக்களிடையே பண நடமாட்டம் அதிகமாக இருந்தது. பணம்தான் மக்களை கர்விகளாகவும், அகங்காரம் கொண்டவர் களாகவும், விசுவாசமற்றவர்களாகவும், சதிகாரர்களாகவும் மாற்றுகிறது. பணம் இல்லையென்றால் மக்கள் தங்களுடைய பிழைப்பைத் தேடிக்கொள்வதிலேயே காலத்தைச் செலவிட வேண்டியதாக இருக்கும். கலகம், சதி ஆகிய செய்கைகளில் அவர்கள் ஈடுபட இயலாது.

நான்காவதாகக் கூறப்பட்ட காரணத்திற்கு முதலிடத்தை அலாவுத்தீன் கொடுத்தார். பிரபுக்கள், அரசாங்க அதிகாரிகள், ஏனைய மக்கள் ஆகியோருக்கு அரசாங்கம் உதவித் தொகைக்குப் பதிலாகப் பரிசுகளாகவோ அல்லது வெகுமதிகளாகவோ வழங்கியிருந்த நிலங்கள் அனைத்தையும் அரசாங்கத்திற்குத் திருப்பித் தந்துவிடவேண்டும் என்று அலாவுத்தீன் ஆணையிட்டார். பிரபுக்கள், அறிஞர்கள், சமயத்தலைவர்கள் போன்றவர்களுக்கு நிலங்களை வெகுமதியாக வழங்குவது அக்காலத்தில் இருந்த ஒரு வழக்கமாகும். சம்பளத்தொகை அல்லது கொடைப்பணத்திற்கு ஏற்றவாறு நிலங்கள் கொடுக்கப்பட்டன. அதாவது சம்பளம் கொடுக்கவேண்டிய தொகை அளவு நிலவரி அளிக்கவல்ல நிலத்தை மானியமாக வழங்குவார்கள். மானியமாக வழங்கப்பட்ட நிலத் தைப் பரம்பரைச் சொத்தாகக் கொள்ள அரசு அனுமதிக்கவில்லை. ஆயினும் நடைமுறையில் அது பரம்பரைச் சொத்தாக மாறியது. மானியத்தைப் பெற்றவர் இறந்தபிறகும் அச்சொத்து அவருடைய குடும்பத்தார் கைகளிலேயே தொடர்ந்து இருந்து வந்தது. சாதாரணமாக அரசாங்கம் அவர்களை அச் சொத்தை விட்டுக் கொடுக்கும்படி வற்புறுத்துவதும் இல்லை. இந்த வகையாக

நிலத்தைப் பெற்றவர்கள் நாளடைவில் பெரும் பணக்காரர் களாகிவிட்டனர். பணம் வந்தவுடன் செருக்கும் கூடவே வந்து விட்டது. சோம்பேறிகளாகவும் அவர்கள் மாறினார்கள். ஆகவே, அரசாங்க மானியங்கள் (milk or state grants) வெகு மானங்கள் (Inam or state gifts) அறக் கொடைகள் (waqf or gift) ஆகிய அனைத்தும் காலிசா அல்லது அரசரது நிலங்களாக மாற்றப் படவேண்டும் என்று அலாவுத்தீன் உத்தரவிட்டார். தம் அதிகாரி களுக்குச் சம்பளத் தொகையைப் பணமாக அளிப்பதென அவர் முடிவுசெய்தார். அறக்கொடைகள் பற்றிய செய்திகளில் அரசாங்கமே முடிவான அதிகாரத்தைப் பெற்றுள்ளது என்பது அக்காலத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்ட கொள்கையாக இருந்த மையால் தனிப்பட்டவர்கள் உண்டாக்கிய அறக்கொடைகளை அரசு தனது உடைமையாக்க முடிவு செய்தபோது அதை அநியாய மானதாக எவரும் கருதவில்லை. மானியங்களைப் பற்றி அரசு மேற்கொண்ட முடிவிலிருந்து சிலருக்கு விதிவிலக்கு அளிக்கப் பட்டிருந்தது. இசாமியின் முன்னோர்களுக்குக் கொடுக்கப் பட்டிருந்த இரண்டு கிராமங்களைத் திருப்பி வாங்கிக்கொள்ள வில்லை. தானிய அங்காடியின் மேற்பார்வையாளராக மலிக் கழல் உலுக்கானி நியமிக்கப்பட்டபோது அரசு அவருக்கு ஒரு பண்ணையைக் கொடுத்தது. பற்றுக்குறை ஏற்பட்ட காலங்களில் நிலச்சொத்து பெற்றிராத பிரபுக்களுக்கு அரசு அரசாங்க தானியத்தை மலிவான விலைக்குக் கொடுத்துதவியது என்று பரணி எழுதியுள்ளார். அதிலிருந்து நிலம் படைத்த பிரபுக்கள் இன்னும் இருந்திருக்கவேண்டும் என்பது புலப்படுகிறது.[1] எல்லா நிலங்களை யும் அரசு திருப்பி எடுத்துக்கொள்ளவில்லை என்பது உண்மையே யாயினும் இந்த ஆணை பேரரசின் எல்லாப் பகுதிகளிலும் பொது வாக நடைமுறைப்படுத்தப் பெற்றிருந்தது என்பதில் ஐயமில்லை. அதன் விளைவாக ஒருசில மலிக்குகள், அமீர்கள், அரசாங்க ஊழியர்கள், இந்து மூல்தானி வியாபாரிகள், இந்து வட்டிக் கடைக்காரர்கள் ஆகியோருடைய இல்லங்கள் நீங்கலாக ஏனைய வீடுகளில் சிறிதளவு தங்கத்தைக்கூடக் காண இயலாது.

நாட்டில் கலகம் தோன்ற இந்துக்களிடமிருந்த செல்வமும் ஒரு காரணமாகும் என்று அலாவுத்தீன் உணர்ந்தார். ஆகவே, தமது ஆலோசகர்களை அழைத்து இந்துக்களிடமிருந்த பணத் தைப் பறிப்பதற்கான வழிகளைப் பற்றி ஆராய்ந்தார். இந்துக் களுள் செல்வாக்குப் பெற்றிருந்தவர்கள் கூத்கள் (Khuts), முகத்தம்கள் (Muqaddams) என்ற இருவகை கிராமத்

[1] Dr. K. S. Lal, p. 179.

தலைவர்களேயாவார்கள். கிராமத் தலைவர்கள் கிராம மக்களிட மிருந்து வரி வசூல் செய்யும்போது வசூல் செய்வதற்கான கட்டணத்தையும் கூடவே வசூலித்தனர். இவ்வாறு தாங்கள் கொடுக்க வேண்டிய வரிகளைக் கிராம மக்கள் மீது சுமத்தி விட்டனர். ஆகையால், அவர்களிடம் பணம் அதிகமாகச் சேர்ந்து விட்டது. அத்துடன் கர்வமும் சேர்ந்துவிட்டது. எனவே, திவான் கூப்பிட்டனுப்பினாலும் அவர்கள் அவரது அலுவலகத்திற்குப் போவதில்லை. வருவாய்த்துறை அதிகாரிகளுக்கு மதிப்பு கொடுப்பதில்லை. முதல் வேலையாக அவர் நில வரியை 50 சதவீதமாக உயர்த்தி விட்டார். மேய்ச்சல் வரி, வீட்டுவரி போன்ற வரிகளையும் விதித்தார். ஜிசியா வரியைச் செலுத்து மாறு வற்புறுத்தினார். வரி செலுத்தும் விஷயத்தில் கிராமத் தலைவர்களுக்கும் குடியானவர்களுக்கும் யாதொரு பாகுபாடும் ஏற்பட அனுமதிக்கவில்லை. அவர்கள் இதுகாறும் பெற்று வந்த மேல் வரும்படி முழுமையாக அழிக்கப்பட்டுவிட்டது. அவற்றின் விளைவாகக் கிராமத் தலைவர்களின் மனைவிகள் முஸ்லிம் வீடு களுக்குச் சென்று கூலிக்காக வேலை செய்யும் நிலைமைக்கு அவர்களை வறுமையில் ஆழ்த்திவிட்டார்கள். பொன், வெள்ளி, தங்காக்களும், தேவைக்கு மேலான பொருள்களும் அவர்களுடைய வீடுகளில் காண்பதரிதாகிவிட்டது.

அடுத்து மது அருந்துவதை நிறுத்துவதற்காகச் சில சட்டங் களைக் கொண்டு வந்தார். மதுவருந்துவதை இஸ்லாமிய மதம் அனுமதிப்பதில்லை. ஆயினும் சுல்தான்கள், பிரபுக்கள் மது அருந்தும் பழக்கத்தை மிகுதியாகக் கையாண்டு வந்தனர். அலா வுத்தீன் ஒரு பெரிய குடிகாரர். அனைவருடைய பாராட்டுக் குரிய வகையில் ஆள வேண்டும் என்று அவர் விருப்பப்பட்டால் குடிப்பழக்கத்தை முதலில் அவர் விட்டொழிக்க வேண்டும் என்று அலா உல் முல்க் முன்பு அறிவுரை கூறினார். அப்போது அந்த புத்திமதியை வெகுவாகப் பொருட்படுத்தவில்லை. அடிக்கடி தோன்றிய கலகங்களை அந்த அறிவுரையின் மேன்மையை உணர்த்திவிட்டன. முதலில் தாம் மதுவருந்துவதை அவர் நிறுத்தி விட்டார். அரசருக்குச் சொந்தமான கண்ணாடி, பீங்கான் ஆகிய வற்றால் செய்யப்பட்ட மதுக் கோப்பைகளை பதௌன் வாயிலின் முன்னர் உடைக்கும்படிக் கட்டளையிட்டார். பொன்,வெள்ளி ஆகிய வற்றைக் கொண்டு செய்யப்பட்ட கோப்பைகளை உருக்கி நாண யங்களை அச்சிடச் செய்தார். ஜாடிகளிலிருந்த மதுவையெல்லாம் தெருக்களில் கொட்டச் செய்தார். மழைக் காலத்தில் தெருக்கள் சேறும் சகதியுமாக இருப்பதுபோல அப்போது டில்லி தெருக்கள் காட்சியளித்தன. அதையடுத்து அரசருடைய அதிகாரிகள்

யானைகள்மீது ஏறிக் கொண்டு டில்லியிலுள்ள சந்து பொந்து களிலும், சாலைகளிலும் சென்று மதுவை யாரும் அருந்தவோ விற்கவோ கூடாது என்று அறிவித்து வந்தனர். அனுமதிபெற்ற சாராயக் கடைக்காரர்களும் சாராயம் காய்ச்சுபவர்களும் டில்லியை விட்டுத் துரத்தப்பட்டனர். அவர்கள் அரசாங்கத் திற்குக் கொடுக்கவேண்டிய பணத்தை தள்ளுபடி செய்துவிட்டார். குடிப் பழக்கத்தைத் திடீரென நிறுத்திவிடுவது பலருக்குக் கடின மாக இருந்தது. மேல்குடிமக்கள் தங்களுடைய மரியாதையைக் காப்பாற்றிக் கொள்ள மிக்க பிரயாசைப்பட்டுக் குடிப்பழக் கத்தை நிறுத்தி விட்டனர். ஆனால், கீழ்ப்படியிலிருந்தவர்கள் தங்களுடைய வீடுகளில் சாராயம் காய்ச்சிக் குடிக்கத் தொடங் கினார்கள். கட்டை, புல் ஆகியவற்றின்கீழ் மது ஜாடிகளை மறைத்து வைத்துத் தங்களுடைய கைவண்டிகளில் திருட்டுத் தனமாக டில்லிக்குக் கொண்டு வந்து அதிக இலாபத்திற்கு விற்க ஆரம்பித்தனர். அதை அறிந்த சுல்தான் கோபமுற்று மதுபற்றிய சட்டங்களை மீறியவர்களை பதௌன் வாயிலுக்கருகே அமைக்கப் பட்ட பாதாளச் சிறையில் இடும்படிக் கட்டளையிட்டார். பலர் அங்கேயே இறந்து விட்டனர். உயிருடன் இருந்தவர்களுடைய உடல் நலம் வெகுவாகப் பாதிக்கப்பட்டுவிட்டது. எனவே, பலர் டில்லிக்குச் சற்று தூரத்தில் இருந்த ஊர்களுக்குச் சென்று குடித்து வரலானார்கள். இறுதியில் தமது மதுச் சட்டங்களின் கடுமையை சற்று மட்டுப்படுத்தினார். சொந்த உபயோகத்திற்காக மதுவை வீட்டிலேயே உற்பத்தி செய்ய அனுமதி வழங்கப்பட்டது. ஆனால் எக்காரணத்தைக் கொண்டும் அதனை விற்கவோ, குடிப்பதற்காக வீட்டில் விருந்துக்கு ஏற்பாடு செய்யவோ எவரேனும் முயன்றால் அவருக்குக் கடுமையான தண்டனைகள் அளிக்கப் பட்டன. ஒற்றர்கள் வீட்டுக்குள் போவதற்கு அனுமதி அளிக்கவில்லை. கஞ்சா குடிப்பதும், சூதாடுவதும் தடை செய்யப்பட்டன. மொத்தத்தில் சுல்தானுடைய மது ஒழிப்புத் திட்டம் எதிர் பார்த்த பலனை அளித்து விட்டது என்றே கூற வேண்டும். ஏனெனில் அவருக்கு ஆபத்து விளைவிக்க வல்லவர்கள் மேற்குடியா ளர்களேயாவார். அவர்கள் யாவரும் தங்களுடைய மரி யாதையைக் காப்பாற்றிக் கொள்ள மது அருந்துவதை நிறுத்தி விட்டனர்.

மூன்றாவதாக, தம்முடைய மலிக்குகளும், அமீர்களும், பொறுப் புள்ள அரசாங்க அதிகாரிகளும் ஒருவரோடொருவர் நெருங்கிய உறவு முறைகளை ஏற்படுத்திக் கொள்வதைத் தடை செய்ய முற் பட்டார். சுல்தானுக்கு முன்கூட்டியே அறிவிக்காமலும், அவரது அனுமதியைப் பெறாமலும் ஒருவர் மற்றவர் வீட்டிற்குச் செல்லக்

கூடாது என்றும், விருந்துகளில் கலந்து கொள்ளக் கூடாது என்றும், மண உறவுகளை ஏற்படுத்தக் கூடாது என்றும் கட்டளை யிட்டார். பொது மக்கள் அவர்களுடைய இல்லத்திற்கு வருவதை அனுமதிக்கக் கூடாது என்றும் அறிவித்தார். அரண்மனையில் அவர்கள் சந்திக்க நேர்ந்தபோதும் ஒருவரை ஒட்டி ஒருவர் உட் காரவும் அவர்கள் பயப்பட்டனர்.

இறுதியாக நாட்டில் நடைபெறும் நிகழ்ச்சிகளை அவ்வப் போது அறிந்துகொண்டு உடனடியான நடவடிக்கைகளை மேற் கொள்ளுவதன் அவசியத்தை அலாவுத்தீன் நன்கு உணர்ந்து விட்டார். அதுமட்டுமின்றி நாட்டிலுள்ள எல்லா இடங்களிலும் பிரபுக்களுடைய இல்லங்களும், பொது அங்காடிகளுமே மிகக் கவனமாகக் கண்காணித்து வர வேண்டிய இடங்களாகும் என்று அலாவுத்தீன் அறிந்து கொண்டார். ஆகவே அங்கு நடைபெற்ற நிகழ்ச்சிகளை உடனுக்குடன் அறிய மூன்று வெவ்வேறு அதிகாரி களைப் பயன்படுத்திக் கொண்டார். அவர்களுள் ஒருவர் ஆங்கே அமர்த்தப்பட்ட பொறுப்புள்ள அதிகாரியாவார். இரண்டாவது நபர் பரீத் எனப்பட்ட துப்பறியும் அதிகாரி. மூன்றுமவர் முன்ஹீ எனப்பட்ட ஒற்றர்கள். ஒருவர் அனுப்பிய செய்திகளுடன் மற்றவர் அனுப்பிய செய்திகளை ஒப்பிட்டுப்பார்ப்பார். ஆகவே, இந்த மூன்று அதிகாரிகளும் செய்திகளை அனுப்பும்போது மிகவும் கவனமாக நடந்துகொள்ளுவார்கள். ஏதேனும் முரண்பாடு காணப்பெற்றால் உடனே விளக்கம் தருமாறு அவர்களுக்குக் கட்டளையிடுவார். இந்த வகையான வேவு பார்க்கும் முறை மிகத் திறமையாகச் செயற்படுத்தப்பட்டமையால் பிரபுக்கள் வாய் திறந்து பேசுவதைப் பெரும்பாலும் நிறுத்திவிட்டனர். சைகை களின் வாயிலாக ஒருவருக்கொருவர் தங்களுடைய கருத்துகளைப் பரிமாறிக்கொண்டனர்.

### அலாவுத்தீனுடைய வருவாய்த்துறைபற்றிய சீர்திருத்தங்கள்

வரி வசூலிப்பது டில்லி சுல்தான்களுடைய பெரும் பணிகளுள் ஒன்றாக இருந்தது. பணமில்லை என்றால் ஆட்சி சிறப்புற அமையா தென்பது அனைவரும் அறிந்த உண்மையே. அடிக்கடி அரசுக்கு, நாட்டிற்கு வெளியிலிருந்தும் ஆபத்து ஏற்பட்டு வந்தது. அன்னியர் களிடமிருந்து நாட்டைக் காக்கவும் நாட்டில் அமைதியை ஏற்படுத்தவும், ஒரு படையும் ஒரு நிருவாக அமைப்பும் இன்றி யமையாதனவாகும். அவற்றை வைத்துப் பராமரிக்கப் பணம் தேவைப்படும். போதிய பணம் பெற வருவாய்த்துறை செய லாற்றல் மிக்கதாக அமைய வேண்டியது அவசியமாகும். ஆகவே தான் அலாவுத்தீன் வருவாய்த்துறையைச் சீரமைக்கும் பணியினை

மேற்கொண்டார். இந்த வகையானப் பணியினை மேற்கொள்ளு வதில் மிகுந்த அக்கரை காட்டிய முதல் துருக்கிய அரசர் அவரேயாவார்.

அலாவுத்தீனுடைய வருவாய்த் துறை சார்ந்த சீர்த்திருத்தங்களைப் பற்றி பரணி ஒருவரே நமக்கு வேண்டிய குறிப்புகளை அளித்துள்ளார். அவற்றைப் பற்றி ஆராயப் புகுதற்கு முன்பு அப்போது நடைமுறையில் இருந்த முறையைப் பற்றி நாம் தெரிந்து கொள்ளுவது அவசியமாகும். பேரரசின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்த பகுதிகள், நிலவரி வசூலின் பொருட்டு இரு பிரிவுகளாகப் பிரிந்திருந்தன. அவற்றுள் ஒரு பகுதியில் நிலவரி வசூலிக்கும் பணி, ''ராய்கர், ராணுக்கர், ரவாத்துக்கள்'' என்ற பெயரில் அழைக்கப்பட்ட தலைவர்களுக்கு அளிக்கப்பட்டிருந்தது. அவர்களின் கீழிருந்த குடிமக்கள்மீது அவர்கள் விருப்பம் போல் வரிகளை சுமத்தும் அதிகாரம் அவர்களுக்கு இருந்தது. சில சமயங்களில் அவர்களிடமிருந்து அதிகமான வரி வசூல் செய்யப்பட்டது. தேவை ஏற்படும்போது மைய அரசுக்கும் மாநில அதிகாரிக்கும் அவர்கள் படையுதவி அளிக்கவேண்டும் என்பதால் அவர்கள் போர்க்கருவிகளையும், படை வீரர்களையும் எப்போதும் தயாராக வைத்திருந்தனர். படைகளின் பாதுகாப்பை முன்னிட்டு கோட்டைகள் கட்டிக் கொள்ளவும் அவர்களுக்கு அதிகாரமிருந்தது. நியாயம் வழங்கும் உரிமையும் அவர்களுக்கு அளிக்கப்பட்டிருந்தது. அவர்கள் வழங்கிய தீர்ப்பை எதிர்த்து டில்லிக்கு மேல் முறையீடு செய்யப்பட்டதா இல்லையா என்பதை நாம் திடமாகக் கூறமுடியாது. அந்த வகையான தலைவர்களின் கீழிருந்த விவசாயிகளின் விவகாரத்தில் அலாவுத்தீன் தலையிடவில்லை என்று சிலர் கருதுகின்றனர்.[1] அதற்கு முக்கியக் காரணம் அலாவுத்தீனிடம் பயிற்சி பெற்ற வருவாத்துறை அதிகாரிகள் போதிய அளவிற்கு இல்லாமையேயாகும்.

இரண்டாவது பிரிவு நிலங்களை கல்சா நிலம் என அழைக்கலாம். இப்பகுதியில் வரி வசூலிக்கும் பணி கிராம அல்லது கிராமங்களின் தலைவர்களுக்கு அளிக்கப்பட்டிருந்தது. அத்தலைவர்கள் பலவாருக அழைக்கப்பட்டனர். முகத்தம், கூத், சௌத்திரி. முகத்தம் என்ற அரபுச் சொல்லுக்கு தலைமகன் அல்லது முதல் மனிதன் என்று பொருள். அவர் ஒரு கிராமத்திற்கோ அல்லது பல கிராமங்கள் சேர்ந்த ஒரு பகுதிக்கோ தலைவராக இருந்தார். சௌத்திரி என்பது இந்திச் சொல்லாகும்.

[1] ACHI, p. 360.

சௌத்திரி, முகத்தம் ஆகிய இரண்டு வார்த்தைகளும் ஒரே பொருளை உணர்த்தின. அரசாங்கம் தமது பொறுப்பில் விட்டு வைத்த கிராமங்களில் வரி வசூல் செய்து வந்த மற்றொரு வகையினரை கூத்துகள் (Khuts) என்று அழைத்தனர். இச் சொல் கத் என்ற பாரசீக வார்த்தையிலிருந்து பிறந்திருக்கக்கூடும். கத் என்பதற்கு பத்திரம் என்று பொருள். வரி வசூலிக்கும் உரிமைப் பத்திரம் பெற்றமையால் அவர் கூத் என்று அழைக்கப்பட்டிருக்கக் கூடும். இவ்விரு வகைப்பட்ட வரி வசூலிக்கும் உரிமையைப் பெற்ற கிராமத் தலைவர்கள் அரசாங்கத்தின் மேற்பார்வையின் கீழ் செயற்பட்டு வந்தனர். ஆயினும் அவர்கள் ஒரு குறிப்பிட்ட தொகையை அரசாங்கத்திற்கு வரியாகச் செலுத்திக் கொண்டு வரும் வரையில் அரசாங்கம் அவர்களுடைய விவகாரத்தில் தலையிடுவதில்லை. அவர்களின் கீழிருந்த விவசாயிகளின் கஷ்ட நஷ்டங்களைப் பற்றி அரசாங்கம் கவலை கொள்ளவில்லை. அலாவுத்தீனுடைய வரிவசூல் பற்றிய சீர்த்திருத்தங்கள் இரண்டாவது வகை நிலங்களைப் பற்றியதாக இருந்தன.

கிராமங்களில் ஒரு புதிய வருவாய்த் திட்டத்தைக் கொண்டு வருவதற்கான முயற்சியில் முதல் நடவடிக்கையை மேற்கொண்டவர் அலாவுத்தீனே ஆவார். அதற்குக் காரணம் கூத், முகத்தம் ஆகியோர் நடத்தி வந்த ஆடம்பர வாழ்க்கையேயாகும். இதைப் பற்றி அலாவுத்தீன் பின்வருமாறு கூறியிருக்கின்றார். ''அவர்கள் உயர்ந்த ரக குதிரைகள் மீது சவாரி செய்து வந்தனர். நேர்த்தியான ஆடைகளை அணிந்தனர். வேட்டைக்குச் சென்றனர். பாரசீகத்திலிருந்து தருவிக்கப்பட்ட வில்லைப் (bow) பயன்படுத்தினர்கள். ஒருவருடன் ஒருவர் போர் செய்தனர். கிராஜ், ஜிசியா, கரி (ghari) சராய் (charai) ஆகிய வரிகளை தங்களுடைய நிலத்திலிருந்து பெறுகின்ற வருமானத்திலிருந்து அவர்கள் செலுத்துவதில்லை. அவர்களுடைய பொறுப்பில் விடப்பட்டிருந்த கிராமங்களிலிருந்து அவர்கள் கூத்தி (khuti) என்ற மேல்வரும் படியைப் பெற்று வந்தனர். அடிக்கடி விருந்து நடத்தி வந்தனர். மது அருந்தினர். செருச்குடன் நடந்துகொண்டனர். தங்களுடைய பெருமையை நூறு வழிகளில் காட்டிக் கொண்டுவந்தனர். அவர்களுள் சிலர் அழைப்பு வைத்தாலும்கூட வருவாய் அலுவலகத்திற்கு வருவதேயில்லை. வரி வசூல் அதிகாரிகளுக்கு அவர்கள் மரியாதையைக் காட்டுவதில்லை''.

மேலே கூறப்பட்டுள்ள நிலையைப் போக்குவதற்காக அலாவுத்தீன் சீர்த்திருத்தங்கள் மேற்கொள்ள வேண்டியதாக இருந்தது. அவை இரண்டு சட்டங்கள் வாயிலாக வெளிப்பட்டன;

கிராமத் தலைவர் தொடங்கி பலஹர் (balahar)[1] வரை ஒவ்வொருவருக்கும் ஒரு குறிப்பிட்ட முறையினை அடிப்படையாகக் கொண்டு வரி செலுத்த வேண்டும். பயிரிடப்பட்ட நிலத்தின் அளவு சிறியதாக இருப்பினும் சரி அல்லது பெரியதாக இருப்பினும் சரி அதனுடைய சொந்தக்காரர்கள் அனைவரும் வரி செலுத்த இப்போது ஏற்பாடு செய்யப்பட்டது. நிலவரியை நிர்ணயிப்பதற்கு முன்னர் எல்லா நிலங்களையும் அளக்க வேண்டும் என அறிவிக்கப் பட்டது. நிலங்களை அளக்க அலாவுத்தீன் காலத்தில் பயன்படுத்தப் பட்ட அளவுகோலைப் பற்றி பரணி நமக்கு யாதொரு தகவலையும் கொடுக்கவில்லை. ஒரு பிஸ்வா நிலத்திற்கேற்ப வரி வசூலிக்கப் பட்டது என்று பரணி கூறுவதில் இருந்து ஒரு பொதுவான அளவு முறை கையாளப்பட்டது என்பது விளங்கும். விளைச்சலில் பாதி பங்கு வரி செலுத்த வேண்டுமென அலாவுத்தீன் ஆணையிட்டார். இந்த விகிதாச்சாரம் அனைவருக்கும் கூத் தொடங்கி பலஹர் முடிய ஒரே மாதிரியாக இருக்க அலாவுத்தீன் ஏற்பாடு செய்தார். பணமாகவோ தானியமாகவோ வரி செலுத்தப்படலாம் என்றிருப்பினும் சுல்தான் வரியை தானியமாகப் பெறுவதை விரும்பினார். கூத்துக்கள் இதுகாறும் விவசாயிகளிடமிருந்து நில வரிக்கு மேலாகப் பெற்று வந்த 'கூத்தி' (khuti) என்ற மேல் வருமானத்தை அலாவுத்தீன் ஒழித்தார். மேற்கண்ட சட்டத்தின் விளைவாக கிராஜ் வசூலிப்பதில் ஏற்பட்டிருந்த ஊழல்கள் ஒழிந்தன. வறியோர்கள் தங்களுடைய வரிச்சுமையை எளியோர் மீது சுமத்திவிடும் தீய வழக்கம் ஒழிந்தது. கிராமத் தலைவர்கள் முன்போல் ஆடம்பர வாழ்க்கையை மேற்கொள்ள இயலாது போயிற்று. அவர்கள் இப்போது வறுமை நிலையை அடைந்தனர். அதைப்பற்றி முன்னரே விளக்கியுள்ளோம். விவசாயிகளும் துன்ப முற்றனர். விளைச்சலில் 50 சதவீதம் வரியாகச் செலுத்தி விட்டமையால் அவர்கள் சௌகரியமாக வாழ இயலவில்லை. விளைச்சலில் பாதி பகுதியை அலாவுத்தீன் வரியாகப் பெற்றது நியாயமானதா என்ற கேள்வியை சிலர் எழுப்பியுள்ளார்கள். அவருக்கு முன் ஆண்ட அரசர்கள் மூன்றில் ஒரு பங்குக்கு மேல் வரியாக வசூலிக்கவில்லை. ஆனால் இஸ்லாமிய சட்டம் 50 சதவீதம் வரை வசூலிக்கலாம் என்று கூறியிருக்கிறது. எனவே 50 சதவீத வரி மிகவும் அதிகமாக இருந்தாலும் சட்ட விரோதமானதல்ல என்பது தெரிகிறது.

மேய்ச்சல் நிலத்தைப்பற்றி மற்றொரு சட்டத்தை பிறப்பித்தார். அதன்படி மேய்ச்சல் நிலம் வரையறுக்கப்பட்டு ஒதுக்கப்

[1] பலஹர் என்றால் பெருக்குபவர் என்று பொருள். ஆனால் இங்கு கீழ்ச்சாதி விவசாயிகளைக் அது குறிக்கிறது.

பட்டது. இந்த மேய்ச்சல் நிலத்திற்கான வரி விவசாயியின் வீடுகளில் விசாரித்து நிர்ணயிக்கப்பட்டது. பால் கொடுக்கும் கால்நடைகளின் எண்ணிக்கைக்கேற்றவாறு வரி விதிக்கப்பட்டது. இவ்வரியினின்றும் எவருக்கும் விதி விலக்கு அளிக்கப்படவில்லை என்று பரணி கூறியுள்ளார். 4 எருதுகள், 2 எருமைகள், 2 பசுக்கள் 12 ஆடுகள் வரை வரிவிலக்கு அளிக்கப்பட்டதாக பிரிஷ்டா கூறியுள்ளார்.

மேற்கண்ட இரண்டு சட்டங்கள் விவசாயிகளுடன் அரசு நேரடியான தொடர்பு வைத்துக் கொள்ள வழிவகை செய்தன. இதனுல் ஒரு பெரிய தீமை ஏற்பட்டது. வருவாய் அமைச்சரவையில் பணியாற்றிவந்த அதிகாரிகள், அலுவலர்கள் ஆகியோர் இலஞ்சம் வாங்கத் தொடங்கினர். ஆகவே அலாவுத்தீன் அவர்களைப் பொறுத்தளவில் கடுமையான நடவடிக்கைகளை மேற்கொள்ளலானுர். கிராமக் கணக்குப் பிள்ளைகள் வைத்திருந்த பதிவேடுகளை ஆய்ந்து வருவாய் அதிகாரிகள் அரசுக்கருவூலத்தில் கட்டவேண்டிய தொகையை அறிந்துகொண்டு, அவர்களிடமிருந்து ஒரு ஜிடால் கூட விடாமல் வருவாய் அமைச்சர் வசூலித்தார். அதனைப் பெறுவதற்கு எல்லாவழிகளையும் கையாண்டார். அரசாங்கத்திற்குச் சேரவேண்டிய பணத்தைக் கொடுக்க இயலாமல் பலர் பல்லாண்டுகள் சங்கிலியால் பிணைக்கப் பட்டிருந்ததை நாம் அறிகிருேம். பலர் சிறைவாசம் மேற் கொள்ளவேண்டியதாக இருந்தது. பலர் அடித்து நொறுக்கப்பட்டனர். ஏறக்குறைய எல்லா அதிகாரிகளையும் அலுவலர்களையும் வறுமையில் வாடச்செய்தார். அதனுல் வாழ்க்கையில் ஏமாற்றம் அடைந்தவர்களே வருவாய் துறையில் வேலைக்கமர முன் வந்தனர். வருவாய்துறை சார்ந்த வேலை கொடிய சுரநோயை விட கேடானதாக மக்கள் கருதத் தொடங்கினுர்கள். அதில் பணியாற்றுவது மானக்கேடு என்றும் எண்ணினுர்கள். ஆகவே அத்துறையில் வேலை பார்ப்பவர்களுக்கு எவரும் பெண் கொடுக்க முன்வரவில்லை. ஆனுல் ஊழலை ஒழிக்க இந்நடவடிக்கைகள் பெரிதும் உதவியாயிருந்தன. ஒரு டங்கா கூட இலஞ்சமாகப் பெற வருவாய் அதிகாரிகள் முன்வரவில்லை. இது ஒரு சாதனையேயாகும்.

**இராணுவம் பற்றிய சீர்திருத்தங்கள் :**

இடைக்காலத்தில் இராணுவம் பெற்றிருந்த சிறப்பைப் பற்றி பரணி மிகத் தெளிவாக எடுத்துக் காட்டியுள்ளார். அரசப் பதவிக்கு இருதூண்கள் ஆதாரமாக இருக்கின்றன. அவற்றுள் முதலாவது ஆட்சிமுறையாகும். மற்றது பிறநாடுகளை வெல்லுதலாகும். இவ்விரண்டிற்கும் ஆதாரமாக இருப்பது இராணுவ

மாகும். இராணுவத்தைப் புறக்கணித்தால் அரசு அழிந்துவிடும். என்று அவர் கூறியுள்ளார்[1]. இதிலிருந்து அரசப்பதவிக்கும் இராணுவத்திற்கும் எத்தகைய நெருங்கிய தொடர்பு அக்காலத் ஏற்பட்டிருந்தது என அறியலாம். அவ்வாறிருக்க பேரரசுக் கொள்கையினைப் பின்பற்றுவதில் முழுமூச்சுடன் ஈடுபட்டிருந்த அலாவுத்தீன் இராணுவத்தின் பலத்தைப் பெருக்குவதைப்பற்றி ஒருவர் கூறித்தான் தெரிந்து கொள்ள வேண்டிய நிலையில் இல்லை. ஆகவே அவர் ஆட்சியின் போது இராணுவத்தில் பலத்தைப் பெருக்க பல நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டதை நாம் அறிகிறோம்.

அலாவுத்தீன் காலத்தில் பேரரசுப் படை பல பிரிவுகளை உட் கொண்டிருந்தது. ஜான்தார்கள் அல்லது மெய்க்காவலர்படை அவற்றுள் முதலாவதாகும். அவர்கள் நிரந்தரமாக வேலைக் கமர்த்தப்பட்டிருந்தனர். அரசரே அவர்களை நேரடியாகக் கட்டுப்படுத்தி வந்தார். நிரந்தரமான நிலைப்படை இரண்டாவது பிரிவாகும். இதில் குதிரைவீரர்களும் காலாட்படையினரும் இருந்தனர். தனிச்சிறப்பான புது படைவீரர்கள் மூன்றாவது பிரிவில் இருந்தனர். அவர்கள் போர்க்காலத்தில் மட்டுமே படையில் சேர்க்கப்பட்டனர். இந்துக்களும் அதில் சேர்ந் திருந்தனர்.

இனி அலாவுத்தீன் கொண்டுவந்த சீர்திருத்தங்களைப்பற்றி கவனிப்போம். அவற்றுள் முதலாவது படைக்கு ஆள் சேர்ப்பது பற்றியதாகும். படைக்கு ஆட்களைச் சேர்க்கும் பொறுப்பை அலாவுத்தீனே ஏற்றுக் கொண்டார். அப்பணியினை போர் அமைச்சரின் துணையுடன் திறம்பட நிறைவேற்றி வந்தார். போர் புரிவதை தொழிலாகக் கொண்டவர்களே படையில் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். அடுத்தது படைவீரர்களுக்கு ஊதியம் அளிப்பது பற்றியதாகும். படைவீரர்களுக்குச் சம்பளம் அளிக்கும் முறையை அலாவுத்தீன் கையாண்டார். அச்சம்பளப் பணம் பொதுக்கருவூலத்திலிருந்து படைவீரர்களுக்கு நேரடியாகக் கொடுக்க திட்டமிடப்பட்டது. ஒவ்வொரு படைவீரருக்கும் 234 டங்காக்கள் ஆண்டுச் சம்பளமாகக் கொடுக்கப்பட்டது. அதைக்கொண்டு அவர் ஒரு குதிரையும் வைத்து பராமரித்து வரவேண்டும் என்று அறிவிக்கப்பட்டது. ஒருவர் இரண்டு குதிரைகளை பராமரித்து வருவாரேயானால் அவருக்கு 74 டங்காக்

1. Fatanai Jahandari p. 22

களைக் கூடுதலாக அளிக்குமாறு சுல்தான் கட்டளையிட்டார்.[1] தாம் அளித்து வந்த சம்பளம் மிகக் குறைவானது என்று சுல்தான் உணர்ந்திருந்தார். கருவூலத்தில் போதிய பணமின்மையால் அவர் சம்பளத்தை உயர்த்தஇயலவில்லை. ஆயினும் குறைந்த சம்பளத்தில் தம்வீரர்கள் வசதியுடன் வாழ விருப்பங்கொண்டு, விலைக்கட்டுப்பாட்டு முறையைக் கொண்டு வந்தார். அதைப்பற்றி பின்னர் கவனிப்போம்.

அடுத்து படைவீரர்கள் ஒழுங்காக நடக்கச் செய்ய வேண்டும் என்பதற்காக சில விதிமுறைகளை அறிவித்தார். ஒவ்வொரு தனிப் பட்ட படை வீரரும் போர் அமைச்சரவையில் தம்முடைய பெயரைப் பதிவு செய்து கொள்ள வற்புறுத்தப்பட்டனர். அது போது அவர்களைப் பற்றிய முழு விவரங்களும் அதில் குறிக்கப் பட்டன. படைகளின் கூட்டணி மேற்பார்வையீட்டின்போது அந்த விவரங்களை வைத்துக்கொண்டு அதிகாரிகள் சரிபார்ப் பார்கள். மேற்பார்வையீட்டின்போது நல்ல குதிரைகளுக்குப் பதிலாக தரக்குறைவான குதிரைகளைக் கொண்டு நிறுத்துவதைத் தடை செய்யவும் ஒரே குதிரையைப் பலர் பயன்படுத்துவதைத் தடுக்கவும் குதிரைகளுக்குச் சூடுபோடும் வழக்கத்தையும் கையாண் டார். படைகளின் கூட்டணி மேற்பார்வையீடு மிக்க கண்டிப் பான முறையில் நடத்தப் பெறுவதற்கான முயற்சியையும் அலாவுத்தீன் மேற்கொண்டார். வாரங்கல் நோக்கிச் சென்ற படையினை மேற்பார்வையிட 14 நாட்கள் பிடித்தன என்று அமீர் குஸ்ரு எழுதியுள்ளார்.[2]

அலாவுத்தீன் ஒரு பெரிய நிலப்படையினை நிரந்தரமாக வைத் திருந்தார். அன்னியப் படையெடுப்பினை முறியடித்த பிறகும் நாடுகளை வென்ற பிறகும் ஒரு பெரிய நிலப்படையை வைத்திருக்க வேண்டுவது அவசியமில்லை என்று இதுகாறும் கருதப்பட்டு வந்தது. அலாவுத்தீன் குறிப்பிட்ட போர் ஏற்பாடு முடிந்த பிறகு படைகளைக் கலைத்து விடாது அவற்றை நிலையாக வைக்கத் தலைப் பட்டார். ஏறக்குறைய 4,75,000 குதிரை வீரர்கள் அந்த நிலைப் படையில் இருந்ததாக பிரிஷ்டா கூறியுள்ளார். காலாட் படையினரின் எண்ணிக்கையை நாம் அறிய முடியவில்லை. எனினும் அவர்களின் எண்ணிக்கை குதிரை வீரர்களின் எண்ணிக்கையை

1. படைவீரர்களை மூன்று வகையாக சுல்தான் பிரித்தார் என்றும் அவர் களுக்கு முறையே 234, 156, 78 தங்காக்கள் சம்பளமாகவும் கொடுத்தார் என்று பிரிஷ்டா கூறியுள்ளார். டாக்டர் I. H. குரேஷி இதனை ஏற்றுக் கொண்டுள்ளார். Administration of the Sultanate of Delhi, (234—235).

2 Khazain, Habib's Trs. 58.

விட அதிகமாகவே இருத்தல் வேண்டும் என்பது நாம் சொல்லாமலேயே விளங்கும். டில்லியில் நிரந்தரமான நிலப்படை யொன்றினை அமைக்க முதல் நடவடிக்கை மேற்கொண்டவர் அலாவுத்தீன் என்பதில் கருத்து வேற்றுமைத் தோன்ற வழியே யில்லை என்பது மேற்கூறியவற்றிலிருந்து புலனாகும்.

அலாவுத்தீனுடைய படை துருக்கிய முறையைப் பின்பற்றி சிறு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. பத்து குதிரை வீரர்களின் தொகுதிக்கு சர்க்காயில் என்பவரும், 10 சர்க்காயில்களுக்கு ஒரு சிபாசாலரும், 10 சிபாசாலார்களுக்கு ஓர் அமீரும், 10 அமீர்களுக்கு ஒரு மலிக்கும், 10 மலிக்குகளுக்கு ஒரு கானும் என்ற வாறு பிரிக்கப்பட்டிருந்தது.[1]

பேரரசின் பாதுகாப்பிற்குப் படை எந்த அளவு அவசியமோ அந்த அளவுக்கு படை பாதுகாப்பிற்கு அரண்கள் அவசியமாக இருந்தன. தர்கீயின் படையெடுப்பின்போது அலாவுத்தீன் கோட்டைகளின் அவசியத்தை நன்கு உணர்ந்தார். ஆகவே பழைய கோட்டைகளைச் சீர்படுத்தவும், புதிய அரண்களைக் கட்டவும் அவர் ஆணை பிறப்பித்தார். ஒவ்வொரு கோட்டையை யும் திறமை மிக்க கொத்தவால்களின் பொறுப்பில் விட்டு வைத் தார். மன்ட்ஜனீக்குகள் போன்ற போர்க்கருவிகளைப் பெருமளவில் தயாரிக்கும் பணியினையும் அவர் மேற்கொண்டார். ஒவ்வொரு கோட்டையிலும் போதுமான ஆயுதங்களையும், உணவுப் பொருட்களையும் சேகரித்து வைத்தார்.

விலைவாசிக் கட்டுப்பாடுத்திட்டம்: ஏழை எளியோரை வாழ வைக்கும் குறிக்கோளுடன் இன்றைய இந்திய அரசாங்கம் பல திட்டங்களை பல திட்டங்களைச் செயல்படுத்தி வருகின்றது. அதில் ஒன்று விலைவாசிக் கட்டுப்பாடு முறையாகும். இம் முறையை ஏறக்குறைய 650 ஆண்டுகளுக்கு முன்னரே சுல்தான் அலாவுத்தீன் தோற்றுவித்து வெற்றிகரமாகச் செயல்படுத்தி வந்தார் என்பதை வரலாற்று நூல்களின் வாயிலாக நாம் அறிகிறோம். இதிலிருந்து அலாவுதீனுடைய ஆட்சியின் சிறப்பை ஓரளவுத் தெரிந்துகொள்ள இயலுகின்றதல்லவா?

விலைவாசிக் கட்டுப்பாட்டு முறையை அலாவுத்தீன் கொண்டு வந்தாரா இல்லையா என்பதில் ஒரு சிலருக்கு ஐயமேற்பட்டுள்ளது. அக்கால வரலாற்றாசிரியரான பரணியின் கற்பனையில் உருவானதே அத்திட்டம் என்றும், அலாவுத்தீனைப் பற்றி எழுத முற்பட்ட

1 Barani, Tarikh-i- Firoz shahi. 145.

போது அதனை அலாவுத்தீனே கொண்டு வந்தார் என்பதாக எழுதி விட்டார் என்றும் சிலர் கருதுகின்றனர். இத்திட்டத்தைப் பற்றிய விரிவான குறிப்புகளைப் பரணி மட்டுமே நமக்கு வழங்கியிருப்பதை நாம் காணும்போது அவர்களின் கருத்தில் உண்மை இருக்குமோ என்ற ஐயம் நமக்கு ஏற்படுகிறது. இவ்வையத்தைப் போக்க மூர்லண்டு என்னும் ஆசிரியர் சில உண்மைகளை நமக்கு எடுத்துக் கூறியுள்ளார். முதலாவதாக இத்தகையதொரு கட்டுக்கதையை உண்டாக்கி அதனை அலாவுத்தீன் கொண்டு வந்ததாகக் கூறி அதனால் அவர் பெற நினைத்தப் பயன் யாது என்பதை ஆராய்ந்தோமானால் நமக்குக் கிடைக்கும் பதில் இல்லை என்பது தான். அவ்வாறிருக்க பரணி ஏன் இவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பது புரியாத புதிராக உள்ளது. இரண்டாவதாக இத்தகையதொரு கட்டுக் கதையை உண்டாக்க வேண்டுமெனில் பொருளாதாரம் பற்றிய நுணுக்கங்களை அறியும் தன்மையும், மனப்பக்குவமும் அவசியமாகும். ஆனால் பரணி அவற்றைக் கடுகளவேனும் பெற்றிருந்ததாகத் தெரியவில்லை. மூன்றாவதாக அப்போதைய பொருளாதாரநிலை இத்தகைய திட்டத்தைத் தோற்றுவிக்கத் தக்கதாக அமைந்திருந்தது என்பதை எவரும் மறுக்க இயலாது. நான்காவதாக, அலாவுத்தீன் திறம் படைத்த ஓர் அரசராவார். மேலும் அவருக்கு ஆலோசனை கூற மதிநுட்பம் வாய்ந்த அமைச்சர்களிருந்தனர். ஆகவே விலைக்கட்டுப்பாட்டுத் திட்டக் கொள்கையினை உருவாக்குவது அவர்களுக்கு எளிதாகக் காணப்பட்டிருக்கும். ஐந்தாவதாக அதனை நடைமுறைப் படுத்துவதற்கு வேண்டிய கருவிகளை அலாவுத்தீன் பெற்றிருந்தார். ஒரு சிறந்த ஒற்றர் படை அவருக்குத் தக்க உதவி செய்யக் காத்திருந்தது. ஆறுவதாக அக்காலத்தில் கடுமையான தண்டனைகள் சாதாரணமாக அளிக்கப்பட்டு வந்தன. அவற்றினை விதிக்கக் கூடாது என்ற உணர்வு அக்காலத்தில் எழுந்திருக்க வில்லை. விலைவாசிக் கட்டுப்பாட்டு திட்டத்தை நடைமுறைப் படுத்துவதற்குத் தேவையான கடுந்தண்டனைகளை விதிப்பதில் எந்த விதமான தடையும் இல்லை என்று அரசு அறிந்தமையால் இதனை வகுக்க அரசு முற்பட்டிருக்கக்கூடும்.[1] மேற்கூறியவற்றி லிருந்து இத்திட்டத்தை அலாவுத்தீன் வகுத்திருக்க இயலும் என்பது புலனாகும்.

விலைவாசிக் கட்டுப்பாட்டுத் திட்டம் கொண்டு வரக் காரணம் எதுவாக இருக்கும் என்பதை இப்போது ஆராயலாம். பொது மக்களுக்கு நன்மையைப் பயக்கக்கூடிய ஒரு நடவடிக்கையை

[1] Agnarian System, 36-37

மேற்கொள்ள வேண்டும் என்ற ஆசையின் விளைவாகத் தான் விலைவாசிக் கட்டுப்பாட்டுத் திட்டம் கொண்டு வரப்பட்டது என்பர் சிலர். இக்கருத்தினை உறுதிப் படுத்தும் வகையில் சில சான்றுகள் எடுத்துக் கூறப்படுகின்றன. அவற்றுள் ஒன்று ஷெய்க் நாசீர் உக்தீன் நமக்களிக்கும் சுவைமிக்க சம்பவமாகும். பிருஸ்ஷா துக்ளக் ஆட்சியின் தொடக்கத்தில் ஒரு நாள் அலாவுத்தீன் பற்றிய சம்பவம் ஒன்றை ஷெய்க் நாசீர் உத்தீன் நினைவு கூறினார். அவர் ஒருநாள் காஜி ஹமீத்துத்தீனை அவுத்தில் சந்திக்க நேர்ந்தது. அதையொட்டி அவர் தம் இல்லத்தில் விருந்தொன்றினை ஏற்பாடு செய்தார். அழைப்பிற்கிணங்கி வந்த விருந்தினர்கள் அனைவரும் சென்ற பிறகு அலாவுத்தீனைப் பற்றிய நிகழ்ச்சியொன்றை ஷெய்க் நாசீர் உத்தீனுக்கு எடுத்துக் கூறினர். ஒரு நாள் காஜி ஹமீர் உத்தீன் சுல்தான் அலாவுத்தீனுடைய அறைக்குள் நுழைந்தாராம். அப்போது சுல்தான் தலைப்பாகையின்றி ஒரு சிறிய நாற்காலியில் அமர்ந்து ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபட்டிருந்தாராம். காஜி ஹமீத் உத்தீன் அவரை நெருங்கிய போதும் அதைப்பற்றிக் கவனிக்காமல் சிந்தனையில் ஆழ்ந்திருந்தாராம். ஆகவே அவர் வெளியே வந்து இந்த செய்தியை மலிக்காரா பெக்குவிற்குச் சொன்னாராம். காராபெக் உடனே உள்ளே சென்று சுல்தானிடம் பேச்சுக் கொடுக்கத் துவங்கினாராம். காரா பெக்கைப் பின் தொடர்ந்து சென்ற காஜீ ஹமீத் உத்தீனும் சுல்தானுடன் பேச்சுக் கொடுக்கலானாராம். அப்போது சுல்தானிடம் ஒரு வேண்டுகோளைச் சமர்ப்பிக்க அனுமதி கேட்டாராம். சுல்தானும் அனுமதி வழங்கினார். ''நான் தங்களுடைய அறையில் நுழைந்தபோது தாங்கள் தலையினைத் துணி கொண்டு மூடாமல் சிந்தனையில் மூழ்கியிருந்தீர்கள். சுல்தான் அவர்கள் எதைப்பற்றி சிந்தித்துக் கொண்டிருக்கிறீர்கள் என்று வினவினர். சுல்தான் அதற்கு பதிலளிக்கும் வகையில் பின் வருமாறு கூறினார். எல்லாம் வல்ல இறைவன் அநேகரைப் படைத்திருப்பினும் அவர்களுக்கெல்லாம் தலைவராக என்னை நியமித்தார். ஆகவே எல்லா மக்களுக்கும் நன்மை விளைவிக்கக் கூடிய ஒரு நற்காரியத்தை நான் செய்தல் வேண்டும். அதற்காக நான் என்ன செய்ய வேண்டும் என்பதைப்பற்றி என்னை நானே கேட்டுக் கொண்டேன். என்னுடைய சொத்துக்களை எல்லாம் பகிர்ந்தளிக்கலாமா என ஒரு கணம் யோசித்தேன். நான் வைத்திருக்கும் சொத்தைப்போல் நூறு மடங்கு சொத்து வைத்திருந்தாலும் எல்லோரையும் திருப்தி செய்யுமளவிற்கு எல்லோருக்கும் கொடுக்க இயலாது. என்னுடைய கிராமங்களையும், மற்றைய பகுதிகளையும் அவர்களுக்குப் பகிர்ந்தளிக்கலாம் என்று சற்று யோசித்தேன். எல்லோருக்கும் அளிக்கும் அளவிற்கு அவை

என்னிடம் இல்லை என்று உணர்ந்தேன். ஆகவே அப்பிரச்சினையை எவ்வாறு தீர்ப்பது என்பதை மீண்டும் மீண்டும் யோசித்துக் கொண்டிருக்கிறேன். இப்போதுதான் எனக்கு ஒரு யோசனை தோன்றியுள்ளது. அதை தான் உங்களுக்கு விளக்கமாகக் கூறு கிறேன். டில்லிக்கு உணவு தானிய வகைகளைக் கொண்டுவரும் எல்லா இந்து நாயக்குகளை டில்லி வருமாறு ஆணையிடப் போகி றேன். அவர்களுள் சிலர் பொருட்களை ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு எடுத்துச் செல்லப் பயன்படுகின்ற மிருகங்கள் பத்தாயிரம் வைத்திருக்கின்றனர். சிலர் இருபதாயிரம் மிருகங்களை வைத்திருக்கின்றனர். அவர்கள் அனைவரையும் அழைத்து அவர் களுக்கு சிறப்பு ஆடைகளைக் கொடுத்து அவர்களுடைய வியா பாரத்திற்காகவும் குடும்ப செலவிற்காகவும் அரசாங்கக் கருவூலத் திலிருந்து முன்பணம் கொடுக்க ஏற்பாடு செய்கிறேன். அவர்கள் உணவுத் தானியத்தை ஏனைய இடங்களில் வாங்கி டில்லிக்குக் கொண்டு வந்து நான் நிர்ணயிக்கும் விலைக்கு விற்கவேண்டும்''. தாம் கூறியதை நிறைவேற்றுவதற்காக சுல்தான் பல கட்டளை களைப் பிறப்பித்தார். அதன் விளைவாக எல்லா திசைகளிலிருந்தும் தானிய வகைகள் டில்லிக்கு வரத் துவங்கின. சில நாட்களில் 7 ஜிட்டால்களுக்கு ஒரு மணங்கு தானியம் கிடைக்குமளவிற்கு விலை குறைந்து விட்டது. நெய், சர்க்கரை போன்ற ஏனைய உணவுப் பண்டங்களின் விலைகளும் மலிவாகின. சுல்தானுடைய நடவடிக்கைகளின் வாயிலாக எல்லா மக்களுமே நன்மை அடைந் தனர். இவ்வாறுக காஜி கூறினர் என்று காஜி நாசீர் உத்தீன் கூறிவிட்டு இவ்வளவு சிறப்பு மிக்கச் செயலைப் புரிந்த அலாவுத்தீன் மன்னருக்கு இறைவன் அருள் புரிய வெண்டும் என்று அவர் கூறி முடித்தார். அவற்றையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த ஒருவர் பின்வருமாறு கூறினராம். மக்கள் அவரது கல்லறைக்கு யாத் திரைப் போகிறுர்கள். அக்கல்லறையின் கைப்பிடிகளில் கயிறு கட்டுகிறுர்கள். அவர்களுடைய பிரார்த்தனைகள் நிறைவேறு கின்றன.

மேலே குறிப்பிட்டுள்ள தகவல்கள் காயிர் உல் மஜாலிஸ் என்னும் நூலில் காணப்படுசின்றன. இந்நூலின் ஆசிரியர் ஷெயிக் நாசீர் உத்தீன். அவர் 1276 அல்லது 1277 ஆம் ஆண்டில் பிறந் திருக்கக் கூடும் என்று பேராசிரியர் நிஜாமி கூறுகிறுர். அவுத்தில் பிறந்த அவர் டில்லியில் 1356-ல் காலமானர். அவர் தம் 43ஆம் வயதில் ஷெயிக் நிஜாமுத்தீன் அவுலியாவைச் சந்தித்து அவரது மடத்தில் சேர்ந்தார். சுல்தானையோ, பிரபுக்களையோ ஷெயிக் சந்திக்கக் கூடாது என்ற நிபந்தனை இருந்தது என்பது உண்மையே. ஆனல் இறந்து போன சுல்தான்களைப் பற்றி

பேசவும் எழுதவும் அவர்கள் அனுமதி பெற்றிருந்தனர். எனவே தான் அவர் அலாவுத்தீன் பற்றிய சம்பவத்தைத் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார். அவருடைய குறிப்புகளை வரலாற்று மாண வர்கள் அப்படியே ஏற்றுக் கொள்வதில் உள்ள சில கஷ்டங்களை டாக்டர் K.S. லால் அவர்கள் கூறியுள்ளார். அவற்றை இப்போது சிறிது கவனிப்போம். இச்சம்பவத்தை வேறெந்த வரலாற்றாசிரி யரும் குறிப்பிடவில்லை. காயிர் உல் மஜாலிஸை ஒரு வரலாற்று நூலாகக் கருத இயலாது. அது இஸ்லாமியத் துறவிகளைப் பற்றிய நூல். மேலும் அலாவுத்தீனுடைய பொருளாதார நடவடிக்கைகள் நடைமுறைப்படுத்தப்பட்ட பிறகு சுமார் ஐம்பது ஆண்டுகள் கழித்து அது எழுதப்பட்டது. மேலும் அலாவுத்தீன் தம் பொருளாதாரக் கொள்கையை அரசவையில் அறிவிக்க வில்லை. தனிப்பட்ட முறையில் காஜி ஹமீத் உத்தீனிடம் பேசிக் கொண்டிருந்தபோது அக்கருத்தை வெளியிட்டுள்ளார். ஆகவே அதனை அதிகாரப் பூர்வமாக அறிவிக்கப்பட்ட திட்டமாகக் கொள்ள இயலாது. அதற்கு மாறாக அதனை அவர் மனத்தில் தோன்றி மறைந்த கருத்தாக எண்ண இடமுண்டு. மேலும் மக்களிடையே கலக மனப்பான்மை தோன்றுவதற்கு முக்கிய காரணம் அவர்களுடைய வளமான செல்வ நிலை என்பதை உணர்ந்த அலாவுத்தீன் அவர்களை வறுமையில் கொண்டு நிறுத்து வதற்கு வேண்டிய வழிகள் பலவற்றைக் கையாண்டார் என்பதை வரலாற்று நூல்களிலிருந்து அறிகிறோம். அத்தகைய மன்னர் மக்களை சௌகரியமாக வாழ வைக்கும் நோக்குடன் விலைவாசிக் கட்டுப்பாட்டுத் திட்டத்தைக் கொண்டு வந்தார் என்றால் அது முன்கூறிய கருத்துக்கு முற்றிலும் புறம்பானதாகத் தோன்றும். இறுதியாக மக்களின் நலம் பேணுதற்கு அப்போது அவசியமில்லை. கல்ஜிக்களுடைய ஆட்சி ஓர் இராணுவ ஆட்சியாகும் என்பதை முன்னர் கண்டோம். அவ்வாட்சிக்கு ஆதாரமாக விளங்க வேண்டியது படைகளேயன்றி மக்களுடைய ஆதரவும் நல்லெண் ணமும் அல்ல. எனவே அவர் பொதுமக்கள் நன்மையை நாடி, அவர்களுடைய நல்லெண்ணத்தைப் பெற்று, அதன் வாயிலாகத் தம் ஆட்சியை நிலை நிறுத்த வேண்டிய அவசியம் அவருக்கு ஏற்படவில்லை.

பொது மக்கள் நன்மைக்காக இது கொண்டு வரப்பட்டது என்ற கருத்தை வலியுறுத்தும் வகையில் சில குறிப்புகளை பரணி எழுதிய பதாவா.இ.ஜஹான் தாரி என்ற நூலில் காண்கிறோம். பஞ்சங்களை சமாளிக்கும் திறமையைக் கொண்டிராத ஓர்

[1] op. cit, 218-219

அரசனுக்கு சில அறிவுரைகளைப் பரணி இந்நூலில் வழங்கி யுள்ளார். அதுபோது விலைக்கட்டுப்பாடு என்பது எல்லாக் காலங்களிலும் பொது மக்கள் நன்மைக்காக மேற்கொள்ளப்பட வேண்டிய மிகமிக அவசியமான நடவடிக்கைகளுள் ஒன்று என்று கூறியுள்ளார். பொருட்களின் விலை மலிவாக இராவிடின் மக்க ளிடையே நிலையானதும், செழுமையானதும், மேன்மையானது மான வாழ்க்கை ஏற்படாது என்று அவர் திட்டவட்டமாகக் கூறியுள்ளார். இதிலிருந்து விலைக் கட்டுப்பாடுத் திட்டம் பொது மக்கள் நன்மையைக் கருதியே அலாவுத்தீன் மேற்கொண்டிருக்க வேண்டும் என்பது அறியற்பாலது.

அமீர்குஸ்ரூவும் மேற்கண்ட கருத்தினை நமக்கு வழங்கி யுள்ளார். 1311ஆம் ஆண்டில் அவர் வெளியிட்ட காஜாயின் உல்ஃபுதூ என்ற நூலில் காணப்பெறும் சில கருத்துக்கள் அதனைத் தெளிவு படுத்துகின்றன. சுல்தான் அலாவுத்தீன் தானிய வகை களை மலிவாகக் கிடைக்கும்படி செய்தார் என்றும், அதனால் பட்டணங்களிலும், கிராமங்களிலும் வாழ்ந்த மக்கள் பஞ்ச காலத்தில் பெரும் பயன் அடைந்தனர் என்றும் அதில் குறிப் பிட்டுள்ளார்.[1] மேலும் தார் உல் அதல் (Darul Adl) என்ற நிறு வனத்தை அமைத்து அங்கு பொதுமக்களுக்குத் தேவைபடுகின்ற எல்லா செய்பொருட்களையும் கொண்டு வந்து சேர்த்தார். வெளி யில் இருந்து தருவிக்கப்பட்ட எல்லாவகைத் துணிமூட்டைகளும், ஏனைய பொருட்கள் அடங்கிய மூட்டைகளும் அங்கு மட்டுமே அவிழ்த்து விற்க ஏற்பாடு செய்தார். விற்பனையாகாதவற்றை மீண்டும் மூட்டைகளாகக் கட்டி வெளியே எடுத்துச் செல்ல எவருக்கும் அனுமதி வழங்கப்படவில்லை. அதன் விளைவாக ஒவ் வொருவரும் தமக்குத் தேவைப்பட்ட பொருட்களை தேவையான அளவு சந்தடியின்றி வாங்கிக் கொள்ள வழி ஏற்பட்டது என்று அமீர்குஸ்ரூ எழுதியுள்ளார்[2]. சாதாரணமக்கள் குறைந்த:செலவில் வாழ்க்கையை நடத்துவதற்காக கைவினைஞர்கள் மீது சுமத்தப் பட்ட வரிகளைக்குறைத்தார். அவர்கள் உற்பத்திசெய்த பொருட் களின் விலைகள் அதனால் குறைந்தன. அவர்களுடைய நடவடிக் கைகளை மேற்பார்வையிடுவதற்காக ஓர் அதிகாரியை நியமித்தார். அவர்கள் கையாண்டுவந்த எடைக்கற்களை அவ்வப்போது கண் காணிப்பதற்கு சில அதிகாரிகளை அமர்த்தினர். தவறாக நடந்த கைவினைஞர்களையும், கடைக்காரர்களையும் சவுக்கால் அடிக்க

[1] *Ibid* 23 - 24

[2] *Ibid* 21-23

ஆணையிட்டார்.[1] மக்கள் அமைதியாக வாழ வேண்டும் என்பதற்காக திருடர்கள், கொள்ளைக்காரர்கள் ஜேபித் திருடர்கள் (Pick pocket) போன்றவர்களைக் கடுமையாகத் தண்டித்தார் என்று கூறியுள்ளார்.[2] மேற்கூறியவற்றிலிருந்து மக்கள் அமைதியாகவும், வசதியாகவும் வாழ வேண்டுமென்ற எண்ணம் அவருக்கு இருந்தமையால்தான் விலைக்கட்டுப்பாடு திட்டத்தைக் கொண்டுவந்தார் என்பது புலனாகும்.

அலாவுத்தீனுடைய விலைக்கட்டுபாட்டுத் திட்டம் இராணுவத்தின் நன்மைக்காகக் கொண்டு வரப்பட்டதேயன்றி பொது மக்கள் நன்மைக்காகவன்று என்று கூறுவாரும் உண்டு. அவர்களுள் முக்கியமானவர் பரணி யாவார். மங்கோலியப் படையெடுப்புகளிலிருந்து டில்லி அரசைக் காப்பாற்றுவதற்கு ஒரு பெரும் படை அவசியமென்று அலாவுத்தீன் எண்ணினார். அரசு வழக்கமாகப் பெற்று வருகின்றன வருவாயிலிருந்து அதற்கு வேண்டிய பொருளைப் பெற இயலாது என்றும் அவர் உணர்ந்திருந்தார். அரசுப் படைக்கென ஒதுக்கக் கூடிய தொகையினைக் கொண்டு படைவீரர்களின் எண்ணிக்கையை உயர்த்த இயலாது. படைக்கென ஒதுக்கப்பட்டு வந்த தொகையினைக் கொண்டு மேலும் படைக்கு ஆள் சேர்க்க வேண்டுமெனில் ஒரு வழியைத் தவிர வேறு வழி அவருக்குப் புலப்படவில்லை. அதாவது படைவீரர்களுக்கு அளிக்கப்பட்டு வந்த ஆண்டு சம்பளத்தை 234 டங்காக்களாக நிர்ணயத்தலேயாகும். அப்பணத்தைக் கொண்டு தக்க போர் கருவிகளை வாங்கிக்கொண்டு குதிரை ஒன்றைப் பராமரித்து வரவேண்டும். ஒருவர் இரண்டு குதிரைகளைப் பராமரித்துவரின் அவருக்கு 78 டங்காக்கள் கூடுதலாக அளிக்கப்பட்டன. இதைவிட அதிகமான ஊதியத்தை அளித்தால் அவர் ஈட்டிய பொருள் 5 அல்லது 6 ஆண்டுகளில் செலவாகிவிடும் என்று அவர் அறிந்தமையால்தான் அவர் அந்த அளவில் ஊதியத்தை நிர்ணயித்தார். இந்த சம்பளத்தைக் கொண்டு படைவீரர்கள் சௌகரியமாக வாழவும், போர்கருவிகளை வாங்கவும், குதிரையைப் பராமரித்து வரவும் இயலாது என்பதால் பொருட்களின் விலைகளைக் குறைக்க வேண்டும் என்று அமைச்சர்கள் ஆலோசனை கூறினார்கள். அலாவுத்தீன் அந்த யோசனையை ஏற்றுக்கொண்டார். அதே நேரத்தில் அமைச்சர்கள் மரண தண்டனைகள், பயங்கரச் செயல்கள் ஆகியவற்றின் துணையினை நாடலாகாது என்ற நிபந்தனையை அலாவுத்தீன் விதித்தார். அரசாங்கத்தின் பலத்தை குற்றவாளி

[1] *Ibid* 16

[2] *Ibid* 18-19

களைத் தண்டிக்க மட்டுமே பயன்படுத்தவேண்டும். வியாபாரம் நடத்துவதற்குரிய சூழ்நிலைகளைத் தொடர்ந்து பாதுகாத்து அவற்றை மேலும் பலப்படுத்துவதை அரசு குறிக்கோளாகக் கொள்ள வேண்டுமேயொழிய அவற்றை தூக்கி எறிய முற்படக் கூடாது என்று அவர் அறிவித்தார். மேற்கூறியவற்றை பரணி தாரீக்-இ-பிரூஸ்ஷாயில் நமக்கு எடுத்தியம்பி உள்ளார். இவற்றி லிருந்து அலாவுத்தீனுடைய விலைக்கட்டுப் பாட்டுத் திட்டத்தின் நோக்கம் குறைந்த செலவில் பெரியதொரு படையை வைத்திருத் தலேயாகும். அதே நேரத்தில் குறைவானசம்பளம் பெற்று வந்த படைவீரர்கள் வசதியாக வாழ வழி ஏற்படுத்துவதும் அவரது நோக்கமாக இருந்தது. சுருங்கக் கூறின் அவரது விலைக்கட்டுப் பாட்டுத் திட்டம் இராணுவம் பற்றிய நடவடிக்கை என்பதை பரணி அழுத்தம் திருத்தமாகக் கூறியுள்ளார்.

இத்திட்டம் படைவீரர்களுக்கு நன்மையை அளிக்கவில்லை. வாழ்க்கைக்கு இன்றியமையாப் பொருட்களின் விலைகள் குறைக்கப்பட்டு விட்டது என்பது உண்மையே ஊதியத் தொகையும் அத்துடன் குறைக்கப்பட்டுவிட்டது.

பொதுமக்களுடைய நன்மையைக் கருதி விலைக்கட்டுப்பாட்டுத் திட்டத்தைக் கொண்டு வந்தார் என்ற கருத்தினை ஏற்றுக் கொள்வதில் சில இடையூறுகள் உண்டு. விலைக்கட்டுப்பாட்டு திட்டம் அநேகருக்கு நன்மையைவிட தீமையையே அதிகம் விளைவித்தது. வியாபாரிகள் போதுமான இலாபம் கிடைக்காது தவித்தனர். எடைக் குறைவாகப் போடுவதால் ஏற்படவிருந்த ஆபத்தைத் தடுக்க கடைக்காரர்கள் சிறிது அதிகமாகவே பொருட்களை எடை போட்டு விற்று வந்தனர். தரகர்களுடைய நிலை இன்னும் மோசமாக இருந்தது. அநேகர் தரகு வியாபாரம் செய்வதைவிட உயிர் நீத்தலே மேல் எனக் கருதினர்கள். விவசாயிகளும் இத்திட்டத்தினல் பயன் பெறவில்லை. உற்பத்தியில் 50 சதவீதம் நிலவரியாகச் செலுத்தப்பட்டது. இதுவன்றி வீட்டு வரி, மேய்ச்சல்வரி போன்ற வரிகளையும் அவர்கள் செலுத்த வேண்டியதாயிற்று. எஞ்சியிருந்த பொருளை அரசாங்கம் நிர்ணயித் திருந்த மலிவான விலைக்கு வியாபாரிகளிடம் விற்க அரசாங்கம் ஏற்பாடு செய்திருந்தது. விளைந்த பொருளைத் தக்க விலைக்கு விற்கலாம் என்ற எண்ணம்தான் விவசாய வளர்ச்சிக்குக் காரணமாக அமையும். அந்த எண்ணம் விவசாயிகளிடம் அப்போது ஏற்பட வழியில்லாதிருந்தது. படைவீரர்களும் இத் திட்டத்தின் மூலம் பயனடையவில்லை என்றுதான் கூறவேண்டும். வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருட்களின் விலைகள் குறைக்கப்

பட்டது என்பது உண்மையே. அதே நேரத்தில் படை வீரர்களின் ஊதியத் தொகையும் குறைக்கப்பட்டது என்பதை நாம் அறிய வேண்டும். எனவே இந்த ஏற்பாட்டின் மூலமாக படை வீரர்கள் அதிகமான நன்மையை அடைந்தனர் என்று சொல்ல இயலாது. ஓர் ஒட்டகத்தை ஒரு தங் (dang) கொடுத்து வாங்க இயலும் என்றாலும் ஒரு 'தங்'கை எங்கிருந்து பெறுவது என்று டில்லி மக்கள் வேடிக்கையாகப் பேசி வந்ததை பரணி தம் நூலில் குறித்துக் காட்டியுள்ளார். இதிலிருந்து அவரது திட்டம் விலைகளை மட்டும் குறைத்து விடவில்லை. மக்களையும் ஏழைகளாக்கி விட்டது என்பதை ஒருவாறு அறியலாம். நாட்டில் அடிக்கடி ஏற்பட்ட கலகத்திற்குக் காரணம் மக்களின் தேவைக்கு அதிகமாகப் பணம் பெற்றிருப்பதே என்று சுல்தான் அறிந்தார். எனவே அவர்களிட மிருந்த பணத்தைக் கரைக்க பல வழிகளை மேற்கொண்டார் என்பதை மேற்கூறியவற்றுடன் இணைத்துப் பார்த்தால் பொது மக்கள் நன்மைக்காக இத்திட்டத்தைக் கொண்டு வந்திருக்க இயலாது என்று கருத இடமுண்டு. அதே நேரத்தில் விலைவாசிக் கட்டுப்பாட்டுத் திட்டம் ஓர் இராணுவ நடவடிக்கை என்று கூறுவதிலும் சில சங்கடங்கள் நமக்கு ஏற்படும். இராணுவத் தினருக்குப் பயன்படத்தக்க பொருட்களின் விலைகளை மட்டும் அவர் குறைத்து விட்டார் என்று சொல்ல முடியாது. அவர்களுக்கு எந்த விதத்திலும் பயன் தராத பொருட்கள் பலவற்றின் விலைகளும் குறைக்கப்பட்டன. மேலும் மங்கோலிய அபாயம் நீங்கிய பிறகும், இராணுவத்தின் தேவை குறைந்த பிறகும் விலை வாசித் திட்டம் தொடர்ந்து நடைமுறையில் இருந்து வந்தது. எனவே இதனை முற்றிலும் இராணுவ நடவடிக்கையாக கருத இயலாது. மேலும் குறிப்பிட்ட விலைக்கு பொருட்கள் இராணுவத் தினருக்கு மட்டுமின்றி ஏனையோருக்கும் விற்கப்பட்டன. எனினும் மொத்தத்தில் இத்திட்டம் அரசியல், இராணுவம் பற்றிய காரணங்களுக்காகப் புகுத்தப்பட்டதேயன்றி பொதுமக்கள் நன்மைக்காக ஏற்படுத்தப்பட்டதன்று என்று நாம் முடிவாகக் கூறலாம்,

விலைகள் எந்த அடிப்படையில் நிர்ணயித்தார் என்பதை நாம் முதலில் அறிந்து கொள்ள வேண்டும். ஒவ்வொரு பொருளை யும் உற்பத்தி செய்ய எவ்வளவு பணம் செலவாயிற்று என்பதைத் தம் முன்னிலையில் முடிவு செய்ய வேண்டும் என்று கட்டளை யிட்டார். அதற்காக இரவு பகல் என்று பாராமல் உழைத்தார் என்று பரணி தரீக்.இ.பிருஸ்ஷாயீயில் குறிப்பிட்டுள்ளார். உற் பத்திக்காகும் செலவினைக் கருத்தில் கொண்டு எல்லாப் பொருட் களின் விலைகளை அரசர் தம் முன்னிலையில் நிர்ணயிக்க வேண்டும்.

அதுவே நல்ல அரசருக்குரிய பண்பு என்று பரணி புதவா.இ. ஜஹான்தாரியில் எழுதியுள்ளார். இவற்றிலிருந்து விலேகளே நிர்ணயிக்க அலாவுத்தீன் கடைபிடித்த கொள்கையினைப் பற்றி நன்கு அறியலாம்.

தானிய அங்காடி

உணவுத் தானியத்தின் விலையை நிர்ணயிக்கும் பணி அலாவுத்தீனுக்கு மிகக் கடினமாகத் தோன்றியது. அவர் நிர்ணயித்த விலேகள் பின்வருமாறு:

| | | | |
|---|---|---|---|
| கோதுமை | 1 மணங்கின் விலே | $7\frac{1}{2}$ | ஜிடால் |
| பார்லி | ,, | 4 | ,, |
| பருப்பு | ,, | 5 | ,, |
| அரிசி | ,, | 5 | ,, |
| ,, | ,, | 3 | ,, |
| சர்க்கரை | 1சேர் | $1\frac{1}{2}$ | ,, |
| வெல்லம் | ,, | $\frac{1}{3}$ | ,, |
| வெண்ணெய் அல்லது நெய் | $2\frac{1}{2}$,, | 1 | ,, |
| எண்ணெய் | 3,, | 1 | ,, |
| உப்பு | $\frac{1}{2}$மணங்கு | 1 | ,, |

அலாவுத்தீன் காலத்தில் ஒரு பொன் அல்லது வெள்ளி டங்காவின் எடை ஒரு தோலா அல்லது 96 ரத்திகளாகும். ஒரு வெள்ளி டங்கா 50 ஜிடால்களுக்குச் சமம். ஜிடால் என்பது செம்பு நாணயமாகும். ஒரு மணங்கிற்கு 40 சேர்கள் என்றும் ஒரு சேருக்கு 24 தோலாக்கள் என்றும் கணக்கிடப்பட்டது.

அலாவுத்தீன் காலத்தில் பொருட்கள் ஏனைய முஸ்லிம் அரசர்கள் ஆட்சிக்காலத்தினை விட மிக மலிவாகக் கிடைத்தனவா இல்லேயா என்பதைப் பற்றி வரலாற்றுசிரியர்களிடையே கருத்து வேறுபாடு தோன்றியுள்ளது. பால்பன் காலத்தில் கோதுமை அலாவுத்தீன் காலத்தில் விற்கப்பட்ட விலேயைக் காட்டிலும் குறைவான விலேக்குக் கிடைத்திருக்க வேண்டும் என்று ஒரு சிலர் கருதுகிறுர்கள். அலாவுத்தீன் காலத்தில் மணங்கு 5 ஜிடாலுக்கு விற்கப்பட்ட நெல் பிருஸ்ஷா காலத்தில் 4 ஜிடாலுக்கு விற்கப்பட்டது என்று ஷம்ஸ் சிராஜ் அஃபீப் கூறியுள்ளார். ஆனல் ஷெயிக் நாசீர் உத்தீன் தம்முடைய காயிர் உல் மஜாலிஸில் அலாவுத்தீன் காலத்தில் உணவுத் தானியங்களின் விலே மிக மலிவாக இருந்தது என்றும், சுல்தான் இப்ராஹீம் லோடியின்

காலத்தில் அதைவிட மிக மலிவாக இருந்தது என்றும் கூறி யுள்ளார். மேலும் அலாவுத்தீன் தமது படைப் பலத்தைக் கொண்டு வணிகர்களை மிரட்டி பொருட்களின் விலைகள் ஏருமல் பார்த்துக் கொண்டார் என்றும் இப்ராஹீம் லோடி, அந்த மாதிரியான நடவடிக்கைகளை மேற்கொள்ளாமலேயே பொருட் களின் விலைகள் ஏருமல் பார்த்துக் கொண்டார் என்றும் அவர் கூறியுள்ளார். எனவே அலாவுத்தீன் காலத்தில் பொருட்கள் மிகக் குறைந்த விலைக்கு விற்கப்பட்டனவா இல்லையா என்பது முக்கியமான பிரச்சினை இல்லை. குறித்த விலைக்கு அவை விற்கப் பட்டனவா இல்லையா என்பதே முக்கிய பிரச்சினையாகும். அலாவுத்தீன் உயிருடன் இருந்தவரை மழை பெய்தாலும் சரி இல்லையென்ருலும் சரி பொருட்களின் விலை சிறிதளவு கூட ஏற வில்லை. இந்த மாதிரியான ஒரு நிலை அக்காலத்தில் உருவாகியது வியப்பிற்குரிய ஒரு நிகழ்ச்சியாகும்.

விலைகளை நிர்ணயித்த பின்னர் சுல்தான் உணவுப் பொருட் களை குறிப்பிட்ட விலைக்கு விற்பதற்காக தானிய அங்காடியை நிறுவினர். இதுவரை மக்கள் தமக்கு வேண்டிய தானியங்களை சில்லறை வியாபாரிகளிடமிருந்தோ அல்லது ஊர் ஊராகத் திரியும் வியாபாரிகளிடமிருந்தோ பெற்று வந்தனர். விலைகளைக் கட்டுப்படுத்தியவுடனே நடமாடும் வியாபாரிகள் டில்லி நகருக்கு வருவதை நிறுத்திக் கொண்டனர். சில்லறை வியாபாரிகள் விலைக்கட்டுப்பாட்டுத் திட்டத்தின்மீது வெறுப்புக் கொள்ளலா ஞர்கள். ஏனெனில் அவர்கள் இதுகாறும் பெற்று வந்த அளவிற்கு இலாபத்தைச் சம்பாதிக்க இத்திட்டம் அனுமதிக்கவில்லை. எனவே தானிய அங்காடியை நிறுவ வேண்டியது அவசியமாயிற்று.

முதலில் மலிக்கபூல் உலூக்கானி என்பவரை தானிய அங்காடியின் மேற்பார்வை அதிகாரியாக அமர்த்தினர். அவர் ஆழ்ந்த அனுபவத்தையும் முதிர்ந்த அறிவையும் ஒருங்கே பெற் றிருந்தார். சுல்தானுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பினையும் பெற்றிருந்தார். அவருடைய பதவியின் மேன்மைக்கும், அதிகாரத் திற்கும் தக்கவாறு அவருக்கு உதவி செய்ய படையொன்று அளிக்கப்பட்டது. அத்துடன் ஒரு பெரிய இக்தாவையும் அவர் பெற்ருர். அவருக்கு ஏராளமான அதிகாரங்கள் வழங்கப்பட்டன. டில்லி நகர வியாபாரிகளும், ஊர் ஊராகத் திரியும் வணிகர்களும் அவருடைய அதிகாரத்திற்கு உட்பட்டு நடக்க ஏற்பாடு செய்யப் பட்டது. அவர்கள் ஒழுங்காகவும் உரிய காலத்திலும் டில்லி நகருக்கு தானியங்களைக் கொண்டு சேர்க்கச் செய்வது அவரது முக்கிய பணியாகும். அவர்கள் அரசாங்கம் நிர்ணயித்த விலைக்கு

விற்கிறார்களா இல்லையா என்பதை அவரே கண்காணித்து வந்தார். உணவுத் தானியங்களைப் பதுக்கல் செய்யாதவாறு பார்த்துக் கொள்வதும் அவருடைய வேலையாகும். டில்லிக்கு வெளியே தானியங்கள் என்ன விலைக்கு விற்கப்பட்டன என்பதையும் அதனால் டில்லி அங்காடிகள் எந்த அளவு பாதிக்கப்பட்டன என்பதையும் அறிந்து அவ்வப்போது அதனை சுல்தானுக்கு அறிவிப்பதும் அவரது பொறுப்பாக இருந்தது. அங்காடி நிலவரத்தை சுல்தான் வேறு பல வழிகள் வாயிலாகவும் அறிந்து வந்தமையால், அங்காடி மேற் பார்வையாளர் மிக்க விழிப்புடன் இருக்க வேண்டியதாயிற்று. அவரது செய்திக்கும் மற்றவர்கள் அனுப்பிய செய்திக்கும் வேறு பாடு இருப்பின் அலாவுத்தீன் உடனே ஒரு விசாரணைக்கு ஏற்பாடு செய்து உண்மையைக் கண்டறிவது வழக்கம். தவறான செய்தியைக் கொடுத்தவர் எவராயினும் சரி. அவர்களுக்குக் கடுமையான தண்டனைகள் வழங்கப்பட்டன. ஆகவே உயர் பதவியை வகித் திருந்தபோதிலும், மேற்பார்வையாளர் சுல்தானுக்குப் பயந்து பணியாற்றி வந்தார். ஒரு சமயம் நாட்டில் மழையின்மைக் காரண மாக பஞ்சநிலை உருவாகியிருந்தது. வணிகர்கள் படுந்துயரத்தைக் கண்டு மேற்பார்வையாளர் சுல்தானை அணுகி விலைவாசியை சிறிது உயர்த்தும்படி பரிந்துரை செய்தார். அதைக் கேட்டதும் சுல்தானு டைய கோபம் எல்லை மீறியது. அருகிலிருந்தவரை அழைத்து 20 பிரம்படிகளை மேற்பார்வையாளருக்குக் கொடுக்கும்படி ஆணையிட் டார். இதன் மூலம் அலாவுத்தீன் எந்த அளவு தமது விலைக்கட்டுப் பாட்டுத் திட்டத்தை சிறிதும் பிறழாமல் நடைமுறைப்படுத்தினார் என்பது புலப்படும். அதே நேரத்தில் மேற்பார்வையாளர் மிகக் கடுமையாக நடந்து கொண்டதன் இரகசியமும் தெளிவாகும்.

அங்காடி மேற்பார்வையாளருக்கு உதவி செய்ய அவருடைய நண்பர்களில் ஒருவர் உதவிமேற்பார்வையாளராக நியமிக்கப்பட் டார். அங்காடியை வெகு கவனமாகக் கண்காணிக்கும் பொருட்டு இவர்களன்றி வேறு சில அதிகாரிகளையும் அலாவுத்தீன் நியமித் தார். அவர்களுள் ஒருவர் பரீத். இ. மண்டி ஆவர். அங்காடிக்குக் கொண்டு வரப்பட்ட பொருட்களின் தரத்தைக் கண்காணிப்பது அவரது முக்கிய பணியாகும். மற்றொருவர் முன்யியான் (Munhi-yan) என அழைக்கப்பட்ட ஒற்றர்களாவார். அவரை தற்கால இரகசிய காவல்காரருக்கு ஒப்பிடலாம்.[1] இவ்விரு அதிகாரிகளும் தனித்தனியாக செய்திகளை சுல்தானுக்கு நேரடியாக அனுப்பி வைத்தார்கள். யாரேனும் ஓர் அதிகாரியை சரிகட்டிக் கொண்டு தங்கள் விருப்பம்போல் பொருட்களை விற்க வியாபாரிகள் முயற்சி

[1]. Dr. K. S. Lal. op. cit P. 265

செய்யாவண்ணம் இந்த ஏற்பாடு தடுத்தது. அதிகாரிகளும், வியாபாரிகளும் ஒழுங்காக நடக்க இது உறுதுணையாக அமைந்தது;

தானியங்களை அங்காடிக்குக் கொண்டு வந்து சேர்ப்பதைப் பற்றிய செய்திகள் மூன்றாவது கட்டத்தில் காணப்படுகின்றன. தோவாப்பகுதியில் அரசருக்குச் சொந்தமான பகுதிகளிலிருந்து வசூலிக்கப்பட வேண்டிய நில வரியைத் தானியமாக அளிக்க வேண்டுமென சுல்தான் ஆணையிட்டார். அவ்வாறு பெறப்பட்ட தானிய முழுவதும் அரசரது சேமிப்பு கிடங்குகளுக்கு அனுப்பப் பட்டது. ஜெயின் பகுதியில் சுல்தானுக்குச் சேரவேண்டிய நில வரியில் பாதி பங்கு தானியமாக அளிக்க உத்தரவிடப்பட்டது. இந்த தானியமும் டில்லியிலிருந்து சேமிப்பு கிடங்குகளுக்கு அனுப்பப்பட்டது. அதன் விளைவாக டில்லி நகரின் ஒவ்வொரு பிரிவிலும் (Mohalla) இரண்டு அல்லது மூன்று வீடுகள் முழுவதி லும் தானியங்கள் குவிக்கப்பட்டிருந்தன.

அடுத்தச் சட்டம் தானியத்தை நகருக்குள் கொண்டு வந்த வியாபாரிகளைப் பற்றியதாகும். தானியத்தை ஓர் இடத்தி லிருந்து வேறோர் இடத்திற்குக் கொண்டு சென்ற வியாபாரிகள் அனைவரும் தானிய அங்காடி மேற்பார்வையாளரின் கட்டுப் பாட் டிற்குள் கொண்டுவரப்பட்டனர். அவர்கள் அனைவரும் தானிய அங்காடிக்கு ஒருவிதமான தடங்கலையும் செய்யாது ஒழுங்காக தானியத்தைக் கொண்டு வருவதாக தனித்தனியாகவும் ஒரு மித்தும் ஒப்பந்தம் செய்து கொடுத்தார்கள். அவர்கள் தங்கள் மனைவி மக்கள், ஆடுமாடுகள் ஆகியவற்றுடன் யமுனை ஆற்றங்கரை யிலுள்ள கிராமங்களில் குடியேறும்படி வற்புறுத்தப்பட்டனர். அவர்களுடைய வியாபார நடவடிக்கைகளை மேற்பார்வையிட தனி அதிகாரி யொருவர் நியமிக்கப்பட்டார். அவ்வியாபாரி களின் தலைவர்களை (முக்கடம்கள்) மேற்பார்வையாளரிடம் ஒப் படைக்க வேண்டும் என்றும், அத்தலைவர்கள் கழுத்தில் சங்கலிகள் இடவேண்டும் என்றும், வியாபாரிகள் ஒப்பந்தத்தில் கூறியபடி தானியத்தை அங்காடிக்குக் கொண்டுவந்து சேர்க்கும் வரை, அச்சங்கலிகள் கழற்றப் படாது என்றும் சுல்தான் அறிவித்தார். மேற்பார்வையாளர் ஒப்பந்தத்தின்படி தானியத்தைச் சேர்க்கும் வரை தம்முடனேயே அவர்களை அங்காடிக்கு சங்கிலியுடன் கொண்டு செல்ல வேண்டும் என்றும் சுல்தான் கட்டளையிட்டார். இதன் விளைவாக சாதாரண காலங்களில் அரசாங்கக் கிடங்குகளில் சேமித்து வைக்கப்பட்ட தானியங்களை பயன்படுத்த வேண்டிய அவசியம் ஏற்படாத அளவு தானியங்களை அவ்வியாபாரிகள் டில்லிக்குக் கொண்டு வந்து சேர்ந்தனர். டில்லிக்குக் கொண்டு

வருவதற்கான தானியத்தை வியாபாரிகள் எளிதாகச் சேகரித்துக் கொள்ளுவதற்காக சில சட்டங்கள் பிறப்பிக்கப்பட்டன. தேவாப் பகுதியில் இருந்த அதிகாரிகள், பகர ஆட்கள் (ஏஜென்டுகள்) ஆகியோர் தங்கள் ஆட்சிப் பகுதிகளில் இலாப நோக்குடன் பொருட்களை மொத்தமாக வாங்கி, அவற்றைப் பதுக்கி வைத்து, சில்லறையாக விற்பதை அனுமதிப்பதில்லை என்றவாறு ஓர் ஒப்பந்தத்தை மைய அமைச்சரவைக்கு எழுதிக் கொடுக்கும்படி வற்புறுத்தப்பட்டனர். அத்தகைய வியாபாரத்தில் ஈடுபட்டிருந்த வர்களுக்குக் கடுமையான தண்டனை விதிக்க ஏற்பாடு செய்யப் பட்டது. அத்தகைய வியாபாரத்திற்குப் பயன் படுத்தப்பட்ட உணவுப் பொருட்களைப் பறிமுதல் செய்யும்படி சுல்தான் ஆணை யிட்டார். அதன் விளைவாக ஒரு மணங்கு தானியத்தைக் கூட எவரும் அதிக இலாபத்திற்கு விற்க இயலவில்லை. அரசாங்க விலை களுக்கு அதிகமாகவும் எவராலும் அரை மணங்கு தானியத்தைக் கூட விற்க முடியவில்லை. தோவாப் பகுதியிலிருந்த விவசாயிகள் தாங்கள் உற்பத்தி செய்த தானியத்தை வீட்டுக்கு எடுத்துச் சென்று அதிக இலாபத்திற்கு விற்பதை தடைசெய்வதற்காக அவர்கள் செலுத்த வேண்டிய வரியை கண்டிப்புடன் வசூலிக்கும் படி குற்றயியல் நீதிபதிகளுக்கும் வருவாய்த்துறை அதிகாரி களுக்கும் சுல்தான் உத்தரவிட்டார். அதன் விளைவாக தானிய வியாபாரிகளுக்கு தங்களுடைய தானியத்தை மிகக் குறைவான விலைக்கு விற்கவேண்டிய நிலை ஏற்பட்டது. அல்லது தங்களுடைய தானியத்தை அங்காடிக்கு எடுத்துச் சென்று அரசாங்கம் குறித் திருந்த விலைக்கு தங்களுக்கு சிறிது இலாபம் ஏற்படும் அளவிற்கு விற்க வேண்டிய நிலை உருவாகியது. நாட்டின் ஏனைய பகுதி களிலும் விவசாயிகள் தங்களுடைய விளை பொருட்களை வீட்டிற்கு எடுத்துச் செல்வதைத் தடுத்து நிறுத்தும்படியும், அறுவடை யின் போதே அரசாங்கம் நிர்ணயித்த விலைக்கு தானியத்தை வியாபாரிகளுக்கு விற்று விடும்படியும் ஆணை பிறப்பிக்கப்பட்டது. மேற்கண்ட ஆணையை நடைமுறைப் படுத்துவதாக ஆட்சித்துறை அதிகாரிகளும் வருவாய்த்துறை அதிகாரிகளும் உறுதிப்பத்திரம் மைய அரசுக்கு எழுதிக் கொடுத்தனர்.

மழையின்மையால் பஞ்சம் ஏற்படும்போது உணவுப் பங்கீட்டுத் திட்டம் ஒன்றை அலாவுத்தீன் தயாராக வைத்தி ருந்தார். நகரப் பிரிவுகளில் வியாபாரம் செய்து வந்த கடைக் காரர்களுக்கு அங்கு வசித்து வந்த மக்கள் தொகைக்கு ஏற்ற வாறு ஒவ்வொரு நாளும் குறிப்பிட்டளவு தானியம் அரசாங்கக் கிடங்கிலிருந்து கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டது. பஞ்ச காலத்தில் ஒவ்வொருவரும் தமக்குத் தேவையான அளவு

தானியம் வாங்க வேண்டும் என்றும் அதற்கு மேல் அரை மணங்கு கூட அதிகமாக வாங்கக் கூடாது என்று அறிவிக்கப்பட்டது என்றும் தேவைக்கு மேலாக தானியத்தை வாங்கியவர்களுக்குக் கடுமையான தண்டனை விதிக்கப்பட்டது என்றும் பிரிஷ்டா கூறுகின்றார்.[1] தானிய அங்காடியில் வாங்க வருபவர் ஒவ்வொருவருக்கும் அரை மணங்கு தானியம் விற்க அலாவுத்தீன் ஏற்பாடு செய்தார் என்று பரணி கூறுகிறார்.[2] இவ்விரு கருத்துக்களில் பரணி கூறுவதே ஏற்றுக் கொள்ளத் தக்கதாக உள்ளது. கிராமங்களையோ, நிலங்களையோ பெற்றிராத பணக்கார டில்லிவாசிகளுக்கும் குறிப்பிட்ட அளவு தானியம் அளிக்கப்பட்டது. பஞ்ச காலங்களில் நகருக்கு வெளியேயிருந்தும் மக்கள் பலர் டில்லிக்கு வரலாயினர் என்றும் ஆகவே அங்காடிகளில் நெரிசல் ஏற்பட்டது என்றும், அதன் காரணமாகப் பலர் இறந்தனர் என்றும் பரணி கூறியுள்ளார். ஆகவே அந்த நேரங்களில் மேற்பார்வையாளரும் அதிகாரிகளும் விழிப்புடன் இருந்து தங்களுடைய பணிகளைச் செவ்வனேயாற்றி வரவேண்டும் என்று அலாவுத்தீன் கட்டளையிட்டார். எவரேனும் காலால் மிதிக்கப்பட்டு இறக்க நேர்ந்தால் அதற்குக் காரணமாக இருந்த அதிகாரிகள் கடுமையாகத் தண்டிக்கப்பட்டார்கள். உணவுப் பங்கீட்டுத் திட்டம் அக்காலத்திய மக்களுக்கு புதிதாகத் தோன்றியது. அலாவுத்தீன் காலத்தில் டில்லியில் பஞ்சம் என்ற பேச்சுக்கு இடமளிக்காத வகையில் அவரது பொருளாதாரம் பற்றிய சட்டங்கள் நடைமுறைப் படுத்தப் பட்டன.

செறு-இ-அதல் (நியாய அரண்மனை)

உணவுக்கு அடுத்தபடி மனிதனுக்குத் தேவையானது உடையாகும். ஆகவே அதனுடைய விலையைக் கட்டுப்படுத்தவேண்டிய அவசியத்தை அலாவுத்தீன் நன்குணர்ந்திருந்தார். படௌன் வாயிலின் உட்புறத்தில் பச்சை அரண்மனைக்கருகே நீண்ட காலமாகப் பயன்படுத்தப் பெறுமல் காலி மனை ஒன்று இருந்தது. அந்த இடத்தில் நியாய அரண்மனையைக் கட்டும்படி உத்தரவிட்டார். அதில் விரைவில் கெட்டுப்போகாத துணி போன்ற பொருட்களை வெகு நாட்கள் வைத்திருப்பதற்கேற்றவாறு கடைகள் கட்டப்பட்டன. தங்களுடைய சொந்தப் பணத்தைக் கொண்டோ அல்லது அரசாங்கத்தின் உதவிப் பணத்தைக் கொண்டோ வாங்கிய பொருள்களை வியாபாரிகள் தங்கள்

[1] Op. cit, 112

[2] Op. cit, 309

இல்லத்திற்கோ அல்லது வேறு கடைகளுக்கோ கொண்டு போகாமல் நேராக நியாய அரண்மனைக்கு எடுத்துச் செல்ல வேண்டும் என்று சுல்தான் அறிவித்தார். அதை மீறியவர்களுக்கும் அரசாங்க விலைக்கு அதிகமாக விற்றவர்களுக்கும் கடுமையான தண்டனை விதிக்கப்பட்டது. அவ்வாறு விற்கப்பட்ட பொருட்கள் பறிமுதல் செய்யப்பட்டன. இந்த அங்காடியில் துணி மட்டு மல்லாமல் ஏனைய செய் பொருள்களும், வெகுதூரத்திலிருந்து கொண்டு வரப்பட்ட பொருள்களும், அன்னிய நாட்டுப் பொருள் களும் விற்கப்பட ஏற்பாடு செய்யப்பட்டது. அந்த அரண்மனை காலை முதல் இரவு வெகுநேரம் வரை பொது மக்கள் வசதிக்காக திறந்து வைக்கப்பட்டது.[1]

அடுத்த கட்டம் சில பொருள்களின் விலையை நிர்ணயித்தல் பற்றியதாகும். அரசாங்க விலைப்பட்டியலில் காணப்பெற்ற சில பொருள்களின் பெயர்களைப் பரணி நமக்களித்துள்ளார். அவற்றுள் ஒன்று பட்டுத் துணிகளாகும். பல வகையான பட்டுத் துணிகள் அவற்றில் இடம்பெற்றிருக்கின்றன. அவற்றின் விலை களும் குறிக்கப்பட்டுள்ளன. ஆனால் அந்த விலைக்கு எத்தனை நீளம் துணி கொடுக்கப் பட வேண்டுமென்பது குறிக்கப் பட வில்லை. இது ஒரு குறையாகக் கருதப்படுகிறது. ஆனால் எல்லோ ராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஏதேனும் ஓர் அளவு துணி அந்த விலைக்குக் கொடுக்கப்பட வேண்டும் என்பது சொல்லாமலேயே விளங்கியிருத்தல் வேண்டும். அதனால்தான் பரணி அதனுடைய அளவைக் குறிக்காமல் விட்டு விட்டிருக்க வேண்டும். பருத்தித் துணிகள் சிலவற்றின் விலைகளோடு அளவுகளும் குறிப்பிடப் பட்டுள்ளன. பரணி நமக்களித்திருக்கும் விலைப் பட்டியலை இங்கு குறிப்பிடுதல் அவசியமாகும். இப்பட்டியலில் ஏனைய பொருள்களின் விலைகளையும் காணலாம்.

| | | |
|---|---|---|
| டில்லி குஜ் பட்டு | 16 | டங்காக்கள் |
| குஜ்-இ-கோன்வா | 6 | ,, |
| பட்டும் பருத்தியும் கலந்த மஷ்ரூ ஷிரி | 3 | ,, |
| ஷிரின் (உயர்தரம்) | 5 | ,, |
| ,, (நடுத்தரம்) | 3 | ,, |
| ,, (மட்ட ரகம்) | 2 | ,, |

[1] ACHI என்னும் நூலில் பிற்பகல் பிரார்த்தனை நேரம் வரை திறந்து வைக்கப் பட்டது என்று கூறப்பட்டுள்ளது. p. 382

| | | |
|---|---|---|
| ஷிலாதி (உயர்தரம்) | 6 | டங்காக்கள் |
| ,, (நடுத்தரம்) | 4 | ,, |
| ,, (மட்டரகம்) | 2 | ,, |
| சிகப்பு கோடிட்ட உயர்தர பருத்தி வகைகள் | 6 | ஜிடால் |
| சாதாரண வகைகள் | 3½ | ,, |
| நாகோர் சிகப்பு அஸ்தர் (Astar-i-Nagauri) | 24 | ,, |
| அஸ்தர் (மட்டம்) | 12 | ,, |
| சாடர் (Chadar) | 10 | ,, |
| லாங்கிளாத் வகை (உயர்ரகம்) | 1 | டங்காவிற்கு 20 கஜங்கள் |
| ,, (மட்டரகம்) | 1 | ,, 40 ,, |
| கற்கண்டு (Misri) | 2½ | ஜிடால் 1சேர் |
| சர்க்கரை (மட்டரகம்) | 1½ | ,, ,, |
| பழுப்பு நிற சர்க்கரை | 1 | ,, 3 சேர் |
| நெய் | 1 | ,, 1½சேர் |
| நல்லெண்ணெய் | 1 | ,, 8 ,, |
| உப்பு | 1 | ,, 5 ,, |

மூன்றாவது சட்டம் வியாபாரிகள் தங்களுடைய பெயர்களைப் பதிவு செய்து கொள்ளுவதைப் பற்றியதாகும். பொருள்களை உற்பத்தி செய்வதற்காக செலவிடப்பட்ட தொகையை அலாவுத்தீன் கருத்தில் கொண்டு விலைகளை நிர்ணயித்தார் என்று முன்பே கண்டறிந்தோம். அவ்வாறு நிர்ணயிக்கும்போது வியாபாரிகளுக்குப் போதிய இலாபம் கிடைக்கும் வகையில் குறிப்பிடவில்லை. எனவே டில்லியில் தங்கள் பொருள்களை விற்பதற்கு வியாபாரிகள் தயங்கினார்கள். மேலும் வெகு தூரத்திலிருந்து சில பொருள்களை டில்லிக்குக் கொண்டுவர வேண்டியதாக இருந்தது. அங்கு விலைக்கட்டுப்பாட்டுத் திட்டம் நடைமுறையில் இல்லாமையால் அவர்கள் அதிக விலை கொடுத்து வாங்க வேண்டியிருந்தது. அத்தகைய பொருள்களைக் குறைந்த விலைக்கு விற்று நஷ்டம் அடைய விரும்பவில்லை. இந்த விதமான பிரச்சினைகளுக்குத் தீர்வு காண சில சட்டங்களைக் கொண்டு வந்தார். வாணிக அமைச்ச

ரகத்தில் ஒவ்வொரு வியாபாரியும் தம்முடைய பெயரைப் பதிவு செய்து கொள்ளும்படி வற்புறுத்தப்பட்டார். ஒவ்வோர் ஆண்டுக் குறிப்பிட்ட ஒரு பொருளை ஒரு குறிப்பிட்ட அளவு டில்லிக்கும் கொண்டு வருவதாகவும் அதனை செரு. இ. அதலில் கொண்டு போய் அரசாங்கம் குறித்துள்ள விலைக்கு விற்பதாகவும் ஒப்பந்தப் பத்திரம் ஒன்றை எழுதிக் கொடுத்தனர். அவர்கள் யாவரும் தங்களுடைய பணியினைச் செவ்வனே செய்து வந்தமையால் தேவைக்கு மேலான பொருள்கள் செரு. இ. அதலில் குவிக்கப் பட்டன என்றும், அவற்றை முழுவதும் விற்க இயலாது அவர்கள் தவித்தனர் என்றும், மூல்தானிய வியாபாரிகள் வெகு தூரத்தி லிருந்து பொருள்களைத் தருவிப்பதற்காக அலாவுத்தீன் அவர்களுக்கு உதவித் தொகையை வழங்கினர். ஏறக்குறைய 2 மில்லியன் டங்காக்களை சுல்தான் உதவிப்பணமாக வழங்கி யிருந்தார். இந்தப் பணத்தை அரசாங்கத்திற்குத் திருப்பிக் கொடுத்தார்களா என்பதை உறுதியாகக் கூற இயலாது. அதிக விலைக்குப் பொருள்களை வாங்கிக் குறைவான விலைக்கு டில்லியில் விற்க வேண்டியிருந்தமையால் அப்பணத்தை வியாபாரிகளிட மிருந்து திரும்ப வாங்க அரசாங்கம் முற்பட்டிருக்காது என்று நாம் கருத இடமுண்டு. ஆனால், பரணி, இபின்பாதுதா ஆகியோர் அளித்திருக்கும் விவரங்களைக் கவனிக்கும்போது வியாபாரிகள் அப்பணத்தைத் திருப்பிக் கொடுத்து விட்டார்கள் என்பது உறுதி யாகும். வியாபாரிகளுக்குத் தக்க இலாபம் உண்டாகும் அளவிற்கு விலைகள் நிர்ணயிக்கப்பட்டன என்று பரணி கூறியதிலிருந்து வியாபாரிகள் நஷ்டமடைய வழியில்லை என்றும் ஆகவே அரசாங்கம் தான் கொடுத்தப்பணத்தை விட்டுக் கொடுக்க வேண்டிய அவசியமில்லை என்பது தெளிவாகும். சுல்தான் பொருள்கள்மீது சுமத்தியிருந்த எல்லா வரிகளையும் நீக்கிவிட்டார் என்றும், பொருள்களை விற்ற பிறகு அரசாங்கத்திற்குச் சேர வேண்டியப் பணத்தைத் திருப்பித் தந்துவிட வேண்டுமென ஆணையிட்டிருந்தார் என்றும் இபின்பாதுதா கூறியுள்ளார்.

சில சமயங்களில் அதிக லாபம் பெறும் நோக்கத்துடன் டில்லி வியாபாரிகளும், டில்லிக்கு வெளியேயிருந்த வியாபாரிகளும் செரு. இ. அதலில் குறைந்த விலைக்கு உயர்ரகப் பொருள்களை வாங்கி டில்லிக்கு வெளியேயுள்ள பகுதிகளில் அதிக விலைக்கு விற்று வந்தனர். இந்தத் தீமையை ஒழிக்க சுல்தான் ஒரு திட்டத்தை வகுத்தார். அதன்படி விலையுயர்ந்த துணி வகைகள் அனுமதி பெற்றவர்களுக்கே விற்கப்பட்டன. அத்தகைய துணிகளை வாங்க விரும்புவோர் அதற்கென நியமிக்கப்பட்ட அரசாங்க அதிகாரியை நாடி தமக்கு வேண்டும் பொருளின் பெயரையும் அளவையும்

கொடுத்தனர். அத்துடன் அவர்களுடைய வருமானத்தையும் அறிவித்தனர். அவற்றை பரிசீலனை செய்த பிறகு சொந்த உபயோகத்திற்காக வாங்கப்படுகிறது என்று அரசாங்க அதிகாரி கருதினுலொழிய அனுமதி பத்திரம் வழங்கப்படாது. இத்திட்டம் ''கள்ள மார்க்கட்டை'' அடியோடு அழித்தது.

**ஏனைய அங்காடிகள்:**

**1. குதிரை அங்காடி:** படைக்குத் தேவையான குதிரைகள் தரகர்களின் துணைகொண்டு மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டன. முதல் ரக குதிரைகள் 100 முதல் 120 டங்காக்கள் வரையிலும் இரண்டாவது ரக குதிரைகள் 80 முதல் 90 டங்காக்கள் வரையிலும் மூன்ருவது ரக குதிரைகள் 60 முதல் 70 டங்காக்கள் வரையிலும் விற்க ஏற்பாடு செய்யப்பட்டது. அடுத்து குதிரை வியாபாரிகளை அறவே ஒழித்துக்கட்டினுர். பலரை கைது செய்து வெகு தூரத்தில் இருந்த கோட்டைகளுக்கு அனுப்பி வைத்தார். குதிரை வியாபாரிகள் நேரடியாகவோ அல்லது தரகர்கள் வாயிலாகவோ குதிரைகளை வாங்கக் கூடாது என உத்தரவிட்டார். குதிரை அங்காடி பக்கமே அவர்கள் தலைகாட்டக் கூடாது என அறிவித்தார்.

அடுத்து குதிரை தரகர்களைப் பற்றிய சட்டத்தை வகுத்தார். குதிரைகள் விலை ஏறுவதற்கு தரகர்கள் முக்கிய காரணமாக இருந்தனர். ஆயினும், அவர்களுடைய உதவியில்லாமல் குதிரைகளின் தரத்தை அளவிட இயலாது. எனவே அவர்களை முற்றிலும் ஒழித்துவிடுவதற்குப் பதிலாக அவர்களைக் கூடுமான அளவு கட்டுப்படுத்தி வருவதுடன் அலாவுத்தீன் மன நிறைவு கொண்டார். 40 அல்லது 60 நாட்கள் கழித்து விற்கப்பட்ட குதிரையும், அந்த விற்பனைக்கு உடந்தையாகயிருந்த தரகரும், சுல்தான் முன்னிலையில் கொண்டுவரப்பட்டார்கள். சுல்தான் எல்லா விதமான விசாரணைகளையும் அப்போது நடத்துவார். தரகர்கள் தவருக நடந்திருந்தால் அவர்களுக்குக் கடுமையான தண்டனையை வழங்கினுர். ஆகவே, இத்தகைய தொரு விசாரணைக்குத் தங்களை உட்படுத்திக் கொள்வதைவிட இறப்பதே மேல் என்றவாறு அவர்கள் எண்ணினுர்கள் என்று பரணி கூறியுள்ளார். வரவிருக்கும் விசாரணைகளை எண்ணிப்பார்த்து தரகர்கள் மிகவும் ஒழுங்காக நடந்து கொண்டனர். அங்காடிகளின் நிலைமையை அவ்வப்போது அறிந்துகொள்ள சுல்தான் ஒற்றர் படையொன்றை வைத்திருந்தார். இக் கட்டுப்பாடுகளின் விளைவாக ஓரிரு ஆண்டுகளில் குதிரைகளின் விலைகளை அலாவுத்தீன் முழுமையாகக் கட்டுப்படுத்திவிட்டார். அதன் பிறகு குதிரை வியாபாரிகளிடம் கருணை காட்டத் தொடங்கினுர். அவர்களைச் சிறையினின்றும் விடுவித்

தார். குதிரைகளை வாங்கவும் விற்கவும் அவர்களுக்கு அனுமதி வழங்கினார். ஆனால் அரசாங்கம் குறிப்பிட்டிருந்த விலைகளுக்கு மேலாக அவர்கள் குதிரைகளை விற்க வொட்டாது பார்த்துக் கொண்டார்.

**அடிமைகள் அங்காடி:** அடிமைகளின் விலைகளையும் அலாவுத்தீன் நிர்ணயித்திருந்தார். வீட்டு வேலையைக் கவனித்து வந்த பெண் அடிமைகள் 5 முதல் 12 டங்காக்கள் வரை விற்கப்படவும், வைப்பாட்டியாக இருக்கவேண்டிய பெண் அடிமைகள் 20 முதல் 40 டங்காக்கள் வரை விற்கப்படவும் ஏற்பாடு செய்தார். 100 அல்லது 200 டங்காக்கள் விலைக்கு விற்கப்பட்ட அடிமைகள் மிக மிகக் குறைவாக இருந்தனர். ஓர் ஆயிரம் அல்லது 2 ஆயிரம் டங்காக்களுக்கு மேல் விலை கொடுத்து அடிமையை வாங்க எவரும் முன்வரவில்லை. ஏனெனில் அவர் காலத்தில் மக்கள் தங்களிடம் பெருஞ் செல்வம் இருப்பதைக் காட்டிக்கொள்ள விரும்பவில்லை. அழகான ஆண் அடிமையின் விலை 20 முதல் 30 டங்காக்கள் வரை மாறுபட்டிருந்தது. வேலை செய்வதில் அனுபவம்பெற்ற அடிமைகள் 10 முதல் 15 டங்காக்கள் வரை விற்கப்படவும், அனுபவமற்ற வர்கள் 7 அல்லது 8 டங்காக்களுக்கு விற்கப்படவும் அலாவுத்தீன் ஏற்பாடு செய்தார். அடிமை வியாபாரிகள், தரகர்கள் ஆகி யோரைப் பற்றிய சட்டங்கள் குதிரை வியாபாரத்தைப் பற்றிய சட்டங்களை ஒத்திருந்தன.

**கால்நடைகள் அங்காடி:** கால்நடைகளின் விலைகளையும் சுல்தான் நிர்ணயித்திருந்தார். உயர்தரமான பொதி மாடுகள் ஐந்து டங்காக்களுக்கு மேல் விற்கப்படவில்லை. கால்நடை அபிவிருத்திக்காகப் பயன்படுத்தப்பட்ட எருதுகளின் விலை 3 டங்காக்களாக நிர்ணயிக்கப்பட்டது. கறவை பசுக்களின் விலை 3 அல்லது 4 டங்காக்களுக்கும், அடிமாடுகள் $1\frac{1}{2}$ அல்லது 2 டங்காக்களுக்கும் விற்கப்பட ஏற்பாடு செய்யப்பட்டது. எருமை மாடுகளின் விலை பின்வருமாறு குறிக்கப்பட்டன.

| | |
|---|---|
| பால் கறக்கும் எருமைகள் | 10 முதல் 12 டங்காக்கள் |
| இறைச்சிக்காக விற்கப்படும் எருமைகள் | 5 முதல் 6 டங்காக்கள் |

கொழுத்த ஆட்டின் விலை 10 முதல் 14 டங்காக்கள் வரை மாறுபட்டிருந்தது.

கால்நடை வியாபாரிகள், தரகர்கள் ஆகியோரைப்பற்றிய சட்டங்கள் ஏனைய விதங்களில் ஒத்திருந்தன.

**பொது அங்காடிகள் :** பொது அங்காடிகள் நகரின் எல்லாப் பகுதிகளிலும் அமைக்கப்பட்டிருந்தன. அவை வணிக அமைச்சரகத்தின் நேரடி கட்டுப்பாட்டிற்குள் இயங்கிவந்தன. அவை பலவகைப்பட்ட பொருள்களை விற்றுவந்தன—தொப்பி, சீப்பு, ஊசி, காய்கறிகள், ரொட்டி, மீன், வெற்றிலை, பாக்கு, பூக்கள் அலாவுத்தீன் அவற்றின் விலைகளை நிர்ணயித்து விலைப் பட்டியலை வணிக அமைச்சரகத்திற்கு அனுப்பி வைத்தார். யாகூப் நாசிர் (Yakub Nazir) என்பவரை வணிக அமைச்சராக நியமித்தார். மக்களுடைய மனப்போக்கு, வியாரபாரத்தின் நெளிவு சுளிவுகள் ஆகியவற்றை யாகூப் நன்கு தெரிந்து வைத்திருந்தார். மிகவும் நாணயமானவர்; நம்பிக்கைக்குரியவர். அதே நேரத்தில் கல் நெஞ்சக்காரராகவும், கொடூரமானவராகவும் விளங்குகிறார். சிலர் தாம் அடைந்த பதவியின் காரணமாக மேன்மை அடைவதுண்டு. ஆனால் வணிக அமைச்சர் பதவியை அவர் வகித்தமையால் அப்பதவி மேம்பாடுற்றது. அப்பதவியை மேலும் மேம்பாடு அடையச் செய்யவேண்டும் என்பதற்காக முஹ்தாசிப் (தணிக்கை அதிகாரி) நாசீர் (அளவை மேற்பார்வையாளர்) ஆகிய இரு பதவிகளையும் சுல்தான் அவருக்களித்தார். ஒவ்வோர் அங்காடியிலும் ஒரு மேற்பார்வையாளரை அல்லது சுஹ்னவை யாகூப் நியமித்தார். நேர்மையற்ற கடைக்காரர்களை நையப் புடைப்பது அவரது வேலையாகும். குறிப்பிட்ட விலைக்கு கடைக்காரர்கள் விற்கிறார்களா இல்லையா என்பதை அவர் ஒரு நாளைக்கு பத்து அல்லது இருபது முறை அங்காடிக்குச் சென்று கவனித்து வந்தார்.

இனி பலவிதமான அங்காடிகள் பற்றி அலாவுத்தீன் அறிவித்த சட்டங்களை எங்ஙனம் அவர் நடைமுறைப் படுத்தினார் என்பதை சிறிது கவனிப்போம். அலாவுத்தீன் தாம் தயாரித்த விலைப் பட்டியல்களை திவான்-இ-ரியாசத் (வணிக அமைச்சரகம்) திற்கு அனுப்பினார். திவான்-இ-ரியாசத் அதனை அங்காடிகளின் மேற்பார்வையாளர்களிடம் அனுப்பி வைத்தார். மேற்பார்வையாளருக்கு முழு அதிகாரம் வழங்கப்பட்டிருந்தது. அவர்கள் யாவரும் அரசருக்கே பொறுப்புள்ளவர்களாகயிருந்தனர். மேற்பார்வையாளர்கள் அங்காடிகளுக்குச் சென்று பொருள்களை வாங்கியவர்களை அணுகி அவர்கள் என்ன விலைக்கு அவற்றை வாங்கினார்கள் என்பதைக் கேட்டறிந்து அந்த விலைகள் விலைப்பட்டியலில் கொடுக்கப்பட்டிருந்த விலைகளை ஒத்திருந்தனவா என்பதைக் கண்டறியும்படி சுல்தான் அவர்களுக்குக் கட்டளையிட்டார். கடைக்காரர்கள் குறிப்பிட்ட விலைக்கு அதிகமாக விற்றதாக அவர்கள் அறிய நேரின் உடனே அவர்களுக்குத் தண்டனை வழங்க சுல்தான் ஏற்பாடு செய்தார். அங்காடி அதிகாரிகளுக்கு

பெருமளவு அதிகாரங்களை அலாவுத்தீன் வழங்கினுர். கடைக் காரர்களுக்கு சவுக்கடி வழங்கவும் அவர்களுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டது. சில நேரங்களில் கடைக்காரர்கள் எடை போடும்போது மக்களை ஏமாற்றினுர்கள். அதைத் தடுக்க ஒவ் வொருநாளும் தமது அடிமைப்பையன்களை சிறிதுபணம் கொடுத்து அங்காடிக்கு அனுப்பி சிலபொருள்களை வாங்கிவரச் சொல்லுவார். அவர்கள் வாங்கி வந்த பொருளை எடைபோடுவார். எடைகுறை வாக இருந்தால் திவான் இரியாசத்தை அழைத்து குறைவான எடையுள்ள பொருள்களை அவரிடம் கொடுத்து விடுவார். திவான். இரியாசத் உடனே எடைகுறைவாகப் போட்டனுப்பிய கடைக்கு விரைந்து சென்று கடைக்காரரின் உடம்பிலிருந்து எவ்வளவு எடை குறைந்ததோ அந்த அளவு சதையை வெட்டி எடுப்பார். இத்தகைய கொடூரமான தண்டனைகள் அளித்து கடைக்காரர்களை அச்சுறுத்தி அவர்களை நியாயமாக நடக்கும்படி செய்து தமது விலைக்கட்டுப்பாட்டுத்திட்டத்தை அலாவுத்தீன் வெற்றிகரமாக செயற்படுத்தி வந்தார். அதுவே அவருடைய மிகச்சிறந்த சாதனை களுள் ஒன்ருகும்.

**விலைக் கட்டுப்பாட்டினுல் ஏற்பட்ட விளைவுகள் :**

விலைக்கட்டுப் பாட்டுத்திட்டம் வியாபாரத்தை வெகுவாகப் பாதித்தது. உழைப்பிற்கேற்ற இலாபம் கிடைக்காததாலும் கடுமையான தண்டனைகள் தவறிழைத்த வணிகர்களுக்குக் கொடுக்கப்பட்டமையாலும் பலர் வியாபாரம் செய்வதை நிறுத்திக் கொண்டனர்.

விவசாயமும் பாதிக்கப்பட்டது. விவசாயிகள் தாங்கள் செலுத்தவேண்டிய வரியைக் கொடுத்துவிட்டப் பின்னரும் தங்களுடைய விளைச்சலை வீட்டிற்கு எடுத்துச் செல்ல இயலாத நிலையில் இருந்தனர். அதுமட்டுமின்றி எஞ்சியிருந்த தானியத்தை ஊர் ஊராகச் செல்லும் வியாபாரிகளுக்குக் குறைந்த விலைக்கு விற்கவேண்டுமெனவும் அவர்கள் வற்புறுத்தப்பட்டனர். மேலும் பஞ்சகாலத்தில் தமக்குப் பயன்படவேண்டும் என்பதற்காக சிறிதளவு தானியத்தைக் கூட தமது வீட்டிற்கு எடுத்துச்சென்று சேகரித்து வைக்க இயலாத ஒரு சூழ்நிலையை அலாவுத்தீன் உண்டாக்கி விட்டார். ஆகவே பயிர்த்தொழிலில் தீவிரமாக ஈடுபட விவசாயிகள் முன்வரவில்லை.

மேலும் இரண்டு விளைவுகளைப் பற்றி பரணி நமக்கு எடுத்துக் கூறியுள்ளார். அலாவுத்தீனுடைய படைப்பலம் பெருக அது உதவியது. அதன் பயனுக மங்கோலியர்கள் பயத்திலிருந்து

டில்லியைக் காப்பாற்ற இயன்றது. இந்து அரசர்களை அடக்கி வைக்கவும் பயன்பட்டது. மேலும் தக்காணம், மாபர் ஆகிய இடங்களுக்குப் படையை அனுப்பி, நாடுகளை வென்று பெருஞ் செல்வத்தைத் திரட்டி வரவும் அப்படை உதவியது. டில்லியில் பொருள்கள் மலிவான விலைக்கு விற்கப்படுகின்றன என்பதை அறிந்ததும் பலர் டில்லிக்கு வந்து குடியேற முற்பட்டனர். அவர்களுள் அறிஞர்கள் பலரும் இருந்தனர். திறமையான கைவினைஞர்களும் வந்தனர். அதன் விளைவாக டில்லியின் பெருமை உயர்ந்தது. உலகத்தலைநகரம் என்று போற்றப்படும் அளவிற்கு அதனுடைய பெருமை வளர விலைக்கட்டுப்பாட்டுத் திட்டம் ஒரு காரணமாக அமைந்தது. மலிவாகப் பொருள்களை வாங்க இயன்றதால் மக்கள் மகிழ்ச்சியுடன் இருக்க வழி ஏற்பட்டது. ஆகவே அவர்கள் அலாவுத்தீனுடைய வல்லாட்சியை ஆதரிக்கத் தொடங்கினார்கள். மக்கள் இப்போது ஒருவிதமான ஒழுங்குக் கட்டுப்பாட்டிற்குள் இயங்கி வரத் தலைப்பட்டனர். ஆகவே குற்றங்கள் குறையலாயின.

விலைக்கட்டுப்பாட்டுத் திட்டம் பேரரசுமுழுவதிலும் நடைமுறைப்படுத்தப்பட்டதா அல்லது டில்லியில் மட்டும் நடைமுறைப் படுத்தப்பட்டதா என்ற கேள்விக்கு வரலாற்றாசிரியர்கள் இருவிதமான பதிலைத் தந்துள்ளார்கள். பேரரசு முழுவதிலும் அது அமுலில் இருந்து வந்ததாக பிரிஷ்டா கூறியுள்ளார்.[1] ஓரிரு இடங்களில் "நகரங்கள்" என்றசொல்லை பரணி பயன் படுத்தி வந்திருப்பினும், இத்திட்டம் டில்லியில் மட்டுமே நடைமுறைப் படுத்தப்பட்டு வந்தது என்றவாறு பரணி எழுதியுள்ளார். டாக்டர் K. S. லால் இக்கருத்தினை ஏற்று அதனை உறுதிப்படுத்த கீழ்க்காணும் காரணங்களை நமக்குக் கூறியுள்ளார்.[2] முதலாவதாக தாரீக். இ. பிரூஸ் ஷாயியில் அங்காடி மேற்பார்வையாளர்களைப் பற்றிய குறிப்புகள் வரும்போது அவர்கள் டில்லியில் மட்டும் செயற்பட்டு வந்தனர் என்ற எண்ணத்தை நமக்குத் தோற்றுவிக்கின்றன. வேறு நகரங்களில் நியமிக்கப்பட்ட மேற்பார்வையாளர்களின் பெயர்கள் நமக்குக் கிடைக்கவில்லை. இரண்டாவதாக வியாபாரி டில்லியில் தங்கி வணிக அமைச்சரகத்தில் தங்கள் பெயர்களை பதிவு செய்து கொள்ள வற்புறுத்தப்பட்டனர் என்று அறிகிறோமே யொழிய ஏனைய நகரங்களிலும் அந்தவகையான ஏற்பாடு அமுலில் இருந்ததாக நமக்குத் தெரியவில்லை. மூன்றாவதாக டில்லியில் விலையுயர்ந்த பட்டுத்துணிகளை மலிவான விலைக்கு வாங்கி, டில்லிக்குவெளியே அதிகவிலைக்கு விற்கப்படுவதை தடைசெய்ய

[1] p. 112

[2] op cit pp. 220-223

அனுமதிச்சீட்டு வழங்கும் முறை பயன்படுத்தப் பட்டதென்பதை முன்னர் கண்டோம். இதிலிருந்து விலைக்கட்டுப்பாடு டில்லியில் மட்டும் நடைமுறையில் இருந்தது என்பதை அறிகிறோம். எல்லா இடங்களிலும் மலிவாக விற்கப்பட்டு வந்திருப்பின் அவற்றை டில்லியிலிருந்து ஏனைய இடங்களுக்குக் கொண்டு செல்ல வேண்டிய நிலை ஏற்பட்டிராது. மேலும் அரசு இரண்டு மில்லியன் டங்காக்களை வியாபாரிகளுக்குக் கொடுத்து விலையுயர்ந்த துணி வகைகளை டில்லிக்கு வந்து குறைவான விலைக்கு விற்குமாறு கட்டளையிட்டது. ஏனைய இடங்களில் அவை அதிக விலைக்கு விற்கப்பட்டிருத்தல் வேண்டும் என்பதை இதிலிருந்து அறியலாம். நான்காவதாக குறைந்த விலைக்கு மொத்தமாக வாங்கிய பொருள்களைப் பதுக்கி வைத்து பின்னர் சில்லறையில் அதிகவிலைக்கு விற்கப்படும் வழக்கத்தைப் பற்றி பரணி அடிக்கடி குறிப்பிட்டுள்ளார். டில்லியில் மட்டும் விலைக்கட்டுப்பாடு நடைமுறையில் இருந்தமையால் மேற்கண்ட வழக்கம் தொடர்ந்து இருந்து வந்தது. எல்லா இடங்களிலும் அது அமுலில் இருந்திருக்குமேயானால் இந்தவகையானப் பழக்கத்தைப் பற்றியும் கடத்தல் பற்றியும் பரணி அடிக்கடி கூறவேண்டிய அவசியமிராது. ஐந்தாவதாக அலாவுத்தீன் காலத்தில் அறிஞர்கள் பலர் டில்லிக்கு வந்து தங்கி அதனை உலகின் தலைநகரமாக்கி விட்டனர் என்று பரணி கூறியுள்ளார். டில்லியில் பொருள்கள் மலிவாக கிடைத்தமையால் அவர்கள் டில்லிக்கு வந்து தங்கிவிட்டிருக்க வேண்டும் என்பது புலனாகும். ஆறுவதாக டில்லியில் மட்டுமே இம்முறை அமுலில் இருந்தது என்பதை பரணி சில இடங்களில் திட்டவட்டமாகக் கூறியுள்ளார். மழையின்மையால் எங்கும் பற்றாக்குறை ஏற்பட்ட காலத்தில் டில்லியில் பற்றாக்குறை ஏற்படவில்லை என்றும், இத்திட்டத்தின் விளைவாக டில்லியில் பொருள்கள் மலிவான விலைக்கு பல ஆண்டுகளாக விற்கப்பட்டு வந்தன என்றும் பரணி கூறியுள்ளார். இறுதியாக சிறு பிள்ளைகளை கடைகளுக்கு அனுப்பி, பொருள்களை வாங்கி வந்து, அவற்றை எடை போட்டு சரிபார்க்கும் வழக்கம் டில்லியில் மட்டுமே கையாளப்பட்டு வந்ததாக நாம் அறிகிறோம்.

பேரரசு முழுவதிலும் விலைக் கட்டுப்பாட்டுத் திட்டம் அமுலில் இருந்தது என்பதற்கும் சில காரணங்கள் உண்டு. விலைக்கட்டுப்பாட்டுத் திட்டத்தைப்பற்றி பரணி கூறும்போது நகரங்கள், பேரரசு என்ற சொற்களைப் பயன்படுத்தி உள்ளார். மேலும் இத்திட்டம் டில்லியில் எப்படி செயற்பட்டு வந்தது என்பதை பரணி விரிவாகக் கூறி ஏனைய இடங்களிலும் இதேபோன்று செயற்பட்டு வந்தது என்பதை வாசகர்களே தெரிந்து கொள்ளுவார்கள் என்பதனால் ஏனைய இடங்களில் அது எவ்வாறு செயற்பட்டு

வந்தது என்பதைக் கூறவில்லை என்று சிலர் கூறுகின்றனர். (நகரங்கள், பேரரசு என்ற சொற்களை பரணி பயன்படுத்தியிருப்பது உண்மை. கவனக் குறைவால் அவ்வாறு ஓரிரு இடங்களில் எழுதிவிட்டாரேயொழிய, அத்திட்டம் ஏனைய இடங்களில் செயற்பட்டு வந்தமையால் அன்று என்று டாக்டர் K. S. லால் கூறியுள்ளார்.) மற்றும் இத்திட்டம் மக்கள் நன்மைக்காகக் கொண்டு வரப்பட்டது என்பதை ஏற்றுக்கொள்வோமேயானுல் டில்லியில் மட்டும் அது செயற்பட அலாவுத்தீன் விரும்பியிருக்க மாட்டார் என்பது தெரியும். மேலும் படைவீரர்கள் டில்லியில் மட்டும் நிறுத்தப்பட்டிருக்கவில்லை. ஏனைய இடங்களிலும் அவர்கள் தங்கியிருந்தனர். டில்லியில் வசிக்க நேர்ந்த படை வீரர்களின் குடும்பங்கள் ஏனைய இடங்களில் வாழ்ந்து வருவதற்கும் வாய்ப்பு உண்டு. ஆகவே டில்லியில் மட்டும் அதை நடைமுறைப்படுத்தி விடுவதால் படைவீரர்களுக்குக்கூட அது முழுமையான பயனை அளிக்க வழியில்லை. எனவே அத்திட்டம் பேரரசு முழுவதிலும் நடைமுறைபடுத்தப்பட்டது என்பர் சிலர்.

**அலாவுத்தீனுடைய இறுதி நாட்கள்:** ஒரு புறம் தக்காணத்தில் மலிக்காபூர் வெற்றி மேல் வெற்றி அடைந்து வர மறுபுறம் அலாவுத்தீனுடைய ஆட்சி வலிமையை இழந்து கொண்டுவரத் தொடங்கிவிட்டது. வயதாகி விட்ட காரணத்தால் அவரது உடல் நிலை சீர்கேடுறத் துவங்கியது. ஆகவே அவர் முன்போல் சுறுசுறுப்பாக செயலாற்ற இயலாதிருந்தார். அவர் அமைத்த ஆட்சி ஒரு தனி மனிதருடைய ஆற்றலைச் சார்த்திருந்தமையால் அவர் திறமையுடன் செயலாற்றும்வரை நிருவாகம் ஒழுங்காக நடைபெற்றது. அவர் வலிவிழந்தபோது நிருவாகமும் நிலைகுலையலாயிற்று. அந்த நேரத்திலும் அதிகாரத்தை மேலும் மேலும் தம்மிடத்தில் ஒருமுகப்படுத்தி வரலானுர். அனுபவ மிக்கவர்களின் அறிவுரையையும் அவர் கோரிப் பெறும் வழக்கத்தை நிறுத்திவிட்டார். அவரது சொல்லுக்கு எதிராக யாரையும் நடக்க அவர் அனுமதிக்கவில்லை. அனைவரையும் அவர் சந்தேகக் கண்களுடன் பார்க்கத் தொடங்கி விட்டார். உண்மையை அஞ்சாது உரைத்துவந்த ஆலோசகர்களுக்குப் பதிலாக முகப்புகழ்ச்சிக்காரர்களே அவருடைய அன்பையும் ஆதரவையும் பெற்றனர். எதையும் ஆராய்ந்து பாராமல் தம் மனம் போனவாறு நடந்து கொண்டார். முன்புவிட இப்போது மிகக் கொடூரமாக நடக்க ஆரம்பித்தார். மங்கோலியரிடம் அவர் நடந்துகொண்ட விதம் அதற்குத் தக்க எடுத்துக்காட்டாகும்.

ஜலாலுத்தீன் காலத்தில் மங்கோலியர் பலர் இஸ்லாமிய மதத்தைத் தழுவிக் கொண்டு டில்லிக்கருகே குடியேறினர்கள்

என்றும், அவர்களுக்கு சுல்தான் நிலங்களைக் கொடுத்தார் என்றும் அவர்கள் புதிய முஸ்லிம்கள் எனப்பட்டனர் என்றும் முன்பு கண்டோம். அவர் காலத்தில் அரசாங்கம் நன்கொடையாக அளித்திருந்த நிலங்கள் யாவற்றையும் திரும்ப வாங்கிக் கொண்டது என்பதையும் முன்னர் படித்தோம். அதனால் தாங்கள் பெற்றிருந்த நிலங்களை இழந்து புதிய முஸ்லிம்கள் வறுமையில் வாடலாயினர். ஆகவே அவர்கள் அலாவுத்தீனிடம் வெறுப்புக் கொண்டனர். அபாஜி முகலை என்ற புதிய முஸ்லிம் ஒருவரை அலாவுத்தீன் கொன்று விடுமாறு ஆணையிட்டபோது அந்த வெறுப்புணர்ச்சி மேலும் பெருகியது. மாபாருக்கு முன்கூட்டியே சென்று அங்கு செய்திகளைச் சேகரித்து மலிக்காபூருக்கு அவ்வப்போது அவற்றை அனுப்பி வைக்க அலாவுத்தீன் நியமித்த ஐந்து அதிகாரிகளுள் அபாஜி முகல் ஒருவராவார். அபாஜி முகல் இந்துக்களுடன் சேர்ந்து மலிக்காபூரை எதிர்க்க முடிவு செய்தார். அதற்காக ஒரு மொழி பெயர்ப்பாளரைத் தேடிக் கண்டுபிடித்து அவருடைய உதவியால் இந்து அரசரிடம் வேலைக்கமர திட்டமிட்டார். ஆனால் அவரையும், அவருடைய போர் வீரர்களையும் இந்துக்கள் எதிர்பாராத விதமாக தாக்கினார்கள். மொழி பெயர்ப்பாளர் அம்படி பட்டு இறந்தார். ஆகவே அபாஜி திரும்ப வந்து மலிக்காபூருடன் சேர்ந்து கொண்டார். அபாஜி முகலின் நடத்தையைப் பற்றி கேள்வியுற்ற மலிக்காபூர் அவரை சங்கிலியால் பிணைத்து தாம் போன இடத்திற்கெல்லாம் அழைத்துச் சென்று விட்டு இறுதியில் டில்லிக்குக் கொண்டு சென்றார். சுல்தான் உண்மையை அறிந்தவுடன் அபாஜி முகலைக் கொன்று விட உத்தரவிட்டார். அபாஜி முகலுடைய மரணம் அலாவுத்தீனைக் கொல்லும் சதித் திட்டம் உருவாகுவதற்கு உடனடியான காரணமாக அமைந்து விட்டது. நாட்டில் அப்போது பரவலாக ஏற்பட்டிருந்த அதிருப்தியும் புதிய முஸ்லிம்களை ஊக்குவித்தது. வேட்டையின் பொருட்டு பருந்துகளைப் பறக்கவிடுவதற்காக சுல்தான் வெளியே வரும்போது அவர் துணியாலான ஒரு மேலாடையை மட்டும் போடுவது வழக்கம். அவரோடு வருகின்ற ஒரு சிலரும் ஆயுதங்கள் தாங்கி வருவதில்லை. அந்த நேரத்தில் அவரைக் கொல்ல 200 அல்லது 300 குதிரை வீரர்கள் மட்டும் இருந்தால் போதுமானது. அவரைக் கொன்று விட்ட பிறகு புதிய முஸ்லிம்களுடைய ஆட்சியை அமைக்க திட்டமிட்டனர். சுல்தானுடைய இரகசிய ஒற்றர்கள் சதித்திட்டத்தைக் கண்டு பிடித்து அதனை சுல்தானுக்கு உடனே அறிவித்து விட்டார்கள். எல்லா புதிய முஸ்லிம்களையும் குறிப்பிட்ட நாளன்று கொன்றுவிடும்படியும், அவர்களுடைய மனைவிமக்களைக் கொலைக்காரர்களுக்குக் கொடுக்கும்படியும் தமது அதிகாரிகளுக்கு

இரகசியமாக உத்தரவிட்டார். அதிகாரிகள் அந்த ஆணையை சிறிதும் பிறழாமல் நிறைவேற்றினர்கள். 20 முதல் 30 ஆயிரம் மங்கோலியர்கள் ஈவு இரக்கமின்றி கொல்லப்பட்டனர். அவர்களுள் பெரும்பாலோர் அந்த சதியைப் பற்றி ஒன்றும் அறியாதவர்கள். இந்த வகையான கொடூரச் செயல் அலாவுத்தீனுடைய பெருமையைக் குறைத்து விட்டதில் வியப்பென்ன இருக்கிறது?

அலாவுத்தீனுடைய பிள்ளைகள் இருவரும் அவரது இறுதிக் காலத்தில் மணக்கோலம் பூண்டனர். அலாவுத்தீனுடைய மூத்த மகன் பெயர் ஷம்ஸ் உல் ஹக். அவரை கிஸர்கான் என்றும் அழைப்பார்கள். 1307ஆம் ஆண்டில் தேவால் இராணியை டில்லி அரண்மனைக்குக் கொண்டு வந்தபோது அவருக்கு வயது எட்டு. கிஸர்கானுக்கு அப்போது வயது பத்து. இருவரும் நெருங்கிப் பழகி வந்தனர். அவர்களிடையே காதல் அரும்பியது. கிஸர்கானுடைய தாயார் தம் மகனுக்கும் தமது சகோதரன் அலப்கானுடைய மகளுக்கும் திருமணம் முடிப்பதென்று தீர்மானம் செய்தார். திருமணம் 1312ஆம் ஆண்டில் நடைபெற்றது. ஆயினும் தேவால் இராணியிடம் கொண்ட காதலை கிஸர்கானால் மறக்க இயலவில்லை. ஆகவே அவரது உடல் நலம் சிறிது சிறிதாகக் குன்றத் தொடங்கியது. மகனின் உயிருக்கு நேரவிருந்த ஆபத்தைத் தடுக்க கிஸர்கானுடைய தாயார் அலாவுத்தீனுடைய அனுமதி பெற்று தேவால் இராணியைத் தம் மகனுக்கு மணமுடித்து வைத்தார். அதுபோது மலிகா-இ-ஜஹான் (அலாவுத்தீனுடைய மனைவி) தமது இரண்டாவது மகனான ஷாதி கானுடைய திருமணத்தையும் நடத்தி வைத்தார். ஷாதிகானும் அலப்கானுடைய மற்றொரு மகளை மணம் புரிந்தார். அதன் பின்னர் கிஸர்கான் அமீர் குஸ்ருவை அழைத்து தமது காதலைப் பற்றி ஒரு காவியத்தை எழுதும்படி கூறினர். அமீர் குஸ்ருவும் அப்பணியினை மிக்க ஆர்வத்துடன் ஏற்றுக் கொண்டார். இவ்வாறாக தேவால் இராணி என்ற காவியம் உருவாயிற்று.

அலாவுத்தீனுடைய கடைசி மூன்று ஆண்டு ஆட்சிக் காலத்தில் சுல்தானுடைய உடல் வலிமை மேலும் குன்றி விட்டது. ஆகவே முன்போல் நிர்வாகத்தை அவர் முன்னின்று நடத்த முடியவில்லை. அதிகாரிகளைக் கட்டுப்படுத்தி வைப்பதும் கடினமாக இருந்தது. அதன் விளைவாக அவருடைய அதிகாரிகளுள் இருவர் ஒருவரையொருவர் எதிர்த்துப் போராட ஆரம்பித்தனர். அவர்களுள் அலப்கான் ஒருவர். அவர் அலாவுத்தீனுடைய மனைவியான மலிகா.இ.ஜஹானுடைய சகோதரன். அலப்கான்

திறமை மிக்கவர். 15 ஆண்டுகள் குஜரத்தைத் திறம்பட நிருவகித்து குஜரத் மக்களின் அன்பை வெகுவாகக் கவர்ந்து விட்டார். அலாவுத்தீனுடைய இராணிகளுள் அவருடைய சகோதரியே முக்கியமானவராகக் கருதப்பட்டார். அவருடைய சகோதரியே அலாவுத்தீனிடம் மிக்க செல்வாக்கு பெற்றிருந்தாள். அவருடைய மருமகப் பிள்ளைகளுள் இருவர் அலாவுத்தீனுடைய பிள்ளைகளாவார்கள். அவர்களுள் ஒருவரான கிஸர் கானை அரசராக ஏற்றுக் கொள்ளும்படி தமது பிரபுக்களை அலாவுத்தீன் கேட்டுக் கொண்டார். எனவே அலப்கானுடைய கட்சியே வெற்றி வாய்ப்பைப் பெற்றிருந்ததாக அனைவரும் கருதினார்கள்.

மற்றவர் மலிக்காபூராவார். 1299ஆம் ஆண்டில் குஜரத்தின் மீது படை யெடுப்பு நடத்தியபோது மலிக்காபூர் கைப்பற்றப் பட்டு டில்லிக்குக் கொண்டு செல்லப்பட்டார். அவர் ஓர் இந்து அலி. ஒரு முஸ்லிம் வியாபாரியிடம் அவர் அடிமையாக வேலை பார்த்து வந்தார். டில்லிக்குச் சென்றபின் சுல்தானுடைய நம்பிக்கையை முழுமையாகப் பெற்றுவிட்டார். படிப்படியாக முன்னேறி இறுதியில் பேரரசின் ''மலிக்நயப்'' (Malik Naib) பதவியை பெற்றார். தக்காணப்படையெடுப்புகள் பல வெற்றிகரமாக நடத்திப்பேரும் புகழும் பெற்றார். அவருடைய திறமையை வியந்து சுல்தான் அவரை தக்காண வைசிராயாக நியமித்தார். ஷாதிகானுடைய திருமணத்தின்போது அவர் மீண்டும் டில்லிக்கு வந்தார். இதற்கிடையில் சுல்தானுடைய உடல்நலம் மேலும் குன்றியது. அடிக்கடி அவர் நினைவிழந்து விடுவதுண்டு. இறுதிக் காலத்தில் அவருடைய குடும்பத்தார் அவரைச் சரியாக கவனிப்ப தில்லை. மலிகா. இ. ஜஹான் தம் பிள்ளையின் திருமண வேலையில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார். கிஸர்கான் நாட்டியம், இசை ஆகியவற்றில் தம் மனத்தைப் பறிகொடுத்து விட்டார். தந்தையைப் பற்றி சிறிதும் கவலை கொள்ளவில்லை. எனவே சுல்தானுக்கு தம் மனைவி மக்களிடம் வெறுப்பு ஏற்பட்டது. மலிக் காபூர் டில்லி வந்ததும் அவரிடத்தில் தம் மனக்குறையை கூறினார். நிலைமையை ஒருவாறு புரிந்து கொண்ட மலிக் காபூர் டில்லி யிலேயேதங்கி சுல்தானிடம் அலப்கான் ஆகியோரைப்பற்றி இல்லாததும் பொல்லாததும் கூறிவந்தார். ஒருநாள் தமது எதிரிகள் தம்மைக்கொல்ல இருப்பதாக சுல்தானிடம் கூறினார். இவற்றினுக்கெல்லாம் மூலக் காரணம் அலப்கான் என்றும் சொல்லி வைத்தார். மேலும் சுல்தான் கண்ணை மூடியதும் அலப்கான் இராச்சியத்தை அபகரிக்க இருக்கிறார் என்றும் கூறினார். அலப்கானை ஒழித்துக்கட்டி விட்டாலொழிய தாம் பயமின்றி வாழ

இயலாது என்ருர். அவர் கூறியவற்றை சுல்தான் பொறுமை யாகக் கேட்ட போதிலும் அலப்கானைக் கொல்ல உடனே சம்மதிக்கவில்லை. அந்தநேரத்தில் கிஸர்கான் தம்முடைய தந்தை நோயினின்றும் குணமடைவதற்காக ஹஸ்திஞபுரத்தி லுள்ள ஞானிகளின் சமாதிகளுக்கு யாத்திரை மேற்கொள்ள முடிவு செய்தார். நடந்து செல்வதற்குப் பதிலாக குதிரையில் ஏறிக்கொண்டு அங்கு சென்ருர். கூடவே நாட்டியக்காரிகளையும் பாடகர்களையும் அழைத்துச் சென்ருர். இவையாவும் மக்களிடம் அதிருப்தியை உண்டாக்கிவிட்டன.

இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு மலிக்காபூர் அலப் கானைக் கொன்றுவிட்டார். சுல்தானுடைய அனுமதியின் பேரில் இதை செய்ததாக பரணி கூறுகிருர். சுல்தான் இந்த வகையான கட்டளையை அளிக்கவில்லை என்றும், முடிவை காபூரின் பொறுப்பிலே அவர் விட்டுவிட்டார் என்றும் இசாமி கூறுகிருர். அதன் பின்னர் அப்போது மீரத்தில் இருந்த கிஸர்கானை அரச சின்னங்கள் யாவற்றையும் திரும்ப அனுப்பி வைக்குமாறு உத்தர விட்டார். கங்கை, இமாலயம் ஆகியவற்றினுக்கிடையேயிருந்த பகுதியை கிஸர்கானுக்கு அளித்து, இனி இரண்டு அல்லது மூன்று மாதங்கள் டில்லிக்கு வரக்கூடாது என்றும், அம்ரோஹாவில் அவருடைய இருப்பிடத்தை அமைத்துக் கொள்ள வேண்டும் என்றும் கட்டளையிடப்பட்டது கிஸர்கான் அக்கட்டளைக்கிணங்க தாம் பெற்றிருந்த அரச சின்னங்களை திரும்ப அனுப்பிவிட்டு அம்ரோஹா சென்றுவிட்டார். இரண்டு மூன்று தினங்கள் அங்கு இருந்துவிட்டு பின்னர் அவர் டில்லிக்கு வந்துவிட்டார். அலாவுத் தீன் முதலில் அவரை அன்புடன் தழுவிக்கொண்டார். ஆனுலும் தமது கட்டளைகளை அவர் மீறியதற்காக அவரை குவாலியர் சிறைக்கு அனுப்பி வைத்தார். அதுபோது தமது மகனுடைய உயிருக்கோ அல்லது கண்களுக்கு எந்தவிதமான தீங்கையும் ஏற்படுத்த மாட்டேன் என்று உறுதி கூறும்படி மலிக்காபூரை கேட்டுக் கொண்டார். மலிகா. இ.ஜஹானை சிகப்பு அரண்மனையில் சிறை வைத்தார். இந்நிகழ்ச்சிகளுக்குப் பிறகு சுல்தானுடைய உடல்நிலை மேலும் மோசமாகி விட்டது.

தங்களுடைய தலைவர் கொல்லப்பட்ட செய்தியைக் கேட் டதும் குஜரத் படைகள் கலகம் செய்யத் தொடங்கின. மலிக் காபூர் உடனே கமால் உத்தீன் குர்கதை குஜரத்திற்கு அனுப்பி வைத்தார். ஆனுல் அவர் கலகக்காரர்களை அடக்க இயலாமல் அவர்கள் கையில் மாண்டார். சித்தூரிலும் கலகக்கொடி பறக்கத் தொடங்கியது. தக்காணத்தில் ஹர்பால் தேவா சுல்தானுடைய

ஆதிக்கத்தினின்றும் தம்மை விடுவித்துக் கொண்டதாக அறிவித்தார். நாட்டில் எங்கு பார்த்தாலும் கலகங்கள் தோன்றுவதை அறிந்ததும் சுல்தான் மிகவும் கோபப்பட்டார். தம்முடைய கண்ணெதிரிலேயே தாம் கட்டிய பேரரசு இடிந்து வீழ்வதைக் கண்ணுற்றபோது அவர் வேதனையால் துடிதுடித்துப் போனார். அந்த நேரத்தில் மலிக் காபூர் எல்லா முக்கிய அதிகாரிகளையும் அழைத்து ஆறு வயது நிரம்பிய சுல்தானுடைய மகனான ஷிஹாப்புத்தீன் உமர் என்பவரை அடுத்த சுல்தானாகவும், மலிக் காபூரை நாயப்பாகவும் ஏற்றுக்கொள்ளும்படி சுல்தானுடைய முன்னிலையில் வற்புறுத்தினார். அப்போது சுல்தான் பேசும் சக்தியையும் இழந்துவிட்டார். அதையறியாது அவரது மௌனம் இந்த ஏற்பாட்டினுக்கு ஒப்புதல் அளிப்பதாக எண்ணினார்கள். 1316ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 4ஆம் நாள் அலாவுத்தீன் இறந்தார்.[1]

**மதிப்பீடு:** அலாவுத்தீனுடைய குணநலன்கள், சாதனைகள் ஆகியவற்றைப்பற்றி வரலாற்றாசிரியர்களிடையே மாறுபட்ட கருத்துகள் நிலவி வருகின்றன. அலாவுத்தீனுடைய ஆட்சி வெற்றிகரமானதொரு ஆட்சி என்றும், புகழ் மிக்க ஆட்சி என்றும் எல்பின்ஸ்டன் கூறியுள்ளார். அலாவுத்தீன் தமது அதிகாரங்களை நியாயமான முறையில் பயன்படுத்தி வந்தார் என்றும் அவர் கூறியிருக்கிறார். V. A. ஸ்மித் அதனை ஏற்றுக்கொள்ளவில்லை. அலாவுத்தீன் நாகரிகமற்ற ஒரு கொடுங்கோலர் என்றும் அவரது ஆட்சி இழிவானதொரு ஆட்சி என்றும் கூறியுள்ளார். ஆகவே நாம் உண்மையை ஆராய்ந்தறிவது அவசியமாகிறது.

அலாவுத்தீன் கல்வியறிவு இல்லாதவர் ஆயினும் போதிய பொது அறிவு அவரிடமிருந்தது. முக்கியமான செய்திகளில் அவர் அனுபவ மிக்கவர்களின் யோசனையை நாடுவது வழக்கம். ஆயினும் முடிவு அவருடையதாகவே யிருந்தது. தர்கீயின் படையெடுப்பின் போது அலாஉல்முல்க் கூறிய அறிவுரையை அவர் ஏற்றுக் கொள்ளாது அதற்கு நேர்மாறாக நடந்தார் என்பதை நாம் முன்னரே கண்டுள்ளோம். கல்வி அறிவு அவர் பெறாததே அவரது கொடூரச் செயல்களுக்கு ஒரு காரணமாகும். கருணை, இரக்கம் ஆகியவற்றினுக்கு அவரது இதயத்தில் இடமில்லை. கடுமையான தண்டனைகள் வழங்குவதில் இரத்த பாசத்தைக்கூட அவர் தலையிட அனுமதிப்பதில்லை. பழிவாங்கும் உணர்ச்சி அவரிடம் மேம்பட்டிருந்தது. யாரேனும் ஒருவரைப் பற்றி அவரிடம் தப்பெண்ணம் தோன்றிவிட்டால் அவரை அழிப்பதற்கு வேண்டிய முயற்சிகளை ஒன்று விடாமல் மேற்கொண்டு விடுவார். அக்காலத்தில் தோன்றி

[1] Dr. K. S. லால் 6ஆம் தேதி மரணமடைந்தார் என்று கூறுகிறார். பக் 270

யிருந்த சாதாரண தீயப்பழக்கங்களுக்கு அவர் இடமளிக்கவில்லை என்றே கூறவேண்டும். பெண் மோகம் அவரிடம் கிடையாது. அவருக்குப் பல மனைவிகள் இருந்தபோதிலும் பெண்மைக்கு அடங்கி அவர் நடக்கவில்லை. ஒழுக்கங் கெட்டு அலையவு மில்லை. மலிக்காபூரிடம் மிகவும் நெருங்கிப் பழகினர் என்பது உண்மை. ஆனல் சிற்றின்பத்திற்காக அவரிடம் பணம் பறி கொடுத்தாரா என்பது சந்தேகத்திற்குரியதாகும். அவரது ஆட்சியின் தொடக்கத்தில் மதுவருந்தி வந்தபோதிலும், மது அருந்துவதனல் ஏற்படும் தீமைகளை அறிந்தவுடன் அப்பழக்கத்தை அறவே நிறுத்திவிட்டார். பிறர் குடிப்பதையும் அவர் தடை செய்தார். அவர் திருக்குரானைப் படிக்கவில்லை என்பது உண்மையே. அன்ருடம் பிரார்த்தனைகளை ஒழுங்காகச் செய்வ தில்லை. ரம்ஜான் விரதத்தை முறைப்படி கடைப்பிடித்ததில்லை. வெள்ளிக்கிழமை தொழுகைக் கூட்டத்திற்குச் செல்லாத ஒரு டில்லி அரசர் இருப்பாரேயானல் அவர் அலாவுத்தீனுகத்தான் இருக்க வேண்டும். மதத்தலைவர்களை அரசியலில் தலையிட அவர் அனுமதிக்கவில்லை. ஆயினும் அவர் ஓர் உண்மையான முஸ்லிமாகவே வாழ்நாள் முழுவதையும் கழித்தார். முஸ்லிம் ஞானிகளிடத்தில் மரியாதையுடன் நடந்து கொண்டார். இந்துக்களிடம் கடுமையாக நடந்து கொண்டார். அதனல் அவரை மதவெறியர் என்று சொல்ல இயலாது. அரசியல் காரணங்களுக் காக இந்துக்கள் கடுமையாக நடத்தப்பட்டனரேயன்றி சமயக் காரணத்திற்காக அன்று.

குடிமக்களுடைய நலத்தில் மிக்க அக்கறை காட்டினர். அவரது மதுவிலக்குப் பற்றிய நடவடிக்கைகள் அனைவருடைய பாராட்டிற்குரியனவாகும். தகாப்புணர்ச்சி, விபசாரம் போன்ற ஒழுக்கக்கேடுகளை ஒழிக்கவும் அவர் பல நடவடிக்கைகளை மேற் கொண்டார். தகாப்புணர்ச்சியில் ஈடுபட்டிருந்த குற்றத்திற்காக இஸ்மாயிலி போராக்களை இரு துண்டுகளாக வெட்டிக் கொல்லு மாறு அலாவுத்தீன் கட்டளையிட்டிருந்ததை இங்கு நினைவு கூறுதல் அவசியமாகும். விபசாரம் தடைசெய்யப்பட்டது. விபசாரிகளை ஒரு குறித்த காலத்தில் திருமணம் செய்துகொள்ளும்படி கட்டளை யிட்டார். அன்னியருடன் உடலுறவு கொண்ட மனைவிகளுக்கு மரணதண்டனை விதித்தார். அக்குற்றத்திற்குக் காரணமான ஆண்களின் ஆண்மையை அழித்து விட்டார். மந்திரவாதிகளைக் கல்லெறிந்து !கொல்லுவித்தார். மந்திர ஜாலக்காரர்கள் தங்களுக்கு மந்திர ஜாலம் தெரிந்ததாகக் காட்டிக்கொள்ள பயப் பட்டனர். மூடநம்பிக்கையும் அறியாமையும் நிறைந்த காலத்தில் மந்திர ஜாலக்காரர்களிடமிருந்து மக்களை காப்பாற்றியதை ஓர்

அருஞ்செயலாகவே கருத வேண்டும். அலாவுத்தீன் ஒரு பேராசைக் காரர். அலெக்சாண்டரைப்போல உலகை வெல்ல வேண்டும் என்று அவர் எண்ணினுர். நபிகள் நாயகம்போல ஒரு புதிய மதத்தை ஏற்படுத்தவேண்டும் என்று எண்ணமிட்டார்.

அலாவுத்தீன் ஒரு சிறந்த படைத்தலைவர் என்பதை சிலர் ஏற்றுக்கொள்ள மறுக்கின்றனர். அவர் காலத்தில் முஸ்லிம்கள் அடைந்த வெற்றிக்கு அவரது படைத்தலைவர்களே காரணமா வார் என்று அவர்கள் வாதாடுகின்றனர். ஆனுல் அது உண்மை யல்ல. தேவகிரி படையெடுப்பும், மங்கோலியருடன் அவர் நிகழ்த் திய போர்களும், இரண்தம்பாரிலும் சித்தூரிலும் அவர் அடைந்த வெற்றியும் அவரது போர்த்திறமையை பறை சாற்றுகின்றன. திறமை மிக்க படைத்தலைவர்கள் அவருக்கு எதிராக கலகம் செய் யாது அவருக்கு எப்போதும் கீழ்ப்படிந்து வந்தனர் என்று அறிகி றேம். அலாவுத்தீனுடைய மேலான போர்த் திறமையே அதற்குக் காரணம் என்று கூறுவது முற்றிலும் பொருந்தும். நாபிநந்தன ஜீனே தாரபிரபந்தா என்ற நூலில் காக்காசூரி அலாவுத்தீனுடைய போர் திறமையை பின்வருமாறு பாராட்டிக் கூறியுள்ளார். "இந்திராவிற்கு ஒப்பான வலிமையைப் பெற்றிருந்த அலாவுத்தீன் கடல்போல உலகத்தை எல்லா பக்கங்களிலும் சூழ்ந்து கொண் டார். அவர் கைப்பற்றிய வலிமைபொருந்திய கோட்டைகளை யாரால் எண்ண முடியும்'' என்று எழுதியுள்ளார். (வேட்டை யாடுவதில் அவருக்கு மிகுதியான விருப்பம் ஏற்பட்டிருந்தது.)

அலாவுத்தீன் அரசியல் திறம் படைத்தவர். அரசாங்கத்தின் எல்லா நடவடிக்கைகளையும் கூர்ந்து கவனித்து வந்தார். அவரது இராணுவம் பற்றிய சீர்திருத்தங்களும், வருவாயினைப் பெருக்க மேற்கொண்ட நடவடிக்கைகளும் அவருடைய அரசியல் திறத்தை வெளிப்படுத்துகின்றன. புதிய திட்டங்களைக் கொண்டு வருவதில் அவருக்கு பேரார்வம் இருந்தது. அவரது பொருளாதாரம் பற்றிய நடவடிக்கைகள் அதற்கு சிறந்த எடுத்துக்காட்டாகும். தக்காண அரசர்களிடம் அவர் கையாண்ட கொள்கையும் அவரது மேலான அரசியல் திறத்தை உணர்த்துகிறது. டில்லிக்கு வெகுதூரத்தி லுள்ள பகுதிகளை வென்ற போதிலும் அவற்றைத் தம்முடைய நேரடியாட்சியின் கீழ்க் கொண்டு வருவதால் ஏற்படுகின்ற கஷ்ட நஷ்டங்களை உணர்ந்து அவற்றைத் தோற்றுப் போன அரசர் களிடமே விட்டு வைத்தார். இவ்வாருக பகைவர்களையும் நண்பர்களாக மாற்றி விட்டார். அவர்கள் ஆண்டுதோறும் மனமுவந்து கப்பம் செலுத்தி வரலானுர்கள். அலாவுத்தீன் மேற்கண்ட படையெடுப்புகளுக்கு உதவி செய்தார்கள். தேவ

கிரி அரசர் அவருக்குப் பெண் கொடுத்தார். அலாவுத்தீனும் அவர்களைத் தக்க முறையில் கௌரவித்து அவர்களுடைய அன்பைப் பெற்ருர். இந்த விஷயத்தில் அவரை அக்பர் பேரரசருக்கு ஒப்பிட இயலும்.

இருபது ஆண்டுகள் அலாவுத்தீன் ஆண்டு வந்தார். பல நாடுகளை வென்ருர். பலவகையான சீர்திருத்தங்களை மேற்கொண்டார். அவற்ருல் டில்லி சுல்தானியத்திற்கு ஏற்பட்ட நன்மை யாது என்பதைப் பற்றி வரலாற்ருசிரியர்களிடையே கருத்து வேற்றுமை தோன்றியுள்ளது. அலாவுத்தீனுடைய ஆட்சி டில்லி சுல்தானியத்திற்கு நிரந்தரமான பலனை அளிக்கவில்லை என்பர் சிலர். அவரது ஆட்சி பலமான அடிக்கல்மீது அமைக்கப்படவில்லை. ஆகவே அலாவுத்தீன் இறந்த சில ஆண்டுகளுக்குள்ளாக அது கவிழ்க்கப்பட்டு விட்டது. அலாவுத்தீனுடைய ஆட்சி முறையில் பல குறைகள் இருந்தன என்பதை எவரும் மறுக்க இயலாது. முதலாவதாக அவரது அரசாங்கம் தனி மனிதருடைய அரசாங்கமாகும். அவரது ஆட்சி சிறப்புற நடப்பதும் நடக்காததும் அவருடைய திறமையைப் பொறுத்திருந்தது. அவர் திறமையானவர் என்பதில் ஐயமில்லை. ஆனல் அவர் ஒரு மனிதர் என்பதை அவர் மறந்து விட்டார். பிணி, மூப்பு ஆகியவற்ருல் தமது திறமையும், வலிமையும் பாதிக்கப்படும் என்பதை அவர் உணரவில்லை. ஆகவே அவருக்கு வயது ஆக ஆக சோர்வும், தளர்ச்சியும் ஏற்பட்டது. அப்போது தம்மிடம் குவிக்கப்பட்டிருந்த எல்லா அதிகாரங்களையும் செயற்படுத்த இயலாது தத்தளித்தார். அதிகாரிகளுடைய நடவடிக்கைகளை மேற்பார்வையிட வழியில்லாது திகைத்தார். தமது பிள்ளைகளுக்குப் போதிய பயிற்சியை அளிக்காமையால் அவர்களால் அவருக்குப் பயன் ஏதும் இல்லாது போயிற்று. மலிக்காபூரின் கை ஓங்குவதற்கு அதுவே முக்கிய காரணமாகும். மலிக்காபூர் சுல்தானுடைய பரம்பரையையே ஒழிக்க கங்கணம் கட்டியிருந்தார் என்பது அனைவருக்கும் தெரிந்த உண்மையேயாகும். இரண்டாவதாக அலாவுத்தீனுடைய ஆட்சி மக்களின் ஆதரவின்மீது அமைக்கப்பட்டதன்று. இராணுவமே அதனுடைய அடித்தளமாக இருந்தது. கத்தி முனையைக் காட்டி நடத்தப் பெறும் அரசாங்கம் நிலை பெறுவதில்லை என்ற உண்மையை கல்ஜி ஆட்சி மெய்ப்பித்துக் காட்டி விட்டது. படையின் நன்மையின் பொருட்டு கொண்டு வரப்பட்ட விலைவாசிக் கட்டுப்பாட்டுத் திட்டம் எங்ஙனம் வியாபாரிகள், விவசாயிகள் ஆகியோரின் வெறுப்பைத் தேடிக் கொண்டது என்பதை முன்னரே கண்டோம். அவரது ஒற்றர் படை மக்களை சுதந்திரமாக வாழ அனுமதிக்கவில்லை. சுக

வாழ்க்கையை மேற்கொண்டிருந்த பிரபுக்களுக்கு அலாவுத்தீனு டைய சட்டங்கள் வேப்பங்காயாய்க் கசந்தன. பிரபுக்களை முழுமையாக ஒடுக்கி விட்ட பிறகு தமக்கு எப்போதும் கீழ்ப் படிந்து நடக்கக்கூடிய அதிகார வர்க்கம் ஒன்றினை அவர் தோற்று வித்தார். அது போய் கீழ் நிலை மக்கள் பலரை புகழ் ஏணியின் உச்சியில் கொண்டு வந்து நிறுத்தி அவர்களுடைய மதிப்பை உயர்த்தினர். பழைய பிரபுக்களுக்கு இது எரிச்சலை உண்டாக் கியது. புதிய முஸ்லிம்கள் பலரைக் கொன்று அவர்களின் தீராப் பகையினை அவர் தேடிக் கொண்டார். படை வலிமையைக் கொண்டு அவர் வென்ற இந்து அரசர்கள் தங்களுடைய சுதந் திரத்தை மீண்டும் பெறுவதற்குத் தக்க சமயம் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவரது ஆட்சியின் கீழிருந்த இந்துக்கள் வரிச் சுமையையும் அவமானத்தையும் தாங்க முடியாமல் வேதனைப் பட்டனர். மேற்கூறியவற்றினுக்கு மூலக் காரணமாக அமைந்திருந்தது அவரது இராணுவ ஆட்சியேயாகும். கொடூரச் செயல்களின் மூலம் மக்களை அச்சுறுத்தித் தமக்குக் கீழ்ப்படிய வைத்தாரேயன்றி அவர்களுடைய அன்பையும் ஆதரவையும் பெறுவதற்கான வழிமுறைகளை அவர் பின்பற்றவில்லை. இது ஒருவகையான மதிப்பீடு ஆகும்.

அலாவுத்தீனுடைய அருஞ்செயல்களை நன்கு ஆராய்ந்து கவனிப்போமாகில் மேற்கண்ட குற்றச்சாட்டுகள் சரியானவை யாக புலப்படாது என்பது வேறு சிலருடைய கருத்தாகும்.[1] இந்தியாவில் துருக்கியப் பேரரசை ஏற்படுத்தும் முயற்சியை மேற் கொண்டு அதில் பெரும் வெற்றியைக் கண்ட முதல் அரசர் அலாவுத்தீனே ஆவார். அவர் காலத்தில்தான் துருக்கியப்பேரரசு வேறெப்போதும் இராத அளவிற்குப் பெருகியது. மங்கோலியப் படையெடுப்பிலிருந்து டில்லியைக் காப்பாற்றியவரும் அவரேயா வார். ஆகவே அவரை இந்தியாவின் முதல் துருக்கியப் பேரரசர் என்று கூறுவது முற்றிலும் பொருந்தும்.[2] அவர் காலத்தில் எங்கும் அமைதி நிலவியது; திருடர்பயம் ஒழிந்தது; வியாபாரிகளை நாணயமாக நடக்கச் செய்தார். டில்லியில் நிலைப்படை யொன்றை நிரந்தரமாக முதல் முதலில் அமைத்த துருக்கிய அரசர் அவரேயாவார். நிலத்தை அளந்து அதற்கேற்ப வரி வசூல் செய்யவேண்டும் என்ற திட்டத்தைக் கொண்டு வந்த முதல் துருக்கிய அரசரும் அவரேயாவார். விலைக்கட்டுப்பாட்டு முறையைக் கொண்டுவந்து அதனை வெற்றிகரமாக நடத்திக்

[1] K. S. Lal, p.284

[2] A. L. Srivastava, the Delhi Sultanate p. 172

காட்டிய பெருமை அவரையே சாரும். தக்காணத்தில் முஸ்லிம்களின் வெற்றிக்கொடியை நாட்டிய முதல் துருக்கிய அரசரும் அவரன்றி வேறு அல்லர். அதன் வாயிலாக இந்தியாவில் அரசியல் ஒருமைப்பாடு தோன்ற வழிவகை செய்தவரும் அவரேயாவார். மதம்வேறு, அரசியல்வேறு என்ற முறையில் தமது அரசியல் நடவடிக்கைகளில் உலாமாக்களின் செல்வாக்கு தலைதூக்கவொட்டாது செய்த முதல் முஸ்லிம் அரசரும் அவரேயாவார். எழுத்தறிவில்லாதவர் என்றாலும் கலையுலகிலும் ஒருபுதுமையை ஏற்படுத்திய பெருமை அலாவுத்தீனுக்கு உண்டு. அமீர்குஸ்ரூவை ஆதரித்து இந்திய இலக்கிய வளர்ச்சிக்கு ஒரு நற்றொண்டை ஆற்றியுள்ளார். அவரது அலாயிதர்வாஜாவும், சீரிகோட்டையும், ஆயிரங்கால் அரண்மனையும் அவர் கட்டிடக்கலைக்கு ஆற்றியப்பணியினை அறிவிக்கின்றன. மக்களைக் கொடுமைப்படுத்தினார் என்பது உண்மையே. அரசியல் காரணத்திற்காக அவர் கொடூரமாக நடந்துகொண்டார். விலைக்கட்டுப்பாட்டுத் திட்டம் டில்லி மக்களுடைய வாழ்க்கையை வளப்படுத்தியது. அவரது அறமுறைசார்ந்த சில சட்டங்கள் மக்களை ஒழுக்க சீலர்களாக மாற்றிவிட்டன. ஆகவே டில்லியை ஆண்ட சுல்தான்களுள் அலாவுத்தீனே மிகச்சிறந்தவர் எனக் கூறப்படுகிறது. அவருக்கு இணையாக வைத்துக் கூறப்படும் ஒரே அரசர் முகமது பின்துக்ளக் ஆவார். முகமது துக்ளக் தாம் மேற்கொண்ட நடவடிக்கைகளில் தோல்வியுற்றார். ஆனால் அலாவுத்தீன் எடுத்தகாரியம் அனைத்திலும் வெற்றிக் கொண்டார் என்பதை அறியும்போது அலாவுத்தீனே மிகச் சிறந்தவர் என்பது புலனாகும். இந்திய முஸ்லிம் பேரரசு இந்திய முஸ்லிம் நிருவாகம் ஆகியவற்றின் வரலாறு இவர்காலத்தில் தான் துவங்கிற்று என்று கூறுவது முற்றிலும் பொருந்தும். அதுவே அது அவர் டில்லி சுல்தானியத்திற்கு மட்டுமின்றி இந்திய முஸ்லிம் ஆட்சிக்கு ஆற்றிய பெருந்தொண்டாகும்.

# 10. கடைசி கல்ஜி அரசர்கள்

### ஷிஹாப் உத்தீன் உமர்

அலாவுத்தீன் இறந்தபின்னர் மலிக்காபூரின் செல்வாக்கு மேலும் உயர்ந்துவிட்டது. முதல்வேலையாக சுல்தானின் சடலத்தை குவ்வத். உல். இஸ்லாம் என்ற மசூதிக்கு முன்னால் அலாவுத்தீன் கட்டிவைத்த சமாதியில் அடக்கம் செய்தார். மறுநாள் பிரபுக் களையும், அதிகாரிகளையும் அரசவைக்கு வரச்செய்து அங்கு சுல்தான் தம் இறுதிக்காலத்தில் எழுதி வைத்த விருப்பப்பத் திரத்தை அவர்களுக்குப் படித்துக் காட்டினார். அதில் தமக்குபின் ஷிஹாப் உத்தீன் உமர் பட்டத்திற்கு வரவேண்டும் என்று சுல்தான் அறிவித்திருந்தார். அப்பத்திரம் எந்த சூழ்நிலைகளுக்கிடையே தயாரிக்கப்பட்டதென்பதை நாம் முன்பே கண்டுள்ளோம். ஆறு வயதே நிரம்பிய ஷிஹாப் உத்தீனை அரியணையில் அமர்த்திவிட்டு, காலஞ்சென்ற சுல்தானின் ஏனைய பிள்ளைகளை அழைத்து புதிய சுல்தானின் கால்களில் விழும்படிச் செய்தார். அரச அதிகாரம் அவர் கைகளில் மாறிய போது காபூருக்கு குறிப்பிடத்தக்க எதிர்ப்பு ஏதும் ஏற்படவில்லை. ஆனால் வெகு விரைவில் பலத்த எதிர்ப்பு ஒன்று தோன்றுவதற்கு அவரே காரணமாக அமைந்து விட்டார். மலிக்காபூர் சிறந்த போர்வீரர். ஆனால் நிருவாகத் திறமை அவரிடம் சிறிதும் கிடையாது. எனவே மக்கள் அவரிடம் என்ன எதிர்பார்த்திருந்தனர் என்பதைப் பற்றி சிறிது கவலை கொள்ளாது தம் விருப்பம்போல் நடந்துகொண்டார். காலஞ் சென்ற சுல்தானின் குடும்பத்தினரை அவர் மரியாதையாக நடத்த வேண்டும், அவர் அரசாங்கத்தை மலிக்குகளின் ஆலோசனையின் பேரில் நடத்த வேண்டும் என்று மக்கள் எதிர்பார்த்தனர். ஆனால் சுல்தானின் குடும்பத்தினரை கௌரவமாக நடத்துவதற்குப் பதி லாக அவர்களை அழிக்கும் பணியில் மும்முரமாக ஈடுபட்டார். அலாவுத்தீன் இறந்த உடனேயே அரசருடைய மோதிரத்தைக் கழற்றி சும்பல் (Sumbul) என்பவரிடம் கொடுத்து உடனடியாக குவாலியருக்குப் போகச் சொன்னார், குவாலியார் அடைந்ததும் மோதிரத்தைக்காட்டி கோட்டையை அவர் வசமாக்கிக்கொண்டு, குவாலியர் ஆளுநரை டில்லிக்கு அனுப்பிவைக்கும்படி கூறினார். கிஸர்கானை குருடாக்கிவிட்டு பின்னர் டில்லிக்கு வந்துவிடும்படி அவரிடம் கூறினார். அவருக்கிட்டபணியினை ஒழுங்காக செய்வாரே

யானல் அவருக்கு அமீர்.இ.ஹஜீப் பதவியைத் தருவதாகக் கூறினர். சும்பல் தமக்கிட்டப்பணியினை செவ்வனே செய்து முடித்தார். அதிகாரத்தைப் பெற்ற நாளன்றே ஷாதிகானுடைய கண்களைப் பறித்துவிட்டார். மலிகா.இ. ஜஹானிடமிருந்த சொத்துக்களையும் அணிகலன்களையும் பறித்துக் கொண்டார். பின்னர் அவரை குவாலியர் கோட்டைக்கு அனுப்பிவைத்தார். கிஸர்கானுடைய ஆதரவாளர்கள் காபூரை அதிகாரப்பீடத்தி லிருந்து அகற்றுவதற்கான முயற்சியில் ஈடுபட்டிருக்கின்றனர் என்பதை அறிந்து அலாவுத்தீனுடைய ஏனையப் பிள்ளைகளை சிறையிலிட்டார். அவர்களுள் முபாரக்கானும் ஒருவர். ஷிஹாப் உத்தீனுடைய ஒன்றுவிட்ட தந்தை என்பதால் தம்முடைய மதிப்பு உயரக்கூடும் என்ற எண்ணத்திஞல் ஜத்யாபாலியை திருமணம் செய்து கொண்டார்.

அலாவுத்தீனுடைய பிள்ளைகளை ஒருவாறு தம் பிடிக்குள் கொண்டு வந்த பின்னர் மலிக்காபூர் தம் விருப்பம்போல் ஆட்சி செலுத்தலானர்.

அலாவுத்தீன் வெளியிட்டிருந்த சட்டங்கள் அனைத்தையும் முன்புபோலவே நடைமுறைப் படுத்தும்படி அமைச்சர்களுக்குக் கட்டளையிட்டார். அரசாங்க அதிகாரிகள் அனைவரும் அன்றாட அரசியல் பற்றிய செய்திகளில் தம்முடைய ஆணைக்கேற்றபடி நடக்கவேண்டும் என்று மலிக்காபூர் உத்தரவிட்டார். தினந் தோறும் காலையில் ஆயிரங்கால் அரண்மனையின் மாடியில் மலிக்காபூர் அரசசபையைக் கூட்டி பின்னர் அரசரை அவருடைய தாயார் ஜத்யாபாலியிடம் அனுப்பிவைப்பார்.[1] அதன் பிறகு காபூர் கீழேவந்து அதிகாரிகளைச் சந்தித்து அவர்கள் செய்ய வேண்டுவதைப்பற்றி கூறி அவர்களை அனுப்பிவைப்பார்.

இரவு நேரத்தில் தம்முடைய நெருங்கிய நண்பர்களுடன் அலாவுத்தீன் குடும்பத்தினரை அழிப்பதற்கான திட்டங்களைப் பற்றி விவாதித்து வருவார். மலிக்குகளின் ஆலோசனையைப் பெருமல் தம் விருப்பம்போல் காபூர் ஆட்சி செலுத்த வருவதை அறிந்த பிரபுக்கள் காபூரிடம் வெறுப்புக் கொள்ளத் தொடங்கி ஞர்கள். மேலும் காலஞ் சென்ற சுல்தானின் மெய்க்காவலர்கள் தங்கள் உயிரைக் கொடுத்தாவது சுல்தானின் குடும்பத்தினரைக் காப்பாற்றுவது என்று தீர்மானித்தார்கள். அதற்குள் முபாரக் கானுடைய கண்களைக் பறித்து விடுவதென காபூர் முடிவு செய்

[1] ஜத்யாபாலி இராமச்சந்திரதேவரின் மகள். இராமச்சந்திரதேவா அவரை அலாவுத்தீனுக்கு மணமுடித்து வைத்தார் என்று முன்பே கவனித்துள்ளோம்.

தார். ஆகவே, காபூர் மெய்க்காவலர் தலைவர்களுள் ஒருவரான முபாஷீர் என்பவரைத் தம்மைப் பார்க்கும்படி கட்டளையிட்டார். அலாவுத்தீன் உயிரோடு இருந்தபோது அரண்மனைக்குள் ஆயுதத் துடன் செல்ல தமக்கு உரிமை இருந்தது என்றும் அந்த உரிமையை இப்போது மலிக் காபூரும் அவருக்குத் தரவேண்டும் என்றும் கூறினர். மலிக் காபூர் அதற்கு இசைந்தார். காபூரின் அறைக்கு நுழைந்ததும் அவர் மலிக் காபூரை வெட்டி வீழ்த்தினர். அதன் பின்னர் அவர் தம் ஆதரவாளர்கள் பின் தொடர சிறைச் சாலைக்குச் சென்று முபாரக்கானை விடுவித்தார். ''மலிக் காபூர் தம்முடைய கத்தி, தாம் தின்ற உப்பு ஆகியவற்றின் மேல் ஆணை யிடுவது வழக்கம். உப்பு இப்போது கத்தி உருவில் வந்து அவரையே கொன்றுவிட்டதென்று,'' அமீர் குஸ்ரூ எழுதியுள்ளார். மலிக் காபூரின் மறைவிற்காக எவருமே வருந்தவில்லை. இவ்வாருக காபூரின் 35 நாட்கள் ஆட்சி முடிவுற்றது.

### குத்புத்தீன் முபாரக் கல்ஜி

மலிக் காபூர் இறந்த பிறகு முபாரக்கான் 'ரீஜெண்ட்' பதவியை ஏற்ருர். இரண்டு மாதங்களில் ஷிஹாப் உத்தீனை அரியணையிலிருந்து அகற்றிவிட்டு தாமே அரசரானர். குத்புத்தீன் முபாரக் ஷா என்ற பட்டத்தைச் சூட்டிக்கொண்டார்.

முபாரக் ஷா பட்டமெய்திய போது அவருக்கு வயது 17 அல்லது 18 இருக்கும். அவருடைய முதல்வேலை அலாவுத்தீ னுடைய மெய்க்காவலர்களை அடக்குவதாகும். அவர் அரியணை ஏறுதற்கு அவர்களே காரணமாகயிருந்தமையால் அவர்கள் செருக்குடன் நடக்கத் தலைப்பட்டனர். சுல்தானும் பிரபுக்களும் அவர்களைத் தனிப்பட்ட வகையில் மரியாதை அளிக்கவேண்டும் என்றும் அவர்கள் விரும்பினர்கள். அரசருக்கு வணக்கம் செலுத்து வதில் அவர்களுக்கு முதலிடம் வேண்டும் என்று கோரினர்கள். அதே போல அரசாங்க அதிகாரிகளுள் மிக உயர்ந்த அதிகாரி களுக்குப் பக்கத்தில் உட்காரவும், அவர்களுக்கு அளிக்கப்பட்ட கௌரவ உடைகள் போல தங்களுக்கும் அளிக்கவேண்டும் என்றும் விருப்பம் தெரிவித்தார்கள். ஆகவே முபாஷீர் உட்பட பலரை கொன்றுவிடுமாறு சுல்தான் கட்டளையிட்டார்.

அதையடுத்து பட்டங்களையும் கௌரவ விருதுகளையும் அரசாங்கப் பணியில் ஈடுபட்டிருந்த முக்கிய அதிகாரிகளுக்கு வழங் கினர். மலிக் தினருக்கு ஜபர்கான் என்ற பட்டம் வழங்கப் பட்டது. ஷெர்கான் என்ற பட்டம் முகமதுக்கு அளிக்கப் பட்டது. காஜி மலிக்குவினுடைய மகனை மலிக் பக்ருதீன் ஜூனு

விற்கு அமீர்-இ-ஆகூர் பதவி கொடுக்கப்பட்டது. மலிக் ஷீரா பேக்குவிற்குப் பலவித பொறுப்புக்கள் வழங்கப்பட்டன. முபாரக் ஷாவின் ஆசிரியர்களுள் ஒருவரான மௌலானு ஜியாவுத்தீன், சாதர் ஜஹான் என்ற பதவியுடன், காஜிகான் என்ற பட்டத்தையும் பொன்னுலும் மணியாலும் செய்யப்பட்ட உடைவாள் ஒன்றும் பெற்ருர். முபாரக் ஷாவினுடைய நண்பர்களும் அடிமைகளும் பெரிய பெரிய ஜாகீர்களைப் பெற்றனர். அவர்களுள் ஒருவர் ஹசன்பரடு என்பவர் ஆவார். அவருக்கு குஸ்ருகான் என்ற பட்டமளிக்கப்பட்டது. மலிக் காபூரின் இக்தாவும் அவருக்கே வழங்கப்பட்டது. பின்னர் அவருக்கு வசீர் பதவியும் அளிக்கப் பட்டது. அவரே குஸ்ரு ஷா என்ற பட்டத்துடன் டில்லி சுல்தானுக முடி சூட்டிக்கொண்டார்.

இயற்கையிலேயே தாராள மனப்பான்மை கொண்டிருந்த குஸ்ருகான், சிறை வாழ்க்கை அவரை மேலும் கருணையுள்ளவராக மாற்றிவிட்டது. எனவே அவருடைய ஆட்சியின் தொடக்கத்திலேயே முற்போக்கான நடவடிக்கைகள் பல மேற்கொள்ளப் பட்டன. ஏறக்குறைய 18,000 கைதிகளை விடுதலை செய்தார். பல குற்றங்களுக்காக நாடு கடத்தப்பட்டவர்கள் மீண்டும் நாடு திரும்ப அனுமதி வழங்கினுர். ஆறுமாத சம்பளம் படைவீரர் களுக்கு இனுமாக அளிக்க ஏற்பாடு செய்தார். அதிகாரிகளுக்கும், அறிஞர்களுக்கும் அளிக்கப்பட்டிருந்த உதவித் தொகைகளும், படிகளும் (allowances) அதிகமாக்கப்பட்டன. அலாவுத்தீன் காலத்தில் அரசாங்கம் திரும்ப வாங்கிக்கொண்ட மானியங்கள் பழைய மானியதாரர்களுக்கே மீண்டும் வழங்கப்பட்டது. வரிச் சுமை குறைக்கப்பட்டது. வரிப்பணத்தைப் பெறுவதற்காக சவுக்கடி போன்ற கொடூர வழிகளைக் கையாளுவதை அவர் நிறுத்தி விட்டார். அரசாங்கத்தின் உதவியைக் கோரி சுல்தானுக்கு அனுப்பப்பட்ட மனுக்களை தாமே படித்து ஆவன செய்தார். மக்களுடைய நடவடிக்கைகளைக் கண்காணித்து வரும் பழக்கம் நிறுத்தப்பட்டது. அங்காடிகளில் விற்பனையைக் கட்டுப்படுத்த அலாவுத்தீன் நிறைவேற்றிய சட்டங்கள் யாவும் கைவிடப்பட்டன. ஒற்றர் பயம் பெரும்பாலும் நீங்கி விட்டது. கடுமையாக தண்டிக்கும் பழக்கம் நிறுத்தப்பட்டது. குற்றவாளிகள் அரசரிடம் மன்ருடி மன்னிப்புக் கோரிப் பெறும் வழக்கம் மீண்டும் கையாளப் பட்டது. ஆகவே, அரசரைப் பற்றிய பயம் முழுமையாக நீங்கி விட்டது என்று கூற இயலும். முபாரக் ஷா ஒரு சிற்றின்பப் பிரியர். அரசர் எவ்வழியோ குடிமக்களும் அவ்வழி என்ற வாசகத் திற்கிணங்க அவரது குடி மக்களும் சிற்றின்பம் பெறுவதில் அரசரோடு போட்டியிட்டனர். அதன் விளைவாக அழகான

பெண்கள், தாடியற்ற பையன்கள் ஆகியோரின் விலை உயர்ந்தது. மதுவிலக்குச் சட்டம் தொடர்ந்து நடை முறையில் இருந்துவந்த போதிலும் டில்லி நகருக்குள் மதுபானங்களைத் திருட்டுத்தனமாக கொண்டுவர மக்கள் அஞ்சவில்லை. இலஞ்சம் வாங்குதல் மிகச் சாதாரணமாக ஆகிவிட்டது. வருவாய் எழுத்தர்களுக்கும் கணக்கர்களுக்கும் நல்லகாலம் பிறந்துவிட்டது. வியாபாரிகள் தாங்கள் விரும்பியவாறு பொருள்களை விற்றனர். நிலவரி குறைக்கப்பட்டமையால் விவசாயிகளும் கிராமத் தலைவர்களும் இலாபமடைந்தனர். கூலிகள் நான்கு மடங்காகப் பெருகி விட்டன. ஆண்டுக்கு 10 அல்லது 12 டங்கா கூலிக்கு வேலை செய்தவர்கள் 100 டங்காக்கள் வரை கூலி கேட்டனர். பொது வாக எல்லோருடைய பைகளிலும் டங்காக்களும் ஜிதால்களும் நிறைந்து மீண்டும் ஓசை எழுப்பின.[1]

குஜராத் படையெடுப்பு: அலப்கான் கொல்லப்பட்ட செய் தியை குஜரத் மக்கள் அறிந்ததும் டில்லி அரசுக்கு எதிராக கலகம் செய்தனர் என்று முன்பு கவனித்தோம். அதனை அடக்குவதற்கு டில்லி அரசு அனுப்பிவைத்த படைத்தலைவரான கமால் உத்தீன் குர்க்கையும் அவர்கள் கொன்று விட்டனர். மலிக்காபூர் 'ரீஜென் டாக' பதவியேற்றதும் குஜரத்தில் டில்லியின் ஆதிக்கத்தை மீண்டும் நிலைநிறுத்த விருப்பங்கொண்டார். தேவகிரியில் சுல்தா னுடைய படைக்குத் தலைமை தாங்கியிருந்த அயின் உல்முல்க் மூல் தானியை தேவகிரியின்மீது படையெடுத்துச் செல்லுமாறு மலிக்கா பூர் கட்டளையிட்டார் அலப்கானுடைய செல்வாக்கு பெருகியமை யால் மலிக்காபூர் தம் உயிருக்கு ஆபத்துவிளையுமோ என்று அஞ்சி தக்காணத்திற்குத் தம்மை அனுப்பிவைக்குமாறு அலாவுத்தீன் கேட்டார் என்றும் அதற்கேற்ப அலாவுத்தீன் அவரை தக்காணத் திற்கு அனுப்பி வைத்தார் என்றும், ஷாதிகானுடைய திருமணத் தை முன்னிட்டு அவர் டில்லிக்கு வந்தார் என்றும், அதுபோது சுல்தான் தம் மனைவி, மகன் ஆகியோருடைய நடத்தையைக்கண்டு அதிருப்தி அடைந்திருந்தார் என்றும், மலிக்காபூர் வந்தவுடன் தம் கஷ்டத்தையெல்லாம் அவரிடம் சுல்தான் கூறினர் என்றும், அந்த நிலைமையைத் தமக்குச் சாதமாகப் பயன்படுத்திக்கொள்ளும் நோக்குடன் மலிக்காபூர் டில்லியிலேயே தங்கி விட்டார் என்றும் நாம் முன்பு கவனித்தோம். காபூர் டில்லிக்குத் திரும்பச் செல்லும் போது ஆயின் உல்முல்க் மூல்தானியிடம் தேவகிரியின் ஆட்சிப் பொறுப்புகளை ஒப்படைத்து விட்டுச்சென்றார். டில்லியில் 'ரிஜென்ட்' பொறுப்பேற்றவுடன் தம்படைகளை அழைத்துக்

[1] Dr. K. S. Lal. p. 289-290; ACHI. p. 420.

கொண்டு டில்லி வரும்படி ஆயின் உல்முல்க்கிற்குக் கட்டளையிட்டார். அக்கட்டளைக்கிணங்க ஆயின் உல்முல்க்கும் டில்லி நோக்கிப் புறப்பட்டார். போகும் வழியில் ஆயின் உல்முல்க் குஜராத் கலகக்காரர்களை முறியடித்து குஜராத்தின் ஆளுநர் பொறுப்பேற்க வேண்டும் என்ற மற்றொரு செய்தி அவருக்குக் கிடைத்தது. ஆகவே ஆயின் உல்முல்க் குஜராத் நோக்கி படையைத் திருப்பினார். அதற்குள்ளாக மலிக்காபூர் கொலை செய்யப்பட்டார். அச் செய்தியை அறிந்ததும் ஆயின் உல்முல்க் செய்வதறியாது இராஜபுதனத்திலேயே தங்கி விட்டார். முபாரக்ஷாவும் குஜரத்தை மீண்டும் தமது ஆதிக்கத்தின் கீழ்க்கொண்டு வருவதென முடிவு செய்தார். எனவே ஆயின் உல்முல்க் குஜரத் போர் நடவடிக்கையைத் தொடர்ந்து மேற்கொள்ளும்படியான கட்டளையை மலிக் துக்ளக்கின் வாயிலாக முபாரக்ஷா அறிவிக்கச் செய்தார். ஆயின் உல்முல்க் அதற்கிணங்கினார். ஆனால் அவருடைய படைத் தலைவர்கள் அதற்கிணங்கவில்லை. அரசியலில் ஏற்பட்ட குழப்ப நிலை மாறும்வரை சிறிது காலம் காத்திருக்க வேண்டும் என்று அவர்கள் கூறினார்கள். அவர்களுடைய பேச்சுகளின் உட்பொருளைப் புரிந்துகொண்ட மலிக்துக்ளக் சுல்தானிடம் சென்று ஒவ்வொரு படைத்தலைவருக்கும் கௌரவ ஆடையையும் தனிமுறையான ஆணைப்பத்திரத்தையும் அனுப்பி வைக்குமாறு கூறினார். அரசரும் அவ்வாறே செய்தார். படைத்தலைவர்களும் அதனால் திருப்தியடைந்து போர்புரிய ஆயத்தமானார்கள். இதற்கிடையில் குஜரத்திலும் நிலைமை மாறத்தொடங்கியது. குஜரத் மக்களுடைய அன்பைக்கவர்ந்த அலப்கானைக் கொன்றவர் மலிக்காபூராவார். அவர் இறந்துவிடவே கலகத்திற்கான காரணமும் மறையத்தொடங்கியது. அதைப் புரிந்துகொண்ட ஆயின் உல்முல்க் அன்ஹில் வாராவை வந்து அடைந்ததும் கலகக்காரர்கள் ஒவ்வொருவருக்கும் தனித்தனியாக இரகசியக் கடிதம் எழுதினார். டில்லிப்படைகளை கலகக்காரர்கள் வெல்ல முடியாது என்றும், அவர்கள் பயனற்ற கலகத்தில் ஈடுபட்டிருப்பதாகவும் அதில் எழுதினார். மேலும் போர் நடைபெறும்போது ஆயின் உல்முல்க்கின் பக்கம் சேர்ந்து விடுபவர்களுக்கு மன்னிப்பு வழங்கப்படும் என்றும், அவர்களுடைய பதவிக்கு எந்தவித ஆபத்தும் ஏற்படாது என்றும் அதில் குறிப்பிட்டார். அதன் விளைவாக போர் தொடங்கிய போது அவர்களுள் பலர் ஆயின் உல்முல்க் பக்கத்தில் சேர்ந்து விட்டனர். கலகத்திற்குப் பொறுப்பாக இருந்த ஹைதரும், ஜிராக்கும் போர்க்களத்திலிருந்து ஓடி தப்பித்துக் கொண்டனர். சாதுரியமாக நடந்துகொண்டு அதிகமான இரத்தம் சிந்தாமல் குஜரத்தை ஆயின் உல்முல்க் மீண்டும் டில்லியின் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டு வந்துவிட்டு மீண்டும் டில்லி திரும்பினார். சுல்தான்

அவரைத்தக்க முறையில் வரவேற்று ஏராளமான வெகுமதிகளைக் கொடுத்தார். சுல்தானுடைய மாமனூரான ஜபர்கான் குஜரத்தின் ஆளுநராக நியமிக்கப்பட்டார். அறிவும், ஆற்றலும் ஒருங்கே பெற்றிருந்த ஜபர்கான் தமது திறமைமிக்க நிருவாகத்தின் மூலம் 3 அல்லது 4 மாதங்களில் குஜரத் மக்களின் அன்பைப்பெற்று விட்டார். அலப்கானுடைய நினைவே அவர்களிடமிருந்து முழுமையாக மறையும் அளவிற்கு அவர்களுடைய மனதைக் கவர்ந்து விட்டார். அக்கம் பக்கத்திலிருந்த தலைவர்கள், நிலக்கிழார்கள் ஆகியோரிடமிருந்து ஏராளமான பொருளை வசூலித்து டில்லிக்கு அனுப்பி வைத்தார். குஜரத்தில் ஜபர்கான் ஏற்படுத்திய அமைதி வெகுநாள் நீடிக்கவில்லை. முபாரக்ஷா தக்காணத்தில் படையெடுப்பை மேற்கொண்டிருந்தபோது அவரைக் கொல்ல சிலர் முயற்சித்தனர். அவர்களுடைய முயற்சி வீணுயிற்று ஆனுல் அது சுல்தானைக் கொடுரச் செயல்களைச் செய்வதற்கு ஊக்கமளித்தது. அக்கொடூரச் செயல்களுக்கு ஒரு தவறும் இழைக்காத ஜபர்கான் இரையானுர். அதற்குப்பிறகு ஹசனுடைய சகோதரன் ஹிசாமுத்தீன் குஜரத்தின் ஆளுநரானுர். குஜரத்தில் இருந்த தமது உறவினர்களையும், நண்பர்களையும், ஆதரவாளர்களையும் ஒன்று சேர்த்துக்கொண்டு ஹிசாமுத்தீன் புரட்சிக்கொடியை உயர்த்திஞர். ஆனுல் சுல்தானிடம் விசுவாசம் கொண்டிருந்த சில பிரபுக்கள் அவரைப்பிடித்து டில்லிக்கு அனுப்பிவைத்தார்கள். ஹிசாமுத்தீனைத் தண்டிப்பதற்குப் பதிலாக அவரை அரசவையில் ஒரு முக்கிய இடத்தைக் கொடுத்தார். இந்த வகையான நடவடிக்கை குஜரத் அமீர்களின் மனத்தில் பயத்தை உண்டாக்கி விட்டது. அதிர்ஷ்டவசமாக வஹீத் உத்தீன் குரேஷீ என்ற கண்ணியம் பொருந்திய பிரபுவை குஜரத்தின் ஆளுநராக சுல்தான் நியமித்தார். அவரைப் போன்ற ஒரு வசீரையோ, மலிக்கையோ காண்பது மிகவும் அரியதாகும். நற்குணங்கள் அனைத்தையும் கடவுள் அவரிடத்தில் சேர்த்து வைத்திருந்தார் என்று கூறின்:அது மிகையாகாது. எனவே அவரது தலைமையின் கீழ் குஜரத்தை எதிர்நோக்கியிருந்த கேடுகள் யாவும் ஒழிக்கப்பட்டன. அவற்றைக் கேள்வியுற்ற சுல்தான் வஹீத் உத்தீனை டில்லிக்கு வரவழைத்து அவருக்கு தாஜ்உல் முல்க் என்ற பட்டத்தை வழங்கினுர்.

## தேவகிரியை வெல்லுதல்

மலிக்காபூர் இறந்த செய்தியைக் கேட்டதும் ஹர்பால் தேவா டில்லியின் ஆதிக்கத்தை எதிர்க்கத் தொடங்கினுர். உடனே தேவகிரிக்குச் சென்று டில்லியின் மேலாதிக்கத்தை மீண்டும் நிலை நாட்ட முபாரக்ஷா துடிதுடித்தார். டில்லியில் அவரது ஆட்சியை முதலில் நிலைபெறச் செய்ய வேண்டியிருந்தமையால் அவர் தமது

ஆட்சியின் இரண்டாவது ஆண்டில்தான் தேவகிரிக்குப் புறப்பட இயன்றது, டில்லியிலிருந்து புறப்பட்டு முதலில் தில்பந்தில் தங்கினர். தில்பந்தில் தமது படைகளின் கூட்டணி மேற் பார்வையிட்டினை நடத்தினர். அங்கிருந்து புறப்பட்டு தேவகிரியை அடைந்தார். டில்லிப் படைகள் தேவகிரியை நெருங்குவதைக் கேள்வியுற்றதும் ஹர்பால் தேவாவும், அவருடைய அமைச்சர் ராகவாவும் மலைப்பகுதிக்கு ஓடி விட்டனர். அங்கு ஒரு படையைத் திரட்டிக் கொண்டு சுல்தானை எதிர்க்கத் தொடங்கினர். அதற்குள் முபாரக் ஷா தேவகிரியைக் கைப்பற்றிக் கொண்டு தப்பி ஓடியவர்களைப் பிடித்து வரும்படி குஸ்ருகானை அனுப்பி வைத்தார். குஸ்ருகான் இராகவாவினுடைய படையை முழுமையாகத் தோற் கடித்தார். போரில் படு காயமுற்ற போதிலும் இராகவா முஸ்லிம் களின் கையில் சிக்கி விடாமல் தப்பித்துக் கொண்டார். போரை முடித்துக் கொண்டு தேவகிரிக்குத் திரும்பி வரும்வழியில் ஹர்பால் தேவாவை தற்செயலாகச் சந்தித்தார். அப்போது ஏற்பட்ட சண்டையில் ஹர்பால் தேவா சிறை பிடிக்கப்பட்டார். கலகக் காரர்கள் கடுமையாகத் தண்டிக்கப் பட்டனர். ஹர்பால் தேவாவை உயிருடன் தோலை உரித்துக் கொன்றுர்கள். தேவகிரி யின் வாயிலில் அவரது பிணத்தைத் தொங்க விட்டார்கள். மழைக்காலம் தொடங்குவதற்குள் மராத்திய நாட்டை முழுமை யாகத் தமது ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டு வந்தார். மலிக் ஏக் லகி என்பவரை தேவகிரியின் ஆளுநராக நியமித்தார். வரிவசூல் அதிகாரிகளையும் ஆட்சியாளர்களையும் அவர் நியமித்தார். குல்பர்கா, சாகர், துவாரசமுத்திரா ஆகிய இடங்களில் இராணுவ நிலைகளை அமைத்தார். இவ்வாறாக தேவகிரியை முஸ்லிம்களின் நேரடி ஆட்சியின்கீழ் கொண்டு வந்தார். தேவகிரியில் பெரிய மசூதி ஒன்றையும் அவர் கட்டுவித்தார்.

**வாரங்கல் முற்றுகை:** மேலே குறிப்பிடப்பட்ட இராணுவ நிலைகளை அமைக்க வேண்டி வாரங்கல்மீது படையெடுத்தார். பிரதாபருத்ர தேவா பல ஆண்டுகளாகக் கப்பம் கட்டி வருவ தில்லை. இவ்விரு காரணங்களை முன்னிட்டு வாரங்கல் படை யெடுப்பு நடத்தப்பட்டது. இப்படையெடுப்புக்கு முபாரக்ஷாவின் போர் அமைச்சர் குவாஜா ஹாஜி பொறுப்பு வகித்தார். குஸ்ரு கான் இப்படையெடுப்பில் கலந்துகொண்டார். அனுமகொண்டா மலையினை அடைந்து டில்லிப்படைகள் வாரங்கலின் பாகாப்பு அரண்களை ஆராய்ந்தன. கோட்டை வாயிலைத் தீக்கிரையாக்கி விட்டு கோட்டைக்குள் புக முற்றுகைப் படையினர் முயன்றனர். அவர்களுடைய முயற்சி வீணாயிற்று. ஆகவே கோட்டையைச் சுற்றி அவர்கள் கூடாரங்களை அமைத்துக் கொண்டு முற்று

கையைத் தொடங்கினார்கள். முற்றுகையை முறியடிக்க இரவு நேரத்தில் வாரங்கல் படை முற்றுகையாளரைத் தாக்கியது. ஆனால் அதற்கு வெற்றி கிடைக்கவில்லை. அதையடுத்து முற்றுகை யாளர்கள் கோட்டையின் வெளிப்புற மதில்மீது அமைக்கப்பட்டி ருந்த கோபுரத்தை அடைந்து வாரங்கல் அமைச்சரான அனில் மேதாவை கைது செய்து குஸ்ருகானிடம் அழைத்துச் சென்றனர். அதையடுத்து நடைபெற்ற கடுமையான போரில் முற்றுகைப் படையினர் மண்கோட்டை முழுவதையும் கைப்பற்றினார்கள். அதற்குப் பிறகு உட்புறக் கோட்டையின் உச்சிக்குச் செல்ல 105 கஜ நீளமுள்ள சாய்வான பாதை ஒன்றை அமைக்கும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. அந்த ஏற்பாடுகளைக் கண்ணுற்ற பிராதப ருத்ர தேவா தமது தூதுவர்களை அனுப்பி சமாதானம் நாடினார். தம்மை வாரங்கலுக்கு அனுப்பி வைத்த சுல்தான் பிராதப ருத்ர தேவாவிடம் மூன்று நிபந்தனைகளைக் கூறச் சொல்லியிருப்பதாக குஸ்ருகான் கூறினார். இஸ்லாம் மதத்தைத் தழுவ வேண்டும்; அல்லது ஜிசியா வரி செலுத்தவேண்டும்; அல்லது உயிரை இழக்கத் தயாராக இருக்க வேண்டும். பிராதப ருத்ர தேவா தம்மிட மிருந்த எல்லா செல்வத்தையும் கொடுப்பதாகவும், கப்பம் செலுத்தி வரவும் ஒப்புக்கொண்டார். அதற்கிணங்க வாரங்கல் அரசர் 5 மாவட்டங்களையும், 100 யானைகளையும், 12,000 குதிரை களையும், தங்கம், அணிகலன்கள், விலையுயர்ந்த கற்கள் ஆகிய வற்றையும் அவர் கப்பமாகச் செலுத்தினார். அடுத்தடுத்த மூன்று நாள் காலை வேளையில் தமது கோட்டை சுவர் மீதிருந்து கொண்டு சுல்தானுடைய விதானத்திற்கு வணக்கம் செலுத்தினார். வாரங்கல் அரசர் தமக்கு அடிபணிந்து விட்டார் என்பதற்கு அடையாளமாக குஸ்ருகான் பிரதாப ருத்ராவிற்கு ஏற்கனவே அளிக்கப் பட்டிருந்த விதானமும், கொடியும், தண்டமும் புதுப் பிக்கப்பட்டன. அது மட்டுமின்றி தான் சரணடைந்து விட்டதாக ஒரு காகிதத்தில் இராஜா எழுதிக் கொடுத்தார். வாரங்கல் படை யெடுப்பை வெற்றிகரமாக முடித்துக்கொண்டு குஸ்ருகான் வேக மாக தேவகிரி திரும்பினார். அவர் அங்கு வந்து சேருவதற்குள் சுல்தான் டில்லிக்குப் புறப்பட்டுச் சென்று விட்டார்.

அசத் உத்தீனுடைய சதித்திட்டம்: முபாரக்ஷா தேவகிரியில் இருந்தபோது அவரைக் கொல்லுவதற்கு ஒரு சதித்திட்டம் தீட்டப்பட்டது. அசத்உத்தீன் அதை வகுப்பதில் முக்கிய பங்கு கொண்டிருந்தார். அசத் உத்தீன் மலிக்காமோஷ் யோக்ரெஷ் கானுடைய மகன். டில்லிக்குப் போகும் வழியில் சாகூன் கணவாயைக் கடக்கும்போது முபாரக்ஷாவைக் கொன்றுவிட்டு அசத் உத்தீனை அரசராக்குவதே அத்திட்டத்தின் நோக்கமாகும்.

ஆராப்ஷா என்பவர் இச்சதித் திட்டத்தைப் பற்றி சுல்தானுக்கு முன்கூட்டியே தெரியப்படுத்தி விட்டார். அசத் உத்தீன் உட்பட சதிகாரர்கள் அனைவரும் கைது செய்யப்பட்டனர். அவர்களைக் குற்றவாளிகள் என ஒப்புக்கொள்ளும்படிச் செய்து முபாரக்ஷா அவர்களைக் கொன்றுவிட்டார். யோக்ரெஷ் கானுடைய வழித் தோன்றல்கள் அனைவரையும் கொன்று விடும்படி டில்லிக்கு உத்திரவு அனுப்பினார். மொத்தம் 29 பேர் கொல்லப் பட்டனர். அவர்களுள் சிலர் குழந்தைப் பருவத்தைத் தாண்டா தவர்கள். அவர்கள் அனைவரும் ஒரு பாவமும் அறியாதவர்கள். யோக்ரெஷ் கானுடைய செல்வம் யாவும் பறிமுதல் செய்யப் பட்டது. அக்குடும்பத்தைச் சார்ந்த பெண்டிர்கள் நடுத்தெருவில் சோற்றுக்கு அலைய நேர்ந்தது. ஆயினும் முபாரக்ஷாவினுடைய கோபம் சற்றும் தணியவில்லை. தமது சகோதரர்களையும் கொன்று விட்டாலன்றி தாம் நிம்மதியாக அரசு செலுத்திவர இயலாது என்று எண்ணினார். ஆகவே ஷாதி கட்டா என்பவரை குவாலி யருக்கு அனுப்பி வைத்தார். அலாவுத்தீனுடைய மூன்று பிள்ளைகள்-கிஸர்கான், ஷாதிகான், ஷிஹாப்புத்தீன் குவாலியர் கோட்டையில் அப்போது அடிபட்டுக் கிடந்தனர். மூவரும் பார்வையிழந்துவிட்டிருந்தனர். ஷாதிகட்டா குவாலியர் வந்ததும் கிஸர்கானைச் சந்தித்து முபாரக்ஷா தம்மிடம் கொடுத்தனுப்பிய கடிதத்தைக் படித்துக் காட்டினார். அதில் கிஸர்கானை விடுவித்தும் ஆளுநராக நியமிக்க தாம் முடிவு செய்திருப்பதாகவும், அதற்காக தேவால் இராணியை அவர் பிரிய வேண்டும் என்றும் முபாரக்ஷா எழுதியிருந்தார். கிஸர்கான் தேவால் இராணியைப் பிரிய சம்மதிக்கவில்லை. ஆகவே, அவர் கொல்லப்பட்டார் என்று அமீர் குஸ்ரூ கூறியுள்ளார்.[1] காரணம் எதுவாயினும் முடிவு ஒன்றே யாகும். கிஸர்கானும், மற்ற இரு இளவரசர்களும் கொல்லப் பட்டனர். அப்போது குவாலியர் கோட்டையில் நிலவிய பயங்கரத்தைப் பற்றி இபின் பாதூதா மிக உருக்கமாக எழுதியுள் ளார்.[2] அதன் பிறகு தேவால் இராணியை வலுக்கட்டாயமாக முபாரக்ஷா மணந்தார் என்றும் அவருக்குப்பின் குஸ்ருகான் அவரை மணந்தார் என்றும் கூறப்படுகிறது.[3] அடுத்த படியாக வபா. மலிக்ஷாயீன் கொல்லப்பட்டார். முபாரக்ஷா தேவகிரிக்குச் சென்றபோது வபா மலிக் ஷாயீன் என்பவரை அரசப் பிரதி நிதியாக நியமித்து தாம் டில்லியில் இல்லாத நேரத்தில் நாட்டின் நிருவாகத்தைக் கவனித்து வருமாறு ஆணையிட்டிருந்தார், வபா

[1] Deval Rani, 273-75

[2] Ibn Batuta III 192-93

[3] Barani 393-94, 410-11

மலிக் ஷாயீனும் சதித்திட்டத்தில் கலந்திருந்ததாகக் கூறப்படு கிறது. ஷம்ஸுத்தீன் மாமூத்ஷா என்ற பெயர் பொறிக்கப்பட்ட "உபில்லியன்'' காசுகள் டில்லியில் கண்டுபிடிக்கப்பட்டன. இந்த கண்டுபிடிப்பு டில்லியில் இருந்த சிலரும் இச்சதித் திட்டத்தில் பங்கேற்றிருந்தனர் என்பதை உறுதியாக்குகிறது. அது மட்டுமன்றி டில்லியில் ஒரு போலி அரசர் தோன்றியிருத்தல் வேண்டும் என்பதும் புலனுகிறது. அப்போலி அரசர் கிஸர்கானுடைய பத்து வயது நிரம்பிய பாலகனுவான் என்பர் சிலர்.[1] இப்பாலகன் தேவால் இராணியின் மகன் என்கிருர் ஹாஜி உத்தபீர்.[2] தேவால் இராணிக்கும் கிஸர்கானுக்கும் 1313-ல் மணமாகியதால் 1318-ல் அவருக்கு பத்துவயது நிரம்பிய பிள்ளை இருக்க வழியில்லை. அசாத் உத்தீன் அப்போலியரசராக இருக்கக்கூடும் என்பர் வேறுசிலர். அவர் தேவகிரிப் படையெடுப்பில் கலந்திருந்தமையால் அவர் டில்லியில் அரசராகியிருக்க முடியாது. ஆகவே அப்போலியரசர் வபா மலிக் ஷாயீனுகத்தான் இருத்தல் வேண்டும் என்பர் மற்றும் சிலர். எனவேதான் அவரைக் கொல்லும்படி முபாரக்ஷா உத்தர விட்டார்.

அதையடுத்து அவரது கோபம் ஷெயிக் நிஜாமுத்தீன் அவுலியா வின் மீது பாய்ந்தது. ஷெயிக் நிஜாமுத்தீன் அவுலியா முஸ்லிம்கள், இந்துக்கள் ஆகிய இருபாலரின் அன்பை வெகுவாகக் கவர்ந்திருந்தார். எளிய வாழ்க்கையை அவர் மேற்கொண்டிருந் தார். ஞானிகள் அரசியலில் ஈடுபடக்கூடாது என்ற கொள்கையை சிறிதும் வழுவாமல் கடைபிடித்து வந்தார். மக்கள் ஏராளமான நன்கொடைகள் அவருக்கு அளித்தனர். அவையனைத்தையும் ஏழைகளுக்கு அன்னமிடுவதில் அவர் செலவிட்டு வந்தார். மக்களை நல்வழியில் நடத்திச் செல்வதே அவரது முக்கிய நோக்கமாகும். அத்தகைய தன்னலமற்ற, கடவுள் பக்தி மிகுந்த ஞானிக்கு யார் தான் மரியாதை செலுத்த மாட்டார்கள்? அலாவுத்தீன் கல்ஜி அவரிடத்தில் மிக்க மரியாதையுடன் நடந்துகொண்டார். ஆனுல் முபாரக்ஷா அவரிடம் வேறுவிதமாக நடக்கத் தொடங்கினுர். அதற்கு ஒரே ஒரு காரணத்தை மட்டுமே கூற இயலும். அதாவது கிஸர்கான் நிஜாமுத்தீன் அவுலியாவினுடைய சீடராக இருந்தார் என்பதேயாகும். ஷெயிக் நிஜாமுத்தீன் அவுலியாவினுடைய எதிரி யான ஷெயிக் ஸாதா ஜாம் (Shaik Zada Jam) என்பவரை முபாரக் ஷா ஆதரித்தார். பகைவர்களை மன்னிக்கும் மனப்பக்குவத்தைப் பெற்ற நிஜாமுத்தீன் அவுலியா அதற்காக சிறிதும் கவலை கொள்ளவில்லை. அதன்பிறகு மூல்தானிலிருந்து ஷெயிக்

[1] Ibn Bathuta, III, 192

[2] Zafarul Vali 841

ருக்னுத்தீனை வரவழைத்து அவருக்கு சகலவிதமான மரியாதைகளை நடத்தினர். ருக்னுத்தீனுடைய பல்லக்கில் யாரேனும் ஒரு மனுவைப் போட்டால் அதனை சுல்தான் உடனே படித்து மனுதாரருக்கு வேண்டியதைச் செய்தார். ஷெயிக் நிஜாமுத்தீன் அவுலியா சுல்தானுக்கு விரோதமாக நடக்கும்படிச் செய்ய வேண்டும் என்பதற்காக மேற்கொள்ளப்பட்ட இந்த திட்டமும் தோல்வியையே கண்டது. ஒருசமயம் சுல்தானும் ஷெயிக் நிஜாமுத்தீனும் நேருக்கு நேராக சந்தித்தபோது, ஷெயிக் சுல்தானுக்கு வணக்கம் செலுத்தினர். ஆனல் சுல்தான் பதில் வணக்கம் செய்ய வில்லை. தமது பரிவாரங்கள் ஷெயிக்கினுடைய கன்காவிற்குச் செல்லுவதை சுல்தான் தடை செய்தார். ஷெயிக்கினுடைய தலையைக் கொண்டு வருபவருக்கு 1,000 டங்காக்கள் கொடுப்ப தாகக் கூறினர். அதைக் கேட்டும் ஷெயிக் அச்சங்கொள்ளவில்லை. காசுக்காக நல்லவரைக் கொல்ல எவரும் முன்வரவில்லை. மசீத். இ. மீரி என்ற ஜும்மா மசூதியைக் கட்டி முடித்தபிறகு எல்லா உலா மாக்களும், ஞானிகளும் வெள்ளிக்கிழமை தொழுகைக்கு வரும்படி சுல்தான் கூறினர். தம் வீட்டுக்கருகே யுள்ள மசூதிக்கு அவரைப் பொறுத்தளவில் அவர்மீது அதிக உரிமை இருப்பதால் அங்குதான் தொழுகை நடத்துவார் என்று கூறி சுல்தானுடைய கோரிக்கையை நிராகரித்தார். ஒவ்வொரு புதிய சந்திர மாதம் தொடங்கும் நாளன்று அரசாங்க அதிகாரி களும், ஏனையோரும் சுல்தானிடம் சென்று அவருக்கு வாழ்த்துக் கூறுவது அக்கால வழக்கமாக இருந்தது. ஷெயிக் நிஜா முத்தீன் அவுலியா தாமே நேரில் செல்வதற்கு பதிலாக தமது சீடர்களுள் ஒருவரை அனுப்பி வைத்து அவர் வாயிலாகத் தமது வாழ்த்துக் களை அறிவித்து வந்தார். அடுத்த மாதத் தொடக்கத்தில் ஷெயிக் நிஜாமுத்தீன் அவுலியா நேராக வந்து வாழ்த்துத் தெரிவிக்க வில்லையெனில் ஆணையொன்றைப் பிறப்பித்து அவரை வரும்படி தாம் செய்யப்போவதாக சுல்தான் அறிவித்தார் அதற்கும் ஷெயிக் கலங்கினர் அன்று. தமது தாயாரின் சமாதிக்குச் சென்று தொழுகை நடத்தி விட்டு வீட்டிற்கு வந்தார். அடுத்த மாதம் முதல்நாள் சூரியன் உதித்த போது முபாரக் ஷா கொலை செய்யப் பட்டுக் கிடந்தார்.

### மலிக் யக் லக்கியின் கலகம்

தேவகிரியை விட்டு டில்லிக்குப் புறப்படுவதற்கு முன் மலிக் யக் லக்கியை தேவகிரியின் ஆளுநராக சுல்தான் நியமித்தார். மலிக் யக் லக்கி முதலில் இந்து மதத்தைப் பின்பற்றி வந்தார். அலாவுத்தீனுடைய அடிமை அதிகாரிகளுள் அவர் ஒருவர். அவர் பரீத்-இ-மாலிக் என்ற பதவியைப் பல ஆண்டுகளாக வகித்து

வந்தார். முபாரக் ஷா டில்லிக்குத் திரும்பிச் சென்ற பிறகு அவர் சுல்தானுக்கு எதிராகக் கலகம் செய்து சுதந்திர ஆட்சியை தேவகிரியில் நிறுவினார். ஷம்ஸுத்தீன் என்ற பட்டத்தைச் சூட்டிக்கொண்டு தம் பெயரில் நாணயங்களை அச்சிட்டார்.[1] அச் செய்தியை அறிந்ததும் முபாரக் ஷா குஸ்ருகானையும் சில முக்கிய மான பிரபுக்களையும் தேவகிரிக்குப் படையுடன் அனுப்பி வைத்தார். யக் லக்கீ மரத்தாலான கோட்டையென்றை தேவகிரிக்கு வெளியே கட்டிக்கொண்டு மது, களியாட்டம் ஆகிய வற்றில் மூழ்கிக் கிடந்தார். ஆகவே யக் லக்கியின் படையில் அதிருப்தி தோன்றியது. டில்லிப் படைகள் தேவகிரியை நெருங்கிய போது யக் லக்கியின் படைத் தலைவர்கள் பலர் குஸ்ருகான் பக்கம் சேர்ந்து கொண்டனர். யக் லக்கியின் நம்பிக்கைக்குரிய மலிக்கு களான தல் பகா, நசீர் உத்தீன், ஷம்ஸ் ஆகிய மூவரும் சேர்ந்து ஒருநாள் குடிபோதையில் யக் லக்கி மயங்கிக் கிடந்தபோது அவரைக் கைது செய்து டில்லிக்கு அனுப்பி வைத்தார்கள். டில்லியில் அவரது காதுகளும் மூக்கும் அறுத்தெறியப்பட்டன. அவரது ஆதரவாளர்கள் கொல்லப்பட்டனர். ஆனால் யக் லக்கிக்கு சாமானாவின் ஆளுநர் பதவியை சுல்தான் அளித்தார். ஆயின் உல்-முல்க்-மூல்தானி தேவகிரியின் ஆளுநராக நியமிக்கப்பட்டார். தாஜ்-உல்-முல்க் வருவாய் அதிகாரியாகவும், முஜீர் உத்தீன் அபு ராஜா உதவி ஆளுநராகவும் அமர்த்தப்பட்டனர். இம் மூவரும் திறமை மிக்கவர்கள். இத்தகையோரை ஆட்சியாளர்களாக நியமித்து முபாரக் ஷா அனைவரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தி விட்டார். சிறிது காலத்திற்குள் தேவகிரியில் மீண்டும் அமைதி ஏற்படுத்தப்பட்டது.

தேவகிரிப் படையெடுப்பிற்குப் பின்னர் குஸ்ருகான் மாபா ருக்குப் படை நடத்திச் சென்றார். மாபாரின் இரண்டு அரசர்கள் தங்களுடைய தலை நகர்களைவிட்டு ஓடினார்கள். குஸ்ருகான் முதலி அல்லது மோடுபில்லாவைக் கைப்பற்றினார். அங்கு 26 யானைகளும் 6 திராம்கள் எடையுள்ள வைரம் ஒன்றையும் கைப்பற்றினார். அதன்பிறகு பதன் என்ற நகரைத் தாக்கினார். சிராஜ்தாகி என்ற ஒரு முஸ்லிம் வியாபாரியைத் தவிர ஏனையோர் அங்கிருந்து ஓடி விட்டார்கள். அவ்வியாபாரியினுடைய செல்வத்தைப் பறிமுதல் செய்துவிட்டு அவருடைய மகளைத் தமக்கு மணமுடித்துத் தருமாறு கேட்டார். தமது மகள் குஸ்ருகானிடம் அகப்பட்டு சீரழிவதைப் பார்க்க விரும்பாமல் சிராஜ்தாகி விஷம் குடித்து உயிர்விட்டார். முஸ்லிம் படைகள் மேலும் பல வெற்றிகளை அடையாது

[1] ACHI, p. 438

பருவமழை தடுத்தது. அதுமட்டுமன்றி குஸ்ரூகானுக்கும் மற்ற படைத் தலைவர்களுக்கும் இடையே கருத்து வேறுபாடு வளரலா யிற்று. ஆகவே மாபாரில் பெருத்த வெற்றிகளை அடைய இயலாது டில்லிப் படைகள் தலைநகருக்குத் திரும்பிவிட்டன.

மாபார் படையெடுப்பின் போது முபாரக் ஷாவின் பிடியி லிருந்து தப்பித்துக் கொண்டு மாபாரில் ஒரு தனியரசை ஏற்படுத் திக் கொள்ளுவதற்கான திட்டத்தை குஸ்ரூகான் வகுக்கத் தொடங் கினர். குஸ்ரூகானிடம் அப்போது பெரியதொரு படையிருந்தது. படையெடுப்பின்போது கைப்பற்றிய செல்வமும் அவரிடமிருந்தது. அச் செல்வம் அவருடைய பேராசையைத் தூண்டிவிட்டது. தம்மிடம் நம்பிக்கைக் கொள்ளாத படைத்தலைவர்களைக் கொன்று விட்டு தம் படைகளின் துணைகொண்டு மாபாரை ஆண்டுவர முடிவு செய்தார். அத்திட்டத்தை அவர் செயற்படுத்துவதற்கு முன்பே அது வெளியாகி விட்டது. அது முதற்கொண்டு மலிக் தமர், மலிக்தல்பாகா போன்ற படைத் தலைவர்கள் அவருடைய நடவடிக்கைகளை வெகு கவனமாகக் கண்காணித்து கலகத்தை வர வொட்டாமல் தடுத்துவிட்டார்கள். செய்தி அறிந்ததும் குஸ்ரூ கானை உடனடியாக டில்லிக்கு அனுப்பி வைக்கும்படி படைத் தலைவர்களுக்குக் கட்டளையிட்டார். படைத் தலைவர்களுக்குத் தலைவராக இருந்து படை நடத்த அனுப்பப்பட்ட குஸ்ரூகானை அப்படைத் தலைவர்கள் கைதியாக டில்லிக்கு அனுப்பி வைத்தது ஒரு விந்தையேயாகும். குஸ்ரூகானைக் கண்டதும் சுல்தானுடைய காமவெறி கொழுந்துவிட்டெரியத் தலைப்பட்டது. அந்த வாய்ப் பினைப் பயன்படுத்திக்கொண்டு குஸ்ரூகான் தம்மை கைதியாக அனுப்பி வைத்த படைத்தலைவர்களுக்கெதிராக சுல்தானிடம் கூறி அவர்கள் மீது சுல்தானை கோபமடையச் செய்தார். சில காலம் கழித்து மாபார் படை டில்லி திரும்பியது. தங்களுடைய செய்கையைப் அரசர் பாராட்டி பரிசளிப்பார் என்று எண்ணி ஆவலுடன் டில்லி சேர்ந்த படைத்தலைவர்களுக்கு தண்டனை காத்திருப்பதைக் கண்டு அவர்கள் செய்வதறியாது திகைத்தனர். அரசவைக்குத் தமர்கான் வரக்கூடாது என்று சுல்தான் கட்டளை யிட்டார். தமர்கான் பெற்றிருந்த சாதேரி இக்தா குஸ்ரூ கானுக்கு அளிக்கப்பட்டது. குஸ்ரூகான் மீது மிகத் தைரியமாகக் குற்றம் சாட்ட முனைந்து நின்ற தல்பர்கா தம் பதவியையும், இக்தாவையும் இழந்து சிறையில் வாட நேர்ந்தது. குஸ்ரூகானுக்கு எதிராக சாட்சி கூற வந்தவர்கள் சிறைத்தண்டனை பெற்றுர்கள். இந்நிகழ்ச்சிக்குப் பிறகு குஸ்ரூகானுடைய செல்வாக்கு பெருகியது. அரசரிடம் ஏதேனும் வேலையாக வேண்டியிருந்தால் பிரபுக்களும்

அதிகாரிகளும் குஸ்ருகானுடைய உதவியை நாடும் அளவிற்கு அவருடைய செல்வாக்கு பெருகிவிட்டது.

**முபாரக்கின் மறைவு :**

முபாரக்ஷா தமது ஆட்சியின் தொடக்கத்தில் கருணையுள்ளமும், தாராள மனப்பான்மையும் கொண்ட அரசராக மக்களுக்குத் தோன்றினர். ஆனால் அசத் உத்தீனுடைய சதித்திட்டம் தோல்வியுற்ற பிறகு சுல்தானிடம் மாபெரும் மாறுதல் காணப்பட்டது. அசத் உத்தீன் சதித்திட்டம் அவருக்கு நேரவிருக்கும் பேராபத்தை உணர்த்தி அவரை மிகவும் எச்சரிக்கையுடன் நடக்கச் செய்வதற்குப் பதிலாக அவரை இரத்த வெறியராகவும், எதையும் பொருட்படுத்தாத மனப்பாங்கினைக் கொண்டவராகவும் மாற்றிவிட்டது. தமக்கு ஆபத்து விளைவிக்கக்கூடிய இளவரசர்களைக் கொன்று விட்டமையால் தமது பதவிக்கு எந்த ஆபத்தும் வராது என்று இறுமாப்புக் கொள்ளலானர். தம்மை ஒழிக்கத் திட்டமிட்டவர்களை ஈவு இரக்கமின்றி கொன்று விட்டமையால் உயிருக்குப் பயந்து அதிகாரிகள் அனைவரும் அவருக்குக் கீழ்ப்படிந்து வந்தனர். ஆகவே முக்கிய அதிகாரிகளிடமிருந்து தமக்கு ஆபத்து வருவதற்கில்லையென்று அறிந்ததும் அவர் முன்புவிட அதிகமான செருக்குடன் நடக்கலானர். குஜரத், தேவகிரி ஆகியவற்றில் ஏற்பட்டகலகத்தைச் சுலபமாக அடக்கி விட்டமையாலும் அவர் கர்வம் கொள்ளலானர். இனி தம்மை அசைக்கக் கூடியவர் எவருமில்லை என்ற எண்ணம் ஏற்படவே தம் மனம் போன போக்கில் வாழத்தொடங்கினர். தம்மைச்சுற்றியிருந்தவர்களிடம் கீழ்த்தரமாகப் பேசிவந்தார். அரண்மனையில் நற்பண்புகள் மறைந்துவிட்டன. தொழுகை நடத்துவதை சுல்தான் நிறுத்திவிட்டார். இரம்ஜான் மாதத்தில் வெளிப்படையாக உணவருந்தினர். பெருமதிப்புக்குரிய மலிக்குகளை பெண் கோமாளிகள் வாய்க்கு வந்தபடி பலர் கேட்க ஏசினர்கள். அவருடைய பேராதரவைப் பெற்ற குஜராத்தி கோமாளி ஒருவர் மலிக்குகளின் மனைவிகளையும், தாய்மார்களையும் ஏசிப்பேசுவதுடன் நிறுத்திக் கொள்ளாமல் அவர்களுடைய ஆடைகளின்மீது அசுத்தத்தை வீசி எறிவார். சிலசமயம் சுல்தானும் உயர் அதிகாரிகளும் கூடிப் பேசிக் கொண்டிருக்கும் நேரத்தில் அவர் ஆடையின்றி அங்கு வந்து நின்று கெட்டவார்த்தைகளையும் பேசுவார். சுல்தானும் சில சமயங்களில் பெண்வேடம் பூண்டு அணிகலன்களை அணிந்து எல்லோருடைய முன்னர் வந்து நிற்பார். மேற்கூறிய நிகழ்ச்சிகள் உயர் அதிகாரிகளின் மனத்தை வெகுவாகப் புண்படுத்திவிட்டன. குஸ்ரு கானின் எழுச்சியும், மலிக்தமர், மலிக்தல்பாகா ஆகியோருக்கு

அளிக்கப்பட்ட தண்டனைகளும் பல அதிகாரிகளைச் செயலிழக்கச் செய்துவிட்டன. அதிகாரிகள் பலர் சுல்தானுடைய கொடுங் கோன்மையினின்றும் தப்பி குஸ்ரூகானுடைய பாதுகாப்பை நாடினார்கள். ஒருசமயம் பஹா உத்தீன் தபீர் தம்முடைய மனை வியை அந்தப்புரத்திற்கு அனுப்பிவைக்கும்படியான அரசாணை ஒன்றைப் பெற்றார். உடனே அவர் குஸ்ரூ கானிடம் சென்று அவரது உதவியை நாடினார். அது முதல் அவர் குஸ்ரூகானின் ஆதரவாளராக மாறினார். இவ்வாறாகப் பல அதிகாரிகள் முபராக் ஷாவை உதறிவிட்டனர். குஸ்ரூகானின் பக்கம் சேர்ந்து கொண் டனர். இந்த வகையான சூழ்நிலை குஸ்ரூ கானின் ஆவலைத் தூண்டி விட்டதில் வியப்பேதுமில்லை அல்லவா?

முபாரக்ஷாவை வீழ்த்தி விடவேண்டுமென்ற எண்ணம் குஸ்ரூ கானின் உள்ளத்தில் தோன்றியதற்கு அவருடைய அரசியல் சார்ந்த ஆசைமட்டும் காரணமாகாது. அதற்கு மற்றுமொரு காரணம் உண்டு. முபாரக்ஷா சிற்றின்பப்பிரியர், ஆண் பெண் ஆகிய இருபாலாரிடமும் சிற்றின்பம் பெறுவதில் மிக்க ஆர்வம் கொண்டிருந்தார். பெண்களுடன் மட்டுமன்றி ஆண்களிடமும் கலவியின்போது அவரே ஆதிக்க நிலையில் இருக்க விரும்பினார். அதுவே அழிவிற்குக் காரணமாகி விட்டது. தன்னொத்த பாலினத் தவருடன் கலவியின்பம் பெறுவதற்கு அவர் தேர்ந்தெடுத்த குஸ்ரூ கானோ அவரைப் போலவே ஆண்மையுடையவராக இருந்தமை யால் அவருக்கு அடங்கி எப்போதும் இருக்க விரும்பவில்லை. எனவே சமயம் நேர்ந்தபோது அவரை ஒழித்துக்கட்ட திட்ட மிட்டு வந்தார்.

குஸ்ரூகான் தமது திட்டம் வெற்றிபெற வேண்டுமென்றால் தமக்கு உதவியாக ஒரு படைவைத்திருப்பது அவசியம் என்று உணர்ந்தார். ஆகவே ஒரு நாள் சுல்தானிடம் சென்று பலமுறை அவர் படைக்குத் தலைமை தாங்கி சென்ற பொழுது ஏனைய மலிக் குகள் போல தமக்கென்று படை ஏதும் பெற்றிராத காரணத்தால் அவர்கள் அவருக்குக் கட்டுப்பட்டு நடப்பதில்லை என்றும் ஆகவே அவர் ஒரு படையை அமைத்துக்கொள்ள சுல்தான் அனுமதி வழங்க வேண்டும் என்றும் கோரினார். சுல்தான் அதற்கிணங்கினார். தம்முடைய ஊர்க்காரர்களையும் உறவினர்களையும் கொண்டபடை தான் தனக்கு எப்போதும் கீழ்ப்படிந்து நடக்கும் என்றும் ஆகவே அத்தகைய படையை அமைக்க அரசர் அனுமதி அளிக்கவேண்டும் என்றும் சுல்தானை மீண்டும் கேட்டார். அதற்கும் சுல்தான் இசைந்தார். அதன் விளைவாக குஸ்ரூகானின் பரடு அல்லது பர் வாரி நண்பர்களும், அவரது உறவினர்களும் பெருவாரியாக டில்லிக்கு வந்தனர். குஸ்ரூகான் அவர்களுக்கு குதிரைகளையும்

கௌரவ ஆடைகளையும், பணத்தையும் கொடுத்து அவர்களுடைய அன்பைப் பெற்றார். இவ்வாறாக 40,000 பேர் கொண்ட ஒரு படையை குஸ்ருகான் திரட்டி விட்டார் என்று பிரிஷ்டா கூறி யுள்ளார். படை திரட்டும் பணி முடிவுற்றதும் சுல்தானை வீழ்த்து வதற்கான சதித்திட்டத்தை வகுக்கும் பணி தொடங்கப்பட்டது. அதற்கு உடந்தையாக இருக்க சில அதிகாரிகளைத் தேடும் முயற்சி யும் மேற்கொள்ளப் பட்டது. பஹா உத்தீன் தபீர், யூசுப் சூபி போன்ற அதிகாரிகள் அதில் கலந்து கொண்டனர்.

அந்தச் சமயத்தில் சுல்தான் வேட்டையாடுவதற்கு சிர்சவா விற்குச் சென்றார். பரடுகள் வேட்டையாடும்போது கொன்று விட வேண்டும் என்று எண்ணினார்கள். யூசுப் சூபி தலையிட்டு அந்த ஏற்பாட்டைக் கைவிடும்படி செய்தார். திறந்த வெளியில் அரசர் கொல்லப்பட்டால் அரசரது படைகளின் கைகளிலிருந்து தப்பிச் செல்வது இயலாத காரியமாகிவிடும் என்று அவர் கூறினார். ஆகவே அரண்மனையிலேயே அவரைக் கொன்று விடுவது உசித மாகும் என்று கருதினார்கள்.

குஸ்ருகானின் படை வீரர்கள் அரண்மனைக்குள் வந்தாலன்றி முபாரக் ஷாவை அரண்மனையில் கொல்வதென்பது இயலாத காரியமாகும். அதற்காக குஸ்ருகான் ஒரு நாள் முபாரக் ஷாவை அணுகி இரவு வெகு நேரம் வரை அரண்மனைக்குள் தாம் இருக்க நேர்ந்து விடுகிறது என்றும் ஆகவே தமது உற்றார் உறவினர்களைப் பார்க்க இயலாது போகிறது என்றும் ஆகவே இரவு நேரங்களில் தமது உறவினர்களும் நண்பர்களும் தடையின்றி அரண்மனைக்கு வருவதற்கு அனுமதி வழங்க வேண்டும் என்றும் சுல்தானைக் கேட் டார். இது பரணி நமக்களிக்கும் செய்தியாகும். இபின் பாதுதா வேறு காரணத்தை நமக்குக் கூறியுள்ளார். குஸ்ருகானுடைய பரடு நண்பர்களும் உறவினர்களும் இஸ்லாம் மதத்தைத் தழுவ விரும்புவதாகவும், அதுபோது அவர்கள் வழக்கமாக சுல்தானிட மிருந்து பெற வேண்டிய பொன் ஆபரணத்தையும், சிறப்பு ஆடை யையும் பகல் வேளையில் பெறுவது சங்கடமாக இருக்கும் என்றும், ஆகவே இரவு வேளையில் அவரைச் சந்தித்து அவற்றைப் பெற்றுக் கொள்ள சுல்தான் அனுமதி வழங்கவேண்டும் என்றும் குஸ்ருகான் கூறினார். காரணம் எதுவாயினும் சுல்தான் அரண்மனைச் சாவிகளை குஸ்ருகானுடைய உறவினர்களிடம் கொடுக்கும் படியாகக் கட்டளையிட்டது உண்மையேயாகும். சாவிகளைப் பெற்ற பின்னர் இராக் காலத்தில் ஆயுதம் தாங்கிய பரடு வீரர்கள் அரண்மனைக் குள் சென்று இங்குமங்குமாக உலவி வந்தனர். சுல்தானுடைய கோபத்திற்கு அஞ்சி பலர் சுல்தானை அணுகி நிலைமையை அவருக்கு

விளக்கிக் கூற முன் வரவில்லை. ஆயினும் வக்கீல்தாராக அப்போது பொறுப்பேற்றிருந்த காஜி ஜியா உத்தீன் தமக்கு நேரவிருக்கும் ஆபத்தையும் பொருட்படுத்தாது சுல்தானை அணுகி விஷயத்தை எடுத்துக் கூறினர். சுல்தானுடைய உயிருக்கு குஜராத்தி வீரர் களின் வழியாக ஆபத்து வந்து கொண்டிருப்பதை அப்போது கூறினர். அலாவுத்தீன் காலத்தில் வழக்கத்திற்கு மாருக ஒருவர் நீர் பருகினுல் அந்த சம்பவமும் சுல்தானுக்கு அறிவிக்கப்பட்டு வந்தது. ஆனுல் குஜராத்தி வீரர்களின் நடமாட்டத்தினுல் ஏற் பட்ட பேரிரைச்சல் சுல்தானுடைய கவனத்தை ஈர்க்காது இருப் பது விந்தையே என்றும், சுல்தான் கவனக் குறைவாக இருந்து விடக் கூடாது என்றும் அவர் எடுத்துச் சொன்னர். தாம் கூறிய வற்றை ஆராய்ந்து பார்த்து குற்றவாளிகளைத் தக்க முறையில் தண்டிக்கும்படியும் அவர் சுல்தானை வேண்டிக் கொண்டார். அவற்றைக் கேட்ட சுல்தான் கோபமடைந்து அவரைப் பலவாருக ஏசி விட்டார். அது மட்டுமின்றி காஜி கூறிய விவரத்தைப் பற்றி விசாரணை நடத்துவதற்குப் பதிலாக குஸ்ருகானை வரவழைத்து சுல்தான் தாம் கேள்வியுற்றதை அவரிடம் கூறினர். அதைக் கேட்டதும் குஸ்ருகான் தமது விரோதிகள் தமக்கு சுல்தான் காட்டி வரும் சலுகைகளைக் கண்டு பொருமைப் படுகின்றனர் என்றும் ஆகவே தம்மை அழிக்கத் திட்டமிட்டு வருகின்றனர் என்றும் கூறி முபாரக் ஷாவிடம் ஏற்பட்ட ஐயத்தைப் போக்கி விட்டார்.

இந்தச் சம்பவம் நடைபெற்ற அதே இரவு வேளையின் போது காஜி ஜியா உத்தீன் தமது இரவு மேற்பார்வை சுற்றுகளை முடித்துக் கொண்டு வீடு திரும்பினர். அந்த நேரத்தில் பரடு வீரர்கள் சிலர் அரண்மனைக்குள் வந்து அவருடன் சென்றனர். சிறிது தூரம் சென்ற பிறகு ஜஹாரியா என்ற பரடு வீரர் காஜி யின்மீது அம்பு எய்திக் கொன்று விட்டார். இந்த நிகழ்ச்சி அரண் மனையில் சலசலப்பை உண்டாக்கியது. இதற்குள்ளாக குஸ்ரு கானின் குஜரத்தி வீரர்கள் அரண்மனையின் எல்லாப் பகுதிகளிலும் நிறைந்து விட்டனர். சத்தத்தைக் கேட்ட அரசர் குஸ்ருகானை அழைத்து சங்கதி அறிந்துத் தமக்குக் கூறுமாறு அனுப்பி வைத் தார். குஸ்ருகான் மொட்டை மாடியிலிருந்து கொண்டு சில வார்த்தைகளை உரக்கக் கூறிவிட்டு சுல்தானுடைய அறைக்குள் வந்து விட்டார். சில குதிரைகள் கயிற்றை அறுத்துக் கொண்டு இலாயத்திலிருந்து வந்து விட்டதாகவும் அதைச் சிலர் துரத்தி பிடித்துக் கொண்டிருப்பதாகவும் கூறினர். அந்த நேரத்தில் ஜஹாரியா சுல்தானுடைய இருப்பிடத்திற்கு வந்து அங்கு இருந்த இரு காவலர் தலைவர்களைக் கொன்ருர். அப்போதுதான் முபாரக்

ஷாவிற்கு உண்மை தெரிந்தது. உயிர் தப்பித்துக் கொள்ள அந்தப் புரத்திற்கு ஓட முயற்சித்தார். குஸ்ருகான் அவரை ஓடாது தடுக்க முயன்ருர். நன்ருகக் குடித்து விட்டிருந்தமையாலும், உடல் வலிமை மிக்கவராக அவர் இருந்தமையாலும், குஸ்ரு கானைக் கீழே தள்ளி விட்டு அவர் மார்புமீது ஏறிக் கொண்டார். குஸ்ருகான் அப்போது போட்ட கூச்சலை அடையாளங் கண்டு கொண்டு ஜஹாரியா அந்த இடத்திற்கு விரைந்தோடி முபாரக் ஷாவைக் கொன்ருர். அவரது தலையை வாசலில் வீசி எறிந்தார். இந்தச் சம்பவம் 1320 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 26 ஆம் நாள் இரவு வேளையில் நடைபெற்றது என்று தாரீக்-இ-முபாரக் ஷாயி கூறுகிறது. குத்புத்தீன் முபாரக் ஷாவிற்கு ஏற்பட்ட முடிவு மிகப் பொருத்தமான முடிவாகக் கருதப்படுகிறது. மொத்தத்தில் அவர் தரங்கெட்ட அரசர் என்பதில் ஐயமில்லை. அவர் காலத்தில் சுல்தானைக் கண்டு பயப்படுவதென்பது அரிதாகி விட்டது. டில்லி சுல்தானின் ஆட்சியின் பெருமை குலைய முபாரக் ஷா முக்கிய காரணமாக இருந்தார். அவருடன் கல்ஜி ஆட்சி முடிவுற்றது. இதனையே நாம் பராடு புரட்சி என்று கூறுகிறோம்.

**நாசிர் உத்தீன் குஸ்ரு ஷா:** குத்புத்தீன் முபாரக்ஷாவைக் கொன்றுவிட்ட பிறகு குஸ்ருகான், நாசிர் உத்தீன் குஸ்ருஷா என்ற பட்டத்துடன் அரியணை ஏறினர். முபாரக்ஷாவைக் கொன்ற பிறகு என்ன செய்ய வேண்டும் என்பதை சதிகாரர்கள் முன்கூட்டியே தீர்மானிக்கவில்லை. பிற்காலத்தில் முபாரக் ஷாவைக் கொல்லு வதற்கான காரணத்தை குஸ்ருகானிடம் மலிக்துக்ளக் விசாரித்த போது அவருக்கு அரியணை ஏறும் எண்ணம் முதலில் தோன்ற வில்லை என்றும், அலாவுத்தீனுடைய வழித்தோன்றல்களுள் ஒருவரை அரசராக்க முதலில் எண்ணியிருந்தார் என்றும், அவ் வாறு செய்யின் அவரது உயிருக்கே ஆபத்து விளையும் என்று அவருடைய ஆலோசகர்கள் கூறியமையால் தாமே அரியணை ஏற முடிவு செய்தார் என்றும் கூறினர். இதிலிருந்து சூழ்நிலைக் காரண மாக அவர் அரியணை ஏறினரேயன்றி திட்டமிட்டு அரசைக் கைப்பற்ற முயற்சிக்கவில்லை என்பது தெரிகிறது. மேலும் முபாரக் ஷா அவருக்கு இழைத்து வரும் அவமானத்திலிருந்து தப்பவே அவரைக் கொல்ல முற்பட்டார் என்பதும் விளங்கும்.

குஸ்ருகான் கல்ஜி அரச குலத்தைச் சார்ந்தவர் என்பதில் ஐய மில்லை. அவர் குஜராத்தைச் சார்ந்த பராடு வகுப்பைச் சார்ந்தவர் என்று பொதுவாகக் கூறப்படுகிறது. பராடு என்பதை பரணி பர்வார், பர்வாரன் என்றும், பிரிஷ்டா பர்வார் என்றும், அமீர் குஸ்ரு படாடோ என்றும் எழுதியுள்ளனர், பராடுக்கள் யார்

என்பதில் வரலாற்ருசிரியர்களிடையே கருத்து வேறுபாடு ஏற்பட்டுள்ளது. அவர்கள் இழிகுலத்தவர் என்று சிலர் கூறுகின்றனர். குஸ்ருகான் இழிகுலத்தில் பிறந்தவர் என்று பரணி கூறியிருப்பதை வைத்துக்கொண்டு குஸ்ருகான் குஜரத்திலுள்ள ஓர் இழிகுலத்தில் பிறந்தவர் என்று இசாமி, யஹியா, நிஜாமுத்தீன் ஆகியோர் எழுதியுள்ளனர். பிரிக்ஸ் போன்ற ஐரோப்பிய வரலாற்ருசிரியர்கள் அவர்களைத் தீண்டப்படாதவர்கள் என்றும், தோட்டிகளைவிடக் கேவலமான சாதியினர் என்றும் கூறியுள்ளார்கள். பலராலும் பழித்துக் கூறப்படும் இனத்தைச் சார்ந்தவர் குஸ்ருகான் என்று ய. ஹெய்க் கூறுகின்ருர்.[1] பராடுகள் இராஜபுத்திரர்கள் என்று வேறு சில வரலாற்ருசிரியர்கள் கூறுகின்றனர்.[2] பராடுகளை பர்வார் என்று சிலர் கூறுவதை எடுத்துக்கொண்டு பர்வார் என்பது பர்மார் அல்லது பரமாராவின் திரிபு என்று சொல்லுகிருர்கள். இது ஏற்றுக்கொள்ளப்பட்டால் பராடுகளை மிக உயர்ந்த சாதியினராகக் கருத வேண்டிய நிலை ஏற்படும்.

பராடுகளை அமீர்குஸ்ரு மிகவும் பாராட்டி எழுதியுள்ளார். தியாகத்திற்கும் வீரத்திற்கும் அவர்கள் சிறந்த எடுத்துக்காட்டுகளாக விளங்குகிருர்கள் என்றும், அக்காலத்தில் இந்து அரசர்கள் அவர்களையே மெய்க்காவலர்களாக நியமித்தனர் என்றும், தமது பாதுகாப்பில் இருந்த அரசர்களுக்காக உயிரை விடவும் தயாராக இருந்தனர் என்றும், தங்கள் தலைகளை விற்பதில் மட்டும் சிறந்து விளங்காமல் பகைவர் தலைகளை வெட்டுவதிலும் சிறந்து விளங்கினர் என்றும் அமீர்குஸ்ரு கூறியுள்ளார்.[3] முகமது பின் துக்ளக்கினுடைய ஆட்சிக் காலத்தில் ஏற்பட்ட ஒரு சம்பவத்தை விளக்கும்போது 'வீரமிகு பர்வான்களைப்போல் தங்கள் உயிர்களைக் கைகளில் எடுத்துக் கொண்டு கலகக்காரர்கள் தாக்கினுர்கள்' என்று பரணி எழுதியுள்ளார்.[4] புகழ் மிக்க குஜராத் பர்வார்கள் துணைகொண்டு ஹிசாமுத்தீன் கலகம் செய்தார் என்று பரணி மற்ருெரு இடத்தில் கூறியுள்ளார்.[5] வீரத்திலும் பெருமையிலும் மிகச் சிறந்தவர்களாகக் கருதப்பட்ட இந்திய வகுப்பைச் சார்ந்த வீரர்களைக் கொண்ட படையை குஸ்ருகான் திரட்டினுர் என்று இபின் பதூதா பராடுகளைப் பாராட்டும் வகையில் கூறியுள்ளார்.[6]

[1] Cambridge History of India III, 123.

[2] James Bird, History of Gujarat, p. 167.

[3] Tughlug Nama, Lines 337-38.

[4] p. 519.

[5] p. 379.

[6] III, 198.

அக்கால வரலாற்றுசிரியர்கள் பாராட்டுகின்ற அளவு போர்த் திறமை கொண்ட ஒரு வகுப்பாரை இழிகுலத்தவர் என்று கூறுவது பொருந்தாது. A. L. ஸ்ரீவஸ்தவா பராடுகளைக் குஜராத்தி யாதவர்கள் என்று கூறியுள்ளார். அதாவது அவர்கள் இராஜ புத்திரர்போல உயர்ந்த சாதியினராகவும், தோட்டிகளைப்போல இழிகுலத்தவர்களாகவும் இராமல் ஒரு நடுத்தரமான சாதியைச் சார்ந்தவர்களாக இருந்தனர் என்று கூறுகிறார். அவர்கள் குலம் எதுவாயினும் போர்த்திறம் மிக்க வகுப்பினர் என்பதில் எவ்வித மான சந்தேகமும் ஏற்பட வழியில்லை.

பராடுகள் குஜராத்தைச் சார்ந்தவர்கள் என்பர் சில ஆசிரியர்கள். ஹிசாமுத்தீன் குஜராத்தைச் சார்ந்த புகழ்மிக்க பராடுகளைத் திரட்டிக்கொண்டு டில்லி வந்து சேர்ந்தார் என்று பரணி கூறுகிறார். பிரிஷ்டா அதை ஏற்றுக்கொண்டுள்ளார். பராடுகள் குஜரத்தில் மட்டும் வாழ்ந்த ஒரு சாதியினர் அன்று என்றும், அவர்கள் இந்தியா முழுவதிலும் வாழ்ந்து வந்த வகுப்பு என்றும் B.P. சாக்சினு கூறுகிறார்.[1]

குஸ்ருகான் பராடு இனத்தைச் சார்ந்தவரா இல்லையா என்ப திலும் கருத்து வேற்றுமை ஏற்பட்டுள்ளது. அவர் பராடு வகுப்பைச் சார்ந்தவர் என்று அமீர் குஸ்ரு கூறியுள்ளார்.[2] குஸ்ருகான் ஓர் இழிகுலத்தைச் சார்ந்தவர் என்று மட்டுமே பரணி கூறியுள்ளாரேயன்றி அவர் பராடு வகுப்பைச் சார்ந்தவர் என் பதைத் திட்டவட்டமாகக் கூறவில்லை. பேராசிரியர் ஹோடிவாலா அதைப்பற்றிக் கூறும்போது குஸ்ருகான் எந்த வகுப்பைச் சார்ந் தவர் என்பதை உறுதியாகக் கூற இயலாது என்று குறிப்பிட் டுள்ளார்.[3]

குஸ்ருகான் எப்பகுதியைச் சேர்ந்தவர் என்பதைப்பற்றிச் சிறிது சந்தேகம் ஏற்பட்டுள்ளது. 1305ஆம் ஆண்டில் ஆயின் உல்முல்க் மூல்தானி மாளவத்தை வென்றபோது அவரும் அவரு டைய சகோதரரும் கைப்பற்றப்பட்டனர் என்பதைத் தவிர நமக்கு வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. ஒன்றுமட்டும் நாம் உறுதியாகக் கூற இயலும். அதாவது குஸ்ருகான் குஜராத்தில் பிறக்கவில்லை. குஜரத்திற்கு அவர் சென்றதேயில்லை.[4] குஸ்ரு

1 ACHI, p. 431.

2 ACHI, p. 431.

3 p. 369.

4 ACHI, FN., 431.

கான் முதலில் இந்துமதத்தைப் பின்பற்றி வந்தார். தமது குழந்தைப் பருவத்திலேயே இஸ்லாமிய மதத்தைத் தழுவினர். அப்போது அவருக்கு ஹசன் என்ற பெயர் அளிக்கப்பட்டது. டில்லியை அடைந்ததும் அலாவுத்தீனுடைய தனிமுறையான அடிமைகளுள் ஒருவராக அவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். மலிக் ஷாதி என்பவரிடம் அவர் ஒப்படைக்கப்பட்டார். அவருடைய மேற்பார்வையில் அவர் வளர்ந்து வந்தார். குத்புத்தீன் முபாரக்ஷா அரியணை ஏறியபோது இளமைத் துடிப்புடன் விளங்கிய ஹசனிடம் தம் மனத்தைப் பறிகொடுத்தார். ஆகவே, அவர் பட்டமெய்திய முதல் ஆண்டிலேயே அவர் குஸ்ருகான் என்ற பட்டத்தைப் பெற்றார். அத்துடன் வசீர் பதவியையும், மலிக்காபூருக்குச் சொந்தமாக இருந்த நிலங்களையும் பெற்றார். உயர் பதவிகளையும் கௌரவத்தையும் பெறுவதற்காகத் தமது உடலை சுல்தானுடைய காமவெறிக்கு அடிமைப்படுத்தினர். காதல் விளையாட்டுகளில் சுல்தானே எப்போதும் ஆதிக்க நிலையில் இருந்தமையால் நாளடைவில் சுல்தான்மீது வெறுப்பு ஏற்பட்டது. அதனல் அவர் சுல்தானைக் கொல்ல முடிவு செய்தார் என்பதை முன்னரே கண்டறிந்துள்ளோம்.

இனி அவரது 2 அல்லது 3 மாதங்கள் நீடித்திருந்த ஆட்சிக் காலத்தில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளைச் சற்று கவனிப்போம். குத்புத்தீன் முபாரக்ஷாவைக் கொலை செய்த உடனே பராடுகள் அந்தப்புரம் புகுந்து அலாவுத்தீனுடைய பிள்ளைகளுள் பரீத் (15வயது), அபுபேக்கர் (14வயது) என்பவர்களைக் கொன்றுவிட்டனர். பஹாஉத்தீன்கான் (8வயது), அலிகான் (8வயது), உஸ்மான்கான் (5வயது) என்ற மூன்று பிள்ளைகளைக் குருடாக்கிச் சிகப்பு அரண்மனையில் சிறை வைத்தார்கள். இராணி ஜத்யாபாலி கொல்லப்பட்டார். அந்தப்புரப் பெண்கள் பலர் கற்பழிக்கப்பட்டனர். பின்னர் குஸ்ருகான் முக்கியமான அதிகாரிகளை அரண்மனைக்கு வரவழைத்து அங்கிருந்து வெளியேறுமல் பார்த்துக்கொண்டார். அத்துடன் அவருக்குக் கீழ்ப்படிந்து நடப்பதாக அவர்களிடமிருந்து உறுதிமொழி பெற்றுக்கொண்டார். பின்னர் நகரவாயில்களைத் திறந்துவிட்டு அரண்மனை முழுவதிலும் ஒளியேற்றிவைத்தார். நகரப் பிரமுகர்கள் அனைவரையும் ஒருவர்பின் ஒருவராக அழைத்துவந்து அவர்களுடன் இரவு முழுவதும் விவாதங்கள் மேற்கொண்டார். அதன் விளைவாக மறுநாள் காலை சுல்தான் நாசிர்உத்தீன் என்ற பட்டத்துடன் குஸ்ருகான் அரியணையில் அமர்ந்தார். பேரரசிலிருந்த எல்லா மசூதிகளிலும் அவர் பெயரால் குத்பா வாசிக்கப்பட்டது. நாணயங்கள் அவர் பெயரில் அச்சிட ஏற்பாடு செய்யப்பட்டது. தம்மை ஒரு முஸ்லிம்

அரசராக அனைவரும் மதிக்கவேண்டும் என்று குஸ்ரூஷா விரும்பிய போது மசூதிகளில் எந்தவிதமான எதிர்ப்பும் ஏற்படவில்லை.

தமக்கு எந்தவிதமான எதிர்ப்பும் இனி ஏற்படாது என்று அறிந்தபிறகு தாம் அரியணையில் அமருவதற்குக் காரணமாக இருந்தவர்களுக்கு உயர் பதவிகளை அளித்தார். ஹிசாமுத்தீனுக்கு கான்-இ-கானன் என்ற பட்டத்தை வழங்கினர். அலாவுத்தீனுடைய மகள் ஒருவரை அவருக்கு மணம் முடித்துவைத்தார். ரன்தோல் (Randhol), ராய் ராயான் (Rai Rayan) என்ற பட்டத்தையும், காஜிகானுடைய சொத்துகளையும் பெற்றார். ஆஜம் உல்முல்க் என்ற பட்டத்தை பஹாஉத்தீன் தபீருக்கு வழங்கினர். ஷெயிஸ்டகானுக்குப் போர் அமைச்சர் பதவியும் யூசுப் சூபிக்கு யூசுப்கான் என்ற பட்டமும் வழங்கப்பட்டன. மலிக் கமாலுத்தீன் சூபி வக்கீல்-இ-தார் பதவியையும் இக்தியாருத்தீன் சும்பல் ஹாதிம்கான் என்ற பட்டத்தையும் பெற்றார்கள். குஸ்ரூஷா தம்மை எதிர்த்திருந்தவர்களுக்கும் பதவியையும் பட்டத்தையும் கொடுத்துத் தன்பால் இழுத்துக்கொள்ள முயற்சித்தார். மலிக் ஆயின் உல்முல்க் மூல்தானிக்கு அலிம் உல்முல்க் பட்டத்தைக் கொடுத்தார். அகூர்பேக் பதவி மலிக் பக்ருத்தீன் ஜூனாவிற்கு வழங்கப்பட்டது. தாஜ் உல்முல்க் மலிக் வஹீத் உத்தீன் குரெய்ஷி தொடர்ந்து வசீர் பதவியை வகித்திருக்க அனுமதித்தார். காலஞ்சென்ற காரபேக் வகித்திருந்த பொறுப்புகளை அவருடைய பிள்ளைகளுக்குப் பகிர்ந்தளித்தார். மலிக்தமர், ஷிஹாப், காபூர், திஜின் தல்பாகா, மலிக் காபூல், அஹமத் அயாஸ், மலிக் யக்லக்கி ஆகியோரும் பொறுப்புள்ள பதவிகளை வகித்திருந்தனர். பராடு களுள் ஒருவருக்குக்கூட பொறுப்புள்ள பதவி அளிக்கப்படவில்லை என்பதை ஈண்டு குறிப்பிடுதல் அவசியமாகும். அவர்கள் போர்த் திறம் கொண்டவர்களேயன்றி பொறுப்புள்ள பதவிகளை வகிக்கக் கூடிய தகுதியைப் பெற்றிருக்கவில்லை. எனவே, அவர்களுக்குப் பட்டங்கள், பணம் ஆகியவற்றைக் கொடுத்து அவர்களுடைய உதவிக்கு ஈடு செய்தார். ஜஹாரியாவைப் பவளத்தாலும் வைரத்தாலும் அலங்காரம் செய்தார். இவ்வாறாக, புதிதாகப் பட்ட மெய்திய சுல்தான் அதிகாரிகள், பிரபுக்கள், ஆதரவாளர்கள், உற்றார் உறவினர்கள் ஆகியோரைத் தம்வசப்படுத்திவிட்டார்.

### பராடு புரட்சியின் தன்மை

முஸ்லிம் ஆட்சியை வீழ்த்திவிட்டு இந்துப் பேரரசை நிறுவுவதே பராடு புரட்சியின் முக்கிய நோக்கமாகும் என்று பரணி நமக்குக் கூறியுள்ளார். பராடு புரட்சி என்பதற்கு இந்து-முஸ்லிம் போராட்டம் என்று பொருள் என்றவகையில் பரணி கூறியுள்ளார். தற்கால ஆசிரியர்கள் பலர் அக் கருத்தை ஏற்க மறுக்கின்றனர்.

பராடு புரட்சி இந்துப்பேரரசை மீண்டும் நிறுவுவதற்காக மேற் கொள்ளப்பட்ட இயக்கம் என்பதற்குக் காரணங்கள் சில உண்டு. குஸ்ருஷா ஒருகாலத்தில் இந்துவாக இருந்து பின்னர் இஸ்லாமிய மதத்தைத் தழுவினுர். அவருடைய உறவினர்கள் இந்துக்களாகவே இருந்தனர். அவர் பட்டம் பெறுவதற்கு உறுதுணையாக இருந்த பராடுகளும் இந்துக்களேயாவர். பட்டமெய்தியபோது அவர் பல முஸ்லிம்களைக் கொன்றுவிட உத்தரவிட்டார். சுல்தான் குத்புத் தீன் முபாரக்ஷாவினுடைய மனைவியை அவர் மணந்து கொண் டார். ஒரு முஸ்லிமினுடைய மனைவியை மற்ருெரு முஸ்லிம் மணப் பதற்குமுன் அந்தப் பெண்மணிக்கு நான்குமுறை மாதவிலக்கு ஏற்பட்டிருக்க வேண்டும் என்பது முஸ்லிம் சமுதாயத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு பழக்கமாகும். அதைமீறி அவரை உடனே மணந்து கொண்டார். குஸ்ருஷா அரசரான ஐந்தாவது நாளே சிலை வழிபாட்டு முறை அரண்மனையில் கையாளப்பட்டு வரலா யிற்று என்றும், திருக்குரானின் எழுத்துப்படிகள் கிழிக்கப் பட்டன என்றும் அவ்வாறு கிழிக்கப்பட்ட காகிதங்கள் இந்து வழி பாட்டுச் சிலைகளின் அடியில் வைக்கப்பட்டன என்றும் பரணி கூறி யுள்ளார். மசூதிகளிலிருந்த மாடங்களில் சிலைகள் வைக்கப் பட்டன. முஸ்லிம்கள் அவமானப்படுத்தப்பட்டனர் என்றும் இந்துக்களின் அதிகாரத்தையும் பெருமையையும் உயர்த்த குஸ்ருஷா திட்டமிட்டு வந்தாரென்றும், அவரைச் சுற்றி இந்துக் கள் கூட்டமொன்று எப்போதும் இருந்துவந்தது என்றும் பரணி கூறியுள்ளார். குஸ்ருஷாவை எதிர்த்துப் போராட முன்வந்த மலிக் துக்ளக்கிற்கு காஜீ (Ghazi) என்ற பட்டம் அளிக்கப்பட்டிருந்தது. காஜீ என்பதற்கு இஸ்லாமியப் புனிதப்போர்வீரர் என்று பொருள். இஸ்லாமியச் சமயத்திற்கு ஆபத்து ஏற்பட்டதால்தான் இஸ்லா மியப் புனிதப்போர்வீரர் என்ற பட்டத்தைப் பெற்றிருந்த மலிக் துக்ளக் ஆத்திரங்கொண்டு குஸ்ருகானுக்கு எதிராகப் போர்க் கோலம் பூண்டார் என்பாரும் உண்டு.

மேலே கூறப்பட்டிருக்கும் காரணங்கள் ஏற்றுக் கொள்ளத் தக்கனவாக இருக்கின்றனவா என்பதைச் சற்று கவனிப்போம். ஹசன் முதலில் இந்துவாக இருந்தார் என்பதில் ஐயமில்லை. ஆனுல், அவர் சிறுபிள்ளையாக இருந்தபோது இஸ்லாமிய மதத்தில் சேர்ந்துவிட்டார். அவர் இந்துவாக இருந்தபோது அவருக்களிக்கப்பட்டிருந்த பெயரைக்கூட நாம் அறிவதற்கில்லை. ஆகவே, இஸ்லாமிய மதம் அவருடைய உள்ளத்தில் நிலையான இடத்தைப் பெறவில்லை என்று கூறுவது பொருந்தாது. இந்து மதத்தைத் தழுவியிருந்த பராடுகளுடைய உதவியால் அவர் அரசுரிமையைப் பெற்ருர் என்பதும் உண்மையே. பராடுகள் இந்துக்கள் என்பதற்காக அவர்களுடைய உதவியை அவர் நாட

வில்லை. அவர்கள் போர்த்திறமையில் சிறந்து இருந்தமையால்தான் அவர்களுடைய உதவியைக் கோரினர். மேலும் இந்து சமுதாயம் என்ற கடலில் பராடுகள் ஒரு துளியாக இருந்தனர். அத்தகை யோரின் உதவியை குஸ்ருகான் பெற்று விட்டமையால் இந்து சமுதாயத்தின் உதவியைப் பெற்றுவிட்டார் எனக் கூறுவது அறிவுக்குப் பொருந்தாது. மேலும் ஏனைய இந்து வகுப்பினர்கள் பராடு புரட்சியின்போது நடுநிலைமை வகித்திருந்தனர். குஸ்ருகான் சமயக் காரணத்திற்காக அப் புரட்சியை மேற்கொண்டிருந்திருந் தால் அவருக்கு ஏனைய இந்து வகுப்பினர்களுடைய ஆதரவு நிச்சயமாகக் கிடைத்திருக்கும். மேலும் பராடுகளுக்குப் பட்டங் களையும் பணத்தையும் பரிசாக அளித்தாரேயன்றி பொறுப்புள்ள பதவிகளில் அவர்களை நியமிக்கவில்லை.

குஸ்ருஷா பல முஸ்லிம்களின் மரணத்திற்குக் காரணமாக இருந்தார் என்பதும் உண்மையே. அலாவுத்தீனுடைய இரு பிள்ளை களைக் கொன்றார்; ஐத்யாபாலியைக் கொல்லுவித்தார். அந்தப்புர மங்கையர்களின் கற்பை பராடுகள் சூறையாடினார்கள். இவை யாவும் அரசியல் காரணத்திற்காகச் செய்யப்பட்டனவேயன்றி சமயக் காரணத்திற்காக அன்று. அலாவுத்தீனுடைய பிள்ளைகள் உயிருடன் இருக்கும்வரை அவருடைய பதவிக்கு ஆபத்து இருந்து கொண்டேவரும் என்பதனால்:அவர்களைக் கொன்றார். அந்தப்புர மங்கையர்கள் அலாவுத்தீனுடைய பிள்ளைகளை அவர்களிடம் ஒப்படைத்துவிட மறுத்ததால் பராடுகள் கோபமுற்று அவர் களிடம் தாறுமாறாக நடந்துகொண்டார்கள். காஜி ஜியாஉத்தீ னுடைய வீட்டைத்தவிர வேறு முஸ்லிம் வீடுகளைக் கொள்ளையிட வில்லை. அதற்குமாறாக முஸ்லிம்களையே எல்லா முக்கியமான பதவிகளிலும் நியமித்திருந்தார். மாநிலங்களிலும் முஸ்லிம் ஆளுநர்களே தொடர்ந்து பதவியில் இருந்து வந்தனர். முக்கிய அதிகாரிகள், மாநில ஆளுநர்கள் ஆகியோரின் உதவியின்றி எங் ஙனம் இந்துப் பேரரசை ஏற்படுத்த இயலும்? அத்தகைய முயற் சியில் அவர் ஈடுபட்டிருந்தால் அவர்கள் எங்ஙனம் அதைச் சகித்துக் கொள்வார்கள்? பராடுகள் அரண்மனையில் சிலைகளை வைத்துக் கும்பிட்டனர் என்பதும் அவற்றின் கீழே குரானின் எழுத்துப் படிகளைக் கிழித்து வைத்தார்கள் என்பதும் உண்மையே. தாம் அரசுரிமை அடைவதற்கு உதவியாக இருந்தவர்கள் தங்கள் விருப்பம்போல அரண்மனையில் வழிபாடு நடத்த முற்பட்டால் குஸ்ருஷாவால் அதைத் தடுத்து நிறுத்த இயலுமோ? மேலும் முஸ்லிம்கள் கோயில்களை இடித்துத் தள்ளியதையும் இந்துக்களின் சமயப் புத்தகங்களைத் தீக்கிரையாக்கியதையும் பராடுகள் நேரில் கண்டிருந்தனர்,

முஸ்லிம்கள் இந்துக்களுடைய மதத்தை இழிவுபடுத்தியதற்கு ஈடு செய்யும் வகையில் பராடுகள் நடக்கத் தொடங்கியதில் வியப் பேதும் இல்லை. மலிக் துக்ளக் இஸ்லாமிய மதத்தைக் காப்பதற்குப் போர்க்கோலம் பூண்டார் என்பதிலும் ஓரளவு உண்மை உண்டு. இஸ்லாம் மதத்தில் அவர் மிகுந்த பற்றுக் கொண்டிருந்தார். அது மட்டும் அவரது புரட்சிக்குக் காரணமாகாது. சமயப்போர் அவர் தொடங்கியிருப்பின் அவர் எல்லா முஸ்லிம் ஆளுநர்களையும் தம்முடன் சேரும்படி அழைத்திருக்க வேண்டும். ஆனால் டில்லி சுல்தானியத்தின் மேற்குப் பகுதியிலிருந்த ஆளுநர்களுக்கு மட்டுமே அழைப்பு விடுத்திருந்தார். ஊச் மாநிலத்தின் ஆளுநர் மட்டுமே அவரது அழைப்பை ஏற்றார். மூல்தானின் ஆளுநர் மலிக் முகல் தாய் என்பவர் அதை ஏற்க மறுத்ததால் அவருக்கு எதிராக மூல்தான் மக்களைக் கிளர்ச்சி செய்யுமாறு தூண்டிவிட்டார். மூல்தான் மக்கள் கிளர்ச்சி செய்து அவரைக் கொன்றுவிட்டனர். சாமானாவின் ஆளுநர் மலிக் யக் லக்கீ, காஜி மலிக் துக்ளக்குக்கு உதவி செய்வதற்குப் பதிலாக அவருக்கு எதிராகப் போர் செய்யக் கிளம்பினார். ஆனால், அவருடைய வீரர்கள் அவரைக் கொன்று விட்டனர். சிவிஸ்தானுடைய ஆளுநரான முகமது ஷாவும் ஜாலோரின் ஆளுநரான முகமது ஹாஷங்கும் முழுமனதுடன் மலிக் துக்ளக்குக்கு உதவி செய்ய முன்வரவில்லை. ஆயின் உல் முல்க் நடுநிலைமை வகித்தார். மேலும் இஸ்லாமியச் சமயத்தைக் காக்கும் பொருட்டு இந்தத் போராட்டம் துவக்கப்பட்டிருந்தால் இஸ்லாமிய ஞானியான நிஜாமுத்தீன் அவுலியா, மலிக் துக்ளக்கை வாழ்த்தி இருக்கவேண்டும். நிஜாமுத்தீன் அவுலியா அவருக்கு உதவி செய்ததாக நமக்குச் செய்தி கிடைக்கவில்லை. இந்துக்கள் பலர் மலிக் துக்ளக்கின் படையில் சேர்ந்து போரிட்டுள்ளனர்.

குஸ்ரூ ஷாவின் மதப்பற்றைப் பற்றியும் நாம் சந்தேகம் கொள்வது சரியன்று. அவர் ஆட்சிக் காலம் முழுவதும் அவருடைய பெயராலேயே குத்பா வாசிக்கப்பட்டது. அவருடைய நாணயங் களில் 'உண்மையான சமயப்பற்றுடையவர்களின் தளகர்த்தர்' என்ற பட்டம் பொறிக்கப்பட்டுள்ளது. தென்னிந்தியப் படை யெடுப்பின்போது அவர் இந்துக் கோயில்களை இடித்துத் தள்ளியுள்ளார். அவர் மட்டுமின்றி அவருடைய உறவினர்கள் பலர் இஸ்லாமிய மதத்தை ஏற்றுக் கொண்டனர். முஸ்லிம்களை அவர் சமயக் காரணங்களுக்காகத் துன்புறுத்தினார் என்பதற்கு ஒரு சான்றுகூட நமக்குக் கிடைக்கவில்லை. முபாரக் ஷாவை வீழ்த்து வதற்கு பராடுகளைத் தவிர ஏனைய இந்து வகுப்பினர்களின் உதவியை அவர் நாடவில்லை. மலிக் துக்ளக் போர்க் கொடியை உயர்த்தியபோது குஸ்ரூ ஷா இந்துக்களைப் புதிதாகப் படையில்

சேர்த்துக் கொள்ள முயலவில்லை. இராஜபுத்திர அரசர்களோ இந்துத் தலைவர்களோ குஸ்ரூ ஷாவிற்கு உதவி செய்ய முன் வரவில்லை.

மேற்கூறியவற்றிலிருந்து குஸ்ரூகான் இந்தப் பேரரசை ஏற்படுத்த முனைந்தார் என்ற கருத்தை ஏற்க இயலாது என்பது நன்கு விளங்கும். குஸ்ரூ ஷாவின் ஆட்சியில் இஸ்லாமிற்கு ஆபத்து ஏற்பட்டுவிட்டது. ஆகவே, அதனைக் காக்க அவருக்கு எதிராக போராட்டம் மேற்கொள்ளப்பட்டது என்பது சரியாகாது. அதனை ஒரு சாக்காக வைத்துக்கொண்டு புரட்சியைத் துவக்கினார்கள் என்று கூறுவதுதான் பொருத்தமாகும்.

குத்புத்தீன் முபாரக் ஷாவையும், அவரது சகோதரர்கள் இருவரையும் கொன்றுவிட்டு குஸ்ரூ ஷா அரியணையில் அமர்ந்தார் என்று முன்னர் கவனித்துள்ளோம். அக் கொடூரச் செயல்கள் மக்களிடம் அதிருப்தியை உண்டாக்கிவிட்டன. போர், நிருவாகம் ஆகிய துறைகளில் அவர் போதிய அனுபவ அறிவைப் பெற்றிராத தாலும் அவர் மக்களிடையே மிகுந்த செல்வாக்குப் பெற இயலாது போயிற்று. அவரது அதிகாரிகளுள் பலர் திறமையற்றவர்களாக இருந்தனர். ஆகவே நிருவாகத்தைச் சரிவர நடத்த இயலாது சுல் தான் திகைத்தார். இந்தச் சூழ்நிலையினைப் பயன்படுத்திக்கொண்டு அவரை அரசர் பதவியிலிருந்து அகற்றச் சிலர் திட்டமிட்டனர். அவர்களுள் மலிக் துக்ளக்கும், அவரது மகனான பக்ருத்தீன் ஜூனாவும் முக்கியமானவர்களாவார்கள். மலிக் துக்ளக் அப்போது தீபால்பூரின் ஆளுநராகப் பணியாற்றிவந்தார். புதிய ஆட்சியை ஏற்றுக்கொள்ள மறுத்த ஒரே அதிகாரி அவரேயாவார். டில்லி சுல்தானிடம் பெரிய படையொன்று இருந்தமையாலும், உதவி செய்ய யாரும் முன்வராமையாலும் மலிக் துக்ளக் செய்வ தறியாது வாளாயிருந்துவிட்டார். பக்ருத்தீன் ஜூனா டில்லியில் முக்கியமான பதவியை வகித்திருந்தார். டில்லியில் தோன்றி யிருந்த அரசியல் சூழ்நிலை அவருக்குச் சிறிதளவும் பிடிக்கவில்லை. ஆகவே, ஒருநாள் இரவில் தம்முடைய நண்பர்களை அழைத்து இரகசியக் கூட்டமொன்றை நடத்தினார். அவர்கள் அனைவரும் மலிக் துக்ளக்கின் யோசனையைப் பெற்று ஒரு காரியத்தைச் செய்வது உசிதமாகும் என்று ஆலோசனை கூறினார்கள். அலீ யக்தி என்ற நம்பிக்கைக்குரிய ஆளை தீபால்பூருக்கு அனுப்பி வைத் தார்கள். ஜூனாவை தீபால்பூருக்கு வந்துவிடும்படி மலிக் துக்ளக் செய்தி அனுப்பினார்.

ஒரு நாள் காலை யாருக்கும் தெரியாமல் பக்ருத்தீன் ஜூனாவும் அவரது ஆள்களும் தீபால்பூருக்குப் புறப்

பட்டார்கள். அதுபற்றிய செய்தி அன்று மாலையில்தான் சுல்தானுக்குக் கிடைத்தது. அவர்களைப் பிடித்துவர சுல்தான் தமது போர் அமைச்சர் ஷெயிஸ்டகானை அனுப்பினார். ஆனால், அவரது முயற்சி தோல்வியுற்றது. ஜூனா புறப்பட்டுவிட்ட செய்தியை அறிந்ததும் மலிக் துக்ளக் தமது அதிகாரிகளுள் ஒருவரை அனுப்பி ஜூனாவிற்குப் போதிய பாதுகாப்பு அளிக்க ஏற்பாடு செய்தார். அவ்வதிகாரி சரஸ்வதி ஆற்றங்கரையில் அமைக்கப் பட்ட சர்சுதி (Sarsuti) கோட்டையைக் கைப்பற்றி ஜூனாவிற்குத் தக்க பாதுகாப்பு அளித்தார். தந்தையும் மகனும் கலந்து பேசி குஸ்ரு ஷாவுடன் போரிட முடிவு செய்தனர். ஏனைய ஆளுநர்களின் உதவியைப் பெறுவதற்காக குஸ்ரு ஷாவினுடைய ஆட்சியில் இஸ்லாமிய மதத்திற்கு ஆபத்து ஏற்பட்டுவிட்டது என்ற குரலை எழுப்பினார். சமயத்தின் பெயரால் நடத்தப்படும் இயக்கத்திற்கு ஆதரவை எளிதாகப் பெறுவதற்காகவே அவ்வாறு செய்யப் பட்டது. உதவி கோரி ஐந்து கடிதங்களை மலிக் துக்ளக் எழுதி அனுப்பினார். ஊச்சின் ஆளுநரான பஹராம் அயிபா கடிதம் கண்டதும் மலிக் துக்ளக்கிற்கு உதவி செய்யப் புறப்பட்டுவிட்டார். மூல்தானின் ஆளுநரான முக்லத்தி (Mughlati) கடிதத்தைக் கண்டு கோபமடைந்தார். ஏனெனில் தீபால்பூர் மூல்தானின் ஆளுநரின் அதிகாரத்திற்குட்பட்ட பகுதிகளில் ஒன்று என்றும், மைய அரசை எதிர்க்கத் தாம் விரும்பவில்லை யென்றும், அப்போது தம்முடைய படை தம் கைவசமில்லாமையால் தாம் ஏதும் செய்ய இயலாது என்றும் முக்லத்தி கூறினார். ஆனால் மலிக் துக்ளக்கின் நண்பர்களுள் ஒருவரான பஹ்ராம் சிராஜ் என்பவர் முக்லத்திக்கு எதிராக அவரது படையைத் தூண்டிவிட்டார். முக்லத்தி உயிருக்குப் பயந்து தப்பியோடியபோது ஒரு கால்வாயில் அவர் விழ நேர்ந்தது. பஹ்ராம் சிராஜினுடைய மகன் ஒருவர் அவரைப் பிடித்துக் கொன்றுவிட்டார். ஆயினும், மூல்தானிலிருந்து தமக்குத் தேவை யான உதவியை மலிக் துக்ளக் பெறவில்லை. அதே நேரத்தில் மூல்தான் குஸ்ரு ஷாவிற்கு உதவும் வகையில் மலிக் துக்ளக்கைப் பின்னிருந்து தாக்காதது ஒரு பெரிய காரியமேயாகும். சாமானாவின் ஆளுநரான மலிக் யக் லக்கீ தமக்கு மலிக் துக்ளக் அனுப்பிவைத்த கடிதத்தை குஸ்ரு ஷாவிடம் அனுப்பிவைத்து விட்டு தீபால்பூருக்கு எதிராகத் தம்முடைய படையை நடத்திச் சென்றார். மலிக் துக்ளக் அவரைத் தோற்கடித்தார். சாமானாவிற்கு ஓடி வந்துவிட்ட யக் லக்கீ டில்லிக்குச் சென்று குஸ்ரு ஷாவுடன் சேர்ந்துகொள்ளத் திட்டமிட்டார். ஆனால், சாமானாவிலிருந்து புறப்படு முன்னர் அவர் கொலையுண்டார். சிந்துவின் ஆளுநரான முகமது ஷாவிற்கும் மலிக் துக்ளக் கடிதம் எழுதினார். அப்போது முகமது ஷாவினுடைய அதிகாரிகள்

அவரை சிவிஸ்தானத்தில் முற்றுகையிட்டு இருந்தார்கள். துக்ளக்கின் கடிதத்தைக் காட்டி அவ்வதிகாரிகளின் பிடியி லிருந்து அவர் தப்பித்துக்கொண்டார். தூரம் காரணத் தாலோ அல்லது நிதானமாக நடந்துகொண்டதாலோ முகமதுஷா உரிய காலத்தில் துக்ளக்குடன் சேர இயலாது போயிற்று. மலிக் துக்ளக்கு டில்லி அரியணையில் அமர்ந்த பிறகே முகமது ஷா டில்லியை அடைந்தார். ஜாலோரின் ஆளுநரான ஹுஷங் மலிக் துக்ளக்கிற்கு உதவி செய்ய ஒப்புக்கொண்டார். ஆனால், அவர் முழு மனத்துடன் அவருக்கு உதவி செய்யவில்லை. போர் முடிந்த பிறகே அவரும் மலிக் துக்ளக்கைச் சந்தித்தார்.

அப்போது வசீர் பதவியில் இருந்த ஆயின் உல்முல்க் மூல் தானிக்கும் ஒரு கடிதத்தை துக்ளக் எழுதி அனுப்பினார். குஸ்ரு ஷாவினுடைய நம்பிக்கையைப் பெறுவதற்கு அக் கடிதத்தை சுல்தானிடம் ஆயின் உல் முல்க் முல்தானி அனுப்பி வைத்தார். இதை எதிர்பார்த்த மலிக் துக்ளக் ஒரு தூதுவரை மீண்டும் அவ ரிடம் அனுப்பினார். பத்துத் தலைமுறைகளாகத் தம் முன்னோர்கள் இஸ்லாமிய மதத்தைப் பின்பற்றி வந்திருந்தனர் என்றும் நடை பெறப்போகும் போரில் தாம் நடுநிலைமை வகிக்கப்போவதாகவும், டில்லிக்கருகே துக்ளக்கின் கொடிகளைப் பார்த்தவுடன் தாம் போரிலிருந்து விலகி விடுவதாகவும், போரில் துக்ளக் வெற்றி யடைந்தால் அவருக்கு ஊழியம் செய்வதற்கும், அல்லது அவர் கையாலேயே இறப்பதற்கும் தாம் தயாராக இருப்பதாகவும் அவர் பதிலளித்தார்.

முஸ்லிம் தலைவர்கள் தம்முடைய கடிதத்தைக் கண்டு உற்சாகத்துடன் தம் பக்கம் சேர்ந்து போர்புரிய முன் வராதது மலிக் துக்ளக்கிற்குப் பெருத்த ஏமாற்றத்தை உண்டாக்கிவிட்டது. இஸ்லாமின் பெருமையை நிலைநாட்டுதல், குற்றவாளிகளைத் தண்டித்தல், அலாவுத்தீனுடைய குடும்பத்தினருடைய நலத்தைக் காத்தல் ஆகிய உயரிய நோக்கங்களுக்காக மேற்கொள்ளப்பட்ட இப் போரில் முஸ்லிம் தலைவர்கள் முழு மனத்துடனும் கலந்து கொள்ளாதது மலிக் துக்ளக்கிற்கு வேதனையை அளித்தது. ஆனால், அவர் எதிர்பாராத இடங்களிலிருந்து உதவியைப் பெற்றபோது மிகுந்த மகிழ்ச்சியையும் நம்பிக்கையும் பெற்றார். மங்கோலியர்கள், கோராசானியர்கள், ரஷ்யர்கள், தாஜிக்குகள் ஆகியோர் அவர் பக்கம் சேர்ந்து போராடியதாக துக்ளக் நாமாவில் கூறப் பட்டிருக்கிறது. கோக்கர்களும் அவர்களுடைய தலைவர்களான குல் சந்திராவும், நிஜுவும், இவர்களுடைய இளவரசரான சாஹிஜி ராயும், மேவாதிகளும் மலிக் துக்ளக்கிற்குப் பேருதவி

செய்துள்ளனர். மலிக் துக்ளக் போர் முயற்சியினைத் தொடங்கிய நேரத்தில் சிந்துவிலிருந்து டில்லிக்குக் கப்பம் எடுத்துச் சென்று கொண்டிருந்தனர். அதையறிந்த மலிக் துக்ளக் அதைக் கைப்பற்றும்படித் தம் அதிகாரிகளுக்கு ஆணையிட்டார். வரவிருந்த போராட்டத்திற்கு வேண்டிய கருவிகளை வாங்க அப் பணம் உதவியது.

இதற்கிடையில் குஸ்ருஷாவும் போர் ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தார். முதலில் அலாவுத்தீனுடைய பிள்ளைகளுள் இன்னும் உயிருடன் இருந்த மூன்று பேரைக் கொலை செய்யும்படி உத்தரவிட்டார். பெரும் படையொன்றைத் திரட்டி அதற்கு சூபிகானைத் தலைவராக்கினார். 40,000 குதிரை வீரர்களைக் கொண்ட ஒரு படைப் பிரிவுக்குத் தமது சகோதரர் கான்-இ-கானனைத் தலைவராக நியமித்து காஜி மலிக் துக்ளக்கின் படை முன்னேறுவதைத் தடை செய்யுமாறு குஸ்ரு ஷா அனுப்பி வைத்தார். முதலில் சர்சுதியை நோக்கிப் படை சென்றது. அதனைக் கைப்பற்றும் முயற்சி தோல்வியடையவே கான்-இ-கானன் தீபால்பூர் நோக்கிச் சென்றார். மலிக் துக்ளக்கும் ஜூனாவும் சுல்தானுடைய படைகளை போர்க்களத்தில் சந்தித்தனர். போர் நடைபெற்ற இடத்தை நாம் கண்டு கொள்ளுவதே கடினமாகும். ஆயினும் இச்சண்டையை சரஸ்வதி சண்டை என்று அழைக்கின்றனர். கான்-இ-கானன் படையைத் தலைமை தாங்கி நடத்துவதற்குரிய ஆற்றலைப் பெற்றிருக்கவில்லை. எனவே துக்ளக்கின் தாக்குதலைச் சமாளிக்கவொண்ணாது போர்க்களத்திலிருந்து தப்பியோடினார். அப்போது கோக்கர்களின் தலைவர்களுள் ஒருவரான குல் சந்திரா கான்-இ-கானனுடைய வெண்குடையைக் கைப்பற்றி அதனைத் துக்ளக்கிடம் சேர்ப்பித்தார். இவ்வாறாக அரசருக்குரிய அடையாளச் சின்னங்களுள் ஒன்றினை முதன்முதலாகக் கோக்கர் தலைவரிடமிருந்து துக்ளக் பெற்றார். அதற்குப் பிறகு மலிக் துக்ளக்கின் படை டில்லியை நோக்கிப் புறப்பட்டது. ஹன்சி, ரோதக் (Rohtak) பாலம் வழியாகச் சென்று லஹ்ராவத் என்னுமிடத்தை மலிக் துக்ளக் அடைந்து அங்குத் தமது பாசறையை அமைத்தார்.

இதற்கிடையில் சரஸ்வதி போரில் தோல்வியுற்ற சுல்தானுடைய படைகள் டில்லி திரும்பின. குஸ்ருஷா தமது அதிகாரிகளை அழைத்து ஆலோசனை நடத்தினார். டில்லி படைகளுக்கு உற்சாகமூட்டுவதற்காகப் பொதுக் கருவூலத்திலிருந்து பணத்தை எடுத்துப் படை வீரர்களுக்கும் அதிகாரிகளுக்கும் கொடுக்கப் பட்டது. ஒவ்வொரு படை வீரருக்கும் 2½ மாதச் சம்பளம்

கொடுக்கப்பட்டது. கான்களும் மலிக்குகளும் கோடிக்கணக்கான பணத்தைப் பொதுக் கருவூலத்திலிருந்து பெற்றதாகக் கூறப்படு கிறது. இந்தவிதமாகப் பொதுக் கருவூலத்தைக் கொள்ளையடித்து விட்டு குஸ்ருஷா ஹோஸ்காஸிற்கு எதிரே தமது படைகளைக் கொண்டு வந்து நிறுத்தினர். அன்றிரவு ஆயின் உல் முல்க் உஜ் ஜெயினுக்கு ஓடிவிட்டார். மறுநாள் இரு படைகளும் மோதின. குஸ்ருகானின் பராடு வீரர்கள் மிகத் திறமையாகப் போரிட்டனர். அவர்களுடைய தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் ஜூனு பின் வாங்க வேண்டிய நிலை ஏற்பட்டது. அந்த நேரத்தில் குஸ்ரு ஷா பகைவர்களுடைய சாமான்கள் வைக்கப்பட்ட இடத்தைத் தாக்கு மாறு உத்தரவிட்டார். அந்த இடம் கைப்பற்றப்பட்ட உடனே குஸ்ரு ஷாவினுடைய வீரர்கள் போர் செய்வதற்குப் பதிலாகப் பகைவர்களுடைய சாமான்களைக் கொள்ளையடிப்பதில் தங்கள் கவனத்தைச் செலுத்திவிட்டனர். அதனுல் படையின் ஒழுங்குக் கட்டுப்பாடு தளர்ந்தது. நிலைமைக்கேற்றவாறு போர் முறையை மாற்றிக் கொள்வதில் கைதேர்ந்த மலிக் துக்ளக் குல்சந்திராவை அழைத்து குஸ்ருஷாவைத் தாக்கும்படிக் கட்டளையிட்டார். பின்னர் தாமும் மற்றொரு புறத்திலிருந்து குஸ்ருஷாவைத் தாக் கினர். குஸ்ருஷா போர்க்களத்திலிருந்து ஓடினர். தலைவர் ஓடு வதைக் கண்டதும் குஸ்ருஷாவின் படை வீரர்களும் ஓட்டம் பிடித் தனர். அப்போது பராடுகள் பலர் உயிரிழந்தனர். எஞ்சியோர் கைது செய்யப்பட்டனர். பராடுகள் இனத்தை உருத்தெரியாமல் அழித்துவிட மலிக் துக்ளக் கட்டளையிட்டார். மலிக் துக்ளக்கின் வெற்றிச்செய்தியை அறிந்தவுடன் டில்லியிலிருந்த முக்கிய அதிகாரி களில் சிலர் துக்ளக்கினுடைய பாசறைக்குச் சென்று தங்களுடைய வணக்கத்தைச் செலுத்தினுர்கள். சீரீ கோட்டைச் சாவிகளை மலிக் துக்ளக்கிடம் ஒப்படைத்தார்கள். அடுத்த நாள் மலிக் துக்ளக் ஆயிரங்கால் அரண்மனைக்கு ஊர்வலமாகச் சென்ருர். அங்கு அரியணையில் அமருவதற்குப் பதிலாகத் தமது வாழ்க்கை வரலாற்றை மிகச் சுருக்கமாக எடுத்துக் கூறலானுர். எளிய நிலை யிலிருந்த அவரை மிக உயர்ந்த இடத்திற்குக் கொண்டுவருவதற்கு ஜலாலுத்தீன் கல்ஜியே முக்கிய காரணமாவார் என்று அப்போது அவர் கூறினுர். மேலும் அரசுப் பதவிக்கு அங்கிருந்த மலிக்கு களுள் யாரேனும் ஒருவரைத் தேர்ந்தெடுக்கும்படியும் அவர் கூறினுர். ஆனுல் பிரபுக்கள் அவரை உரிய வகையில் சமாதானம் செய்து அரியணையில் அமர்த்தினுர்கள். கான்-இ-கானுனைக் கண்டு பிடித்து அவரைக் கொல்லுமாறு துக்ளக் கட்டளையிட்டார். ஒரு தோட்டத்தில் மறைந்துகொண்டிருந்த குஸ்ருஷா லஹ்ராவத் சண்டை முடிந்த மூன்ரும் நாளன்று கைப்பற்றப்பட்டார்,

அவரது பரிதாப நிலை மலிக் துக்ளக்கின் பரிதாப உணர்ச்சியைத் தூண்டிவிட்டது. தமது காலில் விழுந்து வணங்கிய குஸ்ரு ஷாவைத் தூக்கிவிட்டு, முபாரக் ஷாவை அவர் கொல்லுவதற்கான காரணத்தைக் கேட்டார். 'உண்மைச் செய்திகள் அனைவருக்கும் தெரிந்ததே. எனக்கு எதைச் செய்யக் கூடாதோ அது எனக்குச் செய்யப்படாமல் இருந்தால் நான் எதைச் செய்யக் கூடாதோ அதை நானும் செய்யாதிருப்பேன்.' என்று பதில் கூறினார். தாம் அரியணையில் அமர விரும்பவில்லையென்றும், அலாவுத்தீனுடைய பிள்ளைகளுள் எவரேனும் ஒருவரை அரியணையில் அமர்த்தத் தாம் விரும்பியதாகவும் தமது ஆலோசகர்கள்தான் அவ்வாறு அவர் செய்வதைத் தடுத்துவிட்டனர் என்றும் கூறினார். அதன் பின்னர் அவருக்கு அளிக்கக்கூடிய தண்டனையைப் பற்றியும் அவர் கூறினார். அவரைக் கொல்லுவதற்குப் பதிலாக அவரது விழிகளைப் பறித்துவிட்டு ஏதேனும் ஒரு கிராமத்தில் வாழ அனுமதிக்கலாம் என்று யோசனை கூறினார். இரத்தத்திற்கு இரத்தம் என்ற கொள்கையைத் தாம் இவ் விஷயத்தில் கடைப்பிடிக்க வேண்டிய நிலையில் இருப்பதால் அவ்வாறு செய்ய இயலாதெனக் கூறி குஸ்ருகானின் தலையைச் சீவிவிடுமாறு கட்டளையிட்டார். அவரது சடலத்தை வாசலில் வீசி எறியுமாறும் பணித்தார்.

## ABBREVIATIONS

ACHI : A Comprehensive History of India, Ed. by M. Habib and K. A. Nizami.

Annals : Annals and Antiquities of Rajasthan, by Col. Tod.

Arch. Sur. Rep. : Reports of Archaeological Survey of India.

Badauni : Muntakhab ut Tawarik, English trans. by S. A. Ranking.

Barani : Tarikhi Finiz Shahi by Ziauddin Barani, Ed. by Sir Sayyid Ahmad Khan.

Briggs : Rise of the Muhammadan Power in India.

CHI : Cambridge History of India.

Elliot E & D : History of India as told by its Historians, by Elliot and Dowson.

Epig. Carn. : Epigraphica Carnatica.

Ferishta : Gulshan-i-Ibrahimi.

Futuh : Futuh us Salatin, by Isami.

HBS : History of Bengal, by J. N. Sarkar.

HCIP : History and Culture of the Indian People, Ed. by R. C. Majumdar.

Ibn Battuta : Ibn Battuta's Voyages by C. Defremery and B. R. Sanguinetti.

IHQ : Indian Historical Quarterly.

Isami : Futuh us Salatin, Ed. by A. M. Husain.

Khazain : Khazain ul Futuh, by Amir Khusru.

MIIP : Medieval India, by Ishwari Prasad.

Minhaj : Tabaqat-i-Nasiri by Minhaj us Siraj, Ed. by N. Lees, K. Husain and A. Hayy.

MTMH : Life and Times of Muhammad-bin-Tughluq, by M. Husain.

Raverty : Tabaqat-i-Nasiri, trans. by H.G. Raverty.

TMS : Tarikh-i-Mubarak Shahi by Yahya.

